# இலக்கியம் ஒரு பூக்காடு





"கவிஞர்கோ"
கோவை. இளஞ்சேரன்



ROCK FORT Publications (P) Ltd.



# இலக்கியம் ஒரு பூக்காடு

இலக்கிய இலக்கணம், செடிமம், மரபியல்,
மொழியியல், ஆன்மவியல், மருந்தியல் நோக்கில்
பூக்கள் பற்றிய ஆய்வு நூல்.

"கவிஞர்கோ"
கோவை. இளஞ்சேரன்



ROCK FORT Publications (P) Ltd.

# நூல் அளவை.

தலைப்பு : இலக்கியம் ஒரு பூக்காடு
ஆசிரியர் : "கவிஞர்கோ"
கோவை. இளஞ்சேரன்.
பொருள் : பூ — ஆராய்வு.

வெளியீட்டகம் : இராக்போர்ட்டு பப்ளிகேசன்.
வெளியீடு : 1
பதிப்பு : முதல்
தாள் : மாப் லித்தோ.
அளவு : 21/14.
படிகள் : 1200
காலம் : 2013–கார்த்திகை,
நவம்பர்–1982.

விலை : கலிக்காக் கட்டு உரூ. 62.
அட்டைக் கட்டு உரூ. 60.

அச்சகம் : குருகுலம் அச்சகம்
திருமறைக்காடு.
எழுத்து : 10 புள்ளி.
ஓவியம் : அமுதோன்

விற்பனை :

1. இராக்போர்ட்டு பப்ளிகேசன்
1. மீரான் சாகிபு தெரு, சென்னை-2.

2. கலைக்குடில் வெளியீட்டகம்
6. நடுவர் கோவில் தெரு, நாகப்பட்டினம்-611001.

தமிழகப் புலவர் குழுத் தலைவரும்
மதுரை காமராசர் பல்கலைக் கழக
முன்னாள் துணைவேந்தருமாகிய

**டாக்டர் வ. சுப. மாணிக்கனார்**

எம். ஏ., பிச். டி.,

அவர்கள் வழங்கிய

# அணிந்துரை.

"இலக்கியம் ஒரு பூக்காடு" என்ற தமிழ்ப் பனுவல் இந்நூற்றாண்டில் தோன்றிய மதிக்கத் தக்க நூல்களுள் ஒன்று. இதனைத் 'தமிழ் பூக் களஞ்சியம்' என்று மறுபெயரிட்டு அழைக்கலாம்.

தமிழிலக்கியங்கள், சிறப்பாக, சங்கவிலக் கியங்கள் பல்துறை மிடைந்தவை. உளவியல், பாலியல், பொருளியல், மன்பதையியல், மெய்

யியல், உயிரியல், மண்ணியல், செடிகொடியியல், வானியல், கலையியல், போரியல், மனையியல், கடலியல், பூதவியல், தொழிலியல், அரசியல், ஆடியல், ஒப்பனையியல், இசையியல், மருந்தியல், பொறியியல், மொழியியல், பொதுவியல் என வரூஉம் பலதுறைக் கருத்துக்களும் சங்கப் பாடல்களுக்கு இலக்கியக் கட்டுமானங்களாயின. பாவின் பாடுபொருளுக்கு இவ்வெல்லாம் ஊடுபொருளாயின. கற்பவர்க்குப் பல்துறையறிவு இருந்தாலன்றிச் சங்கவிலக்கிய முழுமை விளங்காது. "கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைக்கும் நாடன்" என்ற ஒரு குறுந்தொகையடியை விளங்கிக்கொள்வதற்கே சில துறையறிவுகள் வேண்டுமே.

சங்கப் பனுவல்களும் பெருங்காப்பியங்களும் தெய்வக்காதற் பாசுரங்களும் அகம்பாடும் துறைச்செய்யுட்களும் இயற்கைப் பின்னல் உடையவை. "வெயில் நுழைபறியாக் குயில்நுழை பொதும்பர்" என்ற மணிமேகலையின் ஓரடி போதும் தமிழிலக்கியம் பூக்காடு என்பதற்கு. அந்த இலக்கியத் தமிழ்ச் சோலையை அணு அணுவாக உணர்தற்கும் அணியணியாக நுகர்தற்கும் கவிஞர்கோ கோ. வை. இளஞ்சேரன் நமக்கு ஒரு புதிய இலக்கியக் கண்ணாடியை வழங்கியுள்ளார். நுண்மாண் நுழைபுலம் என்பதற்கு இந்நூல் ஓர் எடுத்துக்காட்டு.

பூக்கள் உலக மறைகளிலும் அயற்காவியங்களிலும் நாகரிகங்களிலும் பழக்க வழக்கங்களிலும் இடம்பெற்றிருக்கும் சிறப்பினையும் தொல்காப்பியத்தும் அகத்தும் புறத்தும் தமிழர் வாழ்

விலும் தமிழிலும் மலர்கள் பாங்கொடு பண்பும் பெற்றிருக்கும் ஆட்சியினையும், அறிவியல் நோக்கிலும் மருந்தியற் பார்வையிலும் மலர்கள் தரும் அறிவுச்செய்தியினையும், மொழியியல் நோக்கில் பூப்பெயர்களின் காரணக் குறிகளையும் இப்பெருநூல் ஆய்வுமாலையாகத் தொடுத்துக்காட்டுகின்றது. முல்லை என்ற ஒரு பூவிற்கே ஆசிரியர் தொகுத்துக் காட்டியிருக்கும் செய்திச் செல்வங்களை நினைத்தால் இவர்தம் பரந்த அறிவு வெள்ளிடைமலை. 'ஆம்' என்ற ஒரு சொல்லின் ஆய்வு மிகவும் பாராட்டற்குரியது. புதிய அறிவுக் கூறுகள் இந்நூலிற் பலப்பல. மல்லிகையும் தமிழ்நாட்டு மலர் என்பதும் அச்சொல்லும் தமிழ் வேருடையது என்பதும் கருதத் தக்கவை.

தமிழிலக்கியம் கற்குநரும், ஆய்குநரும் இளஞ்சேரனார் வளர்த்த பூக்காட்டிற்குள் முதலில் நுழைந்து வருவார்களாக. இந்நுழைவாயில் இனிய தமிழ் வாயில்.

கவிஞர்கோ இளஞ்சேரன் தமிழகப் புலவர் குழுவின் செயலர் என்ற உறவினாலும் இவ்வணிந்துரை வாழ்த்துரையாகும்.

விழுமிய இத்தமிழ்ப் பெருநூலை வெளியிட்ட மலைக்கோட்டைப் பதிப்பகத்தாரை வாழ்த்துகின்றேன். அவர்கள் விழைந்தாங்கு இது வெற்றி முதற்பதிப்பே.

கதிரகம், காரைக்குடி.
கக – கார் – 2013;
5—12—1982.

**வ. சுப. மாணிக்கம்.**
தலைவர், தமிழகப் புலவர் குழு.

## பதிப்புரை

"இலக்கியம் ஒரு பூக்காடு" என்ற இந்த வெளியீடு-எங்களது முதல் வெளியீடு.

காலத்தால் பூத்த மலர்கள், கண்ணுக்கு அழகும், கருத்துக்கு இன்பமும் தருகின்ற அழகிய காட்சி போல் தமிழ் இலக்கிய வரலாற்றில் படைக்கப் பெற்ற பல்வேறு இலக்கியங்கள் ஒரு மாபெரும் பூக்காடு.

நறுமணம் வீசும் மலர்கள்போல், நயம்படப் பிறந்த இலக்கியங்கள் தமிழ் இலக்கியத்தில் புதுமணம் வீசுகின்ற காட்சியைப் படைக்கின்ற வாய்ப்பை நாங்களும் பெற்றிருக்கிறோம். என்பதில் எங்களுக்கும் ஒரு மகிழ்ச்சி.

பல்வேறு விலங்கினங்கள் - பறவைகள் காலத்தால் தோன்றி, மறைந்து உலகோடு ஒட்டி வாழ்கின்ற எஞ்சியவைகளைக் கணக்கிடும் போதும் - காணும் போதும் அவைகளின் வரலாற்றையும் தோற்றத்தையும் அறிய முயல்வது ஓர் ஆராய்ச்சி.

இந்தப்பணி போலவே "கவிஞர்கோ" கோவை. இளஞ்சேரன் அவர்கள் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்த குடியின் மொழியிலே பிறந்த இலக்கியங்களில் கவிஞர்களும், புலவர்களும் கண்ட பூக்களைக் பல இயல்களோடு கண்டு நம் கண்முன் நிறுத்துகிறார்.

இலக்கியங்கள் சுட்டிக்காட்டிய பூக்களெல்லாம் இப்பொழுது நம் கண்களுக்கு அகப்படுவ

தில்லை. இது உண்மை. ஆனால், நம்முடைய் கண்களுக்கு இப்பொழுது நடைமுறையில் தென்படும் பல பூக்களும் நம் பழம் இலக்கியங் களில் தென்படுகின்றன.

இந்தப் படைப்பு "கவிஞர்கோ" எங்கள் பதிப்பகம் மூலம் தருகின்ற முதற்பதிப்பு. இதனை வெற்றிப் பதிப்பாக்க எண்ணினோம். எண்ணி யாங்கு எய்தினோம். எங்கள் நிறுவனம் இலக்கியப் படைப்பிற்காக ஏற்பட்ட ஒரு பூங்கொடி. அக்கொடியில் பூத்த முதல் மலர் "இலக்கியம் ஒரு பூக்காடு."

இந்தப் படைப்பிற்குக் காரணமாகஅமைந்த ஆசிரியருக்கு எங்களது இதயங்கனிந்த நன்றி,

டாக்டர் வ. சுப. மாணிக்கம் எம் ஏ., பிஎச். டி அவர்கள் அணிந்துரை வழங்கிச் சிறப்பித் துள்ளார்கள். அந்தச் சிறப்பை மனத்தில் நிறுத்தி நன்றி கூறுகின்றோம்.

ஓவியர் அமுதோன் அவர்கட்கும், சிறந்த பதிப்பாக அச்சிட்டுதவிய குருகுலம் அச்சகத்தார்க்கும் நன்றி.

கருத்துப் புதையலை, நூலக வாடா மலரை, அகழ்ந்தெடுக்கப்பட்ட ஆய்வு முத்தை மெருகுப் பேழையில் வைத்துத் தமிழ்ப் பெரு மக்களுக்கு வழங்குவதில் மனநிறைவு கொள்ளு கின்றோம்.

— (இ)ராக்போர்ட்டு வெளியீட்டகத்தார்.

# பூக்காட்டுத் தும்பி உரை.

"தமிழே, நீயோர் பூக்காடு நானோர் தும்பி"
— என்றார் பாவேந்தர் பாரதிதாசனார். யானும் ஒரு தும்பியானேன்.

இறகு முளைத்த தும்பி சுவைக்கும். அறிவு முளைத்த தும்பி ஆர ஆயும் - ஆராயும். தும்பி ஒரு துளி தேனெடுக்க 200 பூக்களிலாவது மேயவேண்டும். அறிவுத் தும்பியும் அவ்வாறு மேவினால்தான் அரிய ஒளிக் கருத்து கிடைக்கும். கிண்டித் துழாவும் தும்பி போன்று கிளரித் தோய்ந்தும் காணவேண்டும்.

"வானவராம் தாமரையின் காடுழக்கும் தும்பி" என்று கம்பர் காட்டும் தும்பி போன்று நுகர்வது மட்டுமன்று, வகிர்வதும் வேண்டும்; உழக்கவும் வேண்டும்.

பூக்காட்டில் தேனுக்குக் குறைவில்லை.

"மனிதராம் புதுப்புனல்மீது
செந்தாமரைக் காடு பூத்தது போலச் செழித்தஎன் தமி"
ழிலும்கலைகட்குக்குறைவில்லை.

அறிவியல் முதலாகப் பல்துறைக் கலைகளும் தமிழில் பொதிந்துள்ளன. ஒவ்வொரு கலைக்கும் தற்காலத்தில் தனித்தனித் துறைகள் தோன்றியுள்ளது. பண்டைத் தமிழ்ப் பனுவல்களில் இவ்வாறு இல்லை. எனினும், அவ்வக் கலைகள் இலைமறை காய்களாக - ஆழ்கடல் முத்துகளாக - வானிடை மீன்களாக - மண்ணிடைப் பொன்னாக - யாழிடை இசையாக மிடைந்தும் செறிந்தும் உள்ளன.

"வண்துடுப்பாய்ப் பாம்பாய் விரலாய் வளைமுறியாய்
வெண்குடையாம் தண்கோடல்"

— என்பது வெறும் உவமப் பாடல் அன்று. கோடற் பூவின் வளர்ச்சி வரலாற்றை விளக்கும் **செடிமப் பாடல்.**

இதுபோன்று விரவியும் நிரவியும் உள்ள கருத்துகள் தற்காலத்தில் காணப்பட்டுள்ள செடிமக் கண்டுபிடிப்புகட்கு மூலக்கூறு காட்டுபவை; இனி வளரும் ஆய்விற்கும் துணை நிற்பவை.

இதனைப் புலப்படுத்தும் நோக்கில் மலராய்வில் முனைந்தேன். இவ்வாய்விற்கு இலக்கியம் களம். செடியியல், மரபியல், மொழியியல், ஆன்மவியல், மருந்தியல் ஆய்வுக் கருவிகள் – நோக்க ஆடிகள் ஆயின. இவை யாவும் இந்நூலில் இழையோட்டமாகவும், இலக்கியம் ஊடுபாவாகவும் இலங்குவதைக் காணலாம். இடையிடையே சொல்லாய்வு சான்று கூட்டும்/ திறனாய்வு உரைகல்லாகும். நயங்காட்டல் மெருகேற்றும்.

யாவும் தமிழ் மரபை மையப் புள்ளியாகக் கொண்டே சூழ்ந்து இயங்கும். தமிழர் தம் வாழ்வுக் கூறு ஒவ்வொன்றிலும் மலர் நீங்கா இடம் பெற்றுள்ளது. மலரே பல தமிழ்மரபுகளை வகுக்கக் கருவியாகியது தமிழர்தம் வாழ்வியல் இலக்கணமாம் அகமும் புறமும் மலர்க் குறியீட்டில் வகுக்கப்பட்டமை கொண்டே தமிழ் மரபு மையப்புள்ளியாதற்குரியது என்பதை உணரலாம்.

இப்பாங்கில் இந்நூல் உலகில் மலர்த்தகுதியை ஓரளவில் விளக்கும் நுழைவாயிலுடன் தொடங்குகின்றது. பூவின் வரலாற்றைச் செடிமப் பார்வையுடன் காட்டும் பகுதி பூவே நேர்நின்று கூறுவதாக அமைக்கப் பட்டுள்ளது.

முல்லை முதல் முருங்கை ஈறாக 140 பூக்கள் தனித்தனியே ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இப்பகுதி நூலின்உடல்; மிகு உழைப்பால் உருவான உடல்.

இவற்றின் முறைவைப்பு தமிழ் மரபு என்னும் பொன் நாரால் தொடுக்கப்பட்டதாகும். இவற்றுள்ளும் புலவர்பெருமக்கள் எடுத்தும் தொடுத்தும் பாடி அறிமுகஞ் செய்துள்ள 97 மலர்கள் 'அறிமுக மலர்' களாக வரிசைப் படுத்தப் பட்டுள்ளன. இவ்வகை வரிசைப்பாடு தமிழ்ச்

சான்றோர் அவ்வம் மலரை ஆண்டுள்ள மிகுதிப் பாட்டுடன் தகுதிப்பாட்டையும், இனத் தொடர்புடன் இணைத் தொடர்பையும் ஆழ்ந்த கவனத்திற் கொண்டும் தேர்ந்த ஆய்வைக் கொண்டும் அமைக்கப்பட்டுள்ளது.

அனிச்சம் முதலிய 9 'அரியமலர்கள்' காட்டப் பட்டுள்ளன. அனிச்சம் துல்லியமற்ற தோராயமான கருத் தையே தரும். நெருஞ்சி முதலிய 9 'எளிய மலர்'களை எளிமையிலும் சிறந்து நிற்பனவாகக் காணலாம்.

ஒவ்வொரு மலர்க்கும் தனித்தனி இலக்கியப் பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. கவர்ச்சி கூட்டும் இப் பெயர்கள் என் கைச்சரக்கல்ல. அவ்வம் மலர் பற்றிய பாடலில் தமிழ்ப் பெருஞ்சான்றோர் அமைத்து விளக்கிய- வண்ணித்த - உவமித்த சொற்களைக் கொண்ட சொற் கோவையாகும். இப்பெயர்ப் பொருத்தமும் ஆங்காங்கே புலப்படுத்தப்பட்டுள்ளது.

பாடல்களைக் காட்டும்போது அதனைப் படைத்த புலவர் பெயரைக் குறிப்பதே முறையும் நன்றிப் பண்பு மாகும். பல புலவர்களது பாடல்களைக் கொண்ட தொகை நூல்கள் தமிழில் உள. நூற்பெயரை மட்டும் குறிப்பது படைத்தோர் கருத்தைக் குறிக்கும் தெளிவா காது. ஆங்கிலக் கட்டுரைகளில் இம்முறை பெருமை யாகக் கருதப்படுவதைக் கருதிப்பார்க்கலாம். மீண்டும் மீண்டும் வரினும் புலவர் பெயரைக் குறிப்பதைக் கைவிட வில்லை.

நூலாய்வு, வல்லார்வாய்க் கேள்வி, கல்வெட்டுக் கருத்து, செவிவழிச்செய்திகள், நாட்டுப் பாடல், பழமொழி கள், சொல்லாய்வுச் சான்றுகள் கொள்ளப்பட்டாலும் ஐயந்திரிபறக் காண நேர் பார்வைக்குக் கீழைக் கடற்கரை முதல் மேலை மலைமுகடு வரை சில பயணங்களை மேற் கொண்டமை தெளிவும் நல்கிற்று. எடுக்கப்பட்ட புகைப் படங்கள் அழிந்தமை ஓர் அவலமாயிற்று. மலர்ப்படங்கள் இல்லாமை இந்நூற்கொரு குறையே.

சங்கப்பாடல் முதலாகப் பாவேந்தர் பாடல் வரை தமிழ்நூல்களும் சில ஆங்கில நூல்களும் நெறித்துணை

யாயின. மூன்று நிகண்டுகள் கொள்ளப்பட்டன. அவ்வ கூட்டும் குழப்பங்களும் சுட்டப்பட்டுள்ளன.

சங்கப் பாடல்களிலன்றிப் பிறவற்றில் பொருந்தாக் கூறுகளும் பொய்மைகளும் இனத்தாழ்வுயர்வுத் தினவு களும் இடம் பெற்றிருப்பது இயல்பு. அவை ஆங்காங்கே குறிக்கப்பட்டுக் கரணியங்களுடன் மறுக்கப்பட்டுள்ளன.

சென்னை (இ)ராக்போர்ட்டு வெளியீட்டகத்தார் இப்பெருநூலை வெளியிட ஆர்வங்கொண்டனர். நல்ல தாளில் குறிப்பிடத்தக்க சிறந்த பதிப்பாக்கியுள்ளனர். அவர்களைப் பாராட்டி நன்றி கூறுகின்றேன்.

இன்றையப் புலமைச் சான்றோரில் முதல்வராகத் திகழ்பவர்கள் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் எம். ஏ, பிஎச். டி. அவர்கள். சீரிய புலமையும் நேரிய நோக்கும் கொண்டவர்கள். அவர்களது அணிந்துரை இந்நூற்குப் பெருமை தருகின்றது. அவர்கட்கு நெஞ்சார்ந்த நன்றி படைக்கின்றேன்.

சிறந்த திறனாய்வு முன்னுரை ஒன்றைத் திருமிகு சிலம்பொலி செல்லப்பனார் எம். ஏ, பி. டி வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். திறனாய்வின் சின்னமாகவும் நூலின் நல்லறிமுகமாகவும் இது திகழ்கின்றது. அவர்கட்கு மனமுவந்த நன்றி படைக்கின்றேன்.

குருகுலம் அச்சகத்தார் வேண்டும் வகையெல்லாம் ஒன்றி நின்று அச்சேற்றிச் சிறந்த நூலுருவமாக்கியமை வாழ்த்திற்கும் நன்றிக்கும் பாராட்டுக்கும் உரியது.

எனது வாழ்வுப் பணிகளில் இஃதும் ஒரு மன நிறைவுப் பணி என்பேன். அறுபதாண்டு நிறைவில் இந்நிறைவும் இணைவது மகிழ்ச்சிக் குரிதாகின்றது இதனை எனது மணிவிழா முத்திரை நூல் எனலாம்.

தமிழ்ப்பெருமக்கள் முன் இதனை வைப்பதில் பெருமிதங் கொள்கின்றேன்.

வணங்கி அமைகின்றேன்.

"கலைக்குடில்"
நாகப்பட்டினம்.

அன்பன்,
**கோவை. இளஞ்சேரன்.**

# பொன்னடியில்
# பூக்காடு.

ஆத்தி சூடிக் ககலவுரை
ஆக்கிய **கோ.வைத் தியலிங்கர்**
நாத்திறம் மிக்கார், என்றந்தை
நாட்டும் புலமைத் தொழில்புரிந்தார்.
சாத்துயர் அறியா எனைவிடுத்துச்
சார்ந்தார் புகழில்; அவர்க்கிந்தப்
பூத்திறம் நாட்டும் பூக்காட்டைப்
பொன்னடிக் கிட்டுப் **போற்றுவனே**

**–கோவை. இளஞ்சேரன்.**

## பூக்காட்டு அடங்கல்:

இலக்கியம் ஒரு பூக்காடு

'கவிதர்கா' கோவை. இளஞ்சேரன்

# குவலகில் குரிக்கும் பூ



## பூரிப்பில் பூத்த பூங்கொத்துகள்:

பூவுலகம்.

உலகம் ஒரு நீர்ப் பூ.

அறிவியல் செடியில் அலரும் பூ.

பூவில் பூத்த புதுக் கலைகள்.

பூவும் பொருளியல் பொலிவும்.

ஆன்மவியலில் அலர்ந்த பூ.

தமிழ்கூறும் உலகில் தனிப் பூரிப்பூ.

வீரப் பூ

சின்னப் பூ.

மன்னர் பூ.

வீரர் பூ.

கடவுளர் பூ

அடியார் பூ.

பரிசுப் பூ; பட்டப் பூ.

நாளெல்லாம் பூ.



கவிஞர் சோமானாகிய கோவை. இளஞ்சேரனார் நாடறிந்த நற்புலவர். நற்றம் ஆயும் ஆய்வறிஞர்; நாவலர்; சொற்றமிழ் தோயும் தமிழ்ப் பாவலர். தமிழ் முழுதறிந்த தன்மையர்.

நாகையில் தமிழ்வளர்க்கும் சேரனார் மறைமலையார்க்கு நிறை சிலை தோற்றுவித்த செயல் வல்லுநர்.

நூலாருள் நூல் வல்லாராக, நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த இளஞ்சேரனார் நமக்கோர் இளங்கோ வாக இலங்கி வருகிறார்.

செய்வன திருந்தச் செய்யும் சீர்த்தி சான்ற இச் செந்தமிழ்ப் புலவர் மரபு தெரிந்த மாட்சியும், புதுமை விழையும் புதுநெறிக் காட்சியும் சிறக்கப் பெற்றவர்.

கருத்தாழமும் தெளிவும் தோய்ந்த இச் சான்றோரது நூல்களால் தமிழ் நாடு பயன் பெறும்.

டாக்டர் **ஔவை. நடராஜன்,**
எம். ஏ., பிஎச். டி.,
தமிழ்நாட்டரசு
மொழிபெயர்ப்புத் துறை இயக்குநர்,
சென்னை.

**கவிஞர்கோவின் படைப்புகள் :**

- கோவை. இளஞ்சேரன் கவிதைகள்
- வள்ளுவர் வாழ்த்து [பதிப்பு 2]
- நகைச்சுவை நாடகங்கள்
- பாரதியின் இலக்கியப் பார்வை [பதிப்பு 2]
- குறள் நானூறு
- முல்லை மணக்கிறது
- தடம் புரண்ட தமிழ் மரபுகள்
- புதையலும் பேழையும்
- இலக்கியம் ஒரு பூக்காடு [800 பக்கங்கள்]

**படைப்பில் :**

- கோவை. இளஞ்சேரன் கவிதைகள் [தொகுப்பு 2]
- கோவை. இளஞ்சேரன் [காப்பியம்]
- மேடைத் தமிழ் [சொற்பொழிவு இலக்கணம்]
- கலைச் சொற்களின் கருச்சொற்கள்
- வளையல் துண்டு· ஆய்வுக் கட்டுரைகள்

தமிழ்ப் பல்கலைக் கழகப் பதிவாளர் (பொறுப்பில்)

**சிலம்பொலி சு. செல்லப்பன்** எம். ஏ., பி. டி., பி. எல்.,

அவர்கள் வழங்கிய

## — நூற் கண்ணாடி —

## அணிந்துரை.

மலர்க்களஞ்சியம்

"கன்னல் பொருள்தரும் தமிழே நீ ஓர் பூக்காடு; நான் அங்கோர் தும்பி" எனப் பாவேந்தர் பாரதிதாசன் தமிழைப் பூக்காடாக்கித் தன்னைத் தும்பியாக்கிச் சுவைத்து மகிழ்கிறார். கவிதைத் தும்பியாம் கோவை. இளஞ்சேரன் அவர்கள், தமிழ் இலக்கியங்கள் காட்டும் பூக்களிலே படிந்து, தோய்ந்து, திரட்டியுள்ள தீந்தமிழ்த் தேனடையே 'இலக்கியம் ஒரு பூக்காடு

என்னும் இந்நூல், தமிழ் நிலப் பூக்கள் அனைத்தையும் தொகுத்து, அவை இலக்கியங்களிற் பெற்றுள்ள இடங்களைச் சுட்டி, அவற்றின் வகை-நிறம்-வளரும் நிலம்-மலரும் பருவம்-செடியியல் இனப் பெயர்-பயன் ஆகிய அனைத்தையும் மிகச் சரியாகவும் விரிவாகவும் தந்துள்ளமை தமிழ் நூல் வரலாற்றில் தனித்துக் குறிப்பிடத்தக்க பெரு முயற்சியாகும். பரஞ்சோதியார், "சோலையுள் நுழைந்து, வாவியுள் புகுந்து, தாமரையைத் துழாவி, மல்லிகை முல்லை மலர்களில் படிந்து, குளிர்ச்சியையும் மணத்தையும் தேக்கி"த் தென்றல் வீசுவதாகக் குறிப்பிடுவார். அது போலத் திரு. இளஞ்சேரன் அவர்கள் 150 தமிழிலக்கிய நூல்களுள் நுழைந்து, 10 அரிய ஆங்கிலக்கருவி நூல்களுள் புகுந்து, துழாவி எடுத்த கருத்துகளோடு தம் புலமையையும் பட்டறிவையும் இணைத்து 'ஆராய்ச்சித் தென்றலாக' இந்நூலை உலவ விட்டுள்ளார். இந்நூல் ஒரு 'மலர்க் களஞ்சியம்.'

## பூ வரலாறு

உலகெங்கும் பூக்கள் நிறைந்துள்ளன. என்றாலும் நாட்டுக்கு நாடு அவற்றை நோக்கிய முறையிலே உள்ள வேறு பாட்டை ஆசிரியர், "கீழை நாட்டு மக்கள் பூக்களைப் பயன் படுத்திய வகையில் உணர்ச்சிப் போக்கு நிறைவானது; அறிவுப் போக்கு குறைவானது. மேலை நாட்டார் போக்கில் அறிவுப் பாங்கு உலகளவு; உணர்ச்சிப் பாங்கு உழக்களவு எனலாம்" என நன்கு சுட்டுகிறார். பூவைப் பற்றிய அறிவியல் ஆய்வால் தோட்டக்கலை, பூங்காக்கலை, இல்ல ஒப்பனைக் கலை, மலரடுக் குக் கலை போன்றவை மலர்ந்ததை ஆசிரியர் நன்கு விளக்கு கிறார்.

## அனைத்தும் பூவில் உண்டு

மலர் வணிகம், மலர்ச்செடி-கொடி வணிகம், மலரிலிருந்து உண்டாக்கப்படும் மணப்பூச்சுப் பொருள் வணிகம் என்பவற்றால் பொருளியலுடன் பூ தொடர்பு கொண்டுள்ளது. கொன்றை யாண்டி, மலரவன் எனக் கடவுளரைப் பூப்பெயரிட்டு அழைப்ப தாலும் வழிபாட்டிற்குப் பூ முதன்மைப் பொருளாக இருப்பதாலும் அஃது ஆன்மவியலிலும் இடம்பெறுகிறது. மலரில்லாத இலக்கியமே இல்லையாதலின் இலக்கியவியலில் மலர் ஆதிக்கம் செலுத்துகிறது. இவ்வாறாக உலகவியல் அனைத்தும் பூவில் அடங்குகிறது என்பதை ஆசிரியர் நன்கு சுட்டிக் காட்டுகிறார்,

பூக்களின் சிறப்பு

தமிழ் நாட்டில் பூக்களுக்கிருந்த சிறப்பை ஆசிரியர் பட்டியலிட்டுக் காட்டியிருப்பது எண்ணி மகிழத்தக்கதாயுள்ளது.

1. தமிழர் நிலங்கட்கு அவ்வந் நிலங்களில் விளங்கிய சிறப்பான பூவைக் கொண்டே பெயரிட்டுள்ளனர். (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்)

2. புறத்திணைத் துறைகள் பூக்களின் பெயர்களாலேயே அமைக்கப்பட்டுள்ளன. (வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி உழிஞை, நொச்சி, தும்பை, வாகை.)

3. அரசர்களின் சின்னங்களாய்ப் பூக்கள் சிறக்கின்றன. (சோழர் – ஆத்திப்பூ; பாண்டியர்–வேப்பம் பூ; சேரர் – பனம் பூ)

4. ஒவ்வொரு கடவுளுக்கும் ஒவ்வொரு பூவை விருப்பப் பூ ஆக்கினர். (சிவன் – கொன்றை; முருகன் – கடம்பு; திருமகள் –ஆம்பல், கலைமகள் – வெண்டாமரை; அருகன் – அசோகு; புத்தன் – தாமரை.)

5. தமிழ் மன்னர்கள் அளித்த சிறந்த பரிசுப் பொருள்கள் பூக்கள் வடிவில் செய்யப்பட்டன (பொற்றாமரை)

6. உயர்ந்த பட்டங்கள் பூக்களின் பெயர்களால் கொடுக்கப் பட்டன. (எட்டி, காவிதிப் பட்டங்கள்.)

7. மக்கள் அணிவதிலிருந்து நாள் முழுவதும் செய்யும் செயல்களிலெல்லாம் பூக்கள் சிறப்பிடம் பெறுகின்றன.

பருவம், உறுப்பு, குணம்.

பூக்களின் வரலாறும் சிறப்பும் கூறிய ஆசிரியர் அடுத்து அவற்றின் அமைப்பு, குணம் ஆகியவற்றைத் தொகுத்துரைத் துள்ளார்.

1. பூக்களின் பருவங்கள் ஏழு (நனை; அரும்பு; முகை; போது; மலர்; அலர்; வீ.)

2. உறுப்புகள் ஏழு (காம்பு; புல்லி; அல்லி; சூலகம்; மகரம்; தாது; தேன்.)

3. குணம் பத்து (மணம், மென்மை, வண்ணம், தூய்மை தண்மை, சுவை, ஒளி, எழில், கவர்ச்சி, மங்கலத் தன்மை.)

4. குடும்ப வகை நான்கு ((கோட்டுப் பூ, கொடிப் பூ, நிலப்பூ, நீர்ப் பூ)

5. பூ இதழ் வகை ஏழு (இதழ், அதழ், கோடு, ஏடு, மடல், தளம், பாளை.)

6. பூங்கொத்து வகை ஏழு (கொத்து, தொத்து, துணர், இணர், மஞ்சரி, தொடர்ச்சி, குலை.)

இவற்றை இலக்கியச் சான்றுகளுடன் விரிவாக விளக்கும் ஆசிரியர் மக்கள் முடி, கழுத்து, தோள், மார்பு போன்ற இடங்களில் அணியும் மலரணிகளின் அமைப்பையும், பெயர்களையும் வேறுபடுத்திக் காட்டுகின்றார்.

பூக்கள் பற்றிய அரிய செய்திகள்

இவ்வாறு பொதுச் செய்திகளை விளக்கிய பின்னர் ஆசிரியர் தனித்தனிப் பூவை எடுத்துக் கொண்டு அப் பூ பற்றிய முழு விவரங்களையும் இலக்கியங்களில் அவை ஆளப்பட்டுள்ள இடங்களையும், 'விரிவாகவும், தெளிவாகவும் எடுத்துக்கூறியுள்ளார். அவற்றிலிருந்து நாம் பல அரிய செய்திகளை அறிகிறோம்.

1. ஒரு காளை தான் அணிந்திருந்த முல்லைப் பூவை ஒரு கன்னியின் கூந்தலில் சூட்டினால் அவள் அவனுக்கு உரியவள் ஆகிவிடுவாள்.

2. பெண் மங்கைப் பருவம் அடையும்போது அவள் தன் வீட்டு முற்றத்தில் ஒரு முல்லைக் கொடியை நடுவாள். அம்முல்லை பூக்குங்கால் அவள் கன்னிமைத் தன்மை அடைவாள். முல்லை பூப்பது அவள் கன்னிமை மலர்ந்ததன் அறிவிப்பாகும்.

3. கன்னியாக இருந்த பெண் முல்லையைச் சூடினாலே கற்பில் அமைந்து மனைவி ஆகிவிட்டாள் என முல்லை கற்பின் அறிகுறியாகப் பேசப்படும்.

4. நெல்லையும் அரும்பவிழ்ந்த முல்லை மலரையும் சேர்த்து வாழ்த்தும் போது தூவுதல் மரபு.

5. உழத்தியர் நெய்தல், ஆம்பல், குவளை, காவி ஆகிய நான்கையும் தனித்தனியாகவும் யாவற்றையும் சேர்த்துக் கட்டிய மாலையாகவும், தழை உடையாகவும் அணிந்தனர். இவற்றின் தண்டுகளை எளிய மக்கள் கைக்காப்பாக அணிந்தனர்.

6. அல்லிப் பொகுட்டில் ஆயிரக்கணக்கான வெண்சிறு கடுகு போன்ற விதைகள் இருக்கும். இவ்வல்லி அரிசியை மக்கள் உணவாக உண்பர். இவ்வரிசி உணவு நெய்ப்போ, கொழுப்போ இல்லாதது; புலன் உணர்ச்சிகளைத் தூண்டாதது; இதனால் கைம்பெண்கள் இதனை அன்றாட உணவாகவோ கொள்வர்.

7. பனியால் தாமரை கருகும்.

8. குறிஞ்சித் தேன் சிறப்புடையது.

9. போர் வீரர்கட்கு அவ்வப் போர்க்குரிய பூ சூட்டப் படும். அதனை மன்னன் வழங்குவான். இது 'பூக்கோள் நிலை' எனப்படும்.

10. தினை விதைக்கக் கொல்லையை உழத் தொடங்கு வோர் பொன்னேர் பூட்டும் முதல் உழவின் போது நொச்சித் தழை மாலையைச் சூடிக் கொள்வர்.

11. எவ்வொலியும் இல்லாத நள்ளிரவில் நொச்சிப் பூங்கொத்து விழும்.

12. போரில் வெற்றி பெற்றோர் வாகைப் பூவைச் சூடிக் கொள்வர். வாகைப்பூவில் நள்ளிரவில் பிஞ்சு தோன்றி, சில நாழிகைகளில் வளர்ந்து காயாகி விடுகின்றது. மாலையில் பூங் கொத்தில் அடையாளம் காட்டாத பிஞ்சு, காலையில் காயாகத் தோன்றும். அதனால் "மடையானில் குஞ்சையும் வாகையில் பிஞ்சையும் பார்க்கமுடியாது" என்னும் பழமொழி எழுந்தது.

13. போர்ப்புண் பெற்ற வீரன் வீட்டிற்குக் கொணரப் பட்டால் அவனை நோய் மூட்டும் நுண்ணுயிரிகள் தாக்காமலும் பேய் உண்ணாமலும் தடையேற்படுத்த வீட்டின் முகப்பில் வேப்பிலையைச் செருகுவர்.

14. பனை, வேர் முதல் குருத்து வரை எல்லா உறுப்பு களாலும் மாந்தர்க்குப் பயன்படும் ஒன்று.

15. கொன்றைக் காயின் உள்ளே உள்ள விதைகளை ஒரு பக்கம் துளையிட்டு எடுத்துவிட்டு ஊதும் குழலாகப் பயன் படுத்தினர்.

16. கோங்கு தனிப்பூவாகத் தொடர்ந்து பூத்திருக்கும் காட்சி கார்த்திகைத் திங்களில் ஏற்றப்படும் விளக்கு வரிசை போலத் தோன்றும். காட்டு வழியிற் காற்றடிக்கும்போது இதன் மலர் காம்பிலிருந்து சுன்ழறு சிதறி வீழ்வது ஒருவன் கையில் வைத் திருந்த நெருப்புச் சுடரை விட்டெறிவது போன்று தோன்றும்.

17. சங்க இலக்கியம் கூறும் இலவம் இன்றுள்ள இலவ மன்று. அவ்விலவம் அடிமரம் பருத்து நீண்டது; முட்களைக் கொண்டது; இம்முள் கூர்மையுடையதன்று. அடிமரத்தில் முட்டு முட்டு அமைப்பாகக் கூம்பு வடிவத்தில் அமைந்திருக்கும். களிறு தன் தினவை குறைத்துக் கொள்ள இலவின் அடிமரத்தில் உராய்ந்து தேய்த்துக் கொள்ளும்.

18. குரவம் காயை விளையாட்டு மகளிர் பொம்மையாகக் கொண்டு தொட்டிலிலிட்டுத் தாலாட்டி மகிழ்வர். இதன் காய்கள் சாம்பல் நிறத்தில் கிளைகளில் ஆங்காங்கு தொங்கி அசைவது சிறு குழந்தைப் பொம்மை தொங்கி ஆடுவது போன்றிருக்கும். இதனாலேயே இது 'குரவம் பாவை' எனப் பெயர் பெற்றது.

19. புன்னை கடற்கரையில் வளர்வது. கிழக்கிலிருந்து வீசும் கடற்காற்றால் நாள்தோறும் தாக்கப்படுவதால் இதன் கிளைகள் மேற்கு நோக்கி வளைந்து வளரும்.

20. புன்னை மரம் கருநிறம்; இலை கரும் பச்சை; அரும்பும் மலரும் வெண்மை; தாது பொன்னிறம். ஆதலின் இம் மரம் 'நானிறக் கடிகை' ஆகிறது.

21. புன்னை முகை இயற்கையாக மலர்வதுடன் கடல் அலையின் நீர்த்துளி காற்றால் சிதறி நனைந்தும் மலரும். புன்னை மலர் மணம் பக்கமெலாம் பரவிக் கமழும். கடற்கரையில் பரதவர் காயவைத்த மீன் புலாலின் கெடு நாற்றத்தை இஃது அகற்றும்.

22. புன்னைக் காய்களிலிருந்து எண்ணெய் எடுக்கப் பட்டது.

23. தாழை மலர்த்தாது மணத்தூளாகப் பயன்பட்டது; தாழை விழுதுகளைப் புனைந்து மகளிர் ஊஞ்சலாடினர்; தாழை விழுது வீட்டிற்கு வண்ணமடிக்கும் துகிலிகையாகும்.

24. நீர்வேட்கை கொண்ட யானை மலைப்பகுதியில் மராமரத்து மலர் உதிர்வதை வெள்ளிய மழைத்துளி விழுவதாக எண்ணி அங்குமிங்கும் ஓடி அலையும்.

25. பித்திகை முகை ஓரளவு கூரியது. முடங்கல் தீட்டுவோர் இதனை எழுத்தாணியாகப் பயன்படுத்தினர். பித்திகை அந்திக் காலத்தில் மலரும். கூதிர்ப் பருவத்தில் பகற்போதில் வானம் இருண்டிருக்கும் அக்காலத்தில் பித்திகை அரும்புகளை கொய்து பூந்தட்டில் வைப்பர். அது மலர்ந்து மணம் வீசினால் மாலை வந்தது எனத் தெரிந்து மகளிர் விளக்கேற்றுவர்.

26. இலுப்பைப் பூ இனிப்பானது. கரடிகள் மரத்தின் மீதேறி அவற்றைப் பறித்து உண்ணும். வௌவால் வேம்பம் பழத்தைத் தின்னும். அதில் வெறுப்புத் தோன்றின் அக் கைப்புச் சுவை மாற இனிப்புள்ள இலுப்பைப் பூக்களைத் தின்னும்.

27. மயிலை மலர் நள்ளிரவில் பூத்து மணம் பரப்புவதால் நள்ளிருள் நாறி எனப்பட்டது.

28. பாதிரிப்பூ குடிநீருக்குத் தன் மணத்தை ஏற்றும். ஆதலால் மலர்ந்த மலரைப்புதிய மண்பானையில் பெய்து வைத்துப் பின்னர் எடுத்துவிட்டு அப்பானையில் நீர் ஊற்றி வைப்பர்.

29. பரத்தையர் தமக்கு இசைவாரை அறிய வேழப் பூவைப் பயன்படுத்துவர். நள்ளிரவில் இப்பூவை விற்பது போன்று கையிற் கொண்டு திரிவர். எதிர்ப்படும் ஆடவர் ஏற்றால் தமக்கு இசைந்த தாகக் கொள்வர்.

30. மூங்கிற் பூவில் காய் தோன்றிக் கனியாகி அதிலிருந்து ஒரு வகை அரிசி தோன்றும். இது மூங்கிலரிசி எனப்படும். மலை நாட்டுக் குறவர் இதனை உணவாகக் கொண்டனர். 'வேரல்' என்னும் சிறு மூங்கிலரிசி மிகுதியும் விரும்பிக் கொள்ளப்பட்டது.

31. வண்டுண்ணா மலர் என்று ஒன்றுமில்லை.

32. முசுண்டை மலர் நடுயாமத்தில் புதர்களில் மலரும். இது கூதிர்ப் பருவத்தில் வானம் மழைபெய்து நின்று தெளிந்திருக்கும் போது விண்மீன்கள் பளிச்சென்று தெரிவது போன்றிருக்கும்.

33. கலங்கல் நீரைத் தேற்றித் தெளிவாக்கத் தேற்றாங் கொட்டை பயன்படுகிறது.

34. நிறுத்தல் அளவைப் பெயர்களுள் பொன்னை நிறுக்கும் அளவை ஒன்று மஞ்சாடி என்பதாம். இது மஞ்சாடி மரத்தின் விதை. இரண்டு குன்றிமணி எடை கொண்டது.

35. வெள்ளிலோத்திர மலர்ச் சருகை அரைத்துச் சாந்தாக மகளிர் பூசிக் கொள்வர்.

36. கண்ணிப் பூ குன்றிமணியைத் தரும் கொடியின் பூ. குன்றிமணி பொன்னை நிறுக்கப் பயன்படும்.

37. செவ்வந்தி தமிழ் நாட்டில் வந்திறங்கிய இனத்தில் ஒன்று. சப்பானிய மன்னர்க்கு இஃது அடையாளப் பூ.

அறிய இயலாப் பூக்கள்

பூ உண்டு. ஆனால் கண்ணிற்குக் காட்சி தராமல் காண்டற்கு அரியனவாய் இருக்கும் மலர்கள்: அத்தி மலர்; ஆல மலர்; பலா மலர்.

மலர் உண்டு; பெயரும் உண்டு; ஆனால் இதுதான் அது என்று உறுதியாக அறிய இயலாதுள்ள நிலையில் இருக்கும் மலர்கள்: சுள்ளி மலர், பாங்கர் மலர்.

மலரின் பெயரைத் தவிர வேறு விளக்கம் அறிய இயலா அரிய மலராக இருப்பன: காவிதி மலர், அனிச்ச மலர்.

அகவிதழ் முதலிய உறுப்புகள் இருந்தும் அவை புறத்தே காட்சிப் படாமல் உள்ளேயே பொதிந்திருக்கும் மலர்கள்: அத்தி, ஆலம், கொழிஞ்சி, பலா.

எளிய பூக்கள்

பயன்பாடு, நாற்றம், மக்களது விருப்பில் இடம் பெறாமை, பொதுவில் ஒதுக்கப்பட்டமை கொண்டு மலரில் சில எளியவை ஆகின்றன. அவையாவன: நெருஞ்சி, எருக்கு, பூளை, குரீஇப் பூளை, வேளை, ஊமத்தம், கள்ளி, முருங்கை.

இவ்வாறாக அனைத்துப் பூக்களையும் வகைப்படுத்தி அழகு படத் தொகுத்துக் கூறுகிறது இந்நூல்.

## பூக்கள் பற்றிய உவமைகள்

பூக்களின் தன்மைகள் பற்றிக் கூறும் ஆசிரியர் அப் பூக்களோடு தொடர்பு கொண்டுள்ள உவமைகளையும் அழகிய முறையில் ஆங்காங்கே தந்து செல்கிறார்.

மகளிரின் பல்லுக்கு முல்லையும், கண்ணுக்குக் குவளையும், முகத்திற்குத் தாமரையும், வாய்க்கு ஆம்பலும், மூக்குக்கு எட்பூவும், காதுக்கு வள்ளைக் கொடியும், செவ்வரி படர்ந்த கண்ணுக்கு செங்கழுநீர் இதழும் முகிழ்த்த மார்புக்குக் கோங்கமும், தேமல் படர்ந்திருப்பதற்கு வேங்கைப் பூவும், கைக்குக் காந்தளும், செவ் விதழுக்கும் சீரடிக்கும் இலவம் இதழும், பசலைக்குப் பீர்க்கும், நிறத்திற்கு அசோகின் தளிரும் உவமைகளாகின்றன. மற்றும் பூக்கள் எவ்வெவற்றிற்கு உவமையாகின்றன என்பது இலக்கியச் சான்றுகளுடன் காட்டப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| தாமரை மொட்டு | — | நெஞ்சக்குலை |
| நொச்சி அரும்பு | — | நண்டின் கண் |
| வேப்பம் பூ | — | வயல் நண்டின் கண் |
| வாகைப் பூ | — | மயிற்குடுமி |
| குரவின் அரும்பு | — | பாம்பின் பல் |
| புன்னை அரும்பு | — | பல்லி முட்டை |
| தாழை மலர் | — | நாரை |
| தாழை விரிவு | — | அன்னம் |
| தளவ மலர் | — | மீன் கொத்தியின் வாய் |
| தளவம் அரும்பு | — | கவுதாரியின் கால் நகம் |
| இலுப்பைப் பூ | — | அம்புக் குப்பி, முத்து, ஆலங் |
| | — | கட்டி, பூனையின் அடி, |
| | — | கடைந்த யானை மருப்பு, |
| | — | இறால் மீன் தலை. |
| ஞாழல் | — | வெண்சிறு கடுகு, ஆரல் மீன் |
| | — | முட்டை |
| மகிழம் பூ | — | தேர் உருளை |
| இடப்பம் பூ | — | குறும்பூம்ப் பறவைக் குஞ்சு |
| பாதிரி | — | ஓவிய எழுது கோல் |

| | | |
|---|---|---|
| முள்ளி மலர் | — | அணிற் பல் |
| முருக்குமலர் | — | புலி நகம் |
| கவிர் மலர் | — | சேவலின் நெற்றிக் கொண்டை |
| ஈங்கை மலர் | — | சிட்டுக்குருவிக் குஞ்சு |
| புன்கு | — | பொரி |
| அவரைப் பூ | — | கிளிமூக்கு |
| அகத்திப் பூ | — | பன்றிப் பல் |
| ஊமத்தம் பூ | — | எக்காளம் |
| ஊகு | — | அணில் வால் |
| கரும்புப் பூ | — | குத்திட்டு நிற்கும் வேல் |
| அடும்புப் பூ | — | குதிரை கழுத்தில் கட்டப்படும் சதங்கை |
| வெண்கடப்பம் | — | பந்து |
| செவ்வலரி | — | குருதி தோய்ந்த குடர் |
| நொச்சி இலை | — | மயிலின் காலடி |
| அடும்பு இலை | — | மான் குளம்பு |
| காந்தள் கிழங்கு | — | கலப்பை |

தூய்மைக்குத் தும்பையும், கருநீலத்திற்குக் காயாம் பூவும் என்றுமுள எடுத்துக்காட்டுகளாம். மாணிக்கக்கல்லில் 'குருவிந்தம்' என்னும் வகையின் நிறத்திற்குத் திலக மலர் நிறம் கூறப்படும். தெறுழ் பூ, களிற்றின் நெற்றியில் தோன்றும் புள்ளி வடிவில் பூக்கும். பிடவ மலர் கொத்தாகப் பூத்துக் குலுங்குவது. பால் கறக்கும் முழவில் பால் நுரை பம்பி நிற்பது போன்றிருக்கும். கொன்றைக்காய் திரண்டு தொங்கும் தோற்றம் தவம் செய்வோரது திரண்ட சடைக்கற்றைப் போன்றது. பகன்றை மலர், புதுத் துணியை முருக்கிக் கஞ்சி தோய்த்து நீரில் அடித்துப் பிழியும் போது நிற்பது போன்ற தோற்றமுடையது.

இவ்வுவமைகளைக் காணும் போது பண்டைத் தமிழ்ப் புலவர்கள் இயற்கையில் தோய்ந்த திறமும், இவற்றைத் தொகுத்தளித்த இளஞ்சேரனாரின் அயரா உழைப்பும் நன்கு புலனாகின்றன.

## பூக்களின் பெயரால் இசையும் இசைக் கருவிகளும்

முல்லை : முல்லை யாழ், முல்லைப் பண் உள்ளன.

குறிஞ்சி : குறிஞ்சி யாழ், குறிஞ்சிப் பண்; இரவில் காவல் புரிவோர் தாம் காவலுக்கு இருப்பதை அறிவிக்கவும், தூக்கத்திற்கு ஆட்படாதிருக்கவும் குறிஞ்சிப் பண் பாடுவர்.

மருதம் : மருதயாழ், மருதப் பண்.

பாலை : பாலை யாழ், பாலைப் பண்

ஆம்பல் : ஆம்பல் இசையும் அல்லிக் கூத்தும் உண்டு.

காஞ்சி : காஞ்சிப் பெயர் கொண்ட இசை செவ்வழிப் பண் வகையினது. போர்ப் புண் நலம் பெறவும், காற்றாவி அணுகாதிருக்கவும் இதைப் பாடுவர்.

## பூப்பெயர் ஊர்கள் – நூல்கள்

பூக்களின் சிறப்பான தன்மையால் தமிழ் நிலத்தில் பல ஊர்கள் பூப்பெயர் பெற்றிருப்பதையும், பூக்களின் பெயரால் இலக்கியங்கள் படைக்கப்பட்டிருப்பதையும் மற்றும் பூக்களின் பெயரால் புலவர்கள் பெயர் கொண்டிருப்பதையும் ஆசிரியர் நூல் முழுவதும் ஆங்காங்கே சுட்டிச் சென்றுள்ளவை இங்கே தொகுக்கப் பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| முல்லை | — | திருமுல்லை வாயில், முல்லையூர், முல்லைக்காடு, முல்லைப்பாடி. |
| குறிஞ்சி | — | குறிஞ்சிப் பாடி. |
| மருதம் | — | மருதூர், மருதவேலி, மருதம்பாக்கம். |
| நொச்சி | — | நொச்சி நியமம் |
| ஆர் (ஆத்தி) | — | திருஆரூர், ஆர்க்காடு. |
| பனை | — | பனையூர், பனங்காடு, திருப்பனந்தாள் |
| தாழை | — | தாழையூற்று, தாழையூர், தாழைக்காடு, தாழந்திருவாயில். |
| காயா | — | காசாங்காடு, காசாங்குளம், |
| பிடவம் | — | பிடவூர். |

| | | |
|---|---|---|
| இலுப்பை | — | இலுப்பூர், இருப்பைக்காடு, இலுப்பை, |
| பாதிரி | — | திருப்பாதிரிப் புலியூர். |
| சண்பகம் | — | சண்பகாடவி |
| தில்லை | — | திருத்தில்லை |
| பருத்தி | — | பருத்தியூர் |
| எருக்கு | — | எருக்கத்தம்புலியூர் |
| பூளை | — | இரும்பூளையூர். |

முல்லை, குறிஞ்சி, காஞ்சி பெயரால் பத்துப்பாட்டில் முறையே முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மதுரைக் காஞ்சி உள்ளன. வஞ்சிப் பூவின் பெயரால் வஞ்சிப் பா எனும் ஒரு பாவகையும் பேர் வஞ்சி, வஞ்சி மாலை எனும் புற நூல்களும் உள்ளன. தும்பையின் பெயரால் தும்பை மாலை எனும் சிற்றிலக்கியம் உள்ளது. முள்ளியால் முள்ளியார் எனும் புலவரும் ஞாழலால் மதுரை அளக்கர் ஞாழலார், குமிழி ஞாழலார் நப்பசலையார் என்னும் புலவர்களும், முசுண்டை மலரால் குறுநில மன்னன் ஒருவனும், வள்ளி மலரால் முருகன் மனைவியான வள்ளியும் பெயர் பெற்றுள்ளதும் அறியத்தக்கதாகும்.

### பூக்களும் மருத்துவமும்

தமிழ் நிலப் பூக்கள் பல மருந்துப் பொருள்களாக விளங்குகின்றன. அத்தகு மலர்கள் எவை என்பதையும் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

1. முல்லை மலர் மணம் காதல் உணர்வு தரும்; உடம்பில் புத்துணர்ச்சியும் மகிழ்ச்சியையும் தரும்.

2. இலவம் பூவைக் கொண்டு கறுக்குநீர் செய்து குடிப்பர். இது குருதிப் பெருக்கை அடக்குவது; மலம் இளக்கி; சிறு நீரைப் பெருக்கும். இலவம் பஞ்சு சீழை வற்றச் செய்யும்.

3. தாழம் பூ மணம் பூச்சிக் கொல்லி. அம்மை நோய் கண்ட இல்லத்தில் இம் மலரைக் கட்டித் தொங்கவிடுவதால் அந்நோய் வளர்க்கும் நுண்ணுயிரிகள் அழியும். தாழை மடலிலிருந்து வடிக்கப்படும் பனிநீர் அம்மை நோய் மருந்து. பனையோலைச் சுவடிகளைப் பூச்சிகள் அழிக்காமல் பாதுகாக்கத் தாழை மலர் மணம் பயன்படும்.

4. இருப்பைப் பூவைக் கொண்டு குடிநீர் செய்து பருகச் சிறுநோய்கள் தீரும். பூவை மருந்தாக்கி உண்டால் பித்த சுரம் போகும். இருப்பைப் பூவின் சாற்றை எடுத்து இரும்புத் தூளில் கலந்து பக்குவம் செய்து அந்தூளை மைபோன்று குழைத் தெடுக்கலாம்.

5. கவிர்ப் (வெண்மைப்) பூச் சாற்றைக் கொண்டு ஈயத்தை நீறாக்கலாம்.

6. ஆவிரைப் பூ இதழைத் தேனில் இட்டுக் குல்கந்து செய்து உண்பர். இதனால் குளிர்ச்சியும் உடல் வலிவும் பெருகும்.

7. செவ்வலரி மலரால் பக்குவமாக்கப்படும் மருந்து பல நோய்களைத் தீர்க்கும். இதில் தோன்றும் மஞ்சள் நிறச்சாறு கொடிய நஞ்சு.

8. சண்பகப் பூ உடல் மறுவையும் பருவையும் நீக்கும்.

9. நந்தி வட்டப் பூ கண்நோய் பலவற்றையும் போக்கும்.

10. ஓமப் பூவிலிருந்து வடிக்கப்படும் ஓம நீர் மருந்துப் பொருள்; வயிற்று நோய்கள் பலவற்றையும் நீக்கும்.

11. பருத்திப் பூ வெள்ளை, குருதி அழல் நோய், புண் முதலியவற்றிற்கு மருந்து.

12. செம்பருத்திப்பூவை எண்ணெயிலிட்டு ஊறவைத்து முடி வளர்ச்சிக்குப் பயன்படுத்தலாம்.

13. மாதுளை முகிழைக் காயவைத்துப் பொடி செய்து இருமலுக்குக் கொடுக்க அது நீங்கும்.

14. தெங்குப் பூ உடலின் நஞ்சு நோய்க்கு மருந்து.

15. எட்டி பூ கண் நோய்க்கு நல்ல மருந்து.

16. வாழைப்பூ வயிற்றளைவு, கைகால் எரிச்சல், எருவாய்க் கடுப்பு, இருமல் முதலியவற்றிற்கு அரிய மருந்து மேக நோயை ஒழிக்கும்.

17. அகத்தி இலைக்கீரை சமையலுக்குப் பயன்பட்டு உடல் வெப்பத்தைத் தணிக்கும்.

18. துளசி இலைச் சாறு சுரப்பிணி, அளவுநோய் இனமெலாம் நீக்கும்.

19. பசும்பிடி இலைச் சாற்றால் தலைப்பேன் போகும்; முகப்பரு வேர் அறும்; தோற் புண் ஆறும்.

20. ஆலம் அனைத்துறுப்புகளும் மேகம், உள் கடுப்பு நீரிழிவு ஆகியவற்றை நீக்கும்.

21. எருக்கம் பால் மருந்துக்காகும். வெள்ளெருக்கின் நாரை எடுத்துக் குழந்தைகட்குக் கடிப்படையாகக் கட்டும் வழக்கம் உண்டு.

22. ஊமத்தையின் வித்து வெறியேற்றும் குணம் கொண்டது

23. முருங்கைக் கீரையுணவால் வயிற்றுக் குற்றம் வராது இது மேக நோய் நீக்கும் மருந்தாகவும் இருக்கிறது முருக்கம் பூவால் கண் குளிர்ச்சி ஏற்படும்; பித்தம் குறையும்; நாச்சுவை யின்மை நீங்கும். இதனை ஆவின் பாலில் அவித்து உண்டு வர ஆண் வீரியம் கெட்டிப்படும்.

24 மயிலை மலர் குருதிப் பித்தத்தைப் போக்கும்,

25. குசும்பைப் பூவிலிருந்து ஆடைக்கேற்றும் காவி நிறச்சாறு எடுக்கப்படுகிறது.

எல்லாப் பூவும் இதன்பாலுள; இதன்பால் இல்லாத எப்பூவும் இல்லை;

இவ்வாறாகத் தமிழ் நிலத்திலுள்ள பூக்களைப் பற்றிய முழு விவரங்களையும் ஒரே நூலில் அறிய வேண்டுமானால் இதற்கு இது தவிர வேறு நூல் இல்லையென்று துணிந்து கூறலாம். பூக்களின் அமைப்பை ஆசிரியர் தெளிவாக விளக்குவது கொண்டு அவர் ஒவ்வொரு பூவையும் தேடி, நாடி, அறிந்து இந்நூலை ஆக்கியுள்ளார் என்பதை அறிய முடிகிறது. ஆசிரியரின் அரிய உழைப்பு தெளிந்த அறிவு, நிறைந்த பட்டறிவு ஆகியவற்றின் இணைப்பாக இந்நூல் விளங்குகிறது.

இப் பூக்காட்டில் நுழையும் தும்பியாக நாம் விளங்கு வோமாக!

அன்பன்,
சு. செல்லப்பன்

# இந்நூலில் நிறுவப்பட்டுள்ளவை.

1. பண்டைத் தமிழகத்தில் மலர்க்கலைக் கல்வி இருந்தது.
2. பண்டைத் தமிழ்ச் சான்றோர் செடிம (செடி அறிவியல்) அறிவுடையோர்.
3. சங்கப் பாடல்களில் மலர்பற்றிய கருத்துகள் தற்காலச் செடிம ஆய்விற்கு இயையும், வளர்ச்சிக்குத் துணையும் ஆகும்.
4. மலர்களால் வாழ்வியல் மரபுகள் மலர்ந்தன.
5. பூ என்பது பொதுப்பெயர்.
6. பூவின் தன்மை 10 — பருவம் 7 — உறுப்பு 7 — இதழ்ப் பெயர் 7 — கொத்துப் பெயர் 7 — மலர் அணி வகை 26.
7. முல்லை தமிழர் வாழ்வியல் மலர்.
8. முல்லை நிலத்தவர் மரபுகள் பல மரபுகளுக்கு முதன்மையானவை.
9. வாழ்த்துக் கலவையாக முல்லையும் நெல்லும் கொள்ளப்பட்டன.
10. ஆம்பல்–தாமரை–நீர்த் தொடர்பின் கரணியப் பெயர்.
11. குறிஞ்சி தமிழ் நிலப் பூ.
12. கோயிற் பூசெய்க்குரியார் குயவர்.
13. ஆர் என்பது காட்டாத்தி.
14. வலப்பக்கத்துக்குருத்தே பனம்பூவாகச் சூடப்பட்டது.
15. வெட்சி விருச்சி அன்று — வாகை இரண்டு வகை — காந்தள், தோன்றி, கோடல் ஒருமைப்பாடு, வேறுபாடு — உந்தூழ் என்பதே உரிய சொல் — கலிமா, வடுமரம்; தேமா, கனிமரம்.
16. பஞ்சணைக்குரிய இலவம் முற்காலத்தது.
17. அனிச்சம் மரம் குழையும் முறை.
18. வண்டுண்ணா மலர் இல்லை.
19. பூக்காது காய்ப்பதில்லை.
20. முருங்கை தமிழ்ச் சொல்.
21. தமிழ்ச்சொல் ஆய்வால் பல கருத்துச் சிக்கல்களைத் தீர்க்கலாம்.
22. உலக மரபுகளில் தமிழ் மரபுகள் முந்தியவையும், பகுத்தறிவிற்கு ஒத்தவையும், இன்றியமையாத கரணியங்கள் கொண்டவையும், பண்பாட்டின் அடிப்படையில் எழுந்தவையும் ஆகும்.

# ஆய்வின்நோக்கமும் நெறியும்.

**நோக்கம் :**

1 தமிழ் மரபு — உலக மரபு ஒப்பியல் நோக்கு.
2 செடிமம் (செடி அறிவியல்) — இலக்கிய இயைபு.
3 மரபுகளில் கருத்து கரணியம், காணல்.
4 மலர்களில் வாழ்வியற் பயன்.
5 மலர்த் தொடர்பில் இலக்கியம், இலக்கணம், செடிமம், மொழி, மரபு, ஆன்மம், மருந்து.
6 தமிழ்ச் சான்றோர் கருத்து வழி மலர்களை வரிசைப் படுத்தல்.
7 மேற்கோள், சான்றுக் கருத்துடன் புலவர் பெயர் பொறித்தல்.
8 அரிய மலர்கள் ஆய்வு.
9 ஒல்வொரு மலர்க்கும் ஒவ்வொரு இலக்கியச் சொற் பெயர் இடல்.
10 இடையீடுபடுத்தும் பிறழ்வுக் கருத்துகளை வெளிப் படுத்தல்.

**நெறி :**

1 இலக்கிய நெறியில் மலரியல்.
2 செடிமக் கருத்துவழிப் படல்.
3 தமிழ் மரபின் இயைபு.
4 சொல்லாய்வுத் துணை.
5 உவமைகள் வழி நுண்பார்வை.
6 பகுத்தறிவு இயைபு.
7 மேற்கோள் ஆட்சி தவிர்த்துத் தனித்தமிழ் நடை.
8 தமிழ்க் குமுகாய நடைமுறை.
9 நாட்டுப் பாடல், மரபுத் தொடர், பழமொழிகளைத் துணையாக்கல்.
10 புதிய சீர்திருத்த எழுத்து.

# இலக்கியம் ஒரு பூக்காடு

## 1. பூவுலகில் பூரிக்கும் பூக்கள்

### பூ-உலகம்

'பூவே, நீ வாழ்க! எனது உள்ளம் கவர்ந்தவள் மிக மென்மையானவள். அவளது உள்ளமும் மென்மை; உடலும் மென்மை. அம்மென்மைக்கு உவமை தேடி அலைந்தேன். ஒரு பொருளும் ஒப்பாகக் கிடைக்கவில்லை. பூவே! உன்னிலும் அவள் மென்மையானவள் தான். ஆனாலும், உனது இயல்பால் அவளுக்கு உவமையாக நீதான் அணுகி வருகின்றாய். அதனால்,

*''நன்னீரை; வாழி அனிச்சமே''*[1]

இஃது ஒரு காதற் குமரனது உணர்ச்சி உரையாடல் திருவள்ளுவப் பெருந்தகை இயக்கிய நாடக மேடையில் இவ்வாறு அவனைப் பேசவிட்டார். அவனது உரையாடல் மூலம் பூவின் மென்மைச் சிறப்பை வழங்கும் வாழ்த்து மலர் இது; தமிழ் மென்மை,

---

1 திருக்குறள் : 1111

ஒரு பிரிவுக் காதலன் கெஞ்சுகின்றான் :

'கருமுகிலே! எனக்காக எனது காதலிபால் தூது செல்லும் எனது தோழனே! என்மேல் கொண்ட பரிவால் நீ விரைந்து செல்வாய். ஆனாலும், வழியில் உள்ள மலைகளில் பூத்துக்குலுங்கும் புது மல்லிகையின் மணம் உன்னைத் தடுத்து நிறுத்தும். அந்த மணத்தில் ஈடுபட்டுக் காலங் கடத்திவிடுவாயோ என்று எதிர் பார்க்கின்றேன். அருள் கூர்ந்து விரைந்து செல்க!'[2]

இது கருமுகிலைத் தூதனுப்பும் காதலனது ஏக்கக் குரல். இக்குரல் 'மேகதூதம்' என்னும் மேடையில் ஒலித்தது. குரலைத் திறந்தவர் கவி காளிதாசர். இத்திறப்பில் மல்லிகைப் பூவின் மணச்சிறப்பு ஒலிக்கிறது. இது மணச்சிறப்பு மலர்; வட மொழி மணம்.

'தெய்சி' என்ற பூ மலர்ந்து நீல, ஊதா வண்ணங்களை வழங்கும் போதும், 'லேடி சுமோக்கு'- பூத்துப் பளபளக்கும் வெண்மை வண்ணத்தை வழங்கும் போதும் 'கக்கூ பட்' - பூத்து மஞ்சள் வண்ணத்தை வழங்கும் போதும் பசுந்திடலுக்கு மெருகேற்றி மகிழ்ச்சி ஏற்றுகின்றன'[3]

இது 'கல்விமான்' என்று அறிமுகமானவன் இசைத்த பாடலின் கருத்து. 'காதற் கூத்தின் இழப்பு' என்னும் நாடகத் தின் இறுதிக் காட்சியில் இசைக்கப்பட்டது. இசைக்க வைத்தவர் மாகவி சேக்சுபியர். இந்த இசைப்பில் பல பூக்களின் வண்ணச் சிறப்பு ஒளிர்கின்றது. இது வண்ண மலர்; ஆங்கில வண்ணம்.

மென்மை, பூவின் இயல்புத் தன்மை.

மணம், சிறப்புத் தன்மை.

வண்ணம், அழகுத் தன்மை.

பூவின் தன்மைகள் மேலும் பெருகியனவாயினும் அவற்றிற் கெல்லாம் இவை மூன்றும் அடிப்படையாக நிற்பவை. பூவின்

---

2 மே. தூ: பாகம் 1: செய்யுள் 23
3 *LOVE'S LABOUR'S LOST.*

அடிப்படைத்தன்மைகளைத் திருவள்ளுவர், காளிதாசர், சேக்சுபியர் ஆகிய மூவர் வாய்மொழிகளில் உணர்வது ஒரு தனிச் சிறப்பாகும். ஒரு முழுமையான தனிச்சிறப்பு எனலாம்.

திருக்குறளின் காமத்துப்பால், தலைவன், தலைவி, தோழி உரையாடல்களாக அமைந்தது. இவ்வமைப்பால் இது நாடகத் தமிழ் இலக்கியம். வடமொழியில் சுவையும் நயமும் சுரக்கச் சுரக்க நாடகக்காப்பியங்களைப் புனைந்தவர் மாகவி காளிதாசர். ஆங்கில நாடக இலக்கியத்தின் தனிப்பெருஞ் செம்மல் செழுங்கவிஞர் சேக்சுபியர். உலகத்து இலக்கியங்களின் ஒட்டு மொத்தம் இம் மூவர்தாம் எனலாம்.

எனவே, பூ, உலகஇலக்கியங்களில் தனியோர் இடங்கொண்டு சிறக்கின்றது எனலாம்.

'இலக்கிய உலகில் பூவின் தனிச்சிறப்பு'-என்று குறிக்கும் போது இச்சிறப்பை முந்திக்கொண்டு உலகம் வருகின்றது. வரும் உலகம் தனக்கு முன்னே பூவைச் சூடி நிற்கின்றது.

இந்த உலகத்தையே பூவுலகம் என்றுதானே சொல்கின் கிறோம்? பூவுலகை வழிமொழிவது போன்று பிங்கல நிகண்டு,

"*பூகோளம், பூகண்டம், பூவலய மெண்ப*"[4] —என்று பூ-பூ-பூவாகவே அடுக்குகின்றது.

"*மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி*"[5] —என்று மணிவாசகர் பூதலமாக்குகின்றார்.

இவற்றிற்கெல்லாம் மேலாகப் பூவே உலகம் ஆகியது. உலகைப் பூவாகவே-பூ என்னும் சொல்கொண்டே தமிழ்ச் சான்றோர் பாடினர்:

நிலத்திற்குப் பெயர்களை விதிக்கும் சூடாமணி நிகண்டு,

"*திணையே மாவே வேலி பூ நிலம் நாற்பெயரே*"[6]
—என்கின்றது.

---

4 *பிங். நி:* 451
5 *திருவா: திருவம்மானை* 1
6 *சூடா. நி: இடப்பெயர்:* 6

*"புலவர் திருவள் ளுவரன்றிப் பூ மேல்*
*சிலவர் புலவரெனச் செப்பல்"* —என்பது மதுரைத் தமிழாசிரியர் செக்குன்றூர்க்கிழார் பெயரில் திருவள்ளுவமாலையில் நோக்கப்பட்ட உலகப் பூ.

*"இப் பூ மிசை என்னன் பாலிக்கும்"*[7] —என்பது திருநாவுக்கரசர் திருவாய் மலர்ந்தது.

ஆசிரியரும் அரசரும் பாடினாலும் ஆண்டிகளும் பேச வேண்டுமன்றோ? இஃதோ சிங்கன் சிங்கி வினு விடை:

*"இந்தப் பணியைநீ பூணப் பொறுக்குமோ சிங்கி?*
*—பூவில் (உலகில்)*
*ஈசர்க்கும் நல்லார்க்கும் எல்லாம் பொறுக்குங்காண்*
*சிங்கா"*[8]

குற்றாலக் குறவஞ்சி உலகிற்குச் சூட்டிய பூ இது. மேலும் செய்யுள் வழக்கிலும் உலக வழக்கிலும்,

*பூ பாகம், பூகம்பம்;*[9]
*பூபதி, பூதேவி, பூசுரர், பூகண்டகர்*[10] —எனப் பல சொற்கள் பூவாகவே உலகைப் பூக்க வைக்கின்றன.

## உலகம் ஒரு நீர்ப் பூ.

உலகம் பூ என்பது சொல்லளவில் மட்டும் அன்று; தோற்றத்தாலும் உலகம் பூ ஆகும். அதிலும் உலகம் ஒரு நீர்ப்பூ.

'வான வெளியில் அமைந்த அண்டங்களில் ஞாயிறு, தீப் பிழம்பான அண்டம். அதன் பிசிறாகத் தெறித்த ஒரு பிழம்புத் துண்டே இப்பூவுலகம் ஆயிற்று' என்பது வான நூலார் கொள்கை.

---

7 அப். தே: கோயிற்பதிகம்: 1, 8. குற. கு: 185.

9 "பூகம்பம் பிறந்ததுவும்"—பாரதம்: சூதுபோர்: 259

10 "பூகண்டகர் கோவொடு ஆகண்டலன் மாய"—தக்க: 698.

தெறித்த துண்டுத் தீப்பிழம்பு சூழ்நிலையால், மேற்பகுதி ஆவிப் பிழம்பாகிக் காற்றுச்சூழலால் நீர் தோன்றிற்று என்பது நிலநூலார் கோட்பாடு.

வானம், நெருப்பு, காற்று, நீர், நிலம் என்னும் ஐம்பெரும் பூதங்களில் 'நிலத்திற்கு முந்தியது நீர்' என்பது பூத நூலார் முடிபு. நீர் நிலத்திற்கு முன்னே தோன்றியது என்னும் கருத்தை வைத்தே கடலுக்கு 'முன்னீர்' என்னும் தமிழ்ச்சொல்லை அமைத்தனர் சான்றோர்.

இதனைப் புறப்பாட்டிற்கு உரை வகுத்த பழைய உரைச் சான்றோர்,

"முன்னீர் என்று ஓதி நிலத்திற்கு முன்னாகிய நீர் என்றும் உரைப்ப"[11] -என உரைத்தார்.

நீர் வெள்ளத்தில் மலைகள் தோன்றின. 'மலையில்தான் உயிர்கள் தோன்றிப் பல்கிப் பெருகின' என்பது உயிர்நூலார் கல்'லெழுத்து.

இதனைத்தான் 'கல்தோன்றிய காலம்' என வரலாற்று நூலார் காலக் கல் நாட்டினர்.

நீரில் கற்பாறை எழுந்த-தோன்றிய பாங்கைக் கூர்ந்து நோக்கினால் அது பூவின் பாங்காக அமையும். நீர்ப்பரப்பில் கற்பாறையின் முனை, அலைமோதல்களின் இடையே கண்டும் காணாததுமாகத் தோன்றியது. நீர் நனைப்போடு தோன்றிய அம்முனை, பூவின் முளைப் பருவமாகிய நனை போன்றது. தொடர்ந்து எழுந்து கூர்மையாக நின்றதோற்றம் பூவின் அரும்புக் காட்சியை வழங்கியது. மேலும் அடி பருத்து எழுந்த காட்சி அரும்பின் அடிமுகிழ்த்துத் தோன்றும் முகை போன்றது. 'முகுமுகு' என முகிழ்த்த உச்சி, முகடு எனப்பட்டது. முனை கூர் இன்றி மொக்கையாகத் தோன்றியபாறை மொக்குள் போன்று அமைந்தது.

மொக்குள் முகையின் ஒருவகை. "முகை மொக்குள்"[12] என்பது குறள். இம்மொக்குள் போன்றிருப்பதால் நீரில் தோன்றும் குமிழியும் 'நீர் மொக்குள்' எனப்பட்டது.

---

11 புறம் : 9 உரைவிளக்கம்
12 குறள் : 1274

மொட்டையாகத் தோன்றிய பாறை மொட்டாய் நின்றது.

*"கல் தோன்றி மண்தோன்றாக் காலம்"* —என வரலாற்றுக் காலத்தை – பொழுதை வரையறுக்கும் அளவாக எழுந்த கல் மலை, போது + இ = போதி எனப்பட்டது.

*"போதி, கோ, சிலை, இறும்பு, தடம்"* —சேந்தன் திவாகரம்.
*"பொற்றை, நாகம், சிலை, போதியும் மலைப் பெயர்"*
—பிங்கலம்.

—என மலைப்பெயராகப் 'போதி' என்னும் சொல் குறிக்கப்பட்டது.

தொடர்ந்து ஆங்காங்கே ஏடாய்த் தோடாய், இதழாய்த் கற்பாறைகளினிடையே முகடு இன்றி, மூளித்தளமாகப் பொக்கை யாய்த் தோன்றிய மேடைப் பாறை தாமரைப் பொகுட்டுபோலத் தோன்றியது. இத்தகைய மலைக்கு,

*"பொருப்பொடு குவடு கல்லுப்*
*பொகுட்டொடு திகிரி குன்று"*[13] —என்றும்
*"மாதிரம் கல்லே வரையே பொகுட்டு"*[14] —என்றும்

பொகுட்டுப் பெயரை நிகண்டுகள் வகுக்கின்றன.

மலைக்குப் 'பூதரம்' என்பது ஒரு பெயர். மலைகளிலும் பூதரம் என்பது இமயத்தையும் மேருவையும் குறிக்கும்.

இதனைத் *"தரணி, பூதரம், ஓங்கல் பிறங்கல்"*[15] —என்றும்
*"பூதரம் ஆதிமலை பொன்மலை இமயம்"*[16] —என்றும்
*"பூதரம் மணிமலை பொன்மலை மலைமேரு*
*என்ப"* —என்றும் நிகண்டுகளில் காணலாம்.

இவ்வாறு மலையை மலராகக் காணும்போது இரண்டிற்கும் மூலம் ஒன்றுதான் என்பது போன்று இவற்றின் வேர்ச்சொல் உள்ளது. வளப்பத்தைக் குறிக்கும் *'மல்'* என்பதுதான் இரண்டின் வேர்ச்சொல் என்பதும் ஒரு பொருத்தத்தைக் காட்டுகிறது.

---

13 சூடா. நி : இடப்பெயர் 31
14 *பிங். நி* : 495.
15 சேந். தி: இடப்பெயர் : 38
16 *பிங். நி* : 509

இவ்வாறு, நனையாக, அரும்பாக, முகிழாக, மொக்காக, மொட்டாக, போதாக, பொகுட்டாக, பூவின் தரமாகப் பூத்தது மலை.

உலகில் உயர்ந்தது இமயமலை. முதன் முதலில் தோன்றிய மலை என்பர். வெண்மையான பனி படர்ந்ததால் பனிமலை—இமம் மலை (இமம்=பனி) எனப்பட்டது. சேக்கிழார் இவ்வெண்மைத் தோற்றத்தோடு மனக்கண்ணில் காண்கிறார். உவமை வாயிலாகச் சிறப்பிக்கின்றவர்,

*"உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்*
*மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை"*[17] —என வெண்டாமரை மலராகப் பாடுகின்றார். உலகம் என்னும் கொடி மேல் மலர்ந்த நீர்ப் பூவாகக் கண்டு மகிழ்கின்றார்.

பூத்துமலர்ந்த மலையின் புறவிதழாக அகவிதழாக, ஞாலமும் நிலமும் விரிந்தன. இதழ்கள் விரிந்தால் மணங்கமழ வேண்டும் அன்றோ? கமழ்ந்தது. மலைஎன்னும் பூவினது இதழாம் மலையடிவார ஞாலம் மணம் பெற்றதைத் தமிழ்ப் பண்களில் தேர்ந்த பரிபாடல் என்னும் வண்டு,

*"மாமலை ஞாறிய (மணந்த) ஞாலம்"*[18] —என இசைக் கின்றது. மதுரைக் காஞ்சி என்னும் பத்துப் பாடலில் ஒரு பாடலாகப் பாடும் தேன் வண்டு,

*"தேன்தூங்கும் உயர்சிமைய*
*மலைநாறிய வியன்ஞாலம்"*[19] —எனத் தேனையும் கூட்டி மணம் பெற்ற ஞாலமாகக் கமழ வைக்கின்றது.

இவ்வாறு, மணங்கமழும் சூழலால் மலை என்னும் பூவில் பரவிய தாதுக்களின் சேர்க்கையால் ஓரறி உயிர் முதல் ஆறறி உயிர்கள் பிறந்து பெருகின. இவ்வுயிர்கள் வைகும் நிலம் விரிந்த வையத்தை நலங்கிள்ளி என்னும் மன்னன்,

*"நிலமலர் வையத்து வலமுறை வளைஇ"*[20] —என வையத்தை மலராக-நிலமென்னும் மலராகக் காண்கின்றான்.

---

17 பெரிய : திருமலைச் சிறப்பு : 3
18 பரி : 74
19 மது. கா : 3, 4
20 புறம்: 225 : 4

மலராக மலர்ந்த உலகத்தை 'மலர்தலை உலகம்' எனத் தமிழ்ச் சான்றோர் சிறப்பாக வழங்கினர்.

தமிழ்இலக்கணப் பெருநூலைப்படைத்த தொல்காப்பியனார் முதலில் மலர்தலை உலகமாக வழங்கினர் :

*''மலர்தலை உலகத்து மரபுநன் கறிய''*[21] என்னும் இலக்கண நூற்பாத் தொடரை அடியொற்றிப் பலரும் ''மலர்தலை உலகம்''எனப் பதித்ததை இலக்கண, இலக்கியங்களில் காணலாம்:

*''மலர்தலை உலகத்து மல்கிருள் அகல''*[22]

—எனச் செய்யுளின்

தொடக்கத்திலும்,

*''... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... உரைசெல*
*மலர்தலை உலகம் ஆண்டுகழிந் தனரே''*[23]

—என இடையிலும்,

*''பிறழ்வது மன்றோஇம் மலர்தலை உலகே''*[24]

—என ஈற்றிலுமாக

அமைத்துப் பரவலாகவும் நிரவலாகவும் பாடினர்.

> பாற்கடலுள் முகமும் கண்ணும், வாயும், கையும் காலும் செந்தாமரையாகப் பூத்துக் கிடந்த 'பச்சை மா மலை'யின் உந்தி வெண்டாமரையில் நான்முகன் அமர்ந்து உலகத்து உயிர்களைப் படைத்தான்

—என்பதும் உலகம் ஒரு நீர்ப்பூ என்று கதைக்கின்றது. இதனைக் குறிப்பிற் பாடிய கம்பர்,

*''பல்லா யிரங்கோடி அண்டமிப் பனிக்கடலுள்*
*நில்லாத மொக்குளெனத் தோன்றுமால்''*[25]

—என நீரில் தோன்றும்

மொக்குகளாக உலகைப் பாடினார்.

இவ்வாறாக,

உலகத்தின் தோற்றத்தை இயற்கைப் பாங்கில் நோக்கினால்

**உலகம் ஒரு நீர்ப் பூ**

---

21 தொல்: பொருள்: 77 22 நன்: சிறப்புப்பாயிரம்: 1.
23 மது. கா: 237, 24 புறம்: 182; 9. 25 கம்ப: இரணியன்வதை: 158.

உலகிற்கு அமைந்த தமிழ்ச்
சொற்களின் பாங்கை நோக்கினுலும்
**உலகம் ஒரு நீர்ப் பூ.**

## அறிவியல் செடியில் அலரும் பூ

உலகத்தை மேல் உலகம், கீழ் உலகம் எனப் பிரிக்கின்றனர் ஆன்ம இயலார். இது மேல் கீழ் என்னும் உயர்வு தாழ்வுக் குறிப்பு. அறிவியலார் மேல்நாடு, கீழ்நாடு எனக் குறிக்கின்றனர். இது மேற்கு, கிழக்கு என்னும் திசைவழிப் பாகுபாடு.

ஆன்ம இயல் குறிக்கும் இரண்டு உலகங்களிலும் பூக்களுக்கு நிறைவான இடம் உண்டு. மேல் உலகில் திநமரங்கள் ஐந்தாம். அவை சந்தானம், அரிசந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பர். இவற்றின் பூக்கள் ஒவ்வொரு வகையில் வியப்புத் தன்மை கொண்டவையாம்.

பொன்னாக, மணியாக, மாணிக்கமாகப் பூத்தல், நினைக்கும் மணம் கமழ்தல், சூடினால் உருமாறுதல், அணிந்தால் வெற்றி பெறுதல் என்றெல்லாம் கற்பனையின் மேல் எல்லைவரை வியப்பில் பூப்பவை. இப்பூக்கள் இவ்வுலகிற்கும் அருளப்பட்டன; இறக்குமதி யாயின; கடத்தப்பட்டன என்பவற்றிற்கெல்லாம் கதைகள் உள்ளன.

தனது இரு தேவிமார்களுக்கிடையே நேர்ந்த பூசலைத் தீர்க்கக் கண்ணன் மேலுலகப் பாரிசாத மலரைக் கொணரச் செய்தான் —என்பது பாகவதக் கதை.

> *"........................ தன்பூ மரத்தினை*
> *அன்றுதன் புள்ளால் வலியப் பறித்திட்ட*
> *என்றன் வன்மையைப் பாடிப்பற"*[26]

—என்னும் பெரியாழ்வார் பாடல், மலர் கடத்தப்பட்ட கதையைக் குறிப்பது.

'திரௌபதிக்காக வீமன் மேல் உலகம் சென்று ஒரு பாரிசாத மலரைக் கொணர்ந்தான்' என்கிறது பாரதக் கதை.

---

26 *பெரி. திரு*: 6: 3.

"கவரி திண்டேர் கற்பக தருவொடு ஈந்தான்"[27] –என்கிறது திருவாலவுடையார் புராணம்

"அரசர் ஆணையால் கற்பகமரம் இவ்வுலகிற்குவர அதனை விரும்பாத தேவர்கள் வஞ்சினமொழியால் அம்மரம் பூ அளவே தந்தது; மந்தாரமும் அவ்வாறே"[28] – என்பது நச்சினார்க்கினியர் காட்டும் கதைக் குறிப்பு.

மேல் உலகத்திற்கும் நம் உலகத் தாமரைப் பூ சென்றது. இங்கு அடியார் இட்ட மலர்கள் அங்கு சேர்ந்தன. செல்வக் குவியலின் தெய்வமான குபேரன் இங்கிருந்து போன சீரகப் பூ மாலையை அணிந்தவன். அதனால் அவனுக்கு 'சீரகத் தாரோன்' என்பது ஒரு பெயராயிற்று. இவ்வாறு பல கதைகள் இவ்வுலக மலர்கள் மேல் உலகம் சென்றதைக் குறிக்கின்றன.

இவ்வுலகில் பூக்கள் எங்கும் பூத்துக் கமழ்கின்றன. உலகத்தின் தெற்கு வடக்கு முனைகளின் பனித்தளங்கள், பாலைவன மணற்பரப்புகளில் சில இடங்கள் தவிர ஏனைய நில, நீர், மலைப் பகுதிகளில் எல்லாம் பூக்கள் பூத்துக் குலுங்கு கின்றன. அவ்வந்நாட்டு வெப்ப தட்பங்களுக்கேற்ப மலர் வகைகள் அமைந்துள்ளன.

கீழை நாட்டிலிருந்து மேலை நாட்டிற்கும் அங்கிருந்து இங்கும் பூக்கள் மாறி மாறிப் பயிராகிப் பரவின. இருவகை நாட்டு மக்களும் பூக்களில் நாட்டங்கொண்டனர்; கண்டனர்; மோந்தனர்; சூடினர்; மகிழ்ந்தனர்; மகிழ்கின்றனர். ஆயினும், இரு வகையாரும் பூக்களைக் கண்டு பயன் கொள்ளும் வகையில் வேறுபாடு உண்டு.

கீழை நாட்டு மக்கள் பூக்களைப் பயன்படுத்திய வகையில் உணர்ச்சிப்போக்கு நிறைவானது; அறிவுப் போக்குக் குறைவானது. மேலைநாட்டார் போக்கில் அறிவுப்பாங்கு உலகளவு; உணர்ச்சிப் பாங்கு உழக்கு அளவு எனலாம்.

கீழை நாட்டில் பொதுவான அறிவியல் துறையின் மூலங்கள் அரும்பின. அவ்வரும்புகளைச் சூழ்ந்து முரன்று முகிழ்க்கச் செய்யும் வண்டுகளாம் அறிவியல் வல்லுநர் தோன்றவில்லை; முனையவில்லை; வளர்க்கவுமில்லை.

---

27 திருவால: 37; 75    28 சீவ. சி: 1701

வானவெளியில்விண்மீன்களுக்கும் உடுக்குகளுக்கும் கோள்களுக்கும் இயக்கம் உண்டு என்பது அறிவியல் கண்டுபிடிப்பு. இக்கருத்தை,

*"பதியிற் கலங்கிய மீன்"*[29]

—எனத் திருவள்ளுவப்பெருந்தகை குறித்தார். இக்கருத்தை அறிவாராய்ச்சியால் விரித்து, வளர்த்து, நடைமுறையில் காண்போர் தோன்றவில்லை. மேலைநாட்டார் முனைந்து, முயன்று அவ்வியக்கத்தைக்கண்டனர்; இயக்கத்தோடு இயங்கினர்; அதனை வென்றனர்; அவற்றின் மேலேயே இயங்கினர்.

உலகம் என்பது நீர், மலை, நிலம் என்றிருந்த அளவில் உயிர் இனங்கள் தோன்றாதிருந்த காலம் உண்டு. பாசி, பூஞ்சான், காளான், புதர், செடி, கொடி, மரம் என்பன உயிர்த்தன; தளிர்த்தன; தழைத்தன. ஆனாலும், உயிரினம் பிறப்பதற்கு வித்தான கருப்பிடிக்கும்—சூல்கொள்ளும் நிலை, பூக்கள் தோன்றிய போதுதான் ஏற்பட்டது. இதுகொண்டு, பூதான் உலகத்து உயிர் இனத் தோற்றத்திற்கு அடித்தளம் என்பதை உணரலாம்.

இத்தகைய மூலமான பூ பற்றிய அறிவியல், மேலைநாட்டாரிடம் அரும்பி, மலர்ந்து, மணம் கமழ்ந்தது. நந்தம் தமிழில் காணப்படும் பூக்களின் உறுப்பு, தன்மை, இனம், பருவம் பற்றிய சொற்கள் அறிவியல் பாங்குடையவை. என்றாலும் அறிவியல் துறையாக விளங்குவது மேலைநாடு என்பதில் ஐயமில்லை.

கி. பி. முதல் நூற்றாண்டில் 'மூத்த பிளினி' என்னும் உரோமப் பேரறிஞன் இயற்கையை ஆராய்ந்தான். செடியியலைத் துருவினான். 'இயற்கை அறிவியல்' என்னும் நூலை வழங்கினான். இப்பேரறிஞனைத் தொடர்ந்து பலரால் இக்கலை இடையீடுகளுடன் வளர்ந்தது.

19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சுவிடன் நாட்டுப் பாதிரியார் 'இலின்னேயசு மாண்டலே' என்பார் செடியியல் ஆய்வை மேற்கொண்டார். இவர் செயற்கை முறை அறிஞர் எனப் பட்டார். உயிரியல் ஆய்வில் இவர் டார்வினுக்கு அடுத்த நிலையில் இடம் பெற்றவராவார்.

இவர் பட்டாணி, அந்திமல்லிகைப் பூக்களைத் தமது ஆய்வுக்குக் கொண்டார். அந்திமல்லிகையின் சிவப்பு வண்ணமும்

---

29 குறள்: 1116.

வெண்மைவண்ணமும் கொண்ட பூக்களை இணைத்துச் செயற்கை முறையின் கலப்பின அந்தி மல்லிகையைக் கண்டார். கலப்பினப் பூவின் முதல் தலைமுறை, சிவப்பு வண்ணமாகவே பூத்தது. அடுத்த தலைமுறைப் பூ வெண்மையாகவும், அடுத்து இளஞ்சிவப்பாகவும் பூத்தன. இதனால் கண்ட முடிவைக்கொண்டு மக்கள் உயிர் இனத்தின் தலைமுறை, கொடிவழிப் பண்புகளை வரையறுக்கும் கோட்பாடு தோன்றியது. இக்கோட்பாட்டைப் பின்னர் தோன்றிய அறிவியல் அறிஞர் பலரும் ஏற்றனர்.

இவரது ஆய்வின் முடிவுகளால்தான் பூக்களுக்குப் பெயரிடும் முறை எழுந்தது. இவரே பூப்பெயர்களின் தந்தை எனலாம்.

உயிரியியலில் 'மூத்த பிளினி' முதல் 'மாண்டலே' வரை கண்டறிந்து நிலைநாட்டிய கொள்கையின் முதற்கருத்து ஒன்று உண்டு. அஃது, உயிர் இன வரலாற்றில் முதன்மையான செடி 'தன் மெய்யால் உற்று உணரும் ஓர் அறிவை உடையது' என்பது.

இக்கருத்தை,

*''ஒன்றறி வதுவே உற்றறி வதுவே''*[30]

—என ஒருவரியில்

தொல்காப்பியர் கூறியிருப்பதை நினையாமல் விட முடியவில்லை. இக்கருத்தும் ஏறத்தாழ 5000 ஆண்டுகளுக்கு முன்னர் சொல்லப்பட்டது என்பது நயப்பைத் தூண்டுகின்றது. தமிழகத்தில் அவருக்குப் பலநூற்றாண்டுகளுக்கு முன்னர்வழங்கிய கருத்தையே குறித்தார் என்றும் வியப்பு, நினைவால் எழுகின்றது. அதைத் தொடர்ந்தே இத்துணை காலமாக இவ்வருங் கருத்தை எத்தமிழனும் அறிவியல் துறையாக நெஞ்சத்தாலும் நெருங்கவில்லையே என்ற ஏக்க உணர்வும் தலை நீட்டுகின்றது.

இந்த ஏக்க உணர்விலிருந்து மேலைநாட்டு அறிவியல் மணம் மீட்கின்றது. பூ இனம் பற்றிய ஆய்வில் ஈடுபட்டோர் தனியார் மட்டுமல்லர். நிறுவனங்கள் ஈடுபட்டன. பல்கலைக் கழகங்களில் ஓர் ஆய்வுத்துறையாகவும் ஏற்பட்டது. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் பூக்கும் செடிகளைப்பற்றி ஒரு கணக்கு பதிவாகியுள்ளது.

---

30 *தொல் பொருள் : மரபு :* 27

உலகில் பூக்கும் செடியினம் *1, 96, 000.* இவற்றுள் சாமந்திக் குடும்பச் சூரியகாந்தியில் மட்டும் *13; 000* எண்ணுக்கும் மேற்பட்ட இனங்கள் உள்ளன. இவ்வெண்ணிக்கை முன்னே கண்ட கூட்டுமொத்த எண்ணிக்கையில் பதினைந்தில் ஒரு பங்காகும். எண்ணிக்கை அளவில் இச்சூரியகாந்தி இனம் மேம்பட்டிருந்தாலும் மேலைநாட்டார் அறிவையும் உள்ளத்தையும் சூழ்ந்து கமழ்வன,

*ROSE. JASMINE, LOTUS, LILLY.*

—எனப்படும் உரோசா, மல்லிகை, தாமரை, அல்லி என்னும் பூக்களேயாகும்.

"மலர்களின் அரசி உரோசாவே" —எனக் கிரேக்க, உரோமக் கவிஞர்கள் பலரும் போற்றியுள்ளனர். இஃது ஒரு காட்டு மலர். செடியில் பூப்பது, கருஞ்சிவப்பு, அரக்குச் சிவப்பு, இளஞ்சிவப்பு, மஞ்சள், வெண்மை எனப்பலவண்ணங்களில் மலரும். இருப்பினும் இளஞ்சிவப்பே இதற்குரிய இயற்கை வண்ணம். பிற பூக்களின் வண்ணங்களைக் குறிக்க வண்ணச் சொற்கள் உள்ளன. ஆனால் இதன் பெயர் உலகில் ஒரு *ROSE* —'உரோசு'— என்னும் வண்ணச் சொல்லை உருவாக்கியிருத்தலே இதன் பெருமையை விளக்குகின்றது. இந்நிறம் ஒரு பெருமை என்றாலும், இது வழங்கும் மெல்லிய மணமே இதன் தனிச் சிறப்பாகும்.

'இரிச்சேர்டு' என்னும் ஆங்கிலேயக் கவிஞன்,

*"உரோசாவை மோந்தாள் குழந்தை*
*'ஓ' என்றே வியந்தாள்: "எனக்கே*
*உறாதிலே என்னே அந்தோ*
*உடையதோ ஒரேஒரு மூக்கே"* —என இதன்

மணச்சிறப்பை ஓர் அரும்புள்ளத்திலிருந்து வடித்துப் பாடினான். குழந்தைகளைக் கவர்ந்த நமது நேரு பெருமகனாரைக் கவர்ந்த மலர் இது.

அடுத்து நாம் முல்லை, மல்லிகை, மௌவல் என வழங்கும் இனத்தை மேல்நாட்டார் ஓலிவக் குடும்பம் என்பர். அக்குடும்பத்தைச் சேர்ந்தது செசுமின்—*JASMINE*—மலர்.

இது பெரும்பாலும் வெண்மை நிறத்திலும் சிறுபான்மை பிற நிறங்களிலும் பூக்கும். உள்ளத்தைக் கௌவும் இனிய மணம்

இதன் உயிர்ப்பு எனலாம். உலகெங்கும் பரவியுள்ள இதில் தென்னமெரிக்காவில் மட்டும் 200 இனங்கள் உள. சூன் அக்டோபர் திங்கள்களில் பூத்துக் குலுங்கி அந்நாட்டையும், மக்களையும் கமழ வைக்கின்றது.

அடுத்த, தாமரை அனைத்துலக மலர். மலர்களில் பெரியது; அதிக இதழ்களையுடையது. நிறத்தாலும் ஓரளவு மணத்தாலும் சிறந்தது. எகிப்து நாட்டார் இதனை 'நீர் அல்லி' என்று வழங்கு கின்றனர். இது நீர்ப்பூ என்றாலும் தாமரை மரமும் உண்டு. உரோமில் இம்மரப் பூவால் உண்டாகும் பழம் முதலில் சிவப்பாகத் தோன்றிப் பின்னர் கருப்பாக மாறக்கூடியது. இப்பழம் உணவாகப் பயன்படுகின்றது. இஃதும் அறிவியல் ஆய்வில் இடம்பெற்றது.

இவற்றிற்கெல்லாம் மேலாக இப் பூ ஒரு தெய்வப் பூ என்னும் தகுதிபெற்றது. மேலைநாட்டிலும் இவ்வுணர்வு உண்டு. 'இறை உணர்வோடு இறந்தோர் மீண்டும் கடவுள் உலகில் உள்ள தாமரைப் பூவில்பிறப்பர்' என்பது எகிப்து நாட்டார் நம்பிக்கை.

'இலில்லி' [*Lilly*] என்னும் அல்லி மலரும் உலக மலர். கிறித்துவ மா மறையான விவிலிய நூலில் விரல் விட்டெண்ணக் கூடிய அளவில் பூக்களின் பெயர்களைக் காணலாம். அவற்றில் இந்த அல்லிப் பூ சில இடங்களில் சிறப்பாகக் குறிக்கப் படுகின்றது.

உலக இலக்கியங்கள் பலவற்றிலும் உவமையாகவும் எழில் வண்ணனையாகவும் அல்லி சிறப்பிக்கப்படுகின்றது. எகிப்து, சீன நாட்டுச் சிற்பங்களில் இப்பூ எழிலுடன் செதுக்கப்பட்டுள்ளது.

இதில் 40 இனங்கள் உள்ளன என்று அறிவியலார் கணக்கிட்டுள்ளனர். நீர்ப்பூவாகிய இது ஓடை, ஏரி, குளம், கேணிகளில் மலர்வது. குவிந்தும் விரிந்தும் 7 நாள்கள் அளவில் பூத்திருக்கும். அங்கேரி நாட்டில் இப்பூ ஒரு வியப்பான பூவாகும். அந்நாட்டில் வெந்நீர் ஊற்றுகள் உண்டு. அவ் வெந்நீர் ஊற்றுகளில் இப்பூ பூத்து அழகை வழங்குவது ஒரு வியப்பாகும். இதனை வியப்போடு விடாமல் அறிவியலார் ஆய்வுக்குள் செலுத் தினர். இதனால் புதிய கோட்பாடுகள் உருவாயின.

மேலே குறிக்கப்பட்டவை போன்ற மலர்களும் பிறமலர்களும் அறிவியல் உலகில் ஆராயப்பட்டன; ஆராயப்படுகின்றன.

# பூவால் பூத்த புதுக் கலைகள்

பூவைப்பற்றிய அறிவியல் ஆய்வால் புதிய கலைகள் பூத்தன. தோட்டக்கலை தழைத்தது; பூங்காக்கலை அரும்பியது. இல்ல ஒப்பனைக் கலை முகிழ்த்தது; மலரடுக்குக் கலை மலர்ந்தது. பொருளியலிலும் இக்கலையால் அலர்ச்சி எழுந்தது; வாழ்வியல் மணந்தது.

பூ இதழ்களின் வளம், புதிய நிறம், பூக்கள் தழைத்தல், முதலியன அறிவியல் ஆய்வால் புதிதாகத் தோன்றின. பூந் தாதுக்களின் ஒட்டு முறையால் வண்ண மலர்கள், வளமான காய்கள், சுவையான கனிகள், மதர்ப்பான மரங்கள் விளைந்தன. தோட்டக்கலைக்கு இவ்வாய்வு துணை நின்றது.

பூக்களின் காட்சியாலும் மணத்தாலும் மக்களுக்கு உண் டாகும் மகிழ்ச்சியையும் உடல் நலத்தையும் கருதியும், நகரின் அழகு கருதியும் பூங்காக்கள் உலகெங்கும் அமைந்தன.

*"அவனது கன்னங்கள் மணம் நிறைந்த பூங்கொடிப் பாத்திகள்."*[31]

—என்று விவிலிய நூலில் சாலமோன் இசைப்பாடல் காட்டும் உவமையில் வரும் 'பூங்கொடிப் பாத்திகள்' பூங்கா அமைப்பை வெளிப்படுத்துகின்றது.

தீனுல் இசுலாமியத்தின் மறையாகிய குர்–ஆனில் நேரடி யாக எந்தப்பூவின் பெயரையும் காண முடியவில்லை. "மணப் பொருள்கள் இறைவனால் அருளப்பட்டன." என்று காணலாம். இந்தப் பொருள்களில் பூ அடங்கும். வண்டைக் குறிக்கும் இடங் களிலும் கனிகளின்மேல் வண்டு மொய்த்ததாகக் காணப்படு கின்றதேயன்றி மலரின்மேல் மூரன்றதாகக் காண முடியவில்லை. ஆனால்,

*"நீ சுவணபதி (துறக்க உலகம்) என்னும் பூங்காக்குள் புகக் கடவாய்"*[32] —என்று வீட்டுலகம் பூங்காவாகக் குறிக்கப்பட்டுள்ளது.

---

31 விவி: சாலமோன் பாடல்கள் 5 : 13

32 குர்: பாகம் 23; 36 : 26

உலகில் எங்கணும் பழங்கால முதலே இயற்கையில் அமைந்த பூஞ்சோலைகளும் செயற்கையில்அமைந்த பூங்காக்களும் நிறைந்திருந்தன.

உத்தியானம் எனப்படும் உய்யானம் என்னும் சொல் பூங்காக்களைக் குறிக்கும். அரசன் அரசியர் பொழுதுபோக்க விளையாடும் பூங்காக்கள் இவை. தமிழகத்தில் இதுபோன்ற பூங்காக்கள் இருந்தன. இவை, 'பூம்பொழில்' என்றும் அழைக்கப்பட்டன. நெடுமுடிக்கிள்ளி மகிழ்ச்சியாகப் பொழுதுபோக்குதற்கு,

*''சீர்த்தி என்னும் திருத்தகு தேவியொடு*

*போதவிழ் பூம்பொழில் புகுந்தனன்''*[33] –என மணிமேகலை குறிக்கின்றது. காப்பியங்களில் 'பூம்பொழில் விளையாட்டு' ஓர் அமைப்பாகும்.

கடவுள் வழிபாட்டிற்குரிய பூக்களைப் பெற 'நந்தவனம்' என்னும் பூங்கா அனைத்துக் கோயில்களிலும் அமையலாயின. இதற்கெனவே தனியான அறக்கட்டளைகள் எழுந்தன.

கைலாயத்தில் சிவ கணத்தாரில் ஒருவர் வழிபாட்டிற்குப் பூக்கொய்யப் பூங்காவிற்குப் போனாராம். பூக்கொய்கையில் அங்கிருந்த அரமகளிர் மேல் காமப்பார்வை போக்கினாராம். அக்குற்றத்திற்காக அவர் சுந்தரமூர்த்தியாக மண்ணுலகில் பிறக்க நேர்ந்தது. இக் கதையிலும் மேலுலகில் பூங்காக்களைக் காண்கிறோம்.

இறைவனை மலரால் வழிபட எண்ணிய இந்திரன் அதற்கென ஒரு பெரும் பூங்காவையே உண்டாக்க எண்ணினான். அவனுக்கெனப் பொன்னியாறே அவன் தவமிருந்த சோலையில் பாய்ந்தது. பொன்னி நீரின் வளத்தால் அவனது பூங்கா தழைத்து வளர்ந்ததெனக் கதையிற் சிறந்த கந்தபுராணம்,

*''மேனிறை அடைகள் மல்கி, விரிதரு சிணையும் போதும்*

*தானிறைகின்ற தம்மா சதமகன் வளர்த்த பூங்கா''*[34]–என்று வண்ணிக்கின்றது. இவ்வாறு இந்திரன் பூங்கா வளர்த்த கதையும் உண்டு.

---

33 மணி : சிறைக்கோட்டம் 55 ; 56

34 கந் பு: இந்திரன் அருச்சனைப்படலம்: 13

மதுரையில் வங்கிய சூடாமணி மாறன் என்னும் மன்னன் சிவபெருமான் வழிபாட்டிற்காக ஒரு பூஞ்சோலையை அமைத்தான். அதில் சண்பக மரங்களை அதிகமாக வைத்தான். அப்பூவைச் சார்த்திச் சிவனுக்குச் சண்பகசுந்தரர்என்று பெயரமைத்துத்தானும் சண்பகமாறன் எனப்பட்டான்.

ஊர்களில் பூங்காக்களை அமைத்தமை மட்டுமன்றி வீடுகளிலும் பூங்காக்களை வளர்க்கும் பழக்கம் எழுந்தது. மேலை நாடுகளில் வீட்டு முகப்பில் அழகிய பூக்களைப் பூக்கும் சிறு சிறு பூஞ் செடிகளை எழில் கருதி அமைத்தனர். நமது பரந்துபட்ட நாட்டிலும் இப்பழக்கம் இருந்தது.

> "வாடாமல்லிகைச் செடி சூழ்ந்த மாதவிக்கொடி வீடும், அதன் அண்டையில் அசையும் தளிரோடு சிவப்பான அசோக மரமும், பேரழகுள்ள கேசய மலரும் பொருந்தியுள்ள எனது காதலியின் வீடு"[35] —என்று

மேக தூதத்தில் வீட்டு முகப்பு குறிக்கப்படுகின்றது.

தமிழ் இலக்கியங்களிலும் இல்லத்து முகப்பில் இவ்வகை அழகு அமைக்கப்பட்டிருந்ததைக் காண்கின்றோம். வீட்டு முகப்பில் நொச்சி மரம் வைத்து வளர்க்கப்படுவதும், அதில் மாதவிக் கொடி படருமாறு வளர்க்கப்படுவதும் உண்டு. முற்றத்தில் முல்லைக்கொடி வளர்க்கப்படும்.

இல்லத்து முகப்பு இவ்வாறு அழகு செய்யப்பட்டமை போன்று இல்லத்தின் உள்ளிடமும் மலர்களால் ஒப்பனை செய்யப்படும் பழக்கம் கி. மு. விலேயே மேலை நாடுகளில் திகழ்ந்தது.

கி. பி. முதற் நூற்றாண்டளவில் ஒரு மன்னன் நாட்டு மக்களுக்கு ஓர் ஆணை பிறப்பித்தான். 'ஒவ்வொரு இல்லமும் மலர்க்கொத்துகளாலும் மலர்க் கோவைகளாலும் நாள்தோறும் ஒப்பனை செய்யப்பட்டு விளங்கவேண்டும்' —என்பது அவ்வாணை.

இவ்வாணையிட்டவனது குணத்தன்மையை நோக்கினால் ஒரு வியப்பு தோன்றும். அவன் அத்தகைய குணக்கேடன்.

---

35. மே. தூ: பாகம் 2; செய்யுள்; 16

கொடுமையின் மேல் மட்டச் சின்னம். 'உரோம நகரம் பற்றி எரியும்போது அரண்மனை நிலாமுற்றத்தில் வீணை மீட்டிக் கொண்டிருந்தவன்' என உலகில் அறிமுகமாகியுள்ள நீரோ மன்னன்தான் அவன். இந்நிகழ்ச்சி ஒன்றே அன்பும் அருளும் இல்லாத அவனது தீக்குணத்தை அறிவிக்கின்றது.

வீணை மீட்டிய அவனது வாழ்வு கொலை உள்ளத்தின் வார்ப்பு எனலாம். அவன், கணவனுக்கு நஞ்சு ஊட்டிக் கொன்ற தாயின் மகன். தனது அரச பதவி கருதித் தனது ஒன்றுவிட்ட உடன் பிறந்தானைக் கொன்றவன். காதலிக்காக ஈன்ற அன்னையைக் கொன்றவன். அடுத்த காதலிக்காக மனைவியைக் கொன்றான். கருவுற்றிருந்த காதலியைக் காலால் உதைத்தே கொன்று குழந்தையையும் கொன்றவனானான். இறுதியில் தன்னைத்தானே கொன்றுகொண்டு கொலைமுடி சூடியவன்.

இத்தகைய கொலைக்கறை படிந்த உள்ளம் பூக்கலையில் தோய்ந்தமை பூவின் பெருமைக்கு மாலை சூட்டுகின்றது.

அவன் செயல்களை எல்லா வகையாலும் வெறுத்த மக்கள் இந்த ஆணையை மட்டும் ஆர்வத்துடன் ஏற்றனர். கவனங் காட்டிக் கடைப்பிடித்தனர். இல்லங்களை மலர்க்கோலமாக்கினர்.

மேலை நாடுகளில் இவ்வாறான இல்ல ஒப்பனை ஒருபெருங் கலையாக வளர்ந்தது. இதற்கு ஆய்வுக் கழகங்கள், பயிற்சி வகுப்புகள் நிகழ்ந்தன. 1907 இல் 'கெர்டிரியூடி செக்கிள்' என்னும். ஓவிய அறிஞன் 'இல்லத்தில் மலர் ஒப்பனை' என்றொரு நூலை எழுதினான். இக்கலை மற்றைய நாடுகளைக் காட்டிலும் சப்பானில் மிகப்பெருங் கலையாகத் தலையெடுத்துத் தழைத்தது.

சப்பானியர் மலர்க் காதலர். ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொரு பூவை அடையாளச் சின்னமாகக் கொள்வர். அப்பூவை உடை, அணிகலன், பாண்டம் முதலியவற்றில் பொறித்துக் கொள்வர்.

இதுபோன்றே இல்லங்களை மலர் ஒப்பனையால் எழில் ஊட்டும் பழக்கம் அவர்கட்கு அன்றாடக்கடமையாயிற்று. ஒப்பனையாகப் பூக்களை அடுக்கும் பாங்கு ஒரு கலை. அக்கலை அங்கு ஒரு கல்வியாகவே மலர்ந்தது. கி. பி. ஏழாம் நூற்றாண்டளவில் மலர் ஒப்பனைக்கென்று ஒரு பள்ளி தோன்றியது. அப்பள்ளிக்கு

'இகெனோபோ' என்று பெயர். மக்களது ஆர்வத்தால் இப்போது சப்பானில் 'இகெனோபோ'க்கள் 3000 அளவில் நடைபெறுகின்றன. இவ்வெண்ணிக்கை கொண்டு அவர்களது மலர்க் கலையின் ஆர்வத்தை உணரலாம்.

மேலும் இக்கலையைக் கற்பிக்கக் கல்லூரி அளவில் 'சொகெட்சு' எனப்படும் கலைக்கூடம் ஒன்று தோக்கியோ நகரில் உள்ளது.

இக்கல்வியில் மலரடுக்கல், கோத்தல் வரிசைப்படுத்தல், கட்டல், கொத்தாக்கல் முதலியவற்றோடு தாழி, தொட்டி, கலை வட்டில், கலைப்பானை முதலியவற்றில் பூக்களை இலை தழைகளுடன் பார்வையாக அமைத்தலும் இடம் பெற்றது.

தாழிகளில்இவ்வாறு மலர்ச்செடிகள், கொடிகளை வளர்க்கும் பழக்கம் நம் தமிழகத்திலும் உண்டு என்பதை,

*"தாழிக் குவளை வாடுமலர் சூட்டி"* 36
*"தாழியும் மலர் பல அணிபா"* 37 —என்னும்

அகநானூற்றுப் பா அடிகள் சுட்டிக்காட்டுகின்றன, இவை இக்காலத்தில் 'குரோட்டன்சு' எனப்படும் கலைச்செடி வளர்ப்பாகும்.

நமது தமிழகத்தில் இஃது ஒரு கலையாகவும் இப்போது சப்பானில் வளர்ந்திருப்பதுபோன்ற கல்வியாகவும், சான்றிதழ் பெறுவதுபோன்று தேர்ச்சி பெற்றுப் பெயர் பெறுவதாகவும் இருந்ததை இலக்கியங்கள் காட்டுகின்றன.

கலையரசி மாதவியின் மகள் மணிமேகலை இசைக்கலையும் நாட்டியக்கலையும் பயின்று அரங்கேறினாள். இவற்றுடன் மேலும் பல கலைகளையும் பயின்றவள். அக்கலைகளுள்,

*"வட்டிகைச் செய்தியும், மலராய்ந்து தொடுத்தலும்*
*கோலங் கோடலும் கோவையின் கோப்பும்*
*கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை"* 38 —என

மலரைத் தேர்ந்து கண்டு, ஆய்ந்து தொடுக்கும்கலை ஒரு பயிற்சிக்

36 அகம்: 165: 11.
37 அகம்: 369: 6
38 மணி: ஊரலர் உரைத்த காதை: 33

கலையாக மணிமேகலைக் காப்பியம் குறிக்கின்றது. "கற்றுத் துறை போகிய" எனப்பட்டமைகொண்டு அஃதுஒரு கல்வியாகஇருந்ததை யும், அஃது ஒருதுறைப் பயிற்சியாக நிறைய வேண்டுமென்றும், மணிமேகலை அதனில் தேர்ந்து சான்று பெற்றவள் என்பதையும் உணர முடிகின்றது. இக்கலைகள்

"நாடக மகளிர்க்கு நன்கணம் வகுத்த" கலைகள் எனப் படுவதால் இதற்கெனப் பாடத்திட்டம்போன்று வகைப் படுத்தப் பட்ட முறைகள் இருந்தன என்பதையும் அறியலாம். எனவே, தமிழகம் இன்றைய உலக வளர்ச்சியின் கலை முகப்பின் முன்னோடி யாகின்றது.

## பூவும் பொருளியல் பொலிவும்

அறிவியலில்மலர்ந்த மலர்க்கலை நாட்டின் பொருளியலுக்குத் துணை செய்தது. உள்நாட்டு வருவாய்க்கும் வெளிநாட்டு வருவாய்க்கும் இம்மலர்க்கலை துணையாவதைக் கால வரலாற்றில் காண முடிகின்றது.

மலர் வணிகம், மலர்ச்செடி—கொடி வணிகம், மலர் வித்து வணிகம் முதலியவற்றோடு மலரின் இயற்கை மணத்தைக்கொண்டு செயற்கை வடிப்பில் மணப் பூச்சுப்பொருள்களை உருவாக்கும் கலை பிறந்தது.

கிரேக்க நாட்டின் ஒருவகைத் தாமரையின் பொகுட்டு முதிர்ந்து கனியாகியது. இக்கனிகொண்டு 'அடை' என்னும் ஒரு வகை உணவுப்பண்டம் செய்து விற்பனைக்கு வந்தது.

மேலும் தாமரை மலரிலிருந்து இன்சுவைப் பருகுநீர் சமைக்கப்பட்டு விற்பனைப்பொருள் ஆகியது. மலரிலிருந்து ஒரு வகைக் கள்—ஒயின்—வடித்தனர். இது பெருஞ்செல்வர்களால் குடிக்கப்பட்டு விலையுயர்ந்த குடிநீர் ஆகியது.

இவ்வாறு உலகெங்கணும் தோன்றிய மலர் வணிகம் அமெரிக்காவில் ஒரு குறிப்பிடத்தக்க வணிகக்கலை ஆகியது. 1960 ஆம் ஆண்டுக் கணக்கின்படி அமெரிக்காவில் விற்பனையான பல வகைப் பொருள்களால் நேர்ந்த வரவு 30 ஆயிரம் கோடி தாலர். இதில் மலர் வணிகத்தால் மட்டும் எழுபது கோடி தாலர் வரவு ஆயிற்றாம்.

அமெரிக்கர்பால் இவ்வணிகம் ஆர்வ நடவடிக்கையாக மாறியது. அமெரிக்க நாட்டரசு இவ்வணிகத்தை ஒரு பெருமையாகக் கருதியது. அதனால் இவ்வணிகத்தின் ஊதியத்தையோ இழப்பையோ பார்க்காமல் 0.27 விழுக்காட்டாளவு திட்டத்தை மலர்ப்பெருக்கத்திற்கென ஒதுக்கியது.

மலர்களின் இயற்கை மணத்தைக்கொண்டு செயற்கை வடிப்பு முறையால் அத்தர், பன்னீர் முதலிய மணப்பொருள்கள் சமைக்கப்பட்டன, இச்சமைப்பில் உரோசா, முல்லை மலர்கள் மேம்பட்டு நின்றன. 'செண்டு' என்னும் 'கமழ் நெய்ப்பு' தோன்றியது. உரோசாவிலிருந்து வாலை மூலம் வடித்தெடுக்கப்பட்ட அத்தர் ஒரு பெரும் வணிகப் பொருளாகியது. ஒரு சான்று கொண்டு இதன் பெருமையை உணரலாம்:

பல்கேரிய நாட்டின் சோபியா நகரில் உரோசாப் பள்ளத்தாக்கு என்றொரு பகுதி உள்ளது. இங்கு உரோசா இதழ்களைக் கொய்வதற்காக 2 நூறாயிரம் தொழிலாளர்கள்பணி செய்கின்றனர். 340 மலர்களிலிருந்து ஓர் இராத்தல் இதழ்கள் தொகுக்கப்படும் எத்துணையோ ஆயிரக்கணக்கான இதழ்களிலிருந்து எடுக்கபடும் அத்தரின் அளவு இரண்டு துளிகள்தாம்.

உலகெங்கும்–குறிப்பாக இசுலாமிய நாடுகளில் அத்தர் ஒரு தகுதியான வருவாய் தரும் வணிகப்பொருளாக வளர்ந்துள்ளது. இதுபோன்று மலரிலிருந்து சமைக்கப்படும் பல்வகைப் பொருள்களின் வணிகம் சுட்டிக் கூறத்தக்க ஒன்றாக உள்ளது.

நம் தமிழகத்திலும் மதுரைப் பகுதியில் பயிராகும் முல்லை மலர் நாள்தோறும் வான ஊர்தி மூலம் மலைநாடு முதலிய கீழை நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றது. ஒரு சிறிதளவான வெளிநாட்டு வருவாயை இது வழங்குகின்றது.

பொருளியல் கலையிலும் மலர்க்கலை பங்குபெற்றுத் திகழ்வதை இவ்வளவில் சுருக்கமாகக் கொள்ளலாம்.

## ஆன்மவியலில் அமர்ந்த பூ

பலவகை இயல்களிலும் பங்கு கொண்டுள்ள பூ ஆன்மவியலிலும் இடம்பெயராத சூழலைப் பெற்றுள்ளது. ஆன்மவியல் என்பது

இறைவனை நோக்கமாகக் கொண்டது; உயிர்–இறைவன் தொடர்பைக் காட்டுவது. இத்தொடர்பிலும் மலர்த் தொடர்பு இணைந்து நிற்கின்றது.

கடவுளரையே பூப்பெயரிட்டுப் போற்றினர். கொன்றையாண்டி, தாமரைக்கண்ணன், மலரவன், பூவன், கடம்பன் என. அவ்வக்கடவுளர்க்கென ஒவ்வொரு பூவை உரிமைப்படுத்தி அவ்வப் பெயரால் வழங்கினர். "மலர்மிசை ஏகினான்" என்று திருவள்ளுவர் ஆண்ட தொடரில் தத்தம் கடவுளரைப் பொருத்தி நிலைநாட்டுவதில் போட்டி போட்டனர். மலரின்மேல் தத்தம் கடவுளரை நடக்க வைத்துப் பார்ப்பதில் பேரவாக் கொண்டனர்.

மேலைநாட்டிலும் பூவால் பெயரிடப்பட்ட கடவுளர் உளர் உரோமானியத் தொன்மைக் கடவுள் 'சாயி' – '*JOYE*' என்னும் மலரால் பெயர் அமைந்த 'சாயி சூப்பிட்டர்' – '*JOYE JUPITOR*' என்பது. அங்குப் போற்றப்படும் 'ஃபுளோரா' என்னும் தெய்வதை 'மலர்த் தெய்வதை' எனப்படும்.

ஆன்மவியலின் இயக்கமே மதமென வழங்கப்படுவது. மதம் என்றால் கொள்கை–கோட்பாடு. இறைவனை அறியும் வழியைக் காட்டுவதே இக்கோட்பாடு. வழியில் படுவதாலும், வழியில் படுத்துவதாலும் இதற்கு வழிபாடு என்னும் சொல் அமைந்தது. இவ்வழி பாட்டு முறையில் கீழைநாட்டு மதங்கள் விரிவும் நெறியும் சற்று ஆரவாரமும் கொண்டவை. மேலைநாட்டு மதங்கள் நெறிகளைக் கொண்டிருப்பினும் அவை சுருக்கமானவை. கூடித்தொழுதல் ஒன்றே நடைமுறை. இவை கொண்டு கீழைநாட்டு முறையை 'வழிபாடு' –'பூசை' (பூ செய்)–என்றும், மேலைநாட்டு முறையைத் 'தொழுகை' என்றும் குறிக்கலாம்.

கீழைநாட்டு வழிபாட்டில் பூ முதன்மைப்பொருள். இன்னும் சொன்னால் பூதான் வழிபாட்டின் முழுமைப் பொருள். மேலும் குறித்தால் 'மலரேகடவுள்' என்னும் அளவில் பூ இடம்பெற்றுள்ளது. மேலைநாட்டுத் தொழுகையில் மலர், சார்த்தும் பொருளும் அன்று. காலப்போக்கில் நம் நாட்டு முறையைக் கொண்டு ஒப்பனைப் பொருளாகச் சிலரால் கொள்ளப்பட்டது.

உலகத்து மதங்கள் பலவற்றுள்ளும் பூவிற்கு நிறைவான இடத்தை, அதனிலும் அங்கிங்கெனாதபடி எங்கும் பேரொளியான இடத்தைத் தந்துள்ளது சைவ மதம். வழிபாட்டில் மட்டுமன்று

கோட்பாட்டிலும் மலர், சைவத்தின் முழுப்பொருள். வழக்காற்றில் மட்டுமன்று, வரலாற்றிலும் மலர் முதற்பொருள். உவமையில் மட்டுமன்று, உள்ளுறையிலும் மலர் உறவுப்பொருள்.

*"சித்தந் தெளிவீர்காள்! அத்தன் ஆருரைப்*
*பத்தி மலர்தூவ முத்தி யாகுமே"39* —என்று ஒரு

மலரால் ஆன்ம இயலின் முழுப்பயனாம் வீடுபேற்றையும் பெற வைக்கின்றார் திருஞானசம்பந்தர். வளைத்துப் பிடிக்கும் வல்லமை கொண்ட வன்தொண்டரோ,

*"தார்மலர்ப் பூசையில் சிக்கும் இறைவன்"40* —எனப்

'பூமாலையாம் வலையால் சிவனைச் சிக்க வைக்கலாம்' என்று வழி சொல்கின்றார். அப்பரோ,

*"பூத்தானுமாய் பூவின் நிறத்தானுமாய்*
*பூக்குளால் வாசமாய் மன்னி நின்ற*
*கோ"41* —எனப் பூவாகவே சிவனைக் காட்டி

அதன் நிறமாகவும், மணமாகவும் அவனைப் பொருத்துகிறார். உயிர்–இறைக் கோட்பாட்டைத் தெளிவாக்குவதற்கு நினைத்த திருமூலர்,

*"பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்*
*சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது"42* என்று பூவை

உவமையாக்கித் தெளிவுபடுத்தினார். அத்தெளிவினுல் "சிவமணம் பூத்தது" என்று சிவனை மணமாகவும் பூத்ததாகவும் அமைத்தார்.

சைவத்திற்கு அடுத்த நிலையில் வைணவம் எனப்படும் திருமாலியம் பூவிற்கு இன்றியமையா இடத்தை வைத்துள்ளது. 'வீடு பேற்றிற்கும் வித்து' எனப் பூவைக் காட்டும் நம்மாழ்வார்,

*"நாடீர் நாடோறும் வாடா மலர்கொண்டு*
*பாடீர் அவன்நாமம் வீடே பெறலாமே"43* —எனப்

பாடுகின்றார்.

---

39 ஞான. தே: ஆருர்ப்பதிகம்: 1
40 சுந்: தே: நின்றியூர்ப்பதிகம். 8
41 அப். தே: கருகாவூர்ப் பதிகம்: 3
42 திருமந்: 1459
43 திருவாய்: கண்ணன்கழலிணை: 5

இதனை ஏற்பது போன்று,

*"எவன் எனக்கு இலை, மலர் கனி அல்லது நீரை*

*அன்போடு படைக்கின்றானோ அத்தூய மனத்தானுடைய*

*அன்பளிப்பை நான் சுவைக்கிறேன்"*[44] எனக் கண்ணன் பேசியதாகக் கீதை பேசுகின்றது.

சமணம், தோற்றத்தில் ஒரு துறவுக் கோட்பாட்டு மதம். முன்னையச் சமணர் அழகு, கலை, சுவை, ஆரவாரம் இவற்றில் மனம் ஊன்றாதவர். காலப் போக்கில் பெருகிய சூழ்நிலை வெள்ளத்தில் சமணத்தில் இல்லறத்தாரும் அமைந்தனர். பின்னர் பையப் பைய வழிபாடும் வழிபாட்டுப் பொருள்களும் புகுந்தன. அவற்றுள் பூ தனியிடம் பெற்றது.

சமணர்களது கடவுளாகிய அருகனைப் 'பூவன்' என்றே போற்றினர். 'பூமேல் நடந்தான்' என்பது அவனது சிறப்புப் பெயர்களுள் ஒன்று. பிண்டி என்னும் அசோக மலர் அவனுக்குரிய மலர். அருகன் "பிண்டியின் நீழற் பெருமான்." அவன் அமரும் இடத்து அசோகமரம் பொன் பூவாகவே பூக்க அருளியவன் என்பது அம்மத வழக்கு. அதனால் அச்சமயத்தவரான இளங்கோவடிகளார்,

*"பொலம் பூம் பிண்டி நலங்கிளர் கொழு நிழல்"*[45] என்றார்.

காலப்போக்கில் வழிபாட்டிற்கும் பிண்டிப் பூவைக் கொள்ளும் பழக்கம் ஏற்பட்டது. ஆனால், அணி, ஒப்பனைப் அன்றிப் படைப்புப் பொருளாக மலர் அமைந்தது. நாள்தோறும் கோவிலுக்குச் சென்று அங்குள்ள 'தீர்த்தங்கரர்' எனப்படும் 'பிறவிக்கரையேற்றுவார்' சிலைகளுக்கு மலரைப் படைத்து வழி பட்டனர். துறவிகளும் அதனைச் செய்வதுண்டு. இது 'பூப்பலி' எனப்பட்டது. இப்பூப்பலி மரபும் ஆயிற்று.

*"வண்டுசூழ் பூப்பலி சுமந்து தாள்வலம்*

*கொண்டுசூழ்ந் தெழுமுறை இறைஞ்சி"*[46] —என திருத்தக்கத்தேவர் வழிபாட்டிற் பூப்பலியைக் காட்டியுள்ளார். எனவே, வரட்டு மதமாக இருந்த சமணம் பூவால் வண்ண மதம் ஆகியது.

---

44 *பக. கீ: அதிகாரம்* 9 : 26

45 *சிலம்பு: நாடுகாண் காதை:* 21

46 *சீவ. சி:* 3052

சமணத்தை அடுத்துத் தோன்றிய புத்தமதத்தைக் கண்ட புத்த பெருமான் பூமேல் பொலிபவர். அவர் பிறந்தபோது கண்ட அசித முனிவர்,

"இக்குழந்தை மக்கட் கூட்டமாகிய பொற்றாமரைக் குளத்தில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை பூப்பதாகிய ஒரே பூவாகும்"

—எனப் புத்தர் பிறப்பையே பூவாகச் சிறப்பித்தார். இக்கருத்து அம்மதத்தின் மறைநூலாகிய திரிபிடகத்தில் காணப்படும் குறிப்பாகும்.

புத்தர் அருளிய அருளுரை நூல் 'தம்ம பதம்' அந்நூலில் நான்காவது பகுதிக்குப் 'புட்ப வருக்கம்' —'மலர் இயல்'— என்று பெயர் சூட்டினர். முதலில்,

"மலர்க்குவியலிலிருந்து ஒருவன் பலமாலைகளைத் தொடுக்கக் கூடும். அதைப்போல, அழியும் உடலைப் பெற்ற ஒருவன் அதனைக்கொண்டே பல அறங்களைச் செய்யவேண்டும்."[47]

—எனப் பூவைச் சான்றாக்கி அறவினையை வலியுறுத்தினார். பின்னர் வளர்ந்த புத்த மதக் கோட்பாட்டிலும் பூ ஒரு கருவியாக இடங்கொண்டது.

'நினைவு இல்லாமல் பழக்கத்தில் செய்யப்படும் வழிபாடும் பயன் தரும்' என்பது சமணர் கருத்து. இதனை மறுப்பவர் புத்தர். அதற்குப் பூவைக் கருவியாக்கி விளக்கினர். 'புத்த பீடிகையில் உள்ளுணர்வுடன் ஒரு மலரை இட்டால் அம்மலர் புத்தனை அடையும்' எனத் தமது கோட்பாட்டைக் காட்டுவர். இதனை மணிமேகலைக் காப்பியம்,

*"சிந்தை இன்றியும் செய்வினை உறுமெனும்*
*வெந்திறல் நோன்பிகள் (சமணர்) விழுமம் (துன்பம்) கொள்ளவும்*
*செய்வினை சிந்தை இன்றெனில் யாவதும்*
*எய்தா தென்போர்க் கேது வாகவும்*
*பயன்கெழு மாமலர் இட்டுக் காட்ட"*[48] —என்கின்றது.

---

47 தம். ப:பு.வ:10. 48 மணி;மலர்வனம்:74-78.

இதில் மலர் எண்ணிய பயனைத் தருவதால் "பயன் கெழு மா மலர்" எனப்பட்டமை மலருக்குப் புத்தம் தரும் ஒரு சிறப்பாகும்.

புத்த மதம் கடவுள் மறுப்புக் கொள்கையுடையது. ஆனால் பல்கிப் பெருகிய புத்த மதத்தில் வழிபாடும் இடம் பெற்றது. பூவைப் படைத்து வழிபடல், மாலையைப் படைத்து வழிபடல் மரபாயின. எனவே, புத்தத்திலும் பூ ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

> "காட்டு மலர் 'இலில்லி' எப்படி வளர்கின்றன என்றுகவனியுங்கள். அவைகள் உழைப்பதில்லை; நூற்பதில்லை. என்றாலும் சாலமோனே தனது மேம் பட்ட பெருமைகள் எல்லாவற்றிலும் இம்மலர்களில் ஒன்றைப் போல உடுத்தியதும் இல்லை என்று உங்களுக்குச் சொல்லுகின்றேன்"[49] —இஃது

இயேசு பெருமானது வாய்மொழி. கிறித்துவர் தலைமேல் கொண்டு போற்றும் மலைப்பொழிவில் ஒரு வாய்மொழி. உலகம் அளாவிய கிறித்துவ மதத்தில் பூ, ஒரு தொழுகைப் பொருளாக இடம்பெற வில்லை. என்றாலும் அதனைத் தோற்றியவரால் சான்றாகக் காட்டப்படும் பேற்றைப் பூ பெற்றுள்ளமை ஒரு தனிச் சிறப்பாகும்.

இஃதேபோன்று முகமது நபி அவர்கள் வாய்மொழியிலும் பூ மலர்ந்தது:

> "இறை நம்பிக்கையாளர்க்கு இறப்பு வரும்போது வானவர்: 'உயிரே புறப்பட்டு வா' என்று அழைப்பர். அப்போது, 'அல்லாவினுடைய அருளின் பக்கமும், மணமுள்ள பூவின் பக்கமும், உன்மேல் சினமற்ற இறைவனின் பக்கமும் வா' என்று அழைப்பர்"[50]

—இவ்வாறு ஒருமுறை நபி பெருமானார் அருளினார். இவ்வுரையில் மணமுள்ள பூ, அல்லா வினுடைய அருளோடும் சினமற்ற இறைவனோடும் தொடர்பு படுத்தி இரண்டிற்கும் இடையில் வைத்து ஓரளவில் சமநிலையில் அருளப்பட்டுள்ளது. இது பூவிற்கு இசுலாமிய மதப் பாங்கில் கிடைத்த பெருமை எனலாம்.

---

9 விவி:மத்தேயு : 6 : 28.
50 அல். அதீச: உம்மு சல் மா ரலி அறிவிப்பு.

ஆன்மவியல் உலகில் சீன நாட்டுக் கன்பூசியம் குறிக்கத் தக்க கோட்பாடுகளைக் கொண்டது. அஃதொரு மதம் என்றே சுட்டிக் கூறப்படுவது. தி. மு., கி. மு.வில் தோன்றிய பழைமை உடையது. அதன் மூலவரான கன்பூசியசு சீன மக்களால் ஏறத் தாழ ஒரு தெய்வமாகவே கருத்தப்படுகின்றார். அவர் ஆன்மவியல், அரசியல், வாழ்வியல், கலையியல் முதலியவற்றிற்குத் திருந்திய கோட்பாடுகளை வகுத்தவர். கலையியலின் அவரது கோட்பாட்டில் பூ இணைக்கப் பட்டது.

*"மக்கள் கலை பல அடித்தளங்களைக் கொண்டது.*
*அவற்றில் ஒன்று பூ பயிரிடும் கலை"*

—என்பது அவரது கருத்து.

மேலே காட்டப்பட்டவை போன்று எஞ்சியுள்ள ஆன்மவியல் கோட்பாடுகள் யாவற்றிலும் பூ பூரிக்கின்றது.

## தமிழ் கூறும் உலகில் தனிப் பூரிப்பு

உலகத்தின் சிறப்பிலெல்லாம் விரிந்து கமழும் பூ, நம் தமிழ் கூறும் நல்லுலகில் ஒரு தனி மலர்ச்சி பெற்றுள்ளது. தனியிடம் என்பதைவிடத் தனிச் சிறப்பிடம் பெற்றுள்ளது என்று குறிக்க வேண்டும். ஏனெனில், பூ தமிழர் தம் வாழ்வுடன் ஒன்றியது. வாழ்வியலின் ஒவ்வொரு முனையிலும் பின்னிப் பிணைந் துள்ளது.

தமிழ்ப் பெரும் சான்றோர், மாந்தர்தம் வாழ்வியலை உலகத் தில் ஒரு தனிச் சிறப்புடன் வகுத்தனர். வாழ்விற்கு இலக்கணம் படைத்தனர். வாழ்வு இயல்—வாழ்வியல் என்றால் வாழ்வின் இயற்கை இலக்கணம் என்று பொருள். அப்பொருளுக்கு உண்மை படைத்தனர் தமிழர்.

வாழ்வை மிக நுணுகி ஆய்ந்து அதனை 'மன உணர்வு வாழ்வு' 'பொறிச் செயல் வாழ்வு' என இரண்டாகக் கண்டனர். அவற்றை அக வாழ்வு, புறவாழ்வு எனக்கொண்டு ஓர் ஒழுங்கை அமைத்து அவ்வொழுங்கு வழி ஒழுக்கம் கண்டு அவ்வொழுக்கத் திற்குத் 'திணை' என்னும்சொல்லைப் படைத்து, "அகத்திணை" "புறத்திணை" எனக்குறியிட்டனர். இக்குறியீட்டின் அடித்தளம்

இயற்கை அமைப்பும் இயற்கை நிகழ்ச்சியுமாகவே கொள்ளப் பட்டது. இதுபோன்ற ஒரு வாழ்வியல் இலக்கண அமைப்பு உலகில் வேறெந்த மொழியிலும் இல்லை.

மாந்தனது வாழ்வு, மலையிற்பிறந்து அருவியொடு காட்டில் குதித்தது. அருவி ஆறாக, ஆறே வழியாக வயலைச் செய்தது. ஆற்றொழுக்கோடு ஓடிக் கடலில் மிதந்தது. இவ்வாறு மலை, காடு, வயல், கடல் என வேறுபாடுடைய நான்கு நிலமே உலகம் எனக் கண்டு உலகை நான்கு–நிலம்–நானிலம் என்றனர் தமிழர். மலையும் காடும், உருண்டும் சரிந்தும், எரிந்தும் அணைந்தும் வெப்பமணற்பாங்கான செயற்கை நிலத்தையும் சேர்த்து ஐந்து நிலமாக வகுத்தனர். இங்கெல்லாம் நிகழும் ஒழுக்கங்களைக் கூட்டி "ஐந்திணை" என்றனர்.

## காதல் பூ

இவ்வைந்து நிலங்களுக்கும் பெயர் சூட்டிய பாங்கில்தான் தமிழர் தம் இயற்கை உணர்வு மலர்கின்றது; நுண்ணறிவு மணக்கின்றது.

மலையைப் பார்த்தனர். கல்லும் கரடும் கண்களிற் பட்டன. முள்ளும் முரடும் உறுத்தின. அகிலும் தேக்கும் அழைத்தன. முகிலும் தென்றலும் தழுவின. மயிலும் கிளியும் மயக்கின. களிறும் கரடியும் கலக்கின. இவையாவும் உள்ளத்தில் பட்டன; தொட்டன. செந்நிறத்தின் கடலாகச் சிரித்து விரிந்த மலர்ப்பரப்புதான் உள்ளத்தில் ஊன்றிப் பதிந்தது. அம்மலர் கோடிக்கணக்கில் குலுங்கியது. ஐந்து வண்ணங்களில் பல்லாண்டு இடைவெளியில் பூத்தது. அதுதான் குறிஞ்சி மலர். இக்குறிஞ்சிப் பூ, மலையின் தனித்தன்மைப் பூவாக விளங்குவதைக் கண்டு இதனையே குறியீடாகக் கொண்டு மலை நிலத்திற்குக் "குறிஞ்சி" எனப் பெயர் சூட்டினர்.

காட்டைக் கண்டனர். தேட்டமாம் மரச்செறிவு தெரிந்தது சாமையும் முதிரையும் சுவை ஊட்டின. மானும் முயலும் மருள்வித்தன. ஆனால், மூக்கின் வழி முழு உள்ளத்தையும் கவர்ந்தது முல்லைப் பூ. அப்பூவையே குறியீடாகக் கொண்டு அப்பூவின் பெயரையே காட்டு நிலத்திற்குச் சூட்டி "முல்லை" என்றனர்.

விளைநிலப்பரப்பை வியந்து நோக்கினர். பசுமை பாடியது. அன்னம் நாடகம் நடத்தியது. எருமை முழவாய் அழைத்தது. கொத்துக் கொத்தாகச் சந்தனம் பூசி மணந்த மலர் ஒன்று மனத்தில் இழைந்தது. அது மருதப் பூ. சந்தன நிறத்தையுடைய அப்பூவின் பெயரைச் சூட்டி விளைநிலத்தை "மருதம்" என்றனர்.

கடற்பரப்பைக் கண்டனர்: அலைகள் அழைத்தன. சுறா சுழன்றது. கடற்காகம் கரைந்தது. புன்னையும் தாழையும் கண்களைக் கவர்ந்தன. நீல நிறப் பேழையாக நீரில் மிதந்து கண்ணடித்துக் கவர்ந்த நெய்தல் பூ தான் நெஞ்சை அள்ளியது. கடற்பகுதி நிலத்திற்கு அந்நெய்தலை அணிவித்து "நெய்தல்" என்றனர்.

*"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவுப் படுமே"*[51]

—என்று தொல் காப்பியரைப் பாடவைத்தனர். இந்நூற்பாவில் தொல்காப்பியரது மன உணர்வின் இழையோட்டம் தெரிகின்றது.

நிலத்தின் தோற்றம், வளர்ச்சி முறையில் நான்கு இயற்கை நிலங்கலையும் முறைப்படுத்த வேண்டுமாயின்,

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்

என்ற வரிசையில்தான் குறிக்கவேண்டும். தொல்காப்பியருக்கு மலர் உணர்வு மேலோங்கியது. மணத்திற் சிறந்த முல்லையை முதலில் வைத்தார். தேனிற் சிறந்த குறிஞ்சியை அடுத்துச் சொன்னார். நிறத்திற் சிறந்த மருதத்தை மூன்றாவதாக்கினார். உவமைக்குச் சிறந்த நெய்தலை இறுதியில் வைத்தார். 'தான் உணர்ந்து சொல்லும் முறை இது'. சான்றோர் சொல்லிய முறையொன்று உண்டு. அவ்வாறு "சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என்று நயமாகச் சொன்னார். இங்கு "சொல்லாத முறையாற் சொல்லவும் படும்" என்று உரையாசிரியர்கள் பேச இடமும் வைத்தார்.

இந்நான்கு மலர்களிலும் ஒரு வகைப்பாடு உண்டு. குறிஞ்சி புதர் புதராகப் பூக்கும் செடிப்பூ. முல்லை கொடிப்பூ. மருதம்

---

51 **தொல் : பொருள் : 5.**

மரப்பூ. நெய்தல் நீர்ப்பூ. இவ்வாறமைந்த இவ்வடிப்படையை வைத்தே பூவகைகளைப் பிற்காலத்தவர் கோட்டுப்பூ, கொடிப்பூ. நிலப்பூ, நீர்ப்பூ என வகைப்படுத்தினர்.

இந்நான்கு மலர்களைத் தேர்ந்ததில் மற்றொரு தேர்வும் அடங்கியுள்ளது. அது நிறத்தேர்வு.

நிறத்தால்,

குறிஞ்சி — செம்மை [ஐந்து வண்ணங்களில் ஒன்று]
முல்லை — வெண்மை
மருதம் — பொன்மை
நெய்தல்— நீலம்.

மலர்களில் இந்நான்கு நிறங்களே மூலங்கள். பிறவெல்லாம் இவற்றின் திரிபுகளும் கலப்புகளுமேயாகும். இவ்வகையில் நானில-உலக-மலர்களின் நிறங்களையெல்லாம் அடக்கிய தேர்வாக இந்நான்கு மலர்த்தேர்வு அமைந்துள்ளது.

இயற்கை நிலங்களாகிய இந்நான்கு வகை நிலங்களைக் கண்டு மலர்ப்பெயர் சூட்டிய தமிழர் செயற்கை நிலமொன்றையும் கண்டு அதற்கும் மலர்ப்பெயரையே சூட்டினர்.

*"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து*
*நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறு"*[52] க்கும் கடுமையும் கொடுமையும் கொண்ட வன்மை நிலத்திற்கும் மென்மை மலராம் பாலை மரத்தின் மலர்ப்பெயர் கொடுத்துப் "பாலை" என்றனர்.

இருநிலங்கள் திரிந்து உருவான இந்நிலத்திற்குரிய பாலை மலரும் வெள்ளையும் சாம்பல் நிறமுங் கலந்த இரு வண்ண மலராக அமைந்தது.

மலரால் நிலங்கள் பெயர் சூட்டப்பட்டன. இதற்கேற்ப மக்கள் வாழ்வில் நிகழும் காதல் ஒழுக்கமாம் அக உணர்வுகள் ஐந்தாக அமைய, அவையும் முறையே,

---

52 சிலம்பு: காடுகாண்: 64, 65.

காதலால் கூடிக் குலாவும்
புணர்ச்சி ஒழுக்கம் — குறிஞ்சித் திணை;
காதலன் பிரியக்
காத்திருக்கும் ஒழுக்கம் — முல்லைத் திணை;
காதலனோடு ஊடும்
ஒழுக்கம் — மருதத் திணை;
காதலன் பிரிவிற்கு
இரங்கும் ஒழுக்கம் — நெய்தல் திணை.
காதலனோடு
உடன்போகும் ஒழுக்கம் — பாலைத்திணை

—எனக்காதல் ஒழுக்கங்களும் மலர்களாலேயே குறியீடுகளைப் பெற்றன.

இவ்வாறு மன உணர்விற்குப் பெயர் குறிக்கும் போது மண உணர்வு நின்றதைக் காண்கின்றோம்.

## வீரப் பூ

வாழ்வின் அகங்கை போன்றது அகத்திணை. புறங்கை போன்ற புறத்திணையிலும் மலர் பெற்ற சிறப்பினை நினைந்தால் உள்ளத்தில் ஒரு புதுமணம் புலப்படுகின்றது.

கல்வி, வீரம், கொடை, புகழ் முதலியன புற வாழ்வு. ஆயினும் போர் வீரமே பெரும் பகுதியாகப் புறத்திணையில் ஆட்சி செலுத்துகின்றது. புறம் என்றாலே போர் என்றே கொள்ளப்பட்டது.

"*புறத்திணைச் சீரது போரே என்ப*" —எனக்

கூத்த வரி நூல் (44) என்னும் கூத்துத் தமிழ் நூல் குறிக்கின்றது. எனவே, புறப்பூக்கள் வீரப்பூக்கள். அக்காலப் போர்முறை வீரத்தின் அடித்தளங் கொண்டது.

"அயர்ந்தால் அடி, தளர்ந்தால் தாக்கு, உயிர்க்கெல்லாம் ஊறு, உலகிற்கே அழிவு" என்பன இக்காலப் போர் நடைமுறை. முற்காலத் தமிழர் போர்முறையில் நாகரீகமும் நேர்மையும் நின்றன. உண்மை வீரம் ஒளிவிட்டது. இவற்றிற்கு அடி

நிலையாகப் போர் வரையறை — இலக்கணம் உருவாயிற்று. இவ்விலக்கணம் பூவின் பெயரிலேயே வகுக்கப்பட்டது. வன்மையான போருக்கு மென்மையான மலரின் பெயரைச் சூட்டி அதனைச் சின்னமாக்கினர். இவ்வாறு சின்னமாக்கிய பாங்கு உன்னி உவக்கத் தக்கது.

முற்காலத் தமிழ்ச் சான்றோர், போரை முன்னறிவிப்பிலேயே துவங்கினர். இன்ன நோக்கில் வம்புக்கு வருகின்றோம் என்று, சொல்லாமல் சொல்லியவாறே சென்றனர். வாய்ச்சொல்லை அடுத்துச் சின்னம் அணிந்து சென்று அறிவித்தனர். அச்சின்னத்தைப் பூவாகவே கொண்டனர்.

போரின் போது எளிய உயிரினங்கள் ஊறு பெறாமல் தவிர்க்க விரும்பினர். அதே நேரத்தில் போர் அறிவிப்பாகவும் அஃது அமையவேண்டும். இதனால் பகைநாட்டு 'ஆவினங்களைக் கவர்ந்து வந்து காக்கும் நோக்கில் வருகின்றோம்' என்பதன் அறிகுறியாக—சின்னமாக ஒரு மலரைத் தேர்ந்தனர். 'வெட்சி' என்றொரு மரம். அதன் பூ சிறியது. சிறியதாம் சின்னப் பூவே 'சின்னப்பூவும்'[53] ஆயிற்று. பூ சிறியது என்றாலும் பளிச்சென்று தெரியும் சிவப்பு நிறங் கொண்டது. சிவப்பு எச்சரிக்கைக்குரிய நிறமும் ஆயிற்று. வேந்தன் இப்பூச் சின்னத்தை வழங்குவான். வீரர் இதனைச் சூடிப் பகைநாடு சென்று இரவில் தொழுவத்தில் ஆநிரைகளைக் கவர்ந்து எதிர்த்தோரை விலக்கி ஆநிரைகளை ஓட்டித் தம் நாட்டிற்குக் கொணர்வர். வேந்தன் ஆநிரைகளைப் பகுத்துப் பரிசாக வழங்குவான். பரிசுபெற்றுக் களிப்பர். புனைப்பு முதல் முடிவு வரை வெட்சிப் பூவைச் சூடுவர். இந்நிகழ்ச்சி யாவும் ஒரு போர் ஒழுக்கமாக இப்பூவின் பெயரால் ''வெட்சித்திணை'' எனப்பட்டது.

இதுபோன்றே, கவரப்பட்ட ஆநிரைகளை மீட்டுக் கொண்டு செல்லப் பகைவர் 'கரந்தை' என்னும் ஒருவகைக் கொடியின் பூவைச் சூடிச் சினங்கொண்டெழுவர். சிவந்த நிறமுடைய இப்பூ, சினத்தின் குறியாகவும் அமைந்தது. மீட்கும் வரையுள்ள நிகழ்ச்சிகள் ஒரு போர் ஒழுக்கம் ஆகி இப்பூவின் பெயரால் ''கரந்தைத் திணை'' ஆயிற்று.

---

53. ''சின்னப் பூ அணிந்த குஞ்சிச் சீதத்தன்''—சீவ. சி: 2869

இவ்வாறாக,

ஆநிரைகளைக் கவர —வெட்சிப் பூ,
கவரப்பட்டவற்றை மீட்க —கரந்தைப் பூ,
—எனத் தொடர்ந்து,
பகைமேற் படையெடுப்பில் —வஞ்சிப் பூ,
பகையேற்கும் எதிர்ப்பில் —காஞ்சிப் பூ,
கோட்டை முற்றுகையில் —உழிஞைப் பூ,
முற்றுகை முறியடிப்பில் —நொச்சிப் பூ,
களத்தின் கைகலப்பில் —தும்பைப் பூ,
வெற்றியில் —வாகை பூ, —எனச்
சூட்டப்பட்டன.

அவ்வந் நிகழ்ச்சிகள் அவ்வப் பூக்களின் பெயரால் திணைகள் ஆயின.

இவற்றில், களத்தில் நேருக்கு நேர் நின்று கைகலக்கும் போரில் போர்க்குரிய நெறியுடன் தூய்மையாக ஒழுகுதலைக் கவனத்திற் கொண்டனர். அத்தூய்மையின் அறிகுறியாகத் தூய வெண்மை நிறம் வாய்ந்த தும்பைப் பூவை கொண்டமை குறிக்கத்தக்கது.

இவ்வாறே புறத்திணைப் பூக்கள் ஏனையவும் நிறத்தாலும் தன்மையாலும் அவ்வவ் வொழுக்கத்திற்கு இயைந்தனவாக அமைக்கப்பட்டுள்ளன.

இரண்டு திணைகளுக்கும் மலர்களைத் தொடுத்ததில் பழந் தமிழரது இயற்கை வாழ்வின் உணர்வு மணக்கின்றது. மலர்ப்பெயர்களைத் திணைகளுக்கு சூட்டியதன் அடிப்படை, அவர்கள் மலர்களைச் சூடியும் சூட்டியும் நுகர்ந்த உணர்வேயாகும்.

## சின்னப் பூ

மலர்களை அழகு கருதியும் சூடினர்; மணங்கருதியும் சூடினர்; அடையாளமாகவும் சூடினர். அழகு கருதி ஒப்பனைக் காக சூடுவதற்கு எல்லா மலர்களையுமே கொண்டனர்,

ஆனால், மணங்கருதிச்சூடுவதில் மனம் இழைந்துநின்றது. மணத்திலும் வெறி மணம் இல்லா நறுமணம்; நறுமணத்திலும் தினவு ஊட்டாத இன்மணம்; இன்மனத்திலும் இதமான மென்மனப் பூக்களையே தேர்ந்தனர். இத்தன்மை வாய்ந்த பூக்களையே மன உணர்வான அதிலும் காதல் உணர்வான அகத்திணைக்குத் தேர்ந்தனர். அவைதாம் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல். இவை தனித்தனியே அவ்வந் நிலத்திற்குச் சிறந்தவை. இக் காரணத்தால் அவ்வந்நிலத்தின் திணைப்பெயராக்கினர். ஆனால், அவ்வந் நிலத்திற்கும் திணைக்கும் உரிமையுடைய பூக்களாகவோ மற்றத் திணைக்கோ நிலத்திற்கோ தொடர்பில்லாத பூக்களாகவோ வைக்க விரும்பவில்லை.

குறிஞ்சிப்பூ மலை ஒன்றில்தான் பூக்கும் இயற்கையுடையது. என்றாலும் காடுவாழ் மக்களோ, மருதநிலத்தாரோ, நெய்தலாரோ சூடாது விடுவரோ? அதன் தேனைப் பருகாது தேம்புவரோ? முல்லை காட்டிற் சிறந்த பூதான். மற்ற நிலங்களிலும் பூக்கும். மணங்கமழும் இதனை மற்ற நில மக்கள் சூடக்கூடாதோ? இவ்வாறே மருத மலரும் நெய்தல் மலரும் பல்வகை மக்களாலும் விரும்பிச் சூடப்படுபவை. இந்நான்கு மலர்களையுமே நானில மக்கள் யாவரும் விரும்பினர்; விழைந்தனர்; உவந்தனர்; மோந்தனர்; நுகர்ந்தனர்; சூடினர்; மகிழ்ந்தனர்.

ஒவ்வொரு திணைக்கும் உரிய ஒவ்வொரு பொழுது உண்டு. இதன்படி அவ்வப்பூவையும் அவ்வப்பொழுதில்தான் சூடவேண்டும் என்று வரையறுப்பதா? முல்லைத்திணைக்குரிய பொழுது மாலை. குறிஞ்சிக்குரிய பொழுது யாமம். மாலைத்திணைப்பூவை காதல னொடு குலாவும் யாமத்தில் காதலி சூடக்கூடாது என்றால் அது இயற்கைக்கு மாறுபட்டதாகும். இதுபோன்றே அவ்வப்பூவை அவ்வப் பொழுதில்தான் சூடவேண்டும்; அவ்வத்திணையில்தான் பாடவேண்டும் என்பது வாழ்க்கை நுகர்ச்சிக்குத் தடை விதித்த தாகும். இலக்கணம் வகுத்த பெருமக்கள் அத்தகைய வேலி போட வில்லை. மலர் மணம் வேலிக்குள் அடங்குமோ?

அதனால்,

*"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்*
*அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்*
*வந்த நிலத்தின் பயத்த வாகும்"*[54]

—என ஒரு விதி விலக்கு—புறநடை

54 தொல்:பொருள்::21

வகுக்கப்பட்டது. மணமலர்களைப் பொதுவாக்கித் துய்ப்பதற்கு இலக்கணத்திலும் ஓர் இடுக்கு வைத்தனர்.

புறத்திணைக்கு வகுக்கப்பட்ட பூக்கள் அடையாளப் பூக்கள். இவை மணமற்றன என்று குறிக்க முடியாது என்றாலும் மணம் கருதிச் சூடப்படுவன அல்ல. இன்ன நிகழ்ச்சியைக் குறிக்க அணியப்படுவது என்ற வகையில் இவை அந்நோக்கத்தை அடையாளங்காட்டுவதால் இவை அடையாளப் பூக்கள். இவ் வடையாளம் ஒரு போர் நோக்கின் சின்னமாகையால் இவை 'சின்னப் பூ' எனப்பட்டன. ஒரு நிகழ்ச்சியின் சின்னமாக அணியப்படுவது வேறு எந்நிகழ்ச்சிக்கும் கொள்ளப்பட மாட்டாது. எடுத்துக்காட்டாக ஆநிரைகளைக் கவரச் செல்லும் நோக்கில் சூடப்படும் வெட்சிப்பூ அஃதொன்றிற்கே உரியது. இதுபோன்றே போர்ச்சின்னப் பூக்கள் யாவும் வரையறை செய்யப்பட்டன. இதுகொண்டும் தமிழர்தம் மலர்பற்றிய உணர்வை உணரலாம்.

புறத்திணை கண்ணில் படும் நிகழ்ச்சி. அகத்திணை கருத்தில் இழையும் உணர்ச்சி. கண்ணில் படுவதற்கு நிலையான வரையறைவேண்டும். கருத்தலைக்கு பரவலான நோக்கமே சால்பாகும். இதற்கேற்ப அகத்திணையினர் அன்றலர்ந்து மணம் பரப்பும் மலர்களையே சூடுவர். புறத்திணையில் மலர்ந்த உண்மைப் பூக்களையே சூட வேண்டும் என்பதன்று. உரிய பூவின் படிவமாகத் துணியிலோ, உலோகத்திலோ செய்யப்பட்ட சின்னங்களையும் சூடிச்செல்வர். இச்சின்னத்தை மன்னவன் வழங்குவான். எனவே புறத்திணை நறுமலர்களின் அணிவிப்பு அன்று, அகத்திணையோ நறுமலர்களின் நுகர்ச்சிப்பாடு. புறத்திணைப்பூ சின்னங்களின் அளவேயாகும். ஆயினும், போர் நோக்கில் கொள்ளும் பொழுதுதான் இவை சின்னப்பூக்கள். பொதுவில் அழகு—ஒப்பனை கருதியாவரும் எதையும் சூடிக் கொள்வர். இதற்குத் தடை விதிக்கப்படவில்லை.

இவ்வாறு அடையாளப் பூக்களாகச் 'சின்னப் பூ' போருக்கு மட்டும் அன்று. மாந்தரது தலைவனான மன்னனுக்கும் வகுக்கப்பட்டது.

## மன்னர் பூ

அரசனுக்கு உரியனவாக இன்றியமையாதவற்றைப் பழந் தமிழ் இலக்கண நூல்கள் அமைத்துள்ளன. அவை யாவும்

அரசனது தகுதிகளை அறிவிக்கும் சின்னங்கள். அரசனது வலிமைத் தகுதிக்கு வேல், வாள் முதலிய படைகள்; வெற்றிக்குக் கொடி; காத்தற்குக் குடைமக்கள்; அறிவிப்பிற்கு முரசு; படை வலிமைக்குக்குதிரை, யானை, தேர்ப்படைகள் என்று வகுத்துக் கொண்டே வரும் தொல்காப்பியர், யாவற்றிலும் சிறந்த அரசச் சின்னமாகிய முடியைச் சொல்லி, முடி சூட்டி முடிக்க எண்ணியவர் அதற்குமுன் மலர் மாலையை வைத்து,

"படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய"[55] —என

நிறைவேற்றியுள்ளார். அரசர்க்குரிய சின்னங்களில் மலர் மாலை குறிக்கத்தக்க ஒன்றாகக்கொள்ளப்பட்டது. அதனைத் 'தார்' என்று குறித்தார். 'தார்' என்பது மார்பில் அணியும் மலர்த் தொடுப்பு. இது மன்னனது மார்பு அழகு, வலிமை இரண்டுக்கும் எடுத்துக் காட்டாகும் அணி. இவ்விரண்டையும் புலப்படுத்தும் அறிவிப்புச் சின்னமாகத் தார் – மலர் வகுக்கப்பட்டது.

பழந்தமிழகத்தில், சிறப்பு கருதியும் தொழில் கருதியும் இருந்த பெயர்களைச் சாதிப் பாகுபாடாக மாற்றிக் காட்ட வந்தேறிகள் முனைந்தனர். அவர்க்கு ஒத்தூதிய தமிழ்ப்புலவர் சிலர் தொல்காப்பியத்திலும் இடுக்கேற்படுத்திப் புகுந்தனர்; இடுக்கண் படைத்துள்ளனர்.

அந்தணர், அரசர், வைசிகர், வேளாளர் என நால்வகைச் சாதியாகக் குறித்தோர்,

"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை"[56]

-என்ற நூற்பாவைத் தொல்காப்பியத்தில் படைத்தனர். இது இடையே செருகிப் புகுத்தப்பட்டது என்பதை 'வைசிகன்' என்னும் வட சொல்லே காட்டிக்கொடுக்கின்றது. வணிகம் செய்பவனுக்கு 'வணிகன்' என்னும் சொல் முறைப்படி அமைந்திருக்க 'வைசிகன்' என்னும் வடசொல் வந்தது எவ்வாறு? சங்க இலக்கியங்களில் எங்கும் இல்லாதது இச்சொல். வணிகக் குடும்பக் காப்பியங் களாகிய மணிமேகலையிலும் சிலப்பதிகாரத்திலும் காண முடியாத சொல். இவற்றிற்கெல்லாம் முன்னே தோன்றி இவற்றிற்கெல்லாம்

---

55. தொல்: பொருள் : 616
56. தொல்: பொருள் : 624

இலக்கண நூலாக விளங்கும் தொல்காப்பியத்தில் இவ்வடசொல் புகுவானேன்? ஆம், புகுத்தப்பட்டது.

ஆனால், இவ்வாறு புகுத்தியோருக்கும் தமிழக உணர்வாகிய மலர், மனத்தை விட்டகலவில்லை. அரசனுக்குரிய சின்னமாம் தார், வணிகர்க்கும் வேளாளர்க்கும் உண்டு என்று

*"கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே"*57 —என்றும்

*"வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்*
*வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே"*58 —என்றும்

படைத்து மொழிந்தனர்.

இவற்றின் மூலம், வணிகர்க்கும், வேளாளர்க்கும் தலையில் சூடும் கண்ணியையும், மார்பில் அணியும் தாரையும் சின்னங்களாக ஒட்டினர்.

இவ்வொட்டுக்குப் பின்னரும் தொல்காப்பியத்திலும் பிறவற்றிலும் பார்ப்பனரெனத் தவறாகக்கொண்ட அந்தணர்க்கு ஒரு பூ குறிக்கப்படவில்லையே எனக் குறைபட்ட உள்ளத்தார் இருந்தனர். சங்க நூல்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் உரை எழுதியவர் நச்சினார்க்கினியர் என்பார். இவர் உரை வழியில் ஓர் இடுக்கு வைத்துக்கொண்டு,

*"தாமரைக் கண்ணியைத் தண்ணறுஞ் சாந்தினை"*59 —என்னும்

கலித்தொகைக்கு விளக்கம் தருபவர்,

*"அந்தணர் களவொழுக்கம் கூறினுர்"*60 —என்று

பார்ப்பனருக்குத் தாமரை உரியது என்று குறிப்பாகக்காட்டினர். பார்ப்பனர் சாதியில் உயர்ந்தோர் என்று அறிமுகம் செய்தமைக்கு ஏற்பப் பூவில் சிறந்த தாமரையை அவர்க்கெனத் தேர்ந்து படைத்துமொழிந்து உள்ளுக்குள் பூரித்தனர்.

மெய்யாக மட்டுமன்றிப் பொய்யாகவும் பேசுங்காலும் மலர் உணர்வு நிற்கக் காண்கின்றோம். இதற்குக் காரணம் இத்தமிழ் மண்ணில் காலூன்றியதால் ஏறிய உரம் என்றே கொள்ள நேர்கின்றது.

---

57. தொல் : பொருள் : 626
58. தொல் : பொருள் : 626
59. கலி : குறிஞ்சி : 16
60. கலி : குறிஞ்சி : 16 உரை

அரசர்க்கு மார்பு மாலையாம் தாரைச் சின்னமாக்கியதுடன் தலையிற் சூடும் கண்ணியையும் சின்னமாக்கினர். முடிமன்னர் மூவரும் ஏனைக் குறுநில மன்னரும், வேளிரும், வள்ளல்களும் தத்தமக்கென- தத்தம் அரச குடும்பத்திற்கென ஒவ்வொரு பூவை விரும்பி அடையாளப் பூவாகக் கொண்டனர். அப்பூவே நிலைத்த சின்னமாகத் தலைமுறை தலைமுறைக்கும் ஆயிற்று.

சோழர் 'ஆர்' என்னும் ஆத்திப் பூவையும், பாண்டியர் வேப்பம் பூவையும், சேரர் 'போந்தை' என்றும் பனம்பூவையும் சின்னப்பூக்களாகக் கொண்டனர்.

> ''ஆரங்க கண்ணிச் சோழர்''[61]
>
> ''மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து
>
> ..........................................................
>
> வெம்போர்ச் செழியன்''[62]
>
> ''போந்தைக் கண்ணிப் பொறைய''[63] என்றெல்லாம்

இலக்கியங்கள் அவரவர் உரிமைப் பூவைக் குறிப்பிட்டுப் பாடின.

சின்னமாக மன்னர் முடியில் ஏறியும், மார்பில் தவழ்ந்தும் இடம் பெற்ற பூக்கள் அவர்களையும் தமக்குள் அடக்கித் தம் மூலம் அவர்கள் அறிமுகம் பெற வைத்தது. 'சோழனே நீயும் சோழன்; நின்னை எதிர்ப்போனும் சோழன்' —எனச்சொல்லப் புகுந்த கோவூர்கிழார்

> ''நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்று; நின்னொடு
>
> பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்று''[64]—என்று

பூக்களை வைத்தே பாடினார்.

நின்னைப் பகைத்தவன் சேரனும் அல்லன், பாண்டியனும் அல்லன் என்று சொல்லப் புகுந்தவர்,

> ''இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்
>
> கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்''[65]—என்று

பூக்களைச் சொல்லியே அறிமுகப்படுத்தினார்.

---

61 சிலம்பு : பதிகம் : 12.
62 புறம் : 79 : 2, 4.
63 சிலம்பு : 27 : 126.
64 புறம் : 45 : 3, 4.
65 புறம் : 45 : 1, 2.

முடிமன்னர் மூவரையும் ஒன்று கூட்டிச் சொல்ல நேருங்கால்
"வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர்...... ....... ......
கொற்ற வேந்தர்"[66] என்று பூக்களைக்கொண்டே குறித்தனர். இவற்றினும் மேலாகச் சிலப்பதிகாரத்தில்,

"சினையலர் வேம்பன் தேறா னாகி"[67, 68] —என்று பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பூப்பெயரன் ஆக்கப்பட்டான். பூ இவ்வாறு அரசர்களையே ஆளும் நிலை பெற்றது.

அரசர் நாளோலக்கத்தில், விழாக்களில் – ஒப்பனைகளில் தத்தம் குடிப்பூவைச் சூடிக்கொள்வர். போருக்குச் செல்லுங்கால் அவ்வப் போர் நிலைக்குரிய சின்னப் பூவையும் சூடிக்கொள்வர். போரெடுத்துச் செல்லுங்கால் வஞ்சிப் பூவைச் சூட வேண்டு மன்றோ? அந்நிலையில் போர்க்குரிய வஞ்சிப் பூவையும், குடிக்குரிய அடையாளப் பூவையும் சூடிக்கொள்வர்.

"பொலந்தொட்டுப் பைந்தும்பை
மிசையலங் குழைய பனைச் செரீஇ"[69] —எனப்

புறநானூறு அறிவிப்பதுபோன்று பிற போர்ப்பூக்களையும் குடிப் பூக்களுடன் சூடிக்கொள்வர்.

## வீரர் பூ

இஃதே போன்று போர் வீரர்களும் போர்ச் சின்னப் பூவுடன் தத்தம் அரசர்க்குரிய பூவையும் சூட வேண்டிய சூழல் இருந்தது.[70]

வெட்சிப் பூவை அணிந்து செல்லுங்கால் அஃது ஆநிரைகளைக் கவரச்செல்லும் அறிவிப்பாக இருப்பினும், இவர் எந் நாட்டு மன்னனது வீரர் என்று தெரிவதற்கு அம்மன்னருக்குரிய பூவையும்சூடவேண்டும். களத்தில் கைகலக்கும் போருக்கு உரிய பூ

66 புறம்: 338 : 6-8
67, 68 சிலப்பு : 16 : 149
69 புறம் : 22 : 20, 21
70 போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த
கடவுள் வாகை. —பதிற் : 66; 14, 15.

தும்பைப் பூ. இதனைக் கைகலக்கும் இருதிறப் படைகளுமே சூட வேண்டும். இந்நிலையில் எப்பக்க வீரர் என்று அறிவதற்கு வாய்ப்பில்லாது குழப்பம் நேரும். குழப்பமான இந்நிலையைத் தவிர்ப்பதற்குத் தம் அரசர்க்குரிய பூவைச் சூடிக்கொண்டால் இன்ன வேந்தர்படை என்று வேறுபாடு தெரியும். இவ்வாறு,

*"வேந்துஇடை தெரிதல் வேண்டி, ஏந்துபுகழ்*
*போந்தை, வேம்பே, ஆர் என வருஉம்*
*மாபெருந் தானையர் மலைந்த பூவும்"*71 —என வகுக்கப் பட்டது.

இதனால், மலர் ஒரு புரட்சியையே உண்டாக்கியதாயிற்று. களத்தில் நிற்குங்கால் அரசரும் வீரரும் ஒரே வகைப் பூவைச் சூடுவதன் மூலம் அரசன், குடிமகன் என்ற வேறுபாடின்றிச் சம நிலை பிறக்கின்றது. இச்சமநிலை பூவால் விளைந்ததன்றோ? 'வாழ்க, சமநிலைப்படுத்திய பூ' என்று வாழ்த்தவேண்டும்.

முடி மன்னருக்கு மேலே குறிக்கப்பட்ட மூன்று பூக்கள் வகுக்கப்பட்டிருப்பினும், வேறு மலரில் மனம்பற்றிய மன்னர் தத்தம் விருப்பப் பூக்களையும் சூடிக்கொண்டதைக் காண்கின்றோம்.

நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னனுக்கு மந்தாரப் பூவின்மேல் விருப்பம் உண்டாயிற்று. புராணங்கள் இப்பூவை இந்திரனுக்கு உரியதாகக் காட்டும். இதன் தொடர்பிலும் இப் பாண்டியனது விருப்பம் எழுந்திருக்கலாம். இந்நெடுமாறன் மந்தார மாலையையும் அணிந்ததைப் பாண்டிக்கோவை என்னும் இலக்கியம்,

*"மண்டா ணிறைந்த பெரும்புகழ்*
*மாறன் மந்தார மென்னும்*
*தண்டாரான்"*72 —என அறிவிக்கின்றது. இது போன்று பிற மன்னரும் தத்தமக்கு விருப்பமான பூக்களையும் சின்னமாகச் சூடிக்கொண்டனர்.

ஆனால்,

எப்பூவைக் கொண்டாலும் சின்னமாகக் கண்ணியும் தாருமே கொள்ளப்பட்டன.

---

71 தொல் : பொருள் : 63 : 3-5
72 பாண் : கோ : 71

## கடவுளர் பூ

மக்கட்கும் மன்னர்க்கும் பூவைச் சின்னமாக அமைத்த தமிழர், கடவுளர்க்கும் இன்ன இன்ன மலர் என்று அமைத்தனர். அதனைக் கடவுளுக்கு விருப்பமானது என்றனர். கடவுள் விருப்பு வெறுப்பற்றவர் என்று கூறிக்கொண்டே தம் விருப்பத்தை அவர் விருப்பமாக்கி விருப்பமான மலரை அமைத்தனர். சில பச்சிலைகள் நறுமணம் கமழ்பவை. மணம் கருதி அவைகளையும் மலர்களாகக் கொண்டு கடவுளர்க்கு விருப்பமாக்கினர்.

சிவபெருமானுக்குக் கொன்றை,
திருமாலுக்குத் துளசி,
முருகனுக்குக் கடம்பு,
பிள்ளையார்க்கு அறுகு,
அருகனுக்கு அசோகு,
புத்தனுக்குத் தாமரை,
உமைக்குக் குவளை,
திருமகட்கு ஆம்பல்,
கலைமகட்கு வெண்டாமரை,
காளிக்குச் செவ்வலரி,
இந்திரனுக்கு மந்தாரம்,
கதிரவனுக்குத் தாமரை

–என விருப்பமலர்களாகச் சாற்றித் திருவடிகளில் படைத்தும் தூவியும் வழிபட்டனர்; அணிவித்தும் சூட்டியும் தொழுதனர். இவைகளை விருப்ப மலர்கள் என்றாலும், இவை கடவுளர்க்கும் சின்னப் பூக்களே யாகும். இதனை,

*"சின்னமாம் பன்மலர்கள் அன்றே சூடிச் செஞ்சடைமேல்*
*வெண்மதியம் சேர்த்தினானே"*[73] –என்னும் அப்பர்

தேவாரமும் அறிவிக்கின்றது.

கண்ணியும் தாரும் சின்னப் பூக்களாகக் கொள்ளப் பட்டமை கண்டோம்.

---

73. அ. தே: நாகை: திருத்தாண் : 4

சிவபெருமானுக்கு விருப்பமானது கொன்றை என்றனர். இதனைக் குறிப்பிட்டுப் பாடும் புறநானூறு,

*"கண்ணி கார்நறுங் கொன்றை, காமர்*
*வண்ண மார்பில் தாரும் கொன்றை"*[74] —என்று அக்

கொன்றையை அவருக்குக் கண்ணியாகவும் தாராகவும் பாடிச் சின்னப் பூவாகக் காட்டுகின்றது.

சோழ இளவரசன் உதயகுமாரன் அரச வீதியில் தேரில் வருகின்றான். அவன் இளங்காளை; செந்நிற மேனியன்; அழகன். மக்கள் அவனைக் காண்கின்றனர். வருவது முருகக் கடவுளோ என்று ஐயுறும் அளவில் அவனது தோற்றப்பொலிவு இருந்தது. தேரில் உள்ள கொடிஞ்சி என்பது வேல் உருவங்கொண்டது. அதனை இளவரசன் கைப்பிடியாகப் பிடித்திருப்பது வேலைப் பிடித்திருப்பது போன்று இருந்தமை 'முருகனோ' என்ற ஐயத்திற்கு உறுதி ஊட்டியது.

'இல்லை இல்லை நான் முருகன் அல்லேன். எனது தலையைப் பார்மின்! முருகனுக்குரிய சின்னப்பூவாகிய கடப்பம் பூவாலாகிய கண்ணியா உள்ளது?' —என்று தலையில் சூடியுள்ள ஆத்திப் பூக் கண்ணியே வாயாகச் சாற்றுவதுபோல் இருந்ததாம். இதனை,

*"காரலர் கடம்பன் அல்லன் என்பதை*
*ஆரங் கண்ணியிற் சாற்றினன் வருவோன்"*[75] —என்று

பாடுவதன் மூலம் மணிமேகலைக் காப்பியம் கடம்பு முருகனது சின்னப்பூ எனக் குறிப்பாகச் சாற்றுகின்றது.

சிலப்பதிகாரம் பாண்டியனை அவனது சின்னப் பூவாலேயே 'வேம்பன்' என்று குறியிட்டதைக் கண்டோம். இதுபோன்று, முருகன் 'கடம்பன்' என்று இங்கே பூப்பெயரால் குறிக்கப்பட்டமை நோக்கத்தக்கது. சிவபெருமானையும் கலித்தொகை 'கொன்றையவன்'[76] எனச் சின்னப் பூவால் பெயர் குறிக்கின்றது. 'பூவன்' 'பூவினுள் பிறந்தோன் பூமேல்நடந்தான்' என்பன அருகக் கடவுளது பெயர்கள். 'பூவின் கிழத்தி, தாமரையினாள்' என்பன

74 *புறம்* : 1 : 1, 2
75 *மணி : பளிக்கறைபுக்க காதை* : 49, 50
76 *கலி* : 142 : 28

திருமகள் பெயர்கள். பொதுவில் குறள் 'மலர்மிசை ஏகினான்' என்றது. முருகனது காதலி வள்ளியை,

*"நறுமலர் வள்ளிப்பூ நயந்தோயே"*[77]-என்று 'பூ'வாகவே பாடியது பரிபாடல்.

## அடியவர் பூ

முருகனோ உதயகுமரனோ என ஏற்பட்ட ஐயத்தை மலர்ச்சின்னம் தீர்த்தது. இதுபோன்று திருமங்கையாழ்வாருக்குஓர் ஐயம் எழுந்தது. ஆனால், இது தெளிவோடு ஏற்பட்ட ஐயம். ஆழ்வார்களில் நம்மாழ்வார் திருமாலே போன்று கொள்ளப் பட்டவர்; போற்றப்பட்டவர். திருமங்கையாழ்வார் இந்நோக்கில் நம்மாழ்வாரைப் பார்க்கின்றார். 'இத்திருவுரு திருமால்திருவுருவோ, நம்மாழ்வார் திருவுருவோ' என்று ஐயங்கொண்டவர் போன்று வினவுகின்றார்.

'இப்பெருமானுக்கு,
இருப்பிடம், திருக்குருகூரோ (நம்மாழ்வார் ஊர்),
திருப்பாற்கடலோ?
பெயர், பராங்குசனோ (நம்மாழ்வார் சிறப்புப்பெயர்),
நாரணனோ?
சூடும் சின்னப்பூ, மகிழம்பூவோ (வகுளம்), துளசியோ
தோள்கள் இரண்டோ, நான்கோ?'[78]

—என்பதன் மூலம் நம்மாழ்வாரது பூ (வகுளம்) மகிழம்பூ எனப்பாடினார்.

அழகர் பிள்ளைத் தமிழ் என்ற நூலும்,
*"இருபுறம் வகுளம் நாற்றிய"*[79] -என்று பாடியது.

இதனால், கடவுளர்க்கு அடையாளப்பூ அமைந்ததுபோன்று கடவுள் அடியார்க்கும் சின்னப்பூவைக் காண முடிகின்றது.

---

77 பரி: 14 : 22
78 சேமம் குருகையோ; செய்யதிருப் பாற்கடலோ?
நாமம் பராங்குசனோ, நாரணனோ? —தாமம்
துளவோ, வகுளமோ? தோளிரண்டோ, நான்கோ?
உளவோ பெருமானுக்கு.
79 அழ. பி. த: 12

இவ்வாறாகும் சின்னப் பூக்கள் பொன்னால் செய்யப்பட்ட பொற்பூவாகவும் சூடிக் கொள்ளப்பட்டன — சூட்டப்பட்டன. இயற்கையில் பூக்காது செயற்கையில் செய்யப்படுவதால் "பூவாப் பூ" "நெருப்பில் பிறந்த பூ" என்றும் குறிக்கப்பட்டன. "பொலம்பூந் தும்பை" "பொற்பூ"[80] எனப்பட்டன.

## பரிசுப் பூ; பட்டப் பூ.

அரசனைப் புகழ்ந்தும் பாடியும் ஆடியும், புலவரும் பாணரும், பாடினியரும் பொருநரும் பரிசு பெறுவர். பரிசாகப் பல வளமான பொருள்கள் வழங்கப்படும். மேலும் பொன்னாற் செய்யப்பட்ட சின்னங்களையும் வழங்கினர். அப்பரிசாம் சின்னமும் பூ வடிவாகச் செய்யப்பட்டது.

மலர்களிற் பெரியதும், அதிக இதழ்களை உடையதும், மலர்களின் தலைவி எனத்தக்கதுமான தாமரைப் பூ வடிவில் இப்பரிசுச் சின்னங்கள் அமைந்தன. பொன்னாற் செய்யப்பட்டு வாடாமையால் "வாடாப் பூ" எனப்பட்டது.

பாணனுக்குப் பொன்னாற் செய்யப்பட்ட தாமரைப் பூ,

பாடினிக்குப் பொற்பூவால் ஆகிய மாலை, பரிசுகளாக வழங்கப்பட்டன.

*"வாடா மாலை பாடினி அணியப்*
*பாணன் சென்னிக் கேணிப் பூவா*
*எரிமருள் தாமரைப் பெருமலர் தயங்க"*[81]

—என்பது புறம்.

*"மறம் பாடிய பாடினியும்மே*
*ஏருடைய விழுக்கழஞ்சிற்*
*சீருடை இழைபெற்றிசினே;*
*இழைபெற்ற பாடினிக்குக்*

80 *புறம்* : 2 : 14
81 *புறம்* : 11 : 11–18

குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
எனவாங்கு,
கொள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாராற் பூப் பெற்றிசினே''[82] -எனச்

சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ வழங்கியதைப் பேய் மகள் இளவெயினி என்னும் புலவர் பாடியுள்ளார்.

சிறந்த தலைமக்கட்குப் பட்டங்கள் வழங்கப்பட்டன. தமது பெருஞ் செல்வங்கொண்டு நல்ல அறச்செயல்கள் செய்த வணிகர்க்கு அரசன் பட்டம் வழங்கிச் சிறப்பித்தான். அப் பட்டத்தின் சின்னமாகப் பொன் பதக்கம் வழங்கப்பட்டது. அப் பதக்கமும் 'எட்டிப் பூ' வடிவில் அமைக்கப்பட்டது. இப்பூ ஒரு மரப் பூ. வெண்மை நிறத்தது. சிறிய வடிவில் கொத்தாகப் பூக்கும். ஒவ்வொன்றும் ஐந்தைந்து இதழ்களைக்கொண்ட புனல் வடிவப் பூ. இப்பூவின் பெயரால் அப்பட்டமும் 'எட்டி' எனப் பட்டது. அதனைப் பெற்றவன் 'எட்டி குமரன்', 'எட்டி சாயலன்' என இலக்கியங்களில் குறிக்கப்பட்டுள்ளான்.

'எட்டி'ப் பட்டம் போன்று மற்றொரு பட்டம். இது பாண்டிய நாட்டில் வேளாளர்க்கு வழங்கப்பட்டது. அவரினும் அரசனுக்குப் பெண் கொடுக்கும் தகுதி உடையோருக்கு வழங்கப்பட்டது.

[83] அறிவும் அடக்கமும் கொண்ட சான்றோராய், அன்பும் அறனும் கொண்ட இல்லறத்தாராய் உள்ளவர் இதற்குரியர். பழியில்லாது புகழ்பெற்ற செயல் செய்தோராகவேண்டும். இப் பட்டத்தின் சின்னமான பொற்பதக்கமும் பூ வடிவில் அமைந்தது.

'காவிதி' என்பது ஒரு பூ. தொல்காப்பியத்தில்,

''இகர இறுபெயர் திரிபிடன் உடைத்தே''[84] -என்னும்

நூற்பாவின் 'இ' ஒலியில் முடியும் பெயர்க்குக் 'காவிதி' என்னும் சொல் காட்டப்பட்டுள்ளது. இதைக் காட்டும் உரையாசிரியர்

---

82 புறம் : 364 : 1-8
83 ''நன்று தீதும் கண்டாய்ந் தடங்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்'' —மது. கா ; 499—499
84 தொல் : எழுத்து: 155

நச்சினார்க்கினியர் 'காவிதிப் பூ' என்று காட்டியுள்ளார். வேளாளர்க்கு வழங்கப்படுவதால் இப்பூ அவர்க்குரிய செங்கழு நீர்ப் பூவாக இருக்கலாம். இப்பூவின் பெயராலேயே இப்பட்டம் 'காவிதி' எனப்பட்டது.

*''காவிதி என்னும் பட்டத்துடன் அரசர் அளிக்கும் பொற்பூ''*[85]

—என்றார் நச்சினார்க்கினியர். இப்பட்டம் பெற்றோர், ஐம்பெருங் குழுவில் ஒருவராகி அமைச்சராகும் தகுதி பெற்றவராவர். இவர் எவ்வகை வரியிலிருந்தும் விலக்குப் பெற்றவர்.

இக்காலத்தில் நம் இந்திய மைய அரசு இவைபோன்று செல்வத்தகுதி, அறச்செயல், அறிவுத்திறன், கலைப்பாங்கு உடைய சிறந்தார்க்கு ''பத்மசிரீ'', ''பத்ம பூசன்'' என்னும் பட்டங்களை வழங்குவதைக் காண்கின்றோம். இவை தமிழில் 'தாமரைத் திரு' 'தாமரை அணி' எனப்படும். இன்றும் பூவின் பெயரால் பெயர் சூட்டப்பட்டுள்ளமை பழந்தமிழ் மரபின் நிழல் எனலாம்.

*''எட்டி காவிதிப் பட்டம் தாங்கிய*
*மயிலியல் மாதர்''*[86] எனப் பெருங்கதை காட்டுவதால் அக்காலத்தில் இப்பட்டங்கள் மகளிர்க்கும் வழங்கப்பட்டதைக் காண்கின்றோம்.

## நாளெல்லாம் பூ

அகத்திலும் புறத்திலும் குறியீடாகவும் சின்னமாகவும் பூ அமைந்து பெருமை பெற்றது. ஆனால், தமிழர்தம் அன்றாட வாழ்வில் நுகர்ந்து இன்பம் கண்டதில்தான் பூ நிறைவு பெற்றது எனலாம்.

பூவின் பிறப்பு காயின் தோற்றத்திற்கு அடித்தளம். பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையில் தம் தன்மைகளை மற்றவர்க்கு வழங்குவதில்தான் எவரும் நிறைவாக வாழ்ந்தவராவர். பூ இதற்கும் விதிவிலக்காகவில்லை. இந்த நிறைவைத் தமிழர் பூவிற்கு நிறைவாகவே வழங்கினர். தமிழர்தம் அன்றாட வாழ்வில் எல்லாம் பூவை நுகர்ந்து பயன்கொண்டனர்.

---

85 தொல் : எழுத்து : 155 உரை
86 பெருங் 2 ; 3 ; 144

விடியலில் எழுந்ததும் எளிய மக்கள், மலர் பூத்து மணக்கும் பொய்கையில் நீராடுவர். வளம் பெற்ற மாந்தர் மண்மிடாவில் பாதிரிப் பூ போன்ற இதழ் தடித்து மணங்கமழும் பூக்களைப் போட்டு அதன் மணம் ஏறிய நீரில் நீராடுவர். பெருஞ்செல்வர், 32 வகை ஓமாலிகை என்னும் மணப்பொருள்கள் ஊறிய நீரில் நீராடுவர். இவ்வாறு நீராடலால் மலரின் பயனைக்கொண்டு உடலில் மணம் ஏற்றினர்.

ஈரம் புலர்த்திய பின்னர் மகளிராயின் கூந்தலில் சில மலர் சூடுவர்; கதுப்பில் கோதை அணிவர். ஆடவர் குஞ்சியில் மலர் செருகுவர். குடுமியில் மலர் சுற்றுவர். காதிற் பூச் சூடுவர். மலர்ந்ததும் மணக்கும் அரும்பால் மாலை கட்டி மார்பிலும் தோளிலும் அணிவர்.

பூந்தாது என்னும் மலர்ச் சுண்ணத்தை இல்லத்தில் காற்றில் பரவவிட்டு அதில் உலா வந்து தம் உடலில் மலர்ச் சுண்ணம் படியச் செய்வர். (இக்காலத்தில் மணத்தூள்–Powder போட்டுக் கொள்வதாக உள்ளது.) இவை காலை நேரத்தில் மகிழ்ச்சியைத் தருவன. மாலையில் மலர்த் தேனைப் பருகிக் களிப்பர். உடுத்தும் உடைகளிலும் பூத்தொழில் செய்யப்பட்டவற்றை உடுப்பர்.

[87] பகலில் அணிந்த பொன் அணிகளை அகற்றிவிட்டு மாலையில் மலரும் மலர்களைக் கண்ணியாகவும் கோதையாகவும் சூடுவர். மாலைகளாகவும் தாராகவும் தோளிலும் மார்பிலும் அணிவர். பூப்பந்தரில் அமர்வர். தேன் புளித்த தேறலை மாந்தித் தினவு பெறுவர்.

இரவின் படுக்கையை மலர்ப்படுக்கையாக்குவர். புணர்ச்சியின்போது புதிய தார்களையும் மாலைகளையும் இருவரும் அணிந்து புணர்ந்து பூரிப்பர். காதலன் காதலிக்குப் பூச்சூட்டிப் புன்னகை பூப்பான். தலைவனுக்கு மாலை அணிவித்து அவள் மலர்வாள். இவ்வாறு, மாந்தரில் தனியார் மலர்ப்பயன் கொண்டனர்.

காதலனுக்கு எழுதும் காதல் முடங்கல்கள் தாமரை இதழிலும் தாழை மடலிலும் எழுதப்பட்டன.

---

87 ''நாளணி நீக்கி நகைமாலைப் பூவேய்ந்து'' –பரி 10:114

வீட்டு முகப்பை மலர்ச்செடிகளால் வனப்புறுத்தினர். வீட்டு வாயில்களில் மலர் மாலைகளைத் தொங்கவிட்டு 'மலரணி வாயில்' ஆக்கினர். திண்ணையாம் தெற்றிகளில் மலர்க் கொடிகளை வரிசையாகத் தொங்கவிட்டு அழகு படுத்தினர். மாடியில் நிலா முற்றத்தில் தாழிகளில் குவளையை வளர்த்து அது மலரக் கண்டுமகிழ்ந்தனர்.

விழாக்காலங்களில் செவ்வலரியால் ஆன மாலைகளை இணையொக்க—ஒத்தாற்போல—நறுக்கி அசைந்தாடுமாறு வரிசை யாக நாற்றினர்.

பொருள் ஈட்டப் பிரிந்து வேற்று நாடு சென்றவர் மீளின் "*மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும்*"[88] உறவாடும் அன்புடன் மாலை அணிவித்து வரவேற்றனர். இதனை ஒரு மரபாகவே கொண்டிருந்தனர். சான்றோரோ, மேலோரோ வரின் மலர்தூவித் தொழுது வரவேற்றனர்.

அந்தி வேளையில் இல்லத்து முகப்பிலும் அறையிலும் மலரைப் பலியாகத் தூவினர். விளக்குகளில் மலரைச் சூட்டினர். வணிக இல்லங்களில் பூப்பலிசெய்தனர். கடவுட் பீடிகைகளிலும் மலர்ப்பலி தூவினர். வண்டு மொய்க்காத மலர்களைத் தாமே கொய்து கடவுளர்க்குச் சாத்தினர்; கோவில்களுக்கு வழங்கினர்.

இவற்றிற்கெல்லாம் வேண்டிய மலர்களுக்கு அவரவர் இல்லங்களில் செடி, கொடி, மரம் வைத்து வளர்த்தனர். பெரும் பூக்கொல்லைகளைப் பெருக்கினர். தெருவில் பெண்கள் மலரைக் கடகத்தில் கொண்டு விலை பகர்ந்து திரிவர். கடைகளில் பல வகை மாலைகள் தொடுத்து விற்றனர். இவற்றிற்குரிய மலர்கள் வண்டி வண்டியாக நிறைக்கப்பட்டு வரும்.

"*மணநிலை மலர்பெய்து மறுகும் பண்டிகள்*"[89] பலப்பல பெருநகர்களில் காணப்படும்.

இளம் மகளிர் பூக்கொய்வர். கன்னியர் பூத்தொடுப்பர். பூத்த குமரிக்குப் பூச்சூடுவர். காத்த கடவுளுக்குப் பூச்சொரிவர். காதலர் பூப்பந்துசெய்து பூம்பொழிலில் விளையாடுவர்.

இல்லற வாழ்விற்கு விதை ஊன்றும் திருநாளே மலரின் தொடர்பில் திருமணம் என்று பெயர் பெற்றது. மாலையிட்ட

---

88. **தொல் : கற்பியல் ; 5 : 55**
89: **சீவ : சீ ; 61**

பின்னரே தாலி கட்டுவர். தாலி கட்டாது போயினும் மாலை யிட்டாலே மணமாயிற்று. பூவைக் கண்டவர் எவரும் பறித்துச் சூடுவது போன்று மணஞ்செய்து கொள்ளாது கூடிப்புணர்பவள் ''பூவிலைப் பெண்டு'' எனப் பூவால் குறிக்கப்பட்டாள்.

வாழ்வியலில் மட்டுமன்றி வணிகத்தையும் மலர் வைத்தே தொடங்கினர். தொழிலையும் பூ இட்டேபுனைந்தனர். பொறிகட்கும் படைக்கலன்களுக்கும் பூச்சூட்டிப் போற்றினர்.

பொன்னிருந்தால் பொன்னிலே பூத்தொழில் செய்தனர்

பொன்னில்லையேல் பொன்னிருந்த இடத்தில் பூவை
வைத்தனர்;

மணத்திற்கும் பூ; பிணத்திற்கும் பூ.
வாழ்த்தலுக்கும் பூ; வழுத்தலுக்கும் பூ.
விழாவுக்கும் பூ; இழவுக்கும் பூ.
பொழுதறியவும் பூ, தொழுதமையவும் பூ.
பேரிலும் மலர்ப்பெயர்; ஊரிலும் மலர்ப்பெயர்.
உவமைக்கும் மலர்; உணவிற்கும் மலர்.
மருந்துக்கும் மலர்த்தேன்; மயக்கத்திற்கும் மலர்த்தேன்.
சொல்லும் ஒரு மலர்; பாவும் ஒரு மாலை.
போற்றுவதற்கும் 'பூமான்' என்றொரு பூச்சொல்;
தூற்றுவதற்கும் 'பூ இவ்வளவுதானா' என்றொரு
பூத்தொடர்.

வாழ்வின் நடைமுறைகளில் எல்லாம் பூவிற்கு இடமளித்தனர். இங்கு எழுதப்பட்ட ஒவ்வொரு கருத்துக்கும் பெருமைக்கும் தமிழ் இலக்கியத்தில் இடம் உண்டு.

இதன் விரிவாக இந்நூல் விரிகின்றது. எனவே இது வரை காணப்பட்ட இப்பகுதி முன்னுரை எனலாம். இங்கே குறிக்கப்பட்ட கருத்துகளுக்கு விளக்கமும் விரிவும் சான்றுமாக வரும் பகுதிகள் அமையும்.

அவ்வமைப்பும் மரபையும், முறையையும் நெறியாகக் கொண்டது. தமிழர் மலரோடு இழைந்தனர். மலரால் மரபுகளைக் கண்டனர், அம் மரபில் மலர்களை முறைப்படுத்தினர்,

அம்மரபையும் முறையையும் நெறியாகக் கொள்ளும் : இந் நூலில் இடையீடும் விடுபாடும் நேரா. சொல்லாய்வு, மொழி வரலாறு, பொருளாய்வு கொண்டு மலர்கள் விளக்கப்பெறும்.

பயன், சுவை, நயம் காணும் இலக்கியத் திறனாய்வு அமையும்.

பூக்களைப் பற்றிய ஆய்வும், இலக்கியத் திறனாய்வுமாகும் இந்நூல் பூவின் வரலாற்று நூலாகும்.

பூவிற்குத் தனியாக வாழ்வியல் வரலாறு உண்டு. அவ் வரலாறு மணக்கும் : இனிக்கும்.

அதனைப் பூவே இதழ்விரித்துத் திருவாய் மலரும்.

இலக்கியம் ஒரு பூக்காடு

'கவிதாசுரபி' கோவை. இளஞ்சேரன்

# க திருவாய் மலர்கிறது



## வாய்மலர் வழங்கும் இதழ்கள்:

ஒரு சிறு வாய்ப்பாட்டு.

எனது இயற்பெயர்.

எழில் பருவங்கள்ஏழு.

உறுப்புகள் ஏழு.

குணம் பத்து.

நான்கு வகைக் குடும்பம்.

அணியாகும் அரும் வாழ்வு.

பூக்காத பூக்கள்.

இதழ் வகை.

அத்தி பூத்ததும் ஆலங்காய் காய்த்ததும்.

ஆவிரை காட்டும் பூவகை.

தொடுக்காத தொடையல்.

வடிவப் பெயர்கள்.

ஒரு நாள் நிறை வாழ்வு.

# 2. பூ திருவாய் மலர்கிறது.

## ஒரு சிறு வாய்ப்பாட்டு

என்னைப்பற்றி நான் திருவாய் மலர்வதற்கு முன் என்னைப் பற்றி ஒரு சிறுவாய் மலர்வதைக் கேட்பீர்:

*"பூவோ பூ,*
*புளியம் பூ;*
*பொன்னாங் கண்ணிக்குத்*
*தாழும் பூ;*
*அத்திப் பூ,*
*ஆவாரம் பூ,*
*அக்கா கொண்டைக்குத்*
*தாழம் பூ."* —இஃது என்னைப் பற்றிய எளிய

பாடல். ஒரு நாட்டுப் பாடல். பாட்டி கட்டியது. பெயர்த்தி பாடுவது. இதில் எனது கதை இல்லை. எனது வரலாற்றைக் குறிக்க எழுந்ததும் அன்று. ஆனால், எனது வரலாற்றை விரிக்க இடந்தருகின்றது. இப்பாடலை வாய்ப்பாக்கிக் கொண்டு எனது வரலாற்றைச் சொல்லப் புகுகின்றேன்.

## எனது இயற் பெயர்

இப்பாடலில் உள்ள ஒவ்வொரு சொல்லும் என்னோடு தொடர்புடைய சொல். தொடங்கும் சொல் எனது பெயரைக் குறிக்கும் பூ. முடியும் சொல்லும் பூ. இடையில் எல்லாத் தொடரிலும் பூ. என்னைக் குறிக்க 'மலர்' முதலிய வேறு பல சொற்கள் உள்ளன. ஆயினும், இங்கு 'பூ' ஒன்றே அமைந்துள்ளது. இவ்வமைப்பில் ஓர் உண்மை பொதிந்துள்ளது. அவ்வுண்மை, 'பூ' என்பதே எனது இயற்பெயர் என்கின்றது. இஃதே எனது பொதுப்பெயரும் ஆகும்

இதனை நமது தமிழின் பழம்பெரும் இலக்கண நூலாம் தொல்காப்பியம் வழியாகவும் காணலாம். என்னைக் குறித்துப் பேசவேண்டிய இடங்களில் எல்லாம் தொல்காப்பியர் 'பூ' என்னும் சொல்லையே கையாண்டுள்ளார். 'மலர்' என்னும் சொல்லைஓரிடத்தில் குறிக்கின்றார். அவ்விடத்திலும் எனது பெயராக அன்று. "மலர்தலை உலகத்து" என்று உலகத்திற்கு அடைமொழியாக அமைத்துள்ளார். மற்றும், 'அரும்பு' 'நனை' என்னும் சொற்களை அவரது கை காட்டுகின்றது. அவையும் எனது பெயராகக் குறிப்பதற்கு அல்ல. மரத்தின் உறுப்புகளாகப் பட்டியலிட்டுள்ளார். 'அலர்' என்னும் சொல்லை ஐந்து இடங்களில் காணலாம். அச்சொல்லும் என்னைக் குறிப்பதற்கு அன்று. களவுக் காதல் வெளிப்பட்டு அலர்தலை — பரவுதலைக் குறிக்கும் பொருளைக் கொண்டது.

பொதுவாகச் சான்றோர் ஒரு நோக்கத்தில் ஒன்றை எழுதும் போது அவர்களது அறிவுத் திறத்தால் பிற கருத்துகளும் இயற்கையாக அவர்களது கைப்போக்கில் அமையும். தொல்காப்பியர் இப்பாங்கில் குறிக்கத்தக்கவர்,

'பூ' என்று அவர் முதன் முதலில் குறிக்கும் நூற்பா,

*"பூ என் ஒரு பெயர்"*1

—என்று தொடங்குகின்றது. இது வேறு ஒரு புணர்ச்சி இலக்கணத்திற்காக எழுந்த நூற்பா. ஆயினும், 'பூ' என்று எனக்குப் பெயர் இடுவது போன்று இஃது ஒலிக்கின்றது.

1 தொல்: எழுத்து : 269.

அதிலும்,

"ஒரு பெயர்" என்றது எனக்கென 'உரிய ஒரு பெயர்' எனச் சுட்டுவதாக உள்ளது. 'ஒரு' என்னும் சொல் இலக்கியப் பாங்கில் 'குறிக்கத் தக்க ஒன்று' – 'தனித் தன்மையுடையது' என்னும் பொருளைத் தரும். இதன்படி, இங்கு "ஒரு பெயர்" என்றது எனக்குரிய இயற்பெயர் பூ என அறிவிப்பது போன்று உள்ளது. இவ்வாறு பொருள் கொள்வது நேர்நோக்குப் பார்வை அன்று; பக்கப் பார்வை. இக்கருத்துக்குத் துணையாக நிகண்டுகளும் இலக்கிய இலக்கணங்களும் நிற்கின்றன. யாவற்றாலும், எனது இயற்பெயர் 'பூ' என்று என்னை அறிமுகம் செய்து கொள்கின்றேன்.

"பூ! பூ!" என என்னைச் சொல்லும் வாய் பூவாய் இதழ் விரிக்கும். சிறுவாய் மலர்ந்த "பூவோ பூ" பாடலைப் பார்த்தால் அடுத்தடுத்து எனது பெயரைச் சொல்லிச் சொல்லித் தன்வாய்க்கு மணம் கூட்டிக்கொள்வதைக் காணலாம். என்னைச் சொன்னாலும் வாய் மணக்கும். எண்ணினாலும் உள்ளம் உவக்கும். மனத்தால் எண்ணுவது மட்டுமன்று; எண்ணால் எண்ணினாலும் எண்ணமும் கமழும்; எண்ணும் சிறக்கும். எனது வரலாறும் வளரும்

"பூவோ பூ" பாடலில் எத்துணை இடங்களில் என் பெயரை அமைப்பது என்று திட்டமிட்ட எண்ணிக்கையில் அமைக்கவில்லை. பாட்டுப் போக்கில் ஏழு இடங்களில் என் பெயர் அமைந்துள்ளது. நானும் எண்ணிப் பார்த்தேன்.

பாடிய சிறுமிக்குத் தொல்காப்பியம் தெரியாது. பாட்டு தந்த பாட்டி தொல்காப்பியர் எத்துணை இடங்களில் என்பெயரை வைத்துள்ளார் என எண்ணிப் பார்த்திருக்கவும் மாட்டாள். தொல்காப்பியரே ஏழு இடங்களில் வைக்கவேண்டும் என்று கருதி வைக்கவும் இல்லை. இயற்கையாக நூலில் பரவலாக அமைந்த இடங்கள் வருகின்றன:

*"பூ என் ஒரு பெயர்"* 2
*"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்"* 3
*"மாபெரும் தானை மலைந்த பூவும்"*
*"வண்டே இழையே வள்ளி பூவே"*

---

2 தொல்: எழுத்து: 269
3 தொல் : பொருள்: 21,63, 92,: 140, 637, 185

"அடிசிலும் பூவும் தொடுதற் கண்ணும்"
"சினையே குழையே பூவே அரும்பே"
"பூப்பின் புறப்பாடு"

இவ்வாறமைந்த எண்ணிக்கை ஏழை, என் பருவ வளர்ச்சி எண்ணிக்கை யாக்கிக்கொள்கின்றேன்.

## ஏழில் பருவங்கள் ஏழு

1. நனை; 2. அரும்பு; 3. முகை; 4. போது; 5. மலர்; 6. அலர்; 7. வீ — என்பன.

செடி, கொடி, மரங்கள் என்னைப் பெற்றுத் தரும் தாய் தந்தையர். காம்பும் தண்டும் என்னை ஏந்தி வளர்க்கும் செவிலித் தாயர். இலையும் தழையும் தளிரும் என்னைச் சூழ்ந்து போற்றும் தோழிமார். பிறந்து வளர்ந்து நிறைவடையும் எனது வாழ்வின் பருவம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனித்தன்மைபெற்றது. தன்தன் தன்மைக்கு ஏற்பப் பொருள் பொதிந்த பருவப் பெயர் பெற்றது. அப்பொருட் பொலிவைச் சொல்வதும் ஒரு தனிச் சுவை; கேட்பதும் ஒரு தனிச் சுவை.

**1. நனைப் பருவம்**

இஃது எனது பிறப்பாம் தோற்றப் பருவம். உங்களது பாங்கில் கூறினால் அறைக் குழந்தைப் பருவம். இந்த எனது தோற்றத்தில்புறத்தேயும் நீர்ப்பிடிப்புள்ள ஈர நனைப்பு தோன்றும். அகத்தேயும் நெய்ப்பு (எண்ணெய்) பிடிக்காத நீர்நைப்புள்ள தேன் நனைப்பு தோன்றும். இந்தத்தேன் நனைப்புதோன்றுவதை "*நனையினால் தோன்றும் நறா*"[4] என்றார் விளம்பி நாகனார். இந்நனைப்புகளால் நான் 'நனை' என்னும் பெயரோடுதோன்றினேன். நனைஎன்பதற்குத் தோற்றம்என்றொரு பொருள்உண்டு. இதனை, "*நனை மகிழ்*"[5] என்னும் தொடருக்குத் '*தோன்றிய மன மகிழ்ச்சி*"[6] என நச்சினார்க்கினியர் காட்டியுள் ளார். எனவே, எனது தோற்றம் என்னும் கருத்திலும் 'நனை'

---

4 நான். க: 50.
5 சிறுபாண் ; 67.
6 சிறுபாண் : 67 உரை.

என்னும் சொல் நினைவில் நிற்கலாம். இத்தோற்றப் பருவத்தில் மற்றொரு குறிப்பையும் நினைக்கலாம். இப்பருவத்தில் தேனுக்குரிய மூலச் சாறு கருக்கொள்ளும். இச்சாறு பனை, தென்னைக் கள்போன்று தினவெழுப்பும் 'மட்டு'(மது)என்பது குறிக்கத்தக்கது. "*நனை உறு நறவின்*"[7] என்றும் "*நனை அமை கள்ளின்*"[8] என்றும் இலக்கியங்கள் கூறும் எழினியாதன் என்னும் வள்ளலது வழங்கும் சுவையைப் பாடிய மாங்குடி கிழார்,

"*வள நனையின் மட்டு (மது) என்கோ*"[9] என்று நனைதரும் தேன் சுவையைச் சிறப்பித்துக் காட்டியுள்ளார்.

நனை ஒரு நினைவுப் பருவம்.

**2. அரும்புப் பருவம்**

அரும் பூவாக வளர்வதற்கு அடிப்படை கொண்டதால் அரும்பூ—அரும்பு எனப்பட்டேன். அரும்புதல் என்பது தோற்றத்தின் மேல் வளர்ச்சியாகும். இது "*குறு குறு நடந்து சிறு கைநீட்டும்*' மழலைப் பருவம் போன்றது. இலக்கியங்களில் பெரிதும் பொதுவில் கையாளப்படும் பெயர்.

அரும்பு யாவரும் விரும்பும் பருவம்.

**3. முகைப் பருவம்**

'முகி' என்னும் சொல் 'முகங் காணுதல்', 'உள்ளிடம் வெளி பெற்றுக் குவிதல்' என்னும் பொருள்கொண்டது. "குவிமுகை", "குவி முகிழ்" என்னும் அடைமொழியோடு குறிக்கப்படுவேன். (முகை-மலையில் உள் குடைவான இடம்), அரும்பி, இதழ்கள் அகத்தே நெகிழ்ச்சி அடைந்து அடிப்பக்கம் சற்றுப் பருத்து முகைத்துத் தோன்றுவதால் இப்பருவம் 'முகை' என்றானேன். அரும்பு பருத்துக் கொழுப்பது முகை. 'கொழு முகை' என இலக்கியங்கள் பன்னிப் பன்னிப் பேசும்.

---

7 *பதிற்* : 51 : 88.
8 ,, : 12 . 18.
9 *புறம்* : 396 : 16.

ஏன்னினத்தில் பலவகைப் பூக்களுக்குப் பலவகை உருவ அமைப்பு உள. அவ்வமைப்புகள் சிறிது சிறிது வேறு பட்டவை; படிப்படியாக அமைந்தவை. அவ்வவ் வமைப்புக்கேற்ற சொற்களைக் கொண்டவை.

அரும்பின் இதழ்கள் சற்றுத் தழைத்துக் கலிந்தால் அது கலிகை. உள்ளிடம் சாஸ்பை அடைந்தால் சாலகம். கொட்டையின் மூலம் பிடித்தால் பொகுட்டு. சூலகம் முனைப்பது கன்னிகை. நீர்க் குமிழிபோல் அரைக்கோள உரு அமைந்தது மொக்குள். அது பருத்து உயர்ந்து மேற்பகுதி மொட்டையாகத் தோன்றுவது மொட்டு. இதழ்கள் நெகிழ்ந்து முனைக் குவிவோடு தோன்றுவது முகிழ்; அஃதே முகிளம்,

இவ்வாறு, பல நிலைகளில் மிளிரும் எனது முகைப் பருவம் மணத்திற்கு உரித்தான பருவமாகும். இம்'முகிழ்' என்னும் சொல்லி லிருந்தே இன்றைய வழக்காகிய 'முகூர்த்தம்' என்னும் சொல் உரு வாயிற்று. இப்பருவம் மணம்–திருமணம் -முகிழ்க்கும் பருவம். இது கொண்டு திருமண நாள் 'முகிழ்த்தநாள்' எனப்பட்டது. முகிழ்த்தம் முழுத்தமாயிற்று. "வத்தவ! நாளையென்றே மறையவர் முழுத்தம் இட்டார்" என்கிறது உதயணகுமார காவியம் (107) இம்முழுத்தமே காலப்போக்கில் 'முகூர்த்தம்' ஆகி வடசொல் போன்றமைந் தது. எனது பருவங்களில் யாவும் மணம் உள்ளனவாயினும், முகைப் பருவமே மணத்திற்குத் திறப்பு விழா செய்வது. இத்திறப்பு விழாவைக் கண்டு உவந்த குறுங்கீரனார் என்னும் புலவர்,

> "................................ *கொடி முல்லை*
> *முகை தலை திறந்த நாற்றம்*"10 —என்றார்.

இப்பருவத்தில்தான் மணம் என்னும் எனது தன்மை முழு நிறைவு பெற்றுக் கமழும். காற்றும் படாததால் இயற்கை கலையாத மணம் நிற்கும். இது மிகச் சிறந்த மணமாகும். ஆதலால், இதனை மாந்தர் நுகர விரும்புவர். இயற்கையில் 'போது' ஆகி மலர்வதற்குள் செயற்கையில் திறந்து நுகர்ந்துவிட விரும்புவர்.

இம்மணம்,

> "*திறந்து மோந்தன்ன சிறந்து கமழ் நாற்றம்*"11

—எனப்பட்டது.

---

10: குறு:842; 1,2: 11 மது. கா: 567

மலராகும் காலத்திற்கு முன்னரே கையால் நெறித்து என்னிடம் சிறந்து கமழும் மணத்தை (நறுநாற்றத்தை) நுகர்ந்து பூரிப்பர். இதனை,

*"காலமன்றியும் கையின் நெறித்த*
*கழுநீர்க் குவளை பெரும்போதி அவிழ்ந்த"*[12] எனப்பெருங் கதை ஆசிரியர் கொங்கு வேளிர் சுவைத்துப் பாடினார். செயற்கையில் இவ்வாறு மலர்த்துவதைக் கையால் நெறிப்பதுடன்,

*"கூர் உகிர் விடுத்ததோர் கோலமாலை"*[13]

என்னுமாப்போல் கூரிய நகத்தைச் செருகியும் கோலங்காண்பர். கைவிரலால் கோதி அலைத்து வலிய அலர்த்துவர் என்பதை,

*"விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறும் கான் (மணம்)"*[14]
*—என*

நக்கீரர் பாடி இம்மணம் இயற்கையில் வெளிப்படும் மணத்திலும் வேறுபட்டது எனக் காட்டினார். இதனை,

*"விரலது அலைப்பாலே வலிய அலர்த்த அலர்ந்ததாகலின்*
*வேறுபடுகின்ற நறிய மணத்தினையுடைய"*[15] —என்றும்

*"அலர்கின்ற பருவத்தே கையால் அலர்த்தி மோந்து*
*பார்த்தாலொத்த மிக்கு நாறுகின்ற நாற்றத்தினையுடைய"*[15]
—என்றும்

*"அகைத்தல் = வலிய மலர்த்தலுமாம்'*,[15]
—என்றும் உரையாசிரியர்கள் வலிய மலர்த்தலையும் அது மலிய மணத்தலையும் விளக்கினர்.

மணம் திறக்கப்படும் இப்பருவம் உங்களில் காதல் உணர்வு திறக்கப் படும் கட்டிளங் காளையர், கன்னியர் பருவம் போன்றது எனலாம். இப்பருவப் பெயர்களில் 'கன்னிகை' என்றொரு சொல்லையும் காட்டினேன் அன்றோ? இதனால் காதல் முகைக்கும் காளையர், கன்னியர்

---

12 *பெரு* : 35 : 183 – 184
13 *சீவ. சி* : 1466
14 *திருமுருகு* : 196:
15 *திருமுருகு* : 196 : *உரை*; *மது*: *கா* ; 567 : *உரை*; *தக்க* ; 98 ; *உரைக்குறிப்பு*.

''முகைப் பருவத்தர்''[16] —எனப்பட்டனர். எனது கலையில் சிறந்து நிற்கும் சப்பான் நாட்டாரும்,

*'மலர்ந்த மலர் முதுமையின் சின்னம்;*
*மொட்டு – முகை குமரனின் சின்னம்'*

—என வழங்குகின்றனர்.

இப்பருவம் கழிந்து அடுத்த பருவம் மாறும்போது எனது கன்னித்தன்மை போகின்றது. எவரும் தொடாத கன்னியாகிய என்னைக் காற்றும் வண்டும் எச்சிற்படுத்தி எனது கன்னிமையைச் சாகடித்து விடுகின்றன. இவ்வகையில் முகைப்பருவ வாழ்வு குறைந்து நிலைபெறாது அழிகின்றது. தலைவன் பிரிவால் தலைவியின் இளமைக் கழிவதைக் கூறும் தோழியை,

*'முகை முதிர்ந்து, அடுத்த பருவம் பெறுதலால்*
*முகைப் பருவம் அழிதல் போன்று தலைவியின் இளமை*
*குறைந்து கழிகின்றது'*[17]

—என்று உவமையாகப் பேசவைத்தார் கலித்தொகை ஆசிரியர். இவ்வாறு பல்வகையாலும் சிறப்புடைய— குறிக்கத்தக்கப் பருவம் இப்பருவம்.

முகைப்பருவம் ஒரு காதற் பருவம்

**4. போதுப் பருவம்**

முகைக்கு அடுத்த பருவம் போது. இதனைப் ''போதின்முகை'',[18] ''முகிழ் விரி; நாட்போது'',[19] என்பவையும் புலப்படுத்துகின்றன. இதழ்கள் நெகிழ்ந்து இடைவெளி பெற்று முனையில் வாய் திறக்கும் பருவம் போது. இது முகைக்கும் மலருக்கும் இடைப்பட்ட சிறு நேரப் பருவம். முகை வாய்விட்டு உடையும் பருவம் என்பதை ''அணிமிகு கொழுமுகை உடையும் பொழுது''[20] என ஐங்குறுநூற்று அடி காட்டுகின்றது. இதைக் கன்னி நிலையில

---

16 ''முதியோர், இளையர், (குழந்தைகள்)
முகைப்பருவத்தர்''—பரி. 10:12
17 ''முதிர் முகையிற்குக் கூற்றம் போல்: —கலி;17:11, 12
18 கலி:17:15, 16 20 ஐங்: 343
19 சிறுபாண் :183:

விருந்து கற்பை ஏற்கும் திருமணத்தைத் தரும் மண நாள் பருவம் எனலாம். முகைக்கும் போதுக்கும் இடைப்பட்ட நிலையில் பொதிந்திருந்த (மூடியிருந்த) நிலையாதலால் 'பொதி' என்றொரு பெயர் பெற்றேன். வண்டு புகுவதற்கு வாய் திறந்து இடம் (இல்) கொடுத்ததால் புகு + இல் = (புக்கில்) புகில் – போகில்—என்றொரு பெயரும் கொண்டேன்.

போழ்தல் என்றால் பிளத்தல். முகையாகப் மூடிப் பொதிந்திருந்த நிலையிலிருந்து வாய் பிளந்து தோன்றுவதால் போழ்து–போது ஆனேன். காலத்தைப் பகுத்து-போழ்ந்து ஆகும் நேரமாகிய பொழுதை அறிவிக்கும் போதாகவும் விளங்குகின்றேன்

போது ஒரு பொழுதுப் பருவம்.

**5. மலர்ப் பருவம்** *"போது அவிழ் புதுமலர்"*[21] -என்றபடி போதுக்கு அடுத்து அவிழும் பருவம் மலர்.

கட்டுவிட்டு வாய் அவிழ்ந்தபோதின் இதழ்கள் தனித்தனியே விலகி, விரிந்து, நிமிர்ந்து நிற்கும். வண்ணங்கள் மெருகேறி விளங்கும். மையப் பொகுட்டும் தாதும் காட்சி மேடையாகும். மணம் கமழும். தேன் துளிக்கும். மலர் ஆவேன்.

*'மல்' என்றால் வளம்.*[22] என் வளப்பத்தின் முழு உருவமே மலர்ப் பருவம். என் வளம் மட்டுமன்று; உலகில் உணவு வளம், உடை வளம், உறையுள் வளம், செல்வ வளம் யாவற்றிற்கும் இப்பருவமே காரணம் எனலாம்.

இப்பருவத்தில் நிகழும் தாதுச் சேர்க்கையால் கருப்பிடித்துக் காயாகிக் கதிராகி, பருப்பாகிப் பஞ்சாகி, வித்தாகி மரமாகி, விளை பொருளாய் விழைபொருளாய் வளம் பெருகும்; 'மல்' என்னும் வளப்பமானேன். அதனால் 'மலர்' என்னும் பெயரானேன். எனது பொதுப்பெயராகிய 'பூ' என்பதற்கு அடுத்த பெருவழக்கான பெயர் 'மலர்'

---

21 மது. கா: 564    22 தொல்: சொல்: 303.

திருமணம் கமழ்ந்து, வண்ணக் குடும்பம் அமைத்து, வண்டுக்கு விருந்தளித்து வளரும் இம் மலர்ப்பருவம் இல்லற நம்பி - நங்கை நிலை போன்றது.

இந்நங்கை
இதழ்களால் பட்டுப் பாளம்;
கமழ்வால் மணச் சுரபி;
தேனால் சுவை ஊற்று;
நிறத்தால் வண்ணக் கிண்ணம்;
தாதுக்களால் சுண்ணச் சிமிழ்;
காட்சியால் எழிற்குமரி;
அசைவால் கவர்ச்சிக் கூத்து;
இசைவால் உணர்ச்சித் தென்றல்
கவர்ச்சியால் சந்தனப் பேழை;
மலர்ச்சியால் மங்கலச் சின்னம்.

மங்கலத்திலும் சொல்லே மங்கலம்: மணமொரு மங்கலம். கண்டால் மங்கலம்; கேட்டால் மங்கலம்; காட்டினால் மங்கலம்; சூட்டினால் மங்கலம். எனவே,

மலர்ப் பருவம் ஒரு மங்கலப் பருவம்.

## 6. அலர்ப் பருவம்

"சுடர் நோக்கி மலர்ந்து ஆங்கே படக் கம்பும் அலர்"[23] -இவ்வடிகளில் எனது இனத்துத் தாமரை, கதிரவனை நோக்கி மலர்ந்து மலர் ஆயிற்று. கதிரவன்மறைவதால் கூம்பும்போது அலர் ஆகிவிட்டது. காலையில் மலர்; இஃதே மாலையில் அலர்.

[ஓரிதழ் மலர் தவிரப் பிற] மலர்களின் புற இதழ்கள் உதிர அகவிதழ்கள் விரியும். விரிந்தவை கீழ்நோக்கி வளைந்து பரவும். விரிதலும் பரவலும் 'அலர்தல்' எனப்படும் .இதனால் 'அலர்' எனப்பட்டேன். மலரின்விரிவே அலர். இதுகொண்டே நிகண்டுகள் இப்பருவத்தை "விரிமலர்"[24] என்று குறித்தன. விரிந்து மல

---

23 கலி : 78 ; 17 24: "இகமலர் வெதிர் தொடர்ப்பூ விரிமலரே"- பிங். நி: 2824

ரினின்று சிறிது வேறுபடுதலால் 'இகமலர்' எனப்படுவேன். 'தொடர்ப்பூ' என்றொரு குறியும் எனக்குண்டு. நடுங்கிச் சிலிர்த்தலால் இப்பொருளைத் தரும் 'வெதிர்' என்னும் சொல்லை நிகண்டுகள் எனது இப்பருவத்திற்குக் காட்டின. இதற்கு இலக்கிய ஆட்சியைக் காணமுடியவில்லை.

அலர்தலை உடையது அலரி. 'அலரி' என்பதும் இப்பருவப் பெயர். இப்பருவப் பெயரை என்னினத்தில் ஒரு மலர் பெயர்பெற்று 'அலரி' எனக்குறிக்கப்பட்டது.

இவ்வாறு விரிவதையும் பரவுதலையும் கொண்டே அகத் துறையில் களவுக்காதல் வெளிப்பட்டுப்பரவுதலை 'அலர்' என்றதை முன்னரும் குறித்தேன்.

பரவி விரிந்த காட்சியாலும்
யாவர்க்கும் மணம் பரப்பும் ஒப்புரவாலும்
தேனை வழங்கும் ஈகையாலும்
அலர் ஒரு புகழ்ப் பருவம்.

**7. பருவம் - வீ**

அலராக நிறைவாழ்வு பெற்ற நான் "கழன்று உகு வீ"[25] என்றபடி காம்பிலிருந்து கழன்று கீழே வீழ்வேன்.

"*குவி குழை கழன்ற*
*ஆலி ஒப்பின் தூம்புடைத் திரள் வீ*" [26] என்றபடி காம்பின் இணைப்பிலிருந்து கழன்றதால் அடியில் உள்துளையுடன் (தூம்புடன்) காட்சி தருவேன்.

'வீ' என்னும் சொல்[27] நீங்குதல், வீழ்தல், என்னும் பொருள்களைத் தருவது. தாயின் பிடிப்பிலிருந்து நீங்கி வீழ்வதால் 'வீ' எனப்பட்டேன், பிடிப்புகழன்றுவீழாது ஒட்டிநிற்கும்நிலையிலும்'வீ' எனப்படுவேன். இச்சொல்லுக்குச் சாதல், ஒழிதல், மடிதல் என்னும் பொருள்களும் உள. நான் செத்தொழிந்து மடிந்துவிடவில்லை.

---

25 புறம் : 307 : 5 : 26 அகம் - 95 : 6, 7:

27 பூவும் ஒழிவும் நீக்கமும் மடிவும்
புள்ளின் பெயரும் சாவும் வீயே'' பிங். நி. 4089.

தாயின் மடியிலிருந்து நீங்கியுள்ளேன். நீங்கினாலும் "நாறு கமழ் வீயும்" [28] என்றபடி மணங் கமழ்வதில் நீங்கவில்லை. "செல்நீர் வீ வயின் தேன்சோர" [29] என்றபடி தேன்வழிவதில் நீங்க வில்லை. "வேங்கையின் ஒள் வீ" [30] என்றபடி வண்ண ஒளியில் நீங்கவில்லை. என்னை நீங்கிய தாய்தான் புலம்படைந்தாள் அவள் தனிமையாகித் துன்பமுறுவோருக்கு உவமையாக,

"பூ வீ கொடியின் புலம்படைந் தன்றே" [31] எனப்பட்டாள்

என்றாலும், தாயை விட்டு நீங்கி வீழ்ந்த வகையில் எனது வாழ்வின் இறுதிப் படுக்கையில் படுத்துவிட்டேன் என்பது உண்மையே. வாழ்வியலில் வீழ்ந்தது வீழ்ந்ததுதான். மற்றைய ஆறு பருவங்களும் பிறப்பிலிருந்து பிறந்த இடத்தோடு ஒன்றிய பருவங்கள். இப்பருவம் 'வீ' ஒன்றியது அன்று. ஆகையால் தனித்து நிற்கும் பருவமாகின்றது, இவ்வாறு தனித்துப் பிரித்துப் பார்க்கத் தொல்காப்பியமும் இடம் வைத்துள்ளது. தொல்காப்பியத்தில் முன்னோர் காட்டிய ஏழு இடங்களில் ஏழாவது நூற்பாவை நினைவு கூர்ந்தால் அதில் என்னைக் குறிக்கும் பொதுப்பெயர் 'பூ' நேரடி யாக இடம் பெறாமல் பூக்கும் தொடர்பில் மகளிர்க்கு நேரும் பூப்பைக் குறிக்கும் சொல் அமைந்துள்ளதைக் காணலாம் ஆறு இடங்களிலிருந்து வேறுபட்டு நீங்கி நிற்கும் இந்நூற்பா என் ஏழா வது பருவத்தின் தனிமையைக் காட்டுவதாக அமைந்துள்ளது இதற் குரிய குறிப்பை அங்கும் கூறியுள்ளேன்.

எனது பருவம் எதற்கும் கூறப்படாத அடைமொழி ஒன்று இப்பருவத்திற்குமட்டும் கொடுக்கப்படும். அது "முது" [32] என்பது எனக்கு முதுமைப் படுக்கை – இறுதிப் படுக்கை விரிக்கப்பட்டது.

எனவே,

வீ பருவம் இறுதிப் பருவம்.

**என்றும் புதுமை**

எனது ஒவ்வொரு பருவத்திலும் புதுமைப் பொலிவுடன் விளங்குவேன். அதனால், புதுமை அடைமொழியுடன் பேசப்படுவேன். இறுதிப்படுக்கையில் வீழ்வதற்குக் கழன்று ஒட்டி நிற்கும் போதும் மணம், வண்ணம் எழில் முதலியன வீழாமல்

28 பரி : 8 : 99
29 கலி: 41 : 11
30 பரி 16 : 42
31 நற் : 218 : 2
32 புறம் 307 – 5

விளங்குவேன். இவற்றால் எனது புதுப்பொலிவும் மாறாமல் நிற்கும். இதனால்,

"புது வீ ஞாழலொடு" (நற் : 166 : 8)
"பொன்மலர் புது வீ" (ஐங். 208 : 3)
"பைங்கொடி முல்லை மென்பதப் புது வீ" (அகம்: 764)

எனப் புதுப்பட்டம் பெற்றேன்.

**நான் ஒரு செம்மல்**

இப்புதுமை எத்துணை பொழுது தாக்குப் பிடிக்கும்? ஒவ்வொன்றும் மறுநாளே பழமை கொள்ளும். இறுதிப் படுக்கை ஒரு நாள் நீண்டால் இறப்புப் படுக்கை ஆகிவிடும். இறந்தால் புதுப் பட்டம் போய்ப் பழைய பட்டம் கிடைக்கும். ஆம், 'பழம் பூ' ஆவேன். பழம் பூ ஆனாலும் எனக்குக் கிடைக்கும் பெயர் பெருமைக்கு உரியது.

"செம்மல் பழம்பூ ஆகச் செப்புவர்"[33] 'செம்மல்' என்னும் பெயர் தலைமைத் தகுதிக்கு, அருக தேவனுக்கு, இறைவனுக்குச் சூட்டப்பட்ட பெயர். செய்ய எடுத்த வினையைத் தொடுத்து முடித்த உள்ளம் செம்மாப்பு அடையும். இது,

"செய்வினை முடித்த செம்மல் உள்ளம்"[34] எனப் பட்டது.

"அருந்தொழில் முடித்த செம்மற் காலை"[35] எனச் செயற்கரிய செயலைச் செய்து முடித்த காலமும் தலைமைத் தகுதி பெற்றுச் 'செம்மல்' எனப்பட்டது.

எனது வாழ்வு ஒருநாள் வாழ்வுதான். அவ்வொருநாளில் எடுத்த செயலை முடித்தேன்; அரிய தொழிலை நிறைவேற்றினேன். என்ன அரியதொழில்? பிறர்க்கென வாழ்வதே என்தொழில்.

---

33 சேந். தி : மரப்பெயர்
34 தொல் : பொருள் : 144 : 53
35 குறுந் ; 270 ; 5

என்னை எனக்காகவே பயன்படுத்திக்கொண்டேனா?

மணத்தை மற்றவர்க்குப் பரப்பி வழங்கினேன்.

எனது தேனை நானே பருகிச் சுவைத்தேனா?

வண்ணக்காட்சியால் கண்டோர் கண்களைக் குளிர்வித்தேன்;
உள்ளத்தை உவப்பித்தேன்.

சூடிக் கொடுத்தேனா? சூடக் கொடுத்தேன்.

நானே படைத்துக்கொண்டேனா? கடவுளர்க்குப் படைக்கக் கொடுத்தேன்.

உணவாய், மருந்தாய் ஒப்புரவாற்றினேன்.

இவற்றால் உள்ளம் செம்மாப்படைந்தேன்; செம்மல் ஆனேன். தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த பெரு வாழ்வால் தலைமைத் தகுதி பெற்றுச் செம்மல் ஆனேன். பழம் பூ ஆனாலும்,

நான் ஒரு செம்மல்.

செம்மலான நிலையில் நீ உன்னைப் 'பழம் பூ' என்கின்றாய்; அதற்குப் பிங்கல நிகண்டிலிருந்து சான்றும் காட்டுகின்றாய். ஆனால், நத்தத்தனார், "புதுப் பூஞ் செம்மல்" என்றுள்ளாரே —என்றொரு புலவரது மறுப்புக் குரலைக் கேட்கின்றேன்.

நத்தத்தனார் "புதுப் பூ" எனக் குறிப்பிடுவது நான் 'வீ' யாகக் கழன்று வீழ்ந்து செம்மலான நிலையில் அன்று. எத்தகைய புதுப் பூஞ் செம்மல் என்றுள்ளார்?

*"நறும்பொழில் குயில்குடைந்து உதிர்த்த*
*புதுப் பூஞ் செம்மல்"*[36]

அலராக இருந்த என்னைக் குயில் ஒன்று குடைந்து உதிர்த்துவிட்டது. இயல்பாக உதிரவில்லை; உதிர்க்கப்பட்டேன். உதிர்க்கும் போது என் பருவம் அலர். அந்நிலையில் நான் புதுப் பூ. உதிர்ந்து கீழே விழுந்த பின்னர்தானே செம்மல். அதனால், முன் நிலையில் புதுப் பூ எனப்பட்டேன். எனவே, செம்மல் என்றால் பழம் பூ தான்.

பழம் பூ நிலை இறப்புப் படுக்கை நிலை என்றாலும் எனது மணமூச்சு இன்றும் அடங்கிவிடவில்லை. பெருங்காயம்

---

36 சிறுபாண் : 5

இருந்த பாண்டமும் மணக்குமாம். அதில் குறைந்து விடுவேனா நான்?

''உதிர்ந்த செம்மல் மணம் கமழ்''[37] என்பது போன்று பல அடிகளிலும் நான் மணம் கமழ்கின்றேன்.

பழம் பூ நிலையிலும் எனக்கு எத்துணை காரணப் பெயர்கள்.

உதிர்ந்ததால் : உதிரல்;

காய்ந்து உடல் உணங்கியதாலும்,
பயன்படாமற் போகின்றோமே என
உள்ளம் காய்வதாலும் : உணங்கல் ;

உணங்கி உடல் வாடுவதாலும்,
அருந்தொழில் ஆற்ற இயலாமல்
உள்ளம் வாடுவதாலும் : வாடல்;

பிறர்நலம் பேணாது பிரிகின்றோமே
என உடலும் உள்ளமும் தேம்புவதால் : தேம்பல்;

''ஈதல் இயையாக்கடை சாதல் இனிது''என,
உடலும் உள்ளமும் சருகாகிக் கருகிச்
சாம்புவதால் : சாம்பல்

முடிசார்ந்த மன்னரும் முடிவில் ஒரு பிடி சாம்பல் ஆவர். நானும் சாம்பலோடு முடிகின்றேன்.

பருவங்கள் ஏழுக்குமேல் எட்டாவதாக அமைந்த இந்தச் 'செம்மல்' என்னும் இறப்பு நிலைக்கும் தொல்காப்பியம் இடம் வைத்துள்ளது. தொல்காப்பியத்தில் எட்டாவதாகவும் இறுதியாக வும் என் பெயர் அமைந்த இடம் உண்டு. ''பூவை நிலை'' எனும் தொடரில் என்பெயரைப் பொருத்திக்காட்டியுள்ளார். ''பூவைநிலை'' என்றால் தெய்வநிலை.மாந்தன் ''வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வம்''[38] ஆகின்றான். அது போல் நான் ஆற்றிய நிறைவாழ்வால் செம்ம லாகித் தெய்வமாகின்றேன். இஃதும் ஒரு நயம்.

மேலே கூறப்பட்ட 29 சொற்களும் எனது வாழ்வியல் வளர்ச்சியைச் சொல்லும் அடையாளச் சின்னங்களாக விளங்கு கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனியே ஒவ்வொரு

37 சிலம்பு : 7 : 39 38 : குறள்: 50

பொருளமைப்பைக் கொண்டிருப்பினும் இலக்கியங்கள் யாங்கணும் அவ்வப் பொருள்களில் மட்டுமே வழங்கப்பட்டன என்று குறிக்க முடியாது. பொதுவில் 'பூ' என என்னைக் குறிக்கும் நோக்கில் கையாளப்படும் சொற்களுமாகும்.

இவையன்றி தனிப்பூ, விடு பூ, சின்னப்பூ, எதிர்ப்பூ, தொடைப்பூ, கட்டுப்பூ– எனக் குறியீட்டுச் சொற்களாகப் பலவற்றையும் யான் பெற்றுள்ளேன்

எனது வாழ்வியற் பருவங்கள் ஏழையும் உங்களதுவாழ்வியற் பருவங்களாக நீங்கள் கொண்டதை நான் கூறிப் பெருமைப் பட்டுக்கொள்ளலாம். புலவர்கள் தாம் படைத்த இலக்கிய இலக்கணங்களில் எனது ஏழு பருவங்களுக்கேற்ப உங்களில் ஆண், பெண் ஆகிய இருபாலார்க்கும் தனித்தனியே பொருள் படுமாறு ஏழு, ஏழு பருவங்களைக் கொண்டனர். அவை எனது பருவப் பெயர்களோடு ஒப்புநோக்கத் தக்கவை:

பருவங்கள் ஏழு :

| நான் : | ஆண் : | பெண் : |
|---|---|---|
| நனை | பாலன் | பேதை |
| அரும்பு | மீளி | பெதும்பை |
| முகை | மறலோன் | மங்கை |
| போது | திறலோன் | மடந்தை |
| மலர் | காளை | அரிவை |
| அலர் | விடலை | தெரிவை |
| வீ | முதுமகன் | பேரிளம்பெண் |

மாந்தரில் ஆண், பெண் பருவங்களைக் குறிக்கும் இச் சொற்கள் யாவும் இலக்கியங்களில் காணப்படுகின்றன. ஆயினும், இவை படிப்படியான பருவ வளர்ச்சி அமைப்பில் முறைப்படுத்திக் காட்டப்படவில்லை. முற்காலத்து அவிநயம் என்னும் இலக்கண நூலும் இடைக்காலத்தில் எழுந்த பாட்டியல் நூல்களுமே முறைப் படுத்தி இலக்கணமாக்கின. அவற்றையொட்டி எழுந்த 'உலா' என்னும் இலக்கியம் இவற்றைப் படிப்படியாக வண்ணரித்து விளக்கியது.

சங்க நூலாகிய பரிபாடல்,

"*முதியர், இளையோர், முகைப்பருவத்தர்*" —என மூன்று பருவங்களைக் குறிக்கின்றது. இம்மூன்றனுள் இளையோர்

குழந்தைகள். முகைப்பருவத்தர் கட்டிளங்கன்னியர், காளையர் எனவே,

குழந்தைப் பருவம்,

இளமைப் பருவம்,

முதுமைப் பருவம் —என மூன்று பருவக் குறிப்புகள் முற்காலத்தில் கொள்ளப்பட்டவையாகத் தெரிகின்றன. இதனையே வடமொழியாளர் பால குமார விருத்தம் என்றனர்.

இம்முப்பருவ அமைப்பு எனக்கும் இயல்புடையதே எனலாம். வீழ்ந்துபோன 'வீ' என்னும் ஏழாவது பருவம் நீங்கலாக மற்றைய ஆறு பருவங்களும் வளமான வாழ்வியல் பருவங்கள் அன்றோ?

இவ் ஆறு பருவங்களையும் ஒன்றுக்கொன்று அதிகம் வேறுபாடு இல்லாதவை என்ற வகையில் நோக்கினால்,

நனை, அரும்பின் தோற்றக்கூறு. நனைக்கும் அரும்பிற்கும் சிறிதளவே வேறுபாடு. இலக்கியங்கள் 'நனை' என்பதற்கு 'அரும்பு' என்றே பொருள் தருகின்றன.

முகை போதின் முதற்கூறு. இரண்டும் அதிகம் வேறுபாடு அற்றவை.

அலர் மலரின் மதர்ப்பு.

இவ்வகையில்,

| | | |
|---|---|---|
| நனை — அரும்பு | : | குழந்தைப் பருவம் |
| முகை — போது | : | இளமைப் பருவம் |
| மலர் — அலர் | : | முதுமைப் பருவம் |

—என அமையும்.

இதனை அறிவிப்பார் போன்று திருவள்ளுவப் பெருந்தகை,

"*காலை அரும்பி,*

*பகலெல்லாம் போது ஆகி,*

*மாலை மலரும்*"[39] —என்றார். காமநோயின் பிறப்பு, வளர்ச்சி, முதிர்ச்சியைக் காட்ட எழுந்த இக்குறள், நான் குழந்தை அரும்பாக, இளமைப் போதாக, முதுமை மலராக முப்பருவங் கொள்வதைக் காட்டுகின்றது.

---

39 குறள் ; 1227.

சிறுவாய் மலர்ந்த "பூவோபூ" பாடலில் எனது இயற்பெயர் அமைந்துள்ள இடங்கள் ஏழு என்னும் எண்ணிக்கை, எனது ஏழு பருவங்களின் அறிவிப்பு போன்றுள்ளது.

## உறுப்புகள் ஏழு

இந்த ஏழு எண்ணிக்கைகொண்டு மற்றொரு ஏழு அமைப்பையும் நான் கூறவேண்டும். எனது உறுப்புகள் ஏழு அவை:

1. காம்பு 2. புல்லி 3. அல்லி 4. சூலகம் 5. மகரம் 6. தாது 7. தேன்.

தற்காலச் செடியறிவியல் நூலார் இவ்வுறுப்புகளைக் கண்டறிந்து பெயர் வகுத்துள்ளனர். ஆனால், பண்டைத் தமிழ் நூல்களில் இவ்வுறுப்புகளைக் குறிக்கும் சொல்லமைப்புகள் உள்ளன. அவை தமிழ்ச்சான்றோரது செடியியல் அறிவைப் புலப்படுத்துகின்றன. அவற்றை முறையாகச் சொல்வேன்:

காம்பு என்பது என்னை ஏந்தி நிற்கும் உறுப்பு. இது கால்போன்று ஊன்றி நிற்பதால் 'கால்' எனப்படும். "அனிச்சப் பூ கால் களையாள்"[40]—எனத் திருக்குறள் காட்டுகின்றது. இக்காம்பை எனது இனவேறுபாட்டிற்கு ஏற்ப, தாள், தண்டு எனவும் குறிப்பர். "காம்பு வேய் மலர்த்தாள்"[41] —எனும் சூடாமணி நிகண்டு கொண்டு இதனை அறியலாம்.

புல்லி என்பது புற இதழ். புல்லுதல் – தழுவுதல், அணைத்தல். என்னை அணைத்து மூடி இருப்பது புல்லி. வெயில், மழைகளிலிருந்து என்னைப் பாது காக்கும் காப்பு உறுப்பு. இது மெருகில்லாமல் சுரசுரப்பாக இருக்கும். பெரும்பகுதி பசுமை நிறமானது. நிகண்டுகள் இதனை, 'புல்லி புறவிதழ்'[42] எனப் புல்லியாகக் குறிக்கும்.

---

40 குறள்: 1115

41 சூடா. நி : மரப்பெயர் : மகர வெதுகை : 4 : 4.

42 பிங். நி : 2815.

அல்லி என்பது அக இதழ். வண்ணமும் மென்மையும் கொண்ட எழில் மிக்க கவர்ச்சி உறுப்பு. இஃதே என்னைக் காட்சிப்படுத்துகிறது. "பூவின் உள்வாய் அல்லிமேல் உறைவானும்"[43] என்றும், "அல்லி அகவிதழ்"[44] என்றும் காணலாம். இரண்டையும் சேர்த்து "அல்லியே அகவிதழ்ப்பேர் அறைந்திடும் புறவிதழ்ப்பேர் புல்லியே"[45] என்றும் பெயர்கள் குறிக்கப்படும்.

சூலகம் என்பது எனது இனப்பெருக்கத்திற்குக் கருக் கொள்ளும் பெண் உறுப்பு. இதனைத் தமிழ் நூல்கள் 'பொகுட்டு' என்று காட்டும். பொகுட்டு என்பதற்கு வித்து என்று பொருள். கருவை ஏற்று விதையை உண்டாக்குவதால் இப்பெயர் பெற்றது. கருக்கொள்ளும் பக்குவம் பெற்றது என்னும் பொருளில் 'கன்னிகை' என்றொரு பெயரும் இதற்குண்டு. "பொகுட்டே கன்னிகை பூவினுள் கொட்டை"[46] எனச்சேந்தன் திவாகரம் காட்டுகின்றது.

மகரம் என்பது கருவை ஏற்றும் விந்துள்ள ஆண் உறுப்பு. மகரம் என்பதற்கு மங்கலான சிவப்பு என்றொரு பொருள் உண்டு. இவ்வுறுப்பு பெரும்பாலும் இந் நிறத்தது. ஆகையால் இப்பெயர் பெற்றது.

தாது என்பது மகரத்தின் நுனியில்–இறுதியில் ஒட்டி நிற்பது, இது கருக்கலப்பிற்கு உரிய தூள். இதனை மகரம் + அந்தம் = மகரந்தம் என வடமொழிக் கலப்போடு வழங்குவர் "புதுமலர் கோங்கின் பொன்னெனத் தாது ஊழ்ப்ப"[47] என்றபடி இது பொன்னிறமான தூள். இஃது என்னிடமிருந்து சிதறிப் பரவிப் பிற தாதுக்களுடன் சேர்ந்து கருக்கலப்பை உண்டாக்கும். இது மகரந்தத் துடன் ஒட்டி நிற்பதாயினும் தனிச் செயலுக்குரியதாகை யால் தனி உறுப்பாகும்- எனினும் இதனையும் கூட்டியே "கோசரம் மகரம் சிதரே கொங்கு, கேசரம் துணரிணர் கிளர் மலர்த் தாதே"[48] என நிகண்டுகள் பெயர்ப் பட்டியலிடுகின்றன.

43 ஞான. தே.
44 பிங். நி : 2841.
45 சூடா. நி: மரப்பெயர்: 51.
46 சேந். தி : மரப்.
47 கலி: 33 : 12.
48 பிங். நி : 2809,

தேன்-இஃது எனது சுவையுள்ள உறுப்பு 'நறை, நறா, கள், மட்டு, தேறல்'எனும் பல நிலைப் பெயர்களைப் பெறும். இஃது எனது புகழ் உறுப்பு எனலாம்.

இவ்வேழு உறுப்புகளும் நிறைவாக அமைந்தால் என்னை 'நிறைபூ' என்பர். ஒன்றிரண்டு குறைந்தால் 'குறை பூ' என்பர். உங்களிலும் உறுப்புக் குறையுடையோர் உளரன்றோ!

இக்குறைகளைக்கொண்டு என்னில் பால் பகுப்பு அமைகின்றது. என்னில் ஆண்பால் உண்டு; பெண்பால் உண்டு; அலியும் உண்டு; மலடும் உண்டு. ஆண் உறுப்பாகிய மகரம் இல்லாத நான் பெண். சூலகமாம் பெண் உறுப்பில்லாத நான் ஆண். இரண்டும் இல்லாத நான் அலி. தாது இல்லாத நான் மலடு. இக்கருத்து இக்கால அறிவியலாரும் வகுத்தது.

தமிழ் நூல்கள் இப்பாகுபாட்டை மரத்தின்மேல் ஏற்றி,

*"அகம் காழ்த்திட்டது ஆண்மரம், புறக்காழ் பெண்மரம்*
*விதியுள் இவ்விரண்டும் இல்லா வெளிறு அலியும் ஆகும்"*[49]
—என்றனர்.

இவ் ஏழு உறுப்புகளில் காம்பும் புல்லியும் எனக்கு உணவூட்டித் தாங்கியும், ஊறு வராமல் காத்தும் உதவும் செவிலியர் ஆவர். உங்களில் தொண்டால் நாடு காப்போரையும், உழைப்பால் உயர்த்துவோரையும் தாழ்வாக அன்றோகருதுகின்றீர்கள்! அந்த வாடைக் காற்றை என் மேலும் வீச விட்டனர். என்னைக் காத்த புல்லியை எனக்கு ஒரு குறைபாடாகவும் —என் களங்கமாகவும் குறித்தனர்.

நெல்லின் உள்ளே பிடித்த பாலை, அருமணியான அரிசியாக உருவாக்க உதவிய காப்புக் கைகளை 'உமி' என்று ஊதி விடுவீர்கள் அன்றோ? நெல்லுக்கு உமி ஒரு குறையாம். இத்தொடர்பில் எனது புற இதழாகிய புல்லியும் குறையாம், புல்லிக்குப் 'புன்மை' என்னும் தாழ்வாக்கும் அடைமொழியைக் கொடுத்துப் "புல்லிதழ்" என்றனர். புல்லிதழ் ஆக்கி,

*"நெல்லுக்கு உமியுண்டு; நீருக்கு நுரையுண்டு;*
*புல்லிதழ் பூவிற்கும் உண்டு"*— என்று,
*"நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை*
*அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்"*[50] என நல்லவர்

49 தடா: நி: மரப்பெயர் 57. 50 நாலடி : 221.

அல்லாதவர்க்கு ஒப்பாக்கினர். இதனினும் ஒருபடி மேலேபோய், புன்மக்களுக்கு உவமையாக்கி,

*"நாறாத் தகடே (புறஇதழ்) போல்நன்மலர்மேல்பொற்பாவாய்*
*நீறாய் நிலத்து விளிவரோ?—வேறாய்*
*புன்மக்கள் பக்கம் புகுவாய்; நீ பொன்போலும்*
*நன்மக்கள் பக்கம் துறந்து"*[51] —எனப் பாடினர். என் உறுப்பு

ஒன்றைத் தாழ்த்துவது என்னையே தாழ்த்துவதாகும்.

இவை கிடக்க, ஏழு எண்ணிக்கைகொண்டு எனது உறுப்பு வரலாற்றை இவ்வகையில் நிறைவேற்றிக்கொள்கின்றேன்.

சிறுவாய் மலர்ந்த பாடலின் ஒருசொற்கொண்டும் அச்சொல்லின் அடுக்குகொண்டும் எனது பெயரையும் பருவங்களையும் உறுப்புகளையும் விளக்க முடிந்தது. இப்பாடலின் முதல் தொடர் எனது வரலாற்றின் இரண்டாவது படலத்திற்குத் தலைப்பு ஆகின்றது. ஆம், 'பூவோ பூ'. இத்தொடர் எனது குணத் தன்மைகளின் மாணிக்கச் சுருக்கம்.

## குணம் பத்து.

நாட்டுப் பாடலைப் பாடிய சிறு குழந்தையின் உள்ளத்தில் என்னைக் கண்டதும் ஒரு வியப்பு அரும்பியது போலும். அந்த வியப்பின் வெடிப்பாக,

"பூவோ பூ"— என்று தன்னையும் அறியாமல் முழக்கியது. ஆம், நான் வியப்பான உணர்வை எழுப்பும் தன்மைகளைப் பெற்றுள்ளேன். 'பணம் பத்தும் பண்ணும்' என்பர். நான் குணம் பத்தும் கொண்டுள்ளேன்.

**1. மணம்—உயிர்**

குணங்களிலும் மணம் எனது உயிர். மணம் இன்றேல் நான் பிணம். நான் பிணம் அன்று என்பதைமணம் தான் உரைத்துக்கொண்டுள்ளது. 'ஆம், அப்படித்தான்' என்று சொல்வது போன்று,

---

51 நாலடி : 266.

"*நாற்றம் உரைக்கும் மலர் உண்மை*"[52]—என நான்மணிக் கடிகை சான்று கூறுகின்றது. உயிர் இல்லாத உடல் மகிழ்ச்சியையோ இன்பத்தையோ தராது. மணம் இல்லாத நானும் துன்பம் என்பதை,

"*நறிய மலர் பெரிதும் நாறாமை இன்னா*"[53] —என இன்னா நாற்பது சுட்டிக் காட்டுகின்றது. இந்நூலே,

"*நாற்றம் இல்லாத மலரின் அழகு இன்னா*"[54]— என்று என்னதான் நான் அழகோடு இருந்தாலும் 'மணம் இன்றேல் இன்னா தரும் பிணம்' என்கின்றது.

மணம் இல்லாத என்னால் பயனே இல்லை என்பதைத் திருவள்ளுவர் "*இணர் ஊழ்த்து நாறா மலர் அனையர்*"[55]என உரைவன்மை அற்றவர்க்கு உவமை காட்டுவதன் வாயிலாக விளக்கினார்.

எனது அழகோடு வண்ணத்தையும் சேர்த்துப் பார்த்த துறவி புத்தர் மோந்து பார்த்தார். மணம் இல்லை போலக் கண்டார்.

"அழகும் நல்ல வண்ணமும் கொண்ட மலர் மணமற்று
இருப்பின் பயன்படாது. இதுபோன்று சொன்னவண்ணம்
நடவாதவனுடைய பேச்சும் பயன்படுவதில்லை"[56]

—என்று பேசினார். மணம் இன்றேல் நான் உயிரில்லாத உடல் போலப் பயனிலேன்.

"*உடலும் உயிரும் போல்*" என்று வாழ்த்தும் தொடர்பிலேயே "*பூவும் மணமும் போல்*" என்பதையும் கேட்டிருப்பீர்கள். இத்தொடர்பிலும் நான் உடலாகவும் மணம் உயிராகவும் அமைந்துள்ளோம்.

அருக தேவன் திருவடிகளில் எனது இனத்துத் தமக்கையாம் தாமரை படைக்கப்பட்டாள். அவள் தனது காணிக்கையாக மணத்தை வெளியிட்டாள். அதனை,

---

52 நான். க: 48.
53 இன். நா : 37;
54 ,, 37 : 7.
55 குறள் : 650
56 தம். ப : 55.

"*முருகு உயிர்த்திடும்*"[57] என, 'மணம் மூச்சு விடும்'—என்பதாகப் பழம்பெரும் இசைநூல் ஒன்று இசைக்கின்றது.

சைவப் பெரியார் மாணிக்கவாசகர்,

"*உற்ற ஆக்கையின் உறுபொருள்*
*நறுமலர் எழுதரு நாற்றம்போல்*"[58]—என உடலுக்கு என்னையும், உயிருக்கு மணத்தையும் உவமையாக்கினார்.

உலகில் ஒவ்வொரு பொருளுக்கும் சிலச்சில குணங்கள் உள்ளன. ஆயினும், அததற்கும் தனித் தனித் தன்மையான இயல்பு ஒவ்வொன்று உண்டு.

நீருக்குத் தண்மை,
நெருப்புக்கு வெம்மை.

இவ்வாறு உலகப் பொருள்கள் யாவும் ஒவ்வொன்றைப் பெற்றுள்ளன. இவற்றை நூல்கள் பலவும் வாய்விட்டுப் பாடுகின்றன. ஒருவாய் திறந்து கடுவன் இளவெயினனார்,

"*தீயினுள் தெறல் நீ; பூவினுள் நாற்றம் நீ*"[59]—எனத் திருமாலைப் போற்றியுள்ளார். *அவர் வாயே இதனை மாற்றிப்* போட்டு,

"*நின் நாற்றமும் ஒண்மையும் பூவை உள*"[60]—என்றது.

கம்பர் பிரகலாதன் வாயைத் திறந்து *மணத்தை எனது* உள்ளீடாகக் காட்டி,

"*மலரினுள் வெறியும்,*

"*எள்ளில் எண்ணெயும் மற்றும் கேளாய்*"—[61] எனப் பேசவைத்தார். இவ்வாறே இறைவனை,

"*பூவுற்ற நாற்றம்போல் நின்றார் தாமே*"[62]
"*பூவின் நாற்றம்போன் றுயர்ந்தெங்கும்*
*ஒழிவற நிறைந்து*"[63]

---

57 சிலப்பு : அடியார்க்குநல்லார் எடுத்துக்காட்டு
58 திருவா : அதிசயப் பத்து.
59 பரி : 8 : 68.
60 பரி : 4 :29,
61 கம்ப. : இரணியன் வதை: 120,
62 அப். தே. : ஆலங்காடு: 4
63 திருவா : திருவண்டம்: 115.

*"பூவினுள் நாற்றமும் போன்றுளன் எம்மிறை"*[64]
*"அல்லிமலர் விரை ஒத்தான்"*[65]

—என்றெல்லாம் இறையடியார்கள் என்னோடு ஒன்றிய உயிர்த் தன்மையை மணம் என்று பாடியுள்ளனர். மணம் ஒன்றியதால் நான் இறைவனுக்கே ஈடாக்கப்பட்டேன்.

ஒரு கட்டழகி, மணத்துடன் விரிந்த செங்கழுநீர்ப் பூவைக் கூந்தலோடு சேர்த்துத் திருகிச் செருகினாள். செருகிய தோற்றம் ஒரு கவர்ச்சிப் பொலிவாகக் காண்போரை உலுக்கியது. ஒரு காளையர் கூட்டம் பார்த்துச் சொக்கி நின்றது. ஒருவன் 'ஐயோ! மணமலரோடு என் உயிரையும் அன்றோ கூந்தலில் செருகுகின்றாள்' என்று ஓலமிட்டான். இதைக் கண்டுகொண்டிருந்த சயங்கொண்டார் என்னும் புலவர்,

*"முருகின் சிவந்த கழுநீரும்*
*முதிரா இளைஞர் ஆருயிரும்*
*திருகிச் செருகும் குழல்மடவீர்,*
*செம்பொற் கபாடம் திறமினோ"* [66]

—எனப் பாடினார்.

பாரதி, தானே காதலனாகிக் கொள்கின்றான். கண்ணனைக் காதலியாக முன்னே நிறுத்துகின்றான். தனக்கும் அவளுக்கும் உள்ள இணைப்பை,

*"வீசுகமழ் நீ எனக்கு*
*விரியுமலர் நானுக்கு"* [67]

— எனப் பாடுகின்றான். அவனே காதலியாக மாறுகின்றான் :

*"மணம் விரும்பவில்லை – சகியே*
*மலர் பிடிக்கவில்லை"* [68]

— என்னும் காதல் பேச்சில் நானும் மணமும் ஒன்றித்துப் பேசப்படுவது போன்றே காதலால் முகிழ்ந்த குழந்தையை,

---

64 திருமந் : 2639.
65 திருவாய் : அந்தாமம்
66 கலிங். ப : கடைதிறப்பு : 30.
67 கண்ணம்மா என் காதலி : 5.
68 கண்ணன் என் காதலன் : 3.

*"கரும்பு ரசமே — என் கசக்காத முக்கனியே!*
*அரும்பா மலர்மணமே அறுமுகனே கண்வளராய்"* [69]
—என அன்னை தாலாட்டுகின்றாள்.

தவழ்ந்து வரும் தென்றல்,
*"ஒளிர் நறு மலரின் ஊடே*
*மணத்தினை உண்டு* [70] வருவதைப் பாவேந்தர் பாரதி தாசனார் பார்த்தார். இவர் பார்த்த தென்றல், பாரதியார் பார்வையில்,

*"நறுமலரின் கமழைத் தென்றல்*
*பொன்னங்க மணிமடவார் மாடமீது*
*புலவிசெயும் போழ்தினிலே போந்து வீசு"* [71] கிறது

கீதையின் ஆசிரியன்,

*"மலர் விரிந்து மணத்தைக் காற்று எடுத்துப்போவது*
*போன்று, உயிர் உடல் எடுக்கும்போதும் விடும்போதும்*
*பொறிகளைப் பற்றிக் கொண்டு போகின்றான்"* [72] என்றான்.

உயிரோடு ஓட்டிக் காற்றுக்கு மணமேற்றுகின்றான். இது தத்துவ மணம். இதுபோன்று மற்றொரு தத்துவம் :

செய்யப்பட்ட வினை வெளிப்படும் முன் ஏற்படும் முன்னறி விப்பை "ஏது நிகழ்ச்சி" என்று புத்த மதம் குறிக்கும். இதன்படி மணிமேகலைக்கு ஓர் ஏது நிகழ்ச்சி எதிர்வந்தது. எப்படி?

*"மாமலர் நாற்றம் போல்மணி மேகலைக்கு*
*ஏது நிகழ்ச்சி எதிர்ந்துளது"* [73]

உள்ளத்தைச் சுற்றிவிடும் தத்துவத்தின் மணம் உலா வருவதைக் காட்டினேன். எண்ணத்தை ஊடறுத்து இன்பம் ஊட்டுவது இசை. காதுவழி இனிமை வழங்குவது இசை. அதனை மூக்காலும் நுகரச் செய்வது எனது மணம். இசைத் தமிழ் ஏழு உறுப்புகளைக் கொண்டது. ஒவ்வொரு உறுப்பிற்கும்

---

69 நாட்டுத் தாலாட்டு
70 அழ. சி : தென்றல் 8.
71 பாஞ். ச : 17
72 பக. கீ. அத். 15 : 8.
73 மணி : மலர்வனம் : 3–4.

எனது ஒவ்வொரு மணமும் பின்வருமாறு உரியதாகின்றது. இப்படிச் சொல்வதைவிட ஒவ்வோர் இசையும் எனது ஒவ்வொரு மணத்தைப் பெற்றுக் கமழ்கின்றது என்று சொல்ல வேண்டும். குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பவை இசை உறுப்புகள். இவற்றில் குரல் என்னும் இசை மௌவலால் மணக்கும்; துத்தம் முல்லை மணத்தைப்பெறும்; கைக்கிளை கடம்பு மணம் வீசும்; உழையில் வஞ்சியை மோக்கலாம்; இளிக்கு நெய்தல் மணம் ஏறும்; விளரிக்கு வீரையின் மணம் ஒன்றும்; தாரத்தில் புன்னைமனம் இழையும், [74]

இவ்வாறெல்லாம் தமிழ் நூல்கள் யாவும் எனது மணத்தை உயிராகக் காட்டுகின்றன. மணத்தைக் குறிக்கும் சொற்கள் யாவற்றையும் எனக்கு அடைமொழியாக்கி,

*"கமழ் புதுப் பூ", "கடிமலர்", "நறுமலர்", "விரைமலர்", "மண மௌவல்"* —என்றெல்லாம் பாடுகின்றன.

இவை பாடுவதால் மணம் எனது உயிராகிவிடவில்லை. மணம் எனது உயிர் என்பது சான்றோர்களால் குறித்துக் காட்டப்பட்டுப் போற்றப்படும் ஒன்று என்பதற்கே இவற்றை எல்லாம் எடுத்துப் பேசினேன்.

எம்மில் எந்த ஒன்றும் மணமில்லாதது என்றில்லை. கொடி முந்திரி, பழத்தால் இனிக்கும். அதனில் பூக்கும் நான்,

*"திராட்சைக் கொடிகளும் பூத்து*
*மணம் வீசிடுகின்றனவே"*[75]—என விவிலிய நூல் குறிப்பிடும் பாங்கு பெற்றுள்ளேன்.

மணம் எனது உயிரென்றால் எனது உடல் முழுதும் நிறைந்திருக்க வேண்டுமன்றோ? இது கண்காணும் உண்மை என்பதோடு மூக்கு காணும் உண்மையுமாகும். எனது இதழ் மணக்கும்; அல்லித் தண்டு மணக்கும்; தாது மணக்கும்; சூலகம் மணக்கும்; மகரம் மணக்கும்; என்னிலிருந்து வழியும் தேனும் மணக்கும். என்னோடு சேர்ந்த நாரும் மணக்கும்; நீரும் மணக்கும்.[76]

---

74 *"மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி,*
*நெய்தல், வீரை, புன்னையும் இசைமணம்"— சேந்: தி: ஒலி*

75 *விவி : சாலமோன் இசைப்பாடல்கள் : 2 : 13.*

76 *"ஒண்ணிறப் பாதிரிப்பூ சேர்தலால் புத்தோடு*
*தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு" —நாலடி : 139*

'ஆ! எவ்வளவு இனியவை' —என்று கேட்டோர் வியக்கும் வண்ணம் எனக்கமைந்த இனிய தன்மைகளைக் கேளீர் :

எனது உயிரான மணத்துடன்

மென்மை,
வண்ணம்,
தூய்மை,
தன்மை,
சுவை,
ஒளி,
எழில்,
கவர்ச்சி,
மங்கலம் —ஆகிய இவை பத்தும் எனது தன்மை முத்திரைகள்.

**2. மென்மை நாடி**

மணத்தை அடுத்த எனது இயல்புத் தன்மை மென்மை. மணம் உயிர் என்றால்மென்மை எனது நாடி எனலாம்,

மாந்தருள் ஆடவர் வன்மையின் உருவம். மகளிர் மென்மையின் வடிவம். மகளிரது மென்மையை இலக்கியங்கள் எவ்வாறு பேசுகின்றன? மென்கூந்தல், மெல்லிதழ், மென்றோள், மென்கை, மெல்லிடை, மெல்லடி என ஒவ்வொரு உறுப்பையும் மென்மை அடைமொழியுடன் வண்ணிக்கின்றன. எல்லாவற்றையும் கூட்டி "*அம் மெல் ஆகம்*"[77] என்றும் "*சிறு மெல் ஆகம்*"[78] என்றும் கூறப்படுவதால் மகளிரது மென்மை அவர்தம் உடல் மென்மை என்பதை அறியலாம்.

அவ்வுடலின் மென்மையைத் தெளிவுபடுத்த என்னை அடைமொழியாக்கினர். "*மென் பூ மேனி*"[79] என மணிமேகலை சுட்டிக்காட்டுகின்றது. ஆம், மகளிரது உடலின் மென்மையை அளவிடும் அளவுகோலாக எனது மென்மைதான் கொள்ளப் பட்டது.

77 குறு : 159 : 8
78 குறு : 280 : 8
79 மணி : 29 ; 84

எனது இனத்துக்கே மென்மை உரியதுதான். அதனிலும் எனது இனத்தில் மென்மையின் தனிச்சின்னம் அனிச்சப்பூ. புலவர்கள் இதனைச் சுட்டியே பெண்ணின் மென்மையை அளவிட்டனர். என்னை ஏன் அளவுகோலாகக் கொண்டனர்? பரிமேலழகர் விடை தருகின்றார்:

*"உலகத்தார் மென்மைக்கு எடுக்கப்பட்ட*
*அனிச்சப் பூவும் அன்னப்புள்ளின் சிறகும்"*80 —என

விளக்கினார். அவர் இவ்வாறு விளக்க வாய்ப்பு நல்கித் திருவள்ளுவர்,

*"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்*
*அடிக்கு நெருஞ்சிப் பழம்"*80 —என அனிச்சத்தின்

மென்மையை உயர்த்தினார். 'உன்னை மட்டும் உயர்த்தவில்லை. அன்னத்தின் தூவியையும் கூறியுள்ளார். உனக்கு மட்டும் எவ்வாறு உயர்வாகும்?' —என நீங்கள் வினவுவதை உணர்கின்றேன். அன்னத்தின் சிறகு எனது அனிச்சத்திற்கு அடுத்ததாகத்தான் மென்மையில் அமையும். அன்னத்தின் தூவி மோந்தால் வாடாது; கசங்காது. அனிச்சம் மோப்பக் குழையும். இதனை உளத்துக் கொண்டுதான் திருவள்ளுவர் என்னை முதலில் அமைத்தார். தென்றற்காற்று மோதினாலும் ஓரேபொழுதில் அனிச்சம் குழைந்து வாடிவிடும். அன்னத்தின் தூவியோ காதலர் இரவெல்லாம் தன் மேலே படுத்துப் புரண்ட பின்னரே கசங்கும். இதுகொண்டும் எனது அனிச்சத்தின் மென்மையை முதலாவதாகக் கொள்ள வேண்டும். முதலாவதாக மட்டுமன்று, தனிச்சிறப்புடனும் குறிக்கத் தகும் மென்மையானது. இதனால்தான், திருவள்ளுவர்,

*"நன்னீரை வாழி அனிச்சமே"* —என வாழ்த்துடன் அழைத்து
*"நின்னினும் மென்னீரள் யாம்வீழ் பவள்"*81 —என அதன்

தனி மென்மையைப் புலப்படுத்தினார்.

இக்குறளில் 'மென்னீரள்' என்றது 'மென்மையான தன்மையுடையவள்' என்னும் பொருளது. இவ்வாறு தன்மையைக் குறித்ததால் உடல் மென்மை மட்டுமன்று, தன்மையின் மென்மைக்கும் நானே சான்றாகின்றேன்.

---

80 குறள் : 1120 உரை 82 குறள் : 1111
81 குறள் :1120

எனது மென்மைக்கு மற்றுமொரு முத்திரை :

இதுவரை கண்டவைபோன்று உடல் மென்மைக்கும் தன்மை மென்மைக்கும் மட்டுமல்லாமல் உணர்வு மென்மையும் எனது மென்மையால் புலப்படுத்தப்படும்.

'காமம்' என்னுஞ் சொல் இக்காலத்தில் 'காதல் வெறி' என வன்மையுடையது போன்று வழக்காகியுள்ளது. ஆனால், உணர்வு களில் மெல்லியது காம உணர்வு. திருவள்ளுவர் 'மெல்லிது காமம்' என்றார். எந்த அளவு மெல்லிது என்று அளவிட்டார்:

"*மலரினும் மெல்லியது காமம்*"[83] -என மென்மையான காம உணர்விற்கு எனது மென்மையைக் காட்டியது எனது மென்மைக்கு மங்களம் பாடியதாகும்.

மென்மை எனக்கே உரியது என்பதன் காரணம் யாது? பரிமேலழகர் விடை தருகின்றார் :

"*தொட்ட துணையானே மணச்செவ்வி*
*அழிவதால் மலர் எல்லாவற்றினும்*
*மெல்லிது*"[84]

ஒரு முணகல் கேட்கிறது :

'இலக்கியங்கள் "நின்னினும் மென்னீரள்" "மலரினும் மெல்லிது" என்றெல்லாம் உனது மென்மையைவிட மேம்பட்ட மென்மையாகக் குறிப்பதால் நீ அவற்றினும் குறைவுதான்' -என்னும் முணகல் அது.

மேலே காணப்பட்ட இலக்கியப் பேச்சுகள் யாவும் தோழி யும் தலைவனும் தலைவிமேல் கொண்ட அன்புப் பெருக்காலும் காதல் கொப்பளிப்பாலும் அவளை உயர்த்திப் பேசும் ஆர்வ மொழிகள். உணர்வுப் பேச்சுகளால் உண்மையைத் திரையிடுதல் இயல்பு. ஆனால், உவமையாக உயர்ந்ததையே சொல்லுவர்.

"*உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை*"[85] என்றார் தொல்காப்பியர். எனவே, அளவுகோலாகவும் அதற்கேற்ற உவமை

83 *குறள்:* 1289 84 *குறள்:* 1289 *உரை* 85 *தொல்:* உவமவியல் 3

யாகவும் நானே காட்டப்படுவதால் இயற்கையில் மென்மை எனது பிறப்புரிமை என்பதை உணரவேண்டும்.

அஃது என்ன பிறப்புரிமை? எனது பிறப்பு முதல் இறப்பு வரை என்னுடன் இணைந்து நிற்பது மென்மை. பிறவற்றின் மென்மை இடம் மாறலாம்; தடம் பிறழலாம். எனது தோற்ற நிலை முதல் ஈற்று நிலை வரை ஒவ்வொரு வளர்ச்சி நிலையிலும் மென்மை என்னுடன் ஒட்டி இழைந்து நிற்பது. இதனைக் காட்டும் இலக்கிய அடுக்கு இதோ :

"மீன்கண்டன்ன மெல் அரும்பு ஊழ்த்த"[86]

| | |
|---|---|
| "மென் முகை" | — குறுந்தொகை 254. |
| "மென் பொகுட்டு" | — பரிபாடல் : 11 |
| "மெல் இதழ்" | — நற்றிணை : 18. |
| "மென் தோடு" | — நற்றிணை 400 |
| "மென் மலர்" | — கலித்தொகை : 103. |
| "மென்பதப் புது வீ" | — அகநானூறு : 74. |
| "மென்பூஞ் செம்மல்" | — மதுரைக் காஞ்சி : 685. |
| "மென் பூ வாகை" | — அகநானூறு : 136. |
| "நன்னர் மெல் இணர்" | — மலைபடுகடாம் : 428. |

மென்மையிலும் நொய்மை 'துய்' எனப்படும். பஞ்சினும் மென்மை 'துய்' என்பது. இந்தத் 'துய்'யும் எனக்குரியது. காண்க :

| | |
|---|---|
| "துய்ம் மலர் உதிர" | — குறுந்தொகை : 110. |
| "துய் வீ வாகை" | — பதிற்றுப்பத்து : 43. |

யாவற்றிற்கும் மேலாக எனது மென்மைக்கு மணிமுடி இறைவனால் கிடைக்கின்றது. இறைவன் எட்டு குணங்களின் கூட்டு உருவகம். அதனால் "எண் குணத்தான்" எனப்பட்டான். எண் குணங்களுள் ஒன்று மென்மைத் தன்மை. அம்மென்மையான எனது இதழ்களின்மேல் அடிவைத்து நடப்பதால் :

"மலர்மிசை ஏகினான் மாணடி" — (குறள் : 3)

---

86 அகம்; 10 : 2

"மாமலர் மேய சோதி" — (திருவா : திருவார்த்தை : 1)

"பூ மிசை நடந்தான்" — (சூடா. நி : 17) –என இறைவன் என்னால் பெயர் பெற்றான். இறைவனே தனது மென்மையைக் காட்ட எனது மென்மை குலையாமல் நடந்து காட்டவேண்டி யுள்ளமை குறிக்கத்தக்கது.

எனது மணம் போன்று நின்ற இறைவன்,
மென்மை போன்று நடந்து,
அடுத்து,
எனது தன்மையாம் வண்ணத்திற்கு வருகின்றான்.

**3. வண்ணம்–சின்னம்**

"அரும்பின் வண்ணமும் ஆவர் ஐயாறனாரே"[87] –என அப்பர் சிவனை என் நிறமாகவே பாடினரர். சேக்கிழார் "பூ வண்ணத்தர்"[88] என்றார். எனது வண்ண மானவர்கள் "வண்ண மா மலர்கொடு வானவர் வழிபட"[89] அருள்செய்தனர்.

"பறவாப் பூவைப் பூவினோயே"[90] எனத் திருமாலைக் கடுவன் இளவெயினனார் பாட அதற்குப் "பூ என்னும் பெயர் நிறத்தின்மேல் ஆகுபெயராய் நின்றது" எனப் பரிமேலழகர் விளக்கந் தந்து எனது நிறத்தன்மையை நாட்டினார்.

"பூ அன்ன கண்ணாள்", "மலரன்ன கண்ணாள்" "இவள்கண் பலர் காணும் பூ ஒக்கும்"[91] என்றெல்லாம் திருக்குறள் மகளிர் கண்ணுக்கு என்னைக் கூறி வண்ணிப்பானேன்? இஃதோ ஒரு நெஞ்சந் தோய்ந்த உரையாடல் விடை தருகின்றது:

காதலன் : நெஞ்சமே! மலர்களைக் கண்டு ஏன்மயங்கினாய் ?
நெஞ்சம் : மலர்கள் நம் காதலியின் கண்களை ஒத்திருக் கின்றன. அதனால் மயக்கம் வந்தது.
கா : உன் மயக்கம் தவறான பார்வையால் நேர்ந்தது.
நெ : எப்படி?
கா : எப்படியா...? அது வந்து......–தடுமாறிய காதலனுக் காக மணக்குடவர் குரல் கொடுக்கின்றார்:

87 அப். தே ; திருவையாற்றுப் பதிகம்.
88 பெரி. பு : தடுத்தாட்கொண்டபுராணம்
89 ஞா. தே.
90 பரி : 3 : 78.
91 குறள்: 1805; 1142; 1112.

"*கண் பூவினது நிறம் ஒக்குமாயினும் குணம் ஒவ்வாது*"[92] –இதனைக் கேட்டு மயங்கிய நெஞ்சமும் நயங்கிவிட்டது. மகளிரது கண்ணழகை எனது வண்ணங்கொண்டே ஒப்பிட்டுப் பேசுவர்; சிறப்பிப்பர். கண்ணழகு எனது வண்ண அழகு. கலக்கத்தால் கண்கள் கவின் இழக்கும். அழகிழந்த கண்ணும் "*மாமலர் இழந்த கண்ணும்*"[93] என என்னைக் கொண்டே அறிவிக்கப்படும்.

நான் உலக வண்ணங்களின் சின்னமாவேன். பூ என்ற எனது சொல்லுக்கே[94] நிறம் என்றொரு பொருள் கொண்டனர். என் நிற வேறுபாடுகள்தாம் இயற்கைக்கு எழிற்கோலமிடுகின்றன,

எனது நிற வேறுபாடுகளுக்கும் 'பூவோ பூ' பாடலில் அடையாளம் உள்ளது. அதிற்பேசப்படும் பூக்கள் வண்ண வேறுபாட்டுப் பூக்களாக உள்ளன:

| | |
|---|---|
| கண்ணிக்குத் தாழம் பூ (செந்தாழை) | — சிவப்பு. |
| கொண்டைக்குத் தாழை (வெண்டாழை) | — வெண்மை |
| ஆவாரம் பூ | — மஞ்சள் |
| அத்திப் பூ | — நீலம் |
| புளியம் பூ | — இரு நிறம்.. |

உள்ள பூக்களை ஒரு முறைப்படுத்தியுள்ளேன். ஆம் சிவப்பு எனது முதன்மை வண்ணம். வெண்மையும் மஞ்சளும் நீலமும் சிவப்புபோல் எனது மூலவண்ணங்கள். மற்று உலகில் உள்ள இளஞ்சிவப்பு, கருநீலம் முதலிய யாவும் மேல் வண்ணங்களின் கலவைப் பிறவிகள். இனக்கலப்பில் தோன்றும் நிற வேறுபாடுகள்பற்றி என்னைப் பேசவைக்கும் ஆசிரியர் முன்னரே[95] குறித்துள்ளதை நீங்கள் நினைவிற்கொள்ளலாம்.

மற்றொரு குறிப்பிடத்தக்க நிறமாகிய பச்சையை நான் ஒரு காரணத்திற்காக விடுத்துள்ளேன். எனக்கு முன்னமைந்தவளாம்

---

92 குறள் : 1112 உரை

93 அகம் : 197 . 1

94 "பூசம் சாந்தும் கலையும் மணியும்
பூவுறு நிறம் எனப் பாத்தனர் கொளலே.
—இலக்கண விளக்கம்; 512

95 இலக்கியம் ஒரு பூக்காடு : பக்கம் 11,12.

இலைக்கெனவே அவ்வண்ணத்தை விட்டுக்கொடுத்துள்ளேன். அறிவியலிலும் இது பொருத்தமானதாகும். என்னில் சில இனம், இளம்பசுமை இதழ்களைக் காட்டும். அவைகளும் தோற்ற அரும்பு நிலையில் இருக்கும்போது பசுமை நிறங்காட்டிப் பின்னர் தமக்குரிய நிறங்களில் மாறிவிடும். ஆனால், புற இதழ்கள் பச்சை நிறத்தில் தோற்றமளிக்கும். இதுகொண்டும் இலக்கியங்களில்,

*"கமுகின் பாளையம் பசும் பூ"* [96]

*"பசுமலர்ச் சுணங்கு"* [97] எனக் காணலாம். மேலும் வளமான பூ என்னும் பொருளிலும் 'பசுமை' அடைமொழியாக்கப்படும். என்னில் பச்சை நிறம் இல்லாததால் மணந்தரும் பச்சிலைகளாகிய துளசி, வில்வம் முதலியவற்றை என்னோடு சேர்த்தனர்; இவற்றைப் 'படலைப் பூ' என்றனர்.

என்னில் கருப்பு வண்ணம்இல்லை. அக்குறையைப்போக்கக் கருநீல வண்ணத்தைக் கருமையாகவேகுறித்துப் பேசினர். நொச்சி கழிமுள்ளி முதலிய மலர்கள் கருநீலத்தவை. அவற்றைக் கருமையாகக்கொண்டு, *"மணிதுணர்ந்தன்ன மாக்குரல் நொச்சி"* [98]

*"கருங்குரல் நொச்சி"* [99] *"கருநனைக் காயா"* [100]

என்றனர்.

எனது வண்ணங்களில் செம்மைமுதன்மையானதுஎன்றேன். பல்வகை உணர்வுகளுக்கும் இந்நிறமே கொண்ட பூக்கள் குறிக்கப்படும் இச்செம்மையிலும் எத்துணை வகைகள்? ஒன்பான் மணிகளில் மாணிக்கம் ஒன்று. இதுசிவப்பு வண்ணத்தது. இச்சிவப்புள்ளும் பலவகை மாணிக்கம் உண்டு. அவை, சாதுரங்கம், குருவிந்தம், சௌகந்தி, கோவாங்கு எனப்படும். இவற்றின் சிவப்பு வேறுபாட்டை எனது சிவப்பு கொண்டே குறிப்பர்.

| | |
|---|---|
| தாமரை, செங்கழுநீர், மாதுளம்பூச் | செம்மை — சாதுரங்கம் |
| திலகம், கவிரமலர், | செம்மை — குருவிந்தம் |
| செவ்வலரி, இலவமலர் | செம்மை — சௌகந்தி |
| குராமலர் | செம்மை— கோவாங்கு [101] |

எனக் கல்லாடம் விளக்குகின்றது. பிற நூல்களிலும் தனித்தனியே

96 பெரும்பாண் : 7.
97 ஐங் : 367.
98 புறம் : 271.
99 புறம் : 272.
100 சிறுபாண் : 165
101 கல் : 98 : 31 - 39

இப்பகுப்பு காட்டப்படும். செம்மலர்கள் கார்காலத்திற்கேற்றவை. மகளிர் சூற்பருவத்தில் செவ்வணி கொள்ளச் சிவப்பு மலரைக் கொள்வர். இவ்வாறு எனது செம்மை நிறம் ஒருதனிப்பாங்குடையது. அடுத்துப் பொன்மை நிறமாம் மஞ்சள் நிறம் எனது மெருகு வண்ணம். மங்கல நிகழ்ச்சிகளுக்கும் வழிபாட்டுக்கும் மருந்து வகைக்கும் சிறப்பாகக் கொள்ளப்படும். வெண்மை தூய்மைக்கும், நேர்மைக்கும் புகழுக்கும் கொள்ளப்படும். நீலம் அழகுக்கும் கவர்ச்சிக்கும் கொள்ளப்படும் வண்ணம்; துயரத்திலும் நிற்கும்.

என்னில் ஓர் இனமே நான்கு ஐந்து வண்ணங்களைப் பெற்றுள்ளது.

அல்லி எனும் ஆம்பல் சிவப்பு (அரக்காம்பல்), இளஞ்சிவப்பு (செங்கழுநீர்), வெண்மை (வெள்ளாம்பல்), நீலம் (குவளை) என நான்கு நிறங்களில் அமைந்து வெவ்வேறு பெயர் பெறும். ஒரு பெயரிலே ஐந்துவண்ணங்கொண்டது குறிஞ்சி. இது ஐவண்ணக் குறிஞ்சி எனப்படும். பவளக்குறிஞ்சி செம்மை; பெருங்குறிஞ்சி வெண்மை; வாடாக்குறிஞ்சி–செந்நீலம்; மழை வண்ணக் குறிஞ்சி – நீலம்; பொன்வண்ணக் குறிஞ்சி–மஞ்சள் என[102] நிகண்டுகள் புகுத்து தனித்தனிப் பெயரையும் வழங்கியுள்ளன.

எனது நிறங்களைக் கண்டு சுவைத்தவர்களும் உளர். தொழுதவர்களும் உளர். போற்றியவர்களும் உளர் தாம் படைத்துக் கொண்ட கடவுளர் உடல் வண்ணங்களுக்குப் பொருத்தி மகிழ்ந்தோர் பலர்.

சிவப்பு: "செச்சைமாமலர் புரையும்மேனி"[103] –சிவபெருமான்
"செங்காந்தள் ஒக்கும் நின்நிறம்"[104] – முருகன்
"மாதுளம்பூ நிறத்தாளை"[105] – அபிராமி

நீலம்: "திருநிறமாய்க் கருங்குவளை"[106]
"காயாம்பூ வண்ணன்"[107] – திருமால்
"காயா மலர் மேனி"—[108] கொற்றவை

வெண்மை: வெண்கடப்பம் பூ[109] – பலராமன்

கருநீலம்: காஞ்சி[109] – மன்மதன்

---

102 பிங். நி, 2696 — 2700
103 திருவா : திருச்சதகம் : 29
104 தொல் ; சொல்; 292 சேந்நாவரையர் மேற்கொள்பாடல்.
105 அபி . 1
106 திருவாய். பெரி: மாதவத்தோன்: 3.
107 கூர்மம்: இ. அவதாரம்
108 சிலம்பு :வேட்டுவவரி: 12: 4
109 கலி : 26 : 1—8

இவ்வாறு தாம் கண்ட நிறம் கொண்டு காணாத கடவு ளர்க்கு நிறம் படைத்தனர். மலர்கள் பலவற்றையும் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப் பாட்டு தொகுத்துத்தொடுத்த மாலையை "வண்ண வண்ணத்த மலராய்பு விரைஇ" 110 என்று வண்ணங்கூட்டியே முடித்தது.

பல வண்ணங்கள் அடுக்கிய காட்சி வானத்து வான வில்லின் வண்ண அடுக்குக்கு உவமையாகி,

"பொருகடல் வண்ணன் புனை மார்பில் தார்போல்

திருவில்விலங்கூன்றித் தீம்பெயல் தாழ" 111 -என எனது வண்ணத்தால் காட்டப்படும்.

ஒரு பெண் பல வண்ண மலர்களால் மாலை தொடுத்தாள். அது விற்பதற்காகக் கட்டப்பட்டது. கட்டி முடித்து நிறைவேற்றுப் பார்வை இட்டாள். சில மலர்கள் குறைபாடாகநின்றன. அவற்றைக் களைந்து போட்டாள். அவையும் பல. சோழனது உறையூரில் காலைப்பொழுது. விற்பனைக்காகப் பலவண்ண மலர்களால் மாலை கட்டுகின்றனர். ஆயிரக்கணக்கான மாலைகள். கட்டி முடித்தபின் நிறைவேற்றுகின்றனர். பிசிராயுள்ள பூக்களையெல்லாம் கிள்ளிக் களைகின்றனர். களைந்துஎறிந்த பூக்களும் பல வண்ணத் தவையாய்ப் பரந்து கிடக்கின்றன. இக்காட்சியை முத்தொள்ளா யிரம் எழுதும் ஆசிரியர் பார்க்கின்றார். சொல்மாலை கட்டுகின்றார்:

"மாலை விலைபகர்வார் கிள்ளி எறிந்தபூச்

சால மருவியதோர் தன்மைத்தால் – காலையே

விற்பயில் வானகம் போலுமே, வெல்வேலான்

பொற்பார் உறந்தை யகம்" 112

வண்ணமலர்களின் சிதறல் வானவில்லாய்த் தோற்றியது. வானவில்லைப் பெற்றதால் உறையூர் மண்ணகம் விண்ணகம் ஆயிற்று. எனது நிறம் விண்ணையும் மண்ணுக்குக் கொணர்ந்தது.

இதுமட்டுமா! மண்ணிலும் எத்துணையோ விந்தை செய்ய வல்லது எனது வண்ணம்.

---

110 குறி. பா: 114 112 முத் : 21.
111 கார். நா: 1

ஒரு கடற்கரை. அலைநீர் மோதுகின்றது.

வெண்டாமரை பூத்தது; வெண்மை நிறமாக அன்று; அன்னமாகப் பூத்தது.

செருந்தி பூத்தது; மஞ்சள் நிறமாக அன்று; பொன்னோ என மருட்டியது.

கழிமுள்ளிபூத்தது; நீலமாகஅன்று; ஒளி மணியைக்கழற்றியது.

புன்னை பூத்தது; வெண்மையாகவா? முத்தைப் பரப்பியது.[113]

இது நத்தத்தனார் பார்வை.

மகிழ்ச்சியால் முகம் மலர்ந்தால் செந்தாமரை நிறம். கவலையால் கருகினால் கருங்குவளை நிறம். செவ்வரி படர்ந்த கண்ணிற்குச் சேதாம்பல் நிறம். உடலின் பொன்னிறப் பொலிவிற்குக் கோங்க மலர் நிறம். பிரிவுத் துயரால் படர்ந்த மாமைக்குப் பீர்க்கம்பூ நிறம். இவ்வாறு உறுப்புகளும் உணர்வுகளும் கூட எனது நிறங்கொண்டே விளங்கும்.

இவற்றால் எனக்கு "வண்ணத்தும்மலர்", "வண்ண மாமலர்" "நன்னிறமலர்", "புது நிற மலர்" என்னும் பட்டங்கள் உண்டு. எனவே,

நான் வண்ணங்களின் கிண்ணம்;
வண்ணமோ எனது சின்னம்;
நானோ உலக வண்ணங்களின் சின்னம்.

எனது குணங்கள் பத்தில் பிற குணங்களும் இவை போன்றே விரிவாகக் கூறத்தக்கனவே. அவற்றையும் விரிவாக்கி எனது வரலாற்றைக் கேட்கும் உங்களது உணர்வு சலிப்படிக்க வைக்க விரும்பவில்லை.

எனது குணங்கள் யாவற்றிற்கும் அடுக்கடுக்காகச் சான்று கூற என் முன்னே பெரும் புலவர்களைக்கொண்ட பேரணி ஒன்றே தெரிகின்றது. அவர்கள் யாவரையும் பேசவைக்க இயலாமைக்குப் பொறுத்தாற்றுமாறு அவர்களது தாள் பணிந்து வேண்டிக்கொண்டு எனது பிற தன்மைகளைப் பேசுகின்றேன்.

---

113 சிறுபாண்: 146 - 149

**4. தூய்மை துணை**

"கையாலே பூவெடுத்தாக்
காம்பழுகிப் போகுமென்று
விரலாலே பூவெடுத்தா
வேரழுகிப் போகுமென்று
பொன்னூசி கொண்டு
பூத்த மலரெடுத்து
வெள்ளி ஊசி கொண்டு
வெடித்த மலரெடுத்து"[114]

எனக் கை பட்டால் காம்பழுகும், வேர்முகும் என்றால் என் தூய்மை எத்தகையது என்பதை உணரலாம். பொன்னூசியும் வெள்ளி ஊசியும் எனது தூய மேன்மையைக் காட்டுகின்றன.

அரும்பை யாவரும் விரும்புவர். மணம் கருதி மட்டுமன்று. காற்றுபட்டுத் தூய்மை கலையாத நிலை; வண்டு எச்சிலாக்காத பருவம். முற்காலத் தமிழர் அரும்புகளைக்கொண்டே மாலை யாக்கி அணிவர். எனது தூய்மை கருதியே இறைவனுக்குரிய பொருள்களில் நான் முதன்மை பெற்றேன்.

ஒரு பட்டத்தரசியின் மூக்கைச் செருத்துணையார் என்னும் தொண்டரும் அவளது கையைக் கணவன் கழற்சிங்க மன்னனும் அரிந்ததும் வெட்டியதும் ஏன்? வழிபாட்டிற்குரிய பூவை எடுத்தும் மோந்தும் அதன் தூய்மை போக்கிய குற்றத்திற்காக அன்றோ?[115]

ஒருவர் வைகறைப் போதில் நீராடிச் செல்கின்றார். வாயைத் துணியாலே மூடிக் கட்டிக்கொண்டுள்ளார். அவர் அறுவை மருத்துவத்திற்குச் செல்லும் மருத்துவர் அல்லர். எறிபத்தர் என்னும் அடியார். வாய்க்காற்று பட்டால் வழிபாட்டு மலரின் தூய்மை கெடுமென்று,

"வைகறை உணர்ந்து போந்து
புனல் மூழ்கி வாயும் கட்டி"ப்[116] போனாராம். மலராகிக்

---

114 நாட்டுப்பாடல்

115 ... ... ... .. ...ஆரூர் மணிக்கு வைத்த
போதினைத்தான் மோக்க, தேவிதன் மூக்கை அரியப் பொற்கை
காதிவைத் தன்றோ அரிவதென் றாங்கவள் கைதடிந்தான்,
நாதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே!
—திருத்தொண்டர் திருவந்தாதி : 64

116 பெரி. பு. 4: எறிபத்தர்: 9

கீழே விழுமுன்- வண்டுகள் வாய்வைக்காமுன் பறிக்கவேண்டு மென்றே அடியார் முந்துவர்.

பூவிருக்கப் பச்சிலையை வழிபாட்டிற்குக் கொண்டதற்குத் தாயுமானவர்,

*''எச்சிலென்று பூவை இகழ்ந்தோர்க்கு உனைப்போற்றப்*

*பச்சிலையும் கிள்ளப் படுமோ பராபரமே''*[117] -என்று பூ, வண்டின் எச்சிலால் தூய்மையிழப்பதையும் அதனால் இகழ்ச்சி யடைவதையும் சுட்டிக் காட்டினார். எச்சிலால் இகழ்ச்சி அடையாத என் தூய்மை புகழ்ச்சிக்குரியது அன்றோ ?

இவற்றையெல்லாம் கொண்டே சான்றோர் பலரும் என்னைத் ''தூமலர் வாடும்'', ''தூயமாமலர்'', ''தூமலர் மாலை'' —என்றெல்லாம் போற்றினர்.

## 5. தன்மைத் தகுதி

என்னைக் காண்பதே கண்ணிற்குக் குளிர்ச்சி. கண்ணில் ஒற்றினால் தண்ணென்றிருப்பேன். கண்ணின் வெப்பந் தணிக்கஎன்னை ஒற்றிக்கொள்வர். கண் வெப்பம் என்ன ? உடல் வெப்பத்திற்கும் எனது தண்மை நலந்தரும்.

பத்துத் திங்கள் வயிற்றுள் கிடந்து குழந்தையை ஈன்ற தாயின் அடிவயிறு வெப்பத்தில் நிற்கும். அப்படி ஒரு அரிவை கட்டிலில் கிடக்கின்றாள். அரிவையின் அத்தான் பக்கத்தில் அமர்ந்துள்ளான். கையில் ஒரு குவளை மலர். அதனால் அவளது அடிவயிற்றில் ஒற்றி ஒற்றி எடுக்கின்றான். அக்குளிர்ச்சியில் -தண்ணிய இன்பத்தை அவள் கண்மூடிச் சுவைக்கின்றாள். அவன் பின்னொரு நாள் நினைவுப் படுத்தி பேசுகின்றான் :

*''துஞ்சுதி யோமெல் அஞ்சில் ஓதி எனப்*

*பன்மாண் அகட்டில் (அடிவயிற்றில்) குவளை ஒற்றி*

*உள்ளினென்''*[118] -என்று குவளைப்பூவின் குளிர் நலத்தைச் சொல்லாமல் சொல்லிக் காட்டினான்.

---

117 தாயு. பா : பராபரக்கண்ணி : 92

118 நற் : 370

உள்ளங் கவர்ந்தவளை அணைத்த ஒருவன் அவளது உடலின் தண்மைக்கு என்னைக்காட்டி,

"பொய்கைப் பூவின் நறுந் தண்ணியளே"[119] என்றான். குன்றின் பல மலர்களைப் பாவேந்தர்,

"குளிர் மலர், மணியின் குப்பை"[120] என்றார். அவர் வாழைப் பூவையும், "குளிர் வாழைப்பூக் கொப்பூழ் போன்ற"[121] என்பார். நீங்கள் வெறுக்கும் எருக்கம் பூவையும் அப்பர் "நறுந்தண் எருக்கு"[122] என்றார்.

பாரதக் கதையில் திருதராட்டிரன் பிறவிக் குருடன். அவன் மலரைக் காணாதவன். கண்ணனுடைய கண்ணை யாவரும், தாமரைக்கண் என்பர். இவன் கண்டானா என்ன? அதனால் கண்ணன் கண்ணைக் 'குவளைக் கண்' என்று பேச வைக்கின்றார் பாரதியார். அவன் என்றோ ஒருநாளாவது கண்ணனைத் தழுவிய போது அக்கண்களின் குளிர்ச்சியில் பட்டிருப்பான் போலக்கொண்டு பாரதி,

"சீதக் (தண்ணிய) குவளை விழியினான்"[123] என்று பேசவைத்துள்ளார். விழிகளின் அருள் குளிராகின்றது.

"குளிரி"[124] என்றொரு மலர் குளிராலேயே பெயர் பெற்றது.

எனது உள்ளீட்டுத் தன்மையில் வெப்பம் உண்டு. அவ் வெப்பம் கடுநோயைத் தீர்க்கும். ஆனாலும், அவ்வெப்ப மலரையும் ஓற்றிப் பார்த்தால் குளிர்ந்து காட்டும்.

நளிர், நளி என்னும் தண்மைப் பொருள் தரும் சொற்களை யும் கூட்டி என்னை இலக்கியங்கள், 'நளிர் மலர்', 'நளிமலர்', 'நளிமுகை' 'தண்போது', 'தாமரைத் தண் தாது' 'தண்ணறுங் கழுநீர்', 'தண்டார்', 'நறுந்தண் மாலையர்' -என்றெல்லாம் குளிர்விக்கின்றன.

---

119 ஐங் : 97
120 அழ. சி : குன்றம் : 2
121 குழந்தைப் பாடல்
122 அப். தே
123 பாஞ். ச : 81
124 குளிரி — நீர்ச்சேம்புப் பூ

**6. சுவைச் சுனை**

சுவை என்றால் இனிப்பும், இனிப்பென்றால் தேனும், தேனென்றால் நானும் நினைவில் வருவோம். தேன் எனது ஊன் உருக்கிய ஊற்றுக் கண்ணின் சுரப்புநீர். அதன் இனிப்பில்தான் எத்துணை வகை! நீரியமாக ஊறிச் சாறாகும்போது நொய்தான இனிப்பு. அதற்கு 'நறை – நறா' என்று பெயர். சாறுதடிக்கும் நிலையில் 'மட்டு – மது' என்று பெயர். இது இனிப்பின் அளவுகோல். சாறு நெய்ப்பு பிடிப்பது கள். இது முற்றிய இனிப்பு. நெய்ப்பாக (எண்ணெய்ப் பசையாக) நிறைவது தேன். இதனால் இது தேன் நெய் '*தேநெய்*'[125] எனப்படும்.

பேராசிரியர் தம் தொல்காப்பிய உரையில் (நூற்பா 582 உரை) "*தேனெய்யினை நாவின்பொறி உணர்ந்தவழி*" எனத் 'தேன் நெய்' எனக் குறித்துள்ளார்.

தேன் மதர்த்த இனிப்பு. வெளியே தொகுக்கப்பட்டு நாட்படாதது 'தேறல்'. இது இனிப்பின் முதிர்ப்பு. நாட்பட்ட தேறலில் புளிப்பும் தோன்றும்.

தேறலில்,

"*தேனுக்கு இன்சுவை நிகழ்ந்த காலத்தே*
*புளிச்சுவை நிகழுமாறு போல*"[126] –என நச்சினார்க்கினியர்

விளக்குவது போன்று இனிப்போடு புளிப்பும் தோன்றும். இக்கலப்புச் சுவையான தேறலில் ஒரு துளியை நாக்கிலிட்டால் 'தேள் கொட்டிக் கடுப்பது போன்று'[127] –'சுர்' என்று தாக்கும்.

"*பாம்பு வெகுண்டன்ன தேறல்*" — (சிறுபாண் : 237) *அரவு வெகுண்டன்ன தேறலொடு*"(புறம் 376:14) என்பன போன்று பாம்பு சினந்து தாக்குவது போலக் கடுமையான தாக்குதலாக இத்தேறலின் சுவை இருக்கும். இச்சுவை உடலில் இயற்கைக்கு மாற்றான தினவை உண்டாக்கி நலத்தைக் கலைப்பதால் இச்சுவை இன்னா தரும். ஆகையால்,

---

125 "*தேனெய்யொடு கிழங்கு மாறியோர்*
*மீனெய்யொடு நறவு மறுகவும்*"—பொருந்: 214, 215
"*தேனெய் போன்றினிய சொல்லால்*"—*சீவ. சி:* 1055

126 *சீவ. சி:* 2382 உரை.

127 "தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்"-புறம் 292 :16

*"தேனெய்ப் புளிப்பிற் சுவை இன்னா"*[128] -என்றனர்.

என்னில் இனிப்புச் சுவை என்னிடம் ஊறும் தேனில் மட்டுமன்று நானே இனிப்பேன். "ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப் பூ சருக்கரை" என்னும் பழமொழியை அறிவீர்களே! ஆம், இலுப்பைப் பூ இனிப்பானது. அறுசுவைகளில் பிறவற்றில் புளிப்பைப் புளியம் பூவில் சுவைக்கலாம். வேப்பம்பூவில் கசப்பைக் காணலாம். மகிழம் பூ துவர்க்கும். துவர்ப்புச் சுவைகொண்ட இலவம் பூவிற்குத் 'துவரி' என்றே பெயர். மிளகுப் பூ காரம் காட்டும். உப்பங்கழி நிலத்தில் தோன்றும் தண்டுபோன்ற பூடு ஒன்று உவர்ப்பை வழங்கும்.

நாச்சுவை ஆறுக்கும் நான் நிற்பது போன்று செவிச்சுவை ஒன்பதிற்கும் என்னைக் கொள்வர். ஒரு சான்று சொல்வேன்: இராமன் அயோத்தி நகரை நீங்கியபோது,

*"அன்றலர்ந்த பூவும் அழுதவாம்."*[129] -கம்பர் என்னை அவலச் சுவையில் காட்டுகின்றார்.

சுவைத்தேனிலிருந்து என்னைப் பிரிக்காமல், "தேனப்பூ" என்றும் "தேனணி மலர்" என்றும், "துவர்ப் பூ" என்றும், "சுவைப் பூ" என்றும் புலவர் பெருமக்கள் சொல்லிச் சுவைத்தனர்.

**7 ஒளி-சிறப்பு**

எனது வண்ணங்கள் மெருகேறிப் பள பளப்பதே எனது ஒளி. அஃது எனக்கொரு சிறப்பு. அச்சிறப்பு என்னால் மறக்க முடியாததுதான். அதனால்தான்,

*"தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்*
*சிறப்பை மறந்துவிட்ட பூவும்*
*இந்த வையம் முழுதும் இல்லை"*[130]

—என்று கண்ணனைக் காதலித்த பாரதியார் பாடினார். அவரே அவனைக் காதலியாக்கிக் காணும் போதும் அவளது புன்னகையை,

---

128 இன்னா நா : 23
129 கம்ப. : நகர்நீங்கு படலம் ; 102.
130 கண். பா. 14 : 5.

*"சோலை மலர் ஒளியோ—உனது*

*சுந்தரப் புன்னகைதான்"*[131] – என்கின்றான். தனது உடலுக்கு ஒளி வேண்டுமாம். எத்தகைய ஒளி?

*"சுடர்*

*நாளைக் (கதிரவனைக்) கண்டதோர் மலர்போல்–ஒளி"*[132] –யாம்.

ஒரு வெள்ளை நிறக்காளை. உடலில் ஆங்காங்கே பளபளக்கும் ஒளியுடைய சிவப்பு மறைகள். அது எத்தகைய சிவப்பு நிறம்? ஒளிவிடும் சிவப்பு. எத்தகைய ஒளி?

*"ஒருகுழை யவன் மார்பில் ஒண்தார் போல் ஒளிமிகப்*

*பொருவறப் பொருந்திய செம்மறு"*[133]

இவ்வாறாக, "ஒண் பூ", "ஒள் வீ", "ஒள்ளிணர்", "ஒள்ளிதழ்" "ஒண்காந்தள்", "ஒண் கைதை" என எனது ஒளி சிறக்கிறது. ஒளியால் நான் சிறக்கின்றேன்.

**8. எழில்-கூத்து**

*"பூக்கள்*

*இன்றெல்லாம் பார்த்திட்டாலும்*

*தெவிட்டாத எழிலின் கூத்தே"*[134]

–என்று ஒருநாள் முழுதும் பார்த்தும் தெவிட்டா உணர்வில் பாவேந்தர் என்னழகைக் கூத்தாகக் கண்டார். முற்காலத்துக் குன்றம் பூதனார்,

*"ஏர் ததும்புவன பூ அணி செறிவு"*[135] –என அழகு ததும்புவதைக் கண்டார்.

*"மலரினில் நீலவானில் மாதரார் முகத்திலெல்லாம்*

*இலகிய அழகை ஈசன் இயற்றினான்"*[136] –எனப் பாரதியார் இறைவன் படைப்பாகக் கொண்டார். இவர் எனது அழகோடு மாதரார் முகத்தையும் இணைத்துக் கண்டதை,

---

131 *க. பா : 16 : 2.*
132 *பா. பா. யோகசித்தி. 6:*
133 *கலி : 105 : 11.*
134 *அழ. சி: செந்தாமரை : 10*
135 *பரி : 18: 30*
136 *பா பா.: இரவிவர்மா : 2*

"பூவின் அன்ன நலம்"[137]-எனப் பாண்டிய மன்னன் அறிவுடைநம்பி, மாதர் அழகை, என்னைக்காட்டிச் சிறப்பித்தான். மகளிர் கண்கள் அழகுபெற்றாலும் அழகை இழந்தாலும்,

"பூக்கவின் கொண்ட புகழ்சால் எழில் உண்கண்"[138] என்றும்

"பூ எழில் இழந்த கண்"[139] என்றும் நானே அளவுகோல் ஆவேன். இத்தன்மைகளால்தான் என்னைக் குறிக்கும் 'பூ'என்னும் சொல்லுக்கு அழகு என்றே பொருள்[140] அமைத்தனர். அழகைக் குறிக்க எத்துணைச் சொற்கள் உள்ளனவோ அத்துணைச் சொற்களையும் எனக்கு அடைமொழியாக்கியே பேசுவர்.

சிறுவாய் மலர்ந்த "பூவோ பூ" பாடலை நினைவு கூர்ந்தால் 'புளி அம் பூ', 'தாழம் பூ' 'ஆவாரம் பூ' என எல்லாம் அழகைக் குறிக்கும் 'அம்' அடைமொழியுடன் திகழ்கின்றன. அத்திப் பூ மட்டும் 'அம்' பெறவில்லை. அது வெளியே காட்சிகொடுக்காத குடத்து விளக்கு.

## 9. கவர்ச்சிக் கன்னி

அழகு ஒரு தன்மை. அதன் செயல் கவர்ச்சி. தன்னைக் காணவைத்து, வைத்த கண்ணை எடுக்க விடாமல் அழகுவலை போடுவது கவர்ச்சி. கன்னியரின் கண்களுக்கும் இக்கவர்ச்சி உண்டு. பாரதியார் இதனைக் "காந்தங்கள்" என்பார். அக்காந்தமாம் கவர்ச்சியை, "மலர் விழிக் காந்தங்கள்"[141] என்று பாட்டெழுதி, அதற்குக் "காந்தத்திற்குரிய கவர்ச்சித் தொழில் செய்துகொண்டிருக்கும் விழிகள்" என்று உரையும் வகுத்தார். "மலர் கண்டு மையாத்த"- மயங்கிய - நெஞ்சைத் திருவள்ளுவர் காட்டக் கண்டோம்.

ஆனாய நாயனார் சிவன் சூடிய கொன்றையைக் கண்டு உளம் உருகினாராம். அதனை விளக்கும் போது திரு. வி. க. அவர்கள் "கார்காலக் கொன்றையின் மலர்ந்த காட்சி பொதுவாக எல்லார் நெஞ்சையும் கவரும் ஆற்றல் வாய்ந்தது" என்றார்.

---

137 நற் : 15 : 4
138 கலி : 28 : 18
139 கலி : 131 :4
140 பிங். நி ; 3875
141 பாஞ். ச ; 18 : 4

வைத்த கண் வாங்காமல் பார்க்க வைப்பது மட்டுமன்று வைத்தகாலை எடுக்கவிடாமல் தடுத்து நிறுத்துவது கவர்ச்சியின் தனி நிலை. இவ்வாறு தடுப்பதைத் "தகைத்தல்" என்பர். இச் செயலை நான் செய்வதால் எனக்குத் "தகைமலர்"[142] என்றொரு தனிச்சிறப்பு கொடுக்கப்பட்டது.

**10. மங்கல மணிமுடி** நான் ஒரு மங்கலப் பொருள். மங்கலப் பொருள்கள் பல உள. ஆனாலும் நான் இல்லையேல் மங்கலம் நிறையாது. நான் மட்டுமிருந்து பிற பொருள்கள் இல்லாது போனாலும் மங்கலம் நிறைவேறிவிடும்.

*நன்னூல்* ஆசிரியரைக் கேட்டுப் பார்ப்பீர்: "மங்கலமாகி" என்றுதான் என்னைபற்றித் தொடங்குவார்.

"மங்கலமாகி
இன்றியமையாது
யாவரும் மகிழ்ந்து மேற்கொள்(ள்)ள
மெல்கி"

*"பொழுதில் முகமலர்வு உடையது பூவே"*[143] —என்று

படிப்படியான ஏற்றத்தோடு கூறுவார். நான் மங்கலமாவேன். அதனால் இன்றியமையாத பொருள் ஆவேன். அதனால் யாவரும் என்னை மேற்கொண்டு மகிழ்வர். மகிழ்ச்சிக்குரிய மென்மை காட்டு வேன், பொழுது தவறாது மலர்வேன். முகமலர்ச்சியோடு மலர் வேன். எனவே மங்கலத்தில் நிறைவான பொருள் நான்.

பொருளால் மட்டும் மங்கலம் அன்று. என்னைப்பற்றிய சொல்லாலும் மங்கலமாவேன். மங்கலங் கூட்டுவேன். எந்த நூலை யும் எழுதத் துவங்கும் போது மங்கலச் சொல்லோடு துவங்க வேண்டும் என்பது ஒரு முறை. அம்மங்கலச் சொற்களில் எனது 'பூ, மலர்' என்னும் சொற்கள் இடம்பெற்றுள்ளன.

*"சீர் எழுத்து பொன் பூ திருமணி நீர்*
................................................
................................................
*மங்கலமாம் சொல்லின் வகை"* (வச்சனந்தி மாலை)

---

142 "தகைமலர் உண்கண்புதைத்துவந் ததுவே" -நற்: 380 : 11.
143 நன் : பொதுப்பாயிரம் : 80.

இவ்வாறு நூலுக்கு மங்கலந் தந்து மகிழ்கின்றேன். எனது தன்மைகளில் மங்கலம் எனது மணிமுடி.

வியப்பு உணர்வில் வெடித்த 'பூவோ பூ' தொடரைக கொண்டு வியப்பிற்குரிய தன்மைகள் பத்தைப் படைத்தேன். கேட்ட நீங்களும் வியப்பு உணர்வைப் பெறலாம். எனது குணங்கள் இவ்வாறிருக்க மாந்தர் குணங்களைக் கருத்திற்கொண்டு எனது குணங்கள் எட்டு என்பர். 1. கொல்லாமை, 2. ஐம்பொறியடக்கல், 3. பொறை, 4. அருள், 5. அறிவு, 6. வாய்மை, 7. தவம், 8. அன்பு என்பவை எனது குணங்கள் எனத்தொகையகரமுதலிகள் காட்டும். நான் அமைந்த ஓர் இடத்தை வைத்தே எனது தன்மைகள் பல விரிக்கப்பட்டது ஒன்றை இங்கே நான் குறித்துக்காட்ட வேண்டும்.

"காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்" (குறள்: 1114) என்றபடி நான் கண்டால் நாணங்கொள்ளுமாறு கண் பெற்றிருந்தாள் ஒரு தலைவி. தலைவன் பிரிவால் கண் வேறு பட்டது. அதனால் அக்கண் என்னைக்காண நாணங்கொண்டதைத் திருவள்ளுவர் "நறுமலர் நாணின கண்"144 என்றார். இதற்கு உரை வகுத்தவர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தன்மையைக் காட்டி னர். மலரின் ஒளிக்கு நாணின என்றார்பரிமேலழகர். மணத்திற்கு நாணின என்றார் மணக்குடவர். 'அழகுக்கு நாணின' என்றனர் பரிப்பெருமாளும் காலிங்கரும். 'கள் நீருக்கு நாணின' என்றார் பரிதியார். எனக்குரிய தன்மைகள் இவ்வாறெல்லாம் அவரவர் காண இடந்தந்தன. இஃதும் ஒரு வியப்பே.

அப்பாடலில் அடுத்துப் 'புளியம்பூ' வருகின்றது. தொடர்ந்து தாழை, அத்தி, ஆவிரை உள்ளன. இவ்வமைப்பை என்னினத்தில் உள்ள பலவகை வேறுபாடுகளின் குறிப்பாகக் கொள்ளலாம். அவற்றுள் முதன்மையானது எனது குடும்ப வகை.

## நான்கு வகைக் குடும்பம்.

நான் புளியாக மரத்தின் கிளையில் பூப்பேன். ஆவிரையில் பல வகை உண்டு. பொன்னாவிரையாகச் செடியின் கிளையில் பூப்பேன். நிலப்பாகல் என்னும் கொடிஆவிரையாகக் கொடியிலும்

144. குறள்: 1231 உரைகள்.

பூப்பேன். (சங்கத்து அகர முதலியில் நிலப்பாகல் கொடியாகக் கூறப்படும்) நிலவாகை என்னும் புதர் ஆவிரையாக நிலத்தில் பூப்பேன். தாழையாக நீர்த்தண்டில் பூப்பேன்.

இவ்வாறாக இங்குக் காட்டப்பட்டுள்ள என்னினத்தாரைக் கொண்டே நான்,

1. மரத்தின், செடியின்
   கிளையில் – கோட்டில் கோட்டுப் பூ.
2. கொடியில் கொடிப் பூ.
3. நிலத்தின் குத்துக் குத்தான
   புதரில் நிலப் பூ,
4. நீரில் நீர்ப் பூ —என, எனது

குடும்பம் நான்கு வகையானதாகும்.

இக்குடும்பப் பகுப்பை,

*"கோட்டினும் கொடியினும் நீரினும் நிலத்தினும்*
*காட்டிய பூ"*[145] –என இளங்கோவடிகளார் எழுதினார், இதனைப் பிங்கல நிகண்டு,

*"கோட்டுப் பூ கொடிப்பூ நீர்ப்பூ வோடு*
*புதர்ப்பூ என்றிவை நால்வகைப் பூவே"*[146] —எனக் காட்டியது. இதில் நிலப்பூ புதர்ப்பூவாகக் கூறப்பட்டுள்ளது. நிலப்பூ நிலத்திற் பரவிக் குத்தாகவும் புதராகவும் உள்ளது என அறியலாம். சேக்கிழாரும் இவ்வரிசையில் ஒன்றை மாற்றியமைத்து

*"கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங்கொடியின்*
*தோட்டு மலரும்"*[147] என்றார்.

*"மணங்கொள் கொடிப்பூ முதல்நான்கு*
*வகைப்பூ வடிவில் வயங்குகின்ற"*[148] என வள்ளலாரும் நான்கு வகைக்கு முத்திரையிட்டார்.

*"நந்தவனம் கண்திறந்து நாலுவகைப் பூவெடுத்து,*
*பூவெடுத்துப் பூசைசெய்யும் புண்ணியவான் போனாரோ"*[149]
—என பிணப்பாட்டாம் அழுகையிலும்

---

145 சிலம்பு ; அழற்படு காதை : 98,94
146 பிங். நி : 875.
147 பெரி. பு : முருக : 8.
148 திரு. அ: சிற்சக்தி துதி: 6
149 நாட்டுப் பாடல்.

நான்கு வருகிறது. யாவற்றாலும் எனது குடும்பம் நான்கென உறுதி செய்யலாம்.

ஆனால், இக்குடும்ப வழி, தமிழர் கண்ட நிலப்பாகுபாட்டு வழியாகும். மலையும் காடும் வளநிலமும் நீரும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென நால்வகையானதன் தொடர்பிலேயே எனது குடும்பப் பகுப்பும் அமைந்ததாகும். குறிஞ்சி நிலமாம் மலையில் தோன்றும் என்னைத் தொகுத்துக் கூறும் குறிஞ்சிப் பாட்டு,

*"மலையவும் நிலத்தவும் சினையவும் சுனையவும்*
*வண்ண வண்ணத்த மலர்"*[150] —என்று ஒரு நிலத்

திலேயே எனது குடும்ப வகைகள் தோன்றுவதைக் காட்டுகின்றது. எனவே, ஒவ்வொரு நிலத்திலும் என் குடும்ப வகைகள் நான்கிலும் தோன்றுவேன்.

குறிஞ்சித் திணையின் நிலம் மலை. அதன் உரிப்பொருள் புணர்ச்சி. அப்படியென்றால் மலைவாழ் மக்கள் மட்டுந்தான் புணர்ச்சிக்கு உரியவர்கள்; மற்ற நிலங்களில் புணர்ச்சி நிகழாது என்றோ பொருள்? எல்லா நிலத்திலும் புணர்ச்சி நிகழ்ந்தாலும் முதல் தோற்றம் என்ற வகையில் குறிஞ்சிக்கு அது சிறப்பாயிற்று.

இதுபோன்றே, ஒவ்வொரு நிலத்திற்கும் எனது குடும்ப வகை ஒவ்வொரு தோற்றமாகக் கொள்ளத்தக்கதாகும். 'கோட்டுப் பூ சூடினும் காயும்' என்னும் குறளுக்கு,

*"செண்பகப்பூ, பாதிரிப்பூ, புன்னைப்பூ சூடினும்*
*குறிஞ்சி நிலத்து நாயகியை வேண்டிச் சூடினீர்*
*என்று ஊடினாள்"*[151] -எனப் பரிதியார்

விளக்குவது கொண்டும் கோட்டுப் பூ சிறப்பாக மலைநிலப் பூ எனலாம். இதுபோன்றே முல்லை நிலத்திற்குக் கொடிப் பூவும் மருத நிலத்திற்கு நிலப்பூவும், நெய்தல் நிலத்திற்கு நீர்ப்பூவும் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

---

150. *குறி. பா.* 113 : 114
151. குறள்: 1313 *பரிதியார் உரை.*

பாவேந்தர் பாரதிதாசனார் இதனை உளத்துக்கொண்டே,

"கோட்டுப்பூ கொடிப்பூ நிலப்பூ நீர்ப்பூ
நாட்டத்து வண்டெல்லாம் நல்ல இசைபாட"[152]

—என்று நிலவளர்ச்சிக்கேற்ற முறைவைப் பாக்கிக் காட்டினார்.

புட்பவிதி என்றொரு சிறு நூல் வழிபாட்டிற்கு என்னைக் கொள்ளுதற்கு விதிகளைக் கூறும் நூல். அதில் எனது ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒவ்வொருபாடல் உள்ளது. அவற்றில் அவ்வக் குடும்பத்தைச் சேர்ந்த நான் பட்டியல் இடப்பட்டுள்ளேன். வழி பாட்டிற்குப் பச்சிலையும் கொள்ளப்படுவதால் என்னோடு இலைகளும் பட்டியலில் உள்ளன. அவற்றை நீக்கிப் பார்த்தால், கோட்டுப் பூவாக 26உம், கொடிப்பூவாக 12உம், நிலப்பூவாக 15உம் நீர்ப்பூவாக 7உம்[153] கூறப்படுகின்றன.

[154] குறிஞ்சிப்பாட்டில் தலைவியும் தோழிமாரும் ஓடித்தேடி என்னில் 99 இனத்தாரைத் தொகுத்தனர். இவற்றில் நான்கு பச்சிலை போக, கோட்டுப்பூ 45; கொடிப்பூ 26; நிலப்பூ 19; நீர்ப்பூ 5 கூறப்பட்டுள்ளன.

இவற்றுடன் எனது இனம் நிறைவடைந்ததாகக் கூறக் கூடாது. மேலும் பலப்பல உள. ஆயினும், குறிக்கப்படுபவற்றை வைத்து நோக்கினும் கோட்டுக் குடும்பமே நிறைய உள்ளன எனவே, இது முதலிடம் பெற்றது.

மரம், உயர்ந்து கிளைவிட்டு வளரும் செடி ஆகியவற்றில் தோன்றும் நான் கோட்டுக் குடும்பத்தன். இக்குடும்பத்து நான் 'கிளைப்பூ, மரப்பூ, சினைப்பூ, செடிப்பூ' என்றெல்லாம் பெயர் பெறுவேன். இக்குடும்பத்து நான் மலர்ந்தால் கூம்புவதில்லை.

நில அமைப்பால் கொடிக் குடும்பம் அடுத்துப் பேசப்பட வேண்டுமாயினும் நீர்க்குடும்பம் அடுத்துக்குறிக்கத்தக்கதாகின்றது நீர்க்குடும்பத்தில் என்னிற் சிறந்த தாமரை உளது. நீர்ப்பூ குவிந்து மலர்ந்து சில நாள்கள் வாழ்வது. அதன் மேல் எல்லை ஏழுநாள்களாகும் நீர்ப்பூவாக நீர் தேங்கிய இடமெல்லாம் தோன்றுவேன். மலையிடத்துச் சுனையில் தோன்றிச் 'சுனைப்பூ'

---

152 பா: தா க: முதல் தொகுதி.
153 புட் வி: 2—5
154 குறி: பா. 62—96

எனப்படுவேன் முல்லை நிலத்து ஓடையில் தோன்றி 'ஓடைப்பூ' எனப்படுவேன். மருத நிலத்துக் குளத்தில் தோன்றிக் 'கயப்பூ' 'வயற்பூ' எனப்படுவேன். நெய்தல் நிலத்தில் தோன்றிக் 'கழிப்பூ' என்றும் பேசப்படுவேன். கேணியில் தோன்றிக் 'கேணிப்பூ' ஆவேன். எனது அல்லி பூத்த கேணி இருந்த இடம் இன்றும் சென்னையில் 'திருவல்லிக் கேணியாக' உள்ளது. இங்குக் காட்டப்பட்ட பெயர்கள் யாவும் இலக்கிய ஆட்சிச்சொற்கள்.

கோட்டுக் குடும்பமும் நீர்க்குடும்பமும் நீங்கள் வைத்துப் பயிராக்குவன அல்ல. உங்களது உதவியும் பாதுகாப்பும் இன்றி உங்களுக்கு எளிதாகக் கிடைத்துப் பயன்படுவோம். அதனால் எமக்கொரு தனியிடம் தந்து எம்மைப் புகழ்ந்து பாடினர்.

"பாடல்சால் சிறப்பிற் சினையவும் சுவையும்" [155] என்றபடி பாடல் பெறும் இனத்தவர் யாம்.

நீர்க்குடும்பத்தில் யாம் குவிந்து மலர்வதால் தேன் ஊறுவது குறையும். இதனால் வண்டுகள் நாள் ஆக ஆக எம்மை நாடுவதை விடுத்துச் சினைப்பூவில் படரும். இத்தகைய வண்டுகளை அன்பில்லாத மக்களுக்கு உவமையாக்கி,

> *"பயன் இன்மையின் பற்றுவிட்டு ஒரூஉம்*
> *நயனில் மாக்கள் போல, வண்டினம்*
> *சுனைப்பூ நீத்துச் சினைப் படர"*[156] என்றார்அந்தில்

இளங்கீரனார். கூம்பி மலர்வது ஒரு குறையாகாது. ஆனால், நாலடியார் ஓர்எடுத்துக்காட்டிற்காக ஒரு குறையாக்கிக் கொண்டார். நட்பு ஆராய்தலை விளக்கப் புகுந்து,

> *"கோட்டுப்பூப் போல மலர்ந்துபின் கூம்பாது*
> *வேட்டதே வேட்டதாம் நட்பாட்சி — தோட்ட*
> *கயப்பூப்போல் முன்மலர்ந்து பின்கூம்பு வாரை*
> *நயப்பாரும் நட்பாரும் இல்."*[157] —என்றார்.

எம்மைக் குறைவாக அவர் கொண்டாலும் யாம் அவரைக் குறைகூறவில்லை. நன்மைக்குப் பயன்படுவதே எம் வாழ்வாகையால் ஒரு நன்மைக்கு ஆட்படுத்தப்பட்டதை எண்ணி உவக்கின்றோம்.

மூன்றாவதாகிய கொடிக் குடும்பம் மணத்திற்கு எடுத்துக் காட்டானது. பாரியிடம் தேர்பெற்ற முல்லை வாழ்வியல் மலர்

---

155 கலி : 28 : 1.
156 அகம் 71 : 2—4
157 நாலடியார் : 215

கமழ் மணத்தின் தனிச்சின்னம். உலக மலர், அகத்துறையில் இக் குடும்பத்திற்கு முழு ஆட்சி உண்டு. கொடியார் என்றால் வன்மையுடையவர். அவருக்குப் பூச்சூட்டி, பூங்கொடியார் ஆக்கினால் மென்மையர் ஆவர். பெண்களைப் பூங்கொடியாகப் பாடாத பாவலன் பெயர் பெறாதவன் ஆவான். குறிஞ்சி நிலப் பெண்ணிற்குக் "கொடிச்சி" 158 என்றொரு பெயர்.

கொடிப்பூ புறத்துறையில் அடையாளப்பூ. போர்த்துறையில் அடையாளமாக நின்று வெற்றி தந்தது. சுக்கிரீவனும் வாலியும் கட்டிப் புரண்டு கடும் போரிடுகின்றனர். மறைந்து நின்ற இராமனுக்கு 'எவன் வாலி எவன் சுக்கிரீவன்' என்று அடையாளங் காண முடியவில்லை. சுக்கிரீவனை அணுகச்செய்து,

*'... ... ... ... உமை வேற்றுமை தெரிந்திலம்*
*கொடிப் பூ*
*மிலைந்து செல்கென விடுத்தனன்"* 159 இது தவறான போக்கு காட்டிக் கொடுத்ததால் என்னினத்திற்குஓர் இழுக்குதான். இப்படியும் எம்மைப் பயன்கொள்வார் வெற்றிபெற்று நல்லவராகப் போற்றப்படுகின்றனர்.

நான்காவது 'நிலக் குடும்பம்' அருமருந்துக் குடும்பம், தரையில் படரும் புல் பூண்டு, குற்றாய் வளரும். சிறு செடி, கிளைகளின் அல்லாது கொப்பே காம்பாய்ப் பூப்பது நிலக்குடும்பம். இது 'புதர்ப்பூ' எனவும் படும். புதர்ப்பூ உள்ளீரம் கொண்டது. நீர் வற்றிய பருவங்களிலும் வயல்களில் நிறையும்.

நாட்டில்மழை பொய்த்துக் கடும்வெப்பம் தோன்றுவதற்குரிய கடுமை தோன்றும் போதும்,

*"வயலகம் நிறையப் புதர்ப்பூ பூப்பது"* 160 — செங்கோலரசனது சிறப்பிற்கு எடுத்துக் காட்டாகும்.

தும்பை, நெருஞ்சி முதலியன நிலக் குடும்பத்தன.

இவ்வாறு நான்கு குடும்ப வகையை அறிமுகம் செய்ய வழி தந்த சிறுவாய்ப்பாடலில் அடுத்துப் "பொன்னாங் கண்ணிக்கு" என்னும் தொடர் உள்ளது. அது கொண்டு இரண்டு கருத்துகள் வெளிவரும். முதலில் 'கண்ணி' என்னும் சொல்வழி சூடிக்கொள்ள நான் உருப்பெறும் கலைவாழ்வைச் சொல்வேன்.

---

158 *"குன்றகத் ததுவே கொழுமிளைச் சிறூர்*
*சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி"* அகம் 95 : 7, 8.
159 கம்ப . வாலிவதை: 52 160 புறம் : 117 .

## அணியாகும் அரும் வாழ்வு.

'கண்ணி' என்றால் என்னால் ஆகிய தலைமாலை. இச் சொல் அமைப்பு மாந்தர் என்னைப் பயன்கொள்ளுவதன் அறிகுறியாக அப்பாடலில் அமைந்துள்ளது.

எனது பிறவிச் செயல் இனப்பெருக்கம். ஆனால், எனது வாழ்வுப் பயன் உயிரினங்களை உவப்பித்தல். சிறப்பாக மாந்தரை மகிழ்வித்தல்.

மாந்தர் எனது அழகால் மகிழ்கின்றனர். என்னைக் கொண்டு அழகுபடுத்திக்கொண்டு அகமிக மகிழ்கின்றனர். சூடிச் செழிக்கின்றனர்; சூட்டிச் சிறக்கின்றனர். என்னைப் பயன்படுத்தி வாழ்வைச் சுவைப்பதில் உலகில் தமிழ்ப்பெருமக்களுக்கு ஈடான இனம் இருந்ததில்லை. தற்காலம்பற்றி இதை என் மனநிறைவோடு சொல்ல இயலவில்லை.

தனிப் பூவாக என்னைச் சூடுவர். இணைத்தும் பிணைத்தும் அடுக்கியும் தொடுத்தும் அணிவர்; அணிவிப்பர்.

மகளிர் நீராடியபின் ஓரிரு பூக்களைக் கூந்தலில் செருகுவர்; பெய்வர். கண்ணகியை நீராட்டித் "தேமென் கூந்தலில் சின்மலர் பெய்"யுமாறு[161] கவுந்தியடிகள் மாதரியிடம் குறித்தார் அன்றோ? ஆடவர் நீராடி அரும்பில்தொடுத்த மாலை அணிந்து மகிழ்வர். அது மலர அதனால் தண்மை பெறுவர்; மணம் ஏற்றிக்கொள்வர். பொன்நிறமாக உதிரும் தாதால் உடல் மெருகு பெறுவர்.

என்னைக்கொண்டு உருவாக்கும் வகைகள் எத்துணை! எத்துணை! அதற்கென என்னைக்கொய்ய, ஆய்ந்தெடுக்க, அடுக்க, தொடுக்க ஒரு கல்வியே இருந்தது. மணிமேகலை இக்கலையில் தேர்ந்தாள் என்பதை அறிந்தீர்கள். மென்மையான என்னைப் பலவாறாக உருவாக்கும் தொழில் மென்மைவாய்ந்த மகளிர்க்குரிய கலையாக இருந்தது.

"எண்ணல், எழுதல், இலைகிள்ளல்,
பூத்தொடுத்தல்" என்று பழம்பாடல் ஒன்று மகளிரது

கலைக் கல்வியைக் காட்டுகின்றது. பூக்கொய்தல் மகளிர்க்கு ஒரு துறை.[162] இறையடியாராக ஆடவரும் பூக்கொய்வர். கொய்தவற்றைத் தொடுக்க அரண்மனைகளிலும் செல்வர் வளமனைகளிலும் கோவில்களிலும் 'மலர் மண்டபங்கள்' இருந்தன.

---

161 சிலம்பு : அடைக்கலம் : 118.
162 "பூக்கொய் மகளிரின்" —குறு 26 : 8.

மிக முற்காலத்தில் கடவுட் படிமங்களுக்குத் தனிமலர்களைத் தொகுப்பாக அள்ளிப் படைக்கும் முறையே வழிபாட்டு முறையாக இருந்தது. தனிப் பூக்களைத் தூவிப் போற்றி செய்யும் அருச்சனை முறை ஆரியரால் நடந்தது. மாந்தர் தாம் படைத்த கடவுளர் திருவுருவங்களைத்தம்மைப்போன்றே ஒப்பனைசெய்துமகிழ்ந்தனர்.

கடவுளரைப் பூசிப்பது பூசனை-பூசை எனப்படும். இப்பூசை 'பூ செய்' என்பதன் மரூஉ மொழி. பூவால் செய்யப்படும் வழிபாடு 'பூசெய்' எனப்பட்டது. நன்செய், புன்செய்-நஞ்செய் புஞ்செய் ஆகி-நஞ்சை புஞ்சை ஆனதுபோன்று பூசெய், பூசை ஆகி அன் சாரியை பெற்றுப் பூசனை ஆயிற்று. நீங்கள் சொல்லிக்கொள் வது போன்று இது 'பூஜை' அன்று. வடநாட்டு அறிஞர் சாட்டர்சி என்பார்,

> 'பூஜ்' என்னும் வேர்ச்சொல் கொண்டதாகக் கருதப் படும் 'பூசை' என்னும் சொல் திராவிட மொழியின் வழி கொண்டது. இச்சொல்லோ அதன் வேரோ ஆரிய மொழியிலோ அயல்நாட்டு ஐரோப்பிய மொழிகளிலோ காணப்படவில்லை'[163]

-என எழுதியுள்ள கருத்தும் எனது இயற் பெயரின் வழியே பூசனை வளர்ந்தது என்பதற்குக் துணை யாகின்றது.

சப்பான் நாட்டவர் ஓவியங்களின் முன் மலர்களைக் குவிய லாகப் படைக்கும் பழக்கம் உண்டு. இப்பழக்கம் இந்தியாவிலிருந்து சீனா வழியாகச் சப்பானுக்கு வந்ததாக அந்நாட்டு ஆராய்ச்சி அறிஞர் கருதுகின்றனர். நம் நாட்டில் அம்முறை, மாறி வேற்றார் முறை ஆட்சி செலுத்துகின்றது. அங்கு, ஒப்பனை, பேரழகைக் கூட்டும் சுவையாக வளர்ந்துள்ளது.

தனி மலர் இருக்க நான் மாலையாகும் திறத்தைத் தமிழ்ச் சொற்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன :

1. தலையிற் சூட்டிக்கொள்வது ...கண்ணி
   இதற்கு என்னை இரண்டிரண்டாக
   இடையிட்டுத் தொடுப்பர்.
   கண்ணி ஆடவர்க்கு உரியது.

---

163 *Race movements and Prehistoric Culture in the Vedic age — Page 160.*

2. இதுபோன்று மகளிர் தலையிற் சூடுவது,
கூந்தலைக் கோதிச் சூடுவதால். ...கோதை
*''மைந்தர் கண்ணி மகளிர் சூடவும்*
*மகளிர் கோதை மைந்தர் மலையவும்''*[164]
-என்று பட்டினப்பாலை அடையாளங் கூறு
கின்றது. மகளிர் சிலபோது தலையிற் சூடிக்
காது வழியே கன்னத்திற்-கதுப்பிற்-படுமாறு
அமைவதும் கோதை[165] எனப்படும். மகளிர்
தொடர்பில் ஆடவர் மார்பில் அணி
யப்படின் கோதைப் பெயர் பெறும்.[166]

3. மகளிர் கொண்டை உச்சியில் சுற்றிச் சூடு
மாறு அமைக்கப்படுவது ...சிகழிகை

4. இதுபோன்று ஆடவர் தலையில் தலைக்
கட்டுக் குடுமியில் சும்மாடு போன்று சுற்றிச்
சூடிக்கொள்வது ...இண்டை
சிவபெருமான் *''இண்டை நிகர் சுமையடை*
*மேற் கூடை கவிழ்த்து''*[167] வந்தாராம்.

5. மகளிர்க்கும் குழந்தைகட்கும் தலையிலி
ருந்து தொங்கி நெற்றியின் நடுவில் படு
மாறு சூட்டுவது ...சூட்டு

இவ்வாறாகக் கண்ணி, கோதை; சிகழிகை, இண்டை, சூட்டு ஆகிய ஐந்தும் தலை அணிகள்.

கழுத்தில் அணியப்படுவன பலவகைப்படும்.

6. நீண்ட நாரின் வழி பூக்களை அடுக்கி நார்
இழையால் வளைவாகக் கட்டப்படுவது—
மார்பில் அணிவது ...மாலை

7. திரண்ட தேர் உருள்போலப் பருத்ததாக
மார்பு நிறைந்து புரள்வது ...தார்
*''வண்ண மார்பில் தாருங் கொன்றை''*[168]

---

164 பட்: பா: 110, 111
165 ''நெறியிருங் கதுப்பிற் கோதையும்'' —அகம் 269 : 2
166 ''கோதை மார்பிற் கோதை யானும்'' —புறம் 48 : 1
167 திருவி: பு: மண்: 16
168 புறம் : கடவுள் வாழ்த்து : 2

"உருள் பூந்தண்டார் புரளும் மார்பினன்"[169]
என்பன காண்க.
"தார்மார்பு" என்று பாடாத பழம் புலவன் இலன்; இலக்கியமும் இல்லை என்னும் அளவிற்குச் சான்றுகள் பல்கி உள்ளன.

8. முனைகள் இணைக்கப்படாமல் தொங்கி அசைவது ...தொங்கல்

இனிக்
கட்டப்படும் முறைகளால் பின்வருமாறு பலவகைப் படும் :

9. தழைத்த பெரு மலர்களால் கட்டப்படுவது . ஒலியல்

10. வட்டமாக இணைத்து அணியப்படுவது. (ஆர் எனும் வண்டி உருளைக்கால்போல்) ...ஆரம். முத்துமாலையும் இப்பெயர் பெறும்.

11. தனித்தனிப் பூக்களாகக் கோக்கப்படுவது — கோவை.

12. அதைச் செறிவாகக் கோப்பது ...வாசிகை

13. நுண்ணியமலர்களால் மேல்மட்டம் செம்மையாக அமைவது. ...இழை
இது பூண்வடிவாகக் கட்டப்படுவது என்பர்.

14. தொடுக்கப்படுவது தொடை[170] எனப்படும். (இது தோள் மாலை) ....தொடையல்.
இது தொடலை எனவும் படும்.

15. மலர்க் காம்பு இரண்டையும் ஒன்றன்மேல் ஒன்று வைத்துப் பின்னிப் பிணைத்துக் கட்டுவது ...பிணையல்.

16. தெரிந்தெடுத்த மலர்களால் பளிச்சென்று தெரியுமாறு அமைவது ...தெரியல்.

17. விரிந்த அலர்களால் ஆகி விரிவாகத் தோன்றுவது ...விரியல்.

---

169 திருமுருகு : 11
170 "தொடையல் தாமம் தோளணி மாலை" —பிங் நி: 3028

18. பல்நிறப் பூக்களால் கட்டப்படுவது (இக் காலத்துக் கதம்பம் எனப்படும்) ....கத்திகை.

19. விண்மீன். மின்னுவது போன்று ஒளிமலர் களை விட்டு விட்டுக் கட்டுவது ...சுக்கை.

20. விரியக்கட்டிச் சுருக்கிச் செறியச் செய்தது ...சுருக்கை.

21. மலர்களை வெவ்வேறு பத்தியாக வட்டப் படுத்தி இடையில் ஒரு பெரும் பூவைத் தாமரை போல் கட்டி முடிப்பது (இதனையும் தோள்மாலை என்பர். சேக்கிழாரோ ''இண்டைச் சுருக்கும் தாமம்'' என்பர்.) ... தாமம்

22. ஒருபக்கப் பார்வையாகக் கட்டப்படுவது ...ஒருபுறமாலை.

23. பலமலர்கள் சூழ்ந்திருக்க நடுவண் வெளி கொண்டது. (இது கடவுளர் காலணி) ...சூழியல்மாலை.
இதனை அப்பர் ''பூப்பிணை''[171] என்பார்.ஊசியாற்கோக்கப்படுவதையும்[172] ''ஊசி போகிய சூழ்செய்மாலை' என்பர்.

24. அலர்களால் மாலையாக்கி அதன் மேல் வெள்ளியிழை, பொன்னிழை போர்த்தல் (இதனை நிகண்டு மயிர்ச்சூட்டு மாலை என்னும்) ...அலங்கல்.
173 நச்சினார்க்கினியர் மட்டும் இதனை நெற்றிமாலை என்பர்.
174 அவரே தூக்குமாலை என்றும் சுட்டுவார்.

25. அணியப்படும் தோள், மார்பு மாலைகள் யாவும் ...அணியல்

26. மணம் மிக்க பச்சிலைகளால் ஆனது ...படலை

இங்குக் கூறிய 26 வகைகளும் நிகண்டுகள், சங்க இலக்கியங் கள், புராணம் முதலிய நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டவை. ஆனால், பல்வகை நூல்களும் சிலவகை மாறுபாடுகளுடன் பேசு கின்றன. என்னைப் பற்றிய உண்மையை நான் எண்ணிப் பார்த்து வகைப்படுத்திக் கூறியுள்ளேன்.

---

171 ''பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைத்தொழ'' —அப்: தே நம 10
172 அகம் : 48 : 9 (173—174) சீவ சி : 349 உரை ; 525 உரை.

இவை யாவற்றிலும் கண்ணி, கோதை, மாலை, தார் ஆகிய நான்கும் பரவலாகச் சுட்டப்படுவன; சூடப்படுவன. கண்ணியும் தாரும் அரசர்க்கு உரிய சின்னம். கடவுளர்க்கும் இன்றியமையாது சூட்டப்படுவது. கோதையோ மகளிர் பெயர் கொள்ளும் அளவில் மகளிரோடு ஒன்றியது. பூங்கோதை என்று பெண்களுக்கே பெயராக இடப்படுவதைக் குறிக்கிறேன்.

இவற்றுள்ளும் தாருக்குத் தனிச் சிறப்பும் தகுதியும் உண்டு. புறத்திணையில் முன்னணிப் படையே இப்பெயர் பெற்றது தாரின்றி மன்னன் திருவோலக்கத்தில் அமரான்; காட்சி நல்கான். போர் முகத்தும் சூடாது போகான்.

அவன் மட்டுமென்ன? அவனது வீர முரசம் தார் அணிவித்த *'சிலைத்தார் முரசம்''*[175]. போர் யானை *''விரி தார்க் கடும்பகட்டு யானை''*[176]. குதிரை *''தார் உடைப் புரவி*[177].

கடவுளர்க்கும் தார் சிறப்பாகச் அணியப்பட்டு உரியதாகக் கூறப்படும். சிவபெருமானுக்குக் *''கொன்றைத் தார் சுவல் புரளும்''*[178]. *''கார்க் கடம்பந் தாரான்''*[179] முருகன், திருமால் *''பொலந்தார் மார்பின் நெடியோன்''*[180].

அகத்திணையில் தார் புணர்ச்சிக்கு உரிய அணி. தாரில்லாது இன்பக் குலாவல் இல்லை என்னும் அளவில் தார்புணர்ச்சிச் சின்னமாயிற்று. *''தார் அணிந்த எழிலிய''*[181] எனத் தார் தலைவனுக்கு எழில் ஊட்டியது. மார்பில் அணிந்த தாரைக் கண்டே நெஞ்சம் நெகிழ்ந்து காதல் கொள்வாராம். நெஞ்சைக் கொடுத்த ஒருத்தி *''தாரும் கண்ணியும் காட்டி ஒருமை நெஞ்சம் கொண்டமை விடுமோ?''*[182] என்கின்றாள். இவ்வகையில் தார் கவர்ச்சி மாலை. புணர்ச்சியின் முயக்கத்தின்போது தார் குழைய வேண்டும். அதுதான் இன்பமாம். அவர்களது இன்பத்தில் நான் குழைவேன்.

*''முகை வாய்த்த முலை பாயக் குழைந்த நின்தார்''*[183] —எனப்பட்டது. பிரிந்து மீளும் தலைவன் கூடியிருந்தபோது தழுவலால் அவள் பெற்ற உவப்பை,

---

175 புறம்: 36 . 12.
176 புறம் : 265 : 7, 8
177 புறம் : 299: 5
178 கலி: 1 : 11
179 சிலம்பு: 14: 4.
180 மது: கா: 69.
181 பதிற்: 15 : 12
182 நற்: 150 : 8, 9
183 கலி : 68 : 15.

"பணிபடு நறுந்தார் குழைஇய நம்மொடு
துனிநீர் முயக்கம் பெற்றோள் போல உவக்குநன்"–[184]

–எனத்தழுவுவதால் தன் மார்புத் தார் குழைந்ததைப் பேசிப் பூரித்தான். சோழன் நலங்கிள்ளி வஞ்சினம் கூறுபவன்"

பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைக என் தாரே"[185] –என்றான்.

ஒரு ஊர் சுற்றித் தலைவன் ஒரு பரத்தையுடன் நீர் விளையாட்டில் குலவினான். குலவிய தழுவலில் இவன் தார் அவள் கழுத்திற்கு ஏறியது. அவள் தலைக் கோதை மாலை இவன் கழுத்தில் சுற்றிக்கொண்டது. இந்த மயக்கம் கலையாமல் தன் இல்லத்திற்கு வந்து மாட்டிக்கொண்டான். வீட்டுக்காரி,

"தார்கொண்டாள், தலைக் கோதை தடுமாறிப் புனைந்த நின்
நீரணி சிதையாது என் இல் வந்து நின்றதை"[186] – என்று

சாடினாள். ஆடவன் தாரில் படிந்த வண்டு மகளிர் கூந்தலில் மொய்த்தாலே அது புணர்ச்சி போன்று பழியாயிற்று. நீரோட்டத்தில் அவன் தார் இவள் கோதையிலும் இவள் கோதை அவன் மார்பிலும் அமைய புணர்ச்சி நேர்ந்ததாக மொத்துப்பட்ட தலைவனும் இருந்தான்.

கடவுளர்பாலும் தார் புணர்ச்சியணி யாக்கப்பட்டது முருகன் "உருள்பூந் தண் தார்புரளும் மார்பினன்" (திருமுருகாற்றுப்படை: 11) இத்தார் எதற்குரியதாம்? "இது போகத்திற்குரிய தார்"–என்றார் நச்சினார்க்கினியர்.

இலக்கியங்கள் இவற்றைப் பன்னிப் பன்னிப் பேசுகின்றன. தார் வரும் இடமெல்லாம் மார்பு வருவதும், அத்துடன் கோதை வந்தால் புணர்ச்சிக் குறிப்பு இருப்பதும் இலக்கிய வழக்கு ஆயிற்று. இவ் வளவில் பரவலான இடம் தாருக்கு உண்டு.

என்னால் ஆகும் அணி தலை, மார்பு, தோள் மட்டுமன்று இடுப்பிலும் இடம்பெறும், வேங்கைப் பூமாலை மகளிர் அடிவயிற்று இடையில் அணியப்பட்டது.

இவ்வாறு பலவகை அணிகளை உருவாக்க என்னைக் கொய்து வகை பிரிப்பர். 'கட்டுப் பூ' என்றும் 'தொடைப் பூ'

---

184 அகம் : 144 : 9, 10;
185 புறம் : 73 : 14
186 கலி : 66 : 15.

என்றும் 'விடு 'பூ' என்றும் என்னை வகைப் படுத்துவர். கட்டப் படும் மாலை வகைக்குக் 'கட்டுப் பூ.' தொடுக்கப்படும் தொடையல் முதலியவற்றிற்குத் 'தொடைப் பூ.' கட்டித் தொடுத்து முடித்ததும் நிறைவேற்றுவதற்கும் செருகுவதற்கும் தூவுவதற்கும் உரிய சிறுபூக்கள் 'விடு பூக்கள்.'[187]

கோப்பதற்கு உரிய உள் துளை தெரியும் நான் 'உளைப் பூ' எனப்பட்டேன். மாறுபட்ட வண்ண அமைப்புக்காக 'எதிர்ப் பூக்கள்' தொகுக்கப்படும்.

பலவகையாகத்தொடுக்கும்போதோ, கட்டும்போதோ எனது காம்பைக் கிள்ளிவிடுவதும் உண்டு காம்புடன் கட்டுவதும் உண்டு; "குறையிதழ் பறியா கிளை யிதழ் பறியா" (பறித்து)[188] மாலை கட்டினதைக் குறிஞ்சிப்பாட்டு காட்டும். புறஇதழ்களைப் பெரும்பாலும் நீக்கிவிட்டே தொடுப்பர். தனி இதழ்களாகக் கிள்ளிக் கட்டப்படுவதும் முழு மலராகத் தொடுக்கப்படுவதும் உண்டு. முழுமலர் புறவிதழ் கிள்ளப்பட்டோ, புறவிதழுடனோ கட்டப் பயன்படுவது 'முழு நெறி' எனப்பட்டது.

"பூத்த குவளைக்
கூம்பு அவிழ் முழுநெறி"[189] என்றதற்கு
"செங்கழு நீரினது முகையவிழ்ந்த புறவிதழ் ஒடித்த

முழுப் பூவாற் செய்யப்பட்ட" என்று உரைகாரர் விளக்கந் தந்துள்ளார். "முழுநெறிக்குவளை"[190] என்னும் சிலம்புத் தொடருக்கு அடியாருக்குநல்லார் "இதழ் ஒடிக்கப்படாத குவளை" என்றார். இவை புறவிதழ் இன்றியும், புறவிதழுடனும் கட்டப் பட்டதைக் காட்டுகின்றன.

என்னை இவ்வகைகளில், பயன்கொள்ளச் செய்யும் கலைக்குத் தனி நூல்களும் இருந்தன. மகளிர்க்கே இக்கலை உரியது என்றாலும் ஆடவரும் இக்கலை அறிந்தவராக இருக்க வேண்டியிருந்தது. தனது காதலியின் உள்ளமறியத் தான் ஒரு காணிக்கைபோன்று தழையாலோ, என்னாலோ உடையோ மாலையோ புனைந்து வழங்கும் நிலை உண்டு. அதற்கென அழகிய

---

187 *"வெட்சியுடைய சிறிய பூக்களை விடுபூவாகத் தூவி"*. *திருமுருகு* : 21 *உரை*

188 *குறி. ப*; 101

190 *சிலம்பு* 2 ; 14 *உரை*

189 *புறம்* : 116 ; 1, 2.

முறையில் என்னைக் கொத்தாகவோ மாலையாகவோ கட்டும் கலை தெரிந்தவராக ஆடவர் இருந்தனர்.

சீவகன் இக்கலையில் வல்லவனாயிருந்தானாம். பலவண்ண மலர்களையும் கொண்டு,

*"நன்மை நூலின் நயந்தோன்ற*
*நன்பொன் விரலின் நுதியினால்*
*பன்மணியும் முத்தும் பவளமும்*
*பைம்பொன் னும்கோத் தாலொப்ப*
*என்ன அமரும் மருளத் தொடுத்தான் இனமாலையே"* [191]

என்னால் அணியும் மாலைவகை மட்டுமன்றி விளையாட்டிற் குரிய பந்தும், இல்லத்தின் ஒப்பனைக்குரிய கொத்துகளும், மனையின் நுழைவாயிலில் தொங்கலும் பயன்பட்டன.

இம்மாலை வகைகளைக் கட்டவும் தொடுக்கவும் பலவகை நார்கள் கொள்ளப்பட்டன.

எளிதிற் கிடைக்கும் வாழை நார் பொதுவில் கொள்ளப் பட்டது. 'ஆர்' என்னும் ஆத்தியின் பட்டையை உரித்துக் கிழித்த நாரிலும் கட்டினர். மரல் என்னும் அரலையின் நார் கொண்டும் கட்டினர். நரைக்கொடிகளை அப்படியே கொடியாகவும் நாராக்கியும் பயன்படுத்தினர். இந்நார் வேங்கைப் பூவைத் தொடுக்கப் பெரும்பான்மையாகப் பயன்படுத்தப்பட்டது. [192]

மாலைகள் நாரினால் கட்டப்பட்டன என்பது அடிப்பட்ட பழக்கம். அதனால், மலர் மாலை அல்லாத மாலைப் பொழுதைக் குறிக்க

*"நள் என வந்த நார் இல் மாலை"* (குறு : 118 –) என்று சுட்டப்பட்டது.

இவ்வாறு என்னைக்கொண்டு கண்ணி முதல் பலவகை உருவாயின. 'பொன் ஆம் கண்ணிக்கு' என்று தலைமாலையைத் காட்டிய இப்பாட்டின் சொல்கொண்டு இத்துணை வகைகளைக் கூறவழி கிடைத்தது.

---

191 *சீவ. சி:* 1652.
192 *"நார்ச் செறியத் தொடுத்த கண்ணி"* – *புறம்:* 81
,, *'ஆர் நார் உரிவையின்*
*செம் பூங் கரந்தை புனைந்த கண்ணி"* *அகம்:* 269.
,, *"காமர் கண்ணி திரங்கு மரல் நாரில்பொலியச் சூடி"–மலை.* 480, 481
,, *"நறை நார் வேங்கைக் கண்ணி"* *அக:* 282 : 9, 10

இக்கண்ணியுடன் 'பொன்' அடைமொழியாக உள்ளது. இதைக் கொண்டு அறிவிக்கப்பட வேண்டிய கருத்துகள் பல உள்ளன.

## பூக்காத பூக்கள்

பாடும் பாணர்க்கும் புலவர்க்கும் பரிசாக என்னுருவில் செய்யப்பட்ட கலைப்பொருள்கள் வழங்கப்பட்டன. இவை தாமரை வடிவிலும் எட்டிப் பூ, காவிதிப்பூ வடிவிலும் உருவாயின. போரில் வெற்றி தந்த மறவர்க்கு வெற்றி விழாப் பெருநாளில் பொன்னால் வாகைப் பூசெய்து,

*"போர்வாள் மறவரை*
*வருக தாம் என வாகைப் பொலம் தோடு*
*பெருநாள் அமையம் பிறக்கிடக் கொடு"* க்கப்பட்டது (சிலம்பு: நீர் : 42, 44.)

எனது தாமரை வடிவம் பொன்னால் நெருப்பில் உருக்கிச் செய்யப்படுவதால் "அழல் புரிந்த தாமரை" (புறம் : 11) என்றும், அது இதழ்கள் அமைப்பில் இல்லாமையால் "ஏடு இல் தாமரை" (பொருந் : 158) என்றும், வண்டுகள் மொய்க்காமையால் "வண்டு இமிராத் தாமரை" (புறம் : 69) என்றும், வாடாது இருப்பதால் "வாடாத் தாமரை" (புறம் ; 126) என்றும் குறிக்கப்பட்டன.

*"பொன்மலர் நாற்றம் உடைத்து"*[193] என்பது கொண்டு என்னைப் பொன்னால் செய்வதை அறிவதோடு, என்னதான் பொன்னால் ஆனாலும் மணம் இல்லாத குறையும் சொல்லாமல் சொல்லப்பட்டிருப்பதை உணரலாம்.

தாமரையைப் போன்று குவளை முதலிய பிற பூக்களும் பொன்னாலும் வெள்ளியாலும் செய்யப்படும். இவ்வாறு செய்யப் படுபவை

*"அழல் புரிந்த அடர் தாமரை*
*ஐது அடர்ந்த நூல் (பொன் நூல்) பெய்து*
*புனைவினை பொலிந்த பொலன் நறுந் தெரியல்"*[194]

எனப் பொன் நாரால் தொடுக்கப்பட்டது. இக்காலத்துப் பொன்

193 நீதி. நெ : 4. 194 புறம் : 29.

ரடுபோன்றது இது. இதுபோன்றே வெள்ளிப் பூக்கள் வெள்ளி ாரால் தொடுக்கப்பட்டு வழங்கப்பட்டன. இதனைப் பெற்ற லவரும் பாடினியுமாகிய பேய் மகள் இளவெயினி

*"வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே"*[195] என்று பாடினார்.

புறத்திணையுள் போர் நிகழ்ச்சிகளின்போது அவ்வவ்வற்றிற்குரிய ின்னப்பூக்கள் பலவகை உலோகத்தாலும் துணிமுதலியவற்றாலும் செய்து சூட்டப்பட்டன. கலைப் பொருள்களாகவும் உருவாயின

இவ்வாறு கலைப்பொருள்கள் விற்பனைக் களத்திற்கு வந்ததைச் சிலப்பதிகாரம்,

*"கிழி (துணி)யினும் கிடையினும் (நெட்டியினாலும்)*
*தொழில் பல இயற்றி"*[196] –என அறிவிக்கின்றது. இது

போன்று கலைப்பொருள்கள் தோலாலும் கோரைகளாலும் மடல் களாலும் தாளாலும் மிக நுண்ணிய முறையில் செய்யப்பட்டு மக்களால் விரும்பி வீட்டின் ஒப்பனைப் பொருள்களாகக் கொள்ளப் பட்டன. இவைகளெல்லாம் பார்வைக்குரிய கலைப் பொருள்கள்; அணிவதற்கு அல்ல, அணிவதற்கு நான் வெள்ளம்போல் பரவியிருப்பதை உள்ளம் நிறைந்த பழந்தமிழ்ப் பெருமக்கள் உணர்ந்தனர். கொய்துகொய்தும், பெய்து பெய்தும், தொடுத்துத் தொடுத்துச் சூடி அணிந்தும் வாழ்விற் கமழ்ந்தனர்.

இக்காலத்தைப் பார்க்கின்றேன் 'அந்தகோ தமிழரே அவலத்திற்கு உரியோரே' என்று கூற வேண்டியுள்ளது. மலர் என்றால் மனம் பறிகொடுத்த மகளிரே என்னை மறந்து வரு கின்றனர். தேனிருக்கும் நானிருக்கச் செய்மலராம் பொய் மலரைச் சூடி மினுக்குவதை என்னவென்று சொல்வேன்! நான் சொல்வ தென்ன!

*"இயற்கை உனக்களித்த மணமலர் இருக்கையிலே*
*ஏனிந்தக் காகிதப்பூ மகளே"*[197] –என்று பாவேந்தர்

கவன்று பாடுகின்றாரே! என்னை விட்டு விலகியது மட்டுமன்று,

---

195 புறம் : 11 : 18
196 சிலம்பு : நீர்ப்படை : 38.
197 குயில் : காகிதப்பூ : 1-4

அவர்கள் அவர்களை விட்டே விலகியதை எண்ணும்போது செடியிலேயே வாடுகின்றேன். தமிழரது பொன்னான பண்பாட்டையும் மரபுகளையும் கொல்லுவதற்கு வேற்றார் தமது செயற்கை மரபுகளை இடைச்செருகலாகப் புகுத்தியதையும் பாவேந்தர் எண்ணுகின்றார். என்னை வைத்துப் பாடுகின்றார்:

*"செயற்கை மலர்காட்டித் தேன்மலர் இனம்கொல்லத்,*
*தெரியார் முயல்கின்றார் தெரிவையே"*

போதும்,

## இதழ் வகை

'பொன்னாங் கண்ணிக்குத் தாழம்பூவா? அஃது எவ்வாறு? கண்ணி ஆடவர்க்கு உரியது என்றாய். ஆடவர் தாழம்பூவைச் சூடுவதில்லையே' என்கின்றீர்களா? தாழம்பூவை ஆடவரும் சூடுவர்; மகளிரும் சூடுவர். அதைத் தெளிவுபடுத்துவது போன்றுதான் இப்பாட்டில் முதலில் 'கண்ணிக்குத் தாழம்பூ' என்று ஆடவர் சூடுவதையும், இறுதியில் 'கொண்டைக்குத் தாழம்பூ' என்று பெண்டிர் சூடுவதையும் காண்கின்றோம். கொண்டை மகளிர்க்கு உரிய முடி அன்றோ?

இரண்டிடத்தில் குறிக்கப்பட்டதற்கு வேறு ஒரு கருத்தும் சொல்ல வேண்டும். முன்னது ஆடவர் சூடும் செந்தாழை. பின்னது பெண்டிர் சூடும் வெண்டாழை.

ஆடவர் சூடார் என்பது கதை. 'கதை கதையாம் காரணமாம்; காரணத்தில் ஒரு தோரணமாம்' என்பர். இக்கதை தோரணம் கட்டிய காரணக் கதை.

எவர் பெரியவர் என்னும் போட்டியில் சிவன் வானில் வளர்ந்தார். நான்முகன் அவர் முடியைக் காண அன்னமாய்ப் பறந்தார். முடியிலிருந்த தாழம்பூ கீழே வீழ்ந்து வந்தது. இடையிற் கண்ட நான்முகன் தான் முடியைக் கண்டு அதற்குச் சான்றாக தாழம்பூவை எடுத்து வந்ததாகப் பொய்ச்சான்று கூற வேண்டினார். தாழையும் அதற்கு உடந்தையாயிற்று. அதனால், சிவன் 'ஆடவர் சூடாது போக' என்று தண்டித்தார். இந்தக் கதை கடவுளரையே தன்முனைப்புள்ளவர், பொய்யர் என்று

தாழ்வாக்குவது. அதில் என் தாழையைப் பொய்ச்சான்றுக்கு இழுத்தது முழுப்பொய்.

இந்தக் கதை எக்காலத்தில் வழக்கிற்கு வந்ததோ? சங்க காலத்தில் ஆடவர்—அவரிலும் நெய்தல் நிலத்தவர் தாழம்பூவைச் சூடி மகிழ்ந்தனர்.

நிறைமதி நாளில் பரதவர் கடலில் செல்லார். மகளிருடன் குலவி மகிழ்வர். மகளிர் வெண்கூதாளை மலர்சூடிக்கொள்ள,

*"புன்தலை இரும் பரதவர்*
*பைந்தழைமா மகளிரொடு,*
...........................
*மடல் தாழை மலர் மலைந்து"* [198] மகிழ்ந்ததைப் பட்டினப் பாலை காட்டுகின்றது. இது கதையன்று.

'சிறுவாய்ப் பாடலில்' உள்ள மலர்களில் சில வேற்றுமைகள் உள்ளன. அவற்றில் ஒன்றை இங்குக் காட்டவேண்டும். புளியம் பூ வின் புல்லி, 'அல்லி' இதழ் எனப்படும். ஆவிரையும் அத்தகையதே. அத்தி வேறு வகையில் காணத்தக்கது. தாழையின் புல்லி, அல்லி 'மடல்' எனப்படும். இது கொண்டு எனது ஓர் உறுப்பாம் இதழில் எத்துணை வேறுபாடு உண்டு; எத்துணை பெயர்மாற்றம் உண்டு என்பதைக் கூற இவ்வமைப்பு இடம் தருகின்றது.

இதழ், அதழ்,
தோடு, ஏடு,
மடல், தளம்,
பாளை—என ஏழு பெயர்கள் இவ்வுறுப்பிற்கு உள. எனது உறுப்புகளில் என்னைக் காட்சிப்படுத்துவது இதழே. பளிச்சிடும் வண்ணம், வடிவம், மென்மை, மணம், கவர்ச்சி, எழில் யாவற்றாலும் இது தன்னை அறிமுகப்படுத்துக் கொள்வது. இதற்கமைந்த பெயர்கள், தொல்காப்பியம் நிகண்டுகளில்உள்ளன. அவற்றைக் கூர்ந்து நோக்கினால் பின்வரும் வேறுபாடுகள் புலப்படும்.

---

198 பட். பா: 90, 91, 98.

இதழ் என்பது பொதுப்பெயர் என்றாலும் சிறப்பாக மெல்லியல்புடையதைக் குறிக்கும். பெரும்பான்மையானவற்றில் புல்லியும் அல்லியும் இதழ் எனப்படும்.

அதழ் என்பது உள்ளீடாகச் சுருங்கியிருந்து விரிவது.

"*ஞெலிபுடன் நிரைத்த ஞெகிழ் அதழ்க் கோடலும்*"[199] –என்றும்

"*பூங்கொடி அவரைப் பொய் அதழ்*"[200] –என்றும் காந்தள் அவரை மலர்களின் இதழ் 'அதழ்' எனப்பட்டன. அத்தியின் உள்ளி தழையும் 'அதழ்' எனலாம்.

தோடு இதழைவிடச் சற்றுத் தடிப்பானது. ஆனால், மென்மை குறையாதது. கொன்றை போன்றவற்றைக் கொள்ளலாம். "*தோடு ஏறும் மலர்க்கொன்றை*"[201] என்பது தேவாரம்.

ஏடு, தோட்டைவிடச் சற்றுத் தடிப்பானது.

மடல், நீட்சியும் மடிப்பு அமைப்பும் கொண்டது. நடுவில் ஈர்க்குள்ளது. "*மடல் பெரிது தாழை*"[202] என்பதால் உணரலாம். இம்மடல் முடங்கல் எழுதப் பயன்பட்டது.

தளம் தட்டையானது. வளப்பமானது. இது புற இதழ். "*தள வள முகைகொள்*"[203] எனச் சீவக சிந்தாமணி காட்டுகின்றது.

பாளை மிகத் தடிப்பானது. மென்மை என்று சொல்ல இயலாதது. பூங்கொத்துகளை மூடியிருப்பது. தென்னையின் பாளை அறிவீர்.

இவ்வாறு ஒருறுப்பே இத்துணை வகைப் பெயர்களைத் தன் தன்மைகளால் பெற்றுள்ளது.

இவ்வாறு அறிமுகம் பெறும் தாழையைத் தொடர்ந்து புதிராக அறிமுகம் பெற்றுள்ளதாக அடுத்து சிறுவாய்ப் பாடலில் அமைந்துள்ள பூ அத்திப் பூ.

---

199 கலி : 101: 4
200 அகம்: 108 :8.
201 அப். தே : திருநல்லூர் : 8
202 வாக்குண்டாம் : 12
203 சீவ. சி · 751

# அத்தி பூத்ததும் ஆலங்காய் காய்த்ததும்.

அத்திப் பூ என்ற உடனேயே 'அத்தி பூத்தாற்போல; என்னும் பழமொழியும் நினைவிற்கு வரும். அதுவே அத்தி பூக்கும் என்பதைக் கூறுகின்றது. அருமையாகக் காணப்படுவோரை அத் தொடரால் குறிப்பிடுவதால் அத்திப் பூ அருமையாகக் காணப் படும் என்பதும் தெரிகின்றது. அஃதாவது காட்சிக்கு அரிதாக இருக்கும்; எளிதாக வெளிப்படையாகக் காண முடியாது என்பதாகும்.

ஆனால், பூவாது காய்க்கும் மரம் என்று ஒதுக்கி,

''கோளி பூவாது காய்க்கும் மரமே''[204]

—என்று அவற்றிற்குக் 'கோளி' என்றொரு பெயரும் கொடுத்துள்ளனர். இந்தப் பட்டியலில் ஆல், அத்தி, கொழிஞ்சி உள்ளன. இதுநிகண்டுகளின் பட்டியல் மேலும்,

''பூவாது பழுக்கும் சூலடிப் பலா''[205] என்று வேர்ப்பலாவை யும் கூட்டினர். ஔவையாரும் ''சொல்லாமலே செய்''பவரைப் பூவாது காய்க்கும் மரத்திற்கு ஒப்பிட்டுப் ''பலாமாவை.....பார்''[206] என்று இதற்கு முன்மொழித்தார் சிறுபஞ்சமூலமும் ''பூவாது காய்க்கும் மரமுள''[207] என்றது. இம்மரங்களில் ஆலமரத்தைக் குறிப்பாகக் காட்டினர். ''கோளி ஆலம்'' என அடைமொழி கொடுத்துப் புறநானூறும்[208] மலைபடுகடாமும் 9 பாடின.

இவற்றைக்கொண்டு பூ இல்லாமலே காய் உண்டாகும் என்று கொள்ளலாமா? அவ்வாறாயின், நான். 'இனப்பெருக்கத்தின் மூலம்' என்னும் அடிப்படையே அடிபட்டுப்போகும்.

பின் உண்மை என்ன?

---

204 பிங். நி : 2765
205 சித. மு. கோவை 8 : 17
206 தனி: சி ; ஔவையார் 81
207 சிறுபஞ்ச : 22.
208 ''முழுமுதல் தொலைந்த கோளி ஆலத்து'' —புறம் 58
209 ''கோடுபல முரஞ்சிய கோளி ஆலத்து'' —மலை :268.

அத்தி விடை தருகின்றது. 'அத்திக்குப் பூ உண்டு' என்பதை முன் சொன்ன பழமொழியே காட்டுகின்றது. அப்பூ வெளியே காட்சி இல்லாமல் புற இதழ் விரியாத மஞ்சள் நிறக் குடம்போன்ற பகுதிக்குள் நுண்ணிதாகப் பூக்கும். இது குடத்து விளக்கு; வெளிச்சம் வெளிவராது. இக்கால அறிவியலிலும் இது காணப்பட்டுள்ளது. அத்திப் பழத்தையும் ஆலம் பழத்தையும் ஒத்துப்பார்த்தால் இரண்டும் அமைப்பாலும் விதையின் நுண்மை யாலும் பெருக்கத்தாலும் ஒன்று போன்றவை. எனவே, அத்திக்குப் பூ உண்டென்றால் ஆலத்திற்கும் உண்டு. பின் ஏன் அத்திக்கு உள்ளே தெரிவதுபோன்று ஆலத்தில் தெரிவதில்லை? இங்குதான் தமிழ்ச்சொல்லின் ஆழம் புதிரை அவிழ்க்கின்றது.

பூத்தல் ஒரு செயல். இதழ்கள் கட்டுவிட்டு மலர்ந்து காட்சியளித்தல்தான் பூத்தல். இச்செயல் அத்தியில் புற இதழ் விரியாமல் உள் அகவிதழும் விரிந்து கொடுக்காமல் நனையாகத் தோன்றிய நிலையிலேயே வளர்ந்து விடுகின்றது. இதனின் சிறிது வேறுபாடாக ஆலத்தில் இதழ்களோ வெளிவராமல் உள்ளமைப்பாக நின்றுவிடுகின்றன. பிஞ்சு தோன்றுவதற்கு முன் அதன் குடத்தின் முனை மையம் சிறு துளையாக நெக்குவிடு கின்றது. இதன் வழி கரு ஏற்றம் நிகழ்கின்றது. இதுபோன்றே கொழிஞ்சி, பலா இரண்டின் பிஞ்சுகளிலும் அமைகின்றது.

இவ்வாறு, இவற்றிற்கு உள்ளேயே நான் அமைகின்றேன். வெளித் தோற்றங் கொள்ளேன். இந்த உண்மையை ஒரு நாட்டுப்புறத் தாய் தன் பாட்டில் காட்டுகின்றாள்:

குழந்தை தேம்பி அழுகின்றது. தேம்பல் உள்ளேயே செருமுகின்றது. அழும் குறி முகத்தில் தெரிகின்றது. கண்ணில் நீர் வரவில்லை. முளைக்கும்போதே முக்காட்டு அழுகை. குழந்தை வாய் விட்டு அழவேண்டும். இது நல்ல உடல்நலக் குழந்தைக்கு ஓர் அறிகுறியும் ஆகும். இக்குழந்தையோ உள்ளுக்குள்ளேயே வெம்புகின்றது. தாய் பார்த்தாள். 'கண்ணே! இப்படி அழக் கூடாது. பூட்டகமாக உள்ளுக்குள்ளே தேம்பாதே' என்கின்றாள். அதனை,

*"ஆலம் பூப்போலே—கண்ணே நீ*
*அத்திப் பூப்போலே*
*தேம்பி அழுகாதே—கண்ணே நீ*
*திட்டாதே வையாதே."*

—என்று வெளியே தோன்றாமல்

உள்ளிடத்திலேயே பூவாகும் ஆலத்தையும் அத்தியையும் சொல்லிப் பாடினாள். அந்த அழுகை, அழுகையாக இல்லையாம். உள்ளுக்குள்ளே தன்னைத் திட்டுவதுபோன்றும் வைவது போன்றும் உள்ளதாம்.

எனவே பூ இல்லாததென்று ஒன்றும் இல்லை.

"பூத்தாலும் காயா மரம் உள."[210] மரம் என்ன? செடி, கொடிகளும் உள. அஃது இயற்கை. முன் நான் சொன்னபடி ஆண் உறுப்பில்லாத, பெண் உறுப்பில்லாத பூக்களைக் கொண்டவை, அலிபூக்களைக் கொண்டவை, மலட்டுப் பூக்களைக் கொண்டவை காய்க்க வழியில்லை. பாதிரி பூத்தாலும் காய்க்காது.

அத்திப் பூ காட்டும் என்னைப்பற்றிய அருஞ்செய்திகள் இவை.

## ஆவிரை காட்டும் பூவகை.

ஆவிரம் பூ பற்றிச் சொன்னேன். இது கோட்டிலும் கொடியிலும் நிலத்திலும் பூப்பது. பொன் வண்ணத்தது. அதனால், பொன்னாவிரை எனப்படும். 'பூவோ பூ' பாடலில் அமைந்த இந்த ஆவிரையையும் தாழம் பூவையும் பொருத்திச் சில கருத்தைச் சொல்லவேண்டும். ஆவிரை இதழ் கொண்டது. தாழை மடல் கொண்டது. இவ்வேறுபாட்டுடன் ஆவிரை கொத்துக் கொத்தாகப் பூப்பது. தாழை தனிப் பூ. நான் தனியாகவும் தோன்றுவேன். கொத்தாகவும் தோன்றுவேன். இதனால் தனிக் காய்க்கும் கொத்து, காய்க்கும் மூலமாவேன். கொத்திலும் எத்துணை வகை கொத்தை அறிவிக்க,

கொத்து, தொத்து
துணர், இணர்

மஞ்சரி [211] என்னும் சொற்களுடன் 'தொடர்ச்சி' என்றொரு சொல்லும் உண்டு. 'குலை' என்றும் சொல்லப்படும். இச்சொற்கள் ஒரு காம்பில் பலவாகவும் சிலவாகவும் தோன்றும் எனது தொகுதியைக் குறிக்கும் சொற்கள். இவை என்னில்

---

210 பழ : 94
211 தொத்து மஞ்சரி துணரிணர் தொடர்ச்சி
மற்றிவை யனைத்தும் மலர்க்கொத் தென்ப" — பிங். நி : 2803.

உள்ள சிறுவேறுபாடுகளைக் காட்டுபவை. தமிழ்ச்சொல்லின் வளத்தை மட்டுமன்று, "எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே"[212] என்றபடி தனிப்பொருள் காட்டும் சிறப்புடையது என்பதற்கும் இவற்றைக் கொள்ளலாம்.

ஒரு ஒழுங்கில்லாமல் மேலும் கீழுமாக் அமைந்தது கொத்து. தலைகீழாகத் தொங்குவது தொத்து. துண்ணென்று வெடித்துப் பூக்கும் தொகுதி துணர். ஒழுங்குடன் நெருக்கமாக அமைந்தது இணர். மிகச் செறிவாகத் துய்வான பூக்களைக்கொண்டது மஞ்சரி. தொடர்ந்து மேல்நோக்கியோ பக்கவாட்டிலோ பூப்பது தொடர்ச்சி ஒருவகை இனத்தொகுப்பு குலை எனப்படும். நெய்தல் "மணிக் குலை கட் கமழ் நெய்தல்"[213] எனப்பட்டது.

இச்சொற்களுக்கேற்பச் சில இச்சொற்களையே தம் பெயர்களாகக் கொண்டவையும் உள. நாயுருவிக்கு 'மஞ்சரி' என்று பெயர். 'மஞ்சரிப்பா' என்றொரு நூல்வகையே உண்டு. அலரி வகை ஒன்றிற்குக் 'கொத்தலரி' என்று பெயர். 'துணரி' என் றொன்றிற்குப் பெயர்.

தாழை தனிப்பூ என்றாலும் இதன் மடல்கள் அடுக்கடுக்காக உள்ளமை கொண்டு அதற்கும் 'இணர்' அடைமொழி கொடுத்து

*"வால் இணர்மடல் தாழை"*[214] என்றனர்.

ஆவிரை ஒரு கொத்து இனம். அதனில் இத்துணை வகை களும் அமைந்துள்ளன.

## தொடுக்காத தொடையல்கள்

நான் கொத்தாகப் பூப்பேன் என்பது மட்டும் அன்று; இயற்கையிலே கோதையாகவே பூப்பேன். கட்டாமலே கண்ணி யாகக் காட்சி தருவேன். தொடுக்காமலே மாலையாக மலர்வேன். கொத்தான அமைப்பில் ஓர் ஒழுங்குடன் தொடர்ந்து அமைந்து காட்சி தருவேன். வரிசையாகவும் மேலிருந்து கீழாகத் தொங்கும் நிலையிலும் வர வரச் சிறுத்த பூக்களைக் கொண்டும் இயற்கை

212 தொல் : சொல் : 155.
213 குறி. பா : 84.
214 பட். பா : 118.

யாகவே அமைந்த எனது காட்சி மேற்சொன்னவாறு கோதை போன்றும், கண்ணி, மாலை முதலியன போன்றும் தோற்றமாகும்.

பிடவத்தில் நான் இவ்வாறு மலர்ந்திருப்பதை மருதன் இளநாகனார் பார்த்துச் சுவைத்தார். கண்ணியாகக் கட்டியது போன்று இருந்த இயற்கை அமைப்பு அவரது உள்ளத்தைக் கவர்ந்தது.

*"சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்*
*கண்ணியின் மலரும்"*[215] —என்று பாடினார்.

காஞ்சி மரத்தில் சற்றுப் பெரிதாக மலர்வேன். இக்காட்சி சிறிதளவு திரட்சி உடையது. புலவர் நத்தத்தனார், இது பெண்கள் தலைக்குச் சூடும் கோதை போல் உள்ளதைக் கண்டு,

*"நறும்பூங் கோதை தொடுத்த நாட்சினை*
*குறுங்காற் காஞ்சி"*[216] யாகக் கண்டு மகிழ்ந்தார்.

பக்கத்தில் நிற்பவர் போன்று மூலங்கிழார்,

*"குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்லிணர்"*[217] —என்று வழிமொழிகின்றார். மேலும் வழிமொழிவோர் பலர்.

கடம்பில் நான் அமையும் அமைப்பு கோதையாகவும் அமையும் வளமான மரத்தில் நான் அமைவது மாலை போன்றதாகும்.

*"திணிநிலைக் கடம்பின் திரள்அரை வளைஇய*
*துணைஅமை மாலை"*[218] என்பது கபிலர் கண்ட காட்சியின் பாட்டு: ஆம், ஆம். *"கடம்பு சூடிய கண்ணி மாலை போல"*[219] த்தான் உளது என்கின்றார் திருத்தக்க தேவர்.

*"கடம்பின் துணைஆர் கோதை"* (சிறுபாண் : 69)
*"கோதை போலப் பூத்தலின் கோதை என்றார்"* என்று நச்சினார்க்கினியர் காட்டினார். கடம்புடன் கொன்றையும் இவ்வாறு அமையும். அதனால் இதற்குச் சரக்கொன்றை என்று

---

215 அகம் : 34
216 சிறுபாண் : 178, 179
217 அகம் : 341
218 குறி. பா: 176, 177
219 சீவ. சி: 990.

பெயர். செய்யுளில் எதுகை மோனை அமைப்பில் 'செந்தொடை' என்பது ஒன்று. இப்பெயரே 'தொடை' என்ற அமைப்பில் தொடுக்கப்படும் தொடையலுடன் தொடர்புகொண்டது. இத் தொடர்பை விளக்கும் உரையாளர் பேராசிரியர்,

*''செந்தொடையும் செய்யுட்பொலிவு செய்யுங்கால்*
*கொன்றையும் கடம்பும் போல (செடியிலும் மரத்திலும்)*
*நின்றவாறே தொடைப் பொலிவு கொள்ளும் என்பதாம்''*[220] –
–எனக்காட்டினார்.

கொன்றையில் நான் இவ்வாறு வரிசையாக மாலைபோன்று பூத்துத் தொங்குவதை மேலை நாட்டாரும் பார்த்துச் சுவைத்தனர். இதனால் என்னை ''இந்தியன் லேபர்நம்''[221] என்றனர். ஆங்கிலத்தில் ''லேபர்நம்'' என்றால் பொன்மாலை என்று பொருள்.

கொன்றையில் மட்டுமன்று, அதைவிடச் சற்றுப் பெரிதாக வேங்கையில் மாலையாகக் காட்சி தருவேன். மாணிக்கவாசகர் கண்டு களித்து,

*''மொய்யார் வளரிள வேங்கை*
*பொன்மாலையின் முன்னவே''*[222] என்று கோவையில் கோத்தார். பொன்னிறமான மஞ்சள் நிறத்தில் நான் வேங்கையில் தோன்றுவதைத் திருத்தக்கதேவர் அகல விரித்துப் பார்த்தார். எனது மஞ்சள் நிற வரிசைக்கு இருபுறமும் பசுமை இலைகள் தோன்றுவதால் அவரது கண்களுக்குப் பச்சைக் கயிற்றில் பொன்னால் ஆன தாலி வரிசை கோத்தது போன்று காட்சி தந்தேன்.

இவ்வாறு நான் பிறவியிலேயே மாலையாகி என்னைப் பெற்ற செடிகட்கும் கொடிகட்கும் மரத்திற்கும் மாலை சூட்டி நன்றி படைக்கின்றேன். உங்கள் கண்களுக்கும் செய்யுள்களுக்கும் மாலை அணிவிக்கின்றேன்.

---

220 தொல் : செய் : 94 பேராசிரியர் உரை
221 *Emcyclopaedia of Britanica Vol : 13 : Page 566.*
222 திருக்கோ. 262.

## வடிவப் பெயர்கள்

தற்காலத்து அறிவியலில் எனது வடிவங்கள் பெயரிடப்பட்டுள்ளன. ஊமத்தை, அடம்பு போன்றவை ஓரிதழாக அடியிலிருந்து குழாய் போன்று வந்து மேலே விரிந்து காட்சியளிக்கும் புனல் போன்ற தோற்றம் உடைமையால் புனல் வடிவம் என்று உவமத் தொகையாகப் பெயரிடப்பட்டேன். இதுபோன்றே குழாய் வடிவம், நாக்கு வடிவம், பை வடிவம், வளர்ச்சி முடி வடிவம்,, ஈருதட்டு வடிவம், வண்ணத்தி வடிவம், முறுக்கிய வடிவம், பொய்ம்முக வடிவம் என்றெல்லாம் பெயர் கொடுக்கப்பட்டுள்ளேன்.

தமிழ்ச் சான்றோர், முற்காலத்துக் கோடிட்டுக் காட்டியவையே இப்பெயர்கள். இப்பெயர்கள் இவ்வுருவில் இல்லை. ஆயினும், உவமை முகமாக இவ்வடிவப் பெயர்களை இலக்கியங்கள் காட்டுகின்றன. இது விரிவானது. சான்றிற்குச் சில காட்டுவேன்:

| | | |
|---|---|---|
| குடை வடிவம் : | கோங்கம் பூ: | " புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ" (நற் : 48) |
| பொரி வடிவம் : | புன்கம் பூ : | "பொரி உரு உறழப் புன்கு பூ உதிர" (கலி ; 33 : 10) |
| பொரிவடிவம் : | புன்னைப்பூ : | "பல்லி நெரித்த சினைபோலும் நீளிரும் புன்னைப் பொரிப்பூ" (பழ : 1-3.) |
| விரல் வடிவம் : | காந்தட்பூ : | "காந்தன் முகை புரைவிரல்" (புற 144 : 9.) |
| நக வடிவம் : | முருக்கம் பூ : | "குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று நகைமுகை மகளிர் ஊட்டு உகிர் கடுக்கும்" (ஊட்டு உகிர் : வண்ணம் ஊட்டிய நகம்- (-அகம் : 317) |
| பந்து வடிவம் : | வெண்கடப்பம் பூ : | "வெண்கடம்பு பந்தணிந்தனவே" (சீவ. சி : 1650) |

உடைவளை
வடிவம் : வெண் "உடைவளை கடுப்ப மலர்ந்த
காந்தள் : காந்தள்" (புறம் : 90)

சுரி வடிவம் : மராம் பூ : "வலம்புரி மராஅத்துச் சுரம் கமழ் புதுவீ" (அகம் : 83)

தேர் உருளை "தேர்க்கால் மலர்ந்தன வகுளம்
வடிவம் : மகிழம் பூ : (மகிழம்பூ)" (சீவ. சி : 1650)

இவைபோன்ற பல வடிவமைப்புகளைக் கண்டு குறித்தனர் பழஞ்சான்றோர். இக்கலையை வளர்க்காது விடுத்த தமிழரை என்னென்று கூறுவேன்! எண்ணி எண்ணி வாடி வீழ்ந்து சருகு ஆகின்றேன்.

## ஒருநாள் நிறை வாழ்வு

எனக்கு நாள்மலர் என்றொரு சிறப்பு உண்டு இந்த நாள் என்னும் சொல் காலைப்பொழுதைக் குறிக்கும்போது காலையில் மலர்வேன் என்னும் பொருள் தரும். புதுமையைக் குறிக்கும்போது புது மலர்ச்சி நிலையைக் குறிக்கும். உள்ளீடான குறிப்புப் பொருள் ஒன்று கூறுவேன். அஃது ஒரு நாள் வாழ்வு என்பது.

எனது வாழ்வை,

*காலை பிறந்து பகலில் வளர்ந்துபின்*
*மாலை மறையும் மலர்* —என்று புதுக்குறள் படைத்துக் காட்டலாம் சில இனங்களில் சிறப்பாக நீர் வாழ் இனங்களில் நான் சில நாள்கள் வாழ்வு பெறினும் பெருமளவில் என்வாழ்வு ஒரு நாள் வாழ்வே.

"மாந்தன் காட்டிலுள்ள பூவைப்போல் பூக்கிறான்.
அதன்மேல் ஒரு காற்றடித்தால் அது அழிந்துவிடும்.
அது இருந்த இடமும் இனி அதை அறியாது"[223]

223 *விவி : சங்கீதங்கள் : 103 : 15, 16.*

—என்றெல்லாம் நிலையாமைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப் படலாம்; நிலையாத வாழ்வாகலாம். ஆனால், நிறையாத வாழ்வு அன்று. ஏனெனில் தன்னல வாழ்வன்று; பிறர் நல வாழ்வு. எழிலான காட்சி வழங்கி, மணம் ஏற்றி, தேன் ஊட்டி வரவேற்கும் வாழ்வு. சூடவும் சூட்டவும், அணியவும் கனியவும் ஆட்படும் அருமை வாழ்வு. புலவர்கள் பாட்டில் அமைந்து புகழ் நாட்டும் பெருவாழ்வு. இவற்றால் நிறை வாழ்வு கொண்ட வாழ்வு எனது வாழ்வு.

'போகாதா' என்று பொருமாமல், 'போகாதே' என்று போற்றும் வாழ்வு எனது வாழ்வு. ஒரு நாளில் நான் ஒடுங்கி விடுவதை எவரும் விரும்பமாட்டார். ஒரு மேல் நாட்டுக் கவிஞர் 'எர்ரிக்' என்பார்.

*'மரந்தரு கனிகளின் முன்னறி விப்பே!*
*மலரே! விரைவாய் ஏன்வீழ் கின்றாய்?*
*மற்றுன் வாழ்நாள் கழிதற் கன்றே.*
*ஆனால், மேலும் சிலநாள் நின்றே*
*அரிவையர் நாணம், முறுவற் கனவாய்த்*
*தருவாய்; பின்னர் பிரிவாய் இனிதாய்'*[224] –என்று

எனது ஒருநாள் வாழ்வை மறுத்துப் பரிந்துரைத்து வேண்டு கின்றார்.

அனைத்து வகையிலும் அருஞ்சிறப்பில் திகழும் என்னைப் பாடாத இலக்கியம் இல்லை; புலவர் இலர். மோவாத, சூடாத கொடியவரும் இலர்.

தமிழ்ப் புலவர் அனைத்து உத்திகளிலும் என்னைப் பாடியுள்ளனர். என்னைப் பாடக் கொண்ட தமிழையே என் உருவகமாக்கினர். சொல் பூம்போதாக, பொருள் தாது ஆகத் தமிழ் என்னும் மல்லிகை மாலை உருவாயிற்று.

---

224 *Fair pledges of the fruitful tree*
*Why do you fall so fast?*
*Your date is not so past*
*But, you may stay yet there awhile*
*To blush and gently smile*
*And go at last.* —TO BLOSSOMS-HERRIC

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால் – மல்லிகையின்
வண்டார் கமழ்தாமம் அன்றே; மலையாத
தண்டாரான் கூடல் தமிழ்"[225]

பாவேந்தரோ,

"... ... ... ... ... மனிதராம் புதுப்புனல்மீது
செந்தா மரைக்காடு பூத்தது போலச்
செழித்த என் தமிழே"[226] —என்று தமிழின்
தோற்றத்தையே என்னுருவில் பாடினார்.

எனது வரலாற்றை நிறைவு செய்யும் முன் எனது தொன்மையான தலைமுறையைக் குறிக்கவேண்டும். உண்மையில் அது எல்லை கட்ட முடியாது நீள்வது. இப்போதைக்கு என் கொடிவழித் தலைமைக்குக் கிடைத்திருக்கும் சான்று 15 கோடி ஆண்டுகட்கு முந்தியதாகும். பீகார் மாநிலம், இராசமகால் மலைப் பகுதியில் என்னுடன் கூடிய இலை, பட்டையின் படிவங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அதன் தொன்மை '15 கோடி ஆண்டுகட்கு முந்தியது' என ஆய்வாளர் வரையறுத்துள்ளனர். இப்படிவங்கள் கல்கத்தா இந்தியப் பொருட்காட்சியில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளன.

அனைத்து வகையிலும் என் வரலாறு இனியது. இத்தகைய எனது வரலாற்றைக் கேட்ட நீங்கள் என்னைப் பற்றி என்ன சொல்ல எண்ணுகிறீர்களோ? எனக்கு அறிய ஆவல்தான்.

தமிழ்ப்புலவர்கள் தமிழில் சிறப்பித்துச் சொல்ல அடைமொழிகள் எத்துணை உண்டோ அவற்றையெல்லாம் அடுக்கி அடுக்கிச் சொல்லிவிட்டனர். வண்ணனைகளும் கற்பனைகளும் அளவிற்கு அடங்காதவையாக வடிக்கப்பட்டன.

உதகை மலையில் நான் பூத்துக் குலுங்கும் பெரும் பரப்பைப் பாவேந்தர் நின்று கண்டு சொக்கிப்போனார். ஏடெடுத்து எழுதினார். பலவகைப் பூவின் பரப்பெல்லாம் எழுதி, அவையெல்லாம் அழகின் சிறப்பாகக் கண்டு,

---

225 மது. கா : இறுதிவெண்பா
226 பா. தா. கவி : இசையமுது

"இன்னும் இருந்த அழகின் சிரிப்பையும்
எழுதி முடிக்க இருபது ஆண்டுகள்
கழியும்'[227] என்றார்.

மேல் எல்லை எவ்வளவில் உண்டோ அவ்வளவில் நான் தமிழகத்தில் போற்றப் பட்டுள்ளேன். தமிழகம் போற்றினால் உலகம் அதனை ஏற்றுக் கொண்டது போல்தான். இருந்தாலும் உலக அளவில் நான் எந்த இடத்தில் இருகின்றேன்? உலக மொழியாம் ஆங்கிலத்தின் சொற்களை எல்லாம் பொருளுடன் தொகுத்துள்ள "வெப்சிடெர்ஃச் அகரமுதலி" (*WEBSTER'S DICTIONARY*) முதல்தொகுதியை அன்புகூர்ந்து திருப்புக! அதன் பக்கம் 875இல் நிறுத்துக! உங்களது கண்பார்வையை 3 ஆவது பத்தியில், ஈற்றிலிருந்து 4 ஆவது வரியில் பதித்திடுக:

"*FLOWER = BEST OF ANYTHING*"

'பூ = எந்தப் பொருளிலும் சிறந்தது'-என இருக்கின்றதா? இஃது எனது புகழின் மாணிக்கச் சுருக்கம்.

அப்படியே பாவேந்தர் பாரதிதாசனாரிடம் வருக! அவர் தமது குயில் பாட்டு—தொகுப்பில் 19 ஆவது பக்கத்தை நீட்டுவார்; நான்காவது பாடலைக் காட்டுவார்:

"கொள்ளை கொள்ளை கொடிமுல்லை
கோத்த முத்தும் இணையில்லை" -இஃது எனது புகழ் எல்லை. இஃது எனது இனத்து மலர் ஒன்றை வைத்துக் காட்டும் வரலாற்று ஒளி.

வரலாற்று ஒளியில் வைக்க முல்லையை ஏன் வைத்து முடிக்கின்றாய்? —என்று வினவலாம். ஏற்கத் தக்க வினாதான்.

ஏதாவது ஒன்றைச் சொல்லித்தானே முடிக்கவேண்டும் என்று முல்லையைக் குறிக்கவில்லை. இதனில் ஓர் இன்றியமை யாமை உள்ளது. அஃது என்ன இன்றியமையாமை?

உலகில் நான் ஆயிரக்கணக்கில் உள்ளேன். அக்கணக்கிலும் பயன் கொள்ளப்படும் என் இனத்தார் நூற்றுக் கணக்

227 குயில் : குன்றூர்ப்பாட்டு : 182-184

கினர். அவருள்ளும் இலக்கியம் பெற்ற இனத்தார் நூற்றளவினர். நூற்றளவிலும் மாந்தருடன் ஒருங்கு இணைந்தவை பல. பலவற்றுள்ளும் மாந்தரது வாழ்க்கையில் இடம்பெற்றவை சில. இடம்பெற்றவற்றுள்ளும் இன்றியமையாதது ஆகித் தமிழர்தம் வாழ்வில் மரபுகளை வகுத்த பணி முல்லைக்கு உண்டு. எனவே,

முல்லை மலர்,
வாழ்வியல் மலர்.

என்னைப் பேசவைக்கின்றவர் இந்த வாழ்வியல் மலரை விளக்கத்துடன் உங்களோடு தொடர்பு கொள்வார்.

தொடர்ந்து,

**மக்கள் மலர் மலரும்.**
**தெய்வ மலர் திகழும்.**
**திணை மலர்கள் தினவேற்றும்.**
**மும்முடி மலர்கள் முழங்கும்.**
**அறிமுக மலர்கள் அலரும்.**
**அரிய மலர்கள் புரியும்.**
**எளிய மலர்கள் ஏற்றம் பெறும்.**
**முருங்கையில் முடியும்.**

"வாழ்க முல்லைப் பூ முதல் முருங்கப் பூ வரை"
*என வாழ்த்தி வாழ்வீராக!*

என்றும் உங்களுக்காக மலரும்,
"பூ"

## முல்லை முதல் மூன்று:

வாழ்வியல் மலர்.

மக்கள் மலர்.

தெய்வ மலர்.

## முடிமலர் வரை மூன்று:

அகத்திணை மலர்கள்.

புறத்திணை மலர்கள்.

மும்முடி மலர்கள்.

# 3. முல்லை முதல் முருங்கை வரை

## வாழ்வியல் மலர்

### முல்லைப் பூ

## மலர் பாய்ந்தால் மணவறை அழைப்பு

ஒரு தமிழ்க் குடும்பம். ஒவ்வொருவரும் உணர்ச்சிக் கொப்பளிப்பில் உள்ளனர். வீடே கலவரப்பட்டுள்ளது. நிகழ்ந்தது என்ன?

முதிய தாய் ஒருத்தி கைகளை நெரித்தவாறே ஓடி வருகின்றாள். இல்லத்துத் தலைவியிடம் ஏதோ 'கிசு கிசு' க்கின்றாள். கேட்ட அந்த நற்றாய், தீயைத் தொட்ட வள் போலக் கைகளை உதறுகின்றாள். தந்தையின் காதில் ஓதுகின்றாள். தந்தையின் கண்கள் நெருப்புக் கோளமாகின்றன. மூத்த பையன் தினவெடுத்த காளை போன்று பாய்கின்றான். அடுத்தவன் 'அப்படியோ' என்று வீட்டில் யாரையோ தேடி ஓடுகின்றான்.

வெடிச் சொற்களும், தடிப் பேச்சுகளும் போகப் போக முணகலாகின்றன. சூடு தணிகின்றது. 'அப்ப்டி

இப்படி'ப் பேச்சுகள் ஓய்ந்து அமைதிப் பேச்சு நடக்கின்றது. இரவெல்லாம் பேசுகின்றனர். ஒரு முடிவிற்கு வந்து விட்டனர்.

பொழுது புலர்ந்தது. அமைதியாக அடுத்த வீட்டுக் 'குட்டி' வருகின்றாள். முதிய தாய், 'என்னேடி! எங்கே?' என்கின்றாள், வந்தவள் ஒன்றும் அறியாதவள் போன்று விழிக்கின்றாள். அந்த விழிப்பில் நடிப்பு நெளிகின்றது.

'எங்கே அவள்?'—சிறியவன் எங்கோ பார்த்தவாறே வினவுகின்றான்.

வந்த பாவை அறை, அடுக்களை எல்லாம் தேடுகின்றாள். சொல்லி வைத்தது போன்று அடுத்துள்ள கொல்லைக் காட்டிற்குப் போகின்றாள். அங்கே,

இத்துணைக்கும் காரணமான பூம்பாவை ஒரு புதரண்டை ஒடுங்கிக் கிடக்கின்றாள். அச்ச உணர்ச்சியால் முடங்கிக் கிடக்கின்றாள். வந்த நடிகையோ பொல்லாத கள்ளி. அவள்தான் இத்துணைக்கும் சுக்கான். காதல் துறையில் தோழி அறியாமல் துரும்பும் அசைவதில்லை. ஒன்றுந் தெரியாதவள்போல் பேச்சுக் கொடுக்கின்றாள்.

முடங்கி கிடந்தவள் முணகலாகவே :

'நேற்று மாலை எனது கூந்தலைப் புதுப்பிக்கத் தாய் வெண்ணெய்யும் கையுமாக வந்தாள். எனது பழைய முடியை அவிழ்த்தாள். உடனே நெருப்பைத் தொட்டவள் போன்று கைகளை நெரித்துக் கொண்டு எழுந்து விட்டாள்.

'ஏன்? கூந்தலில் தேளிருந்து கொட்டிற்றா என்ன?'

'போடி கூந்தலில் தேளும் பாம்புமோ' வரும்? ஒரு பூ வந்தது. கூந்தலில் பொதிந்திருந்த ஒரு பூ விழுந்தது.'

'அதற்கோ அப்படி நெரித்தாள்?'

'அது பூவா? எனது களவைக் காட்டிக் கொடுத்த கள்'.

'கள்ளா? அப்படி என்றால்',

'கள்ளைப் பிறர் காணாமல் உண்பர். அக்கள் உள்ளே வேலை செய்து உடலில் தள்ளாட்டத்தை ஏற் படுத்திவிடும். பின்னர் உண்டவரே நாணமின்றித் தாம் குடித்ததைச் சொல்லுவர். 'கடுங்கள்ளை உண்ண லாமோ' என்று கேட்டோர் நடுங்குவர் அன்றோ? அது போன்றுதான் பூவைக் கண்ட தாய் நடுங்கினாள். கள் காட்டிக் கொடுப்பது போன்று இந்த ஒரு பூவும் என் களவைக் காட்டிக் கொடுத்து விட்டதடி.'

'ஒரு பூவா? அஃது என்ன பூவோ?'

'என்னபூதான்விழும்? முல்லைப் பூ தான் விழுந்தது?'

'முல்லைப் பூவா? அஃது எப்படி உன் கூந்தலில் வந்தது?'

'போடி... அவர் சூடிவந்த திரண்ட முல்லை மாலை யின் ஒரு துணுக்கைச் சூட்டியதுதான் உனக்குத் தெரி யுமே. அதை அப்படியே கூந்தலுக்குள் பொதிந்து கொண்டேன் அன்றோ? அதில் ஒரு பூதான் விழுந்தது. ஒரு பூதான். வீடே கொந்தளித்திருக்கின்றது. என்ன ஆயிற்று சொல்லேன். அஞ்சித்தவிக்கின்றேனே; ஆறுதல் சொல்லடி.'

'அப்படித்தானடி குதிப்பார்கள். எதிர் வீட்டில் கொதித்தது தெரியாதா என்ன? அங்குஎன்ன ஆயிற்றோ அதுதான் இங்கும் முடிவாயிற்று. அடுத்த கிழமை அவர் வீட்டாரோடு பேசித் திருமண ஏற்பாடு செய்வதென்று முடிவெடுத்துள்ளார்கள். மணப்பெண்ணே! வாடி மனைக்குப் போகலாம்.'

முடிவைக் கேட்டவள் முடியில் கைவைத்து எஞ்சி யிருந்த பின்னலையும் அவிழ்த்து அங்கு பொதிந்திருந்த முல்லை மாலைத் துணுக்கை எடுத்து முத்தமிட்டாள். முத்தத்தோடு ஒருபெருமூச்சு பிறந்தது. அதில் இன்பப் பூரிப்பு ஒலித்தது.

ஆம், ஒரு முல்லைப் பூதான் இத்துணைக் கலவரங்களை யும் தூண்டிவிட்டது.

இப்படி ஓர் ஓருறுப்பு நாடகத்தை கலித்தொகை ஒரு பாடலில் நடத்துகின்றது :

"தோழி! நாம்
காணாமை உண்ட கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க உரைத்தாங்குக்
கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம்; கண்டாய்.
நம்
புல்லினத் தாய மகன்சூடி வந்ததோர்
முல்லை ஒரு காழும் கண்ணியும் — எல்லியால்
கூந்தலுள் பெய்து முடித்தேன்மன்; தோழி!
யாய்,
வெண்ணெய் உரைஇ விரித்த கதுப்போடே
அன்னையும் அத்தனும் இல்லராய் — ஆய் நாண
அன்னைமுன் வீழ்ந்ததன்று அப்பூ.
அதனை,
வினவலும் செய்யாள்; சினவலும் செய்யாள்.
நெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப் போயினாள். யானும்என்
சாந்துளர் கூழை முடியா, நிலம் தாழ்ந்த
பூங்கரை நீலம் தழீஇத் தளர்பு ஒல்கிப்
பாங்கரும் கானத்து ஒளித்தேன்.

தோழி : அதற்கு, எல்லா'

ஈங்கு எவன் அஞ்சுவது?
அஞ்சல்!
அவன் கண்ணி நீ புனைந்தா யாயின் நமரும்.
அவன்கண் அடைசூழ்ந்தார் நின்னை — அகன்கண்
வரைப்பின் மணல்தாழப் பெய்து, திரைப்பில்
வதுவையும் ஈங்கே அயர்வர் — அதுவேயாம்
அல்கலும் சூழ்ந்த வினை' 1

இது நடக்காததன் வண்ணனை அன்று. நடப்பின் படப்பிடிப்பு. நாட்டு நடப்புதான் நாடகப்பாடலாகியுள்ளது.

ஒரு காளை தான் அணிந்திருந்த முல்லைப் பூவை ஒரு கன்னியின் கூந்தலில் சூட்டினால் அவள் அவனுக்கு உரியவள்

1. கலி : 115

ஆகிவிடுவாள்; ஆகிவிடவேண்டும்; ஆக்கிவிடவேண்டும். வேறு மாற்று இல்லை. இது முற்கால விதிப்பு. விதிவிலக்கு இல்லாத மரபு. அதைத்தான் இப்பாடல் நிகழ்ச்சி காட்டுகின்றது.

அவன் அவளுக்குச் சூடவேண்டும் என்பதுகூட அன்று.

ஓர் ஏறு தழுவல் நிகழ்ச்சி நடந்தது. ஆம் மஞ்சு விரட்டு நிகழ்ச்சி. ஒரு காளை வெறித்து வந்த காளையை அடக்கப் பாய்ந்தான். காளையின் கழுத்தைத் தழுவி அழுத்தினான். அவன் அணிந்திருந்த முல்லை மாலை காளையின் கொம்பில் சிக்கிக்கொண்டது. திமிறிய அலைப் பால் மாலை பிய்ந்து பூக்கள் சிதறின. ஒரு பூ வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த ஒரு குமரியின் கூந்தலில் போய்ச் செருகிக்கொண்டது. முல்லைப் பூவோடு காதலுணர்வும் பாய்ந்துவிட்டது. அவளும்தொலைத்தபெரும்பொருளைப் பெற்றது போலத் தலையில் அப்பூவை முடித்துக் கொண் டாள். ஆனால், அதை அடுத்து அவளுக்கொரு அச்சம் வந்தது. தாய் தலையில் முல்லைப் பூவைப் பார்த்தால், 'இது நான் முடித்ததில்லையே! பூ முடிக்கவும் தெரியாத உன் தலையில் எப்படியடி முல்லை வந்தது?' என்று வினவுவாளே என்று நடுங்கினாள். இவள் கதையும் முடிவில் மணவறையில்தான் முடிந்தது.[1]

முல்லைப் பூ அந்த அளவு வாழ்வியலைப் பிணிப்பதாக இருந்தது.

குமரனையும் குமரியையும் பிணைத்து மணமகன் மண மகளாக்கும் வாழ்வியற் சின்னமாகும் முல்லைப் பூ

மரபாகவும் விதியாகவும் இப்பழக்கம், முல்லை நிலத்து மக்க ளாகிய ஆயர் குலத்திற்குரியதாகும். இஃதே ஏனையோருக்கும் மர பாக வளர்ந்தது. தமிழ் மாந்தரது வாழ்வு வளர்ச்சியில் முல்லை நில வாழ்க்கை இரண்டாவது படி, முதற்படி மலை வாழ்க்கை. அது குறிப்பிடத்தக்க வரையறைகளைக் கொண்டது அன்று; விதிகளைக் கொண்டதன்று. மலையை விட்டிறங்கி அமைத்துக் கொண்ட முல்லை நில வாழ்க்கைதான் முதன்முதலில் வரையறைப்பட்ட வாழ்க்கையாயிற்று. அங்கு முளைத்த இயற்கை நெறிகள், பிற வளர்ச்சி வாழ்விற்கும் அடித்தளமாயின. முல்லை நிலத்து வீரன்

---

1 கலி: 107

புலியைக் கொன்று அதன் பல்லைத் தன் வீரச் சின்னமாகக் கொணர்ந்தான். அதில் நெஞ்சைப் பறி கொடுத்த குமரிக்கு அப் பல்லையே வாழ்வுச் சின்னமாக அணிவித்தான். அவன் கணவன் ஆனான்; அவள் மனைவி ஆனாள். அம் முல்லை நில வீரன் சூட்டிய சின்னந்தான் இன்றும் தாலி உருவில் நம்மிடையே உள்ளது.

அந்த முல்லை நிலத்தின் தனிப்பெருஞ் சின்னம் முல்லைப்பூ இது தமிழர் வாழ்வியல் பூ. முல்லை, தமிழரின் வாழ்வியற் பூ என் பதைப் பல முனையிலும் காண வேண்டும். அதற்கு முன் முல்லைப் பூவின் சொல் வரலாறு காணத்தக்கது.

## சொல்லில் முல்லை

முல்லை என்னும் சொல்லை ஒரு சொற்குடும்பத்தில் மணம் கமழும் பிள்ளை எனலாம். இது பிறந்த குடும்பம் குறிக்கத்தக்க அருஞ்சொற்களைப் பெற்றுத் தந்த குடும்பம்.

உலகத்தில் உயிர்களை ஆறு குலங்களாக வகுத்தார் தொல் காப்பியர். உலகத்து மொழிகளை மூன்று குலங்களாகக் கண்டார் மாக்சுமுல்லர். ஒவ்வொரு உயிர்க்குலமும் பற்பல இனப்பிரிவுகளைக் கொண்டது. இதுபோன்று ஒவ்வொரு மொழிக்குலமும் பல்வகை இனப்பிரிவுகளைக் கொண்டுள்ளது. உயிரின் ஒவ்வொருஇனத் திலும் குடும்பப்பிரிவுகள் உள. மொழியிலும் குடும்பங்கள் உள்ளன.

தமிழ் மொழியில் உள்ள வேர்ச்சொல்ஒவ்வொன்றிலிருந்தும் முளைத்தும் கிளைத்தும் தழைத்தும் சொற்குடும்பங்கள் பெருகி யுள்ளன. அவற்றுள்'முல்லை' என்னும்சொல் ஒருமூலக்குடும்பத்தில் முளைத்துக் கிளைத்தது.

சுட்டெழுத்துக்களின்அடியாக உண்டானவேர்ச் சொற்களில் 'உல்' என்பது ஒன்று. உல் – குல், சுல், துல், நுல், புல், முல் முதலிய முதனிலைகட்குமூலமாகும். இவற்றுள் 'முல்'என்பது 'உல்', என்பதன் பொருள் வளர்ச்சியாகிய உலவுதல், சுற்று, திருகு முதலிய பொருள்களில் அமையும்.

இவ்வகையில் 'முல்' என்பதற்கு உலவும் அமைப்பு, சுற்றும் அமைப்பு, திருகிய அமைப்பு என்னும் பொருள்கள் அமையும்.

இந்த முல் — முள் என வளரும். இவ்வளர்ச்சியால் கூர்மை என்னும் பொருளை ஏற்கும்.

இவ்வாறு திருகுதல், கூர்மை இரண்டன் பொருளமைப்பில் ஐ விகுதி பெற்று 'முல்லை' என்னும் சொல் உருப்பெற்றது. இவ் வகையில் முல்லை மலர் இச் சொல்லுக்கு உரியதாகியது. முல்லை மலரின் அரும்பு, முனையில் இதழ்கள் கூடியுள்ளமைமுறுக்கியதாய்த் தோன்றும். முறுக்குதல், புரிதல், திரிதல், சுரிதல் ஒரு பொருட் சொற்கள். முல்லை அரும்பின் முனை கூர்மையானது.

*''துளசிக்கு வாசமும் முல்லைக்குக் கூர்மையும்*
*முளைக்கும் போதே தெரியும்''* என்ற நாட்டு வழக்கிலும் கூர்மை குறிக்கப்படும்.

இது *''முல்லை வை (கூர்மை) நுனை''* [1] எனப்பட்டது. *''புரி நெகிழ் முல்லை''* [2] எனப்பட்டது. இவ்வாறு கூர்மையும் புரிவும் கொண்ட அமைப்பில் இம்மலருக்கு 'முல்லை' என்னும் சொல் அமைந்தது. இக் கூர்மை *''பூனைக் குட்டியின் பல்லைப் போன்றது''* [3] என உவமை காட்டப்பட்டது.

சொல் கிளைப்பதில் முல் — முர் — முரு — முருகு என்பது ஒரு வளர்ச்சி. இவ்வளர்ச்சியில் 'முருகு' மணப் பொருள் பெறும். மணத்திற் சிறந்தது முல்லை. மணத்தில் பிற மலர்கள் யாவும் இதற்குப் பின்னர் நிற்பவை. எனவே, 'முல்' வளர்ச்சியில் தோன்றிய 'முருகு' என்னும் மணச்சொல்லும் இதன் தொடர்பைக் கொண்டதாகும்.

இவ்வாறாகச் சொல் வரலாற்றில்,
முனை கூர்மை கொண்டது;
முனை முறுக்கிப் புரிவுள்ளது;
மணம் கொண்டது —எனும் பொருளுக்கு இலக்காகி முல்லை மலர்கிறது; மணக்கிறது.

முல்லையினது இக் கூர்மையை மிக நுணுக்கமாகக் கண்டு பேராசிரியர் விளக்கியுள்ளார். மேலே கண்ட *''வை நுனை''* என்னும் அகநானூற்றுத் தொடர்க்கு விளக்கந்தரும் அவர்,

---

1 *அகம்:* 4 : 1
2 *கலி:* 61 : 2
3 *''பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையும்*
*பாசிலை முல்லை முகைக்கும்''* புறம்: 117 ; 8, 9.

> "முல்லை என்னாது வை நுனை என்றதனால் அவை அரும்பியது அணரித்தென்பது பெறப்பட்டது; சின்னாள் கழியின் வைந்நுனையாகாது (கூர்மை போய்) மெல்லென்னுமாகலின்"[1] —என்றார். இவர்

காட்டிய இந்த மென்மைப் பொருளும் முல்லைக்கு உண்டு. 'முல்', என்பதன் மாற்று உருவத்தோற்றச்சொல் 'மெல்' என்பது. எனவே, மென்மைப் பொருளும் கொண்டது முல்லை.

மேலும் 'முல்' 'முன்' என்றொரு கவடுவிட்டுக் கிளைக்கும். அந்த முன்— முன்னம் (முதன்மை) என முல்லைக்கு முன்னிடத்தையும் குறிக்கின்றது. தமிழ் மாந்தர் வாழ்வியலில் முல்லைக்கே முதலிடம் உண்டு. மலர்களில் உயிராகிய மணத்திலும் முல்லையே முன்னிடம் பெற்றது. இந்த முன்னிடம் பற்றித் தொல்காப்பியக் கருத்து ஒன்றை முன்னரே கண்டோம்.

நிலப்பாகுபாட்டை அறிவிக்கும் தொல்காப்பியர்,

"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்"[2] -என முல்லையை முதற்கண் அமைத்தார். அதற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர்,

> "கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லை யாதலின், அது முற்கூறப்பட்டது"[3] —என்று

முதலில் வைத்த முறை வைப்பிற்குக் காரணம் காட்டினார். தொல்காப்பியர் போன்றே இளங்கோவடிகளாரும் முதலில் குறிக்க வேண்டிய குறிஞ்சியை முன் வைக்காது,

"*முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து*"[4] —என்று முன்னிடம் தந்தார். முல்லைக்கு யாப்பருங்கல விருத்தியும்

"*முல்லை குறிஞ்சி மருதத்தின் பின்நெய்தல்*"[5] —என முன்னிடம் வைத்தது. இலக்கண நூல்கள் மாறாது முதன்மை தந்தமை முல்லையின் முதன்மைக்கு முத்திரை குத்தியதாகும்.

---

1. தொல் : பொருள் : செய்யுள் : 104 பேராசிரியர் உரை
2. தொல் : பொருள் : அகத்திணை : 5.
3. தொல் ; பொருள் : அகத்திணை : 5 நச்சர் உரை.
4. சிலம்பு : 11 : 64.
5. யாப். வி : ஒழிபு : 2 எ. காட்டு

# முல்லைக் குடும்பம்

இவ்வாறு சொற்குடும்பத்தில் மலர்ந்த முல்லை மலர்க் குலத்தில் கொடிப் பூ வகையைச் சார்ந்தது. கொடிப் பூக்களி னெல்லாம் மேம்பட்டுத் திகழ்வது.

கொடிப் பூக் குலத்தில் பிறந்த முல்லை தனக்கென ஒரு பெருங் குடும்பத்தைக் கொண்டது. இக்குடும்பத்தின் மூலமும் முதன்மையும் முல்லையேயாகும். உலகனைத்திலும் இதன் குடும்பம் பல்கிப் பெருகியுள்ளது. இதனால் இது உலக மலர். உலக அளவில் பல நூற்றுக்கணக்கான பிரிவுகள் இதன் குடும்பத்தில் உள்ளன.

பல வண்ணங்களில் மலர்வதாயினும் வெண்மையே இதன் மூல வண்ணம்.

முல்லை (தவளம்), தளவம் என்னும் இரண்டுடன் ஊசி முல்லை, கொகுடி என்னும் இரண்டும் முதல் வகையைச் சார்ந்தவை. முல்லை வெண்மை நிறத்தது, தளவம் செம்மை நிறத்தது. அதனால் செம்முல்லை எனப்படும். முல்லை வடிவத்திலேயே அக விதழ்களும் செம்மையாக அமையும். புறவிதழ்களும் செம்மை நிறத்தவை. இதன் தோற்றம் சிரல் என்னும் கிச்சிலிப்பறவையின் அஃதாவது மீன்கொத்தி என வழங்கப்படுவதன் மூக்கு போன்று கூர்மையானது என,

"சிரல் வாய் உற்ற தளவு"[1] –என்றும்

"பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முகை"[2] –என்றும் கூறப்படும். இது முள் போன்று கூர்மைகொண்டது என்பதை,

"தளவின் இதல் முள் செந்நனை"[3] –என்னும் அகப் பாடலாலும் அறியலாம். முல்லையில் செம்மை நிறம் கொண்டது இஃது ஒன்றே (தமிழக அளவில்).

தமிழில் தளவம் செம்மையையும் தவளம் வெண்மையையும் குறிக்கும் சொற்கள். அதனால் வெண்மை நிற முல்லை தவளம் எனப் பட்டது. ஆனால் இச்சொல்லாட்சி சங்க இலக்கியங்களில் இல்லை. சிலப்பதிகார காலத்தில் இவ்வழக்கு புகுந்தது என்று அறிய முடிகின்றது.

---

1 நற் : 61 : 8.　　3 அகம் : 23: 3,
2 ஐங் : 447.

வெண்மை முல்லையைச் சேர்ந்தது ஊசி முல்லை. இது முல்லையைவிடத் திரட்சியில் சிறுத்தது; அளவில் சிறியது. முனை அதனைவிடக் கூர்மையானது. ஊசி போன்ற முனையை உடைமையால் இப்பெயர் பெற்றது. ஆனால், மணத்தில் முல்லைக்கு ஈடு கொடுக்கக் கூடியதன்று.

அடுத்துக் கொகுடி என்பது முல்லை வகையைச் சேர்ந்தது.

*"கோங்கமே குரவமே கொழுமலர் புன்னையே கொகுடிமுல்லை*
*வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவியெங்கும்"*[1]

—என்னும் தேவாரத்தில்

கொகுடியை முல்லையாகக் காண்கின்றோம். இதன் வடிவமும் முல்லை போன்றதேயாயினும், முனை அவ்வளவில் கூர்மையின்றிக் குவிந்த அளவானது. இதனைச் சூளாமணி என்னும் காப்பியம்,

*"குவி முகையன கொகுடி"*[2] —என்று காட்டுகின்றது.

முல்லைக் குடும்பத்தின் உற்றார் மௌவலும், குளவியும் உறவோர் மல்லிகை. இனத்தார் சேடல், அதிரல், பிச்சி என்பவை. இவற்றுள் இனத்தார் தனிக்குறிப்பில் பின்னர் குறிக்கப்படுவர். இங்கு, தொடர்பாக உற்றாரையும் உறவோரையும் காண வேண்டும்.

மௌவல் முல்லையின் உற்றாளில் ஒருத்தி. முதலில் முல்லை வேறு, மௌவல் வேறு என்பதை உணரவேண்டும். குறிஞ்சிப் பாட்டில் அடி 77இல் முல்லை உளது. அடி 81இல் தனியே மௌவல் உளது, கபிலர் இரண்டையும் வேறுவேறாகவே காட்டியுள்ளார். இசைத்தமிழில் குரல் என்னும் இசைக்குரிய மணம் மௌவல் மணம் என்றும், துத்தத்தின் மணம் முல்லை மணம் என்றும்குறிக்கப்படும். இவ்வகைகொண்டும் முல்லையும் மௌவலும் வெவ்வேறானவை என அறியலாம். ஆனால், இலக்கியங்களில் மௌவல், முல்லைபோன்றே பேசப்படும். சில இடங்களை நோக்கும்போது முல்லையையே மௌவலாகக் கூறியிருப்பது தென்படும். இதற்குக் காரணம் இரண்டும் பலவகைஒற்றுமையும் ஒருசில வேற்றுமையும் கொண்டுள்ளமையாகும்.

---

1 ஞான. தே: வடகுரங்கு: 1.
2 சூளா : தூது : 4.

மௌவல் நிறத்தாலும் வடிவத்தாலும் இதழ்களாலும் மணத்தாலும் முல்லையைப் போன்றதேயாகும். இரண்டும் மனைகளிலே இடம்பெற்ற கொடி மலர்களேயாகும். ஆனாலும், முல்லை "மனை வளர் முல்லை" என்று இலக்கியங்களால் பேசப்படும் அளவிற்கு மௌவல் குறிக்கப்பட வில்லை. முல்லை மனை முற்றத்தில் நட்டுப் பேணி வளர்க்கப்படும். மௌவல் வளர்க்கப்படுவதை விடத் தானே வளர்தல் மிகுதி. முல்லை பந்தலில் படரும். மௌவல் இவ்வாறு படர்வதை விட மரங்களில் படர்ந்து வளர்வது. இதனை,

*"மனைமரத்து*

*எல்லுறு மௌவலும் நாறும்"* –என்னும் குறுந்தொகை **(19 : 3, 4)** அடியாலும்,

*"மனைஇள நொச்சி மௌவல் வான்முகை"* (அகம்: **21: 1**), –என மனை முன்றில் மரமாகிய நொச்சியுடன் இணைத்துப் பேசப்படுவதாலும்,

*"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி*

*மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ"* நற்றிணை (115 : 6) –என்னும் அடிக்கு "மனையின் (நடு) கூரைமேல்" எனப் பொருள்கொள்வதாலும் அறியவேண்டும்.

இச்சிறு வேறுபாடுகளன்றி பிறவகைகளில் ஒற்றுமையுடன் மிக மிக ஒன்றியவை. அதனால்தான் புலமைப் பெருமக்கள் மகளிர்தம் முறுவலுக்கும், பல்லிற்கும் உவமையாக்கப்படும் முல்லையைப் போன்றே மௌவலையும் உவமையாக்கிப் பாடினர். பின்வரும் அடிகள் நோக்கத்தக்கன :

*"மனை மௌவல் முகையன்ன மாவீழ்வான் நிரைவெண்பல்"*

(கலி : **14 : 3**)

*"மாதரார் முறுவல்போல் மணமௌவல் முகையூழ்ப்ப"*

(கலி : **27 : 4**)

–எனவே **'முல்லையொடு ஒன்றிய உற்றாள் மௌவல்'** என்பது **மிகப் பொருத்தமானதாகும்.**

## உறவுடைய மல்லிகை

மல்லிகை என்னும் சொல்லில் தமிழின் சாயல் உள்ளதாயினும் சங்க இலக்கியங்களில் பரிபாடல் ஒன்றிலன்றி இச்சொல் இல்லை. பரிபாடலில்,

"...................... நெய்தல் தொடுத்தாளே
மல்லிகா மாலை வளாய்" (11 : 14, 105) என்னும்

நல்லந்துவனார் பாடலும்,

"மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்" என்னும் நல்வழுதியார் பாடலும் இச் சொல்லை வழங்குகின்றன. நல்லந்துவனார் முல்லைக் கருத்தில் இச்சொல்லைப் பெய்திருப்பதாகப் படுகின்றது. நல்வழுதியார் அந்நோக்கிலேயே அமைத்திருப்பார் போலும். இக்கருத்தைத் தெளிய இதன் தொடர்பான அடிகள் ஐந்தைக் காணவேண்டும். அவை, இவை :

"மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்
அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல்
குல்லை வகுளம் குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக நறவம் சுரபுன்னை
எல்லாம் கமழும் இருசார் கரைகவிழத்
தேறித் தெளிந்து செறியிருள் மருள்மாலை"[1] —இம்மலர்

கள் மாலைப் பொழுதுடன் கூறப்பட்டுள்ளன. இங்கு இன்றியமையா முல்லை என்னும் சொல் இடம் பெறவில்லை. செய்யுளின் எதுகை அமைப்பை நோக்கினால் முல்லை இடம் பெறுவதற்கு நல்வாய்ப்பு உளது. இருந்தும் மல்லிகை இடம்பெற்று முல்லை இடம்பெறவில்லை. எனவே, ஆசிரியர் முல்லைக் கருத்திலேயே மல்லிகையை அமைத்திருப்பார் என்று கருதலாம்.

மதுரைக் காஞ்சியின் ஈற்றில் உள்ள வெண்பாவில் மல்லிகை வருகின்றது. இப்பாடல் சங்க இலக்கிய காலத்திற்குப் பின்னர் இணைக்கப்பட்டது என்ற கருத்து உண்மையானதே. எனவே பிற்கால ஆட்சி எனலாம்.

பின்னர் எழுந்த இலக்கியங்களில் சிலம்பில்,

---

1 பரி ; 12 ; 77—82

"இல்வளர் முல்லை மல்லிகை மயிலை" (5 : 191)

"மாதவி மல்லிகை மௌவல் முல்லை" (13 : 120)

"இல்வளர் முல்லையொடு மல்லிகை அவிழ்ந்த" (4.)

என்றெல்லாம் முல்லையும் மல்லிகையும் வெவ்வேறு மலர்களாகக் காட்டப்பட்டுள்ளன. தொடர்ந்து பிற்கால இலக்கியங்கள் பலவும் இவ்வாறு குறிக்கின்றன.

நிகண்டுகளில் சேந்தன் திவாகரம் முல்லையையும் மல்லிகையையும் குழப்பிவிடுகின்றது. பிங்கலமும் சூடாமணியும் முல்லை வேறாகவும் மல்லிகை வேறாகவும் குறிக்கின்றன.

இவற்றையெல்லாம் ஒன்று கூட்டி ஆய்ந்தால் மல்லிகை என்பது வந்திறங்கிய கலப்பினத்ததாக—இங்கு இடம்பெற்றதாகக் கொள்ள நேர்கின்றது.

வடமொழி நூல்களில் முல்லை இடம் பெறவில்லை. மல்லிகையே நிறைவாகப் பேசப்படும்.

வான்மீகியார் 'சீதையின் உடல் நிறம் மல்லிகை நிறம் போன்றது' என்றார்.

இராசதரங்கினியின் ஆசிரியர் கல்கணப்பட்டரும் மல்லிகையைப் போற்றியுள்ளார்.

கவிவேந்தன் காளிதாசன் தனது மேகதூதத்திலும் சாகுந்தலத்திலும் மல்லிகை மலரை அள்ளித் தூவியுள்ளான். சகுந்தலையின் உடல் நிறம் மல்லிகை என்றான். சகுந்தலையின் உயிர்த்தோழி பிரியம்வதை சகுந்தலையை, 'இவள் புதிதாக மலர்ந்த மல்லிகை மலர்போல் உள்ளவள்' என்று வண்ணிக்கின்றாள். சகுந்தலை தேவமகளின் மகள். அவளால் கைவிடப்பட்டுச் சகுந்தலை கண்ணுவ முனிவரிடம் வளர்கின்றாள். அவளது அழகிற்கு அவள் வளர்க்கப்படும் காட்டுப் பகுதி துசியந்தனுக்கு உகந்ததாகப்படவில்லை. அதனை,

"புது மல்லிகைப் பூ உதிர்ந்து எருக்கஞ்செடிமேல்
வீழ்ந்ததுபோல் உள்ளாள்" —என்கின்றான்.

இவற்றையும் கொண்டு நோக்கினால் மல்லிகை என்னும் சொல் வந்திறங்கியதாக—தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றதாக் கொள்ள வேண்டும்.

உரையாசிரியர்கள் முல்லையின் இனத்திலும், தனியாகவும் மல்லிகையைப் பேசுகின்றனர். முல்லை இனத்து மலர்கள் சில வற்றை "இது மல்லிகை விசேடம்" என்பர். நிகண்டுகளில் பிங்கலமும் சூடாமணியும் மௌவலை வனமல்லிகை என்கின்றன. இவையெல்லாம் மல்லிகை பையப்பையப் பெற்ற ஆட்சியைக் காட்டுகின்றன.

ஆயினும், முல்லையும் மல்லிகையும் பொதுவில் நிறத் தாலும், இதழ் அமைப்பாலும் ஓரளவில் மணத்தாலும் ஒத்தவை. ஆனால்,

முல்லை கொடிப் பூ.

மல்லிகை குற்றுச் செடியாய்ப் பின் வளைந்து படர்வது.

நிறத்தில் முல்லையினும் மல்லிகை வெண்மையானது. இது கருதியே சிலம்பு, "வெண் மல்லிகை", "வெண் தோட்டு மல்லிகை" என்றது. மணத்தில் சிறு வேறுபாட்டைக் காணலாம்.

மல்லிகை மாலதி என்ற பெயராலும் குறிக்கப்படும்.

முல்லை அப்பெயரால் குறிக்கப்படுவதன்று.

இருப்பினும் மல்லிகை முல்லை இனத்து மலர்.

காலப்போக்கில் மல்லிகை எனுஞ்சொல்லமைப்போடு சில மலர்கள் பேசப்பட்டன. இச்சொல் அமைப்பன்றி வடிவ அமைப்புப் பொருத்தமோ சிலவற்றிற்கு நிறப்பொருத்தயோ மணப்பொருத்த மோ இல்லை. அவ்வாறு குறிக்கப்படும் மலர்கள்,

| | | |
|---|---|---|
| அந்தி மல்லிகை | — செடி | — புனல் வடிவ மலர் |
| மரமல்லிகை | — மரம் | — புனல் வ்டிவ மலர் |
| பவளமல்லிகை | — குறுமரம் | — சமதள நான்கிதழ் மலர் |
| நாக மல்லிகை | — மரம் | — விரியிதழ் மலர் |

இம்மல்லிகைப் பெயரால் சீவக சிந்தாமணியில் 'மல்லிகை மாலை' என்றொரு மங்கை வருகின்றாள். விளக்குத் தண்டிற்கு 'மல்லிகை' என்ற பெயரைப் பிங்கல நிகண்டு தருகின்றது.

இக்காலத்தும் பெண்களுக்கு 'மல்லிகா' என்ற பெயர் விருப்போடு இடப்படுகின்றது. வடமொழித் தொடர்புடன் 'மல்லிகார்ச்சுனம்' என்றொரு மரம் குறிக்கப்படும்,

முல்லைத் தொடர்பில் காணப்பட்ட குளவி, காட்டு மல்லிகை எனப்படும். அதனைக் காட்டு முல்லை என்பதே வழக்கு. சேடல், பவள மல்லிகை எனப்படும். அதிரல், மோசிமல்லிகை எனப்படும்.

பிச்சியைப் பிங்கலம் முல்லையாகக் கூறுகின்றது.

## வளர்த்த முல்லை வளைந்த எல்லை

முல்லைக்கு ஒரு குடும்பம். அக்குடும்பத்திற்கு அதுதான் தலைமை. தன் குடும்பத்திற்கு மட்டுமன்று; தமிழர் குடும்பத்திலும் தனியிடம் பெற்றது. தனியிடம் என்றால் தமிழர்தம் வாழ்வியலுக்கு விதித்துக்கொண்ட ஓர் இலக்கண மலராக விளங்கியது.

ஒரு பெண் பெதும்பைப் பருவம் கடந்து மங்கைப் பருவம் அடைவது அவள் தாய்மைக்குப் பக்குவம் பெறுவதாகும். இதனை இல்லறத்திற்கு ஓர் அடித்தளம் எனலாம். இந்த அடித்தளத்திலேயே முல்லை மலர் கால் ஊன்றியது.

பெண் பதினோராண்டு பத்துத் திங்களில் இப்பருவம் அடைவாள் என்பது ஒரு கீழ் எல்லைக்காலம். அந்த நாளில் அவள் தன் வீட்டு முற்றத்தில் ஒரு முல்லைக் கொடியை நடுவாள். இது முல்லை நிலத்தவரது மரபு. இம்மரபு ஏனையவர்க்கும் காலப் போக்கில் தொடர்பாயிற்று.

> "*புகழ்கொடி தன்பேர் பொறித்ததோர்*
> *கன்னி முல்லை*
> *அகழ்கடல் தானை வேந்தே அணிஎயிறு*
> *ஈந்தது*"[1] —என்னும் சீவக சிந்தாமணிப் பாடலும்

பதுமை என்பாள் மங்கைப் பருவமடைந்து முல்லை நட்டதைக் குறிக்கின்றது. அம்முல்லை இரண்டு திங்களில் தழைத்து வளர்ந்து பல்லைக் காட்டி, முறுவல் செய்வதுபோன்று அரும்பும். அரும்பிய

1 சீவ. சி: 1268

தன் அறிகுறி அவள் பருவம் அடைந்தாள் என்பதை ஊரார்க்கும் அறிவிப்பதாயிற்று.

முல்லை இவ்வாறு அரும்பிப் பூப்பது அவள் கன்னிமை மலர்ந்ததன் அறிவிப்பாயிற்று. முல்லை அரும்பிப் பூப்பது கொண்டே பெண் பக்குவமடைவது 'பூப்பு' எனப்பட்டது. பூப் படைந்தவள் 'பூத்தனள்' எனப்பட்டாள். இப்பருவம் வந்தும் இப் பக்குவம் அடையாதவள் 'பூவாதாள்' [1] எனப்பட்டாள்.

பரிபாடல் வையையாறு பல பூக்களுடன் பொலிந்து வரு வதை வைத்து நயமாக இருபொருள்படும்படி "பூத்தனள் நங்கை; பொலிக" [2] என்று பாடியது. முல்லை. பூத்தால் அக்கொடியை வாழ்த்துவது ஒரு மரபு. அம்மரபு பூத்த மங்கையையும், 'பொலிக' என வாழ்த்துவதை இப்பரிபாடலும் காட்டுகின்றது. இதனைச் சீவக சிந்தாமணி,

"*கொம்பலர் நங்கை பூத்தாள்; பொலிக*" [3] என

'முல்லையும் பொலிக; பூத்த மங்கையும் பொலிக' என இருபொருள் படும்படி பாடிக் காட்டியது.

பூப்பு தோன்றிய மங்கைக்கு முதல் நீராட்டுசெய்வர். அதனை ஒரு மங்கல நிகழ்ச்சியாகச் செய்வர். அஃதொரு விழாவாக நிகழும். இக்காலத்தும் 'பூப்பு நீராட்டு விழா' மங்கல முழக்கத்துடன் நிகழ்த் தப்படுவதைக் காண்கிறோம். இவ்விழா மங்கைக்கு மட்டுமன்று முல்லைக்கும் எடுக்கப்படும்.

பேதைப் பெண் முல்லை வளர்ப்பதையும், அம்முல்லை அரும்பு ஈனுவதையும், அதற்கும் சேர்த்து முழக்கத்தோடு விழா நிகழ்வதையும் நைடதம் நினைவுபடுத்துகின்றது :

"*அல்லியங் கோதை மாதர்*
*அன்புடன் வளர்த்த முல்லை*
*மெல்லரும்பு ஈன்ற தென்னா*
*விழா*" [4]

இதற்கு உரை வகுத்தவர்,

---

1 "பூவாதாள் பூப்புப் புறங்கொடுத்தாள்" —சிறுபஞ்சமூலம் : 42
2 பரி : 16 : 30.
3 பரி : 24
4 நைட : நாட்டுப் படலம் 18.

"அதற்கு (முல்லைக்கு), விழாவாவது பருவப் பெண்ணிற்கு முதற் பூப்பிலே செய்யப்படும் சிறப்பை அதன் (முல்லையில்) முதற் பூப்பிலே செய்தல்" என்று முல்லைக்கு முதற் பூப்பு விழாவைக் குறிப்பிட்டுள்ளார்.

முல்லை மலர் தன் மலர்ச்சியால் மங்கைக்கும் பெயர் வழங்கி, விழாவும் பெறச்செய்து, தானும் விழாப்பெற்றுக்கொண்டது.

இதனைக் கூர்ந்து நோக்கினால் முல்லை மலர் வாழ்வியலில் எவ்வாறு இணைத்துக்கொள்ளப்பட்டது என்பதை உணரலாம்.

இவ்வாறு தமிழ் மாந்தர் முல்லை வளர்த்தலை ஒரு மரபாகக் கொண்டதில் ஒரு நாகரிகப் பாங்கு புலப்படுகின்றது. இளம் பெண் திடீரென்று எதிர்பாராத நிலையில் ஒருநாள் பூப்படைகின்றாள். உடன் அவள் கொள்ளும் உணர்ச்சி நாணம் நாணத்தில் அடிபட்டிருப்பவள் தனக்கு நேர்ந்ததைத் தன் வாய் திறந்து உணர்த்த மாட்டாள். அவள் உடனே ஒரு முல்லைக் கொடியை நடுவதன் மூலம் தன் பருவத் தோற்றத்தை குறிப்பால் அறிவித்தவள் ஆகின்றாள். அறிய வேண்டிய ஒன்றை அறிவிக்க வேண்டிய நிலையில் கையாளப்படும் இது குறிப்பிடத்தக்க நாகரிகத்தின் அறிகுறி அன்றோ?

மாந்தர் தம் வாழ்வில் கைக்கொண்ட இதனைக் கடவுளர் மேலும்ஏற்றிப் பாடினர். காஞ்சிபுரத்தில் இடம்கொண்ட அன்னைக் கடவுளருக்கும் ஏற்றி,

"அன்னை தன் கரத்து
அன்பினால் வளர்த்த மாலதி (முல்லை)யும்"[1]

என்றனர். இன்னும் இதனைக் கற்பனை எழுதுகோல் கொண்டு

"தேவி கொற்றவை கைவிடாது வளர்த்த
முல்லைக் கொடி நூறாயிரம் கிளைவிட்டுத்
தழைத்தது"[2] —எனத் தக்கயாகப்பரணி எழுதியது.

மகளிரைப் போன்றே ஆடவரும் முல்லை மலரால் ஆகிய தாரை அணிந்தனர். விழாக் காலங்களில் அதை அணிவதை ஒரு மரபாகக் கொண்டனர்.

1 காஞ். பு : திருக்கண் : 167,
2 தக் : 75

இவற்றிலெல்லாம் மேலாக ஒரு குமரன் கன்னி ஒருத்திக்கு முல்லை மலரை வழங்க அவள் பெற்றுக்கொண்டாலோ, அவளது கூந்தலில் சூட்டினாலோ அவனது காதலை ஏற்றுக் கொண்டதாகும். முன்னே கண்ட கலித்தொகைப் பாடல்களின் கருத்துப்படி முல்லை, காதல் நோக்கமின்றிப் பட்டுத் தெரித்துக் கூந்தலில் செருகிக் கொண்டாலும் அவள் அவனுக்கு உரியவள் என்றாகி விடுவாள்.

1 "*அப்பூ வந்ததென் கூழையுள் வீழ்ந்தன்று மன்*"
—என்றாள் ஒரு கன்னி.

அதனை அவள் விரும்பிச் செருகிக்கொண்டாள். கூந்தலில் தோய்ந்த அதன் மணம் மறு நாள் தாய்க்குத் தெரிய அவள் வழி, வீட்டார்க்குச் செய்தி தெரியப் பெற்றோரும் உடன் பிறந்தோரும் காரணமறியாது சினந்தாராயினும் இறுதியில் அதனை எவ்வாறு கருதினார்கள் என்பதைத் தோழி கூறுகின்றாள் :

"மண்ணணி மாசற்ற நின் கூழையுள் ஏறு அவன்
கண்ணி தந்திட்டது எனக்கேட்டுத் திண்ணிதாத்
தெய்வ மால் காட்டிற்று இவட்கு எனக்கொண்டார்"[2]

—என்றாள். முல்லை செருகியது தெய்வம் காட்டியது என்று கொண்டனர். அதன் காரணம் முல்லையால் அமைந்த மரபை நினைந்ததே யாகும்

## கற்பு முல்லை

முல்லையின் காரணமாகத் திருமணம் நிகழும் என்றாலும் அஃது ஓர் அறிவிப்பு நிகழ்ச்சியாகவே முடியும். முல்லை அவளது கூந்தலில் அமர்ந்ததே அவள் மனைவியாகவும் அவன் கணவனாகவும் ஆகிவிட்டதன் அறிகுறியாகும். கன்னியாக இருந்த பெண் முல்லையைச் சூடினாலே கற்பில் அமைந்து மனைவி ஆகிவிட்டாள், அந்த அளவில் முல்லை மரபு அமைந்தது. கற்பின் அறிகுறி முல்லை ஆயிற்று. மகளிரின் கற்பு, முல்லையின் தொடர்பிலே பேசப்படும்.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்" — சிறுபாண் : 30
"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்

---

1 கலி : 107 : 9        2 கலி : 107 : 81—83

குறுமகள்'' — நற் : 142

''முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
குறுமகள்'' — அகம் : 274

இவ்வாறு பல்வேறு இலக்கியங்கள் ஒரே வகை தொடரால் முல்லையொடு கற்பை இணைத்துப் பாடின. இவைகொண்டு முல்லை கற்பின் சின்னம் என்பது எந்த அளவில் அடிப்பட்ட வழக்காயிருந்தது என்பதை உணரலாம். இவற்றிற்கு எல்லாம் உரை எழுதியவர்கள்,

''முல்லை சூடுதற்கு அமைந்த கற்பு'' —என்றும்,
''கற்பின் மிகுதி தோன்ற முல்லை சூடுதல்இயல்பு''[1]
—என்றும் விளக்கினர்.

இம்மரபு ஆழ்ந்த பிடிப்பாகி 'முல்லை' என்ற சொல்லுக்கே 'கற்பு' எனும் பொருள் ஏறியது.

''மௌவலும் தளவமும் கற்பும் முல்லை''[2] —எனச் சேந்தன் திவாகரம் முல்லைக்கு ஒரு சொல் 'கற்பு' என்று அமைத்தது.

கட்டியங்காரன் அநங்கமாலை என்பவளது கற்பைப் பறித்தான் என்பதைத் திருத்தக்க தேவர்,

''தரனுடை முல்லை எல்லாம் தாது உகப் பறித்திட்டானே''[3]
—என்று கற்பை முல்லை என்னும் சொல்லாலேயே குறித்தார். இதற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியரும்,

''சீவகனையே கூடுவன் என்றலின், முல்லை – கற்பு'' —என்று குறித்தார்.

முன்னர் கொற்றவை முல்லைக் கொடி வளர்த்த செய்தி கண்டோம். அவ்விடத்திலும் அதன் உரையாசிரியர்,

''தேவி முல்லை வளர்த்தற்குக் காரணம் கற்புடைமை என உணர்க''[4]
—என விளக்கினார்.

இவ்வாறு முல்லை கற்பின் எல்லை அளவாயிற்று.

---

1 சிறுபாண் : 30 நச்சர் உரை
2 சேந். தி : மரப்பெயர் 197.
3 சீவ. சி : 686
4 தக்க : 75 உரை

பெண் சிறுமியாகப் பேதை, பெதும்பைப் பருவத்தளாக் இருக்கும் போது முல்லை சூடாள்; சூட்டவும் மாட்டார்கள். முல்லை சூடினால் அவளது கன்னித் தன்மை போய்த் தலைவி ஆகிவிடுவாள். பின்னர் வாழ் நாள் முழுவதும் முல்லையைச் சூடுவதனின்றும் நீங்காள். மங்கலம் இழப்பின் சூடாள். மங்கலச் சூட்டாகவே முல்லை அமைந்தது.

கணவனது பிரிவால் ஒப்பனை ஒன்றும் செய்துகொள்ளா திருந்த கண்ணகியார் கூந்தலில் மட்டும் ஒரு மலர் சூடியிருந்தார். அதனைப்,

*"போதுசேர் பூங்குழலார்"*

—என்று இளங்கோவடிகள் பாடினார். என்ன போது? *"முல்லை மலர் பற்று அறாத பூங்குழல்"*[1] என அடியார்க்கு நல்லார் விடை வைத்தார். அதிலும் கணவனோடு கூடியிருக்கும்போதுதான் சூடுவர். அப் போது சூடுவதினின்றும் நீங்கார். தாயாகினும் முதுமை பெறினும் முல்லையை விடார்.

"அழகிய நெற்றியை உடைய தலைவி முல்லை மலரைக் கற்பின் முடியாகச் சூடித் தன் பக்கத்தே மகனோடு வீற் றிருக்கத் தலைவன் இனிது இருந்தான்"[2] —என்று

ஐங்குறுநூறு பாட,

"நல்ல குலத்திற் பிறந்த கற்புடைய பெண்களுக்கு வளப்பமான முல்லை மலரைச் சூடுவது சிறப்பாகும்"[3]

—எனக் குலோத்துங்கக் கோவை விதித்துக் கூறியது. இவ்வாறு அமைவது ஒரு விதிப்பு என்பதைப் "பற்று அறாத முல்லை" என்றதனின்றும் உணரலாம்.

---

1 *சிலம்பு* : 13 : 22

2 "வான்நுதல் அரிவை முல்லை மலைய
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத் தன் புதல்வனோடு பொலிந்தே"
—ஐங் : 408

3 குலோத்துங்கக் கோவை : 168

## முல்லைச் சூட்டு

மிகப் பழங்காலத்தில் திருமணத்தின் மங்கலச் சின்னமாக் மங்கல நாண் பூட்டல்—தாலி கட்டல் இருந்ததில்லை. அக்காலத்தில் திருமணச் சின்னமாக அஃதாவது நிலைத்த அணியாக ஏதும் அணிவித்ததாகக் குறிப்பு இல்லை. திருமணக் குறிப்பைத் தரும் மற்றொரு அகநானூற்றுப் பாடல்,

''*தண் நறு முகையொடு வெண் நூல் சூட்டி*''[1] —என வெண்மையான நூலில் குளிர்ந்த மணம் மிக்க முகையைக் கட்டிச் சூட்டியதாகக் குறிக்கின்றது. இம்முகை முல்லை முகையாகலாம். முல்லைதான் இருவரது இணைப்பிற்கும் வகை செய்தது. அது கொண்டே அவர்களது களவுக் காதல் வெளிப்பட்டது. எனவே, அதனையே சின்னமாகக் கொண்டர் எனலாம்.

இந்த 'நூல் சூட்டு' அணிவித்தல் பிற்காலத்தில் வளர்ந்து, மரபு ஆகி, முல்லை மலரால் செண்டு செய்து நெற்றியில் படுமாறு தலையில் சூட்டப்பட்டது. இதனை மணமகன் மணமகளுக்குச் சூட்டினான். இது 'முல்லைச் சூட்டு' எனப் பட்டது. இத்தொடர் சங்க இலக்கியங்களில் இல்லை. பிற்கால நூல்களில் குறிக்கப்படுகின்றது. எனவே, சங்க கால அளவில் அல்லது. அதற்கு முன்னரும் நூலில் கட்டிச் சூட்டப்பட்ட முல்லை மங்கலச் சின்னமாகக் கருதப்பட்டதாகக் கொள்ளலாம். மேற்கண்ட அகநானூற்றுப் பாடலிலும் ''*வெண் நூல் சூட்டி*'' எனச் சூட்டுதல் குறிக்கப்படுகின்றது. சூட்டுதல் தலையணி. அதிலும் நெற்றியில் படுமாறு சூட்டுதல் சுட்டி எனப்படும். எனவே நூலில் முல்லையைக் கட்டி நெற்றியில் கட்டினர் எனலாம். (இக்காலத்திலும் பட்டம் கட்டுவோர் பொன் காசுக்கு மாற்றாக முல்லைப் பூவை நூலில் கட்டி நெற்றியில் கட்டுவதைக் காணலாம்) இந்த 'நூல் கட்டுச் சூட்டே' பிற்காலத்தில் 'முல்லைச் சூட்டு' என வளர்ந்தது.

> '' ........................................*மடவாள்*
> *கரும்பும் இலையும் மயக்கி ஆய்ந்த*
> *முல்லையஞ் சூட்டு மிலைச்சி*''—என்றும்.
>
> ''*முல்லையஞ் சூட்டு வேயின்*
> *முரிந்துபோம் நுசுப்பு*'' — என்றும்
> ''*பன்னிறச் சுரும்பு சூழும் முல்லைச் சூட்டு வேய்ந்தார்*''[2]

---

1 அகம் : 136 : 14. 2 சீவ. சி : 2438; 624; 3119.

–என்று திருத்தக்க தேவர் ஆங்காங்கு தம் நூலில் காட்டினார். பின்னர் வந்த பெருங்கதை ஆசிரியர் கொங்கு வேளிரும்,

*"முல்லை அம் கோதை சில் சூட்டு அணிந்து"*[1] –என்று கோதை வடிவைக் குறித்தார். அவரே, இது மங்கல அணி என்பதை,

*"மங்கல நறுஞ்சூட்டு மரபின் அணிந்து"*[2] என்று குறித்தார். "மரபின் அணிந்து" – என்பதால் இவ்வாறு சூட்டுவது மரபு எனவும் காட்டினார்.

முன்னர் கொற்றவை குமரியாக இருந்து முல்லை வளர்த்ததைக் கண்டோம். முல்லை வளர்த்தவளுக்கு *'முல்லைச் சூட்டு'* சூட்டியிருக்க வேண்டுமன்றோ? சூட்டப்பட்டிருந்ததைப் பார்த்த ஒட்டக் கூத்தர்,

*"முடிச்சூட்டு முல்லையோ; முதற்கற்பு முல்லையோ"*[3] –என்று பாடினார். அதனையும் 'முதற் கற்பு' என்று முதன் முதலில் சின்னமாகச் சூட்டப்படுவதைக் கொண்டு குறித்தார்.

வாழ்வியல் மரபு தெய்வத்திற்கு ஏறி, ஆன்மிகத்திலும் இடம் பெற்றது.

மடந்தையரை மறுப்பவர் சமண மதத்தார். ஆனால் தமது வீடு பேற்றிற்குக் 'கைவல்ய மடந்தை', 'கேவல மடந்தை' என்று மடந்தையாகப் பெயரிட்டனர். அம்மதத்துக் காப்பியமாகிய சீவகசிந்தாமணியில் சீவகன் இறுதியாக வீடு பேறு அடைகின்றான். இதனை அதன் ஆசிரியர் ஒரு திருமண நிகழ்ச்சியாகக் கூறுகின்றார்:

கேவல மடந்தை (வீடுபேறு) மணமகளாம்;

இப்பெண்ணாம் பொன் ஒரு பாகம்;

சீவகன் மணமகன்;

அவன் ஒரு பாகம்–எனக்கொண்டு சீவகன் அவளைத் தழுவிக் கொண்டானாம். கண்ணிமைக்காது இன்பத்தை நுகர்ந்தானாம். வீடு பேறு என்னும் மணமகளும் 'முல்லைச் சூட்டு' அணிந்துதான் விளங்குகின்றாள்.

---

1 பெருங் : 1 : 42 : 149
2 பெருங் : 3 : 22 : 211
3 தக்க : 119.

"கேவல மடங்கை என்னும்
கேள்கிளர் நெடிய வாட்கண்
பூவலர் முல்லைக் கண்ணிப்
பொன்"[1] –என்பது அப்பாடல்.

இவ்வாறெல்லாம் முல்லை மலர் மங்கலச் சூட்டிலும் மலர்ந்தது.

மண நிகழ்ச்சியில் முல்லை நீங்கா இடம் பெற்றது. மண மகளை முல்லை மலர் மாலையால் ஒப்பனை செய்தனர். முல்லைக் சூட்டுசூட்டியும் கூந்தல் பின்னலை முல்லைத் தொடரால் ஒப்பனை செய்தும், மணமகனுக்கு முல்லைத் தாரை அணிவித்தும், குஞ்சி யில் முல்லைத் தொடரைச் சுற்றியும், காதில் முல்லை மலரைச் செருகியும் மணவறையை முல்லைத் தொடர்களால் அழகுசெய்தும் மண விழாவை முல்லை விழாவாகவே ஆக்கினர்.

மாந்தர் குடும்பத் திருமணம் மட்டுமென்ன? மலர்க்குடும்பத் தில் ஒரு திருமணம் :

| | | |
|---|---|---|
| மணமகன் | : | மாலையாகப் பூத்த கொன்றைப் பூ, |
| மணமகள் | : | குரவம் பாவை |
| விளக்கு | : | செங்காந்தள் மலர் |
| நீர்வார்த்தது | : | குருந்த மலர் |
| வாழ்த்துஇசை | : | சுரும்பு |

இந்தத் திருமணத்தைப் பேசி முடித்தது யாரென்று நினைக் கின்றீர்கள்? மாந்தரினத்தில் இவ்வேலையைச் செய்யும் முல்லை மலர்தான் பெண்பேசிச் சென்று திருமணத்தை நிறைவேற்றிய தாம்.

'கொடிமுல்லை மகள்மொழிந் தாடச்
செறிந்த பொன்னிதழ்ப் பைந்தார்க்
கொன்றையஞ் செல்வற்குக் குரவம்
அறிந்து பாவையைக் கொடுப்பத்
தோன்றி அஞ்சுடர் ஏந்த
நிறைந்த பூக்குருந் துகுநீர்
பெய்து, ஆர்த்தன சுரும்பே"[2] — மாந்திரினத்தில்

---

1 சீவ. சி: 3117 2 சீவ. சி: 1568.

பெண்ணின் தலையில் ஏறிப்பெற்றோரை மணத்திற்குத் தூண்டிப் பழக்கப்பட்ட முல்லை தன் இனத்திலும் இப்பணியைச் செய்ததாகக் கூறியது, மரபின் நினைவும் ஆகும்.

## வாழ்த்து மலர்

திருமணத்தின் நிறைவு என்பது வாழ்த்துதான். திருமணமே வாழ்த்துக் கூறுவதாகவே அமைந்தது. அவ்வாழ்த்தையும் மலர் தூவி வாழ்த்துவதாகவே தமிழர் கண்டனர். யாவற்றிலும் மணிமுடி நிகழ்ச்சியாக மணமக்களை வாழ்த்த முல்லை மலரையே பயன்படுத்தினர். வாழ்த்தித் தூவுவதற்கு ஒரு கலவை செய்தனர். ஆடவரது உழைப்பின் பயனாகிய நெல்லையும் மகளிரது கற்பின் சின்னமாகிய முல்லையையும் கலந்த கலவையே வாழ்த்துக் கலவையாயிற்று.

முகத்தல் அளவை நாழி எனப்படும். அது மரத்தால் ஆகிய படி, அதில் நெல்லையும் அரும்பு அவிழ்ந்த முல்லை மலரையும் கலந்து வைத்து மங்கல மடந்தையரும், சான்றோரும் எடுத்துத் தூவி வாழ்த்தினர்.

*"நெல்லொடு நாழி கொண்ட நறு வீ முல்லை*
*அரும்பவிழ் அலரி தூஉய்"*[1] –வாழ்த்தியதை முல்லைப் பெயரில் எழுந்த இலக்கியமாம் 'முல்லைப் பாட்டு' காட்டுகின்றது.

திருமண நிகழ்ச்சியைக் காட்டும் அகநானூற்றுப் பாடல் உள்ளது. அதில் மணமக்கள் வாழ்த்தப்பட்ட-செய்தி உள்ளது. திருமண நிகழ்ச்சியின் முன் மணமகளை நீராட்டுவது ஒரு மங்கல நிகழ்ச்சி. அதிலும் முல்லை மலர் நெல்லொடு நீரில் கலந்து நீராட்டப்பட்டாள்.

*"நீரொடு பொலிந்த ஈரிதழ் அலரி*
*பல்லிருங் கூந்தல் நெல்லொடு தயங்க*
*வதுவை நன்மணம்"*[2] –என்னும் அடிகளில் "ஈரிதழ் அலரி" என்பது. ஈரம் தோய்ந்து அலர்ந்த முல்லை மலரைக் குறிக்கும். முல்லைப் பாட்டிலும் முல்லை, அலரி எனப்பட்டதையும் இணைத்துக் காண வேண்டும்.

---

1 முல். பா: 8, 9. 2 அகம்: 86 : 15-17

இவ்வாறு வாழ்த்துவதற்கெல்லாம் முல்லைமலர் நெல்லொடு கொள்ளப்படும் மரபு, தமிழர் தம் தனிமரபு.

நாள்தோறும் அந்தி மாலையில் இல்லத்தை மங்கல மாக்குவர்.

*''அகநகர் (இல்லம்) எல்லாம் அரும்பவிழ் முல்லை*
*நிகர் மலர் நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த*
*மாலை மணிவிளக்கம் காட்டி''*[1] யதில் நெல்லொடு முல்லை தூவப்பட்டதையும் காணலாம் இவ்வடிகளில் *''நிகர் மலர்''* என்பது 'கற்பிற்கு நிகரான மலர்' என்னும் பொருள் கொண்டது.

திருமணம் நிறைவேறியதும்,

*''சின் மலர் கொடு தூவி மங்கல நல்லமளி''*[2]

—ஏற்றுவர்.

ஆம், முதல் இரவு. இதனை 'அகநானூறு' ''தலைநாள் இரவு'' என்று குறிக்கும். படுக்கை அறை முல்லையால் ஒப்பனையாகும். படுக்கையும்,

*''முல்லைப் பல்போது உறழப் பூ நிரைத்து*
*மெல்லிதின் விரிந்த சேக்கை''*[3] யாகும். இதனைப் பாடியவர் பெயரும் முல்லை. அத்துடன் காவல் புரியும் உரிமையும் கலந்து கொண்டது. அவரது பெயர் *''காவல் முல்லைப் பூதனார்''* என்பது. ('காவல் முல்லை' என்னும் புறத்துறைப் பாடல்களைப் பாடியதால் பெற்ற பெயர் இது,)

## எழிற் சிரிப்பும் ஏளனச் சிரிப்பும்

முல்லை பிறந்த இடம் கொடி. பிறந்த காலம் கார்ப் பருவம். நேரம் மாலைப் பொழுது. *''காரும் மாலையும் முல்லை''*[4] என்பது தொல்காப்பியம். இது பொதுவாக முல்லைத் திணைக்கு வகுக்கப் பட்டதென்றாலும் முல்லையின் மலர்ச்சியால் இதற்கும் இயைபு உண்டு.

---

1 *சிலம்பு* : 9 : 1-3
2 *சிலம்பு* : 1 : 62.
3 *நெடு. வா*: 180, 181
4 *தொல்: பொருள்* : 6

*"கார் நயந்து எய்தும் முல்லை"*[1] —என்று காரையும்,
*"முல்லை*
*அரும்புவாய் அவிழும்பெரும் புன் மாலை"*[2] —என மாலையையும் இலக்கியங்கள் சொல்லிக் காட்டும்.

முல்லைபூப்பதைப் புன்முறுவலாகவும், நகைப்பாகவும், சிரிப்பாகவும் வழங்குவர். பூக்களுக்கு ஏற்ற தன்மைகளை அடைமொழியாக்கிக் கூறுவது உண்டு. அவ்வாறு சில மலர்களை அடைமொழி கொடுத்துப் பொருநராற்றுப்படை என்னும் நூல்

"வறள் கடம்பு"
"இவர் பகன்றை"
"தளிர் புன்கு"
"தாழ் காவி"
"நனை ஞாழல்"
"அவிழ் தனவு"
"அகன் தோன்றி"[3] என்றெல்லாம் கூறிவருவது முல்லையை

"நகு முல்லை" — என்று புன்முறுவலுக்கு உரியதாக நகை கூறியது. அதன் மலர்ச்சி நகுதல் — நகைத்தல் — சிரித்தல். இச்சிரிப்பை முல்லை தன் தாயாம் கொடியிலும் காட்டும்; காலத்திலும் காட்டும்.

"கொடி முல்லை எயிறு ஈன" (ஐந்திணை எழுபது : 21)
"முல்லை இலங்கு எயிறு ஈன நறுந்தண்கார்
மெல்ல இனிய நகும்". (கார் நாற்பது 14)
— கொடி பல்போன்று புன்முறுவலை ஈன, கார்காலம் மெல்ல இனிய நகுமாம். இக்காட்சி காதலர்க்குக் கிளர்ச்சியையும் காண்போர்க்கு மகிழ்ச்சியையும் தரும்.

பாவேந்தர் மாலைப்பொழுதில் உலா வருகின்றார். கமழும் மெல்லிய மணத்தோடு தென்றல் வந்தது. வந்த திக்கிலே நடந்தார். அங்கு,

*"குலுக்கென்று சிரித்த முல்லை*
*மலர்க்கொடி கண்டேன்; மகிழ்ச்சிகொண் டேனே"* [4]
முல்லை மகிழ்ச்சி தந்ததைத் தெரிவிக்கின்றார். இஃது அவர்

---

1 ஐங்கு : 454.
2 நற் . 369 : 3, 4
3 பொருந் : 195-200.
4 பாரதிதாசன் கவிதைகள் : முதற்தொகுதி : சிரித்த முல்லை : 7, 8.

"மாலைப் போதில் சோலையின் பக்கம்" சென்றதால் வந்தது.

இப்படிக் கொடியில் – காரில் – மாலையில் சிரித்து அவற்றிற் கெல்லாம் பெருமை தருவது முல்லை. இச்சிரிப்பு எழிற்சிறப்பு; ஏற்கத் தக்க நகைப்பு. இம்முல்லையே ஏற்கத் தகாத நகைப்பையும் நல்கும்.

கன்னியையும் காளையையும் கூட்டி வைத்து அவர்களுடன் கூடிய முல்லை அவர்களது பிரிவின்போதும் பிரிந்து நின்று வேடிக்கை பார்க்கும், அந்நேரத்தில் தலைவிக்கும் தலைவனுக்கும் பொல்லாங்கைத் தரும். பொருள் ஈட்டவோ, நாட்டுப் பணி காரணமாகவோ பிரிந்து செல்லும் அவன், 'கார்காலம் தொடங்கும் முன் மீண்டுவிடுவேன்' என்று சொல்லிச் செல்வான். கார்காலத் தொடக்கத்தில் முல்லை பூக்கும். இதனைப் பார்த்ததும் அவள் நினைவால் அவள் வருந்துவாள். அவள் வருத்தத்தை எண்ணி அவன் கவல்வான். இவ்வாறு இருவரையும் வருந்த வைக்கும் கடிய செயலையும் செய்யும். இம்மலர்ச்சியைப் புலவர்கள், அவளைப் பார்த்து ஏளனமாகப் புன்முறுவல் பூப்பதாகப்பாடினர்.

முல்லை அவளாலே வளர்க்கப்பட்டது. தன்னை வளர்த் தெடுத்தவள் வாடுவதைக் கண்டு தானும் வாடவேண்டிய முல்லை, இவ்வாறு புன்முறுவல் பூப்பது நன்றிகொன்ற கொடிய செயல். இக்கொடிய குணம் இதற்கு எவ்வாறு வந்தது? ஒரு புலவர் நயத்துடன் காரணம் கூறுகின்றார் :

"எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும்?"[1] –இஃது அவரே எழுப்பிக் கொள்ளும் வினா.

"முற்ற
முடியாப் பரவை முழங்குலகத் தெங்கும்
கொடியார்க்கும் உண்டோ குணம்" –இது நயமான விடை.

முல்லையோ கொடிமுல்லை. கொடியில் பிறந்ததால் கொடியார் ஆயிற்று. கொடியவரிடம் நன்றி காட்டும் குணத்தை எதிர் பார்க்கலாமா? அக்குணம் உண்டாகுமோ? இவ்வாறு வினவுவதற் கும் முல்லை ஒரு காரணமாயிற்று.

---

1 தண்டி : சிலேடையில் முடித்தலுக்கு எடுத்துக்காட்டு.

தாய்க்கொடியில் இருந்து இக் கடிய குணத்தைக் காட்டியது போன்று தனக்குரிய பருவ காலத்தில் இருந்தும் காட்டும். தலைவன் வரவில்லை. கார்காலம் வந்துவிட்டது. அக் காலம் தலைவியைப் பார்த்துக் கிண்டலாக நகைத்துவிட எண்ணு கின்றது. நகைக்கப் பல் வேண்டுமே!

"*கொடி முல்லை தொகுமுகை இலங்கு எயிறு (பல்) ஆக*
*நகுமே தோழி நறுந்தண் காரே*"[1] —எனத் தலைவியே கார்ப்பருவம் காட்டிய பல்லைப் பார்த்து வாடினாள்.

முல்லை மென்மையானதுதான். அது பல்லாகும் போது வன்மை பெற்றதாகின்றது. பல்லென்றால் அதற்கென்று கொடிய புலியின் பல்லாக வேண்டியதில்லை. அப்படியும் ஆயிற்று. புலி யென்றால் முல்லையுடன் தொடர்புடைய தென்றல் என்னும் புலி அத்தென்றல் என்னும் புலி கம்பர் பார்வையில்,

"*மன்றல்வாய் மல்லிகை—எயிறு* ..............
.................... *தென்றல் என்றொரு புலி*"[2] —யாகின்றது.

இப்பல்லால் ஏற்பட்ட சிரிப்பெல்லாம் ஏளனச் சிரிப்பு; எடுத் தெறியும் சிரிப்பு; ஏற்கத் தகாத சிரிப்பு.

## பல்லுடைந்த முல்லை

தகாத சிரிப்பு தண்டனைக்கு உரியது. அதிலும் பிரிவால் தனித்திருந்து துயரம் கொள்பரை இரக்கமின்னிப் பல்லைக் காட்டிச் சிரித்தபல்லைக்கடுமையாகத்தண்டிக்கவேண்டும், பல்லை உடைக்க வேண்டும். இந்தப் பல் உடைக்கும் பணியை நிறைவேற்றுகிறவர் கருமையான சிறியதாக நீண்ட சம்மட்டி கொண்டவர். மூக்கு நீண்டுள்ள தும்பி என்னும் வண்டினத்தார்தாம் இப்பணியைச் செய்தார். அவர் பல்லைக் காட்டிய முல்லைக்கொடியைப் பார்த்து,

"*கொல்லை அகடு அணைந்து குறும்பு சேர்ந்து தமியாரை*
*முல்லை, முறுவலித்து நகுதிர் போலும்*"[3] —என்று கனைத் தார். அதனால்,

1 குறுந் : 126.
2 கம்ப : இலங்கை கேள்விப் படலம் : 9
3 சீவ. சி : 1228.

'பல்லை உகுத்திடுவம்' என்று சொல்லி அதன் பல்லாம் முல்லை மலர் மீது பாய்ந்து மிதித்துச் சிதறி விழச்செய்தது. பல்லுடைந்து வீழ்ந்தது. முல்லைக்கு வேண்டியதுதான் இலக்கிய அளவில்.

கொடியிலும், கார் காலத்திலும் தென்றலிலும் கூடிச் சிரிப்பது மட்டுமன்று; முடியிலும் ஏறி ஏளனச் செயலைச் செய்யும்.

எதிர் வீடு ஒரு பார்ப்பன வீடு. அந்த வீட்டுத் தலைவன் பார்ப்பான் வெளியூர்ப் பணிகளைக் கொள்ளாதவன். வீட்டோடு தான் இருப்பான். அதனால் அவன் மனைவி பார்ப்பனத்தி முல்லைப் பூவைத் தலையில் சூடிக்கொள்வாள். கணவனைப் பிரிந்திருப்பவள் சாளரத்தின் வழியே பார்க்கின்றாள். எதிரே சற்றுத் தொலைவில் தெரிகின்ற சாரல் பக்கத்தில் பூத்த முல்லை மலர்களைப் பார்ப்பனத்தி பறித்துச் சூடிக் கொள்கின்றாள். பக்கத்தே அந்தப் பார்ப்பனன் ஒட்டி நிற்கின்றான். இவள் தன் வீட்டைப் பார்க்கின்றாள். அவன் இல்லாமை தவிப்பை தூண்டியது.

இவ்வாறெல்லாம் நடக்குமென்று பிரிந்துள்ள இடத்தில் அவனே நினைத்தும் பார்க்கின்றான். தன் தேர்ப்பாகனிடம் சொல்லுகின்றான் :

*''கான் முல்லைக் கயவாய் அலரி (அதிரல்)*
*பார்ப்பன மகளிர் சாரல் புறத்து அணிய''*[1]

மணத்தை மயக்கும் மாலைப் பொழுதில் அதனைப் பார்த்து

*''வருந்துங் கொல்லோ திருந்திழை அரிவை''.* அதனால் 'தேரை விரைந்து ஓட்டு' என்று துடித்துக்கொண்டு வருகின்றான்

வருகின்றவன் முல்லையை மறந்து வரமாட்டான். வழியில் மணக்கும் முல்லை இவனை விடுமா என்ன? எடுத்துத் தானும் சூடிக்கொள்வான். பாகனையும் ஏவலரையும் சூடிக்கொள்ளச் செய்வான். அவன் அவனுக்கும் அவள்—அவள் உள்ளார் அன்றோ! வீட்டு வாயிலில் வந்து தேரை நிறுத்துவான் என்பது தோழிக்குத் தெரியும். தலைவி வருந்துவாளே என்று வருந்தும் தோழிமாருக்கு அவள் சொல்கின்றாள் :

*''சிறுவீ முல்லைப் பெரிது கமழ் அலரி*
*தானும் சூடினன்; (சூடியவனாக) இளைஞரும் மலைந்தனர்*[2]

ஆகத் தேர் வாயிலில் வந்து நிற்கும்; பார்ப்பீர்'' என்றாள்.

---

1 நற் : 321 ; 3, 4. 2 நற் : 361 ; 1, 2.

தானே எழிற் சிரிப்பையும் ஏளனச் சிரிப்பையும் காட்டிய முல்லை, மங்கையர், மழலையர் உதடுகளில் தவழ்ந்து எழிலையும் பொலிவையும் எழுச்சியுறச் செய்யும். தானே பல்லாகிச் சிரித்த சிரிப்பை மாதர் பல்லில், மழலையர் பல்லில் வைத்தது முல்லை. அதனையும் 'முல்லைச் சிரிப்பு' என்னும் பெயரில் வைத்தது.

கலித்தொகைத் தலைவி ஒருத்தி இளமை மெருகில் நின்றாள். அவளது எழிற்கோலத்தை முல்லைப் பல்லில் கண்டு அவன் பாராட்டினான். காலம் சிறிது கடந்தது. அவன் பாராட்டியதை வைத்து ஒருவகையாக அவனைச் சாடுகின்றாள்: மணக்கும் முல்லை அரும்பை வரிசையாக வைத்தது போன்ற,

> 'எனது பல் அழகைப் பாராட்டிப் பேசினாய். அது போதே நீ ஒன்றை நினைத்திருக்க வேண்டும். முல்லை முகையாகவே இல்லாமல் மலராக மலரக்கூடியது. முகை போன்றே பல் முல்லை மலர் போன்று கழன்று விழும் என்பதையும், அதனால் இளமை கழியும் என்பதையும், எண்ணியிருக்க வேண்டும்'[1] —என்றாள்.

இங்கு இளமைக்கும், அது கழிதற்கும் முல்லை முகையும் மலரும் சான்றாயின.

மகளிரது முல்லை முறுவல் ஆடவரை மயக்கிக் கிறுகிறுக்க வைக்கும் கவர்ச்சி விளையாட்டு. இக்கவர்ச்சி காமக் கிலுகிலுப்பை இயக்குபவர் மங்கையர். அவர்தம் இயக்குநர் முல்லை முகை.

ஆனால், இது தவழும் குழந்தையின் வாயில் பிறந்தால் என்ன நிகழும்? பாரதி பாடுகின்றான்:

> *''முல்லைச் சிரிப்பாலே — எனது*
> *மூர்க்கம் தவிர்த்திடுவாய்''*[2]

மழலையில் முல்லைச் சிரிப்பு மூர்க்கத்தை — கொடுவெறியைச் சாய்க்கும் வல்லமைகொண்டது

இவ்வாறு உவமையால் – உருவகத்தால் முல்லை இலக்கியத்தில் தவழ்ந்தும் தழைத்தும் நடந்தும் ஓடியும் விளையாடும். காதலில் மட்டுமன்று;

---

1 *''நறுமுல்லை நேர்முகை ஒப்ப நிரைத்த*
*செறிமுறை பாராட்டி னாய்மற்றெம் பல்லின்*
*பறிமுறை பாராட்டினையோ ஐய''* —கலி: 22: 9—11

2 பா. பா: கண்ணம்மா என் குழந்தை: 7

"முல்லைமுகை சொரிந்தாற்போன்ற இனிய பால் அடிசில்"[1] எனப் பசிச் சோற்றுக்கும், அதிலும் பாற் சோற்றுக்கு உவமை ஆயிற்று.

## நறு மணமும் திரு மணமும்

முல்லை என்றாலே மணம் மூக்கைத் திறக்கும். இதன் சொல் மூலத்தில் முல்—முர்—முருகு என்னும் வளர்ச்சியைக் கண்டோம். முருகு என்றால் மணம். இவ்வகையில் முல்லைக்கு மணம் பிறவித் தொடர்புடையது.

முல்லை மலர் அளவில் சிறியது. இதழ்கள் சில. மூன்று ஐந்து எண்ணிக்கையில் கொத்தாகப் பூக்கும். ஆயினும் தனித் தனி மலராகும். அளவில்தான் சிறியது. மணத்தில்......

"சிறுவீ முல்லை பெரிது கமழ் அலரி" என்றபடி பெரிதும் கமழ்வது. மணம் கமழ்வதில் பெருமை பெற்றது. அதிலும் பெரிதாகப் பெருமை பெற்றது முல்லைதான். இதன் மணப் பெருமையைப் பாவேந்தர் பாரதிதாசனார்,

"முகிழாத முன் மணக்கும் முல்லை மணமும்"[2] —என்று

தமது ஆர்வத்தையும் குழைத்துப் பாடினார். முல்லை மணம் கும்மென்றிருக்கும். இம்மணம் ஓர் இன்பக் கிளர்ச்சியைத் தருவது. காதல் உணர்வைக் கெல்லுவது. கவனத்தை வேறெங்கும் விடாது காமக் களிப்பில் மூழ்க வைப்பது.

காமத்தை எழுப்புபவன் காமன் என உருவகம் செய்யப் பட்டான். காமனது கையம்புகள் ஐந்தில் முல்லை ஒன்றாக வைக்கப்பட்டது.

இதன் மணத்தால் எழுந்த கருத்தொன்று மணக்கின்றது.

முல்லை அரும்பும்; மங்கையும் காதல் அரும்பப் பெறுவாள். அது பூக்கும்; அவளும் பூப்படைவாள். அது மணக்கும்; அவளும்

---

1 சீவ. சி : 2628 2. முக்கட்பேறு : பாட்டி தாலாட்டு : 5

மணப்பாள், 'மணத்தல்' என்றால் 'கூடுதல்' என்று பொருள் இருவரையும்கூட வைத்ததே முல்லைதானோ. இத் தொடர்பில் தான் அவர்களது வாழ்க்கை இணைப்பு நிகழ்ச்சி 'மணம்' என்று பெயர் பெற்றது. அது 'வதுவை மணம்' ஆயிற்று. அது 'திரு' பெற்றுக் காலப் போக்கில் 'திருமணம்' ஆயிற்று. எனவே முல்லை மணம் ஈந்த சொல்லே திருமணம்.

சொல்லை மணமாக்கியது மட்டுமன்று; தன்னைச் சேர்ந் தோரையும் மணஞ்செய்து கொள்ள வைத்தது மட்டுமன்று; அவர் தம் உடலையும் மணக்க வைத்தது

இளமைக் கட்டுக் குலையாமல், மனத்தை மங்கையர்பால் மல்லாத்திவிடாமல் காத்த குமரனது உடல் முல்லையாக மணக்கும் என்பர். உடல் முத்திரை இலக்கணம் (சாமுத்திரிகாலட்சணம்) கூறும் நூல்களும் தூய விடலையின் (பிரம்மச்சாரியின்) உடல், முல்லை மணம் காட்டும் என்கின்றது

வள்ளலார் இராமலிங்க அடிகளாரது உடலில் ஒருவகை மணம் எழுந்தது என்பர். அந்த மணம் முல்லை மணமாக இருக்கலாம். விவேகானந்த அடிகளார் உடுத்திக் களைந்த ஆடைகள் முல்லை மணந்ததாகப் பேச்சு உண்டு.

தமிழ் இலக்கியத்தில் இக்கருத்து தென்படுகின்றது.

ஒரு தலைவி அரிசில் கிழார் என்னும் தமிழ்ப் பேரறிஞர் சொற்களில் பேசுகின்றாள்; பேசிப் பூரிக்கின்றாள்.

> 'கடந்த முழுநிலவு நாள். எங்கும் வெண்ணிலாவின் ஒளி நிறைந்திருந்தது. அவர் எனது தோள்களைத் தழுவி இன்பம் தந்தார். ஆகா, அப்போது அவரது உடலில் கமழ்ந்த மணத்தை என்னென்பேன்! அவர் இறுகத் தழுவியதில் அந்த மணம் எனது உடலில் ஏறிற்று. அது முல்லையின் மணம். முல்லை முகையின் மணம். அன்று முதல் எனது உடலில் மணம் கமழ்ந்துகொண்டே உள்ளது. இன்றும் கமழ்கின்றது'

இப் பேச்சு அவளது இன்பத் தினவில் எழுந்ததாகலாம். ஒரு திங்கள் கழிந்தும் அவனது முல்லை மணம் இவளது உடலில் மணப்பதாகக் கூறியது இன்பக் கிறுக்கின் உளறல்தான். இருப் பினும் ஆடவர் உடலில் முல்லை மணக்கும் என்னும் கருத்து தெரிகின்றது. இம்மணத்தை உடல் இயற்கையாகவும் பெற்றிருக்க லாம். முல்லை மலரைக் கண்ணியாகவும் தாராகவும் நாள்தோறும்

பயன்படுத்தியதாலும் ஏறிய மணமாகவும் இருக்கலாம். எவ்வாறாயினும் முல்லை மணம் இன்பக் கிளர்ச்சி தருவது; கவர்ச்சி மணம் என்பது உண்மையாகின்றது. இந்த மணம் காட்டும் பாடல், உணர்வால் மோந்து சுவைக்கத்தக்கது:

*"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன*
*இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை*
*தட்டைப் பறையிற் கறங்கும் நாடன்*
*தொல்லைத் (கடந்த) திங்கள் நெடுவெண் ணிலவின்*
*மணந்தனன் மன் என் தோளே;*
*இன்றும் முல்லை முகைநா றும்மே"*[1] . இதனை எழுதிய எழுத்தாணியை மோந்து பார்க்க வேண்டும் போல் உள்ளது.

அவன் முல்லை மணம் இவள்மேல் ஏறினால், அவளுக்கு மணம் இல்லையோ என்றால்,

*... ... .... ... ... ... ... முல்லை*
*இடும்பல் கூந்தல் நாற்றமும்*
*முருந்தேர் வெண்பல் ஒளியும் நீ பெறவே"* —என ஒரு, தோழி 'உனது கூந்தலின் முல்லை' மணத்தைப் பெறுவாய் என்றாள். அவன் தார் அணிந்தவன். மார்பில் முல்லை மணம் கமழ்ந்தது. இவள் கூந்தலில் சூடியவள். கூந்தல் முல்லை மணம் வழங்கிற்று.

முல்லை மணம் காதல் உணர்விற்கு மட்டும் அன்று; உடம்பில் புத்துணர்ச்சியையும் மகிழ்ச்சியையும் தருவது. ஒரு நாட்டு வழக்குப் பாடல்.

*"பச்சைத் தண்ணியிலே பல்லைக் கழுவு;*
*முல்லைக் காற்றிலே முகத்தைக் கழுவு"* —இந்த நாட்டு வழக்கு, முகத்தை முல்லை மணம் கமழும் தென்றலாலே கழுவிக் கொள்ளச் சொல்கின்றது. காற்றாலே கழுவுவதாம். அருமையான நயம். சோர்வு என்னும் அழுக்கு கழுவப்பட்டுப் புத்துணர்ச்சி பிறப்பதை மிக நயம்படக் கூறும் எழுதா இலக்கியம் இது.

---

1 குறு : 193.

எழுதப்பட்ட இலக்கியங்களில் முல்லைக்கென்று அதன் பெயரால் இலக்கியம் இருக்கின்றது அன்றோ? பத்துப் பாட்டில் '*முல்லைப் பாட்டு*' முத்துப் பாட்டு. இது முல்லை என்னும் கற்புத் திறத்தை அடிப்படையாகக் கொண்டது. "*கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை*" என்பதற்கு ஏற்ப, 'வருவேன்' என்று சொல்லிச் சென்ற கணவனது சொல்லை நம்பி ஆற்றியிருப்பது முல்லை. கணவனைப் பிரிந்தவள் அவனது கடமைகளை உணர்ந்து பொறுத்திருப்பாள். இது "கற்பென்னும் திண்மை" எனப்பட்டது. பொறுமை, உறுதி இரண்டையும் உள்ளீடாகக் கொண்டது முல்லை. "இல்லிருத்தல் முல்லை" என்பது இலக்கணம். இதனை உரிய பொருளாகக் கொண்டது இந்நூல்.

இந்நூலில் முல்லைப் பூவைப்பற்றிய ஒரே ஒரு செய்தி உண்டு. அது குறிசொல்வதற்கு முல்லைப் பூ பயன்பட்டதைக் குறிக்கின்றது. முன்னர், மணமக்களை வாழ்த்துவதற்கு முல்லையொடு நெல்லையும் கொண்டதைக் கண்டோம். அது போன்றே முல்லையையும் நெல்லையும் ஒரு நாழிப் படியிலே கலந்து வைத்துக்கொண்டு இரண்டு விரல்களால் எடுத்துச் சிதறப் போட்டு அதில் அமையும் முல்லை, நெல் எண்ணிக்கையைக் கொண்டு வருங்கால நிகழ்ச்சியைக் கூறுவர். (இது இக்காலத்து எண்சோதிடம்—*NUMERALOGY*- போன்றது.) இதனை முதுமையடைந்த பெண்கள் செய்வர். இது விரிச்சி எனப்படும்.

"*நெல்லொடு*
*நாழிகொண்ட நறுவீ முல்லை*
*அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது*
*பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப*"1 —என இந்நூல்

தெரிவிக்கின்றது. மேலும் இந்நூலால் அறியப்படும் வழக்குகள்பல.

# பேரும் புகழும்

முல்லைப் பெயரால் "*முல்லைப்பாட்டு*" நூல் எழுந்தது போன்று முல்லைப் பெயர் கொண்ட புலவர் பட்டியலும் உண்டு.

அள்ளூர் நன்முல்லையார்

---

1 முல். பா. 8-11

காவல் முல்லைப் பூதனார்—எனப் பெண்பால் ஆண்பாற் புலவர் பெயர் சூடினர்.

பிரெஞ்சுக் கவிஞர் ஒருவர் 'சாக்குவசு செசுமின்' என முல்லைப் பெயர் கொண்டு விளங்கினார்.

'முல்லைநகை வடிவாள்' என்று திருமயேந்திரப்பள்ளி அன்னைக்கடவுளர்க்குப் பெயர். 'முல்லைவனநாதர்'சிவபெருமான்.

திருமுல்லைவாயில், முல்லையூர், முல்லைக்காடு, முல்லைப் பாடி என ஊர்ப்பெயர்களில் முல்லை வாழ்கின்றது.

ஊரைச் சுற்றிலுமே முல்லை பூக்கும் கொடிகள் வேலியாகப் படர விடப்படும். அஃது ஊருக்கு அழகு, வளம், மணம் இவற்றால் பெருமை தந்தது. அவ்வூர்கள் "முல்லை வேலி ஊர்" என்றே பாடப்பட்டன. பேகன் என்ற பெருவள்ளல்.

"முல்லை வேலி நல்லூரானே"[1] எனப்பட்டான்.

"வேலி சுற்றிய நறுவீ முல்லை"[2] என்றும் "முல்லை தலை அணிந்த முஞ்ஞை வேலி"[3] என்றும் பாடப்பட்டன. மாணிக்கவாசகர் படைத்த திருக்கோவையார்த் தலைவி "முல்லை வேலி எம்மூர்"[4] என்றாள்.

முல்லைக்காரன் என்பான் 'குத்தகைக்காரன், பண்ணைக் காரன்' என்று கொள்ளப்படுவதாகச் சென்னைப் பல்கலைக் கழக அகர முதலி கூறுகின்றது.

முல்லையைப் பயன்படுத்த அதனைக் கொய்வது மகளிர்க்கு ஒருவகைப் பணியாக இருந்தது. சூடிக்கொள்ளவும், விலைக்கு விற்கவும் கொய்வர்.

"அவல் (குடைவாக) வகுத்த பசுங்குடையால்
புதன்முல்லைப் பூ பறிக்குந்து"[5] என்னும் அடிகளால்

பசுமையால் பனைமட்டையைக் குடைவான சிறு கூடைபோன்று வனைந்துகொண்டு அதில் புதரிற் பூத்த முல்லைப் பூக்களைப் பறித்ததை அறிகின்றோம்.

---

1 புறம் : 144 : 14.
2 அகம் 314 : 19
3 பெருங் : 4 : 2 : 63.
4 திருக்கோ : 136.
5 புறம் : 352 : 3, 4.

கொய்த முல்லை, கண்ணியாகவும் மாலையாகவும் தாராகவும் உருக்கொள்ளும். ஆவினத்தை மேய்க்கும் ஆயர் "முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்" [1] எனப்பட்டனர். அவர் முல்லை குருந்தொடு (குருந்தம்பூ) முச்சி வேய்வர்" [2] ஆயர்களில் ஆடவர் குருந்தம்பூ அணிதல் இயல்பு. சிவபெருமானும் "முல்லைக் கண்ணி முடியாய்" [3] எனப்பட்டார். கடவுளர் யாவருக்கும் முல்லைக் கண்ணியும் முல்லைச் சூட்டும், முல்லைத்தாரும் சூட்டி அணிவிக்கப் பட்டன.

முல்லைத்தாரைப் புணர்ச்சியின் போது அணிவதுபோன்று போர் வெற்றியின் போதும் அணிவர். இவ்வாறு சூடிய ஒரு சோழன் "முல்லைத்தார்ச் செம்பியன்" [4] எனப்பட்டான். சீவக சிந்தாமணியில் கோவிந்தையின் தந்தை நந்தகோன் "முல்லைத் தாரான்" [5] எனப்பட்டதை வழக்கு நோக்கி எழுதப்பட்டதாகக் கொள்ளலாம்.

போரில் வெற்றித் திணை வாகைத் திணையாகும். இதன் உட்பிரிவான துறைகள் பல. அவற்றுள் முல்லையால் பெயர் பெற்ற துறைகள் 12 வாகைத் திணையில் வெற்றியை இருவகை யாகப் பேசுவர். உறழ்ச்சியால் பெற்ற வாகை; இயல்பால் பெற்ற வாகை. இவ்விரண்டில் முல்லைப் பெயர் பெற்றவை இயல்பால் பெற்றவை என்பது ஒரு இயல்புப் குறிப்பு.

வெற்றி நிலையில்:

| | |
|---|---|
| அரசனது வெற்றி மேம்பாடு கூறுவது | — அரச முல்லை |
| பார்ப்பனனது நடுவுநிலைச்சிறப்பு[4] | — பார்ப்பனமுல்லை |
| அவையோர் நடுவுநிலைப் பெருமை | — அவைய முல்லை |
| கணித்துக் கூறும் சோதிடன் புகழ் | — கணிவன் முல்லை |
| பழங்குடி வீரத்தாயின் மனவலிமை | — மூதின்முல்லை |
| ஏறுபோன்றவனால் பெற்ற குடிப்பெருமை | — ஏறாண் முல்லை |
| குடி,ஊர்கூறிவீரனது நல்லாண்மை குறிப்பது | — வல்லாண் முல்லை |
| அரசனது காவற் சிறப்பு | — காவல் முல்லை |
| அரசன்போர்க்களத்தில்காட்டியபேராண்மை | — பேராண் முல்லை |

1 பதிற் ; 21 : 70.
2 கலி : 113 : 25.
3 அப் தே : திருவதிகை'
4 புற. வெ. மா : 9 : 34
5 சீவ. சி : 485

படை வீரனது போர்த்துடிப்பு அடங்காமை — மற முல்லை
மன்னனது கொற்றக்குடைச் சிறப்பு — குடை முல்லை
அறிவிற்சிறந்தசான்றோரதுசால்பின்சிறப்பு — சால்பு முல்லை[1]

இவையன்றிக்

கார்காலச் சிறப்பைக் கூறும் கார் முல்லை, கற்பின் சிறப்பைக்கூறும் கற்பு முல்லைகள் உள.

இங்கு 'முல்லை' என்ற சொல் புகழ், பெருமை, சிறப்பு மேம்பாடு முதலிய பொருள்களுக்குப் பயன்பட்டது.

இதற்கு 'முல்லை' என்னும் சொல்லைக் கொண்ட காரணம் ஆழ்ந்து காணத்தக்கது. முல்லை, தமிழர் தம் அகவாழ்வில் இன்றியமையாத இடம் பெற்றது; அதனால் அகத்துறையில் காதல் அன்பு சிறந்தது. கற்பின் சின்னமாகிக் கற்பு புகழ் பெற்றது; இல்லறம் அமைந்து மேம்பாடடைந்தது. வாழ்வே பெருமை கொண்டது. இவற்றை உள்ளோட்டமான கருத்து களாகக் கொண்டு புறத்திணையுள் முல்லைப் பெயரில் துறைகள் அமைக்கப்பட்டன.

இவ்வாறு முல்லை, பெயர் பெற்றுப் பேரும், பெருமை பெற்றுப் புகழும் கொண்டு பேரும் புகழும் பெற்ற முல்லையாயிற்று.

இப்பெருமைக்குரிய முல்லை சூடப்படாது விடுக்கப்படும் காலம் உண்டு. முன்னர் 'கணவன் பிரிவின்போது மனைவி சூடாள்' என்பதை அறிந்தோம். துக்க காலத்தில் எவரும் சூட மாட்டார். பொதுவில் எம்மலரையும் சூடார். சிறப்பாக முல்லை மலரைச் சூடார்.

பெருஞ்சாத்தன் என்பவன் ஒல்லையூரில் வாழ்ந்த குறுநில மன்னன். அவன் போரில் இறந்துவிட்டான். அதனை முல்லை அறிந்ததா என்ன? காலச்சூழலில் அது பூத்து நின்றது. ஒருவரும் இதனைக் கவனிக்கவே இல்லை. பயன்படுத்தாமலிருக்கும்போது பூத்த முல்லையை அம்மன்னன்மேல் பெருவிருப்புடைய புலவர் குடவாயில் கீரத்தனார் பார்க்கின்றார். தான் பெற்றுள்ள அவல உணர்வில் 'முல்லையே! அருமையானவன் இறந்தான் என எண்ணாமல் பூத்துள்ளாயே! அவனை இழந்து நான் உயிரோடு இருப்பதுபோல், நீயும் பூத்தியோ' என்று ஓலமிடுகின்றார். இவ்வாறு பூத்திருக்கும் முல்லையைத் துயர மிகுதியால்,

1 புற. வெ. மா : நூற்பா : 8

*"இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;*
*நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்*
*பாணன் சூடான்; பாடினி அணியாள்*
*ஆண்மைத் தோன்ற ஆடவர்க் கடந்த*
*வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை*
*முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"*[1] —என்று

ஓலமிட்டுப் பாடினார்.

இப்பாட்டு துக்க காலத்தில் முல்லை சூடார் என்பதை மட்டும் அன்று. எவரெவர் முல்லையைச் சூடுவர் என்று பல்வகையினரையும் காட்டுகின்றது. இளைய குமரர் சூடும் பழக்கத்தையும், வளையணிந்த மகளிர் கொய்வர் என்பதையும், பாணன் தன் யாழால் கொடியை வளைத்துக் கொய்வான் என்பதையும், பாடிணி அணிவதையும் காட்டுகின்றது.

மாந்தரில் சாதி வகுத்தவர் கருத்தில் முல்லை விடுபடவில்லை. தமிழகத்தில் சிறப்பாகக் கொள்ளப்படுவதைத் தமதாக்கிக் காட்டுவது வந்தேறிகளது வாடிக்கை. அவர்கள் கருத்தில் முல்லை பெற்றுள்ள சிறப்பிடம் பட்டது. அது முதல் சாதி–எமது சாதி என்று படைத்து மொழிந்து கொண்டனர்.

முல்லையும் முல்லை இனமும் எங்கும் பூக்குமாயினும் தமிழ் நாட்டார் தம் மரபுக்கு ஒருவகைச் சின்னமாகக்கொண்டனர். முல்லை நில மக்களாக வாழ்வை வளர்த்துக்கொண்டபோது அமைந்த மரபுகள் தமிழர் யாவர்க்கும் அமைந்தன. மேற்கண்ட பாடலில் உள்ள சூடாதார் பட்டியல் யாவரையும் குறிக்கவில்லை என்றாலும் குறிக்கப்பட்டவரை வைத்துக் காணும் போது ஒன்று புலப்படும்.

இளையோர், வளையலணிந்த குமரிகள் என்ற அளவில் மக்களில் அனைத்து வகையினரும் அடங்குவர். பாணன், பாடினி என்ற வகையில் கலைஞர் பரிசில் வாழ்க்கை எளியோர் அடங்குவர். எனவே, தமிழகத்தில் சாதிப் பாகுபாடு புகுத்தப்பட்ட பின்னரும் முன் மரபுப்படி அனைத்து வகை மக்களும் முல்லையைத் தம் வாழ்வில் கொண்டனர். இதனை இலக்கியங்கள் பரவலாகவும் உறுதியாகவும் தெரிவிக்கின்றன.

---

1 புறம் : 242.

ஆனால், தமிழகத்தில் வந்தேறிகள்தாம் சாதிப் பாகுபாட்டையும் அதில் உயர்வு தாழ்வையும் படைத்து மொழிந்தனர். அன்னார் தாமே உயர்ந்தோர் என்பதைப் பல்வகையாலும் நாட்டுவதில் பல முறைகளையும், தேர்ந்த வஞ்ச உத்திகளையும் கையாண்டனர். அவற்றுள் ஒன்று. நாட்டில் பெருமைக்குரியதாகக் கொள்ளப்படும் எதையும் தமக்குரியதாகக் காட்டிக் கொள்ளல். இஃது அவர்களது வாடிக்கை. அவர்க்கு வாய்பிளந்த தமிழரிற் பலரும் தலையசைத்துத் தாளம் போட்டனர். இந்த அரங்கேற்றத்தில் முல்லையும் ஓர் அரங்கத்தில் ஏற்றப்பட்டது.

நான்கு சாதிக்கும் உரிய மலர்களாக நான்கு மலர்களைக் குறித்து எவரோ ஒருவர் கருத்தறிவித்தார். அவரோ, அதனை ஏற்றவரோ இலக்கியமும் ஆக்கினர்.

*"முல்லை அந்தணர்; குறிஞ்சி அரசன்;*
*மல்லல் மருதம் வாணிக னென்ப;*
*நெய்தல் சூத்திரன்; நினையுங் காலைப்*
*பல்குலம் என்ப பாலை யானே"*[1] இப்பாடல் யாப்பருங்கல விருத்தியில் சான்றுக்குக் காட்டப்பட்டுள்ளது. இதில் அமைந்த 'சூத்திரன்' என்ற சொல் இப்பாடல் முற்காலப் பாடல் அன்று என்பதைக் காட்டிக்கொடுக்கின்றது. முற்காலம் முதல் காலமெல்லாம் இந்த 'வேலை' நடந்து வந்திருப்பதையும் அதனைத் தமிழ்ப் புலவர்களும் ஏற்று எடுத்துக்காட்டுக்குக் கொண்டதையும் எண்ணுங்கால் தமிழகத்தின் கால நிலையைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

புலவர் மன்னரை நாத்தழும்பு ஏறப் பாடியே பரிசில்பெறுவர் முல்லைப் பூவைப்பெற்ற கொடி. "நாத்தழும்பு ஏறப் பாடாமலே" தேரைப் பரிசிலாகப் பெற்றதை அறிவோம். வேள்பாரி இம் முல்லைக்குத் தேரை வழங்கியதால் கடையெழுவள்ளல்களிலே ஒருவன் ஆனான். இது அவனுக்கு முல்லை வழங்கிய பரிசு.

## இசை நட்ட இசை முல்லை

இசைக்கு மூலம் இசைக்கருவி. இசைக் கருவியில் மூலம் குழல். அதில் எழுந்த இயற்கை ஒலியே இசையாகப் பிறப்

1 யாப். வி; ஒழிபியல் நூற்பா 2 எடுத்துக்காட்டு.

பெடுத்தது. குழல் வழியே நரம்புக் கருவியாம் யாழ் எழுந்தது. பிற இசைக்கருவிகள் யாவும் குழல், யாழ் இரண்டின் வழி உண்டானவை. முதல் இசைக்கருவிகளாகிய குழலிலும் முல்லை ஊதியது; யாழிலும் மீட்டியது.

குழல், முல்லை மலர்கின்ற முல்லை நிலத்துக்கு உரியது அக்குழல் பல வகையில் அமைந்தது. அதில் முதல் வகை 'முல்லையந் தீங்குழல்' எனப்பட்டது. இப்பெயர் முல்லைப் பண்ணை எழுப்புவதால் பெற்ற பெயர். ஆயினும், இக்குழலின் வடிவமைப்பில் முல்லைக்கொடி இடம் பெற்றது.

புல்லாங்குழலின் வளைவாயிடத்தில் முல்லைக்கொடியை முப்புரியாகத் திரட்டி வளைவாகப்பண்ணிச் செறிப்பர். இது 'முல்லைக் குழல்' எனப்படும்.

"*முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி*"[1] -என்று சிலம்பு ஊதுகின்றது.

*குழல் வழி எழுந்த யாழிலும் "முல்லையாழ்"* உண்டு. இஃது இசைத்துறையில் அடித்தளம் அமைத்தவற்றில் ஒன்று. இதனையே 'செல்வழி யாழ்' என்பர். பண்ணினை வழங்கும் நரம்புத் தெரிப்பால் யாழ் நான்கு வகைப்படும், அவற்றுள் ஒன்று முல்லையாழ். அது வழங்கும் பண்,

*நோதிறம், பெயர்திறம், சாதாரி, முல்லையென*
*நாலும் செவ்வழி நல்யாழ்த் திறனே*"[2] என நான்கு வகைப் படும்.

இதற்கு விளக்கமாக,

"செவ்வழி யாழ், முல்லையாழ்" எனவும் வழங்கும் என்பதும் முல்லை, சாதாரி என்னும் பண்பெயர்கள் தம்முள் வேறுபாடு இன்றி வழங்கப்படும் என்பதும் ஆராய்ச்சியினால் தெளிவாகின்றது"[3] — என்ற விபுலானந்த அடிகளார் முடிவைக் கொள்ளலாம்.

முல்லை இவ்வாறு இசைக்கருவியாகவும் பண்ணாகவும் திகழ்வதையும்,

---

1 *சிலம்பு* : 17 :21. 2 *பிங். நி* : 1379

3 யாழ் : (பண்ணியல்) : பக்கம் 147 : வரி 32 — 34.

"கொன்றை, ஆம்பல், முல்லை என்பனசில (இசைக்) கருவி. இனி அவற்றை பண்ணென்று கூறுப எனில் அங்ஙனம் கூறுவாரும் ஆம்பலும் முல்லையுமே பண்ணாதற்குப் பொருந்தக் கூறின் அல்லது கொன்றை என்றொரு பண் இல்லை"[1]

—என அடியார்க்கு நல்லார் சிலம்பில் விளக்கியிருப்பது கொண்டும் உணரலாம்.

குழலால், யாழால், பண்ணால் எழும் பாடல் 'முல்லையம் தீம்பாணி' எனப்படும்.

இப்பண்ணிற்கும் பாடலுக்கும் சிறப்பாக உரிய இடம் முல்லை நிலம். ஏனெனில் இந்நிலத்தில்தான் இசையின் வித்து முளைத்தது. இசைக்கருவியால் தழைத்தது. கருவியில் முதற்கருவி குழல். அதனைக் கண்டவன் முல்லை நிலத்து மகன். அதன்வழி நரம்புக் கருவி. அதனையும் கண்டு வளர்த்தவன் முல்லை நிலத்தவன். இதனைப்[2] பெரும்பாணாற்றுப்படையில் உருத்திரங்கண்ணனார் அமைத்துப் பாடியுள்ளார். இதனைக் காட்டி யாழ்நூல் செய்த விபுலானந்த அடிகளாரும் 'முல்லை நிலத்தவரே இசைக் கருவிகளின் மூலத்தர்" என்று காட்டினார்.

முல்லை தன் நில வகையால் முதலிடம் பெறுவது. இசையிலும் முல்லைப் பண்ணாம் சாதாரிக்குரிய பருவம் கார் காலம். பொழுது மாலை. இவ்வாறு முல்லை மலரும் பருவத்தையும் பொழுதையும் கொண்டதால் பூவால்தான் இசைப்பெயர்கள் அமைந்தன என்பதையும் காட்டுகின்றது. தன்தாயாம் கொடியையும் குழலில் பின்னி முல்லையந் தீங்குழல் என்று பெயர் வாங்கிக் கொடுத்தது.

இவற்றிற்கெல்லாம் மேலாகத் தன் மணத்தையும் இசையில் கமழச் செய்தது. இசைஎழிற்கும் ஏழுவகை மணம் விதிக்கப்பட்டது. அவற்றுள் துத்தம் என்னும் இரண்டாவது இசை முல்லை மணத்திற்கு உரியது. முதல் இசை குரல் என்பதும் முல்லையின் குடும்பத்தைச் சேர்ந்த மௌவல் மணம் கமழ்வதாக அமைந்தது. இதனை நிகண்டுகள் யாவும் காட்டுகின்றன.

---

1 சிலம்பு 17 : 20 விளக்கவுரை.
2 பெரும்பாண் : 175 — 182.

இசைத்தமிழிலும் முல்லை இசைத்து மணக்கிறது; இசை நாட்டு கின்றது. இதன் இயல்பான சிறப்பை எல்லாம் கவிதையில் நிறுத்தி முல்லையை வினவி முடிவுக் கட்டலாம். என்ன முடிவு?

*ஏன்சிரித்தாய் 'களுக்' கெனவே முல்லாய்!*
*எழிற்குமரி கைவளர்ப்போ சொல்லாய்?*
*தான்சிரிக்கும் கூந்தலிலே முல்லாய்,*
*தமிழ்க்குமரன் சூட்டியதோ சொல்லாய்?*
*தேன்சிரிக்கும் மணமதனால் முல்லாய்,*
*திருமணமாம் சொல்லளித்தாய் நல்லாய்!*
*"நான்சிரித்தேன் கற்பெனுமோர் சொல்லை*
*நாட்டியதால்" எனும்விடையோ சொல்லாய்?*

*புன்முறுவல் பூவையர்க்கே பல்லாய்ப்*
*பொலியவைத்த புதுமையென்ன சொல்லாய்!*
*சின்னமலர் நீ, முல்லாய், வாழ்த்தும்*
*சின்னமெனச் சீர்பெற்றாய் முல்லாய்;*
*வண்ணமெனும் தமிழிசையை முல்லாய்;*
*வாரிக்கொண்டாய் தாளமிட்டே, நல்லாய்!*
*'தென்பாங்கு வாழ்வுமலர் முல்லாய்*
*திண்ணமாய் நா, னென்றே சொல்வாய்!*[1]

1 கோவை. இளஞ்சேரன் கவிதை.

## ஆம்பற் பூ

# ஒரு பூவிற்குள் பல ஊழிக்காலம்

*'நூறாண்டு வாழ்க'*— என்று வாழ்த்துவது நிறைவேறக் கூடியது.

*'ஆயிரம் ஆண்டு வாழ்க'* –என்றால் அது வாழ்த்து பவருடைய ஆர்வத்தின் வெளிப்பாடு.

*'பத்தாயிரம் ஆண்டு......நூறாயிரம் ஆண்டு'* என்று, வளர்ந்து உலகம் அழியும் காலம் வரை அஃதாவது 'ஊழிக் காலம் வரை வாழ்க' என்றால் அது வாழ்த்துபவருடைய தகுதி யைப் பொருத்து ஒரு கருத்து உள்ளதாகும். புலன் அழுக்கு அற்ற அறவோர் கபிலர் இவ்வாறு வாழ்த்தினார் என்றால் அதனை வெற்றுக் கொட்டாவி என்று தூக்கத்தின் முன்னறிவிப் பாகக் கருதக் கூடாது. 'உலகம் அழிந்தாலும் உனது பெயர் நிலைத்திருப்பதாக' என்னும் கருத்தை அவ்வாறு வாழ்த்துவதாகக் கொள்ளவேண்டும். இக்கருத்தும் வாழ்த்தப்படுபவரை இணைத்துப் பார்க்கத்தக்கது.

ஆதன் என்று ஒரு சேர மன்னன். இவன் பெயரே வாழ்த்துச் சொல் இணையப் பெற்றது. 'வாழியாதன்' என்பது இவனது இயற்பெயர். மன்னர் 'இளங்கோ, முடிக்கோ பெருங்கோ' என்றெல்லாம் அடைமொழி பெறுவர். மாறாகக் 'கடுங்கோ' என்று பெயர் பெற்ற சிலருள் இவன் ஒருவன், கடுமையைப் பகைவரிடம் காட்டிக் 'கடுங்கோ' ஆனவன். மக்கட்குச் செல்வமாக வாழ்ந்தவன். இவற்றாலெல்லாம் 'செல்வக் கடுங்கோ வாழியாதன்' என்னும் நிறைபெயர் பெற்றவன்.

இவனை நிறைவாக வாழ்த்த முந்துகின்றது கபிலரது உள்ளம். 'ஊழிக்காலம் வரை உனது பெயர் நிலைத்திருப்பதாக' என்பதோடு முடிக்க அவர் உள்ளம் நிறைவு பெறவில்லை. பல ஊழிக்காலம்......

எத்துணை பல? ஒரு பெரும் எண்ணிக்கையில் வாழ்த்த விழைகின்றார். 'ஆம்பல் ஊழிக்காலம்' —என முடிக்க முனைந்து அதனாலும் மனம் நிறைவு கொள்ளாமல் அதற்கு மேலும், அதற்கு மேலும் 'ஆயிரம், ஆயிரம், ஆம்பல் ஊழி வாழ்க என்றார்.

அஃது என்ன ஆம்பல்? எத்துணை எண் கொண்டது? பரிபாடல் விடைகூற அழைக்கின்றது.

திருமாலினுடைய கைகளின் பெருமையை அதன் எண்ணிக்கைப் பெருக்கில் காட்ட, கடுவன் இளவெயினனார் என்னும் புலவர் முனைகின்றார்.

"ஒருகை, இருகை, முக்கை, நான்கு...... பத்து கை, நூறு... ஆயிரம்...... பத்தாயிரம்...... நூறாயிரம் கைகள்" என்று வளர்த்தினார். அதற்குமேல் "ஆம்பல் கைகள்" என்றார். அதிலும் பல அடுக்கிய கைகள் என்றார்'1

---

1 "பதிற்றுக்கை மதவலி; நூற்றுக்கை ஆற்றல்;
ஆயிரம் விரித்தகையம் மாய மள்ள;
பதினாயிரம் கை முதுமொழி முதல்வ;
நூறாயிரம் கை ஆறறி கடவுள்;
அனைத்தும் அல்ல பல அடுக்கல் ஆம்பல்
இனைத்துளன எண்வரம்பு அறியா யாக்கையை." —பரி: 8 : 40—45.

அப்படியென்றால், 'ஆம்பல்' என்பது நூறாயிரத்திற்கு மேல் அமைந்த எண்ணிக்கை என்றாகின்றது.

'ஆம்பல்' என்னும் சொல் 'எண்ணிக்கைச் சொல்' என்பதைத் தொல்காப்பியம்,

*"ஐ, அம், பல் என வரூஉம் இறுதி*
*அப்பெயர் எண்ணினும்"*[1] என்னும் நூற்பாவால் தெரிவிக்கின்றது. இதில் 'ஐ', என்பது தாமரையையும் குவளையையும் குறிக்கும், 'அம்', என்பதுவெள்ளம் சங்கம்என்பவற்றைக் குறிக்கும். (பிற்காலத்தவர் குமுதம் சேர்த்துக்கொண்டனர்) 'பல்' என்பது ஆம்பல் என்பதைக் குறிக்கும். ஆம்பல் ஒன்றையே குறிக்கும்.

இதே பரிபாடலில் கீரந்தையார் என்னும் புலவர் நெய்தல் என்பதையும் ஓர் எண்ணிக்கைச் சொல்லாகச் சேர்த்து,

*"... ... ... ... இரு நிலத்து ஊழியும்*
*நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்*
*மைஇல் கமலமும் வெள்ளமும் நுதலிய*
*செய்குறி (எண்ணிற்குக் கொள்ளப்பட்ட குறி) ஈட்டம்"*[2]
-என்றார்.

நெய்தலுக்குத் தொல்காப்பியம் இடம் வைக்கவில்லை.

இவற்றையெல்லாம் கொண்டு பார்த்தால் 'ஆம்பல்' என்னும் மலரைக் குறிக்கும் சொல் ஒரு பெரும் எண்ணிக்கைக்குக் குறியீடாகக் கொள்ளப்பட்டதை அறியலாம்.

இவ் ஆம்பல் எத்துணை எண் கொண்டது என்பதை ஓரளவில் பிங்கல நிகண்டுகொண்டு காணலாம்.

3 ஊழி கொண்டது 1 கடல் (மாகடல் அன்று) – தொல்காப்பியத்தில் இல்லாதது.

3 கடல் கொண்டது 1 சங்கம் (அம் விகுதி)
8 சங்கம் கொண்டது 1 விந்தம் (அம் விகுதி)
8 விந்தம் கொண்டது 1 குமுதம் (ஆம்பலின் மறுபெயர்)
8 குமுதம் கொண்டது 1 பதுமம் (தாமரை—ஐ விகுதி)

---

1 தொல் : எழுத்து 394.
2 பரி : 2 : 13—16

8 பதுமம் கொண்டது 1 நாடு (தொல், இல்லாதது)
8 நாடு கொண்டது 1 மாகடல் (தொல், இல்லாதது)
8 மாகடல் கொண்டது 1 வெள்ளம் (அம் விகுதி),[1] பிங்கலம் காட்டும் இவ்வளர்ச்சியில் புதுச் சேர்க்கைகள் இருப்பினும் ஆம்பல் எண்ணிக்கையைத் தெரிந்துகொள்ள உதவுகின்றது. இவற்றைக் கொண்டு உறழ்ந்து பார்த்தால் 576 ஊழி கொண்டது ஓர் ஆம்பல் என்று ஆகும்.

இக் கணக்கெல்லாம் எவ்வளவில் நடைமுறையில் இருந்தன என்று சொல்ல இயலாது. கோடிக்குமேல் கணக்கிட இப்படியெல்லாம் குறியீடுகள் காண முனைந்த முன்னைச் சான்றோரது நோக்கம் போற்றற்குரியது. நாம் போற்றி வளர்க்காமல் விடுத்தோம்.

பேருள்ளம் கொண்ட பெரும்புலவர் பெருமகனார் கபிலர் 576 ஊழிக்கு மேலும் பல அடுக்கிய காலம் வாழ்க என்று வாழ்த்திய பாடல் பகுதி,

*"அடைஅடுப்பு அறியா அருவி ஆம்பல்*
*ஆயிரம் வெள்ள ஊழி*
*வாழி ஆத! வாழிய பலவே!"*[2] எனக் காட்டுகின்றது. முடிவான பேரெண்ணிக்கையாகிய 'வெள்ளம் அளவு வாழ்க', என்று மேலெல்லை காட்டினார் எனலாம்.

இந்த எண்ணிக்கைக் குறியீட்டால் 'ஆம்பல்' முதலிய மலர்கள் ஊழியையும் உள்ளடக்கிய பூக்கள் ஆகின்றன. ஆம்பலுடன், நெய்தல், குவளை, தாமரை ஆகிய மலர்கள் இடம் பெற்றுள்ளன. இவை யாவும் நீர்ப் பூக்கள். ஏன் இவை எண்ணிக்கைக் குறியீடாகக் கொள்ளப்பட்டன?

நீர்ப் பூக்கள் தனிப் பூ வகை. எண்ணுவதற்கு வாய்ப்பானவை. இவற்றுள் தாமரை ஒரு தனிப் பிறவி. அதனை விடுத்துப் பார்த்தால் மற்றவை அனைத்தும் ஒரு குடும்பம். இக் குடும்பம் அனைத்து நிலத்திலும் பூப்பவை.

---

1 *பிங். நி:* 1647, 1648, 1653—1659.
2 *பதிற் :* 68 : 79—21.

*"தண்என மலர்ந்த நளிர்மலைச் சிலம்பில்*
*கண் என மலர்ந்த மாயிதழ்க் குவளை"*[1]

*"தீநீர்ப் பெருங்குண்டு சுனைப் பூத்த குவளை"*[2] -என்பவற்றால் குறிஞ்சி நிலத்தில் பூப்பதையும்,

*"திறள்வேல் நுதியில் பூத்த கேணி"*[3] -என்பதால் முல்லை நிலத்துக் கேணியிற் பூப்பதையும்.

*"குளாம்பல்"*[4]
*"குவளை குளத்துள"*[5]
*"ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்து"*[6] -என்பவற்றால் மருத நிலத்தில் மலர்வதையும்,

*"கழியே சிறுகுரல் நெய்தலொடு காவி கூம்ப"*[7] என்பதால் கழியையுடைய நெய்தல் நிலத்தில் மலர்வதையும்,

*"தாழிக் குவளையொடு தண்செங்கழுநீர்"*[8] —என்பதால் எங்கும் தொட்டிகளில் மலர்வதையும் அறியலாம்.

இவ்வாறு, அனைத்து நில மக்களுக்கும் அறிமுகமான பூவாகையாலும் பொது எண்ணிக்கைக் குறியீடாகக் கொள்ளப் பட்டது எனலாம்.

ஆனால், ஆம்பல் இனத்தைச் சேர்ந்த குவளையும் தொல் காப்பியத்தில் எண் குறியீடாகக் கூறப்படினும் இலக்கிய ஆட்சி களில் தனித்தனியாக எடுத்துக் கூறி எண்ணாக அமைக்கப் படவில்லை. ஆம்பல் ஒன்றே எண் குறியீடாகத் தனியே காட்டப்பட்டுள்ளது.

## அருவியில் பூவா?...

தனியே காட்டப்பட்டது மட்டும் அன்று, அருமையான சொற்றொடராகக் காட்டப்பட்டுள்ளது. அஃதும் கபிலரது

1 அகம் : 228 : 3, 4
2 புறம் : 116 : 1, 2
3 சிறுபாண் : 172.
4 நன் : 256 மயிலைநாதர் உரை.
5 யாப் கா : 4 மேற்கோள்
6 நற் : 200 : 6
7 அகம் : 350 : 1.
8 சிலம்பு : 4 : 64.

பாட்டில் அமைந்துள்ளது. கபிலரது பாட்டு என்றால் எளிதில் விடுக்கக் கூடியதன்று. இலக்கண நூல்கள், சான்றாகக் "*கபிலரது பாட்டு*"[1] என்று குறித்துக் காட்டும். அத்துணையளவு கபிலரது சொற்களுக்குச் சிறப்பு உண்டு. அவர் புதுமையான ஒரு சொற்றொடரை அமைத்து ஆம்பலைக் குறித்துள்ளார். முன்னே கண்ட பாட்டை நினைவுகூர்ந்தால்,

"*அடைஅடுப்பு அறியா அருவி ஆம்பல்*"

—எனும் அடியில்

'அருவி ஆம்ப' லைக் காணலாம். பாட்டில்தான் அருவி ஆம்பலைக் காண முடியும். அருவியில் காண முடியுமா என்ன? பொத்தென்று குதிக்கும் அருவியில் ஆம்பல் எவ்வாறு முளைக்கும்? ஆம்பல் குடும்பத்தைச் சேர்ந்த குவளை, சுனையில் முளைப்பது போன்று வளமான சேறு இருந்தால் ஆம்பலும் முளைக்கலாம் கேணியிலும் பொய்கையிலும் ஆம்பற் பூவைக் காணலாம். பின் எவ்வாறு "அருவி ஆம்பல்" என்று அமைத்தார்? இத்தொடர் கபிலரால் உருவாக்கப்பட்ட சொற்றொடர். எண்ணிக்கைக் குறியீடாக மட்டும் அன்றி,

"*அருவி ஆம்பல் மலைந்த சென்னியர்*"[2]

—என அவரே

இதற்கு முந்தியபாடலிலும் பாடியுள்ளார். இத்தொடரின் அருமைப் பாங்கறிந்த அரிசில்கிழார் என்னும் புலவர் தாமும் கையாண்டு

"*அறாஅ யாணர் அகன்கண் செறுவின் (வயலின்)*
*அருவி ஆம்டல் நெய்தலோடு அரிந்து*"[3] —என்று தாம் பாடத் தொடங்கும்போதே அமைத்துப் பாடியுள்ளார். இப்பாடலால் அரிசில்கிழார் ஆம்பலை அருவியில் முளைத்ததாக அன்று செறுவில்—வயலில் முளைத்ததாகவும் குறித்தார். தொடர்ந்து, அகநானூற்றில் மருதம்பாடிய இளங்கடுங்கோ என்பார் இத்தொடரை,

"*அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி*"[4] —என்று அமைத்தார்.

கபிலரது இந்த அருமையான தொடரமைப்பில் மனம் பதித்த பிற்காலத்தோர் கபிலரது அப்பாடலுக்குத் தலைப்பாக

---

1 தொல் : சொல் : 14 : இளம்பூரணர் சான்று.
2 பதிற் : 62 : 17.
3 பதிற் : 71: 2,
4 அகம் : 96 : 5.

'அருவி ஆம்பல்' என்பதையே கொடுத்தனர். கபிலர், கருத்தில் லாமலா இத்தொடரை அமைத்தார்? ஆழ்ந்த கருத்தைப் பொதித்தே அமைத்தார். அக்கருத்து 'ஆம்பல்' என்னும் சொல்வரலாற்றின் அடிந்தளம் காட்டுவது. அச்சொல்வரலாற்றின் வாயிலாக ஆம்பல்தான் அதன் குடும்பத்தின் தலைமைப்பேற்றைக் கொண்டதையும் அறிலாம்.

தொல்காப்பியர் குறித்த 'பல்' என்னும் இறுதி என்பது 'ஆம்பல்' என்னும் சொல்லைக் குறிக்கும். இதன் முதல்நிலை 'ஆம்' என்பது. அதற்கு நீர் என்று பொருள். அஃதும் ஆற்று நீரையோ கடல் நீரையோ குறிக்காது. மழை நீருக்கு 'அம்' என்பது மூலச்சொல். 'ஆம்' என்பது மலையில் தோன்றும் நீரைக் குறிக்க வழங்கிய மிகப் பழஞ்சொல். மலை நீரிலும் மலை முகட்டில் ஊறிக் கசிந்து வரும் நீரைக்குறிக்கும். இதனை விளக்குவது போன்று பெரும்புலவர் நக்கீரர்,

'யானையின் கன்னத்தில் வியர்வை போன்று ஒரு வகைத் தேன் போன்ற நீர் கசியும் இதற்கு மதநீர் அல்லது கடாம் என்று பெயர். இது கசிந்து ஊர்ந்து வருவது போன்று மலை முகட்டில் ஊர்ந்து கசியும் 'ஆம்' – நீர்' என்பதை,

*"கடாஅ யானைக் கடவுள் மருங்கு உறழ (போல)*
*ஆம் ஊர்பு இழிதரு காமர் சென்னி (முகடு)"*[1] என்றார்.

இச் சின்னீர் கூடி அருவியாக இழியும் நீரையும் 'ஆம்' என்னும் சொல்லால் குறித்தனர்.

"வரை ஆம் இழிய" (ஐங் : 223)
"ஆம் இழி சிலம்பின்" (குறு : 308)
"ஆம் இழி அணி மலை" (கலித் 48 : 1)
"வேய் பயில் இறும்பின் (சிறுமலையில்)
ஆம் அறல் பருகும்" (நற் 213 : )
"அறுநீர்ப் பைஞ்சுனை ஆம் அறப்
புலர்தலின்" (அகம் : 1 : 12)
"ஆம் அறப் புலர்ந்த கல்நெறி" (அகம் : 75, 8 ; 9)

---

1 அகம் : 205 ; 17, 18.

மேலே காணப்பட்ட இலக்கிய அடிகள் யாவும் மலைத் தொடர்பிலேயே 'ஆம்' என்னும் சொல்லை 'நீர்' என்னும் பொருளில் வழங்கியுள்ளன.

காலப்போக்கில் மருத நிலத்து நீருக்கும் இச்சொல் வழங்கப் பட்டதைப் புறநானூறு,

"*ஆம் இருந்த அடை (மருதநிலத்து ஊர்ப்பெயர்) நல்கி*"[1]
—எனக் கூறியது.

இவ்வாறு 'ஆம்' என்னும் நீரில் முதன் முதலில் பூத்துப் பல்கிப் பெருகியதால் ஆம்பல் பெயர் அமைந்தது. எனவே, நீர்ப் பூக்களில் 'ஆம்பல்' முதலாக, அதன் குடும்பம் கிளைத்துத் தழைத்தது.

நீர் என்னும் பொருள் தொடர்பிலேயே நீர் இறைக்கும் மிடா 'ஆம்பி' எனப்பட்டது. மழை பெய்ந்ததும் நீர்ப்பிடிப்பில் முளைக்கும் காளான் 'ஆம்பி' எனப்பட்டது. நீர்க்குளிர்ச்சி போன்று குளுமையைப் பொழியும் முழுமதி,

"*ஆம் நாள் நிறைமதி*"[2] —எனப்பட்டது.

ஆம் என்னும் சொல் 'அம்' என்னும் சொல்லின் வளர்ச்சி. 'அம்' 'அல்' என்னும் வேர்ச்சொல்லில் முளைத்தது. தமிழில் அ, இ, உ என்னும் சுட்டெழுத்து ஒலிகளே தமிழ்ச்சொற்களின் தோற்றத்திற்கு வேர்கள் என்பது மொழி நூற்கொள்கை. எனவே, 'அல்' என்னும் மூல ஆணிவேரில் முளைத்துத் தோன்றிய மூன்றாவது மொழிநிலையைக்கொண்டது 'ஆம்' என்னும் சொல். இது மூலப்பொருள்களில் இன்றியமையாத ஒன்றாகிய நீருக்கு அமைந்தது மிகப் பொருத்தமே.

இங்கே கண்டுள்ள 'அல்' என்னும் வேர்ச்சொல் பல முளை களை விடும். அவற்றில் ஒன்று 'அர்' என்றாகி 'அரு' என உருப் பெறும். இதற்கும் நீர்ப்பொருள் உண்டு. 'அரு' என்னும் நீர் வீழ்வதே 'அரு + வீழ் = அருவீழ்–அருவீ–அருவி' என்றாயிற்று.

இவ்வாறு அருவி என்னும் சொல், தொடர்பு அறாது விழும் நீரைக் குறித்து. நீர்க்குறைவு அற்ற நீர் நிலைகளில் தோன்றும்

1 புறம் : 862 : 18. 2 பரி : 11 : 81.

ஆம்பலுக்கு அடைமொழியாகி "அருவி ஆம்பல்" எனப்பட்டது கபிலரால்.

இத்தொடர் ஆம்பல் நீரில் தோன்றிய இவ்வகைப் பூக்களுக்குக் குடும்பம் வகுத்தத் தகுதியைத் தருகின்றது.

## குடும்பத்தில் குழப்பம்

ஆம்பல் குடும்பத்தில் உறுப்பினர் பலரா; சிலரா? இதற்குரிய விடையைக் காண இலக்கியங்களிலும் நிகண்டுகளிலும் புகுந்தால் தலைசுற்றும் அளவு குழப்பமே கிடைக்கின்றது. அவற்றிலும் பிற்கால நூல்களே இக்குழப்பத்தை வழங்குகின்றன. நிகண்டுகள் காட்டும் சொற்களும் அமைப்புகளும் பெருங் குழப்பமே.

ஆம்பல், குவளை, நெய்தல், காவி, நீலம், கழுநீர், அல்லி, குமுதம், கல்லாரம், பானல், இந்தீவரம், கைரவம், எருமணம், உற்பலம் என்று சொற்பட்டியலைத் தொகுக்கலாம். ஆனால், ஒவ்வொன்றாக அடையாளங் காணப் புகுந்தால் ஒரு நூல் கூறு வதை மறு நூல் மாற்றுகின்றது. பிங்கல நிகண்டோ எல்லா வற்றையும் எல்லாமாகக் கலக்கின்றது.

பிற்கால இலக்கியங்கள் வடமொழி, தென்றமிழ் வேறுபாட்டில் மனம்பற்றாதவை. நிகண்டுகளும் அவ்வாறே. இந்நூல்கள் மொழியியல் அடிப்படையில் வேர்ச்சொல்லின் வளர்ச்சிக்கேற்ற பொருளில் சொற்களைக் கையாண்டுள்ளன என்று நிறைவாகச் சொல்ல இடம் வைக்கவில்லை. எனவே, பழங்காலச் சங்க நூல் கள் ஆங்காங்கு வைத்துள்ள கருத்துகளைக் கொண்டு ஆம்பற் குடும்பத்தினை வரையறைப்படுத்த முடிகின்றது.

ஆம்பல் குடும்பம் நீர்வளம் நிறைந்த வயலும், வயல் சார்ந்த இடமும் கொண்டது. ஆனால், அந்நிலம் ஆம்பலால் பெயர் பெறவில்லை. மருத மரப் பூவின் பெயர் பெற்றது. தொல்காப்பிய உரையாசிரியர்கள் மருத நிலத்துக்குரிய மலர் களாகத் தாமரையையும் ஆம்பலுக்குரிய சொல்லாகக் கழுநீரையும் குறித்தனர். பின்னர் எழுந்த நம்பியகப்பொருள்,

"... ... ... ... ... ... ... ... ... ...தாமரை

நாறிதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை"[1] எனக் கழு

நீருடன் குவளையை இணைத்துக் கொண்டது. முன்னர் தொல்காப்பியத்தில் கண்ட எண்ணிக்கைக் குறியீட்டுப் பெயர்களில் ஆம்பல் ஒன்றே நேரடியாக அமையும். ஐ இறுதி என்ற வகையில் தாமரையுடன் சேர்த்துக் குவளையையும் கொள்ளலாம்.

இக் குறியீட்டுப் பெயர்களைக்கூறும் பரிபாடலிற் கண்ட "நெய்தலும் குவளையும் ஆம்பலும்" என்னும் அடியில் நெய்தல் உள்ளது. இவை மூன்றும் பிரித்துப் பிரித்துச் சுட்டப்பட்டுள்ள மையால் ஒன்றிற்கொன்று வேறுபாடுடையவை எனக்கொள்ளலாம். இவ் வேறுபாட்டைப் பிற இலக்கியங்களாலும் உறுதி செய்யலாம்.

"ஆம்பலும் குவளையும் தாம்புணர்ந்து மயங்கி"[2] –என்பது

ஆம்பல் வேறு குவளை வேறு என்று காட்டுகின்றது.

"மாயிதழ்க் குவளையும் நெய்தலும் மயங்கி"[3]

–என்பதிலிருந்தும்

"மணிநிற நெய்தல் ஆம்பலோடு கலிக்கும்"[4]

–என்பதிலிருந்தும்

நெய்தல் முன்னிரண்டிலிருந்தும் வேறானது என்பதை அறியலாம்

இந்நெய்தல் கடல், கடல் சார்ந்த நிலத்திற்குப் பெயராக அமைந்த நெய்தல்நில மலரென்றாலும் மருத நிலத்திலும் பூப்பது இஃதும் ஆம்பல் குடும்பத்தைச் சேர்ந்தது.

இவை மூன்றுக்கும் மேல், ஆம்பல் குடும்பத்தைச் சேர்ந்தனவும் உள்ளன.

குறிஞ்சிப் பாட்டில் கபிலர் பல நிலப் பூக்களையும் தொகுத்துள்ளார். அவற்றுள் ஆம்பல் குடும்பம் உள்ளது. ஆங்காங்கு தனித்தனியே அப்பூக்கள் குறிக்கப்பட்டுள்ளன.

---

1 தம். அ. வி. : நூற்பா 23 : 8, 9.
2 மணி : 8 : 7.
3 பட். பா: 241
4 ஐங் :96

*"ஒண்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்"* (குறி. பா ; 62)

*"தண்கயக் குவளை, குறிஞ்சி வெட்சி"* (குறி. பா : 63)

*"வாழை, வள்ளி, நீள்நறு நெய்தல்"* (குறி. பா; 79)

இவ்வாறு ஆம்பல், குவளை நெய்தல் என மூன்றைக் குறித்தவர் மேலும், *"காஞ்சி, மணிக்குலை கட்கமழ் நெய்தல்"*[1] என நீண்ட அடைமொழியுடன் மீண்டும் நெய்தலைக் குறித்துள்ளார். இது சொன்னதையே சொன்னதாகாது.

குறிஞ்சிப்பாட்டு, பிரகத்தன் என்னும் ஆரிய அரசனுக்குத் தமிழின் பாங்கை அறிவிப்பதற்காகக் கபிலரால் எழுதப்பட்டது என்பது வழக்கு. அவ்வாறு பிறமொழி அரசனுக்கு அறிவிப்பவர் வீணுக்கு ஒன்றை அடுக்கிச் சொல்லிடமாட்டார். அவ்வாறானால் இரண்டு நெய்தல்களின் விவரம் யாது?

நெய்தல் நிலமான கடற்கரைக் கழியில் நெய்தலுடன் அதன் இனத்தைச் சேர்ந்த மற்றொரு பூ உண்டு.

*" ... ... ... ... ... ... ...கழியே,*
*சிறுகுரல் நெய்தலொடு காவி கூம்ப*
*எறிதிரை ஓதம் தரல் ஆனாதே"*[2] -என்னும்

அகநானூற்றுப்பாடல் அதனைக் 'காவி' என்று காட்டுகின்றது பிற இலக்கியங்களிலும் இக்கருத்து உண்டு. இக் காவியையே 'கருங்குவளை' என்று பிற்காலத்தோர் எழுதினர். ஆனால்,

காவி என்பது இதுவரை காணப்பட்ட, ஆம்பல் குலத்தில் மூன்று வகைப் பூக்களிலும் வேறுபட்ட பூ. ஆனால், ஆம்பல் குடும்பத்தைச் சேர்ந்ததே. இலக்கியங்கள் இதற்குக் கொடுக்கும் அடைமொழி 'கழி' என்பது. அஃதாவது காவி கடற்கரைப் பகுதியாகிய கழியில் மட்டுமே பூக்கின்ற நெய்தல் நிலப் பூ மற்றொரு நெய்தல் நிலப் பூவாகிய நெய்தல் மருத நிலத்துக் குளத்திலும் பூக்கும்; கழியிலும் பூக்கும். இவ்வகையில் அறிமுகம் பெறும் காவியும் சேர,

---

1 குறி : பா : 84
2 அக ; 350 : 1-3

ஆம்பல் குடும்பம்

ஆம்பல்,

குவளை,

நெய்தல்,

காவி —என நான்கு வகை கொண்டதாகும் பிற சொற்கள் யாவும் இவை நான்கிற்கும் அமைந்த மாற்றுப் பெயர்களாகும். அவற்றுள் அல்லி ஓர் ஐயத்தை எழுப்பும் அளவில் பரிபாடலில் ஓர் அடி உள்ளது.

*"அல்லி, கழுநீர், அரவிந்தம், ஆம்பல்"*[1] —என்றுள்ளமை அல்லி செங்கழுநீராம் குவளையிலும், ஆம்பலிலும் வேறு பட்டதாகத் தனி ஒரு வகை போல உள்ளது. இது தனிவகை அன்று என்பதனை அறிய அல்லி பற்றி அறிதல் வேண்டும்.

உலகத்தில் வழங்கும் —'இலில்லி' '*Lilly*'— என்பதன் முன்னுருவம் அல்லி. இன்றும் தமிழகத்தில் அல்லியே பொது மக்களால் ஆம்பல் முதலிய எல்லா வகைக்கும் வழங்கப்படும் சொல்லாகும். உலக அளவில் அல்லியின் நிறம் பெரும்பான்மை வெண்மையாகவே கூறப்படும். அகர முதலிகளும் வெண்மை யையே அதற்கு முதன்மை நிறமாகக் குறிக்கின்றன. எனவே, 'அல்லி' என்பது வெண்மை நிற ஆம்பல் எனலாம். இதனைப் பிங்கல நிகண்டு,

*"அல்லி வெள்ளாம்பல் கைரவம் ஆகும்"*[2] என்று காட்டு கின்றது. மேலும்,

*"சிறுவெள்ளாம்பல் அல்லி உண்ணும்"*[3] என்னும் புற நானூற்றுக் கருத்து அல்லி என்பது வெள்ளாம்பலின் மாற்றுப் பெயர் என்பதற்குத் துணை நிற்கின்றது. எனவே, அல்லி ஒரு தனிவகை அன்று.

குமுதம் என்பதும் பெருவழக்காக உள்ளது. ஆனால், இச் சொல் சங்க இலக்கியங்களில் இல்லை. பிற்கால இலக்கியங்கள் மிகுதியாகப் பேசுகின்றன. எனவே, தொல்காப்பியத்தில் 'அம்'

---

1 பரி : 12 : 78
2 பிங். நி : 3021
3 புறம் : 280 : 18

இறுதியுடையதாகக் குறிக்கப்பட்டதில் அடங்காததாகும். பிற்காலத்தார் பொதுவாக இரவில் அலரும் ஆம்பல் இனத்திற்கு இச்சொல்லைக் கையாண்டுள்ளனர்.

*"இந்தப் புவியில் இரவலர் (இரவு அலர்) உண்டென்பதெலாம்*
*அந்தக் குமுதமே அல்லவோ?"*[1] —என்றும்
*"... ... ...குமுதமொடு சதவிதழ்ப் போதுமே (தாமரை)*
*இரு போதையும் தெரிக்கும்"*[2] என்றும், பொதுவில் இரவில் மலர்வதற்குப் பொதுப்பெயராகக் காட்டப்பட்டது. ஆயினும் பிங்கல நிகண்டு,

*"வெள்ளாம்பல் சேதாம்பல் என்றிரு விகற்பம்*
*கொள்ப மன்னோ குமுதப் பெயரே"* —என்றும்,
*"ஆம்பலும் நெய்தலும் அல்லியும் குமுதம்"*[3] —என்றும்

ஆம்பல் குடும்பத்தின் யாவற்றிற்கும் பொதுப்பெயராகக் காட்டியுள்ளது. அதனால், கணக்குக் குறியீடுகளில் பிற்காலத்தவரால் 'குமுதம்' சொல் கொள்ளப்பட்டது. எனவே, 'குமுதம்' என்பது பிற்காலத்தில் நேர்ந்த ஒரு பொதுப்பெயர். ஆம்பலின் தனி வகை அன்று.

அடுத்து, 'கழுநீர்' என்னும் சொல் பரவலாகவும் சிறப்பாகவும் குறிக்கப்படுவது. சுருக்கமாகக் குறித்தால் கழுநீர் என்னும் அடைமொழியற்ற சொல் ஆம்பலைக் குறிக்கும். செங்கழுநீர் என்பது செங்குவளையைக் குறிக்கும். எனவே, இஃதும் தனி வகை அன்று. முடிவாக, நான்கு வகையாக அமையும் ஆம்பல் குடும்பத்தையும் அதன் மாற்றும் பெயர்களையும் பின்வருமாறு பட்டியல் இடலாம்:

| குடும்ப வகை | மலர் அடையாளம் | மாற்றுப் பெயர் |
|---|---|---|
| 1. ஆம்பல் | — செவ்வாம்பல் | கழுநீர், அரக்காம்பல், சேதாம்பல் செங்குமுதம், செவ்வல்லி. |
| | — வெள்ளாம்பல் | அல்லி, கைரவம். |
| 2. குவளை | — செங்குவளை | செங்கழுநீர், கல்லாரம், எருமணம். |
| | கருங்குவளை | நீலம், பானல், நீலோற்பலம். |

1 நந்தி. க : தனிப்பாடல்
2 முத். கு. பி. த : 85
3 பிங் நி : 3021, 3024

| | | |
|---|---|---|
| 3. நெய்தல் — | வெளிர் நீலம் | இந்தீவரம் |
| 4. காவி — | அரு நீலம் | கழிப் பூ |

## ஒற்றுமையில் வேற்றுமை

நான்கு வகைகளாக உள்ள இக்குடும்பத்தின் தலைமை மலர் ஆம்பல், நீரில்பூப்பவை என்னும் சொல்வரலாற்றிலும் மூலமாக ஆம்பல் அமைந்ததைக் கண்டோம். பூக்களின் மூலத்தைக்காண அவற்றின் நிறமே சான்றாகும். சிவப்பும் வெளுப்புமே பூக்களின் முதன்மை நிறங்கள் என்பதைச் செடியியல் நூலார் நிறுவி யுள்ளனர். அடுத்த நிறம் பொன்மையாம் மஞ்சள். அடுத்தது நீலம். பிறயாவும் இனக்கலப்பால் தோன்றியவை.

இங்கே காணப்பட்ட நான்கில் ஆம்பல் ஒன்றே செம்மையும் வெண்மையும் கொண்டது. குவளை செம்மையும் நீலமும் கொண்டது. நெய்தலும் காவியும் நீலநிறம் ஒன்றே கொண்டவை. சிவப்பிலும் ஆம்பல் கருஞ்சிவப்பு நிறங்கொண்டது. இதனால் 'அரக்கு ஆம்பல்' என்ற பெயரையும் கொண்டது. இவ் அரக்காம்பல், வெள்ளாம்பல் இவற்றின் கலப்பினத்தோற்றமே இளஞ்சிவப்பு நிறங்கொண்ட சேதாம்பல். குவளையில் அரக்கு நிறம் இல்லை; இளஞ்சிவப்பே உண்டு 'அரக்குக் குவளை'— என்று ஓரிடத்தில் வந்துள்ளது. ஆனால், கருஞ்சிவப்பில் குவளை இல்லை. எனவே இந்நிற அமைப்பால் ஆம்பல் முதலில் தோன்றியதாகும்.

மற்ற மூன்றிலும் வெண்மை நிறம் இல்லை. ஆனால் மூன்றிலும் நீலம் உண்டு. ஆம்பலில் நீலம் இல்லை. எனவே ஆம்பல் ஒரு தனி வகைஆகும். மற்ற மூன்றும் ஒரு வகையாகும் நான்கு வகைகொண்ட இக்குடும்பத்தை நிற வேறுபாட்டைக் கொண்டு இரண்டாகத் தொகுத்துச் சொல்லலாம். இவ்விரண்டு வகையாகக் கொள்ள மற்ற அமைப்புகளும் இடம் தருகின்றன.

ஆம்பல் அளவால் பெரியது. இதன் இதழ்கள் 3½ அங்குலம் முதல் 6 அங்குலம் வரை நீளமாக வளரும். இதழ்களும் அதிகம் கொண்டது. 16 முதல் 24 வரை இதழ்கள் அமையும்.

ஏனைய மூன்றும் அளவில் ஆம்பலைவிடச் சிறியவை. 2 அங்குலம் முதல் 4 அங்குலம் நீளமே கொண்டவை. இதழ்களும் எண்ணிக்கையில் குறைவானவை.

இவற்றின் மலர்ச்சியிலும் இவ்வேறுபாடு உண்டு. ஆம்பல் இதழ்கள் சுற்று வட்டமாக அகல விரிந்து மலரும். இதன் அரும்பு கொக்கினுடைய அலகு போன்றது. இந்த முகை மலர்வதையும் வைத்து நற்றிணை, இதன் முகை கொக்கின் அலகுபோன்று கூம்பியது என்னும், இதன் மலர்ச்சி விடிவெள்ளிபோன்று ஒளி தருவது என்றும் உவமை கூறி விளக்குகின்றது:

*"கொக்கின் கூம்பு முகை அன்ன கணைக்கால் ஆம்பல்*
*அமிழ்து நாறு தண்போது*
*குணக்குத் தோன்று வெள்ளியின் இருள் கெட விரியும்"*[1]

— *என்பது அது.* இவ்வுவமையாலும் இன்றும் நாம் காணும் காட்சியாலும் ஆம்பல் அலர்ப் பருவம் கொள்ளும்.

ஏனைய மூன்றும் அகல விரிவன அல்ல. முனைக் கட்டு அவிழ்ந்து, வாய் நெகிழ்ந்து, இதழ்கள் சற்று இடைவெளியிட்டு நிற்கும் அளவே மலரும். இவ்வளவில் மலர்ப்பருவமே கொள்ளும்; அலர்ப்பருவம் ஏற்கா. இவ்வாறு மலரும் அளவாலும் இரண்டு வகையாகும்.

மலரும் பொழுதாலும் ஆம்பலும் மற்றவையும் வேறுபாடு உடையவை. ஆம்பல் (குமுதப் பெயரில்) திங்களின் ஒளிக்கு மலரும் என்பர்.

*"மதிநோக்கி அலர்வித்த ஆம்பல் வான்மலர்"*[2] – என வெள்ளாம்பல் திங்களின் தோற்றத்தால் மலர்வது பாடப்பட்டது. இதனால் திங்களை 'ஆம்பல் காதலன்' என்பர். கதிரவன் தோற்றத்தால் குவியும். இதனால் கதிரவன் 'ஆம்பல் பகைஞன்' எனக் கம்பரால் பாடப்பட்டான். எனவே ஆம்பல் இரவு மலர் ஆகின்றது. திங்களை நோக்கி விரியும் என்பதால் திங்களின் தோற்றத்திற்கு ஏற்ப நேரம் மாறி மாறி மலரும். இரவு ஏழு மணி முதல் விரிந்து மறுநாள் பகல் 11 மணி வரையும் குவியாதிருக்கும் என இக்கால ஆய்வியலார் கூறுகின்றனர். இலக்கியங்கள் இரவு மலராகவே ஆம்பலைக் குறிக்கின்றன. ஆனால், குறுந்தொகைப் பாடல் 122 ஒன்று,

*"குண்டுநீர் ஆம்பலும்கூம்பின, இனியே*
*வந்தன்று வாழியோ மாலை"* –எனமாலையில் குவிந்ததாகக் குறிக்கின்றது. ஆனால், 'குண்டுநீர்' என்னும் அடைமொழி

---

1 நற் : 280 : 2, 4. 2 கலி : 72 : 6.

பெரும்பகுதி கழி நிலத்து ஆழமான நீரைக் குறிப்பதாலும் நெய்தலுக்கு இடமாகச் குறிக்கப்படுவதாலும், இங்கு குறிக்கப்பட்ட ஆம்பல் என்னும் சொல் இக்குடும்பத்தின் பொதுச்சொல்லாகப் பயன்படுத்தப்பட்டுக் காவியையோ நெய்தலையோ குறித்தது ஆகலாம். இது நெய்தல் திணைக்குரிய இரங்கள் உரிப்பொருள் கொண்ட பாடலாகையாலும் ஓரளவில் நெய்தலைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால், இன்றையக்காட்சியில் இரவில் மலர்வதாகக் காண முடியவில்லை. யாவும் பகலிலேயே மலர்ந்து தோன்று கின்றன. இதனைக் காலத்தின் கோலம் என்றோ, காலத்தின் கல வரம் என்றோ கொள்ளவேண்டும் போலும்.

ஆனால்,

*"விரிகதிர் வெண்மதியும் மீன்கணமும் ஆமென்றே*
*விளங்கும் வெள்ளைப்*
*புரிவளையும் முத்துங் கண்டு ஆம்பற் பொதியவிழ்க்கும்*
*புகாரே எம்மூர்"* 1

எனச் சங்கையும் முத்தையும் முழுத் திங்களாகவும், விண்மீன்களா கவும் கருதி ஆம்பல் மலர்ந்ததாக இளங்கோவடிகள் பாடினார். பிற இலக்கியங்களும் ஆம்பல் மலரை இரவில் மலரும் மலராகவே பேசுகின்றன. மலர்களின் தொகை மேடையாகத் திகழும் குறிஞ்சிப் பாட்டும்,

*"ஆம்பல் ஆயிதழ்க் கூம்புவிட ... .... .... ... ... ....*
*...... ... ... ... ... ... .... ... ... ... ... ... ...*
*அந்தி அந்தணர் அயர"* 2 — என மாலையில் மலரும் மலராக உறுதி செய்கின்றது.

பிற மூன்று மலர்களும் ஒரே பொழுதில் மலர்பவை.

*"நெய்தலொடு காவி கூம்ப"* 3 என்பதாலும்,

*"குவளையொடு நீலம்நீடி*
*முரட்பூ மலிந்த முதுநீர்ப் பொய்கை"* 4

— என்பதாலும் குவளையும் நெய்தலும் காவியும் ஒரே நேரத்தில் மலர்பவை என அறியலாம்.

---

1 சிலம்பு : 7 : 5 ; 3, 4. 2 குறி. பா : 222 , 224.
3 அகம் : 350 : 1 . 4 பெரும்பாண் : 293, 294

எந்த நேரத்தில் மலர்பவை?

*"வைகறை மலரும் நெய்தல் போல"* (ஐங் : 188) என நெய்தல் காலையில் மலர்வதைக் குறிக்கின்றது. எனவே, இவை மூன்றும் காலையில் மலர்ந்து மாலையில் குவிபவை.

.... .... ... ... .... *"வாவியுள்*
*செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து*
*ஆம்பல்வாய் கூம்பினகாண்"* [1] –என ஆண்டாள் விடியலில் பாடியதால் ஆம்பலும், பிறவும் மலரும் பொழுதில் வேறுபாடுடையவை என அறியலாம்.

இவ்வேறுபாடு, இம்மலர்கள் உவமையாகக் கூறப்படுவதிலும் வெளியாகின்றது. இவ்வுவமை வகை வேறுபாட்டைத் தொகுத்துச் சுருக்கிக் காட்டுவது போன்று,

*"முகம் தாமரை*
*முறுவல் (வாய்) ஆம்பல்*
*கண் நீலம்"* [2] எனத் திணைமாலை நூற்றைம்பதில் உருவகச் சொற்றொடர்கள் அமைந்துள்ளன. இதுபோன்றே

*"வாவிதொறும் வண்கமலம் முகம்காட்டச்*
*செங்குமுதம் வாய்கள் காட்டக்*
*காவியிருங் கருங்குவளை கருநெய்தல்*
*கண் காட்டும்"* [3] –எனத் தேவாரமும் அமைந்துள்ளது.

மற்றைய இலக்கியங்களும் ஆம்பலை வாய்க்கும், பிறவற்றைக் கண்ணுக்கும் உவமைகளாகப் பல்விடங்களில் காட்டுகின்றன. ஒவ்வொன்றிற்கும் ஒன்றிரண்டு காணலாம்:

ஆம்பல் வாய்:

*"அரக்காம்பல் நாறும் வாய்"* (நாலடி : 396)
*"செவ்வாய் ஆம்பல்"* (பரி : 8 : 116)

---

1 *திருப்பா* : 14
2 *திணை. நூ*: 72.
3 ஞான. தே : கழுமலப் பதிகம் ; 3, 4.

*"ஆம்பல் மலர் போல*
*அடிக்கடிநீ வாய்திறந்து*
*தேம்பி அழாதேநீ*
*தினகரனே கண்வளராய்"* —இது ஒரு நாட்டுத் தாலாட்டு. இவை எல்லாம் மகளிர் வாய்க்கும், மழலையர் வாய்க்கும் ஆம்பல் உவமை. மக்களினத்திற்கு உவமையானால் மற்றைய இனத்திற்கு உவமை ஆகக் கூடாதா என்ன? ஆகலாம். ஓர் ஆம்பல் வாய் திறந்து மலர்ந்தது. இதற்கொரு உவமை பிறந்தது. மற்றொரு வாயே உவமையாயிற்று. மூடிய வாய் அன்று; திறந்த வாய். திறந்த வாயும் அன்று; பிளந்த வாய். பிளந்த வாயிலும் கொட்டாவி விட்டுப் பிளந்த வாய். மாந்தர் கொட்டாவி அன்று; பறவைக் கொட்டாவி. பறவையிலும் அரிதில் தென்படும் பறவை. வெள்ளைக் காக்கை கொட்டாவி விட்டது. எவ்வாறு?

*'... ... ... — ... ... .... ... ஆம்பல்*

*சிறுவெண் காக்கை ஆவித்து (கொட்டாவிவிட்டது) அன்ன*
*வெளிய விரியும்"*[1]

முன்னே கண்டவை செவ்வாம்பல் உவமை. இது வெள்ளாம்பல் உவமை. ஆம்பல் வாய்க்கு உவமையாக இதற்கு வேறுபடும் மூன்றும் கண்ணிற்கு உவமையாகின்றன:

குவளைக் கண் :

*"குவளை அம் கண்"* (குறு : 13)
*"அம்செங் கழுநீர் அரும்பவிழ்ந் தன்ன*
*செங்கயல் நெடுங்கண்"* (சிலம்பு. : 11 : 138)
*"மையவாம் குவளை யெல்லாம் மாதர்கண் மலர்கள் பூத்த;*
*கையவாம் உருவத் தார்தம் கண்மலர் குவளை பூத்த"*
(கம்ப : நீர்விளையாட்டு:3)

நெய்தல் கண்:

*"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்*
*.................................................*
*கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்"* (குறு : 9)

1 நற் : 345 : 3-5.

*"கண்போல் பூத்தமை கண்டு, நுண்பல்*
*சிறுபா சடைய நெய்தல்"* (நற் : 27 : 9, 10)

காவிக் கண்:

*காவியங் கண்ணார் கட்டுரை"*( சிலம்பு: 14 : 138)
*"காவியங் கண்ணியாய்"* (சீவ. சி : 316)

இவ்வுவமைகள் இயற்கையாயுள்ள வாய்க்கும் கண்ணிற்கும் ஆகியவை. செயற்கையில் மாறுபட்டு நிற்கும்போது இவ்வுவமைகளும் மாறுபட்டுநின்றமையும் சான்றாகின்றன. கண்ணாக மாறுபட்டுப் பசந்தபோது

*"பசந்த என் கண்ணே*
*ஆம்பல் தாதேர் வண்ணங் கொண்டன"*[1] —என ஆம்பல் மாறுபட்டுக் கண்ணிற்கு உவமையாயிற்று. இதுபோன்றே புணர்ச்சியின்போதும், வாய் நஞ்சு தோயும்போதும் நீல மலர்கள் வாய்க்கு உவமையாயின.

இவ்வுவமைகள் ஒரே சீராக இலக்கியங்களில் உள்ளன. ஆனால், மலரும் பொழுதில் சில சில இலக்கியங்கள் சிற்சில இடங்களில் மாறுபட்டும் உள்ளன. அவை பெரும்பாலும் பிற்காலத்தவைகளாக உள்ளன.

இவற்றிற்கெல்லாம் காரணம் உண்டு. ஆம்பல் குடும்பத்து மலர்கள் மிகப் பெருகியிருந்தன . நீர்வளமே இதற்குக் காரணம். செறிந்தும் மிடைந்தும் பல்கியும் பூத்த இவைகள் காண்போர்க்கு மயக்கத்தை ஏற்படுத்தின என்பர். இம்மலர்த் தண்டின் கிழங்குகளின் வேர்கள் பின்னியும் ஒட்டியும் பாய்ந்தும் கலப்பினங்கள் தோன்றுவதற்குக் காரணமாகி இக்கலப்பினங்கள் இருவகை இனத்தன்மைகளையும் மயங்க வைத்தனஎனலாம். இவையெல்லாம் நிலத்தால் மருதமும் நெய்தலுமாக இருநிலத்தன. ஆயினும், இவ்விரு நிலங்களும் கலந்த மயக்கம் அதிகம். அண்மை அண்மையில் இவைநெருங்கி வளர்ந்தமையையும் இலக்கியங்கள் குறிக்காமல் விடவில்லை.

---

1 ஐங் : 34

''பொய்கைப் பூ புதிதுண்ட வரிவண்டு
கழி பூத்த நெய்தல் தாது ஆடி''[1] —என வண்டு

ஒரு நேர அளவில் இருநிலப் பூக்களிலும் படியும் அளவில் நெருங்கி இருந்தன.

இது வேற்றுமையிலும் ஒற்றுமையைக் காட்டுவது போலும்.

ஒற்றுமையிலும் உயர்வு தாழ்வு காண்பதும் அமைவதும் இயற்கையாகியுள்ளன. அந்த இயற்கை இந்த இயற்கை மலர்களிலும் தோய்ந்துள்ளது.

## ஆம்பலும் குவளையும்

மாந்தர் அனைவரும் பிறப்பால் ஒத்தவர்தாம். தமிழரும் குலத்தால் ஒத்தவர்தாம்; குணத்தால் ஒத்தவராக இலரே!

சிலர்பெருந்தன்மையைப்பிறப்புரிமையாகக்கொண்டுள்ளனர். சிலரோ சிறுமைச்செயலையே சிறப்புரிமையாக்கிக்கொண்டுள்ளனர். என்னதான் பெருந்தன்மை உள்ளவரோடு தோய்ந்து பழகினும் நேரம் வாய்க்கும்போது தம் சிறு செயலை விடார்.

''பெருநீரார் கேண்மை கொளினும் நீரல்லார்
கருமங்கள் வேறுபடும்''[2] —என்பதை விளக்கும்

நாலடியார், குவளையையும் ஆம்பலையும் எடுத்துக்கொண்டு

''ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா'' —என்று

ஆம்பலைவிடக் குவளை சிறந்ததாகக் காட்டியுள்ளது.

காரணம் என்ன?

பூ இனங்களில் நீர்ப்பூ பரந்து மலர்ந்திருப்பது காட்சிக்கு இனிமை நல்கும். அதன் மலர்ச்சி கூடிப் புணர்ந்து களித்தவர் முகமலர்ச்சி போன்றதாம்.

---

1 கலி: 74 : 1, 2  2 நாலடி : 236

"புணர்ந்தவர் முகம்போலப் பொய்கைப் பூ"[1] —புதிதாக மலருமாம்.

அவற்றுள், ஆம்பலும் குவளையும் பொய்கையில் மட்டும் அன்று, வயலிலும், கேணியிலும் சுனையிலும் மலர்வன. இரண்டிற்கும் பொதுப்பெயர் கழுநீர் என்பது. இப்பெயர், 'கழு' என்னும் சொல்லடியாக தோன்றியிருக்கலாம். கழு, 'நீண்டு வளர்ந்த வேல் போன்று கூர்மை' என்னும் பொருளது. இதனால் ஒரு கருவி கழு (கழுமரம்) என்று பெயர் பெற்றுள்ளது. "நெடுநுதி [நீண்ட நுனிக்கூர்மை] வயக்கழு" என்பது பெரும்பாணாற்றுப்படை. இம்மலர்களும் அடியில் தண்டு நீண்டு மேலே வேல்போன்ற தோற்றத்தில் கூர்மையாகக் காட்சி தருவன, பறித்துப் போடப்பட்ட குவளை சாய்ந்து கிடந்ததை "கொழுநுதியிள் சாய்ந்த குவளை" என்னும் நளவெண்பாக் கருத்தும் பொருந்திக் காணத்தக்கது. இவ்வாறு நீரில் தோன்றும் நீர்ப்பூ எனக் 'கழுநீர்' என்னும் சொல்லமைந்தது. அவ்வாறாயின் 'நீர்க்கழு' என்றிருக்க வேண்டும். நீர்க்கழு என்றால் 'கழு' என்னும் சொல் முதலில் அந்தக் கருவிக்குக் குறியாகிப் பின்னர் மலருக்கானதாகும். இயற்கைத் தோற்றங்களுக்கே முதலில் சொற்கள் அமைவதால் மலருக்கே முதலில் இப்பெயர் அமைந்திருக்கும். அதனால் கழுநீர் என்பதை 'நீண்டு நுனி கூர்மையான நீர்ப்பூ' எனக்கொள்ளல் வேண்டும்.

ஆம்பல் குவளையைவிடப் பெரிய மலர், குவளை சிறியது. ஆம்பலின் இதழ்கள் குவளையைவிடச் சற்றுத் தடிப்பானவை. குவளை இதழ்கள் பெண்மை போன்று மென்மையானவை. ஆம்பல் ஆடவர் வெடிச்சிரிப்பு போன்று எல்லாப் பற்களையும் காட்டி முழுதும் மலரும். குவளை மகளிரது புன்னகைபோன்று சற்றே இதழ் விரியும். குவளையைப் பெண்கள் கண்ணிற்கே உவமை கூறுவர். இவற்றால் ஆம்பலும் குவளையும் கணவன் மனைவி போன்றவை எனலாம். ஒரு குடும்பம் என்றால் கணவன் மனைவிதானே?

மற்ற வகைகளில் ஒற்றுமையும் கிஞ்சிற்றளவு குவளைக்குச் சிறப்பும் தோன்றும்.

---

1 கலி : 81 ; 5

இரண்டும் மணமுள்ளவை.

கழுநீர் இரண்டற்கும் பொது. குவளை 'செங்கழுநீர்' எனப்படும். "*தண்கயக் குவளை*"[1] —என்னும் அடிக்கு நச்சர் செங்கழுநீர்ப்பூ என்று உரை எழுதினார். எனவே, குவளையில் செம்மை நிறங்கொண்டது 'செங்கழுநீர்' எனப்பட்டது. ஆம்பலிலும் செம்மை நிறமிருந்தும், அதிலும் அரக்குச் செம்மை இருந்தும் அது செங்கழுநீர் எனப் பெயர்பெறவில்லை. குவளை தான் செம்மைக் குறியுடன் செங்கழுநீர் எனப்பட்டமை அதற்கொரு சிறப்பிருப்பதைக் காட்டுவதாகின்றது. அச்சிறப்பைப் படிப் படியாகக் காணவேண்டியுள்ளது.

ஆம்பலும் குவளையும் குறிக்கத்தக்க மணம் கொண்டவை.

திருமண இல்லம் மணம் கமழ்வதுபோன்று ஆம்பல், மணம் கமழும் என்று,

"*ஆம்பல் மண இல் கமழும்*"[2] —எனப் பழமொழி குறித்தது.

"*குவளை நாறும் குவை இருங்கூந்தல்*"[3] —எனக்கூந்தலுக்குக் குவளை மணம் ஏற்றுவதையும் காண்கின்றோம். இரண்டிலும்,

"*கார்த்திகை விளக்கன்ன கடிகமழ் குவளை*"[4] என்று மிகுந்த மணமாகவும்,

"*குவளை அரும்புபடு பன்மலர்*
*திறந்து மோந்தன்ன சிறந்து கமழ் நாற்றத்து*"[5] எனச் சிறந்து கமழ்வதாகவும் குவளை குறிக்கப்படுகின்றது.

எனவே, மணத்தில் ஆம்பலைவிடக் குவளை மேம்பட்டது.

இவ்விரண்டையும் அடுத்தடுத்து வைத்து,

"*தொடர்ந்த குவளை தூநெறி அடைச்சி*
*அலர்ந்த ஆம்பல் அகமடி வையர்*" (பதிற் : 27 : 2, 3)

எனப்பாடினார் பாலைக்கௌதமனார். குவளைக்குத் "தொடர்ந்த" என்னும்அடைமொழி அமைத்தார். இதைவிளக்கும்பழையஉரைகாரர்

---

1 *குறி. பா : 68 உரை.*
2 *பழ : 144*
3 *குறு : 300*
4 *சீவ. சி : 256*
5 *மது. கா : 566, 567.*

"ஆண்டுதோறும் இட்டு ஆக்கவேண்டாது தொண்டு இட்டதே யீடாக எவ்வாண்டிற்கும் தொடர்ந்து வரும். இச்சிறப்பானே இதற்குத் தொடர்ந்த குவளை என்று பெயராயிற்று" என்றார்.

ஒருமுறை நீர் நிலையில் இட்டதே எக்காலத்தும் அற்றுப் போகாமல் வளரும் சிறப்பு உடையது குவளை. அடுத்துக் கூறப்பட்ட ஆம்பலுக்கு 'அலர்ந்த'என்னும் அடைமொழிஅமைந்துஅதுவிரிந்து அலரும் சிறப்பைக் காட்டிற்று. இந்த அலர்ச்சி குவளைக்கு இல்லை. ஆனால், தொடர்ச்சி ஆம்பலுக்கும் உண்டு. "தொடர்ந்த குவளை" என்னும் தொடரைச் சிறந்த தொடராகக் கொண்டு நூலைத் தொகுத்தோர் அப்பாட்டிற்குத் தலைப்பாக்கினர்.

இவ்விரண்டு மலர்களும் வளமான சேறு கண்ட இடத்தில் பூக்கும். வயலில் பூத்தால் பயிர்த்தொழிலுக்கு அது களையாகும். அவற்றைப் பறிப்பர். களையெடுத்தலைக் "களைகட்டல்"[1] என்று திருக்குறளும் காட்டும். இஃதே 'கட்டல், கட்குதல்' எனப்படும். நெய்தலும் இவ்வாறு பறிக்கப்படும்.

*"சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்"*

*"குவளை கட்டும்"*[2] –என்று களையாகப் பறிக்கப்படுதல் கூறப்பட்டது. களையாக அல்லாமல் சூடிக்கொள்வதற்காகப் பறிப்பதே மிகுதி. அதனைச் சிறுமியர், குமரியர் பறிப்பர். அவ்வாறு பறிப்பதற்குக் 'குற்றல், குறுதல்' என்றும் கூறப்படும். அவ்வாறு பறிப்போர் நீண்ட நேரம் களைப்பு நேரும் அளவு பறிப்பர். களைப்பு நீர் வேட்கையை உண்டாக்குவது. ஆனால், வேட்கை எழுந்தாலும் நீரில் நிற்பதால் உடன் அக்குளநீரைப் பருகுவர். இவற்றையெல்லாம் உள்ளடக்கி,

*"ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு"*[3] –என்றும்

*"குவளை குறுநர் நீர்வேட்டாங்கு"*[4] –என்றும் காட்டப் பட்டன.

*"அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து"*[5] என்றும்

*"கழிய காவி குற்றும் கடல*
*வெண்டலைப் புணரி ஆடியும்"*—[6]

---

1 "களைகட் டதனொடு நேர்" -குறள் : 550
2 புறம் : 61 : 2.
3 குறு: 178
4 நற்: 382 : 2
5 பதிற் : 71 : 2.
6 குறு. 144 : 1, 2

என்றும் நான்குவகைப் பூக்களைப் பறிந்தமையைக் காணலாம், அவ்வாறு பறிப்பவற்றைத் தமது ஆடை மடியில் தொகுத்துக்கொள்வர். நெய்தற்பூவையும் ஆம்பற்பூவையும் பறிக்கச் சிறுமியர் சிலம்பு ஒலிக்க ஓடுவராம்.

இவ்வாறு பறிக்கும் போது அப்பக்கந்தே வருவோருக்குச் சூடிக்கொள்ள வழங்குவர். பரிசு பெற விரும்பும் பாணருக்கு மற்றொரு பாணன் வழி சொல்லுகின்றான். கடந்து செல்லும் இடங்களில் என்னென்ன கிடைக்கும் என்று சொல்பவன்,

"பொய்கையில் பூப்பறிப்போர் பல
மலர்களை உங்களுக்கு இடுவர். அவற்றைக் காலையிலே
தலையில் பிணையலாகச் சூடிச் செல்க"[1] என்றான்.

ஒரு கருத்தை இழையோட்டமாக நினைவில் நிறுத்திக் கொண்டே இவற்றைக் காணவேண்டும்.

நீர்ப்பூக்களைக் களைவோர், குறுவோர் யாவரும் உழவர் குடும்பத்துப் பெண்கள்; எளியவர்கள். அதனைப் பெறுவோரும் பாணர் என்னும் கலைஞர்கள்; எளியவர்கள்.

பறிக்கும்போது, நீருக்குள் அமிழ்ந்து மேலே வராதிருக்கும் செவ்வரும்புகளை — செங்கழுநீர் அரும்புகளை — மிக விரும்பிப் பறிப்பர். திருமுருகாற்றுப்படை இதனை,

"கீழ்நீர்ச் செவ்வரும்பு" என்றது.

இதற்கு நச்சினார்க்கினியர் "நீர்க்கீழ்நின்ற சிவந்த அரும்பு. அது மிகச் சிவத்தலின் ஒப்பனைக்குக் கொள்வர்"[2] —என்று விளக்கினார். இதினிலும் கழுநீர் ஒரு குறிப்பிடத்தக்கதாகின்றது.

களையாகப் பறித்தவற்றைத் தொகுத்துப் போட்டிருப்பர். அது நெற்கூடுபோன்று குவியலாகக் கிடக்குமாம். இது

---

1 "பொய்கை குறுநர் இட்ட கூம்புவிடு பன்மலர்
பெருநாள் அமையத்துப் பிணையினிர் பெருகுவிர்"
—பெரும்பாண் : 294—296

2 திருமுருகு : 29 உரை

கொண்டு எந்த அளவில் இம்மலர்கள் விளைந்தன என அறியலாம்.

இக்குடும்பப் பூக்கள் நான்கையும் கலந்து தொடுக்கும் மாலைகளும் அமைந்தன.

*"அரிநீர் அவிழ்நீலம் அல்லி அனிச்சம்*
*புரிநெகிழ் முல்லை நறவோ டமைந்த*
*தெரிமலர்க் கண்ணியும் தாரும் நயந்தா"* [1] ராகப் பலமலர்க் கலம்பகத்தையும் அணிந்தனர்.

மிகப் பரவலாக உழத்தியர், நெய்தல், ஆம்பல், இருவகைக் குவளை, காவி ஆகிய நான்கையும் தனித்தனியாகவும், யாவற்றையும் சேர்த்துக் கட்டிய மாலையாகவும், தழைஉடையாகவும் அணிந்தனர்.

மாந்தர் தாம் விரும்பியதைக் கடவுளர்க்கும் ஆக்குவர் அன்றோ? இம்மலர்கள் யாவும் கடவுளர்க்கும் ஆயின.

*"ஆம்பல் மலர்கொண்டு அணிந்தாய் போற்றி"* -எனத் தனி மலர் சூடப்பட்டமை அறியலாம். செங்கழுநீர், செங்குமுதம் இவற்றின் இதழ்களைக் கிள்ளி எடுத்து மாலையாக்கி அணிவித்து வழிபட்டனர்.

முருகனுக்கு,

*"பைந்தாட் குவளை தூவிதழ் கிள்ளி"த்* [2] —தலையில் அணிவிக்கும் 'தெய்வ உத்தி' என்னும் அணிகலனுடனும் வலம்புரியுடனும் வைத்ததைத் திருமுருகாற்றுப்படை காட்டுகின்றது. குவளை மலரைப் பிளவு செய்து பிணையலாக்கியதை அப்பர் பாடியுள்ளார். கடவுளர் போற்றிக்குரிய மலர்கள் எட்டில் நீலம் ஒன்றாக அமைந்தது.

சூடியும் அணிந்தும் மகிழ்ந்தமை போன்று கையிற் பிடித்தும் களித்தனர். சீவகன்,

*"செறிந்த கழுநீர்ப் பூப்பிடித்துச்*
*சேக்கை மரீஇய சிங்கம் போல்"* [3] —செம்மாந்திருந்

1 *கலி*: 91 : 1—3.
2 *திருமுருகு* : 22
3 *சீவ. சி* : 2358

தானாம். கங்கையம்மன் வலக்கையில் கருநெய்தற் பூவைப் பிடித்து விளங்குபவள்.

இக்குடும்ப மலர்களேயன்றி இவற்றின் தண்டுகளும் எளிய மக்களுக்குக் கைக் காப்புகள் ஆயின.

"ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்" (புறம் : 63 : 12)

"பவள வளைசெறித்தாட் கண்டணிந்தார்
பச்சைக் குவளைப் பசுந்தண்டு கொண்டு"
(பரி 11 : 101, 102)

-என்பவை ஆம்பல் காப்பை-குவளைக் காப்பைக் காட்டுகின்றன.

கண்ணகியார் கணவனைப் பிரிந்து வாடியபோது குவளை மலர்களும் சூடப்படாமல் வாடின. கோவலனுடன் மதுரைப் பயணம் மேற்கொண்டாள். அவனோடு சேர்ந்திருப்பினும் வழிப்பயணம் ஆகையாலும், கவுந்தியடிகள் உடன் இருப்பதாலும் அவர்களுக்குள் உடற் புணர்ச்சி இல்லை. அந்நிலையிலும் வழியில் பூத்திருக்கும் கழுநீர்ப் பூக்களைப் பறித்துச் சூடியிருக்கலாம். அப்போதும்

"தாதுசேர் கழுநீர்த் தண்பூம் பிணையல்
போதுசேர் பூங்குழல் பொருந்தாது ஒழி"[1] —ந்தது.

இது கொண்டு கழுநீர்ப் பூவைக் குலமகளிரும் அவருள் செல்வச் சீருடையாரும் விரும்பிச் சூடுவர் என்பதை உணரலாம்.

ஆம்பல் குடும்பத்து மலர்கள் பயன்படுத்தப்படுவதை மேலோட்டமாக அல்லாமல் கூர்ந்து நோக்கினால் அவற்றில் 'செங்கழுநீர் என்னும் செங்குவளை' மிக விருப்பமாகவும் மற்றவற்றைவிட ஓரளவில் மதிப்பாகவும் கொள்ளப்பட்டிருப்பதை உணரலாம்.

குவளையில் கருங்குவளை 'நீலம்' எனப்படும். செங்குவளை 'செங்கழு நீர்' எனப்படும். இவை யிரண்டும் மகளிர் கண்ணிற்கு உவமையாக்கப்படும். அவ்வுவமைகளும் மகளிர் பெற்ற உணர்ச்சியைக் காட்டுபவையாக அமைந்தன.

கண்ணகியார் கோவலனைப் பிரிந்து துயரக் கண்ணீரில் உள்ளாள். மாதவியோ கோவலனைக் கூடி மகிழ்ச்சிக் கண்ணீரில் உள்ளாள். இதனை,

---

1 சிலம்பு : 13 : 21, 22.

"கள்ளுக் நடுங்கும் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்"[1] எனக்

கூறினார் அடிகளார். எனவே, துயரத்தால் கண் நீலநிறம் பெறுமென்றும் அதற்குக் கருங்குவளையாம் நீலம் உவமையாகுமென்றும், மகிழ்ச்சியால் செந்நிறம் பெறுமென்றும் அதற்குச் செங்கழுநீர் உவமையாகுமென்றும் அறிய முடிகின்றது.

நீல நிறம்பெற்ற நெய்தல் கருங்குவளையாம் நீலத்திலும் சிறப்பு குறைந்ததாகக் கருதப்பட்டது.

"பல்லிதழ் நீலமொடு நெய்தல் நிகர்க்கும்"[2] —என்று ஐங்குறுநூறு தலைவனுக்கு உவமை கூற, அதற்கு உரை வகுத்தவர்,

"சிறப்புடைய கருங்குவளையுடனே சிறப்பிலாத
நெய்தல் நிகர்க்கும் ஊரன்"

என்றெழுதி நெய்தலினும் நீலம் சிறந்தது என்று காட்டினார். இந்நீலம் 'நீலத் தாமரை' என்றும் வழங்கப்படும். இம்மலரால் கட்டிய மாலை 'நீலத்தார்' எனப்பட்டது. இதனை மன்னர் அணிந்தனர். முத்தொள்ளாயிரத்தில் ஒருசோழன்,

"நீள் நீலத் தார் வளவன்"[3] எனப்பட்டான்.

இந்தக் கருங்குவளை செங்கழுநீரிலும் சற்றுக்குறைவானதாகப் பேசப்படுவதும் உண்டு. ஆம்பல் குடும்பத்து நான்கு வகைப் பூக்களிலும் செங்கழுநீர் ஏற்றம் பெறுவதற்கு அதன் தேனும் ஒரு காரணமாகும். ஆம்பலைவிடக் குவளையில் தேன் அதிகம்; சுவையும் அதிகம்.

மகளிர் மார்பில் சந்தனக் குழம்பு, குங்குமக் குழம்பை அப்பி ஒப்பனை செய்துகொள்வர். குழம்பை எடுத்துப் பூசிக்கொள்ளச் செங்கழுநீர் இதழ்களைப் பயன்படுத்துவர். அதன் தடிப்பு அளவில் குழம்பைத் தடிப்பாகப் பூசிக்கொள்வராம். வெள்ளிலோத்திரம் என்று ஒரு பூ உண்டு. அது காய்ந்து சருகானதும் மணக்கும். அச்சருகைக் குழம்பாக்கி மகளிர் பூசி மகிழ்வதைச் சீவகசிந்தாமணி

"...வெள்ளி லோத்திரத்தின் பூப்பொருக்கு அரைத்த சாந்தின்
காசறு குவளைக்காமர் அகவிதழ் பயிலம் அட்டி[4] என்று

1 சிலம்பு : 5 : 236, 237
2 ஐங் : 204 உரை
3 முத் 37
4 சீவ. சி : 622

குவளை அகவிதழ் கொண்டு அவ்விதழ்த் தடிப்பில் பூசியதாகக் காட்டுகின்றது. (இவ்வாறு தாமரை இதழாலும் பூசிக் கொள்வ துண்டு.)

இவ்வாறு பலவகைகளிற் சிறந்த செங்கழுநீர் கடவுளர்பால் ஒரு சிறப்பும் பெற்றது. பொதுவாகச் சிவபெருமான்,

*"... ... ... ... ... ... ...கழுநீர் மாலை*
*ஏலுடைத் தாக எழில்பெற அணி"*[1] வார். இதனிலும்

*"இன்னியற் செங்கழு நீர்மலர்"*[2] —அவர் தலையில் இருப்பதைப் பார்த்து இறைக்காதல் கொண்ட ஒருத்தி

*"என்றலை எய்துவது ஆகாதே"* —என்று மாணிக்கவாசகர் சொல்லிக் கொடுக்கப் பாடினாள்.

திருவாரூரிலுள்ள கடவுளர் திருமேனிக்குத் தியாகராசர் என்று பெயர். இத்திருமேனி பற்றி ஒரு கதை உண்டு. தமிழ் நாட்டு முசுகுந்தச் சோழன் இந்திரன் வேண்டிக் கொள்ள அவனுக்காகப் போர்செய்து வெற்றி தேடித் தந்தான். மகிழ்ந்த இந்திரன் தனது நகர்க்கு அழைத்தான்; பாராட்டினான். வேண்டியதைக் கேட்குமாறு வேண்டினான். சோழன் இந்திரன் வைத்து வழிபடும் தியாகராசர் திருமேனியை—பொன்படிமத்தைக் கேட்டான். இந்திரனுக்கு மனமில்லை. ஒரு வஞ்சம் செய்தான். அப்படிவத்தைப் போன்று மேலும் ஆறு படிவங்களை வேறுபாடு தெரியாமல் உருவாக்கி வரிசையாக வைத்து ஒன்றை எடுத்துக் கொள்ளச் செய்தான். இதில் இவன் பக்கம் இருந்த சிவபெருமான் 'இந்திரன் வழிபடும் உண்மைப் படிவத்தின்மேல் செங்கழுநீர்ப் பூ இருக்கும். அந்த அடையாளத்தால் உண்மைப் படிவத்தைக் கொள்' என்றாராம். அதன்படியே பெற்றான் என்பர்.

இதன் அறிகுறியாக இன்று திருவாரூர்த் தியாகேசர்க்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு செங்கழுநீர்ப்பூ படைக்கப்படுவதுண்டு. அதற்கென்று அக்கோவிலிலேயே செங்கழுநீர் ஓடை ஒன்று இருந்ததாம். இப்போது இல்லாமையால் அண்மையில் உள்ள சிற்றூரிலுள்ள செங்கழுநீர்ச் சிற்றோடையிலிருந்து நாள் தோறும் ஒரு பூவைக் கொணர்ந்து சூட்டுகின்றனர்.

---

1 திருவா : கீர்த்தித் திருவகவல் : 113
2 திருவா : திருப்படையாட்சி : 4

# பறியாக் குவளையும் பூவாக் குவளையும்

குவளைக்குப் "*பறியாக் குவளை*"1 என்றொரு சிறப்பு உண்டு. குமரன் வாழும் குன்றுகளில் உள்ள சுனைகளில் அரியவை அவனுக்கு உரியவை என்பர். அச்சுனை 'கடவுட் சுனை' எனப்படும். அச்சுனையிற் பூக்கும் பூக்களை மாந்தர் சூடுதற்குப் பறிக்காது விடுப்பர். அவை கடவுட்கு உரியனவாக விடப்படும். அவற்றைச் சூர் அர மகளிர் கொய்து மாலையாக்கி முருகனுக்கு அணிவிப்பராம். இதனால் இக்குவளை 'பறியாக் குவளை' என ஒரு சிறப்பைப் பெற்றது.

இக்குவளையைக் குமரக்கடவுள் விரும்பும் என்று ஒரு வழக்கு உண்டு.

நன்னன் என்னும் வள்ளலைக் கண்டு பரிசுபெற்று வந்தோர் பரிசு பெறச் செல்வோர்க்கு வழிசொல்லி அனுப்பினர். 'செல்லும் வழியில் மலைவழியும் உண்டு. அம்மலைகளில் சுனையிருக்கும். அச்சுனையிற் பூத்த குவளை முருகனுக்கு விருப்பமானது. அதனை அறியாது தொட்டால் உங்கட்கு நடுங்கும் அளவு துன்பம் வரும். அத்துடன் அக்குவளை மலர்களைப் பறிக்கச் சூர் அர மகளிர் சுற்றுவர். அவராலும் துன்பம் நேரும். அதனால் மலை வழியில் நில்லாது விரைந்து நாட்டு வழி நோக்கிப் படர்க' என்றனர்.

"குவளையில் தெய்வம் விரும்புதலின் கடியவாகிய பூக்களைக் கிட்டினும்" -என உரையில் விரித்துக் கூற இடந்தரும் மலைபடுகடாம் தரும் அடிகள் இவை:

> "*நிறையிதழ்க் குவளை கடி (கடிய)வீ தொடினும்*
> *வரையர மகளிர் இருக்கை காணினும்*
> *உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியிர்*"2

இக்குவளை கோடைக் காலத்திலும் நீரில் பூத்து வாடாமல் இருக்கும் என்றொரு செய்தியைக் குறுந்தொகை,

---

1 "கடவுள் கற்சுனை அடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலர்" -நற் : 34 : 1, 2.

2 மலை : 189—191

*"நீர்கால் யாத்த நிறையிதழ்க் குவளை*
*கோடை ஒற்றினும் வாடா தாகும்"*[1] எனக் கூறுகின்றது.

நீர் அற்ற குளத்தினை நீர்ப்பறவைகள் நீங்கிவிடும். ஆனால், 'கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் ஓட்டி' உறவினின்று கிளைக்கும் என இக்குடும்பத்தின் பெருமை பேசப்படும்.

பரிசிலர்க்கு வழங்கப்படும் பரிசில்களில் விருதுடன் வழங்கப்படுவது பொன்னாற் செய்யப்பட்ட பூக்கள். இப்பொன் உருவில் குவளையும் இடம் பெற்றது.

இவ்வாறு குவளை உருவிற்செய்யப்படுவது *"பூவாக் குவளை"*[2] எனப்பட்டது. இப் பொன் குவளையை வெள்ளி நாரில் கட்டித் தலையில் சூடிக்கொள்ளக் கண்ணியாக வழங்குவர். பொன் பூவை வெள்ளி நாரில் மாலையாக்கி அணிகலனாகவும் வழங்குவர்.

இக்குவளைமலர் வடிவம் கட்டடங்களிலும் சிற்பங்களிலும் வடிக்கப்படும். பெரும் வளமனைகளிலும் அரண்மனைகளிலும் இரட்டைக் கதவுகளின் பிடியாக இவ்வடிவம் செய்யப்பட்டதை நெடுநெல்வாடை காட்டுகின்றது. அஃதும் புதிதாக மலர்ந்த தோற்றத்தில் வடிக்கப்படும் என்பதை.

*"புதுபோது அவிழ் குவளைப் பிடிகள் அமைத்து"*[3] எனக் கூறியுள்ளது,

ஆம்பற் குடும்பத்தில் குவளையும் அக்குவளையில் செங்கழு நீரும் ஒரு சிறப்பிடம் பெற்றுள்ளன. இனியும் அதிகம் புகழ்ந்தால் நாணத்தால் "குவளைக் கவிழ்ந்து நிலன் நோக்கும்" என்று திருவள்ளுவப் பெருந்தகையே கூறுவதால் விடுப்போம்.

## குமுதப் பெயர்

ஆம்பல் குடும்பத்திற்குப் பின்காலத்தே அமைந்த சொல் 'குமுதம்' எனக் கண்டோம். இப்பெயரும் இரவில் மலரும் குறியீடாக அமைந்தது. இப்பெயர் பொதுவாக அமைந்து பலவற்றிலும் இடம் பெற்றது.

---

1 குறு : 388
2 *"பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை*
*வால்நார்த் தொடுத்த கண்ணியும் கலனும்"* —புறம் : 153 ; 7, 8.
3 நெடு. வா : 81.

பிங்கல நிகண்டு காலப் பெயர் வாய்பாட்டில் குவளையைக் காட்டுகின்றது. அதனால் எண்ணிக்கைக் குறியீடாகவும் அமைந்தது. அணி அணியாகப் படைகளை வகுக்கும் கணக்கில் '3 சேனைமுகம் கொண்டது ஒரு குமுதம்' எனப்படும்.

குமுதம் என்னும் சொல்லுக்குத் தென்மேற்குத் திக்கு, திக்கு யானைகளின் ஒன்று, நெய்தல், அரும்பு, பேராரவாரம், தருப்பை எனப்பல பொருள்கள் அமைக்கப்பட்டன.

இலக்கியங்களில் இலக்கிய மாந்தர் பெயர்களும் குமுதமாக அமைந்ததை காண்கிறோம். திருமாலின் மடைப்பள்ளிக்காரனுக்குக் 'குமுதன்' என்று பெயர். இராமாயணத்தில் ஒரு குரங்கினத்துத் தலைவனுக்குக் 'குமுதன்' என்று பெயர் சூட்டப்பட்டது.

புதிதாகத் தமிழகத்தில் புகும் யாதாகவிருப்பினும் அது பெருத்த ஆரவாரம் செய்யும் என்பதற்குக் குமுதத்திற்குப் 'பேராரவாரம்' என்னும் பொருள் அமைந்ததே சான்றாகும்போலும்.

## ஆம்பல் இசையும் அல்லிக் கூத்தும்

ஆம்பல் குடும்பம் தொல்காப்பியத்தில் இடம் பெற்றது; அதனால் இலக்கணம் பெற்றது. இலக்கியங்கள் யாவற்றிலும் இடம் பெற்றது; அதனால் இலக்கியம் பெற்றது. இலக்கணத்தையும் இலக்கியத்தையும் பெற்றதால் இயற்றமிழில் இடம்கொண்டதாயிற்று.

இயற்றமிழைத் தொடர்ந்து இசையிலும் கூத்திலும் இடம் பெற்றுள்ளது.

இசை, தமிழில் இசைத்தமிழ், தமிழிசை என இருவகைப்படும். இசைத்தமிழ் என்பது இசைக்குத் தமிழில் கூறப்படும் வரையறை – இலக்கணம். தமிழிசை நடைமுறைப்பட்டுப் பாடப்படுவது. இவ்விரண்டிலும் இக்குடும்பம் இசை பெற்றது.

இசைத்தமிழில் குரல், துத்தம் முதலிய ஏழில் 'இளி' என்னும் இசை நெய்தல் மணம் கொண்டது. இசையிலக்கணத்தில் திறம் என்பது ஒரு வகை.

*"திறனில் யாழே நெய்தல் யாழாகும்"*[1]

-என்று சேந்தன் திவாகரம் காட்டுகின்றது. நெய்தல் யாழ் என்பது மீட்டி இசைக்கும் உருவம் கொண்டதன்று. ஓர் ஒலியமைப்பு. இவ்விசையைத்,

*"துத்தம் இளியிற் பிறக்க நெய்தல் யாழ்"*[2]

-எனச் சிலப்பதிகார மேற்கோள் பாடல் கூறுகின்றது. இதில் கருத்து மாறுபாடு உண்டு. யாழ் நூல் ஆசிரியர் தவத்திரு விபுலானந்த அடிகளார் நெய்தல் யாழ் என்பதனை முழுதுமாய் ஏற்கவில்லை. விளரியாழின் பெயர் என்ற அளவில் இசைவார். இருப்பினும் நெய்தலின் பெயரால் இப்படியொரு கருத்திருக்கின்றது.

நெய்தற்பெயர்கொண்ட தோற்கருவி உண்டு. அதற்கு 'நெய்தற் பறை' என்று பெயர். இஃது அவலத்திற்கு முழங்கப் படுவது. மணப்பறை, சாப்பறை என்பனவற்றில் இது சாப்பறை. உலகத்தில் இன்பமும் துன்பமும் இயல்பு என்பதை விளக்க எழுந்த பக்குடுக்கை நக்கணியார் என்னும் புலவர் ஓர் இல்லத்தில் சாப்பறை கொட்ட, ஓரில்லத்தில் மேளதாளத்தோடு இன்னிசை ததும்புவதைக் கூறியுள்ளார். இந்த அவல நிகழ்ச்சியை,

*"ஓரில் நெய்தல் கறங்க"*[3]

-என்றுநெய்தற் பறையைக் குறித்தார். இவ்வாறு நெய்தல், திறம் என்னும் இலக்கணத்தால் இசைத் தமிழிலும், பறை இசையால் தமிழிசையிலும் இடம் பெறுகின்றது.

முன்னர் முல்லைக் குழல் என்றொன்று கண்டதுபோன்று 'ஆம்பற் குழல்' உண்டு. ஆம்பல் என்றொரு பண்ணும் உண்டு. இதனை முன்னரும் கண்டோம். இந்த ஆம்பல் இசையை "வண்டினம் வௌவாத ஆம்பல்"[4] என்றனர். ஆம்பல் மலராயின் வண்டு மொய்க்கும். வண்டு மொய்க்காத ஆம்பல் என்றால், அது இசைக்குக் குறி. ஆம்பல் மலரிலிருந்து 'ஆம்பல் பண்' என்பதைப் பிரித்துக் காட்டச் சில அடைமொழிகளை இசைநூல் சேர்த்தது. இசை மொழியப்படும். வாயால் வெளியாகும். முத்துப் போன்ற பற்கள் வழிவரும். இவற்றால் "மொழியாம்பல் வாயாம்பல்,

1 சேந். தி : ஒலிப்பெயர்
2 சிலப்பு : ஆய்ச்சியர் குரவை : 21 மேற்கோள் பாடல்
3 புறம் : 194 : 1
4 திணை. நூ : 101

முத்தாம்பல்'' என்று பண்ணுக்குச் சொல்லுவர். இது சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் விளக்கம்.

இசைக்கருவி, தமிழில் தனிச்சொல்லாக 'இயம்' எனப்படும். அதனை இயக்குபவர் 'இயவர்' எனப்படுவர்.

'' ...... ...இயவர்
தீங்குழல் ஆம்பலின்''1 -என்று ஆம்பல் பெயர்பெற்ற குழல் இசைக்கப்படுவதை ஐங்குறுநூறு காட்டுகின்றது.

''ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி''2 -என்று அக்குழல் ஓசையைக் கேட்பாரைச் சிலம்பு காட்டுகின்றது. இக்குழல் முல்லைக் குழல் போன்று ஆம்பல் வடிவ இணைப்பு பெற்றதால் பெற்ற பெயர். வெண்கலத்தால் ஆம்பல் முகை வடிவாகச் செய்து அதனைப் புல்லாங்குழலின் வளைப்பக்கத்தே பொருத்தியிருப்பர். இதனை,

''கஞ்சத்தால் குமுத வடிவாக அணைசு பண்ணிச்
செறித்தலின் ஆம்பற் குழலாயிற்று''3
-என்னும் அடியார்க்கு நல்லார் உரையால் அறியலாம். இக்குழலில் இசைக்கப்படுவது ஆம்பற்பண் என்பதை,

''ஆம்பல் என்னும் பண்ணினையுடைய அழகிய இனிய
குழலிடத்துத் தெளிந்த ஓசை''4
என்று நச்சினார்க்கினியர் விளக்கினார். இக்குழல் இசையை இடையர் பலகாலும் எழுப்புவர் என்பதை,

''ஆம்பலந் தீங்குழல் தெள்விளி பயிற்ற''5 என்றார் கபிலர். இது மாலைக்காலத்தில் ஊதப்படும். இவ்விசையைப் போன்று வண்டு இசைக்கும் என்பதால் வண்டின் இசைபோன்று இனிமையுடையது என்று அறியலாம். இவ்விசை இரங்கி ஒலிப்பது ஏங்கி அழுவது போன்றதற்கு உவமையாக,

''இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பல் குழலின் ஏங்கி (அழுதாள்)''6 -என நற்றிணை

1 ஐங் : 215
2, 3 சிலம்பு : 17: 19 உரை
4 குறி. பா : 222 உரை
5 குறி. பா : 222
6 நற் : 113 : 11

காட்டுகின்றது. அழுகைக்கு உவமையான இக்குழல் இசையே போரில் புண்பட்டுப் படுக்கையில் துன்புறும் வீரர்க்கு அமைதியைத் தரும் என்பர். போர்ப் புண்ணைப் பேய் சுவைக்கச் சுற்றும் என்பது ஒரு நம்பிக்கை. அவ்வாறு பேயை அணுக விடாமல்,

*"ஐயவி சிதறி ஆம்பல் ஊதிக்*
*காக்கம் வம்மோ நெடுந்தகை புண்ணே"*[1] —என அரிசில் கிழார் பாடியுள்ளார்.

ஆம்பல், இசை காதலன் காதலி களவாகக் கூடுவதற்கு அறிவிப்பாகவும் பயன்படுத்தப்பட்டது. 'இன்ன இடத்தில் வந்து விடு' என்று இடத்தைக் குறித்தற்கு 'குறி யீடு' என்று பெயர். தலைவன் ஓரிடத்தில் நின்று இக்குழலை ஊதுவான். இசை வரும் திக்கைக்கொண்டு காதலி இடத்தைப் புரிந்துகொள்வாள். ஒருவன் காஞ்சி மரத்தடியில் நின்று ஊதி இடம் அறிவிக்கின்றான்.

*"ஆம்பற் குழலாற் பயிரெம் படப்பைக்*
*காஞ்சிக் கீழ்ச்செய் தேம்குறி"*[2]

இக்காலத்தில் தமிழகத்தில் ஆம்பல், குவளை முதலிய சொற்கள் மாந்தரது வாய்ப்பேச்சில் இல. அல்லி என்னும் வழக்கே உள்ளது.

கவிஞர் ஓமர் என்பார் இதனை அழகுபடப் பாடியுள்ளார். அழகிய மங்கையாக வண்ணித்துள்ளார். அதற்குக் காரணம் மேலைநாட்டு மரபில் இம்மலர் எழில் மங்கையாகவும், தேவ மகளாகவும் கருதப்படுவது. நாம் கூறும் அரமகள், அணங்கு, பாவை என்னும் சொற்பொருள் அமைப்பில் இம்மலரை மேல் நாட்டார் போற்றினர். இவ்வழக்கம் நமது நிழலோ என்று கருதும் அளவில் நம் நாட்டிலும் அல்லியைச் சொல்கின்றோம். பெண்ணாக – பாவையாகச் சொல்லும் தமிழ் வழக்கு உண்டு.

வடமொழிக் கதையில் வரும் அருச்சுனன் மனைவியருள் ஒருத்தி அல்லி எனப்படுவாள். நம் தமிழகத்தில் 'அல்லிப்பாவை' என்றொரு வழக்கு உண்டு. கண்டாரைத் தன் கவர்ச்சி அழகால் கொல்லுவது போன்று மயக்கும் அழகுப் பொம்மை ஒன்றிற்குக் 'கொல்லிப்பாவை' என்றுபெயர். இப்பாவை அமைந்தமலை கொல்லி

---

1 புறம் : 281 : 4, 7     2 கலி : 108 : 62, 68.

மலே எனப்படும், இதுபோன்றே வெண்மை நிற எழிற்பொம்மை 'அல்லிப் பாவை' எனப்பட்டது. சிலைவடிக்கும் கலைத்திறமையில் வல்லவன் ஒருவனால் செய்யப்பட்டு மேலும் ஒப்பனையுடன் விளங்குவதாக இவ்வல்லிப்பாவை பேசப்படும்.

இப்பாவை எழுந்துஆடினால்அதன் அழகைஎன்னென்பது! இதனை உவமையாக்கி,

*"வல்லோன் தைஇய வரிவனப் புற்ற*
*அல்லியம் பாவை ஆடுவனப் பேய்ப்ப"* 1 என்கின்றன புற

நானூற்று அடிகள். இத்தொடர்பிலேயேபெண்ணுருவும்ஆணுருவும் கொண்ட கோலமாக ஆடப்படும் கூத்து, 'அல்லிக் கூத்து' எனப் பட்டது. இஃது "அல்லியம்" "அல்லித் தொகுதி" எனக் கூத்த நூல்கள் குறிக்கின்றன. இக்கூத்து கண்ணனால் ஆடப்பட்டது என்பர். ஆண்பெண் உருவத்தில் ஆடப்பட்டதால் 'அலிப்பேடு ஆட்டம்' என்றொரு பெயரும் உண்டு. கண்ணன் தன்னை அழிக்க வந்த கஞ்சனை அழித்து ஆடியதாகவும் கதை சொல்வர்.

கூத்து இலக்கணத்தில் 11 வகை அகக்கூத்து உண்டு. அவற்றில் 'அல்லிக் கூத்து' ஒன்று. அல்லி இவ்வாறு தன்பெயரைச் சூடித் தன் குடும்பத்தைக் கூத்துத் தமிழிலும் பங்குபெறச் செய்தது.

இவ்வாறாக,

ஆம்பல் குடும்பம் ஒரு முத்தமிழ்க் குடும்பம் என்றாகியது.

## அல்லிச் சோறும் ஆம்பல் அவியலும்.

ஆம்பல் குடும்பத்தில் மலர்களிலும், இதனைச் சேர்ந்த தாமரையிலும் நடுவில் உள்ளது பொகுட்டு அன்றோ? இப் பொகுட்டை நாட்டுப்புறமக்கள் 'அல்லி' என்றே வழங்குவர். இதன் உள்ளே விதைகள் உருவாகின்றன. விதைகள் உருவாகின்றன என்பதோடு உணவும் சமைகின்றது என்று கூறலாம். ஆம், இப் பொகுட்டாம் அல்லி ஒருசமையற் கூடம். இவ்விதைகள் வெண்சிறு கடுகு என்னும் கசகசாவை நீரில் கெட்டியாகக் கலந்தது போன்

1 புறம் : 33 : 16, 17.

திருக்கும். ஆலம்பழ, அத்திப் பழ விதைகள் போன்று. ஆயிரக் கணக்கில் இருக்கும். இது ''அல்லி அரிசி'' 1 எனப்படும். இதனை எளிய மக்கள் பச்சையாகவே தின்பர்.

பூத்த மலரைப் பறித்து அதன் பொகுட்டைக் கடிப்பர். மேல் மூடிபோன்று பொதிந்துள்ள பட்டையைப் பெயர்த்து எடுப்பர். உள்ளே அமைந்த அரிசியாம் விதையைத் தின்பண்டம் போன்று தின்பர். சிறுவர் சிறுமியர் மட்டுமன்றி முதியோரும் தின்பர்.

பச்சையாக அன்றிக் காயவைத்து அரிசியாக்குவர். பொகுட்டை எடுத்துப் பிளந்து காயவைத்தால் காய்ந்ததும் சிறு வெள்ளை அரிசி கிடைக்கும். இவ்வாறு குளநெல்லுடன் இதனையும் வீட்டு முன்றிலில் காயவைத்ததை,

*''மெல்விரல் மெலியக் கொய்த குளநெல்லும்*
*விளைந்த ஆம்பல்*
*அல்லியும் உணங்கும் முன்றில்''* 2 எனச் சீவக சிந்தாமணி கூறுகிறது. இவ்வாறு காயவைத்துப் பக்குவப்படுத்திச் சேர்த்து வைத்துக்கொண்டு வேண்டும்போது ஆவியில் அவித்தோ அரிசியாகவோ உணவாகக் கொள்வர். பக்குவப்படுத்தப்பட்ட உணவரிசி ''அல்லி அரும்பதம்' 3 எனப்படும். அஃதாவது 'அல்லிச் சோறு—அல்லி உணவு' எனலாம்.

தமிழகத்தார் ஆண்டில் மாறும் ஆறு பருவங்களில் கால மாற்றத்திற்கு ஏற்ப உணவு வகைகளையும் மாற்றிக் கொள்வர். கூதிர்ப் பருவம் மாறி முன்பனிப் பருவத்தில் இந்த 'அல்லி அரிசி'யை உணவாகக் கொள்வதைச் சீவக சிந்தாமணியால் அறியலாம். இப்பழக்கம் வளமான இல்லத்தாரிடையே உள்ளதாகக் கூறப்படுவதால் அல்லி உணவு எளியவரோடு செல்வராலும் விரும்பப்பட்ட ஒன்றாக அறிய முடிகின்றது.

இவ்வரிசி உணவு நெய்ப்போ, கொழுப்போ இல்லாதது. புலன் உணர்ச்சிகளைத் தூண்டாதது. புலன் அடக்கத்திற்குத் துணையாகும்உணவு. இதனால், கைம்பெண்கள் இவ்வுணவை அன்றாட உணவாகவே கொள்வர். கைம்பெண்கள் அணிகலன்

1 ''ஆர்ந்த நீர் விளைந்த வல் விளைவு அரிசி'' — சீவ. சி : 2682
2 சீவ. சி : 355.
3 சீவ. சி : 2682

கள் யாவற்றையும் கழித்தவர் ஆதலின் "*கழிகல மகளிர்*" எனப் படுவர். அன்னார் உப்பு, இனிப்பு நீக்கியே உண்பர். நெய்ப் புள்ளதையும், கொழுப்புள்ளதையும்உண்ணார். எனவே, அவருக்கு ஏற்ற உணவாயிற்று.

"*சிறுவெள் ளாம்பல் அல்லி உண்ணும் கழிகல மகளிர்*"[1] எனப்பட்டனர். வீரத் தலைவர்கள் போரில்பட்டு இறந்ததால் அவர்தம் நகரம் பொலிவு இழந்திருப்பதைப் பாடும் தாயங்கண்ணி யார் என்னும் புலமை அம்மையார் இக்கழிகல மகளிரது உணவைக் காட்டி,

"*கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி*
*அல்லி உணவின் மனைவியோ டினியே*
*புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்*"[2] எனத்

துயரத்துடன் பாடினார்.

துறவியர் இயற்கை உணவுகளையே உண்பர். சமைத்த வற்றை உண்ணார். காய், கனி, கிழங்குகளுடன் இந்த அல்லி உணவை உண்பர்.

சீவகன் துறவை மேற்கொண்டான். அவனுடன் அவனது தாய் விசயையும் துறவை மேற்கொண்டாள். துறவுநிலைக்கேற்ற உணவுகளை ஊர்க்குடிமக்கள் கொடுத்துதவினர். அவற்றில் "அல்லி அரும்பதம்" ஒன்று. அவ்வுணவுப் பட்டியலில் அல்லி உணவே முதலில் உள்ளது.

"*அல்லி அரும்பதமும் அடகும் காயும் குளநெல்லும்*
*நல்ல கொழும்பழனும் கிழங்குந் தந்து நவைதீர்த்தார்க்கு*"[3]

விசயை உரிய கைமாறு செய்ய முடியவில்லையே என்றுஏங்கினாள். இறுதியாகத் தான் அருகக் கடவுளை வழிபட்டதால் கிடைக்கும் பயனையெல்லாம் ஈந்தாளாம்.

இவ்வாறு அல்லி உணவு பல்வகை மக்கட்கும் பயன் பட்டது. உணவென்றால் பக்கத்துணையாகக் கறிவகை வேண்டா

---

1 *புறம்* : 280 : 13, 14
2 *புறம்* : 250 : 1—6
3 *சீவ. சி* : 2602.

வோ? கைம்பெண்களுக்கும் துறவியர்க்கும் வேண்டியதில்லை. மற்றவர்க்கு அவியல் கறி உண்டு. இலைகளை வேகவைத்த கறி அடகுக் கறி எனப்படும். இலைகளை—கீரைகளைப் போலவே, ஆம்பல் பூவின் இதழ்களை அவித்து அவியலாகப் பயன்படுத்தினர் என அறிகின்றோம்.

அடகுக் கறி என்பது ஏழை எளியவர்க்கு எளிதிற் கிடைப்பது. வளம் இல்லாத காலத்துக் குப்பைக் கீரையும் உணவாகும்.

பாரியின் பறம்புநாடு மூவேந்தரால் முற்றுகையிடப்பட்டது. உள்ளே அகப்பட்ட மக்களுக்கு உணவுத் தட்டுப்பாடு நேர்ந்தது. கபிலர் கிளிகளைக்கொண்டு வெளியிலிருந்து,

*"செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு*
*தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி"*[1] மக்களுக்கு உணவூட்டினார். ஆம்பல்மலரை அவித்து அவியலாக்கி உணவுடன் கூட்டி உண்பித்தார். இவ்வாறு ஆம்பல் அவியலாயிற்று.

ஆம்பலொடு குவளையும் இவ்வாறு பயன்படும் போலும். நிலவகைகளில் மருதமும் நெய்தலும் மென்புலம் எனப்படும். குறிஞ்சியும் முல்லையும் வன்புலம் எனப்படும். வன்புலத்து மக்கள் மென்புலத்திற்கு விருந்தாக வந்தால் மென் புலத்தார் படைக்கும் விருந்துகளில் செங்கழுநீர் இடம்பெற்றது.

*"கரும்பிற் கொண்ட தேனும், பெருந்துறை*
*நீர்தரு மகளிர் குற்ற குவளையும்*
*வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்*
*மென்புல வைப்பு*[2] – இதில் விருந்தாகப் படைக்கப்பட்ட பொருள்களாக வாளைமீன், ஆமை இறைச்சி, தேன் ஆகியவை குறிக்கப்படுகின்றன. உணவாகும் இவற்றுடன் குவளை சொல்லப்பட்டுள்ளது. எனவே, ஆம்பல் அவியல் போன்று குவளை மலர் அவியலாக இருக்கலாம். அன்றி உண்டபின் சூட்டியதாகவும் இருக்கலாம். உணவுப் பட்டியலில் உள்ளமையாலும், விருந்து அயரும்(ஊட்டும்) என்றிருப்பதாலும் குவளைக்கறியாகக் கொள்வது பொருந்தும்.

---

1 அகம் : 78: 17, 18.  2 புறம் : 42 : 15—18.

ஆம்பல் குடும்பம் மாந்தர்க்கு உணவானதைப் போன்று விலங்கினங்களுக்கும் பறவைகளுக்கும் உணவாயிற்று.

*"கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை"*[1]

*"வள்ளிதழ்க்*
*கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை"*[2] –என எருமை குளத்தில் இறங்கி விருந்துண்பதைக் காண்கின்றோம்.

ஆம்பல் குடும்பம் தனது அரிசி விதையால் தன் குடும்பத்தைப் பெருக்குகின்றது. விதை அரிசியால் பல உயிர்களை ஊட்டிக் காக்கின்றது. இவற்றால் 'பகுத்து உண்டு பல்லுயிர் ஓம்பும்' இல்லறப் பாங்கிலும் இடம்பெறுகின்றது.

## மக்கள் மலர்.

ஆம்பல் முதலியவை பயன்பட்ட நிலையை ஒருமுறை நோக்கினால் பலருக்கும் பயன்பட்டமை தெரியும். பலரிலும் எளிய மக்கள் அன்றன்று பயன்கொண்டமை புரியும். தின்பண்டமாகவும் சேமிப்பு உணவாகவும் கொண்டமை விளங்கும்.

வளமனையில் வாழ்வோர்க்கும் பருவகால உணவானமை கண்டோம். கைம்பெண்கள், துறவியர் தூய உணவாகக் கொண்டனர். எளியவர் விருந்தினரைப் போற்ற உணவாயிற்று.

உணவானமை போன்று சூடவும் அணியவும் பயன் பட்டது. உழவர் மகளிர், பரதவப் பெண்டிர், இவ்விருவகை ஆடவர் சூடுவதைக் காணமுடிந்தது. எளிய தொழிலாளரும் பயன்படுத்தினர்.

இரும்படித்து உலைக்களத்தில் வினைசெய்யும்,

*"வன்கை வினைஞர்*
*அருவி ஆம்பல் மலைந்த சென்னியர் (தலையினர்)"*[3] –ஆக விளங்கினர்.

---

1 நற் : 260 : 1
2 சிறுபாண் : 41-42.
3 பதிற் : 62 : 16, 17.

பரதவருடைய பிள்ளைகளாகிய

*"கருந்தொழில் கலிமாக்கள்*
*புனல் ஆம்பல் பூச்சூடினர்"*[1]

உணவாகவும் அணியாகவும் உதவியமை போன்று உடையாகவும் உதவிற்று. பல மலர்களுடனும் தனி ஆம்பலாகவும், இலைகளுடனும் ஆடைபோலத் தொடுத்துத் தழை ஆடையாக உடுத்தினர். இல்லறம் பேணும் குலமகளிரும், பரத்தையரும் உடுத்தினர் தாம் உடையாக உடுத்த தழை உடைகளை எண்ணி எண்ணி மகிழ்ந்தனர்.

ஓர் ஊர் சுற்றிப்பரத்தை. இத்தகையவர் 'கொண்டி மகளிர்' எனப்படுவர். தற்காலத்தும் கட்டுப்பாடின்றி அலையும் ஊத்தைப் பெண்களைக் 'கொண்டிமாடு போலச் சுற்றுகிறாள்' என்பர். இவளும் இத்தகைய தழை ஆடை உடுத்தியவள். இவள், கணுக்காலுக்குக் கீழ் உடுத்தியவள்.

இவள்,

நீர்ப்பரப்பிற்குக் கீழே உள்ள குவளை அரும்புகளைப் பறித்தாள். அவ்வரும்புகளை நன்றாக நெருங்கப் பொருந்துமாறு கட்டினாள். நீண்டு தொங்கும் அளவு தழைஉடையாக்கினாள். கால்விளிம்புவரை—வடிம்பு வரை விழுமாறு அடைவாக உடுத்திக்கொண்டாள்.

இதனை,

*"நீர்நனை மேவா நெடுந்தொடர்க் குவளை*
*வடிம்புற அடைச்சி"*[2] நடந்ததைக் கண்டு பின்னே ஓடிய காளையர் பலர்.

குலமகளிர்க்கு இன்ப காலத்திலும் துன்ப காலத்திலும் துணை நிற்பது வெள்ளாம்பல் மலர். குமரியாகக் கும்மென்றிருக்கும் போது தனது காதலன் கண்ணிற்கு விருந்தாக வெள்ளாம்பல் மலர்களாலேயே தழை ஆடை உடுத்துவாள். அவன் இயற்கை யெய்தியபின் அவள் கைம்பெண்ணாவாள். அப்போது உண்ணும் உணவாக வெள்ளாம்பல் அரிசி உதவும்.

---

1 பட். பா: 66 2 மது. கா: 587, 588.

மாறோக்கம் என்றொரு ஊர். அங்கு வாழ்ந்த ஒரு மங்கை தமிழ்ப் புலமையிற் சிறந்து விளங்கினாள். உடல் நிறம் பசலை பாய்ந்திருந்ததால் அவளைப் பசலை என்ற பெயரால் அழைத்தனர். அவளது புலமைச் சிறப்பைக் கொண்டு 'ந' என்னும் அடை கொடுத்து 'நப்பசலை' என்பர். இளமையில் இவள் வெள்ளாம்பல் தழையுடுத்தி ஒப்பனை செய்து கொண்டவள். கணவனார் இயற்கை எய்திவிட்டார். கழிகல மகள் ஆனாள். வெள்ளாம்பல் உணவாகத் துணை செய்தது. இனிக்கத் தக்க பருவத்திலும் உடலில் ஒன்றி உடன் இருந்தது வெள்ளாம்பல். இரங்கத்தக்க கைம்பெண் நிலையிலும் அல்லியில் தோன்றிய புல்லரிசியாக உடன் இருந்தது. அந்த அம்மையார் அந்த வெள்ளாம்பலே 'இரங்கத் தக்கது' என்று பாடினார்.

"*அளிய (இரங்கத்தக்க) தாமே சிறுவெள் ளாம்பல்*
*இளைய மாகத் தழையா யினவே;*
*பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுதுமறுத்து*
*இன்னா வைகல் உண்ணும்*
*அல்லிப் படுஉம் புல்லா யினவே*"[1] –என மாறோக்கத்து

நப்பசலையார் பாடியது அவரது தன்வரலாற்று ஓலமாகலாம். இப்பாட்டு புறப்பாட்டு. ஆகையால், நடந்ததாகவே கொள்ள இடமுண்டு.

இளங் குமரியின் உடல் அணைக்கத் தண்ணென்றிருக்கும். அந்த இன்பக் குளிர்ச்சியும்,

"*ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே*"[2] என ஆம்பல் குளிர்ச்சியாகக் கூறப்பட்டது.

ஆம்பல் பொதுமக்கள் மலர் என்று குறிக்கும் அளவு பல்வகை மக்களிடத்தும் அமைந்தது. இதற்குக் காரணம்,

ஆம்பல் இன மலர்கள் காலமெல்லாம் பூக்கும்;
நீரற்ற காலத்தும் கிழங்கு அறாமல் பூக்கும்;
எல்லா நிலத்திலும் பூக்கும்;

---

1 *புறம் :* 248.
2 *குறுந் :* 84.

வளர்க்கப் படாமல் தானே பூக்கும்;

பறிக்கத் தடையில்லை;

மணமலர்கள் பலவும் விலைக்கு விற்கப்பட

ஆம்பல் இன மலர்கள் விற்பனைக்கு வராமல்

எளிதிற் கிடைப்பன. இஃதும் 'வில்லப் பூ' எனப்படும்.

எனவே ஆம்பல் இனமலர் **மக்கள் மலர்.**

மக்கள் மலரோடு மக்களுக்கு அறிவூட்டவும் பயன்பட்ட மலர். மலர்த் தண்டு நீர் வெள்ளத்தின் ஆழ அளவு நீளமானது.

"*நீரளவே ஆகுமாம் நீராம்பல்*" – இதுபோல ஒருவர்

"*கற்ற நூல் அளவே ஆகும் நுண்ணறிவு*"[1] இது அவ்வை வாய்ப்பட்ட ஆம்பல்.

அறிவுலகத்தில் அறங்கூறி மக்களை வளப்படுத்தும் ஆம்பல் நாட்டு வளத்திற்கும் அறிகுறியாக விளங்கியது. வளையல் அணிந்த பெண்கள் குறாது விட்ட ஆம்பலே கணக்கற்றுப் பூத்திருக்கும். இஃது ஓர் ஊரின்--ஒரு நாட்டின் புதுப் புது வருவாயின் அறிகுறியாகும்.

"*வளைமகள்*

*குறாஅது மலர்ந்த ஆம்பல்*

*அறாஅ யாணர் (புதுவருவாய்) அவர்அகன்றலை நாடே*"[2]

— என நாட்டுவளம் ஆம்பலால் குறிக்கப்பட்டது. இவ்வளம் தாமரையோடு இணைத்துப் பேசப் படுவதையும் காணவேண்டும் நீர்ப்பூக்களில் தாமரை பெரியது; வளமானது. வளமான ஆம்பலும் தாமரை போல மலரக்கூடியது.

"*கன்னி விடியல் கணைக்கால் ஆம்பல்*

*தாமரை போல மலரும் ஊர*"[3] என்று வளமான ஆம்பல் மலர்ச்சி தலைவனது ஊர்க்கும் சிறப்பாயிற்று. இதுவயல் வளம்.

---

1 மூது : 7.
2 பதி : 28 : 23 — 25.
3 ஐங் : 68.

திக்குயானை ஒன்றிற்குக் 'குமுதம்' என்னும் பெயரைக் கண்டோம். 'ஆம்பல்' என்னும் சொல்லும் அதற்குப் பயன்படுத்தப்படும். இவ்வகையில் ஆம்பல் யானைக்கும் பெயராயிற்று. இத்தொடர்பில் யானைமுகக் கடவுளர்க்கும் ஆயிற்று. "ஒரு கோட்டு ஆம்பல் (பிள்ளையார்) ஈன்று" எனக்குற்றாலக்குறவஞ்சி பிள்ளைக் கடவுளுக்கு ஆம்பலைப் பெயராக்கியது.

இத்துணை பெருமைகளைப் பரவலாகப் பெற்ற ஆம்பல் செருக்கில்லாத மலர். பணிவுடைமை பெற்ற மலர். தலைவியைச் சுற்றிப் பணிப்பெண்கள் நிற்பர். தலைவி சினந்தால் பணிப்பெண்கள் கைகுவித்து வணங்கி நிற்பர். இது போன்று குளம் என்னும் இல்லத்தில் தாமரைஎன்னும்தலைவி செம்மாந்திருந்தாள். அவளது செந்நிறம், சினங்கொண்ட குறியாக மாறியது. சினத்தால் ஒரு பெருமூச்சு விட்டாள். அம்மூச்சு எனும் காற்றால் பக்கத்தில் இருந்த ஆம்பல் தலை சாய்த்தது. குவிந்திருந்த ஆம்பல் கைகுவித்தது போன்று இருந்தது. காற்றால் அசைந்து தாழ்ந்தது பணிந்து இறைஞ்சியதுபோன்றுகற்பனைசெய்யப்பட்டது. இக்கற்பனையைப் பெரும்புலவர் பரணர் தம் சொற்களால் இவ்வாறு வடித்துள்ளார்:

*"சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென அதனெதிர்*
*மடத்தகை ஆயம் (தோழிமார்) கைதொழு தாங்கு*
*உறுகால் (காற்று) ஒற்ற ஒல்கி ஆம்பல்*
*தாமரைக்கு இறைஞ்சும் தண்டுறை"* 1

மக்கள் மலராம் ஆம்பல் இவ்வாறு பணிவுடைமை காட்டி மக்கள் பணிவுடைமை கொள்ள வேண்டியதையும் குறிக்கின்றது.

ஆம்பலின் வரலாற்றைத் தொகுத்தால்,

ஆம்பல் நீர்ப் பூ.

நீர்வளங்கொண்ட மருத நிலப் பூ.

நீருள்ள பருவமெல்லாம் பூக்குமாயினும்
கார்காலப் பூ.

தன்னில்வெண்மையும் செம்மையுமாக இருவகைகொண்டது.

தன் குடும்பத்தாரின் நீல நிறங்கொண்டது.

இலக்கியங்களில் கண்ணிற்கு உவமையானது.

---

1 *நற்* : 300; 1 — 4.

சூடும் பூ; சூட்டும் பூ.

அல்லி அரிசி என உணவாகும் பூ.

ஆம்பல் அவியலாக இதழும் உணவாகும் பூ.

எளிய மக்களுக்கு உதவும் பூ.

இசையிலும் இடம் பெற்றது.

கூத்திலும் இடம் பெற்றது.

அல்லிப் பாவையாய் அழகிலும் இடம்பெற்றது.

அனைத்து வகையிலும் பங்கு கொள்ளும் இதனை 'மக்கள் மலர்' எனல் பொருந்தும்

மக்கள் வாழ்வில் வாழ்வாங்கு வாழ்பவரே தெய்வமாகிறார் பல வகையிலும் வாழ்வாங்கு வாழ்ந்த மக்கள் மலரைத் தொடர்ந்து தெய்வ மலரைக் காணலாம்.

# தெய்வ மலர்,

## தாமரைப்பூ

### மேற்கில் சோம்பல்;
### கிழக்கில் மேம்பாடு.

*"பாவிற்கு வள்ளுவர் வெண்பா"*

—எனக்காட்ட,

*"பூவிற்குத் தாமரையே"* 1

— என்று பெருமைசேர்த்தார் பெருந்தேவனார்.

*"நிலத்துக்கு அணியென்ப நெல்லுங் கரும்பும்"*
என்றால்,

*"குளத்துக் கணியென்ப தாமரை"* 2

— என விளம்பினார் விளம்பிநாகனார்,

---

1 திருவள்ளுவமாலை.
2 நான் க: 11

*"நாவிற்கு அருங்கலம் நமச்சிவாயவே"*
—என முடிக்க,

*"பூவிற்கு அருங்கலம் பொங்கு தாமரை"*[1]
—என நா விரித்தார் நாவுக்கரையர்.

*"பா எனப்படுவ உன்பாட்டு"*
— என மாணிக்கவாசகரைப் போற்ற

*"பூ எனப்படுவது பொறிவாழ் பூவே"*[2]
—எனச் சான்று சாற்றினார் சிவப்பிரகாசர்.

*"தமிழில் அகத்தியம்"*
கற்று,

*"தே அலரில் அம்போருகம்"*[3]
—எனக் கற்பித்தார் குருபாததாதர்.

*"போதினுள் மிக்க பங்கயமாம்"*[4] ஆம்; தாமரைப்பூ, பூ உலகத்தில் தனிமுடி சூடித் திகழ்வது. தனி முடிக்குரிய தகுதி கொண்டது. பூக்களில் பெரியது. இதழ்களிலும் பெரியது. எழில் வாய்ந்தது; நிறைந்து விளங்குவது. இனிய மெல்லிய மணம் கொண்டது. உலக மலர்களில் ஒன்று.

மேலை நாட்டிலும் ஏற்றுங்கொண்டது. கீழை நாடுகளிலும் போற்றப்படுவது. ஆழ்ந்து நோக்கினால் மேலை நாடுகளை விடக் கீழை நாடுகளில் அவற்றுள்ளும் இந்திய நாட்டில் அதனுள்ளும் தமிழ்நாட்டில் சிறப்பிடம் பெற்றது.

இதற்கு அமைந்த உலகப் பெயர்களே ஆங்காங்கு அது பெற்றுள்ள தகவைக் காட்டுவதாகும். ஐரோப்பிய மொழியில் இதற்கு 'உலோட்டசு' —('*LOTUS*') என்று பெயர். இச்சொல் கிரேக்கச் சொல். இதன் மூலப்பொருள் கொண்டு இம்மலர் அத்துணைத் தகுதியுடையது என்று சொல்ல இயலாது. இப்பெயர் பல வேறு வகைப்பட்ட செடியினங்களின் பொதுப்பெயர். சிறப்பாகத் தாமரையைக் குறிக்கும்-

'ஓடிசே' என்பது புகழ்பெற்ற கிரேக்கக் காப்பியம். இஃது 'ஓடிச்சு' என்னும் பெரு வீரனது பயணவரலாற்றைக் குறிப்பது. அவனது பயணத்தில் அவனை எதிர்ப்பட்ட மக்கள் தாமரை

1 அப். தே: நமச்சிவாயப் பதிகம்: 2
2 நால்வர் நான்மணிமாலை: 40
3 குமரேச சதகம்: 24 : 3, 2.
4 கந்தபுராணம்: வ. திருமணம்: 218

மேல் வாழ்ந்தனராம். அவர்கள் தாமரைப் பழம் ஒன்றை உணவாகக் கொள்பவர்கள். அதனால், 'லோட்டோபாகி' — (*LOTOPHAGI*) எனப்பட்டனர். இச்சொல்லுக்குத் 'தாமரை உண்பிகள்' என்று பொருள். இவர்களது உணவாகிய பழம் ஒரு தனித்தன்மை கொண்டது. வீட்டாருடனும், நண்பருடனும் தொடர்பின்றிச் சோம்பலில் செம்மாந்திருக்க விரும்புவோர் இப் பழத்தையோ இதிலிருந்து வடிக்கப்படும் குடி நீரையோ அருந்துவர். அதன் வழி உருப்பெற்ற 'உலோட்டசு' என்னும் சொல்லுக்குச் 'சோம்பலில் செம்மாக்க வைப்பது' என்னும் பொருள் நேர்ந்தது. இவ்வகையில் பெயர்பெற்ற மேலைநாட்டுத் தாமரை, நீரில் பூப்பதாகச் மட்டுமன்றி மரத்திலும் செடியிலும் மலர்வதாகவும் அமைந்தது. இம்மலருக்குப் பெருஞ்சிறப்பு உண்டு. என்றாலும், அதன் பெயர்க்காரணம் மதிப்புடையதாக இல்லை.

## சொல்லில் தாமரை

தமிழில் தாமரையைக் குறிக்கப் பல சொற்கள் உள்ளன. பெரும் வழக்காக உள்ள தமிழ்ச்சொற்கள் முளரி, முண்டகம், தாமரை என்பன.

இதன் காம்பு தண்டு எனப்படும். தண்டில் மலர்ப் பகுதி தொடங்கும் இடத்திலும் புறஇதழ்களிலும் சொரசொரப்புள்ள சினைப்பு போன்ற சிறு முள் உருவங்கள் உள. அடித்தண்டு (அரை) முள்ளைப் பெற்றதால்,

"*முள் அரைத் தாமரை*"[1] எனப்படும்.

முள்ளை உடையதால் 'முளரி' என்று பெயர். 'முள்ளி' என்றும் கூறுவர், 'முள்ளி' என்னும் பெயரில் 'கழிமுள்ளி' என்னும் வேறொரு பூ உண்டு. ஆகையால், 'முள்ளி' எனும் பெயர் தாமரைக்கே உரியது ஆகாது. அதனால் அடைமொழியாக,

"*முள் + தாள் + தாமரை* "*முட்டாட்டாமரை*"[2] எனப்பட்டது.

---

1 *சிறுபாண்* : 183 : *பெரும்பாண்* : 114

2 "*முட்டாட்டாமரை துஞ்சி*" —*திருமுருகு* : 78.

முள் என்னும் அடிப்படையிலே 'முண்டகம்' என்று ஒரு பெயர் உண்டு.[1] தாழையும் முண்டகம் என்று குறிக்கப்படுவதால்[2] இஃதும் தாமரைக்கே உரிய பெயராக அமையாது.

எனவே, 'தாமரை' என்னும் சொல்லே இதற்கு உரிய சொல்; பெயர்; காரணத்தோடு பெற்ற பெயர். வழங்கப்படும் பெயர்-இச்சொல்லின் மூலப்பொருள் இப்பூவின் வரலாற்றையும் சிறப்பையும் ஆம்பலைப் போன்று உணர்த்துகின்றது.

இப்பெயருடன் ஒட்டிய சொற்களில் 'வட்டத்தாமரை' என்பது ஒரு வகை மரம். 'வானத் தாமரை' (ஆகாயத் தாமரை) என்பது ஒரு வகை நீர்ப் பூண்டு. வடபுலத்தில் இப்படி ஒரு நீர்ச்செடி உண்டு. இச் செடியைக்கொண்டு அண்மையில் 'எரிவளி' (GAS) விளைவிக்கலாம் எனக் கண்டுள்ளனர். இதன் மலர் பெரும் சிறப்பிற்கு உரியது அன்று.

பொதுவில் இது நீர்ப் பூ.
தமிழகத்தில் இது நீர்ப் பூவே.

தாமரை என்னும் பெயர் தமிழில் நீர்த் தொடர்பில் அமைந்ததாகும். 'ஆம்' என்னும் சொல்லிற்கு 'நீர்' என்னும் பொருளை முன்னரும் கண்டோம். இந்த 'ஆம்' என்னும் சொல் மாந்தரது வாய் வழக்கத்தில் 'தாம்' என்று வளர்ச்சியுறும்.

ஆள்வினை = முயற்சி; தாள் ஆண்மையும், முயற்சி. ஆள் —தாள் இயைபு உடையவை.

ஆழ் நீர் — தாழ் நீர். இவற்றில் ஆழ் — தாழ் வளர்ச்சி தெரியும். யாய்—ஆய்—தாய் வளர்ச்சியையும் இவ்வகையில்தொடர்பு படுத்திப் பார்க்கலாம்.

இம்முறையாக,

ஆள் — தாள்
ஆழ் — தாழ்

---

1 "முள்ளுடை மூலம் யாவும் முண்டகம் என்றே சாற்றும்"—சூடா. நி: மரப் பெயர் : 68.

2 "தாமரைப் பெயரும் தாழையும் கள்ளும்
முள்ளுடை முள்ளியும் நெற்றியும் முண்டகம்"

—பிங். நி : 3977

ஆய் — தாய் மேலும்,

ஆடு (வலிமை) — தாடு (வலிமை; யாழ்ப்பாணத்து மாணிப்பா அகராதி)

ஆரம் (முத்துமாலை) — தாரம் (முத்து : யாழ்ப்பாணத்து மாணிப்பா அகராதி)

ஆழி (கடல்) — தாழி (கடல் : யாழ்ப்பாணத்து மாணிப்பா அகராதி)

என்பன,

ஆம் (நீர்) — தாம் (நீர்)-என வளர்ந்தமைக்கு ஒப்புக் காட்டுபவை. 'தாம்' என்பது 'நீர்' என்னும் பொருளில் அருகி வழங்கும். ஆற்றில் நீர் தடைப்படாமல் ஓடும் பிரிவிற்குத் தாம் + போகி = தாம்போகி [தாம்பு + போகு + இ] என்று பெயர்.

இந்தத் 'தாம்' அம் விகுதி பெற்றுத் 'தாமம்' என்றாகும். 'தாமம்' என்னும் உருவம் 'நீர்' என்று பொருள்படுவதைப் பழங்கால வழக்கெனப் பழந்தமிழ்ச்சொற்கள் பயிலும் யாழ்ப்பாணத்து அகர முதலி காட்டுகின்றது. இன்றும் யாழ்ப்பாணத்தில் நாட்டுப் புற வழக்கு என்பர்.

தாமரையை மலர்த்துபவன் என்பதால் கதிரவனுக்குத் 'தாமன்' என்று ஒரு பெயர். கங்கைகொண்டசோழபுரத்து கோவில் உள் மண்டபத்தில் கதிரவன் தேர்ச்சிற்பம் என்றுள்ளது. அதில், கதிரவன் தாமரை வடிவத்தில் செதுக்கப்பட்டுள்ளான்,

"*தாமன் மேல் வரவா*"[1] -எனக் கதிரவனைத் தாமன் என்று வில்லிபுத்தூரார் ஆட்சி காட்டுகின்றது.

காம் — காமம் — காமர் — காமரு—என்றானது போன்று

ஆம் — தாம் — தாமம் — தாமர் — தாமரை என்றா யிற்று. இவ்வாறு ஐ இறுதியைப் பெற்றமையை,

"*ஐ (தாமரை) அம் (வெள்ளம்) பல் (ஆம்பல்)*

*என வரூஉம் இறுதி*"[2] – என்னும் தொல்காப்பியத் தாலும் உணரலாம்,

---

1 **வில்லி : முதற்போர் : 42**

2 **தொல் : எழுத்து : 394.**

இச்சொல் வரலாறு, தாமரை நீரில் தோன்றிய காரணத்தால் பெற்றபெயர் என்பதைச் சொல்லுகின்றது. வடமொழிலும் அப்பு = நீர். இப்பொருள்கொண்டு தாமரைக்கு "அம்போருகம்" என்றொருபெயர்.

இதற்குப் பக்கச் சான்றாக தாமரை மொட்டு வடிவத்தில் கட்டப்படும் தலைமுடி ஒன்று "தாமம்"[1] – எனப்படுவதைக் கொள்ளலாம்.

இத் தாமம் 'தாம்பு' என்று மருவி நீரைக் குறிக்கும், இத் தொடர்பில் தாமரை 'தாம்பிரை' என வழங்கப்பட்டதுண்டு. இதனை,

"சிவந்தன தாம்பிரைச் செங்கண்"[2] -எனக் கம்பர் அமைத்துப் பாடினார்.

மேலும், நீர்வளம் மிக்க நிலப்பகுதி மருதம் எனப்படும் அன்றோ? மருத நிலத்து ஊர்ப்பெயர்களைப் பட்டியலிடும்[3] நிகண்டுகள்' தாமம்' என்னும்பெயரையும் குறிக்கின்றன. மற்றொரு தொடர்பில் ஒன்றை இங்கு காண்பது பொருந்தும். ஆம்பல் தாமரையைக் காட்டிலும் அதிகப் பரப்பில் மிகப்பரவலாக, மிகுந்த எண்ணிக்கையில் பல்குவது. எனவே, நேரடியாகவே 'ஆம்' என்னும் நீர்ப்பெயர் கொண்டு 'ஆம்பல்' என்று ஆகியது.

இவ்வாறு 'ஆம்' என்னும் வேர்ச்சொல்லின் அடியாக, ஆம்–தாம்–தாமம்–தாமர்–தாமரை மலர்ந்தது.

## ஒன்றில் நூறு

அலர்வதால் மலருக்கு 'அலரி' என்றொரு பெயர் அன்றோ? ஆனால், கணவீரம் என்னும் செவ்வலரிக்கு 'அலரி' என்னும் சொல் வழக்காகிவிட்டது. அலர்வதில் பேரழகைப் பெற்றுள்ள தாமரை, இதழ்களில் மிகு எண்ணிக்கை கொண்டது. ஒருதாமரை மலரை எடுத்துப் புற இதழ்களை நீக்கிவிட்டு அகவிதழ்களை

1 "தாமம் முகுடம் பதுமம் கோடகம்
கிம்புரி முடியுறுப்பு ஐந்தெனக் கிளப்பர்"–சேந், தி : செ. வ, பெயர்,
2 கம்ப.வருணனை வழிவேண்டு படலம்; 7
3 சூடா, நி: இடப்பெயர்: 40

எண்ணத் தொடங்கினால் இருபதுக்குக் குறையாத பெரிய இதழ்களை முதற்சுற்று அடுக்குகளில் காணலாம். அடுத்துப் படிப்படியாகச் சிறிதாகும் இதழ்களை எண்பதிற்கு மேல் காணலாம். எனவே தாமரை நூற்றுக்குக் குறையாத இதழ்களைக்கொண்டது. இதனால்,

*''நூற்றிதழ் அலரி''* (புற : 27 : 2)

*''நூற்றிதழ்த் தாமரை''* (ஐங் : 20)—என இலக்கியங்களில் *''நூற்றிதழ் அலரி''* எனப்பட்டது.

தாமரையின் அழகுப் பிறப்பிடம் இதழ்கள்தாம். அதன் வண்ணமும் வடிவமும் மென்மையும் கூடி, கொள்ளை அழகைக் கொட்டுகின்றன. ஒவ்வோரிதழாகப் பார்க்கின்றார் பாவேந்தர் பாரதிதாசனார்.

*''ஓரிதழ் குழந்தைக் கன்னம்;*
*ஓரிதழ் விழியை ஒக்கும்;*
*ஓரிதழ் தன்ம ணாளன்*
*உருவினைக் கண்டு கண்டு*
*பூரிக்கும் உதடு; மற்றும்*
*ஓரிதழ் பொல்லார் நெஞ்சம்*
*வாரித்தான் தரச்சி வந்த*
*உள்ளங்கை யாம்மற் றொன்று''* [1]

—எனப் பாடிக் களிக்கின்றார்.

இதழின் நிறங்கொண்டே தாமரை, செந்தாமரை வெண்டாமரை என இருவகைப் பெயரைப் பெற்றது. மிகப் பழங்காலத்தில் செந்தாமரையின் இதழ்கள் அரக்கு போன்று கருஞ்சிவப்பு நிறத்தில் விளங்கின. கருஞ்சிவப்பு இதழ் ஒன்று அரக்கில் தோய்த்த அகங்கை போன்றுள்ளதைச் சிறுபாணாற்றுப்படை,

*'' ... ... ... ... ... ... ... .... தாமரை*
*ஆசில் அங்கை அரக்குத் தோய்ந்தன்ன*
*சேயிதழ்''* [2] *என்றது.*

கலித்தொகை,

*'' .... ... .... ... ... ... ... தாமரை*
*அல்லிசேர் ஆயிதழ் அரக்குத் தோய்ந்தவை போல்''* [3]

---

1 அழ. சி : செந்தாமரை : 7
2 சிறுபாண் 73 — 75. 3 கலி : 13 : 11, 12.

என்றது. இப் பழந்தமிழ் நூற்கருத்துகளைக் கொண்டு செந்தாமரை என்பது கருஞ்சிவப்பு நிறத்தில் இருந்ததை அறியலாம்.

"புலி நா அன்ன புல்லிதழ் (மெல்லியஇதழ்கள்) தாமரை"[1] என்னும் தண்டியலங்கார மேற்கோள் பாட்டால் கருஞ்சிவப்பு சற்று வெளிர் நிறம் ஆகியதைக் காணலாம். காலப்போக்கில் இயற்கையில் நேர்ந்த இனக்கலப்பால் இளஞ்சிவப்பு நிறம் தோன்றியது. தற்காலத்தில் இந்த இளஞ்சிவப்பு இதழ்களையே செந்தாமரையாகக் காண்கின்றோம்.

இதன் வெண்மையான இதழ் நல்ல வெண்மை என்பதை முயற்காதிற்கு ஒப்பிட்டு

"முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் (மெல்லியஇதழ்) புரையும்
நெடுஞ்செவிக் குறுமுயல்"[2] எனப்பட்டது.

தமிழகத்தைப் பொருத்த அளவில் செந்தாமரை, வெண்டாமரை, என்னும் இரு வண்ணத் தாமரைகளே உள்ளன. வடபுலத்தில் நீலத்தாமரை உண்டு. அவ்விலக்கியங்களிலும் நீலத்தாமரை குறிக்கப்படுகின்றது. இங்கு நீலத்தாமரை கருங்குவளையைக் குறிக்கும்.

மெல்லியளாகிய சகுந்தலையை அவளது தந்தையார் தவப்பணியில் ஈடுபடுத்தியது சற்றுக் கடுமையானதாகப் பேசப்படும்போது,

"நீலத் தாமரையின் மெல்லிதழால் வேள்விச் சுள்ளி
களைச் சேமிக்க முயல்வதைப் போல இம்மெல்லியலைத்
தவப்பணி செய்விக்க (காசிபர்) விரும்பியதாகும்"[3]

—எனப்பட்டது. இதுகொண்டும் இது போன்ற வண்ணனைகள் கொண்டும் வடபுலத்தில் நீல நிறத் தாமரை நிலப்பூவாக இருந்தமை அறிய முடிகின்றது. மேலை நாட்டிலோ மரங்களிலும் செடிகளிலும் அனைத்து வண்ணங்களிலும் தாமரை உண்டு.

தமிழகத்தில் இரு வண்ணங்களே தாமரைக்கு அமைந்துள்ளமையில் ஒரு தனிக்கருத்து இருக்கிறது.

---

1 தண்டி : 90 மேற்கோள்.
2 பெரும்பாண் : 114, 115.
3 சாகுந்தலம் : 1 : 2

நீர்ப்பூவாகிய தாமரையின் பிறப்பிடம் சேறு. சேறு என்றால் நாறும் உணர்வு பலருக்கு வருவதுண்டு. சேற்றில் உழைப்பவன் வறுமைக் காற்றில் அடிபட்டுச் சோர்பவன். அவன் உண்மையாகப் போற்றப்படுகிறான் என்று கூற முடியாது. ஆனால், சேறுதான் சோறு தருகின்றது. "சேற்றில் முளைத்த செந்தாமரை" என்னும் தொடரில் 'தாழ்ந்த இடத்தில் பிறந்தும் உயர்ந்த பெருமை உடையது' என்னும் கருத்து இருப்பதுபோன்று படும். ஆனால், பண்டைச் சான்றோர் நற்குடிப்பிறப்பிற்கு உவமை கூறிய பாங்கு மகிழ்தற்குரியது,

*"சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்*
*நூற்றிதழ் அலரி நிரைகண் டன்ன*
*வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து*
*வீற்றிருந்தோர்"*[1] —என்று சேற்றுப் பிறப்பு

நற்குடிப் பிறப்பு என்று பாடிச் சேற்றை நற்குடி என்றனர். இதனைச் சேறு தாமரையாற் பெற்ற பேறு என்பதோடு தாமரை சேற்றால் பெற்ற பெருமை என்றும் கூறலாம்.

நீர்ப்பூவாகிய தாமரை சேறு இன்றி இல்லை. சேற்றில் பூவாத தாமரை என்றால் அது தாமரைப் பூவைக் குறிக்காது. தா +மரை என்று பிரிபட்டுத் தாவுகின்ற மானைக் குறிக்கும். அன்றித் திருமூலர்,

*"சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரை*
*பூவின்றிச் சூடான் புரிசடை யோனே"*[2] என்று பாடியது

போன்று தத்துவப்பொருளைத் தரும். அத்துடன் தலையில் உள்ள கங்கையைக் குறிக்கும்.

## கதவு திறக்கும் காதலன்

ஞாயிற்றின் ஒளிதான் ஞாலத்தின் உயிர். அவன் வானத்தில் ஒளி திறந்து வழி திறந்தால்தான் உயிர்கள் விழி திறக்கும். இது பொது என்றாலும்,

---

1 *புறம்* : 27, 1-4.        2 *திருமந்* : 2585.

"செந்தா மரைஇரவி சேர்உதயம் பார்க்குமே" 1

என்றபடி தாமரையை மலர்த்துபவன் கதிரவனேஎன்பது வழக்கு. இதனால் அவனுக்குத் 'தாமரைக் காதலன்', 'தாமரைக் கணவன்' 'தாமரை நாதன்' 'தாமரை நாயகன்' எனப் பெயர்கள் அமைந்தன. அவன் தனது 'கதிர்கள் என்னும் கைகளால் தாமரையின் இதழ்க்கதவைத் திறக்கின்றான்' என்றெல்லாம் பாடினர்.

காலையில் தாமரையின் இதழாகிய கதவைத் திறந்த கதிரவன் மாலையில் அடைக்கவேண்டாவா? மாணிக்கவாசகர்,

"பல்கதிரோன் அடைத்த
தாமரை இல்லின் இதழ்க் கதவம்" 2 காட்டுகின்றார்.

கதிரவனின் இந்தத் திறப்புவிழா, அடைப்பு விழா விளையாட்டு எப்போதும் செல்லாது. பனிப்படலம் மூடிக் கொண்டால் நடக்காது. இதனை வைத்துத் தாமரையின் ஒரு தன்மை உணர்த்தப்படுகின்றது.

குமரிப் பெண்ணும், கிணற்று நீரும் ஒருவகையில் இயற்கைக்கு மாறுபட்டவர்கள். கோடை வெப்பத்தில் குளிர்ச்சியையும், பனிக்காலத்தில் வெதுவெதுப்பான வெப்பத்தையும் வழங்குபவர்கள். தாமரையையும் இவ்வகையிற் கூறலாம். மோசிக் கொற்றன் என்னும் புலவன் ஒரு காரணங்காட்டி இதனைக் கூறினான்:

'கதிரவன் தாமரையை மலர்த்தித் தனது வெப்பத்தை அதனுள் பெய்தான். பனி வந்ததால் அவன் மறைக்கப்பட, தாமரை கூம்பியது. கதிரவன் வைத்த வெப்பம் உள்ளே பொதிந்துள்ளது. இந்நிலையில் எடுத்து ஒற்றினால் பனிக்குளிர்க்கு வெது வெதுப்பாக இருக்கும். இதுபோன்றவள் தலைவி' என்பதை,

"பனியே
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி; ஐயென
அலங்கு வெயில் பொதிந்த தாமரை
உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே" 3 —எனப்பாடினார். இதில் அறிவியல் கருத்தும் உளது.

---

1 நீதிவெண்பா : 96  2 திருக்கோ : 164  3 குறு: 376 3-6.

இதுபோன்று தாமரையைப் பற்றிய வண்ணனைகள் இல்லாத இலக்கியமே இல்லை எனலாம். இவ்வண்ணனைகளால் சில உண்மைகளும் வெளிப்படுகின்றன.

சீவக சிந்தாமணியில் ஒரு வண்ணனை. அதில் தாமரை *"சொரி பனி முருக்க நைந்தும்"* என்றுள்ளது. இது பனியால் தாமரை கருகும் என்ற கருத்தைக் காட்டுகிறது.

தாமரை வண்ணனை இன்னும் சிறிது வளர்ந்தது மணிமேகலைக் காப்பியத்தில். இரண்டு அன்னங்கள்—சேவலும் பேடையும் குலவி விளையாடின. பேடை, பக்கத்தில் அலர்ந்திருந்த தாமரைமேல் ஏறிக்கொண்டது. மாலை நேரம். கதிரவன் மறைந்தான்; தாமரை கூம்பியது.

*"அன்னச் சேவல் அயர்ந்து விளையாடிய*
*தன்னுறு பேடையைத் தாமரை அடக்க"*

அந்தச் சேவல், மூடிய தாமரையைப்

*"பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு*
*ஓங்கிருந் தெங்கின் உயர்மடல் ஏ"*[1] றிற்று.

இவ்வண்ணனையால் தாமரை மிகப் பெரிய மலர் என்னும் கருத்து தெரிகின்றது. இன்றும் நாம் கண்ணால் காணும் தாமரையின் அளவு நமக்குத் தெரிகின்றது. முற்காலத்தில் இன்னும் வளமான தாமரை இருந்திருப்பினும் எத்துணை அளவு பெரிதாக இருக்கலாம் என்றும் நாம் அளவிட்டுக்கொள்ள முடியும். ஆனால், இன்று அன்னப்பறவை இல்லை. அதுபற்றி நமக்கு விவரம் தெரியாது. வாத்து வடிவம் என்பர். இந்த வண்ணனை கொண்டு பார்த்தால் பெரிய தாமரை கொள்ளும் அளவில் அன்னம் ஒரு சிறு பறவையாக இருந்திருக்கும் என்ற கருத்தைப் பெற முடிகின்றது.

தாமரையைப் பற்றிய வண்ணனை கற்பனையாகவும் கதையாகவும் பெருகிய அளவை எல்லையிடவே இயலாது. புராணங்கள் கதைத்திருப்பவை எந்த அளவில் மிகை என்று அறிகின்றோம்.

---

1 மணி ; 5 : 123—126

அவற்றிலும் திருமாலிய மதத்தார் தாமே முழுக் குத்தகை யாக்கிக் கொண்டுள்ளனர் எனலாம். தாமரையின் தோற்றமே திருமாலால்தான் என்பர். 'நீர் தோன்றி நிலந் தோன்றாத போதே அந்த வெள்ளத்தின் நடுவில் மலர்ந்தது தாமரை'[1] என்றனர். அதனை "நின்னில் தோன்றிய நிறை இதழ்த் தாமரை"[2] என்றனர். திருமாலிடம் எங்கு தோன்றியதாம். "உந்தி எழுந்த உருவ மலர்". திருமாலினது கொப்பூழ்க் கொடிதான் முதன் முதல் தோன்றிய தாமரையின் தண்டு. அதனாலேயே திருமாலுக்கு வடமொழியில் "பதுமநாபன்" என்றொரு பெயர். அது முளைத்து மலர்ந்தபோதே அதனில் படைப்புக் கடவுளாம் நான்முகனும் தோன்றினான்.

பெரியாழ்வார்,

*"உந்தி எழுந்த உருவ மலர்தன்னில்*
*சந்தச் சதுமுகன் தன்னைப் படைத்தனன்"*[3] —என்று

பாடினார். திருமாலினது முகம் செந்தாமரை. முகம் மட்டுமோ?

*"அடையிறந்து அவிழ்ந்த வள்ளிதழ்த் தாமரை*
*அடியும் கையும் கண்ணும் வாயும்"*[4] ஆயிற்று.

'தாமரைக் கண்ணன்' என்பதொரு சிறப்புப் பெயர். அவன் உடலால் கருநீல நிறத்தன். உறுப்புகள் யாவும் தாமரை போன்றவை இக்காட்சி "கார்க்கடல் கமலம் பூத்தது"[5] போன்றிருந்ததாம். உறுப்பெல்லாம் தாமரை தாமரை தாமரையாகவே மண்டினமையால் "கமலக் காடன்ன கண்ணன்"[6] என்றனர்.

---

1 *"மாநிலம் இயலா முதன்முறை அமையத்து*
*நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய*
*வாய்மொழி மகனொடு மலர்ந்த*
*தாமப் பொகுட்டுநின் நேமி நிழலே"* —பரி : 3 : 91—94

2 பரி : 4 : 60

3 பெரி. திரு : பின்னைமணாளன் : 8

4 பரி : 13 : 50, 51

5 கம்ப இலங்கை காண் படலம் : 28

6 திருவாய் : 9 : 7 : 1

இப்படி முழுக்க முழுக்கத் தாமரையைத் திருமாலியத்தார் முழுக்குத்தகையாக்கிக் கொண்டதைச் சைவத்தார் பார்த்தனர். அவரையே சிவனுக்குள் அடக்கிவிட்டால் குத்தகைக்கு மேல் குத்தகையாகிவிடும் அன்றோ? அதற்கு அன்னார் வடித்துக் கொண்ட கதை: சிவனைத் திருமால் வழிபட்டாராம்.

*"திகழும் மாலவன் ஆயிரம் மலரால்*
*ஏத்துவான் ஒரு நீள்மலர் குறைய,*
*புகழினால் அவன்கண் இடந்திடலும்*
*புரிந்து சக்கரம் கொடுத்"*[1] —தாராம். திருமால் சிவனை வழிபட எடுத்த ஆயிரம் மலர்களும் தாமரை மலர்கள். ஒரு தாமரை குறைந்தது. தனது கண்ணும் தாமரையாகையால் அதனையே தோண்டி எடுத்து வழிபட்டார். அதற்குப் பரிசாகப் பெற்றதுதான் அவரது கையிலுள்ள ஆழிப்படை எனப்பட்டது. இக்கதையை அப்பரும் சுந்தரரும் மாணிக்கவாசகரும் வேறு பல சைவச் சான்றோரும் பன்னிப் பன்னிப் பாடினர்; பேசினர். அவருக்கும் தாமரையை உரித்தாக்கி,

*"புண்டரிகத்து (வெண்டாமரையில்) உள்ளாய் போற்றி"*
*"முடித்தாமரை அணிந்த மூர்த்தி போலும்"*
—என்றெல்லாம்திருநாவுக்கரசர் பாட, மாணிக்கவாசகர்,

*"செந்தாமரைக் காடு அனைய மேனி"*[2] —எனத் தாமரைக் காடு ஆக்கினார். திருமாலும் தாமரைக்காடு; சிவபெருமானும் தாமரைக்காடு. சிவபெருமானது இளங்குமரன் திருமுருகனும்

*"திருவின் அலர் சோதி இளஞாயிறென*
*முகை அவிழ்ந்து ஏடு விரி தாமரைக்காடு"*[3]

## கால் பிடித்துக் கைப்பிடியாய் மனம் பிடித்த மலர்க்கோவில்

முருகன் பிறப்பிடமே ஆறு தாமரை மலர்கள். பரிபாடல் *"நளினத்துப் பிறவியை"*[4] என்றும் *"பயந்தோர் என்ப பதுமத்துப்*

1 சுந். தே: ஆவடுதுறை: 3.
2 திருவா: திருச்சதகம்: 26.
3 முத். பி. த: 58.
4 பரி: 5: 12.

*பாயல்*"[1] என்றும் இசைக்கின்றது. "தாமரை மலர்கள் ஆறு அதில் தவழ்ந்திடும் குழந்தைகள் ஆறு" என இன்றும் 'சீர்காழி யின் இன்னிசையில் கேட்கின்றோம். முருகனது திருவடி,

*"தாமரை புரையும் காமர் சேவடி"*[2].

அவன் உடலால் செம்மேனித் தாமரையான். எல்லாம் செந்தாமரையாக இவனும் தாமரைக் காடானான்.

தாமரையின் பிறப்புரிமை கொண்டவன் நான்முகன். *"பூவினுட் பிறந்தோன்"*[3] என்பர். *"பூவன்"*[4] —என்றே அவனுக்கொரு சிறப்புப் பெயர்.

அன்னைக் கடவுளரில் திருமகள் *"தாமரையினாள்"*[5] செந்தாமரைமேல் வீற்றிருப்பவள். செல்வத்திற்குரிய கடவுளா தலின் வளமான செம்மைத் தாமரை கொள்ளப்பட்டது. கல்விக் குரிய கலைமகள்,

*"வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்"*[6]

*"தவளத் தாமரை தாது ஆர் கோவில்"*[7] —அவளுடையது.

மாற்று மதங்களாகிய புத்தத்திலும் சமணத்திலும் தாமரை கொள்ளப்பட்டது. முருகனும் நான்முகனும் தாமரையில் பிறந்ததை மறவாத புத்தத்தார் புத்தரையும் தாமரைப் பீடிகையிலேயே கண்டனர். அதனைப் "பதும பீடிகை" என்றனர்.

*"அடித்தாமரை மலரை அன்போடுங் சென்று*
*பிடித்தார் பிறவார் பெயர்ந்து"*[8] —என அவரடியையும் தாமரையாகப் போற்றினர். கடவுளரது திருவடிகள் செந்தாமரை யாகக் கொள்ளப்படுதல் பொதுவில் இயல்பானதாகும்

இன்ப நுகர்ச்சிகளில் நாட்டங் கொள்ளாத சமணரும் தாமரையை விட்டாரல்லர். அவர்களது வழிபடு கடவுள் அருக தேவன். அவனது திருவடியை,

---

1 பரி : 4: 49.
2 குறு : கடவுள் வாழ்த்து : 1.
3 பரி. திரட்டு: 8:7
4 பரி. திரட்டு: 1; 49
5 குறள் : 617
6 பா. பா: வெள்ளைத் தாமரை: 1.
7 குமரகுருபரர் தனிப்பாடல்
8 மணி. பதி: இறுதிவெண்பா 1.

"செந்தாமரைமேல் நடந்தான் அடி"[1] என்றனர். சிற்றன்ன வாயில், அசந்தா ஓவியங்களில் சமணத் துறவிகள் கையில் தாமரை பிடித்துள்ள காட்சிகள் உள்ளன. அம்மதத்துச் சாரணர் களாம் ஐந்திருச் சாரணர் (பஞ்சபரமேட்டிகள்) வந்திறங்கும் கல்மேடைகளில் தாமரை மலர் படைக்கப்படுவதுண்டு. அன்னார் கையில் தாமரை பிடித்து வருவர் என நம்புவர்.

இவ்வாறு கையில் தாமரைமலரைப் பிடித்துத்தோன்றுவதில்

*தன்கையில் யாழும் வைத்தார்*
*தாமரை மலரும் வைத்தார்*"[2] என்பதுபோல் கடவுளர் யாவரும் ஒருமைப்பாடு உடையவராகக் காட்சி தருகின்றனர். சிறு தெய்வங்களாகிய மணிமேகலா தெய்வம், மதுராபதி முதலியன வும் கையில் தாமரை பிடித்துத் தோன்றினவாம்.

இவ்வாறு கையில் மலரைப் பிடித்து மகிழ்வது மாந்தரது வழக்கமாகும். உண்மையில் தாமரையைப் பிடிப்பதை இலக்கியங் கள் காட்டுவதுடன், வண்ணனையிலும் காட்டுகின்றன. மகளிர் கைகளில் தத்தம் குழந்தைகளது கையைப் பிடித்துக்கொண்டு செல்வதை,

"*அடைமறை ஆயிதழ் போது போற்கொண்ட*"[3] —என்றும்
"*தாதணி தாமரைப் போது பிடித்தாங்குத்*
*தாமும் அவரும் ஓராங்கு விளங்க*"[4] என்றும் காட்டு கின்றன. இன்றும் இலங்கையில் புத்தர் சின்னங்காணச் செல்வோர் கையில் தாமரை கொண்டு செல்கின்றனர். மாந்தர் தாமரையாற் கண்ணி சூட்டிக்கொண்டனர். தார் அணிந்தனர். பலவகை களிலும் பயன்கொண்டனர். ஆயினும், புராணங்கள் தாமரை கடவுளர்க்குரியது என்றே ஆக்கின.

"கடவுள் ஒண் பூ", "தெய்வத்தாமரை", "புவ்வத்தாமரை," "புகழ்தரல் தாமரை" எனப்பட்டது. கடவுளர் இடம்பெற்ற கோவில்களைத் தாமரையாகக் கண்டனர். மதுரைக் கடவுள் இருப்பிடம்,

---

1 *சீவ. சி*: 2564.
2 *அப். தே: கழிப்பாலை* : 3 : 1
3 *சீவ. சி* : 2756
4 *மது, கா* : 462, 463.

"*அரும் பொகுட்டு (தாமரை) அனைத்தே*
*அண்ணல் கோவில்*"[1] -எனப்பட்டது. கலைமகள், திருமகள் நான்முகன் ஆகியோர் தாமரைமேல் இடம்பெற்றமையால் தாமரை, கோவிலாகவே ஆயிற்று.

"*தவளத் தாமரை தாது ஆர் கோயில்*"[2] -என்றும்,
"*நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை*
*ஏய்ந்தன கோயிலே எய்துவாள் என*"[3] -என்றும் உவமை யாகவும் உருவகமாகவும் கோவில் தாமரையாயிற்று.

அடியவர் உளத்திலும் ஆண்டவன் இடம் பெறுவார் அன்றோ? அந்நோக்கத்தில் அடியவர் உள்ளமும் கோவிலாகும். அந்தக் கோவிலையும் குமரகுருபரர்,

"*வெண்டா மரைக்கன்றி நின்பதம் தாங்கவென் வெள்ளை [உள்ளத்*
*தண்டா மரைக்குத் தகாது கொலோ*"[4] -எனத் தன் வெள்ளை உள்ளத்தை வெண்டாமரை என்றார்.

இவ்வாறு தாமரை கடவுளர்க்கு ஆக்கப்படும்போதே மாந்தர் தொடர்பிலிருந்தும் விடுபடவில்லை என்பதையும் காண்கின்றோம். கடவுள் தங்கும் உள்ளக் கமலம் மட்டுமன்றிக் கருத்து தங்கும்,

"*உள்ளக் கமலம் மலர்த்தி உளத்துள்ள*
*தள்ளற் கரியஇருள் தள்ளுமால்*"[5] -என வள்ளுவர் திருக்குறள் என்னும் கதிரவன் உள்ளக் கமலத்தை மலர்த்துகின்றது. இதுபோன்று தாமரைக் கோவிலாக வளமான நிலமும் வண்ணிக்கப்பட்டதை,

"*தண்ணங் கமலக் கோயில் பல*
*சமைத்த மருதத் தச்சன்*"[6] -எனக் காணலாம்.

---

1 *பரி திரட்டு* : 8
2 *குமரகுருபரர் தனிப்பாடல்*
3 *கம்ப : மீட்சிப்படலம்* : 85
4 *சகலகலாவல்லிமாலை* : 1
5 *திரு. மா : குலபதிநாயனார் பாடல்*
6 *மீனா பி த* : 60

# கடவுள் பிடிப்பும் மக்கள் விடுப்பும்

கடவுளரது உறுப்புகளையெல்லாம் தாமரையாகக்கொண்டு பாடியவர்களது எழுத்தாணி மாந்தரது உறுப்புகளையும் அவ்வாறு பாட எழுதுவதை மறுத்துவிடவில்லை, தலைவன் தலைவியது முகம் தாமரையாக வண்ணிக்கப்பட்டது. "தாமரைக் கண் புதைத்"[1] ததைக் காண்கின்றோம். கைகள், மலர்ந்த செந்தாமரை; கன்னங்கள், செந்தாமரை இதழ்;

"குளன்அணி தாமரைப் பாசுஅரும்பு ஏய்க்கும்
இளமுலை"[2] அவ்வுறுப்பு இரண்டாக உள்ளதை,
"கொப்பூழ் என்னும் நிலத்தில் முளைத்த
மயிர் ஒழுக்கு என்னும் ஒரு தண்டில்
இரண்டு குவிந்த தாமரை"[3] என்றும் காட்டினர்.

புற உறுப்புகளைப் போலவே, அக உறுப்பாம் நெஞ்சக் குலையையும் (இருதயம்) "தாமரை மொட்டு"[4] எனக் கலிங்கத்துப் பரணி பாடியது.

தாமரை இதழை ஒவ்வொன்றாக இட்டு 108 போற்றிக்குப் பயன் படுத்தியது போன்றே மாந்தர் வாழ்விலும் தாமரை இதழை விட்டாரல்லர். கமழும் சந்தனச் சாந்தையும் குங்குமக் குழம்பையும் மைந்தரும் மகளிரும் பூசிக்கொள்வர். அவற்றைக் கையால் அள்ளிப் பூசார்.

"ஏடுஇல் சந்தனம் ஏந்து தாமரை
தோடின் பயில்வினால் பூசினான்"[5]

[6]வெள்ளிலோத்திரச் சாந்தைப் பூசிக்கொள்ளத் தாமரை இதழையோ குவளை இதழையோ கொண்டனர். அவற்றால் தோய்த்தெடுத்துப் பூசிக் களித்தனர்.

---

1 கலி : 89 : 2

2 கலி : 22 : 15, 16

3 "உந்திச் சுழியில் முளைத்தெழுந்த உரோமப் பசுந்தாள் ஒன்றிரண்டு அந்திக் கமலம் கொடு வருவீர்" —கலி. ப : கடைதிறப்பு : 19

4 "தாமரை மொட்டென்னும் உள்ளி (நெஞ்சக்குலை)" —கலி. பரணி

"தாமரை மொட்டிற் செய்த தனிப்பெருஞ் சூட்டுக் கண்டீர்" —தக்க 744.

5 சீவ. சி : 2428 6 சீவ. சி : 622

தில்லைச் சிற்றம்பலம் பொன் அம்பலம் எனப்படும். மேற் கூரை பொன்னால் வேயப்பட்டது மட்டுமன்று; பாடலிலும் பொன்பாய்ந்தது.

"பொன்மன்றம் பொற்றா மரைஒக்கும்; அம்மன்றில்,
செம்மல் திருமேனி தேன்ஒக்கும்—அத்தேனை
உண்டு களிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி"[1] —என்று குமரகுருபரர் பொன் மன்றத்தினைப் பொற்றாமரையாகக் காட்டினார்.

இவை கற்பனை. மதுரைக் கோயிற் குளம் பொற்றாமரைக் குளம். அதிற் பொன்னாற் செய்யப்பட்ட தாமரை மலர் மிதக்க விடப்பட்டுள்ளது. பாணர் பரிசாகப் பொன் தாமரை பெற்றுச் சூடியதை முன்னர் அறிந்தோம். அப்பொற்றாமரைக் குரிய தங்கம் பகைவரை வென்று கைப்பற்றிய யானையின் முக படாத்திலிருந்து எடுக்கப்பட்டது.

இவ்வாறு தாமரை பலவகையிலும் கடவுளர்க்கும் அமைந்தது; மாந்தர்க்கும் அமைந்தது. இச் செய்திகளை வழங்கும் நூல்களின் காலங்களை நினைவில் இருத்தி அறிவோடு பொருத்திப் பார்த்தால் ஓர் உண்மை புலப்படும்.

பண்டைக் கால நூல்களில் மாந்தர் தாமரையைப் பயன் படுத்தியது பல்கியும் பரவலாகவும் பேசப்படும். கடவுளர்க்கு ஆக்கியமை அருகியும் ஆங்காங்கும் பாடப்படும். கால வளர்ச்சி நூல்களில் பையப் பைய இந்நிலை மாறிற்று. மாந்தருக்குத் தாமரை மலிந்தமை போய் மறைந்தும், கடவுளர்க்குத் தாமரை மலர்ந்தமை மலிந்தும் இடம் பெறலாயிற்று. இதற்குக் காரணம் தாமரை தெய்வ மலராக்கப்பட்டமையே.

ஒருகாலத்தில் நீர் வளமும் அதன்வழி ஊர் வளமும், குள வளமும் அதன்வழி நில வளமும் தாமரையால் புலப்பட்டன. வளமான சேறு உள்ள வயலிலும் தாமரை பூத்து வளம் பூப்பதை அறிவித்தது. வளத்தின் அறிவிப்பாகத் தாமரை விளங்கிற்று. இன்று தாமரை அருகிய நிலை, வளம் குறுகியதற்கும் அறிவிப்பு ஆகின்றது.

1 சித. செ: கோ: 16.

தாமரை அருகிவரும் நிலை, தாமரையால் கொள்ளப்பட்ட பல கலைகளும் அறவே நினைவற்றுப் போயிருப்பதையும் காட்டுகின்றது எனலாம்.

## நகர்த் தாமரை; போர்த் தாமரை.

தாமரை மலரின் அமைப்பு நடுவில் ஒரு மேடையையும் சூழ்ந்து படிப்படி வளர்ச்சியுள்ள அக இதழ்களையும் பாதுகாப்பான புற இதழ்களையும் கொண்டுள்ளதை அறிவோம். இஃது ஒரு நகர அமைப்பிற்கு வடிவமைப்பாகக் கொள்ளப்பட்டது.

கல்விக் கண் வளர்த்த காமராசப் பெருந்தகை முதலமைச்சராக இருந்தக்கால் ஒரு செய்தி கூறினர். நகரமைப்புக் கலையைக் கண்டுவரத் தமிழ்நாட்டு அலுவலர் குழு ஒன்று அமெரிக்க நாட்டிற்குச் செல்வதாக இருந்ததாம். இக்கருத்து முதலமைச்சர் காமராசர் முன் படைக்கப்பட்ட போது அப்பெருந்தகை,

"அமெரிக்காவைப் பார்ப்பது அப்புறம் இருக்கட்டும்;
போய் மதுரை நகரைப் பார்த்து வருக" என்றாராம்.

நாம் பாடலில் மதுரையைப் பார்ப்போம். பாடல் பரிபாடல், பழைய கதைத்தொடர்புடன்தான். தொடங்குகின்றது:

| | |
|---|---|
| கொப்பூழ்த் தாமரை | : மதுரை ஊர்; |
| பூவின் அக இதழ்வரிசை | : தெருக்கள்; |
| நடுப் பொகுட்டு | : கோவில்; |
| பூந் தாதுக்கள் | : மக்கள்; |
| தாதுஉண்ணும்வண்டுகள் | : பரிசுபெற்று வாழ்பவர். |

இவற்றைப் பாடல் வடிவத்தில் பார்க்கலாம்:

*"மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்*
*பூவொடு புரையும் சீர் ஊர்; பூவின்*
*இதழகத் தன்ன தெருவம்; இதழகத்து*
*அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோவில்;*

*"தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்;*
*தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்"*[1]

மதுரை நகரமைப்பு, தாமரை மலரமைப்பாக உள்ளது. கொங்கு வேளிர், மகதநாட்டு நகர் இராயகிரியத்தைத் தாமரை அமைப்பாக வண்ணித்துள்ளார். நகரைச் சுற்றியுள்ள படைச்சேரி–பொய்கை; பரத்தையர்சேரி–புறப்புறவிதழ்; வேளாளர் தெரு – புறவிதழ்; வணிகர் தெரு – புல்லிதழ் உட்புறம்; அந்தணர் தெரு: அகவிதழ்; அமைச்சர் தெரு – அல்லி; அரண்மனை–பொகுட்டு; இவ்வாறு,

*"கோயில் கொட்டை யாகத் தாமரைப்*
*பூவொடு பொலியும் பொலிவிற்று"*[2] –என்றார்

திருவாரூர் ஒரு காலத்தில் இவ்வமைப்பில் இருந்ததாம். அதனால், அதற்குத் 'தாமரையூர்' என்னும் பொருளில் 'கமலை' என்றொரு பெயர் வழங்கிற்று. அதனையும் சேக்கிழார்,

*"மலர்மகட்கு வண் தாமரைபோல் மலர்ந்து*
*அலகில் சீர் திரு வாரூர் விளங்குமால்"*[3] என்று பாடினார்.

இன்றும் தமிழகத்தில் தாமரைப் பெயரில் 'தாமரைக் காடு' 'தாமரைப்பாடி' 'செந்தாமரைக்கண்' 'முள்ளியூர்' 'முண்டகத்துறை' எனப் பலபெயர்களில் ஊர்கள் உள்ளன.

ஊருக்கு மட்டுமன்று; திக்குகளின் பெயர்களுக்கும் தாமரைப் பெயர் அமைந்தது. திக்குகள் எட்டு. எட்டுத் திக்கையும் எட்டு மா யானைகள் காப்பதாகக் கதை. தென்கிழக்குத் திக்கைக் காக்கும் யானையின் பெயர் புண்டரீகம் என்னும் வெண்டாமரைப் பெயர். அவ் யானையே பேசுகின்றது:

*"புண்டரீ கப்பேர் உள்ளேன்;*
*வையகம் போற்றும் சீரேன்*
*மாதிரம் (திக்கு) காவல் கொண்டேன்"*[4] இவ்வாறு

கச்சியப்பர் பேச வைத்துள்ளார்.

ஊர்களை அமைக்கத் தாமரை அமைப்பு கொள்ளப்பட்டது போன்று போர்களை அமைக்கவும் தாமரை கொள்ளப்பட்டது. போர்க்களத்தில் பலவகை அமைப்பில் படைகளை அணி அணியாக்குவர். அவற்றுள் ஒன்று 'தாமரை அணி' எனப்படும். வடமொழியில் 'பதும வியூகம்' என்றனர்.

---

1 பரி. திரட்டு: 8
2 சீவ. சி: 1591,
3 பெரிய. பு: திருநகரச்சிறப்பு: 12.
4 கந். பு: தருமகோபன் வதை: 72

கட்டியங்காரன் சீவகனை எதிர்த்துப் போர்ப்படையை இவ்வாறு தாமரை அணியாக வகுத்தான். எவ்வாறு?

தாமரையின்

புறத்தே உள்ள புற இதழ்போல, புறத்தே சுற்றி வாட்படை நிறுத்தப்பட்டது;

அகவிதழில் பெரியவைபோல, களிற்றுப்படை சூழ நிறுத்தப் பட்டது;

அகவிதழில் உட்சுற்றுச் சிறியதைபோலத் துணை அரசர் நின்றனர்;

நடுப் பொகுட்டைப் போலக் கட்டியங்காரன் மக்கள் நின்றனர்;

பொகுட்டிற்குள் கொட்டை போலக் கட்டியங்காரன் நின்றான்.

இவ்வாறு போர்க்களம் தாமரைப் பொய்கையாயிற்று.

*பொய்கை போர்க்களம்; புறவிதழ்*
*புலவு வாட்படை; புல்லிதழ்*
*ஐயகொல் களிறு; அகவிதழ்*
*அரசர்; அல்லிதன் மக்களா*
*மையில் கொட்டையம் மன்னனாம்*
*மலர்ந்த தாமரை வரிசை*"[1] யாக அமையச் சீவகன் வண்டு போன்று கொட்டைமேல் பறந்து தாக்கினான். சீவக சிந்தாமணி காட்டும் தாமரை அணி அமைப்பு இது.

தாமரை என்னும் சொல்லை ஒரு பேரெண்ணிக்கைக்குக் கொண்டமை கண்டோம். இலக்கியங்களும்,

"*தாமரை பயந்த ஊழி*"[2] என பல ஊழிகளைக் குறிக்கத் தாமரையைக் குறிக்கின்றன.

பெரிய எண்ணிக்கைக்குத் தாமரை கொள்ளப்பட்டது போன்று மிகச் சிறியபொழுதிற்கும் தாமரை கொள்ளப்பட்டது ஒரு வியப்பான செய்தியாகும். 'கணம்' என்பது, இமைக்கும் நேரத்தினும் பல ஆயிரத்தினும் ஒரு பங்கு என்பர். அந்த நேர அணுவை அரபத்த நாவலர் என்னும் பரத நூல் புலவர் அள விட்டுக் காட்டியுள்ளார்.

தாமரை இதழ்களில் நூறு இதழ்களை அடுக்க வேண்டும்;

---

1 சீவ. சி : 2811    2 திருமுருகு : 164

கூர்மையான ஊசி ஒன்றை அவ் வடுக்கின்மேல்
வைத்து அழுத்த வேண்டும்;

நூறு இதழ்களில் முதல் ஓர் இதழில் ஊன்றும் நேரம்

ஒரு கணமாம்.

இதனை,

"*நூற்றிதழ் அடுக்கி ஒரிதழ் அதனில்*

*துன்னூசி ஊன்றிடுங் காலம் கணமாம்*"[1] என்றார்.

இவ்வாறு காலப் பெருமைக்கும், நேரச் சிறுமைக்கும் எல்லைகாட்டும் பாங்கைக் கொண்டது தாமரைமலர். இறைக்க இறைக்க ஊறும் ஊற்று போன்று எழுத எழுத எழுவது தாமரை மலர்க் கருத்து. எங்கேனும் நிறைவு செய்ய வேண்டு மன்றோ? இங்கு ஒரு குறைகாட்டி அக்குறையே நிறையாக நிறைவு செய்யலாம்.

முறையாகப் பார்த்தால் மருத நிலத்திற் சிறந்த மலர் தாமரைதான். ஆனால், அந்நிலம் மருத மரத்துப் பூவின் பெயரால் 'மருதம்' என்று பெயர் பெற்றது. ஆனால், மருத மரத்திற்குரிய பூக்களைக் குறித்தோர் எவரும் மருதப் பூவைச் சொல்ல வில்லை. தாமரையையும் குவளையையும் காட்டினர். ஆனாலும் குறியீடாக மருத மலரே கொள்ளப்பட்டது. இது தாமரைக்கு ஒரு குறையாகப் படுகின்றது.

இது குறைதானா?

சிவன் எந்நிலத்துத் தெய்வமாகவும் கொள்ளப்படவில்லை யாயினும் அனைத்து நிலத்திற்கும் பொதுவாக விளங்கியமை போன்று தாமரையும் சிறப்பாக அமைந்து குறையை நீக்கியது

குறையிலும் நிறைபெறும் தாமரை பெருமையின் எல்லை வரை நிற்கும்

**தெய்வ மலர்**

---

1 பழம்பாடல்—அரபத்த நாவலர் பரதநூல்

# திணை மலர்கள்

## அகத்திணை மலர்கள்

### குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை.

### பூவால் திணை

அகத்திணைக்கும் புறத்திணைக்கும் குறியீடுகளாகப் பூக்களின் பெயர்கள் அமைக்கப்பட்டமை முன்னே குறிக்கப்பட்டது. திணைப்பெயர்களின் குறியீடு பூப் பெயர்களால்தாம் அமைந்ததா? இதனை முடிவுகட்ட இரு திணைகளையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

அகத்திணை ஏழு வகைப்படும். திணை என்றால் ஒழுக்கம். இவ்விரண்டு ஒழுக்கங்களில் முந்தியது அக ஒழுக்கம். அக ஒழுக்கம் ஏழில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்தும் ஒரு தொகுப்பு எனலாம். இஃது அன்புத் தொகுப்பு. அஃதாவது ஒத்த அன்புடைய ஆண், பெண் இருவரது காதல் நடப்பு. இதனால், இத்தொகுப்பை "அன்பின் ஐந்திணை" என்றனர். மற்றைய இரண்டாகிய கைக்கிளையும் பெருந்திணையும் இணைந்த அன்பு அற்றவை.

அன்பாம் காதல் உணர்வு மென்மைத் தன்மையது. "*மலரினும் மெல்லிது காமம்*" அன்றோ? மென்மை வாய்ந்த அன்புத் திணைகளுக்கு மென்மை வாய்ந்த மலர்களையேகுறியீடாக்கிய பாங்கு ஓர் அருமைப் பாங்காகும். ஏனைய இரண்டும் மலர்ப் பெயரைப் பெறவில்லை. பெற முடியாதவை; பெறக் கூடாதவை.

இவ்வாறு பெற்ற பெயர்க் குறியீடும் காரணத்தால் அமைந்ததே.

"*முல்லை, குறிஞ்சி என்பன இடுகுறியோ; காரணக்குறியோ?*" —என்றொரு வினாவை இளம்பூரணர் என்பார் எழுப்பிக் கொண்டார். இவர் தொல்காப்பியத்திற்கு முதன் முதல் உரையெழுதியவர். இவரே விடை கூறினார்:

> "*ஏகதேச காரணம்பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று கொள்ளப்படும்*"[1] —என்றார்.

என்ன காரணமோ? அவரே இதற்கும் வினா எழுப்பி விடை தந்தார்:

> "*என்னை காரணம்? —எனின்,*
>
> *காடுறை உலகிற்கு முல்லைப் பூ சிறந்தது ஆகலானும்,*
>
> *மைவரை உலகிற்குக் குறிஞ்சிப் பூ சிறந்தது ஆகலானும்,*
>
> *தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும்,*
>
> *பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார்*" —எனப் பூக்களின் சிறப்பால் நிலங்கள் பெயர் பெற்ற காரணத்தை விளக்கினார். பாலை என்பது தனி நிலம் அன்று. எனினும் அதிலும் பாலைப் பூ உண்டு. அப்பூ சூடிக்கொள்ளும் பூ அன்று. ஆகலான், பாலை மரத்தைக் குறியீடாகக் காட்டினார்.

அகத்திணைகளை வைத்துத்தாம் புறத்திணைகள் அறிமுகம் செய்யப்படும். "வெட்சிதானே குறிஞ்சியது புறனே" (தொல்: பொருள்: 59) என்பது போன்று 'இன்ன அகத்திற்கு இன்ன புறம்' என அமைக்கப்பட்டுள்ளது. இத்தொடர்பாலும் புறந்திணைகளும் பூக்களால் காரணக் குறி பெற்றவை. இதனையும் இளம்பூரணர்,

---

1 தொல். பொருள் : 5 உரை

"*அந்நிலத்திற்குரிய பூ ஆகலானும் அதற்கு (குறிஞ்சிக்கு) அது (வெட்சி) புறமாம்*" –என்று நிலப் பூவோடு பொருத்திக் காட்டினார். ஆனால், இவருக்குப் பின்னர் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் என்பவர் இவ்வாறு பூவால் பெயர் பெற்றன என்பதை ஏற்கக் கருதவில்லை. அவரது மாறு பட்ட கருத்தை,

"முல்லை முதலிய பூவாற் பெற்றன இவ்வொழுக் கங்கள் எனின், அவ்வந் நிலங்கட்கு ஏனையப் பூக்களும் உரியவாதலின், அவற்றால் பெயர் பெறலும் உரிய (ஆகுமே?) எனக் கடாயினார்க்கு விடை இன்மை உணர்க" –என்று விளக்கினார். விடை இல்லாது போகவில்லை.

ஒவ்வொரு நிலத்திலும் பலப் பல பூக்கள் இருப்பினும் அவற்றுள் சிறந்த ஒன்றைக் கொண்டே பெயர் இடப்பட்டதாக இளம்பூரணர் தந்திருக்கும் விளக்கப்பகுதியிலேயே விடை இருக்கின்றது. பல இருப்பினும் பெயர் சூட்டும்போது ஏதாவது ஒன்றைக்கொண்டுதானே பெயர் சூட்ட வேண்டும். சிறந்த ஒன்றைக்கொண்டு பெயர் சூட்டப்பட்டது.

இங்கு, பூவினால் பெயர் பெறவில்லை என்ற நச்சினார்க் கினியர் பின்னே மாறுபட்ட சொற்களை அமைத்துள்ளமை வியப்பாக உள்ளது.

புறத்திணைப் பூக்களோ அவற்றிற்குரிய போர் நிகழ்ச்சியின் போது தவறாது சூடிக்கொள்ளப்படும். இவ்வாறு சூடப்படுவதை யும் நச்சினார்க்கினியர் பூக்களுக்குத் தாம் தரும் ஒரு வாய்ப்பு போன்று,

"*இதற்கு அப்பூச் சூடுதலும் உரித்தென்று கொள்க*" –என எழுதினார். இவ்வாறு ஒவ்வொன்றிற்கும் எழுதிக் காட்டி வரும் இவர், தும்பைத் திணைக்கு வந்ததும்,

"தும்பை என்பது சூடும் பூவினால் பெற்ற பெயர்" (தொல்: பொருள்: 69 உரை) எனப் பூவின் பெயரைத் திணை பெற்றதாக எழுதியுள்ளார். பூவின்மேல் நச்சினார்க்கினியர்க்கு வெறுப்பு ஒன்றும் இல்லை. தும்பைப் பூவின்மேல் மட்டும் தனிக்காதல் அவருக்கு இருக்கும் என்று கொள்வதற்கில்லை. பூவைவிடத்

திணைக்குச் சிறப்பு உண்டு என்னும் கருத்தை வலியுறுத்தவே இவ்வாறு எழுதியிருக்கலாம். எவ்வாறாயினும் இது மாறுபாடே. ஆனால், இயற்கைப் பாங்கிலும் நடப்பிலும் உண்மையிலும் பூவே பெயர்க் குறியீடு ஆயிற்று என்னும் இளம்பூரணர் கருத்தே தெளிவானது ஆகும்,

அகத்திணை மலர்கள் ஐந்தில் முல்லைப் பூவும், நெய்தற் பூவும், வாழ்வியல் மலர்ப் பகுதியில் விளக்கம் பெற்றன. மற்றவற்றுள் முந்த வருவது குறிஞ்சிப் பூ.

# மலை மலர்

## குறிஞ்சிப் பூ

### தனித் தன்மை

நிலத் தோற்றத்தில் மலை முந்தியது. மலர்த் தோற்றத்தால் மலை குறிஞ்சிப் பூவின் பெயரைப் பெற்றது. மலையில் பலவகை மலர்கள் மலிந்திருக்கக் குறிஞ்சிப் பூ மலைநிலத்திற்குக் குறியீடானதற்குக் குறிப்பிடத்தக்க காரணம் உண்டு. அதன் தனித்தன்மையே காரணம். எவ்வாறு அத்தன்மை பெற்றது?

குறிஞ்சிப் பூ மலையில் மட்டுமே விளையும்.

பிறமலர்கள் ஆண்டுதோறும் ஒவ்வொரு பருவத்தில்
மலர்வனவாக இருப்ப,
குறிஞ்சிப்பூ மட்டும் ஆண்டுதோறும் மலராமல் பல
ஆண்டுகள் இடையிட்டுப் பூக்கும்.

பூக்கத் தொடங்கித் தொடர்ந்தும் பூக்கும்.

வெள்ளக் காடாகப் பூக்கும்.

ஐந்து வண்ணங்களில் பூக்கும்.

இத்தன்மைகள் ஏனையவற்றிற்கு அமையாதவை. எனவே குறிஞ்சி, தனித்தன்மை கொண்டதாயிற்று.

இது மலையில் மட்டுமே பூப்பதற்குக் காரணம் உண்டு. இச்செடிக்கு வேண்டப்படும் தட்ப வெப்பமே காரணம். இது 6000 அடி உயரத்திற்கு மேல் உள்ள தட்ப வெப்பச் சூழலில் தான் விளையும். இதனால், இது மலைப் பூவே ஆயிற்று.

நம் தமிழகத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும், அவற்றிலும் குறிப்பாக நீலகிரி மலையிலும், ஈழத்திலும், மத்தியப் பிரதேச மலைப்பகுதிகளிலுமே இது விளையும். உலகில் இதன் இனத்தைச்சேர்ந்தவற்றைக்காண இயலும். இம்மலர் அங்கெல்லாம் விளைவதில்லை. எனவே, குறிஞ்சிமலர் தமிழ்நாட்டுமலர் எனலாம். சோட்டா நாகபுரியில் வாழும் பழங்குடியினராகிய பைகர் என்னும் மலையினத்தார் இக்குறிஞ்சியைச் சூடி ஆடுவர். இவரது வாழ்வியல் முறைகள் தென் தமிழகத்தில் வாழும் 'தோதவர்' என்னும் மலைவாழ் மக்கள் வாழ்க்கையுடன் ஒத்தது. இவ்வகையைப் பொருத்திப் பார்த்தால் குறிஞ்சி இந்நாட்டுக்குரியது என்பதை உணரலாம்.

குறிஞ்சி என்னும் சொல்லும் இதற்குத் துணை நிற்கின்றது. குறிஞ்சி தமிழ்ச் சொல். மலைநாட்டு ஊரைக் குறிக்கும் குறிச்சி தமிழ்ச்சொல். குன்று தமிழ்ச்சொல். குன்று மக்களாம் குறவர் தமிழ்ச்சொல். குறவர் சொல்லும் குறி தமிழ். இச்சொற்கள் யாவற்றிற்கும் வேர்ச்சொல் 'குல்' என்பது. இவ்வேர் தமிழ் மூலம். இதில் தழைத்த குறிஞ்சிப் பூ தமிழ்ப் பூ.

தமிழர் தம் திருமணம் காதல் மணம். காதல் மணம் "குறிஞ்சி மணம்"[1] எனப்பட்டது.

ஏழு அல்லது ஒன்பது ஆண்டுகள் பூக்காமலேயிருந்து பின்னர் பூக்கத் தொடங்கும். வெள்ளக் காடாய்ப் பூப்பதும் ஒரு சிறப்பு. மேலை நாட்டு 'யுக்கா' என்னும் செடி இதுபோன்று 10 ஆண்டுகள் கடந்தும் பூக்கும். ஆனால், அது மழையில்லாமை

1, குறி, பா: இறுதி வெண்பா : 2 : 4

காரணமாக அவ்வாறு பூப்பது. குறிஞ்சி அவ்வாறு அன்று. இதன் இயல்பே இது எனவே, உலகில் ஒரு தனிச்சிறப்புடையது ஆகின்றது.

இதன் செடி குச்சியாக-கோலாகத் தனித்தனியே வளரும். புதராக வளரும். இதனால் இது நிலப் பூ. இக்கோல் கருப்பு நிறம் கொண்டது. இப்பூ நொய்தானது. அதாவது வன்மையில்லாத மென்மையானது. அளவில் சற்றுப் பெரியது. நீண்ட புனல் வடிவுடையது. கதிர்களாகக் கொத்து நிலையில் மலரும். பூக்கும் காலம் ஒய்ந்ததும் கீழ்க் கணு உள்ள வரை நிற்க, மற்றவை கருகிக் கொட்டிவிடும்.

தொடர்ந்து பூப்பதாயினும் இதன் கார்கால மலர் விரும்பிப் பறித்துச் சூடப்படும். இதனைக் "*கார் மலர் குறிஞ்சி*"[1] என்னும் மதுரைக் காஞ்சியால் அறிய முடிகின்றது.

## ஐந்து வண்ணம்

மலையில் பூக்கும்;

பெருகித் தழைத்து வெள்ளமாகப் பூக்கும்;

தடித்த பெரிய கோலில் பூக்கும்;

விடியலில் பூக்கும்;

மகளிரது உடல் நிறம் போலவும் பூக்கும், -இத்துணை செய்திகளையும் கண்டுணர்ந்த பாண்டிய மன்னன் ஒருவன் மாறன் வழுதி என்பான்,

"*நீள்மலை கலித்த பெருங்கோல் குறிஞ்சி*
*நாள்மலர் புரையும் மேனி*"[2] என இரண்டு அடிகளில்

வடித்துக் காட்டினான்.

'இது நொய்தாக-வலிமையற்ற மெல்லிய பூ.

வெண்மை நிறத்தில் பூக்கும்' -என்பதை வெறிபாடிய காமக்கணியார் என்னும் அம்மையார்,

---

1 மது. கா: 618 2 நற்: 301: 1, 2.

"கருங்கோல் குறிஞ்சி மதன் (வலிமை) இல்
வான் (வெண்மை) பூ"[1] எனப்பாடிக் காட்டினார்.

பாண்டிய மன்னன் பாட்டில் மகளிர் உடல் நிறத்திற்கு உவமையானமையால் இதன் பொன்னிறம் தெரிகின்றது அம்மையார் பாட்டு இதன் வெண்மை நிறத்தைச் சுட்டுகின்றது.

"குறிஞ்சிப் பூங்கோதை போலும் குங்குமம்
முலையில் ஆட"[2] —என்றும் திருத்தக்க தேவர் இதன் செம்மை நிறத்தைக் காட்டியுள்ளார்.

மழை வண்ணக் குறிஞ்சி என்றொன்றுண்டு. இதன் நிறம் நீலம். வாடாக் குறிஞ்சி என்னும் பெயர் செந்நீல நிறத்தைச் சொல்கின்றது. இவ்வாறாக இப் பூ ஐந்து வண்ணங்களைத் தனித்தனியே பெற்று 'ஐவண்ணக் குறிஞ்சி' என்று பெயர் பெற்றது. தமிழகத்தில் மிகப்பெரும் பகுதியாக நீல நிறப்பூக்களே காணப்படும்.

இது தேனாலும்ஒரு சிறப்புடையது. பல்லாயிரக் கணக்கில் பூப்பதாலும் தொடர்ந்து சில காலம் பூப்பதாலும் தேனீக்கள் நிறையத் தேனைத் தொகுக்க வாய்ப்புண்டாகின்றது. இதன் தேனடை பெரிதாக அமையும். ஒரு மலைத் தலைவனது நாட்டைச் சிறப்பிக்கும் ஒரு தலைவி,

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடன்"[3] என்றாள். இதனால் இதன் தேன் தனிப் பூத்தேன் ஆகின்றது. கலயம் கலயமாகத் தேன் கிடைக்கும். இதன் தனித்தேன் சுவையிலும் சிறந்தது. தேனால் குறிஞ்சி பெறும் சிறப்பு இது.

குறிஞ்சிப் பூ சூடும் பூ. மகளிர் காலையில் இம்மலரைத் தலையிற்செருகிக் கொள்வர். கோதையாகத் தொடுத்துக் கூந்தலில் சுற்றிக் கொள்வர். குறவர் குறிஞ்சிப் பூவைச் சூடிக் கை கோத்து நின்று குரவை ஆடுவர். கார்கால மலரை விருப்பிச் சூடுவர். ஆடவரும் தம் குஞ்சியில் கண்ணியாகச் சூடிக்கொள்வர். தாராகவும் அணிவர்.

1 நற் : 268 : 3.
2 சீவ. சி : 1568.
3 குறு : 3.

மலைத் தெய்வமாகிய முருகன் குறிஞ்சிக் கோமான். குறிஞ்சி சூடி விளங்குவான். சூட்டி வணங்குவர். முருக வெறி யேறிய வேலன் குறிஞ்சி சூடி ஆடுவான். முருகன் காந்தள் பூவுடன் இதனையும் சூடி,

*"நறைக்காந்தள்*
*குறிஞ்சி மலரோடு அணிந்த நறுங்*
*குஞ்சிப் பெருமான்"*[1] ஆனான். தெய்வங்கள் இணங்குதல் மட்டுமன்று; விலங்குகளும் இணங்கி மயங்கும். எதற்கு?

## பாட்டில் குறிஞ்சி

குன்றத்துக் குமரி ஒருத்தி. இவள் கொடிச்சி எனப்படு வாள். தினைப்புனம் காக்க வந்தாள். சுனையில் நீராடினாள். கூந்தலைக் கோதிக்கொண்டே குயிற் குரலைத் திறந்தாள். இனிய இசை பிறந்தது. இவளை அறியாமல் ஓர் ஆண் யானை தினையை மேய வந்தது. வாயில் தினை படுவதற்கு முன் காதில் இசை புகுந்தது. காதுவழி உள்ளத்தைக் கவ்விக் கொண்டது. தினையை மறந்தது யானை. நின்ற நிலை யிலிருந்து பெயர முடியவில்லை அதனால். அதன் பசிய கண்கள் திரங்கின. தூக்க மயக்கத்தில் ஆழ்ந்தது. அப்படி என்ன இசை யில் பாடினாள்?

*"கொடிச்சி,*
*பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட"*[2] க் களிறும் மயங் கிற்று. ஆம், குறிஞ்சிப்பண் என்றொரு பண் உண்டு. குறிஞ்சிப் பறை, குறிஞ்சி யாழ் உள்ளன. பெண்கள் கூடி நின்று அகவியும் இப்பண்ணைப் பாடுவர். மலையில் எதிரொலித்து வருமாறு இப்பண்ணைப் பாடுவர். இது 'அடுக்கம் பாடல்' எனப்பட்டது.

இரவில் காவல் புரிவோர் தாம் காவலுக்கிருப்பதை அறிவிக் கவும், தூக்கத்திற்கு ஆட்படாதிருக்கவும் குறிஞ்சிப் பண்ணைப்

---

1 முத். பி. த : 6.
2 அகம் : 102, 5, 6.

பாடுவர். அமைதி சூழ்ந்த இரவில் இவ்விசை கேட்போருக்கு அச்சத்தைத் தருமாம்.[1]

கண்ணகியாரைப் போற்றிய குன்றத்துக் குறவர், நறும் புகை புகைத்து குறிஞ்சிப் பாணியைப் பாடினர். இதுபோன்று மலையில் "*நறும்புகை எடுத்துக் குறிஞ்சிபாடி*"[2] யதை நக்கீரரும் குறித்துள்ளார்.

குறிஞ்சி எனப்பெயர் பெற்றதெல்லாம் குறிஞ்சி மலராலே யாகும். குறிஞ்சிப் பூ கொய்யப்படுவதால் 'கொய்யும் குறிஞ்சி' என்றால் பூவைக்குறிக்கும். பண் என்னும் இசை கொய்யப்படாது இசைக்கப்படுவதால் இதனை,

"*கொய்யாக் குறிஞ்சி பலபாடி*"[3] – என்றனர். இது கொண்டும் பூதான் பெயர்களுக்குக் காரணமாயிற்றென உணரலாம்.

குறிஞ்சியினால் பெயர்பெற்ற ஊர்கள் உள்ளன. குறிஞ்சிப் பூவில் மனம்பற்றிய மருத நிலத்தவரும் தம் ஊர்ப் பெயராம் பாடிக்கு அடைமொழியாகக் குறிஞ்சியை இணைத்துக் 'குறிஞ்சிப் பாடி' எனப் பெயரிட்டனர். நீலக்குறிஞ்சியால் உண்டானபெயர் நீலகிரி.

இது புணர்ச்சிப் பொருள் கொண்ட பூ. கூடிப் புணர்வோர் புணரும் இடத்தில் மற்றவர்க்கு இடம் தருவரா என்ன? அது போன்றே இச்செடி பூக்கும் போது வேறெந்தச் செடிவகையும் இவ்விடத்தே முளை காட்டவும் முடியாது. ஒன்றும் முளைப் பதில்லை.

இவையெல்லாம் பெற்ற குறிஞ்சி 'குறிஞ்சிப் பாட்டு' எனத் தன் பெயரால் தனியொரு இலக்கியமும் பெற்றது. பூக்களின் மேடையாக விளங்கும் குறிஞ்சிப் பாட்டின் குறிஞ்சி மேடையில் தான் பலவகைப் பூக்களும் மலர் மாநாடாகக் கூட்டப்பட்டன.

அடுத்த முல்லை, வாழ்வியல் பூவாக விரிந்ததை இங்கும் நினைவிற் கொள்ளலாம்.

---

1 "*உருகெழு மரபிற் குறிஞ்சி பாடி*
*கடியுடை வியன் நகர் காவலர் துஞ்சார்*" நற் : 255 : 2, 3.

2 *புற. வெ. மா* ; 79

3 *திருமுருகு* : 239.

# நீர்த்துறை மலர்

## மருதம்

வயலும் வயல் சார்ந்த வளமான நிலமும் மருதப் பூவால் 'மருதம்' எனப் பெயர்பெற்றன. மருதப் பூ மரத்தில் பூப்பது. எனவே, கோட்டுப் பூ வகையைச் சார்ந்தது. மருத நிலத்தில் இப்பூவைவிட இம்மரத்திற்கே அதிக இடம் கிடைத்துள்ளது. மருதப்பூ திணைக்குக் குறியீடானாலும் திணைக்கு உரிய கருப் பொருள் பூவாகக் கொள்ளப் படவில்லை. நீர்ப்பூக்களே கொள்ளப் பட்டன. மருதப்பூ குறிக்கப்பட வில்லை.

நீர்த்துறைகளில் இம்மரம் வளர்ந்து மலர்ந்தது. நீர்நிலை யில் இதன் கிளைகள் தாழ்ந்திருக்கும். நீராடும் இளைஞர் கிளைகளில் ஏறிநின்று 'துடும்' எனப்பாய்ந்து நீராடிக் களிப்பர். மகளிரும் இவ்வாறே ஏறி நீர்ப்பண்ணையாம் குளத்தில் பாய்ந்து விளையாடுவர்.

இம்மருத மர அமைப்பாலேயே 'மருத முன்றுறை' எனப் படும் துறைகள் குளத்திலும் ஆற்றிலும் அமையும். இவை நீராடும் துறைகள். வைகையில் மருதமுன்றுறை இருந்தது.

மரத்தின் நிலைக்கு அடுத்தநிலையில் தான் இதன் பூ இடம் பெறுகின்றது. ஆயினும், பூவைக்கொண்டே 'பூ மருது' எனத் தமிழர் வழங்கினர்.

மருதப் பூ, கொத்தாக மலரும். மரத்திலிருந்து கீழ்நோக்கித் தொங்கி அசைந்தாடும் பாங்கில் பூக்கும்.[1] இதன் புற இதழ் சற்றுக் கருஞ்சிவப்பு நிறத்தில் தட்டையாக இருக்கும். இதழ்கள் பஞ்சு போன்று துய்யென இருக்கும். இதழ்கள் நன்றாக விரிந்து நிற்கும். 'உழைப் பூ' என்றால் துய்யென இருத்தலையும், விரிந்த நிலையையும் (துளை உள்ளதையும்) குறிக்கும். இப்பூ 'உளைப் பூ' எனப்படும். (ஆனால், துளை உள்ளதன்று.)

"கருந்தகட்டு உளைப் பூ"[2] —என்றார் நக்கீரர்.

---

1 "வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்"—நற் : 350 : 3.
2 திரு முருகு: 27.

## சந்தனப் பூ

இம்மலரின் அகவிதழ் நிறம் சிற்றளவில் செம்மஞ்சள் நிறம்கொண்டது. அதாவது சந்தன நிறம் போன்றது.

'மகளிர் மணம்மிக்க சந்தனக் கட்டையைத் தேய்த்துப் பொலிவான சந்தனக் குழம்பாக்கித் தம் மார்பிடங்களில் பூசிக்கொள்வர். இவ்வாறு பூசியதற்குத் தேன் கமழ்கின்ற மருதமலர்க் கொத்தை உவமை'[1] யாக்கினார் நக்கீரர்.

அழகிய சந்தன நிறமுடைய இந்த மெல்லிய பூவை மகளிரும் ஆடவரும் சூடிக்கொள்வர். வேறு பல மலர்களுடன் கலந்து தலையில் வைத்து முடித்துக்கொள்வர். இம்மலர்ச் சிறப்பில் மகிழ்ந்த ஆங்கிலர் இதனை 'மலர் அரசி' என்னும் பொருளில் '*The Queen Flower*' என்றனர். மேலும், இதனை '*Pride of India*' என்று இந்தியாவின் பெருமைக்கு உரித்தாக்கினர்.

அகத்திணை மலர்களின் பெயரால் இசைத்துறையில் சொற்கள் உருவானமைக்கு ஏற்ப இம்மருதப் பூவாலும் இசைத்துறை, பெயர்களை அமைத்துக்கொண்டது.

மருதயாழ், மருதப்பண், மருதப்பாணி அமைந்தன. மருதப்பண் காலையில் பாடுதற்கு உரியது.

இம்மருதத்தால் துறைகள் பெயர் பெற்றன. மருதூர், இடை மருதூர், மருதவேலி, மருதம்பாக்கம் என ஊர்கள் பெயர் பெற்றன. மதுரை என்னும் பெயரே மருதத்தின் மரூஉவாகவும் இருக்கலாம். இசையில் அகநிலை மருது, புறநிலைமருது, அருகியல் மருது, பெருகியல் மருது எனும் வகைப் பெயர்கள் அமைந்தன. இம் மருதை வடமொழியார் 'அருச்சுனம்' என்றனர்: நிகண்டிலும் "அருச்சுனம் மருதே" எனப்பட்டது. இது தவறான குறிப்பு. அருச்சுனம் என்பதன் பூ பச்சிலைப்பூ. மருதம் அருச்சுனம் அன்று என்பதைத் திரு பி. எல். சாமி அவர்கள் நிறுவியுள்ளார்கள். (சங்க இலக்கியத்தில் செடி கொடிகள்: பக்கம்: 50)

ஊடல் பொருளுக்குரிய இப்பூ அதிகமாக மாந்தரிடைப் பழகாமல் ஊடலாகவே அமைந்துள்ளது.

அடுத்த நெய்தல், ஆம்பல்குடும்பத்தில் அறிமுகம் பெற்றது.

---

1 "நறுங்குறடு உரிஞ்சிய பூக்கேழ் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்ப"–திருமுருகு : 33, 34.

# இசைக்குறி மலர்

## பாலை

### ஏழிலைப் பாலை

சுரமும் சுரம் சார்ந்த நிலமும் பாலை எனப்பெயர் பெற்றன பாலைப்பூ பற்றிய செய்திகள் மிக மிக அருகியுள்ளன. பாலையால் நிலம் பெயர் பெற்றிருப்பினும் அந்நிலத்துக்குரிமையுள்ள பூவாகப் பாலை எவராலும் இலக்கணத்திலோ இலக்கியத்திலோ குறிக்கப் படவில்லை. உரையாசிரியர்களாலும், நம்பியகப் பொருளிலும் குராம் பூவும், மராம் பூவுமே நில உரிமைப் பூக்களாகச் சொல்லப் பட்டுள்ளன. மருதப் பூவின் நிலையே இதற்கும் அமைந்தது.

பாலைப் பூவைவிட, பாலை மரச்செய்திகள் அதிகமாகக் கிடைக்கின்றன. அதனையும் விட, பாலைத் தொடர்பில் இசைத் செய்திகள் பல்கிக் கிடைக்கின்றன.

பாலையில் வெட்பாலை, கொடிப்பாலை, கருடப்பாலை உலக்கைப்பாலை, ஏழிலைப்பாலை எனப்பலவகை உள்ளன வெட்பாலையையே ஏழிலைப்பாலை எனவும் கருதுவர். இவற்றின் மலர்கள் பலவகை அமைப்புள்ளவை. பலவகை நிறத்தன. எந்தப் பாலை அகத்திணைக் குறியீடாகக் கொள்ளப்பட்டது?

### ஏழ் பாலை

இயற்றமிழில் பாலை இடம்பெற்றதைவிட இசைத்தமிழில் பெற்ற இடம் அதிகம். இப்படிக் குறிப்பதைவிட பாலை என்னும் சொல் இசைத்தமிழில் ஆட்சி செலுத்துகின்றது என்னும் அளவில் இன்றியமையாததாக அமைக்கப்பட்டுள்ளது. மற்ற மலர்ப் பெயர் களுக்குக் கிடைத்தமை போன்று யாழ், பண் முதலியவற்றில் பாலை இடம் பெற்றது. அதற்கும் முந்திய நிலையாக இசையின் அனைத்துத் துறையும் பாலையைக் களமாகப் பெற்றவை.

அவற்றுள், ஒரு துறை, திணைக்கு எப் பாலை குறியீடாகக் கொள்ளப்பட்டது என்பதனை அடையாளம் காட்டு கின்றது.

இசைத்தமிழில் பண் நான்கு வகை. அவற்றுள் ஒன்று பாலை. இது யாழ்ப் பெயரில் ஒருவகையில் நான்கு வகைப்படும். மற்றோர் இசையமைப்பில் ஏழு ஆகும். பிறிதோர் (12 ஓரை) அமைப்பில் பன்னிரண்டு ஆகும். இவற்றுள் ஏழு குறிக்கத்தக்கது இதனை,

*"ஒரேழ் பாலை"* –என்பர்.

ஈரேழு-பதினான்கு நரம்புகள் கொண்ட யாழ் செங்கோட்டி யாழ் எனப்படும், இதில் செப்பமான பாடலை நிறுத்த முன்னே காட்டிய ஏழு பாலைப் பண்ணை நிறுத்துவது ஒரு முறை. இதனைச் சிலம்பு,

*"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியின்*
*ஓரேழ் பாலை நிறுத்த வேண்டி"*[1] என்று காட்டுகின்றது.

இந்த "ஓரேழ் பாலை" யின் திணையோடு முன்னே பட்டியலில் உள்ள 'ஏழிலைப்பாலை' என்னும் பாலை மரத்தையும் பொருத்திப் பார்த்தால் ஏழு எண்ணால் ஒரு பொருத்தம் தென்படுகின்றது. இந்த மரம் ஏழு இலைகளை ஒரு கொத்தாகக் கொண்டிருக்கும். இதனால் இப்பெயர் பெற்றது. இம்மரம் நன்கு பூக்கும். கம்பரது வண்ணனை ஒன்று உள்ளது. வலிய களிறு ஒன்று

*"பூத்த ஏழிலைப் பாலையைப் (மரத்தை)*
*பொடிப் பொடியாகக்*
*காத்திரங்களாலே (கால் வலிமையால்)"*[2] தேய்த்தது

என்றார். இவை கொண்டு 'ஏழிலைப் பாலை'யே பாலை நிலத்தின் குறியீடென உணரலாம்.

பாலைப் பூவைப்பற்றி இலக்கியங்களில் தேடிக்காண வேண்டியுள்ளது. பூக்களின் மேடையாம் குறிஞ்சிப்பாட்டு

*"தில்லை, பாலை, கல்லிவர் முல்லை"*[3]
–எனக் குறிக்கின்றது.

---

1 *சிலம்பு* : 3 : 70, 71.
2 *கம்ப. வரைக்காட்சி* : 6.
3 *குறி. பா* : 77

கபிலரால் குறிக்கப்பட்டமையால் பாலைப் பூ உண்டு. இது பால் பிடித்த மரவகை. அலரிப் பூவிலும் பால் தென்படும். 'கட்டலரி' என்னும் பூ ஒருவகைப் பூ பாலை இனமாகச் செடியியல் அறிஞர்களால் குறிக்கப்படும். எனவே இது பால் பிடித்த பூ.

மரத்தில் பூப்பதால் கோட்டுப் பூவகையைச் சேர்ந்தது.

கிளையில் பல பிரிவாக

ஆனால்,

கொத்தாகப் பூக்கும்

வெண்மை நிறத்தில் பூக்கும்;

இதனை, *"கொடிறு போல் காய*

*வால் இணர்ப் பாலை"* —என்றது

நற்றிணை (107)

*"கோடு (கிளை) உறு பல்கால்*

*வால் (வெண்மை) இணர்ப் பாலை"*[1] என்றும் ஒரு மேற்கோள் பாடல் காட்டுகின்றது. இவ்வகைப் பூ ஏழிலைப் பாலையின் பூவாகும். பிற பாலைகளின் பூக்கள் வெவ்வேறு நிறங்கள் கொண்டவை. கொடிறு என்னும் குறடு போன்ற காயும் இதற்குண்டு.

திணைப் பூவான பாலை வெண்மை நிறத்தது என்று கொள்ள வேண்டும். இதன் பூ சிறியது.

பிங்கல நிகண்டு சீவந்திக் கொடிக்கும் பாலை[2] —என்று பெயர் சூட்டும். அது கொடி. இது மரம். எனவே சீவந்தி என்னும் சீந்தில் இப்பாலை அன்று.

## சூடாப் பூ

இப்பூவைச் எவரும் சூடார். இது சூடாப் பூவாகும். இப்பாலையைத் தழை ஆடையாகக் கொள்வர் போலும். அத்தழை ஆடையும் இலைகளால் ஆனது. அதனையும் மகளிர் உடுத்தியதாகச் செய்தி இல்லை. திருப்பரங்குன்று மலையைப் பெண்ணாக வண்ணிக்கும் பரிபாடல்,

---

1 நம்பி : நூற்பா 6 மேற்கோள்
2 "பாலை சீவந்தி சீவலி யாகும்"—பிங். நி : 2904

"திரை ஏழ் அடுக்கிய நீள் இலைப் பாலை
அரைவரை மேகலை"[1] —என மலைக்குத் தழையை உடையாகக் குறிக்கின்றது. இது மகளிர் உடுத்தியதன் நினைவில் எழுந்ததாகலாம். இதிலும் வரிசையாக ஏழு அடுக்கிய இலை கூறப்பட்டுள்ளதும் 'ஏழ் இலைப்பாலை'யே குறியீடானமைக்குத் துணைக் கருத்தாகின்றது.

அகத்திணைப் பூக்கள் இவ்வாறெல்லாம் தமிழர்தம் வாழ்வில் நீங்காப் பங்கு கொண்டன. இவ்வைந்து பூக்களையும் ஐந்து திணைகளுக்கும் தேர்ந்தெடுத்து அமைத்த தமிழ்ச் சான்றோர்தம் திறமும் நுண்ணறிவும் எண்ணி மகிழ்தற்குரியன.

## அமைப்புப் பொருத்தம்

தமிழ்ச்சான்றோர் நுணுக்கமாகக் கூர்ந்துநோக்கிப்பொருத்தமான காரணங்கொண்டே இத்தேர்வைச் செய்துள்ளனர்.

குறிஞ்சி முதலிய ஐந்து திணைகளுக்குரிய நிலங்களில் நான்கே இயற்கை நிலங்கள். பாலை நிலம், திரிபு என்று கண்டோம். இயற்கை நிலம் நான்கிற்கும் அமைக்கப்பட்ட பூக்கள் நான்கின் நிறத்தையும் பொருத்திப் பார்க்கின் நல்லமைப்பு அதில் மிளிர்வதைக் காணலாம்.

நிலங்களின் தோற்ற வரலாற்றில்,

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்— என்பது படிப்படியான வளர்ச்சி.

பூவினது வண்ணத்துத் தோற்ற வரலாற்றில் முதன்மையாகவும் அடுத்தடுத்தும் அமைந்த அமைப்பு, செம்மை, வெண்மை மஞ்சள், நீலம் —என்பதைத் தற்காலச் செடியியல் அறிஞரும் கண்டுள்ளனர். முற்காலத் தமிழ்ச் சான்றோர் இவ்வரலாற்றில் மனம்பற்றியிருந்தமையை இங்கு நாம் உணரலாம். இவ்வண்ண ஆய்வின் முடிவைக் கொண்டே நான்கு நிலத்திற்கும் நான்கு வண்ணங்களை முறையே படிப்படியாக்கி அதனதனுக்கு ஏற்ற வண்ண மலர்களைத் தேர்ந்து அமைத்துள்ளனர் இதன்படி,

---

1 பரி : 21 : 14, 15,

குறிஞ்சி — செம்மை; (ஐவண்ணங்களில் ஒன்று)
முல்லை — வெண்மை;
மருதம் — மஞ்சள்;
நெய்தல் — நீலம் -என வண்ணப் பொருத்தம் படிப்படியாக அமையவைத்தனர்.

மேலும், ஓரமைப்பைக் காண்கின்றோம். பூக்களின் கோட்பூப் முதலிய நான்கு வகைக்கேற்பவும் இத்தேர்வு அமைந்துள்ளது. இதன்படி,

கோட்டுப் பூ — மருதப் பூ;
கொடிப் பூ — முல்லைப் பூ;
நிலப் பூ
(புதர்ப் பூ) — குறிஞ்சிப் பூ;
நீர்ப் பூ — நெய்தற் பூ; -என வகைப் பொருத்தம் அமைய வைத்துளர். இவ்வமைப்பில் தொடர்ந்த வளர்ச்சிப் பொருத்தத்தைத் தனி ஆய்வின் வழியாக முயன்றால் காணவும் கூடும்.

வண்ணத்தாலும் மணத்தாலும் பெருக்கத்தாலும் தோற்றத் தாலும் முன்னைச் சான்றோர்தம் அகத்தைக் கவர்ந்த பூக்கள் அகப் பூக்களாயின.

## புறத்திணை மலர்கள்

### வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை, வாகை.

## நிகழ்ச்சியும் பூவும்

தொல்காப்பியர் கொண்ட முறைப்படி ஏழு திணைகள் இவ்வாறு அமைந்துள்ளன :

1. வெட்சி — கரந்தை
2. வஞ்சி
3. உழிஞை — நொச்சி
4. தும்பை
5. வாகை
6. காஞ்சி
7. பாடாண்.

ஆனால், அடுத்து எழுந்த இலக்கண நூலார் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் தனித்தனியே கொண்டனர். இவ்வகையில் புறத் திணை பன்னிரண்டு ஆயிற்று.

தொல்காப்பியத்திற்கும்பின்வந்த நூல்களுக்கும் புறத்திணை அளவில் வேறுபாடுகள் நேர்ந்தன. எண்ணிக்கை பெருகிய வேறுபாடு; முறைவைப்பில் வேறுபாடு (உழிஞை, நொச்சியில்); திணை ஒழுக்கத்தில் வேறுபாடு (காஞ்சித் திணை) என வேறு பாடுகள் பெருகின. ஆயினும் ஒன்றில் மட்டும் யாவும் ஒருங்கு ஒத்துப்போயின. அதுதான் பூக்களைக் கொண்டமை. திணை கட்குப் பூக்களைக் கொண்ட வகையில் காஞ்சி ஒன்று தவிர ஒரே நிலை கொள்ளப்பட்டது. காஞ்சியும் திணை ஒழுக்கத்தில் மட்டும் வேறுபட்டது. அதிலும் காஞ்சியைச் சூடுவதைத் தொல்காப்பியம் காட்டாது போயினும் அதன்வழி எழுந்த இலக்கியங்கள் காஞ்சிப் பூ சூடியதைப் பேசின.

யாவற்றையும் ஒருங்கெண்ணி ஒத்து நிற்கும் பாங்கோடு பட்டியலிட்டால் பின்வருமாறு புற ஒழுக்கங்களும் அவற்றிற்குரிய பூக்களும் அமையும்:

| ஒழுக்கம் | | பூ |
|---|---|---|
| திணை | நிகழ்ச்சி | சூடும் பூ |
| வெட்சி | ஆநிரைகளைக் கவர்தல் | வெட்சிப் பூ |
| கரந்தை | ஆநிரைகளை மீட்டல் | கரந்தைப் பூ |
| வஞ்சி | போருக்கு முனைந்து எழுதல் | வஞ்சிப் பூ |
| காஞ்சி | தாக்கியோரை எதிர்த்தல் | காஞ்சிப் பூ |
| உழிஞை | முற்றுகையிடல் | உழிஞைப் பூ |
| நொச்சி | முற்றுகையைத் தகர்த்தல் | நொச்சிப் பூ |
| தும்பை | கைகலந்து போரிடல் | தும்பைப் பூ |
| வாகை | வெற்றி | வாகைப் பூ |

இவ்வாறு புறத்திணையில் எட்டுப் பூக்கள் நீங்கா இடம் பெற்றன.

அகத்தில் அவ்வந்நிலத்திற் சிறந்த பூக்களைப் பெயர்க்குறி யீடாகக் கொண்டது போன்றே, புறத்திற்கும் இயைபு பார்த்தே அமைத்திருப்பர். பளிச்சிடும் நிறம், பரவலாகக் கிடைப்பவை,

ஒருவகையில் தனித்தன்மை கொண்டவை, பெருக்கமாக மலர்பவை எனச் சிலவகைக் காரணங்களைக் கொண்டே இவ்வமைப்பு நேர்ந்திருக்கும். கால மாறுபாட்டாலும், மரபுகள் மறக்கப்பட்டமையாலும், பூக்களைப் பற்றிய பரவலான எண்ணம் அருகிவிட்டமையாலும் உண்மையான காரணம் ஒளிந்து கொண்டுள்ளது.

புறத்திணையில் பூக்கள் இன்றியமையாச் சின்னங்களாக அமைந்தன. பூச்சூடியுள்ளமை கொண்டே இன்ன போர்க்கு எழுந்துள்ளார் என்பது உணரப்படும்.

இவ்விலக்கணம் ஏட்டளவா? நடப்பளவா?

நூற்றுக்கு நூறு நடைமுறைக்கு உரியது. நடைமுறையில் இருந்தது. காலப்போக்கில் போர்க் காரணங்களும் முறைகளும் மாறிவிட்டமையால் பிற்காலத்தில் நடைமுறையிலிருந்து நழுவிவிட்டது; மறைந்தும் விட்டது. ஆனால், முற்காலத்தில் இது கைவிடக்கூடாத போர் மரபாகக் கொள்ளப்பட்டது.

"தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்"[1] என்று

பனம்பாரனார் குறித்தமைக்கு ஏற்ப இவ்விலக்கணம் வழக்கில் இருந்ததே. அதிலும் தமிழ்கூறும் நல்லுலகத்தில் தனித்தன்மையான வழக்கத்திலிருந்ததேயாகும். இம்மரபில் கடவுளர்க்கு இடம் இல்லை. கடவுளர்க்கு இடம் கொடுக்கப்பட்டது உண்டு.

## கடவுளர் செயல் மரபாகாது

உழிஞைத்திணை என்பது மாற்றார் கோட்டையை முற்றுகையிடுதல் என்று கண்டோம். புராணக் கதைகளில் கடவுளர் தம் பகைவரை முற்றுகையிட்ட செய்திகள் உள்ளன திருமால் 'சோ' என்னும் அரணை முற்றுகையிட்டார். சிவன் வானத்தில் உலவிய மூன்று கோட்டைகளை எரித்தார். முருகன் தன் பகைவன் சூரபன்மா கடலில் ஒளிந்து கொண்டபோது முற்றுகையிடுவது போன்று தாக்கினான். இவற்றையெல்லாம் புறப்பொருள் வெண்பாமாலை எழுதிய ஆசிரியர் ஐயனாரிதனார் என்பார் இலக்கணத்துள் அமைத்தார். இவற்றினை உழிஞைத்

1 தொல்: பாயிரம்: 8, 4,

திணையுள் துறைகளாக்கி முறையே, கந்தழி, முற்றுழிஞை, காந்தள், எனப் பெயர் கொடுத்தார்.

இவ்விலக்கணத்தைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை; மறுத்தனர். நச்சினார்க்கினியர்,

"இனித் தேவர்க்குரியனவாக உழிஞையிற் றுறைகள் பலரும் கூறுவராலெனின் அவை உலகியலாகிய அரசியலாய் எஞ்ஞான்றும் நிகழ்வின்றி ஒருகால் ஒருவர் வேண்டியவாறு செய்வனவாகலின் தமிழ்கூறு நல்லுலகத்தன அல்ல என மறுக்க"[1] —என மறுத்தார். வன்மையாக மறுத்தார்; உரிய காரணங்கூறி மறுத்தார். அவர் எழுதியுள்ள சொற்கள் கூர்ந்து நோக்குதற்கு உரியவை. உழிஞை முதலிய பூக்களைச் சின்னமாகச் சூடிப் போர் செய்தல் "உலகியலாகிய அரசியல்" என்று உலகில் நடமுறையாக உண்மையில் நிகழ்ந்ததைக் குறிக்கின்றார். தமிழக அரசியலில் எக்காலத்தும் கடைப்பிடிக்கப்பட்டதைக் காட்டுகின்றார். "ஒருகால் ஒருவர் தாம் விரும்புவதற்காகச் செய்யப்படுவது அன்று"—என்று மறுக்கின்றார். "எக்காலத்தும் மேற்கொள்ளப்பட்டுவந்த மரபு" என்கின்றார். யாவற்றிற்கும் மேலாக முத்திரையிடுவதுபோன்று இவ்வரையறையும் நடைமுறையும் "தமிழ் நிலத்திற்கே உரிய மரபு" என்கின்றார்.

ஆனாலும், ஐயனாரிதனார் புறப்பொருள் வெண்பாமாலையில் படைத்துக்கொண்ட இலக்கணம் பின்னர் எழுந்த இலக்கியங்களில் மேற்கொள்ளப்பட்டது.

ஐயனாரிதனார் போர் கருதிப் பூச்சூடுவதை இன்றியமையாததாகக் காட்டக் கடவுளரே சூடியதாக ஏற்றினார். முருகனுக்குரிய போர்ப்பூ காந்தள் என்பர். அதனையும் குறித்து,

"குருகு பெயரிய குன்றெறிந் தானும்
உருகெழு காந்தள் மலைந்தான்—பொருகழல்
கார்கருதி வார்முரசம் ஆர்க்கும் கடற்றானைப்
போர்கருதி யார்மலையார் பூ"[2] —எனப் 'போர் கருதி

முருகனே பூச்சூடினான்; மக்கள் மலையாது போவரோ?'—என்றார். இது மரபை மாற்றிக் காட்டிய செயல். பூச்சூடும் மரபு தமிழர்தம்

1 தொல்: பொருள்: 67 உரை
2 புறப் வெ. மா: உழிஞை:வெண்பா 8.

அஃதாவது தமிழ் மக்களது மரபாகி அது கடவுளர்க்கும் ஏற்றப் பட்டது. இதனை ஐயனாரிதனார் கடவுளர் செயலாகக் காட்டி மக்கள் பழக்கமாக்கினார்.

இவரது இலக்கண அமைப்பிற்குப் பின்னர் எழுந்த இலக்கியங்கள் இவ்விலக்கணத்தை நினைவிற் கொண்டு கற்பனை வளம் கூடிய புராணங்களிலும் கடவுளும் அவரை எதிர்த்த மாந்த மன்னரும் போர்ப் பூ சூடியதாக எழுதினர்.

இராமாயணத்தில், இராமன், இராவணனை எதிர்த்தபோது,

*"துளவியல் தும்பையும் சுழியச் சூடினா"* னாம்.

எதிர்த்த இராவணனும்,

*"மார்பிடைச்*
*சுற்றினான் நெடுந் தும்பையுஞ் சூடினான்"*[1] என்றார் கம்பர்.

கந்தபுராணத்திலும், பாரதத்திலும் பிற புராணங்களிலும் இது போன்று கதையிலும் போர்ப் பூக்கள் சூடுவது காட்டப் கட்டது.

கதைப்படி கடவுளராயினும் மாந்தராகத் தோன்றி மாந்தருக் குரிய போர்முறையைக் கொண்டதால் இவ்வாறு அவர்கள் எழுத நேர்ந்தது.

காலப்போக்கில் தமிழ் மன்னர்க்குள் போர்களுடனும் வேற்றாருடனும் போர்களும் நேர்ந்தன. வேற்றார் இதற்குக் கட்டுப்பட வேண்டும் என்பதன்று எனவே இம்முறை நடைமுறை என்பதிலிருந்து விலகியது. ஆனாலும், இலக்கிய மரபாக நின்றது. இவ்விலக்கிய மரபு மேலும் மாற்றத்துடன் வளர்ந்தது. உண்மையான கைகலப்பாகிய போர்க்குப் புறத்திணைப் பூக்கள் அமைந்தவையுடன் அகத்திணையிலும் இப்போர்ப் பூக்கள் இடம்பெற வைத்தனர் இலக்கியப் படைப்பாளர்,

---

1 கம்ப : *முதற்போர் :* 115, 97.

## அகத்திலும் போர்

புறப்போர் உண்மை அடிதடி. அகத்திலும் புலவியால் பூசல் நேரும். புறப்போர் ஆணோடு ஆண் பொருவது. அகப் போர் காளையோடு குமரி மோதுவது. இதிலும் தும்பை சூடிய தாகப் பாடினர்.

காமவேள் என்னும் மன்மதன்தான், காதல் வம்புக்கு விதை ஊன்றுவான். இக்காதல் போரில் ஒரு குமரியைத் தாக்கிக் குலைக்க இம் மதவேள் போர் தொடுத்தான்.

*"தோகை உயிர் முடிப்பான்*
*தும்பை முடித்தான் மதவேள்"*[1] –இது குமரகுருபரர்.

என்னும் துறவியார் காமனுக்கு முடித்துவிட்ட தும்பை. இது போன்று காதலுடன் காமப் போர் தொடுக்கும் காதலிகள் தும்பை சூடியதாகப் பாடினர். எதையும் சுவையுடன் வழங்கும் திறன் படைத்த கல்வியில் பெரிய கம்பர் இவ் வகப்போரைப் புறப் போருடன் தொடுத்துக் கையாண்டார்.

இராவணன் இறுதிப்போர்க்குப் புறப்படுகின்றான். போர்க் குரிய ஒப்பனைகளைக் கொண்டான். பொன்னாற்செய்த வாகை மாலை ஒன்றையும் அணிந்து கொண்டான். வெற்றி பெறுவதற்கு முன் அணிந்தான் என்பதன்று. முன்னர் தேவருடன் நடந்த போரில் அவர்கள் பணிந்து சூட்டிய வாகை மாலை அது. இதை இப்போது அணிந்ததாகக் கம்பர் குறிப்பது ஒரு குறும்பு. 'இறுதிப் போர்க்குச் செல்லும் இவன் இனி வெற்றி பெற்று வாகை அணியப் போவதில்லை' என்பதன் குறும்புக் குறிப்பாக அணிய வைக்கின்றார். அத்துடன் களத்தில் இறங்கும் போருக்குரிய தும்பையும் சூடினான். இத்தும்பை சூடியதைக் குறிக்கும் கம்பர் ஓர் அகச்சுவையைப் பொடிவைத்துப் பொருத்தினார்.

இராவணன் வாழ்வில் இதுவரை தோல்வியே காணாதவன். ஆனால், அவன் வெற்றியெல்லாம் புறப்போரில்தான். அகப்போரில் ஆண்கள் வெற்றி சிறப்பன்று. காதற்போரில் 'தோற்றவர்தான் வென்றவர்' என்றார் திருவள்ளுவர். இராவணன் பாசறைகளில் வென்றவன்; பள்ளியறைகளில் தோற்றவன். காதல் மகளிர்

1 காசிக் கலம்பகம்: 11

தும்பை முடித்துச் செய்த போர்களில் தோல்வியால் வென்றவன். அவன் இப்போது தும்பை சூடிக்கொண்டான். அத்தும்பையைக் கம்பர்,

*"தோகையன்னவர் விழி தொடர் தும்பை"*[1] என்றார். தோகை மயில்போன்ற அழகுமகளிரது காதற்கண்கள் தொடர்ந்த தும்பையாம். பள்ளியறையில் காமப்போரில் மகளிர் தம் கண் பார்வையையே தும்பையாகச் சூடி இராவணனைத் தாக்கினர். அதனை இங்கு இழுத்து வைத்து எழுதுவானேன்? இங்கு முடிப்பது புறப்போர் கருதிய தும்பைதான். ஆயினும் 'இப்போரில் இத்தும்பை உனக்கு வெற்றி தேடித் தராது. மகளிர் அகப்போர் தும்பையில் நீ தோற்றாய். அத்தோல்வியை முன்னறிவிப்பாக காட்டித்தான் இதனைச் சூடுகிறாய்' என்பதுபோன்று உட்குறிப்பு வைத்துப் பாடினார்.

மிகச் சுற்றி வளைத்து-ஆனால், சுவை ஊறுமாறு அவர் படைத்த பாட்டு புறப்பாட்டாயினும் அக இசையில் ஒலிக்கின்றது. இங்கு இதனைப் புறப்பூவை அகப்பூவாகவும் இலக்கியம் காட்டுவதாகக் கொள்ளலாம்.

மற்றொரு போர். மகளிரும் மகளிரும் மோதிக்கொள்ளும் போர். கற்பனைதான். இதனாலும் அகப்போராகின்றது. தெய்வ மகளிர் காரணமாக நிகழும் போர். வள்ளிக்கும் தேவயானைக்கும் பூசல். உடன்களத்தி-சகக்களத்தி-போராட்டம். தோழிமார் படைகள். மிகத் திறமையான போரைச் செய்தனராம். இதனைக் காட்டும் பரிபாடல் புறத்திணை மொழியில் பாடுகின்றது:

*"குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்*
*வித்தகத் தும்பை விளைத்தனர்"*[2]. 'வித்தகத் தும்பை' விளைத்தனராம். உடல் போரானாலும் உள்ளப் போரானாலும் போர் போர்தானே என்று கருதிப் புறப் பூவிற் பேசினார், புலவர் குன்றம்பூதனார்.

அகத்துறையில் ஒருதலைப் போர் உண்டு. படைகளால்-வன்மையால் - தாக்காமல் பணிந்த சொற்களால் கெஞ்சு மொழிகளால் தாக்கும் போர். தான் விரும்பிய குமரியைப் பெற்றோர் தர மறுத்தாலும், அவளே பாராமுகமாக இருந்தாலும் அவன்

---

1 கம்ப : தேரேறு படலம் : 16
2 பரி : 9 : 67, 68.

குதிரைப் படையேறிப் போர்தொடுப்பான். இதற்கு 'மடலேறுதல், என்பது இலக்கணம். பனை ஓலையால் குதிரைபோன்று செய்து அதில் ஏறிச் செல்வதுபோன்று நடிப்பான். 'இவள் எனக்குரிவயள்' என்று ஊர் சிரிக்கடிக்கும் போர் இது.

காதலி வீட்டில் அடைத்துக் கொண்டு இவனைப் பாரா முகமாக இருப்பாள். அன்றிப் பெற்றோர் அவளை அடைத்து மணம் செய்து கொடுக்க மறுப்பர். இவர்களை முற்றுகையிடுவது போன்று நடிப்பு இத்தலைவனுடையது. அஃதாவது, அவளை அடைத்து வைத்துள்ள அவர்களது எண்ணத்தை மறுத்து முற்றுகையிடும் 'உணர்வு முற்றுகை' இது, இந்த மடலேறும் நிகழ்ச்சியில் சில பூக்களைச் சூடிக்கொள்வான். பெரும்பாலும் எருக்கம்பூவும், ஆவிரைப் பூவும், பூளைப் பூவும் சூடப்படும். கலித்தொகை படைத்த ஒரு தலைவன் இது 'அகப்போர் முற்றுகை' என்பதை அறிவிப்பான் போன்று முற்றுகைக்குரிய உழிஞைப் பூவையும் சூடிக் கொண்டான். அவனே பேசினான்:

நான் சூடியிருப்பது,

"*பூ அல்ல பூளை, உழிஞையொடு யாத்த*"[1] —எனது காதலின் தொய்வு உணர்ச்சி என்றான். முற்றுகை உணர்ச்சி யின் உருவமாகவே இப்பூவைக் கொள்ள வேண்டும் என்று பேசு கின்றான்.

இவ்வாறு புறப்பூவாகிய உழிஞை அப்புறத்திணைத் தொடர் புடன் அகப்பொருளில் காதற் கருவியாயிற்று.

## அறிவிப்புச் சின்னம்

அகத்துறைக்கு இவ்வாறாகுவது போன்று புறத்தில் உள்ள எத்திணைக்கு உரியதோ அத்திணைப் பொருளுக்கன்றி வேறு பொருளுக்குப் புறப்பூ சின்னமாகச் சூடப்படுதலும் உண்டு.

நொச்சித் திணை என்பது கோட்டையை அடைத்திருப் போன் பகைவர் முற்றுகையைத் தகர்க்க எழும் போர் ஒழுக்கம். இதுபோது நொச்சிப் பூ சூடப்படும். நொச்சிப்பூவைச் சின்ன மாகக் கொள்ளும் வேறு மரபு ஒன்று தெரிகின்றது.

---

1. கலி : 140 : 4

அக்காலத்தில் ஊரில் நிகழும் கோவில் திருவிழாவை ஊர் மக்களுக்கு அறிவிப்பர். அவ்வறிவிப்பை ஊரில் வாழும் குயவனைக் கொண்டு செய்வர். அவன் பொதுவாக அன்றி வீடுதோறும் சென்று அறிவிப்பான். அவ்வாறு திருவிழாவை அறிவிக்க வரும் அறிகுறியாக நொச்சிப் பூவைச் சூடிக்கொள்வான். அக்காலத்தில் கோயிற் பூசெய் உரிமை குயவர்க்கிருந்தது.

ஒரு காதலி. திருவிழாவைச் சொல்ல வந்த குயவனுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கின்றாள். 'திருவிழாவை அறிவிப்பதோடு என் காதலனுடன் பொய் சொல்லித் திரியும் ஒரு பாணன் இருப்பதையும் ஊரார்க்குச் சொல்' என்பதாக வேண்டுகின்றாள். அக்குயவனை விளித்துப் பேசுபவள்,

*"ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி*
*யாறுகிடந் தன்ன அகல்நெடுந் தெருவில்*
*சாறென (திருவிழாவென) நுவலும் முதுவாய்க் குயவ!"*[1]

—என்று அவன் சின்னமாக அணிந்துள்ள நொச்சி மாலையையும் சொல்லிக் காட்டுகின்றாள்.

திருவிழா அறிவிப்பின்போது மட்டுமன்று, திருவிழா நிகழ்ச்சியின் போதும் இக்குயவன் தன் பணிக்குரிய சின்னமாக நொச்சி மாலையை அணிவான்.

*"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடி*
*பலிகள் ஆர்கைப் பார்முது குயவ"*[2] -னைப் நற்றிணையில் கயமனார் என்னும் புலவர் காட்டுகின்றார்.

இவ்வாறாகப் புறப் பூவின் மரபுத் தோற்றத்தையும் காலப் போக்கின் மாற்றத்தையும் காணமுடிகின்றது. என்ன மாற்றமாயினும் பூ தன் நிலையில் மாற்றமின்றிக் கையாளப்பட்டிருக்கும் உண்மையையும் காண்கின்றோம்.

இனிப் புறப்பூ நெறியில் புற்காலப் பாங்கைத் தொடரலாம்

---

1 நற் : 220 : 2-4
2 நற் : 293 : 1, 2

## பூக்கோள் நிலை

போர் வீரர்க்கு அவ்வப் போர்க்குரிய பூ சூட்டப்படும். சூட்ட வழங்குவது ஒரு மரபு. அதனை மன்னன் வழங்குவான். உரியாரைக்கொண்டு வழங்கச் செய்வான். இது 'பூக்கோள் நிலை' என ஒரு துறையாக அமைந்தது.

*"கார் எதிரிய கடற்றானைப்*
*போர் எதிரிய பூக்கொண் டன்று"*[1]

— என இலக்கணமும் பெற்றது. போர்ச்சின்னமான பூவை வழங்குவதற்கென்று ஓர் அறிவிப்பு நிகழும். அதற்குத் தண்ணுமை என்னும் மத்தளம் பயன்படுத்தப்படும். இதனை அடித்து முழக்கும் பாங்கைக்கொண்டு அஃதாவது அவ்வோசையில் அமையும் தாளக் கொட்டு கொண்டு 'இவ்வறிப்பு, பூவைக் கொள்வதற்கு உரியது' என வீரர் அறிவர். உரிய பூவைப் பெற முந்துவர்.

*"பூக்கோள் ஏஎய (ஏவிய) தண்ணுமை"*[2]
*"பூக்கோள் இன்றென் றறையும்*
*மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே"*[3]
— என்றெல்லாம்

அகமும் புறமும் காட்டுகின்றன.

வீரர்க்கு மட்டும் அன்று போர்க்குச் செல்லும் யானைக்கும் முரசிற்கும் புறப்பூ சூட்டப்படுதல் மரபாகவிருந்தது. சோழன் கரிகாலனது களிறு பகைநாட்டுக் கோட்டையைத் தகர்க்கப் புறப் பட்டது. இஃது உழிஞைப் போர். அதன் அறிகுறியாக அதன்மேல் உழிஞைப் பூ சூட்டப்பட்டது. அக்காட்சி, புதர் புதராகத் தூறு படர்ந்த கூர்மையான பெருங்கல் போன்று இருந்ததை உருத்திரங்கண்ணனார்,

*"தூறுஇவர் துறுகல் போலப் போர்வேட்டு*
*வேறுபல பூளையொடு உழிஞை சூடி"*[4] என்று

குறித்தார்.

1 புறப். வெ. மா : காஞ்சி ; 9 கொளு
2 அகம் 174 : 4.
3 புறம். : 289 : 9, 10.
4 பட். பா : 234, 235.

செங்குட்டுவனது வடதிசைப் போரில்,

*''வாகை தும்பை வடதிசைப் போரில்,*

*வேக யானை''* [1] யைக் காண்கிறோம். அத்துடன் மற்றொன்றையும் இவ்வடிகள் அறிவிக்கின்றன. யானை சூடிய பூக்களாக இரண்டு பூக்கள் உள்ளன. இரண்டும் புறப் பூக்கள். ஏன் இரண்டு பூக்கள் இடம் பெற்றன? புறப் பூக்கள் ஒவ்வொன்றும் அவ்வத்திணை நிகழ்ச்சிக்கேற்பத் தனித்தனியே சூடப்படுவதுதான். தொடர்பு கருதி இரண்டு பூக்கள் இடம்பெற்றன. என்ன தொடர்பு?

கைகலந்து போர் செய்வது தும்பைத் திணை. இதற்கு உரியது தும்பைப் பூ. இப்போர் ஆநிரைகளைக் கொண்டபின் மீட்டும் போர்க்களம் அமைக்கவும், கவர்ந்தோர் அவரை எதிர்த்துக் களம் அமைக்கவும் களத்தில் போர் நிகழலாம். இது வெட்சிப் போர். வஞ்சிக் சூடிச் சென்ற உடனேயே களத்தில் போர் நேரலாம். இது வஞ்சிப் போர் முற்றுகையின்போது போர் நேரலாம். இஃது உழிஞைப் போர். அவ்வந் நிகழ்ச்சிக்கு ஏற்பச் சூடப்பட்ட திணைப் பூவுடன் கைகலக்கும் தும்பைப் பூவும் இணைத்துச் சூடப்படும். இதனைத் தொல்காப்பியத்திற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர்,

*''வெட்சிப் புறத்துத் தும்பை''*

*''வஞ்சிப் புறத்துத் தும்பை''*

*''உழிஞைப் புறத்துத் தும்பை''* [2] — என்று காட்டினார். இதற்கேற்பச் சிலப்பதிகாரம் குறி காட்டுகின்றது: சேரன் செங்குட்டுவன் *''வடதிசைத் தும்பை வாகையொடு முடித்து''* [3] விளங்கினான். அவனது யானையும் *''வாகை தும்பை வடதிசைச் சூடியது''*

ஆனல், இவ்வாறு இரண்டு புறப் பூக்கள் சூடும் காட்சியைச் சிலம்புதான் காட்டுகின்றது. அதனிலும் தும்பையோடு மட்டும் சூடப்பட்டதாகக் காண்கிறோம். இதற்குமேலும் போர் வீரர் மன்னரது தலையை நோக்கினால் மூன்று பூக்களைக் காணலாம். மூன்றாவதுபூவோ முதற் பூவாகும். அஃது அரசர்க்குரிய ஆத்தி வேம்பு, பனம் பூக்களில் ஏற்ற ஒன்றாகும்.

---

1 *சிலம்பு* : 27 : 221, 222.

2 *தொல்* : *புறத்திணை* ; *நூற்பா* 16 *உரை*.

3 *சிலம்பு*: 27 : 198.

இப்புறப்பூக்கள் தனிப் பூவாகவும் சூடப்படும். கொத்தாகவும் சூடப்படும். தழையோடும் கொடியோடும் சூடப்படும். இவற்றை வீரர்படை சூடிச் செல்லும்போது தொலைவிலிருந்து நோக்கினாலும் அறிந்துகொள்ளும் அளவில் பெரும் பரப்பாகக் காட்சியளிக்கும். ஆநிரைகளைக் கவரும் வீரர் வெட்சிப் பூவைச் சூடிச் செல்கின்றனர். அத்தோற்றத்தை,

*"வெவ்வாள் மறவர் மிலைச்சிய வெட்சியால்*
*செவ்வானம் செல்வதுபோல் செல்கின்றார்"*[1] —எனப் பெரும் பொருள்விளக்கப் பாடல் குறிக்கின்றது. இதனால் வெட்சியின் பளிச்சிடும் செம்மையையும் பெரும்பரப்பையும் ஒரே சீரான தோற்றத்தையும் அறிய முடிகின்றது. இதுபோன்றே பிற பூக்களும் சூடப்பட்டுக் காட்சி தரும்; அறிவிப்பையும் தரும். பூக்களின் உலகத்தில் புறப் பூக்கள் பெற்ற தகுதி குறிப்பிடத்தக்கது. இத்தகுதி பெற்ற ஒவ்வொரு பூவைப்பற்றியும் விவரமாக அறிதல் நலம்.

## கவரும் மலர்
## வெட்சி

### இனமும் மணமும்

வெட்சிப் பூவால் பெயர்பெற்றது வெட்சித் திணை. பகை நாட்டாரது ஆநிரைகளைக் கவரப் போகும்போது அதன் அடையாளமாக இப்பூவைச் சூடுவர். இப்படை வீரர் வெட்சியார் எனப்பட்டனர்.

*"வெட்சிக் கானத்து வேட்டுவர் ஆட்ட"*[2]
*"கடத்திற் கலித்த முடச்சினை வெட்சி"*[3] —என்றும் சங்கச்

---

1 பெரும்பொருள் விளக்கம் (புறத்திரட்டு : 752)
2 புறம் : 202 : 1. 3 குறு : 209 : 5.

செய்யுள் அடிகள் ஒரு விளக்கத்தைத் தருவன. ''வெட்சிக் கானம்,'' ''கடத்திற் கிளைத்த'' என்பவற்றால் 'வெட்சி காட்டில் வளர்வது; காடுபோன்று பெருகி வளர்வது, தளைத்துக் கிளைவிட்டு வளர்வது' எனத் தெரிகின்றது. மேலும் ''முடச் சினை'' என்றதனால் வளைந்த கிளைகளை உடையது என்பதும் தெரிகின்றது. இலக்கியங்களில் இத்தொடர் வளைந்த கிளைகளையே குறிக்கும். இவ்வடைமொழி பெற்றுள்ள புன்னை, ஓமை, மருதம், காஞ்சி முதலிய மரங்கள் வளைந்த கிளைகளை உடையவை. எனவே, வெட்சி ஒரு மரம்.

இதன் பூ கோட்டுப் பூ.

''*புல்லிலை வெட்சியும் பிடவும் தளவும்*''[1] - என்பதால் இதன் இலை புல்லிய இலையாகும். புன்மை என்னும் சொல் பல பொருள் தரும். ''புல்லிலை நெல்லி'' என்பர். இங்கு சிறிய இலை என்ற அளவில் சிறுமையைக் குறிக்கும். ''புல்லிலை எருக்கு'' எனப்படும். இங்கு வெறுப்பான மணத்தைத் தரும் இலையாகையால் 'இழிவு' என்னும் பொருள் தரும். ''புல்லிலை வெதிர்'' என்னுமிடத்தில் அகலமில்லாத சிறுமையோடுசொறசொறப்புள்ளமையால் இலைக்குரிய மென்மை இல்லாத 'குறை'யைக் குறிக்கும். வெட்சி ஓரளவு அளவில் சிறிய இலையைக் கொண்டது. வெறுப்பான மணமுள்ளதன்று. அவ்வாறாயின் சூடிக்கொள்ளக் கொண்டிருக்க மாட்டார்கள். ஓரளவு மொறமொறப்புள்ளது.

இப் பூவின் நிறத்தை, முன்னே கண்ட ''செவ்வானம் செல்வதுபோல் செல்கின்றார்'' என்றதால் நல்ல செம்மை நிறம் என்று அறியலாம். அத்துடன் ''செங்கால் வெட்சி'' எனத் திருமுருகாற்றுப்படை குறிப்பதனையும் கொண்டு முழுச்செம்மை மலர் என்று கொள்ளலாம். இதற்குரிய மறுபெயர் செச்சை என்பது 'செச்சை' செம்மை என்னும் பொருள்கொண்டது. எனவே வெட்சிப்பூ நல்ல செம்மை நிறங்கொண்டது. காம்புமுதல் முழுதும் செம்மை நிறம் கொண்டது.

''........................................ *வெட்சித்*

*தளையவிழ் பல்போது கமழும்*

*மையிருங் கூந்தல் மடந்தை நட்பே*''[2] -எனக் குறுந்தொகை

1 கலி : 103 : 2.

2 குறு : 209 : 6, 7.

குறிப்பதால் இது மணம் கமழும் பூ. மகளிர் கூந்தலில் மணம் ஏறும் அளவில் மணம் கமழ்வது, மேலும் இவ்வடிகளைக் கொண்டு சூடப்படும் பூ என்றும் அறியலாம்.

இங்கு, தனியாக சூடப்பட்டதைக் காண்கின்றோம்.

*"வெட்சி தாழை கட்கமழ் ஆம்பல்*
*நெய்தல் புன்னை மருதம்*
*கூட முடித்த சென்னியன்"*[1] –என்பதால் பிற பூக்களுடன் தொடுத்துத் தலையில் சூடப்படும் என்பதையும் அறியலாம். அத்துடன் ஆடவரும் ஒப்பனையாக அணிவதையும் உணரலாம்.

*"செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு"*[2] என்னும் திருமுருகாற்றுப்படை அடியில் "சீறிதழ்" என்பதால் இதன் இதழ் சிறியது எனக் காண்கின்றோம். இதழ் சிறியதாயினும்,

*"வெட்சி மா மலர் வேங்கையொடு விரைஇ"*[3] எனும் புறப் பாட்டால் இதன் பூ பெரியது என அறியலாம். அதன் பழைய உரைகாரரும் "வெட்சியினது பெரிய மலரையும்" என்றே எழுதினார். எனவே சிறிய இதழ்கள் பலகொண்டு காலுடன் கூடிய பெரிய பூ.

## விடு பூ

மேற்கண்ட திருமுருகு அடியில் "இடையிடுபு" என்னும் சொற்றொடர் இடையே இடப்படுவது என்று குறிக்கின்றது. பல பூக்களால் மாலையாகக் கட்டும்போது மாலையில் இடைவெளி தெரியும். அவ் இடுக்கில் இப்பூவைச் செருகி இடுவர். இவ்வாறு இடையே விடப்படும் பூவை "விடு பூ" என்பர். இது மாலைக்கு அழகு ஊட்டுவதாகும்.

மேற்கண்ட அடிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர்,

*"சிவந்த கால்களையுடைய, வெட்சியுடைய*
*சிறிய பூக்களை விடு பூவாகத் தூவி"* –என்று 'விடுபூ' வாக விளக்கினார். ஆனால், இங்குச் "சிறிய பூக்களை" எனச் சிறிய

1 சிலம்பு : 22 : 68—70.
2 திருமுருகு : 21, 22.
3 புறம் : 100 : 5

பூவாகக் குறித்தது பொருந்துவதாக இல்லை. விடு பூவாக அறிவிக்கும் "இடையிடுபு" என்னும் தொடரைப் பரிபாடலும்,

*"வெல்போர்*

*எரிநகை இடையிடுபு இழைத்த நறுந்தார்*

*புரியலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்"*[1] —எனத் திருமாலை விளித்தது. இங்கு, துழாய் மாலையின் இடையில் விடு பூவாகச் செருகப்பட்டுள்ளது. மேலும் "இழைத்த" என்றதால் அழகு ஊட்டப்பட்டதாகக் கொள்ளலாம்.

இவ்வடிகளில் வெட்சியைக் குறிக்க உரிய நேர்சொல் இல்லை. "வெல்போர் எரிநகை" என்னும் தொடரைக்கொண்டே வெட்சி மலரைக் காணவேண்டும். "வெல்போர்" என்றதால் போருக்குரிய புறப் பூ என்றறியலாம். "எரி நகை" என்றதால் தீப்போலும் சிவந்த நிறத்தது என்றும் கொண்டு உரை எழுதியவர் வெட்சிப் பூ என்றே எழுதினார். இது பொருந்துவதே.

இது விடு பூவாக அழகு ஊட்டப் பயன்படுத்தப்படும் என்பதை மற்றோரிடத்திலும் காண முடிகின்றது. மதுரை வையை ஆற்றுப் புது வெள்ளத்தில் மகளிரும் மைந்தரும் நீராடச் செல்கின்றனர். கண்ணி சூடிய காளையர்; கோதை சூடிய கன்னியர்; தார் அணிந்த மைந்தர், மகளிர் அணி அணியாகச் செல்கின்றனர். இதனைப் பரிபாடல்,

*"ஈர் அமை வெட்சி இதழ் புனை*

*தாரார் முடியர் தகைகெழு மார்பினர்*

*கோதைய"*[2] ரைக் காட்டுகின்றது. இதில் "இதழ் புனை தார்" என்பது தார் வெட்சிப் பூவால் புனையப்பட்டதை, அஃதாவது புனைந்து அழகு ஊட்டப்பட்டதைக் காட்டுவதாகும். இவ்வாறு அழகு ஊட்ட வெட்சியின் சிறிய இதழ் பயன்படுத்தப் பட்டது.

இவ்விதழ், "ஈர் அமை வெட்சி இதழ்" எனப்பட்டது. இதனால், இப் பூ தேன் நெய்ப்பால் ஈரம்பெற்றதாகவேண்டும். அன்றி இயற்கையில் ஈர நைப்பு உள்ளதாக அமைந்திருக்க

---

1 பரி : 13 : 59, 60.
2 பரி ; 22 : 22, 23

வேண்டும். இயற்கையில் ஈர நைப்பு அமையப்பெற்றது என்பதை "ஈர் அமை" என்றதில் 'அமை' என்னும் சொல் வலியுறுத்துகின்றது. எனவே இதன் இதழ் ஈரப் பிடிப்புள்ளது.

இப் பூவின் முகைபற்றி ஓர் உவமையால் அறிய முடிகின்றது. 'இதல்' எனப்படும் காடைப் பறவையின் கால்களில் பின்புறத்தே ஒரு விரல் அமைப்பு முள்போன்று தோற்றமளிக்கும். இதனைக் காட்டி,

"*இதல் முள் ஒப்பின் முகைதிர் வெட்சி*"[1] என்றார் மருத்துவன் தாமோதரனார். பிடவம் என்பதன் முகையும் இது போன்றதே. எனவே இதன் முகை கூரிய முனையுடையது என்றாகின்றது.

இவ்வடியை அடுத்து வருவது

"*கொல்புனக் குருந்தொடு கல்லறை தாஅம்*" —என்னும் அடி. இதனால் குருந்தம் பூவுடன் உதிர்ந்து கிடப்பதை அறியுங்கால் இது தனிப் பூவாக உதிர்வதை அறியலாம்.

யாவற்றையும் ஒன்றுகூட்டி, வெட்சிப் பூ,

கோட்டுப் பூ;
முல்லை நிலத்தது;
புல்லிய இலைகளை உடையது;
செம்மை நிறங்கொண்டது;
மணம் கமழ்வது;
ஒப்பனை கருதியும் சூடப்படுவது;
சிறிய இதழ்களைக் கொண்ட பெரிய பூ;
மாலையில் விடு பூவாகப் பயன்படுவது;
ஈர நைப்புடையது;
விரைவில் உதிரக் கூடியது —என்றெல்லாம்

கொள்கின்றோம்.

---

1 அகம் : 188 : 14,15.

## வெட்சி விருச்சியா?

ஆனால் இக்காலத்தில் 'விருச்சி – பிருச்சி' என வழங்கும் பூவை வெட்சி என்று கருதுகின்றனர். இப்பூவை உளத்துக் கொண்டே கலைக்களஞ்சியத்திலும் வெட்சிப் பூவிற்கு,

'செடி அல்லது குற்றுமரம்; பூ சமதள வளரா நுனி, கொத்துப் பூ; வெள்ளை நிறமும் உண்டு; செவ்வெட்சிப் பூ அழகு; குளக்கரையில் வளர்வது' என்றெல்லாம் விளக்கமளிக்கப் பட்டுள்ளது. இலக்கியங்களில் காணப்பட்ட "பல்போது" "செங் கால்", "சீறிதழ்" என்பன இவ் விளக்கத்திற்குச் சான்றாகலாம்.

ஆனால், 'வெட்சி கொத்துமலர்' என்று எங்கும் சுட்டப் படவில்லை. 'இணர்க்கொன்றை', 'காஞ்சித் துணர்' 'இணர் ததை ஞாழல்' என்றெல்லாம் கொத்தான மலர்கள் அடைமொழி கொடுக்கப்படும். இவ்வாறு வெட்சி காட்டப்படாமையால் கொத்து மலர் அன்று. விருச்சி என்பது மணம் கமழ்வது அன்று. இலை புல்லியது அன்று. கொய்யா இலை வடிவத்தில் மேலும் சற்று நீளமானது. நொய்தானதும் அன்று. புன்மை என்னும் சொற்குப் பொருந்துவதன்று. யாவற்றிற்கும் மேலாக இது குற்றுச்செடி. தரையில் பெருங்கோலாக நீண்டு வளர்ந்து அதன் கொப்பில் பூப்பது. வளைந்த கிளைகளை உடையது அன்று. எவ்வகையிலும் மரமெனல் பொருந்தாது. இதில் வெண்மை நிறக்கொத்து உண்டு. வெட்சியில் வெண்மைநிறம் குறிக்கப்படவே இல்லை. இவ்வகையிலும் பொருந்தாது. ஈர நைப்புடையதும் அன்று. விரைவில் உதிராது. கொத்தாகவே வாடும்.

விருச்சி என வழங்கப்படும் இப் பூ வெட்சிப் பூ அன்று தான். இது வெட்சியின் இடத்தைப் பிடித்துக்கொண்டது. விருச்சி என்ற இதன் பெயரும் வெட்சியின் தொடர்பில் உண்டானது.

தமிழர் திருமணத்தில் முல்லைப் பூவுடன் நெல்லைக் கலந்து தூவி வாழ்த்துவது மரபன்றோ? நற்சொல் சொல்லும் சோதிடம் 'விருச்சி' எனப்படும். இவ்விருச்சிக்கு முல்லையொடு

நெல் தூவப்படுவது உண்டன்றோ? இதுபோன்று வெட்சிப் பூவையும் தினையையும் கலந்து தூவி விருச்சி சொல்லப்படும் பழக்கம் உண்டு.

*"நாளும் புள்ளும் கேளா ஊக்கமொடு*
*எங்கோன் ஆயினன் ஆதலின் யாமத்தும்*
*செங்கால் வெட்சியும் தினையும் தூஉய்"* —என்று தகடூர் யாத்திரைப் பாடல் (புறத்திரட்டு காட்டும் பாடல்) தினையொடு வெட்சிப் பூ தூவப்பட்டு விருச்சி கேட்டதைக் காட்டுகின்றது.

இவ்வாறு விருச்சி சொல்ல வெட்சிப் பூ கொள்ளப்பட்டது கொண்டு விருச்சிக்குரிய பூ — விருச்சிப் பூ — விருச்சி என்று பெயராயிற்று.

அவ்வாறாயின் இப்புதுப் பூவின் இயற்பெயர் என்ன?

வெட்சியை விளக்கும் கலைக்களஞ்சியத்தில் வெட்சியின் மாற்றுப் பெயர்களாகத் 'தெட்டி', 'தச்சி' என்னும் சொற்கள் குறிக்கப்பட்டுள்ளன. இதன்படி 'தெட்டி அல்லது தச்சி' என்பது இதன் பெயராக இருக்கலாம். மேலும் 'சுளுந்துக் கோரை' என்று இதன் நாட்டு வழக்கும் அறிவிக்கப்பட்டுள்ளது. 'தெட்டி தச்சி' என்னும் சொற்களின் ஒலி வெட்சி ஒலியை ஒத்திருப்ப தாலும், செம்மை நிறம் முதலிய சில ஒற்றுமைகளாலும் இது வெட்சி என கருதப்படலாயிற்று.

ஆனால், விருச்சி என்றோ, தெட்டி, தச்சி என்றோ பூவின் பெயர்கள் இலக்கியங்களில் குறிக்கப்படவில்லை. பிற்கால அகர முதலிகளில் இச்சொற்களில் தெட்டி மட்டும் வெட்சி எனும் பொருளில் காட்டப்பட்டுள்ளது. 'விருச்சி, தெட்டி' எனும் பூ வழக்கு காணப்படவில்லை.

இவற்றைக்கொண்டு நோக்கினால் இச்செடிப் பூ பிற் காலத்தில் வந்தேறிய செடியாதல் வேண்டும். தற்காலத்தில் காட்டுக் கருவை என்றொரு சிறு மரவகை பல்கிப் பரவி விளங்குவதைப் போன்று இங்கு பரப்பப்பட்டுப் பல்கியிருக்கலாம்.

'தெட்டி' என்னும் சொற்கு வஞ்சகன் என்று பொருள். இச்செடியும் வஞ்சமாக வெட்சியின் பெயரைச் சூட்டிக்கொண்டது போலும்.

மற்றொரு பெயராகிய செச்சை இலக்கிய வழக்கில் இடம் பெற்றது. *"பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்"* [1] என அகப் பொருள் தலைவன் சூடியதையும்,

*"கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்"* [2]

— என முருகன் முடிமேல் ஏறியதையும் காட்டின. 'செச்சை' என்னும் சொல், பசுமை-பச்சை ஆனது போன்று செம்மைஎன்பதன் மருஉ மொழி.

வெட்சி முல்லை நிலத்துப் பூ. இதனை

*"வெட்சி கானம்"*, *"கடத்திற் கலித்த"* என்னும்சொற்றொடர் கள் காட்டில் முல்லை நிலத்தில் காட்டும் தினைப்பயிர் கொய்யப் பட்ட பின் இதன் அடித்தட்டைகள் எரித்து அழிக்கப்படும். இவ்வாறு அழிக்கப்பட்ட புனம், அஃதாவது தினைக் கொல்லை 'கொல் புனம்' எனப்படும். அப்புனத்தின் இடையில் உள்ள பாறைகளில் வெட்சிப்பூ உதிர்ந்து கிடக்கும். பக்கத்தில் உள்ள குருந்த மரப் பூவும் இத்துடன் உதிர்ந்து கிடப்பதை முன்னரே கண்டோம். தினைப்புனம் முல்லை நிலம். குருந்தம் பூவும் முல்லை நிலப் பூ. இவற்றால்,

வெட்சிப் பூ முல்லை நிலப் பூ.

முல்லை நிலப்பூவாயினும், புறத்திணைப் பூவாக எங்கும் சூடப்படும். வெட்சிப் போரில் வெற்றி பெற்றதும் கவர்ந்த ஆநிரை களை முறைப்படி பரிசாகப் பங்கிட்டுக்கொண்டு விழாக்கொண்டாடு வர். அவ்விழாவிலும் வெட்சி சூடிப் பாடி, ஆடுவர். இவ் வகைப் போர் விழா சிறுகதையாக முடிந்துவிடுவதன்று. தொடர்கதையாகத் தொடரும்.

விழாக் கொண்டாடிக்கொண்டிருக்கும்போது தமது ஆநிரை களைப்பறிகொடுத்தோர் ஆர்ப்பாட்டமாக எதிர்த்து வந்து விடுவர். போர்க் கதை தொடங்கும். இக்கதையில் வெட்சிப் படலத்தோடு கரந்தைப் படலம் தொடரும். தொடர வந்தவர் தலையில் வேறு ஒரு மாற்றுப்பூ தெரியும். அது என்ன பூ?

---

1 *அகம்* : 48 : 10.
2 *திருமுருகு* : 208.

# மீட்கும் மலர்

## கரந்தை

### கரந்தை வயல்

அதுதான் கரந்தைப் பூ. இப்பூவால் பெயர்பெற்றது கரந்தைப்போர். தமது ஆநிரைகளைப் பறிகொடுத்தோர் அவற்றை மீட்கும் போருக்கு முனைவர். அதன் அடையாளமாகக் கரந்தைப் பூவைப் போர் மரபிறந்த அறிஞர், வீரரது தலையில்சூட்டுவர். இவ்வாறு,

*''விரகறியாளர் மரபிற் சூட்ட''* [1] இவ்வீரர் இப்பூவால் கரந்தையார் ஆவர். இப்படையைக்காண்போர் 'இவர் ஆநிரைகளை மீட்கச் செல்கின்றனர்' என, *''கரந்தையஞ் கண்ணியாற்கண்டு''* [2] கொள்வர்,

ஆநிரைகளை மீட்கமட்டும்அன்று, யானை முதலிய பிற கவரப்படின் அவற்றை மீட்கவும் கரந்தைப் பூவைச் சூடிச்செல்வதும் உண்டு. இப் பூவைத் தலையிற் கண்ணியாகச்சூடுவதுமட்டுமன்று; மாலையாகவும் அணிந்து,

*''தொடலைக் கரந்தை மறவ''* [3] ராக விளங்குவர்.
வீரர் இப்பூவாற் பெயர் பெறுவது போன்று, இது விளையும் நிலமும் இதனை அடைமொழியாகப் பெற்றது.

இது வயற்புறங்களில் பயிர்த்தொழில் முடிந்ததும் முளைக்கும். வயலில் நிறைய வளர்வதால் இவ்வயல்,

*''கரந்தை அம் செறுவில் பெயர்க்கும்''* [4]

*''கரந்தை அம் செறுவில் வெண்குருகு ஒப்பும்''* [5] –என்று 'கரந்தை வயல்' எனப்பட்டது. விளையும் நிலத்திற்கும் தனது பெயரை இவ்வாறு ஏற்றும். விளை நிலம் வயலாததால்,

இது மருதநிலப் பூ

---

1 புறம் : 261 : 14.
2 தொல் : புறத் திணையியல். மேற்கோள் பாடல்,
3 பெரும்பொருள் விளக்கப் பாடல்,
4 புறம் : 340 : 8
5 அகம் : 226 : 6

"*காய்த்த கரந்தை மாக் கொடி விளைவயல்*"[1] என்றார். காப்பியாற்றுக் காப்பியனார். "மாக்கொடி" என்பதில் 'மா' கருமையைக் குறிக்கும். எனவே, இதன் கொடி சற்றுக்கரிய நிறமுடையது.

**எனவே, இது கொடிப் பூ**

## மான்மடிக் காம்பு

ஆவூர் மூலங்கிழார் என்னும் வேளாண்குடிப் புலவர் இப்பூவில் மனம் பதித்தார். ஆவலோடு நோக்கினார். இவர் நினைவில் இளைய மரைமான் நினைவிற்கு வந்தது. அதன் சிறிய பால் மடிக்காம்பு கண்ணில் நின்றது. இக்காம்பு குமிழ் வடிவம் கொண்டது. அதனை உவமையாக்கி,

"*நாகு முலை அன்ன நறும்பூங் கரந்தை*"[2] —என்று பாடினார். இத்தோற்றமுடைய பூ குமிழ் வடிவப்பூ எனப்படும். இவரது உவமையொடு "நறும் பூங் கரந்தை" என்றமைந்த தொடர் இதன் மணத்தைச் சொல்லுகின்றது. ஆம், இது மணமுள்ள பூ. மணம் மென்மையானதன்று; சற்று அழுத்த மணம் கொண்டது. இதனால், நச்சினார்க்கினியார் இதனை, "நாறு கரந்தை" என்றார்.

"*நாறு கரந்தை யினானும்*" என அப்பரும்,

"*சடைமேவு நாறு கரந்தையோ*" எனச் சுந்தரரும் குறித்தனர். சிலர் கரந்தையுள் இஃதொருவகை என்பர்.

இப்பூவை ஆத்தி மரப்பட்டையை அம்பால் ஈர்ந்துக் கிழித்த நாரில் கட்டிச் சூடிக் கொள்வர். இதன் நிறம் சிவப்பு. மருதன் இளநாகனார்,

"*அம்புகொண் டறுத்த ஆர் உரிவையின்*
*செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி*"[3] என்றார்.

"செம்பூங் கரந்தை" இதன் செய்மை நிறத்தைக் காட்டுகின்றது. இதனைக் "காய்த்தை கரந்தை" என்று இது காய்ப்பதை ஒரு குறிப்பாகக் காட்டுவதால் இதன் காய் நோக்கத்தக்கது.

---

1 பதிற் : 40 : 5, 6.
2 புறம். 261 : 18.
3 அகநானூறு : 269 : 10, 11.

இது கொட்டையாகக் காய்க்கும். எனவே, இதனைக் 'கொட்டைக் கரந்தை' என்றும் வழங்குவர்.

இதன் முதல் நிறம் சிவப்பே. பின்னர் கலப்பால் உண்டான நிறம் நீலங்கலந்த சிவப்பு. சிவந்த கரந்தைப் பூவே புறப்பூவாகச் சூடப்படுவது.

இச்சிவந்த கரந்தைப் பூவைச் சிவபெருமானுக்கும் சூட்டி வழிபட்டனர். எனவே சிவபெருமானுக்குரிய பூவாகக் கரந்தையும் அமைந்தது. தேவார ஆசிரியர்கள் கரந்தையைச் சிவபெருமானுக்கு அமைத்துப் பாடினர். கந்த புராண ஆசிரியர் முருகனை,

*"கரந்தை சூடுவான் திருமகள் இளையோன்"*[1] என்றார்.

*"கரந்தை திருமுடிமேல் காணக் கண்டா"*ராம் அப்பர். இந்த நிறத்தில் சமயப் பங்கும் இடம் பெற்றது. சிவந்த நிறச் சிவனுக்கு அமைந்த சிவப்புக் கரந்தைப் பூ 'சிவ கரந்தை' என அச்சமயத்தாரால் கொள்ளப்பட்டது. இதனை அறிந்த திருமாலியத்தார் நீலங்கலந்த சிவப்புக் கரந்தைப் பூவை நீல நிறத்துக் கடவுளாம். திருமாலுக்குரியதாக்கி 'விட்டணு கரந்தை' என்றனர். நாட்டு வழக்கில் **'விச்ணு கிரந்தி'** என்பர்.

கரந்தைப் போரில் வென்றாலும் தோற்றாலும் வம்பு வளரும். போர் மூளும். எவரேனும் முதலில் தாக்குவதற்கு முனைந்துப் பகைவர் மேற் செல்வர். வாயாற் சொல்லாமல் பூவாற் சொல்லிச் செல்வர் என்ன பூவாற் சொல்வர்?

---

72. கந்த: பு : அக்கினிமுகாசுரன் வதை : 214.

# மேற்செலவு மலர்

## வஞ்சி

### கொடிப் பெயர்

வஞ்சிப் பூவாற் சொல்வது போன்று தலையிற் சூடிப் போர்க்கு எழுவர். "வட்கார் மேல் செல்வது வஞ்சி" என இப் போர் இப் பூவாற் பெயர் பெற்றது.

*"வஞ்சிக் கோட்டு உறங்கும் நாரை"*[1] —என்றும்,

*"வஞ்சி ஓங்கிய யாணர் ஊர"*[2] —என்றும் வஞ்சி மரம் அறியப்படுகின்றது. வஞ்சியில் மரமும் உண்டு. வஞ்சிக் கொடியும் உண்டு. எதன் பூவைப் புறப் பூவாகக் கொண்டனர்? இலக்கண இலக்கியங்களில் எது என்று குறிக்கப்படாததால் இது வினாவில் இடம் பெறுகின்றது.

வஞ்சி என்னும் சொல் பலபொருள் ஒரு சொல்.

*"பகைவர் மேற்சேறலும் புதலும் (கொடியும்) மங்கையும்*
*பாலிலோர் பாவும் ஓர் பதிப்பெயரும்*
*மாற்றார் குடையும் வஞ்சி யாகும்"*[3]

—எனப் பிங்கல நிகண்டு பொருள்களை அடுக்கியுள்ளது. இதற்கேற்ப இலக்கிய ஆட்சிகளும் உள. எனவே, கொடியென்னும் பெயரே பெரும் வழக்காகின்றது. இப்பொருள்களில் "ஓரூர்ப் பெயரும் வஞ்சி யாகும்". அவ்வூர் கொடிப்பூவாற் பெற்ற பெயர் என்பதை,

*"பூங்கொடிப் பெயர்ப் படூஉம்*
*திருந்திய நன்னகர்"*[4] —என்பதனாலும் அறியலாம். இவ்வாறாகச் சொற்பொருளும், ஊர்ப்பெயராகும் குறியீடும் கொடிப் பெயரோடு தொடர்புடைமையால் கொடிப்பூவையே கொண்டனர் என உணரலாம். எனவே,

வஞ்சி என்னும் புறத்திணைப் பூ கொடிப் பூ.

---

1 புற : 384 : 2
2 ஐங் : 50 : 2
3 பிங். நி :4015
4 மணி 28 : 101, 102.

# செந்நிறப் பூ

பூவின் தொடர்பிலேயே ஊர்ப்பெயர் அமைந்ததைப் "பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற் (வஞ்சிமாநகரில்) போர்த்தொழில் தானை குஞ்சியிற் புனைய"[1] என்றதில் பூத்ததும் பூவாததும் உணர்த்துகின்றன.

போர்மேற் சென்ற மன்னரைக் குறிக்கும் மதுரைக் காஞ்சி,

"*சூடு உற்ற சுடர்ப் பூவினைச்*"[2] – சூடிச் சென்றதாகக் குறித்தார். இங்கு, "சூடு உற்ற" என்பது சூடுதற்குப் பொருந்திய எனப் புறப் பூவாகச் சூடுவதைக் குறிக்கும். எனவே, வஞ்சிப் பூவாகும். இப் பூ 'சுடர்ப் பூ'. பூவிற்கு அடைமொழியான 'சுடர்' என்னும் சொல் நெருப்பு, விளக்கம், ஒளி என்னும் பொருள்களில் அமையும்.

"*சுடர்ப் பூங் கொன்றை*"[3]

"*சுடர் இதழ்த் தாமரை*"[4] –என இம் மதுரைக் காஞ்சியிலே வருகின்றன. கொன்றையும் தாமரையும் வெவ்வேறு நிறத்தவை. இரண்டிடத்திலும் நச்சர் "ஒளியை உடைய" என்று ஒளியாகப் பொருள் எழுதினார். "சுடர்ப்பூ இலஞ்சி" என்னும் இடத்திலும் ஒளியாகப் பொருள் கொண்டார். குளத்தில் பல நிறப் பூக்கள் உள்ளமையால் ஒளி நிறத்தைக் குறிப்பதாகாது. இங்கு "சூடு உற்ற சுடர்ப் பூ" என்றதற்கு "விளக்கத்தை உடைத்தாகிய வஞ்சியினை" என்று விளக்கப் பொருள் எழுதினார். இதுபோன்று பிற நூல்களிலும்,

"*சுடர்ப் பூங் காந்தள்*"[5]

"*சுடர் புரை தோன்றி*"[6] – எனப் பெரும்படியாகச் சிவந்த நிறப் பூக்கள் 'சுடர்' என்னும் அடைமொழி பெற்றுள்ளன. மேலும், "வாடா வஞ்சி தலைமலைந்து" எனப் பொன்னால் செய்த வஞ்சிப் பூவைச் சுட்டுவதால் நிறங்கருதி அல்லாமல் ஒளியை உடைய பூவாகவும் கொள்ள வேண்டும். இவ்வாற்றால்,

வஞ்சிப் பூ செம்மை நிறப் பூ.

---

1 மணி : 26 : 78, 79
2 மது கா : 225.
3 மது கா : 227.
4 மது கா : 710
5 திருமுருகு : 43
6 அகம் : 364 : 6.

## பாட்டில் வஞ்சி

போர்த்தொடர்பான அறிவிப்புகளின்போலும், விழாக் களிலும் 'கிணை' என்னும் தடாரிப்பறை முழக்கப்படும். இப்பறை அரித்து எழுவதுபோன்று ஒலிப்பது. இப்பறையை ஓங்கிஅடித்துப் பாடலும் பாடப்படும். இப்பாடல் இசை, வஞ்சிப் பெயர் பெற்றது.

*''அரிக்கூடு மாக்கிணை இரிய ஒற்றி*

*எஞ்சா மரபின் வஞ்சி பாட''*[1] —என்பதில் ''எஞ்சா மரபின் வஞ்சி'' என்றிருப்பது இப்பாடல் பாடப்படுவது வழி வழி வழக்கம் என்பதையும், அம்மரபிற் குறை நேராது பாடப்படும் என்பதை யும் அறிவிக்கின்றது. இவ்விசையை ''மருத யாழ்த்திறத்து ஓர் ஓசையாக''[2] வகுத்தனர் இசை நூலார்.

இவ் வஞ்சியின் பெயரால் 'வஞ்சிமாலை', 'பேர் வஞ்சி' என்னும் புற நூல்கள் உள. 'வஞ்சிப்பாட்டு' என்றொரு நாடக நூல் இருந்து மறைந்தது. 'வஞ்சிப்பா' என்னும் பாடல் வகையும் எந்த வஞ்சிப்பும் இல்லாததால் இப் பூவின்ஆகுபெயரால் பெயர்பெற்றதே. வஞ்சி என்னும் சொல் வஞ்சிப்பதைக் குறிப்ப தாயினும் போரில் வஞ்சியாமல் நேர்மையை அறிவிக்கும் சின்னமாக நற்செயல் புரிவது. எனவே, வஞ்சியாத வஞ்சிப் பூ. வஞ்சிக்காத பூவிற்கும் ஓர் எதிர்ப் பூ எழுந்தது. அது காஞ்சிப் பூ.

# எதிரூன்றும் மலர்

## காஞ்சி

## கோதைப் பூ

காஞ்சிப் பூவாற் பெயர் பெற்றது காஞ்சித் திணை. ஆயினும் இத்திணை காஞ்சிப் பூ சூடப்பட்டுப் பெயர் பெற்றதும் உண்டு. சூடப்படாமலே பெயர் பெற்றதும் உண்டு. தொல் காப்பியர் காஞ்சித் திணைக்குச் சான்றோர் அறிவுரைப்

---

1 *புறம்* : 378 : 8, 9.   2 *பிங். நி* : 4016.

பொருளை, அதனிலும் நிலையாமைப் பொருளை அமைத்தார். வஞ்சியாரை எதிர்த்து ஊன்றுவதற்கும் இடம் தந்தார். புற இலக்கியங்களிலும் பிற்கால இலக்கணங்களிலும் இரண்டிற்கும் இடங்கள் அமைந்தன.

*"காஞ்சி சூடிக் கடிமனை கருதி"யது*[1] என்பது காஞ்சி சூடிய எதிர்த்தாக்குதல்.

கைவிடமுடியாப் போர் மூள்வதும், அப்போரினால் அவலம் நேர்வதும் ஆகிய இரண்டும் உள்ளமையால் காஞ்சிக்கு இரண்டும் பொருத்தமாயின.

*"காஞ்சி சான்ற செருப்பல செய்து"*[2] என்று பாடிக் 'காஞ்சிப் பூச் சூடிய போர்' என்றும், காஞ்சிப் பூச் சூடாது 'நிலையாமை பொருந்திய' என்றும் இருபொருளும் பொதிய வைத்தார் பெருங்குன்றூர்கிழார்.

இப் பூவைத்தரும் காஞ்சி ஒரு மரம்.

*"முடக் காஞ்சிச் செம்மருதின்"*[3]

*"குறுங்காற் காஞ்சிக் கொம்பர் ஏறி"*[4] —என்றபடி இம் மரம் குட்டையான அடிப்பகுதியைக் கொண்டது; வளைந்த கிளை களை உடையது. நீர்த்துறைகளில் தழைத்து வளரும் "நீர்த் தாழ்ந்த குறுங்காஞ்சி"யின் (புறம் : 18 : 7,8 ) பூக்களை மீன் கவ்வித் தின்னும் வயற்புறங்களிலும் வளரும். இம்மரம் இலக்கியங் களில் மருத மரத்துடன் சேர்த்துப் பேசப்படும். மருதோடு நின்று வளர்வது. எனவே,

இப் பூ மருத நிலப் பூ.

தனது தலைவனது ஊர் வளத்தைப் பாராட்டும் ஒரு தலைவி அவ்வளத்தின் ஓர் அறிகுறியாக "*நனைய காஞ்சி*"[5] என்றாள். காஞ்சி அரும்புகள் செறிந்து தழைத்த காஞ்சி, தோற்றத்தில் கவர்ச்சியைத் தருவது. இம்மலர் இம்மரக் கிளை களில் செறிந்து கீழ்நோக்கித் தொங்கும். எனவே,

---

1 புற. வெ மா : காஞ்சி : கொளு
2 பதி ப : 84 : 19
3 பொருநர் : 189
4 சிறுபாண் : 179
5 ஐங் : 1

இது கோட்டுப் பூ.

இப் பூ கொத்தாக மலரும். இக்கொத்து,

*"அவிழ் இணர்க்காஞ்சி"* (அகம் : 341: 9.) என்றும்

*"பயறுபோல் இணர"* (குறுந்தொகை : 10 : 2.) என்றும்

*"கோதை இணர குறுங்காற் காஞ்சி"* (அகம் : 296 : 1.) என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இவற்றின்படி இப் பூ மலர்ந்த கொத்துப் பூ. பயற்றங்கொத்து போன்ற கொத்து. அக்கொத்துகள் தொடர்ந்து கோதை போலப் பூக்கும். ஒரு கொத்து மட்டும் அன்று. கொத்துகள் தொடர்ந்து, போகப் போகச் சிறுத்துத் தொடுத்தது போன்றிருக்கும். இத்தோற்றம் ஒரு மாலை தொடுத்தது போன்று அழகானதாகும். இவ்வழகைக் கண்டு களித்த நல்லூர் நத்தத்தனார்,

*"நறும் பூங் கோதை தொடுத்த நாட்சினைக்*
*குறுங்காற் காஞ்சிக் கொம்பர்"*[1] —என்றார். இதனை விளக்கும் நச்சினார்க்கினியர், "நாட்காலத்தே மாலை கட்டினாற் போல இடையறாமல் தொடுத்த நறிய பூக்களையுடைய சிறிய கொம்புகளையும், குறிய தாளினையும் உடைய காஞ்சி மரம்" என மாலை கட்டியது போன்று தொங்குவதைக் காட்டியுள்ளார். இடையறாமல் தொடுத்த நறிய பூக்கள்" என்று உள்ளமை இப் பூ இடை வெளியின்றிச் செறிந்து பூப்பதைக் காட்டுகின்றது. நறுமணம் கமழும் பூவும் ஆகும். பூக்குங் காலத்தில் பெரும்பகுதி பூவாகத் தோன்றுவதால் இதன் பூ மிகுதி கருதிப் "பூங்காஞ்சி" என்று சிறப்பிக்கப்பட்டது.

## காமனும் இந்திரனும் நேர்

இப் பூ, அளவில் சிறிய பூ. இதழ்கள் சிறியன. இதன் கோதை அமைப்பு அழகு நிறைந்தது. இதனால், அழகின் உருவகத் தெய்வம் காமவேளின் நினைவு எழுந்தது நல்லந்துவனார்க்கு. அழகுத் தோற்றத்தால் மட்டுமன்று, நிறத்தாலும் காமனைப் போன்று கண்டார். கண்டவர்,

---

1 சிறுபாண் : 178, 179.

*"மீனேற்றுக் கொடியான் (காமன்) போல்*
*மிகுிறு ஆர்க்கும் காஞ்சியும்"*[1] என்று பாடினார். மீன் போத்தின் கொடியை உயர்த்திய காமன் கார்வண்ணத் திருமாலின் காதல் மகன். தந்தை கருமை; மகன் கருமை. "கருப்பின் கண் உள்ளது அழகு" என்பது காமவேளுடனும் தொடர்பு உடைய தொடர். நீலத்தைக் கருப்பென்றல் இலக்கிய வழக்கு. கார்வண்ணக் காமவேள் நினைவில், கருங்காரை ஊர்தியாகக் கொண்ட இந்திரன் நினைவு தோன்றலாம். பரஞ்சோதியார்க்குத் தோன்றியது.

*"மங்குல் (கார்) ஊர் செல்வன் போல்*
*மலர்ந்தன காஞ்சி"*[2] –என்றார், இந்திரனும் கரு நிறத்தவன்

"புரோகிதன் சுனாசி கரியவன் புனிதன்" (பிங்கலம் 160 : 11)

"கரியவன் சுனாசி ஆகண்டலனுடன் வலாரி"
(சூடாநிகண்டு : தெய்வப்பெயர் 20 : 3.)

என்றெல்லாம் நிகண்டுகள் இந்திரன் நிறத்தைவைத்துக் கரியவன் என்றன. கருமையால் "மால் முகிலூர்தி" எனச் சேந்தன் திவாகரம் 'மால்' என்னும் பெயரையும் வகுத்தது. மணிபல்லவத் தீவில் ஒரு புத்த பீடிகை இருந்தது. அஃது இந்திரனால் அமைக்கப்பட்டது. இந்திரன் அமைத்ததைக் குறிக்கும் மணிமேகலை,

*"கரியவன் இட்ட காரணத் தானும்"*[3]

–என்றது. ததீசி முனிவரது பொன் நிறமான முதுகுத் தண்டைப் பெற்று ஏந்தி நின்றான் இந்திரன். அவனை

*"மைம் முகில் ஊர்தி ஏந்தி*
*மின் விடு மழைபோல் நின்றான்"*[4] –என்றார்

பரஞ்சோதியார். மின்னல் ஏந்திய கருமேகம் என்றார். கொலைப் பழி நீங்கி நின்ற இந்திரனை,

---

1 கலி 26 : 8
2 திருவிளை. பு இந்திரன் தருமிக்கு : 12
3 மணி 25 : 55
4 திருவிளை. பு : இந்திரன் : 36 : 4

"மாசிற் கழிந்த மணியேபோல் வந்த பழி தீர்ந்திந்திரனும்"[1]

—என அவரே மணிபோல் என்று இந்திரனது நீல நிறத்தைக் குறித்தார். எனவே, காஞ்சிப் பூ காமனைப் போன்றும், இந்திரனைப் போன்றும் நீல நிறமுடைய பூ. கண்ணாற் காண முடியாத காமனையும் காணாத இந்திரனையும் காட்டி இதன் நிறத்தைக் கூறினாலும், இக்காஞ்சிப் பூ அவர்களை தனது நிறத்தால் காண வைக்கின்றது.

அழகிய இதன் மலரைக் கொத்தாகவே சூடுவர். "வீழ் இணர்க் காஞ்சி" (அகம் : 336 : 7) என்றபடி விழுந்தாலும் கொத்தாகவே விழும். பறித்தே அணிவர்.

"விளையாட்டு மகளிர் பலரும், தளிரும் முறிரும் தாதும்
பூவும் கோடலால்சிதைவுப்பட்டுக் கிடந்தகாஞ்சி"[2]

—எனப்பட்டது. இவ்வாறுசிதையும்அளவு பயன்கொள்வர். 'சிதைந்த காஞ்சி' என்னும் பொருளில் பாலைக் கௌதமனார் "ததைந்த காஞ்சி" (பதிற்றுப்பத்து : 23 : 19) என்று பாடினார். மகளிர் பயன் கொள்ள உழவர் குடி ஆடவர். இதன் கிளையை வளைத்துக் கொடுப்பர்.[3] இதன் தளிர் குழுமையானது. இதனால் ஆடவரும்

"காஞ்சிப் பனிமுறி ஆரங்கண்ணியொடு"[4]

விளங்குவர்.

இதன் தாதாம் மணச் சுண்ணம் பொன் நிறமானது. மலர்க் கொத்தில் அதிகமாகத் தோன்றும்

"விரிகாஞ்சித் தாதாடி இருங்குயில் அழைக்குமாம்"[5]

குயில் குடைந்து நீராடுவதுபோன்று தன் உடலில் படியவைத்துக் கொள்ளும் அளவில் தாது உண்டு. தண்ணீரில் இறங்கி ஏறும் ஓர் எருமை தனது முதுகில் இத்தாதைக் கொண்டிருந்ததைப் பாடினர். இம்மணச் சுண்ணம் படிந்திருந்த ஒரு மணல் மேடு மணம் கமழ்ந்தது. இம்மேடு திருமண மேடைபோன்று,

---

1 திருவிளை. பு : இந்திரன் 13 : 1, 2

2 பதிற். பத் : 23 : 19 பழைய உரை

3 "உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினை காஞ்சி" — குறுந் : 10 : 4.

4 புறம் 344 : 8

5 கலி : 84 : 8.

*"காஞ்சிப் பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்*
*வதுவை நாற்றம் புதுவது கஞல்"* [1] விளங்கிற்றாம்.
பூங்கொத்தும் சுண்ணமும் குவிந்து கிடந்ததை உவமையாக்கி ஓர் எரு மன்றம்,

*"காஞ்சித்தாது உக்க அன்ன தாது எரு மன்றம்"* (கலி ; 108 : 60) எனப் பேசப்பட்டது.

இச்சுண்ணத்தை மகளிர் விரும்பித் தமது உடலில் படிய விட்டுப் பொன் மெருக்கேற்றிக்கொள்வர். மணத்தில்மகிழ்வர். மலர்க் கொத்தைச்சூடிய கூந்தலில் இச்சுண்ணம் படுவதிலும் அவர்களுக்கு ஆர்வம் இருந்தது. இதனை,

*"கோதை இணர குறங்காற் காஞ்சிப்*
*போது அவிழ் நறுந்தாது அணிந்த கூந்தல்"* [2]
– என மதுரைப் பேராலவாயர் பாடும் அளவில் பயன்கொண்டனர்.

## ஆற்றுப் பூவரசா?

இக் காஞ்சி மரம் பிற்காலத்தவரால் 'ஆற்றுப் பூவரசு' எனக் கருதப்பட்டது. ஆற்றோரத்தில் காஞ்சியும் வளரும். ஆற்றுப் பூவரசும் வளரும். இரண்டும் வெவ்வேறானவை. நாட்டுப் பூவரசு வகையைச்சார்ந்தது ஆற்றுப் பூவரசு. பூவரசின் பூப்போன்று அதே நிறத்திலும் அமைப்பிலும் அளவில் சற்றுச் சிறியதாகவும் இருக்கும். நிழலுக்கு வளர்க்கப்படும். தழைத்து வளரும்.

ஒரே பூவாக பூக்கும் தனிப்பூ இது. காஞ்சிப் பூ கொத்துப் பூ. இது முதல் வேறுபாடு. ஆற்றுப் பூவரசின் பூவின் நிறம் சற்றுக் கருமஞ்சள். காஞ்சிப் பூவின் நிறம் நீலம். இஃது அடுத்த மாறு பாடு. ஆற்றுப்பூவரசு மிகுந்த மணச்சுண்ணம் அற்றதாய்ச் சூடப் படாதது. காஞ்சி இரண்டும் கொண்டது. இது முரண்பாடு. எனவே, காஞ்சி ஆற்றுப் பூவரசு அன்று. ஆற்றுப் பூவரசு என்ற கருத்தால் ஆங்கிலத்தில் 'RIVER PORTIA' என்று ஒலிப்பொருத் தத்துடன் குறிக்கப்பட்டதும் தவறுடையதேயாகும்.

---

1 அகம் : 25 : 3 — 5
2 அகம் ; 296 : 1, 2.

காஞ்சி என்னும் சொல் பலபொருள் ஒருசொல்.

*"ஒருமரப் பெயரும் ஓரிசைப் பெயரும்*
*கச்சிப் பதியும் கலையும் காஞ்சி"*[1] எனப் பிங்கலம் நான்கு பொருள்களைச் சுட்டுகின்றது. காஞ்சி மரப்பெயராயினும் அதன் பூவால்தான் புகழ் பெற்றது "பூங் காஞ்சி" என்னும் சிறப்புத் தொடரே இதனைக் காட்டுவதாகும்.

காஞ்சிப் பெயர் கொண்ட இசை செவ்வழிப் பண்வகையினது. போர்ப்புண் நலம்பெறவும், காற்றாவி அணுகாதிருக்கவும்

[2] *"ஐயவி சிதறி ஆம்பல் ஊதி*
*இசைமணி எறிந்து காஞ்சி பாடி"* யதை அரிசில்கிழார் குறித்துள்ளார்.

காஞ்சிபுரம் இன்றும் இதன் பெயர் பெற்றொளிர்கின்றது.

காஞ்சிப் பெயரில் ஆறு ஒன்றும் உள்ளது.

[3] *"காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே"* என்று பரணரும் *"மீகொங்கிலணி காஞ்சிவாய்ப் பேரூர்"* எனத் திருநாவலூரரும் பாடினர். இவ்வாறு கோவை மாவட்டத்திலுள்ள பேரூர்க்கு அருகில் ஓடுவது. இந்நாளில் 'நொய்யலாறு' என வழங்கப்படுகின்றது.

காஞ்சியின்பெயரால் 'இரும்பல் காஞ்சி' என்னும் இலக்கண நூல் ஒன்று இருந்தது. இன்றும்பத்துப்பாட்டில் 'மதுரைக் காஞ்சி' பெயர் பெற்று எத்துணையோ அருங்கருத்துக்களை அறிவித்துக் கொண்டுள்ளது.

*"ஒரு தனி ஓங்கிய திருமணிக் காஞ்சி"*[4] எனச் சாத்தனாரால் வண்ணிக்கப்படும் இது, நிறத்தாலும் மரத்தாலும் சிறப்பாலும் மணிக் காஞ்சியாக ஒரு தனியிடம் பெற்றதாகும். இக்காஞ்சி மரத்தில் கொடி படர்ந்ததில்லை. ஆனால் புறப்பொருளில் இதையொட்டி ஒரு கொடி வருகின்றது. அஃது உழிஞை.

---

1 *பிங்.* *தி:* **3343**
2 *புறம்* **281 : 4, 5.**
3 *சுந்.* *தே:* *திருப்பேரூர்.*
4 *மணி* : 18: 55, 56.

# முற்றுகை மலர்
## உழிஞை

### பொன் கொடி

உழிஞைப் பூவாற் பெயர் பெற்றது உழிஞைத் திணை. பகைவர் அரணை முற்றுகையிடும் அறிகுறியாக இப்பூவைச் சூடுவர்.

இஃது ஒரு கொடிப் பூ.
*"நுண்கொடி உழிஞை"*[1]
*"நெடுங்கொடி உழிஞை"*[2]
- எனப் பல இடங்களில் குறிக்கப்படும். எனவே இக்கொடி கம்பி போன்று நுண்ணிய கொடி. நீண்டு வளரும் கொடி. இக்கொடி எத்தகையது என்பதை,

*"நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து"*[3] – என்னும் இடைக்குன்றூர் கிழார் பாடல் அடி காட்டுகின்றது. இத் தொடரையே ஈரிடங்களில் அமைத்துள்ளார். இவ்வடியிலுள்ள 'பவர்' கொடிஎன்னும் பொருளைத் தருகின்றது. முன்னே 'கொடி உழிஞை' என்றவர் பின்னும் 'பவர்' என்று கொடிச்சொல்லை அமைத்துள்ளமை எண்ணற்கு உரியது. 'பவர்' என்னும் சொல், நெருக்கம், செறிவு, பரவல் என்னும் பொருள்களைக் கொண்டது. எனவே, உழிஞைக் கொடி செறிந்து பரவி வளர்வது.

இதன் இலையும் பூவும் கொடியின் கணுப்போன்ற இடங்களில் அமைந்திருக்கும். இக்கொடியும் தளிரும் பூவும் ஒரே நிறமுடையவை. பொன் வண்ண மஞ்சள் நிறங் கொண்டவை.

*"பொலங்கொடி உழிஞையன்"*[4]
*"பொலங் குழை உழிஞை"*[5] –என்னுமிடங்கள் பொன்

---

1 பதிற் : 48 : 28; 44 : 10,
2 பதி : 48 : 44 : 10
3 புறம் : 76 : 5; 77 : 8.
4 பதி. பத்து : 56.
5 புறம் : 50 : 4 ,

நிறத்தைக் குறிப்பன. இவ்வழிஞை பொன்னாற் செய்யப்பட்டுச் சூடப்படுவதுண்டு.

"*பொன் புனை உழிஞை வெல்போர்க் குட்டுவ*"[1] — எனப் பாலைக் கௌதமனார் 'பொன் புனை' என்று 'புனை' என்னும் சொல்லை அமைத்துப் பொன்னால் புனையப்படுவதை—செய்யப் படுவதைக் காட்டினார்.

மலையாள நாட்டார் இவ்வழிஞையைக் 'கொற்றான்' என வழங்குவர். இவ்வாறு புறநானூற்றுப் பழைய உரைகாரரும் எழுதிக்காட்டினார். 'கொற்றான்' என்பது, பொற்கொற்றான், கருங்கொற்றான், முடக்கொற்றான் (முடக்கத்தான் என்பது நாட்டு வழக்கு) நூழிற் கொற்றான், நந்தைக் கொற்றான் எனப் பலவகையினது. புறப் பூவைத் தரும் உழிஞை பொற் கொற்றானாகும். கொடியும் தளிரும் பூவும் பொன்வண்ண மஞ்சள் நிறங்கொண்டமையால் இப்பெயர் பெற்றது. எனவே,

உழிஞைப் பூவின் நிறம் மஞ்சள்

கொடியின் கணுப் போன்ற பகுதியில் இலையுடன் இப் பூ பூக்கும். பூ சிறியது. இலையுஞ் சிறியது. பூவை மட்டும் தனியே கொய்து பயன்கொள்ளும் அளவில் காம்பு அமையவில்லை. எனவே இப்பூவை மாலையாகக் கட்டத் தளிருடன் சேர்த்தே தொடுக்க நேர்ந்தது. கபிலரும்,

"*சிறியிலை உழிஞைத் தெரியல் சூடி*"[2] யதைக் காட்டினார். தலையிற் புறப் பூவாகச் சூடும்போதும் ஒன்றிரண்டு கணுக்க ளோடு கொடியைத் துண்டாக்கிக் கொடியுடனே சூடிக் கொண்டனர்.

*"............ ............ ............ஒண்டளிர்*
*நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து*
*செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி"*[3] —என இடைக்குன் றூர்கிழார் காட்டினார். இவ்வாறு கொடியோடு புறப் பூ சூடப்படுவது அக்காலத்தில் அடிப்பட்ட பழக்கமாக இருந்தது; யாவரும் அறிந்த நடைமுறையாகவும் இருந்தது.

---

1 பதிற் : 22 : 27.
2 பதி : 63 : 8.
3 புறம் : 76 : 3-5.

## எருமைச் செம்மாப்பு

ஒரு கடா எருமை. அழகானது. மழைநீர் ததும்பும் குளத்தில் நீராடிக் கரையேறியது. திடீரென்று வீர நடை போட்டது. காரணம் என்ன? கரையில் களைந்த கொடி ஒன்றை யாரோ வீசி எறிந்துள்ளனர். பூவோடு கூடிய அக்கொடி இவ்வெருமையின் தலையில் விழுந்தது. கொம்பில் சிக்கிக் கொண்டது. கொடிப் பூ தலையில் ஏறிய உடனேயே இதற்கு வீரம் தலைக்கேறிவிட்டதாம். போருக்குச் செல்லும் வீரனது வீர உணர்வு கொப்பளித்துச் செம்மாந்துவிட்டதாம். இச்செம் மாப்பைக் கண்ட மதுரைக் கண்ணங்கூத்தனார்,

*"கார்ச்சேண் இகந்த கரைமருங்கில் நீர்ச்சேர்ந்(து)*
*எருமை எழில்ஏறு எறி பவர் சூடிச்*
*செருமிகு மள்ளரில் செம்மாக்கும்"*[1] – என்று பாடினார்.

இவ் உழிஞைப் பூ அரசரது சின்னப் பூவுடனும் பிற பூக்களுடனும் இணைத்துச் சூடப்படுவது உண்டு. ஆனால் ஒப்பனை கருதிச் சூடப்படுவதன்று. ஒப்பனைக்கு இப் பூவைப் பயன்படுத்தாததாற் போலும் கபிலர் தொடுத்த தமது குறிஞ்சி மேடையில் இப்பூவை வைத்தாரல்லர்.

ஒப்பனையில் இடம் பெறாது போயினும் ஒப்பருந் தமிழ் ஒலியில் இடம்பெற்றது. சிறப்பு ழகரத்தை இடையிற் பெற்று 'உழிஞை' ஆயிற்று.

இது ஒருவகைக் காட்டுக்கொடி. பாறையிலோ சேற்றிலோ படராதது. எனவே,

இஃது முல்லை நிலப் பூ.

இதன் மாற்றுப் பெயர் சிறுபூளை என நிகண்டுகள்[2] குறித்துள்ளன. பூளை என்பது புதர்ச்செடிவகை. எனவே, கொடி வகையான உழிஞை இவ்வகையில் சிறு பூளை எனப்பெயர் கொள்ளவில்லை. உழிஞைப் பூ பூளைப் பூ போன்ற அமைப்புடையது. ஆனால் அளவில் அதைவிடச் சிறியது. பூவகையால் சிறு பூளை எனப்பட்டதுபோலும். குறிஞ்சிப் பாட்டில் "குரீஇப் பூளை" என்றதற்கு நச்சினார்க்கினியர் "சிறுபூளை" என்று பொருள் எழுதி

---

1 கார். நா : 31.
2 "உழிஞை சிறுபூளை என உரைத்தனரே"
—சேந்தன் திவாகரம். மரப்பெயர்.

யுள்ளார். இப்பாட்டில் புறப்பூக்களில் உழிஞை ஒன்று மட்டுமே இடம்பெறவில்லை. அதன் அமைதி கருதி நச்சர் எழுதினரோ? அவ்வாறாயின் 'உழிஞை' என்றே எழுதியிருக்கலாம். எனவே, பூவின் அளவு வகையால் உழிஞை சிறுபூளை எனப்பட்டது.

வீரர் உழிஞைப் போர்க்கு எழும் முனைப்பின்போது பாண் மகளிர் யாழை மீட்டிப் பாடித் தினவேற்றுவர். அப்பாடலைப் பாலைப் பண்ணிற் பாடுவர். அப்பாடல் முற்றுகையிடும் உழிஞைத் திணைக் கருத்து கொண்டதாகும்:

*"வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்*
*தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்*
*பணியா மரபின் உழிஞை பா"*[1] டியதாகப் பரணர் பாடினார்.

"பணியா மரபின் உழிஞை" என்பது முற்றுகைக் கருத்திற்கு ஒரு பணியா மரபைக் காட்டுகின்றது. இப்பணியா மரபிற்கு உரிய பூ உழிஞைப் பூ.

உழிஞைப் பூ பணியாப் பூவாயினும் இதற்கும் பணியாமல் எதிர்த்து வரும் பூ இல்லாமலா போகும்?

# தகர்ப்பு மலர்
## நொச்சி

முற்றுகையைத் தகர்த்து எழுந்தது நொச்சிப் பூ. தகர்த் தெழும் வீரர் நொச்சிப் பூவைச் சூடுவர். இதனாற் பெயர்பெற்றது நொச்சித் திணை.

### மயிற்காலும்
### நண்டுக் கண்ணும்

நொச்சி மரவகையைச் சேர்ந்தது. இதில் கருநொச்சி, வெண்ணொச்சி, மலைநொச்சி என மூன்று வகை உண்டு. இவற்றில் எதன் பூவைப் பூவாகக் கொண்டனர்? இலக்கியமே விடை காட்டுகின்றது.

1 *பதி. பத்து:* 46 : 4–6,

*"மயிலடி இலைய மாக்குரல் நொச்சி"*[1] —எனப் பெயர் புலப்படுத்தாத நற்றிணைப் புலவரும்,

*"மயிலடி யன்ன மாக்குரல் நொச்சி"*[2] —என மிளைப் பெருங்கந்தனாரும் மயிலின் காலடியை நொச்சியின் இலைக்கு உவமை கூறியுள்ளனர். மயிலின் காலடி முன் நோக்கிய மூன்று விரல்களையுடையது. நொச்சிகளில் வெண்ணொச்சி ஐந்து இலைகளைக் கொண்டது. அதனால் அதற்கு 'ஐந்திலை நொச்சி' என்றொரு பெயர் வழக்கும் உண்டு. கரு நொச்சிதான் மூன்று இலைகளைக்கொண்டது. எனவே, கருநொச்சியின் பூவே புறப் பூவாகக் கொள்ளப்பட்டதாகும்.

வீட்டு மனையின் சூழலில் நொச்சி இடம்பெற்றதால் இதற்கு "மனை நொச்சி", "மனை இள நொச்சி" என இலக்கியங்கள் மனையின் அடைமொழி கொடுத்தன.

வீட்டின் முற்றத்தில் அமைந்த நொச்சி மரத்தில் மௌவல் கொடி படரும்,

*"மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ"*[3]

*"மனைஇள நொச்சி மௌவல் வால்முகை"*[4] —எனப் பல இடங்களில் மௌவற்கொடி இதன்மேல் படர்ந்தமை குறிக்கப் படுவதால் அனைத்து இல்லங்களிலும் இம்மரம் இடம் பெற்றிருந்தமையை உணரலாம்.

புறப் பூவாம் இதன்பூ
கோட்டுப் பூ.

முல்லைத் தொடர்பால் இது காட்டு மரமாகி முல்லை நிலத்தது ஆகும். மருத நிலத்திலும் வளர்வதுண்டு. கார் காலத்தில் இதன் பூவைப் பார்க்கலாம். மௌவலொடு மலரும்,

*"... ... ... ... ... ... ... நொச்சி*
*மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழக்*
*கார்வந் தன்றால்"* —என்றபடி கார்கால மௌவலொடு இதன் முகை அவிழ்ந்து மலரும். எனவே,

---

1 நற் : 115 : 5
2 குறு : 138 : 3
3 நற் : 115 : 6
4 அகம் : 21 : 1

இது கார்ப்பருவப் பூ.

பூவை நாம் பார்ப்பதற்கு முன்னர் இதன் மேல் நண்டு, கண்கள் கொண்டு நம்மைப் பார்க்கும். மயில் காலின்மேல் நண்டுக் கண்கள் போன்று நொச்சியின் அரும்புகள் தோன்றும்.

*"அலவன் (நண்டு) கண்ணேய்ப்ப அரும்பு ஈன்று அவிழ்ந்த*
*கருங்குலை நொச்சி"*[1] —என மதுரைக் கண்ணங் கூத்தனார் அரும்புக்கு நண்டின் கண்ணை உவமை கூற, கபிலரும் மாற்றுப் பாங்கில்,

*"நொச்சி மா அரும்பன்ன கண்ண*
*எக்கர் ஞெண்டு"*[2] —என நண்டின் கண்ணிற்கு நொச்சி அரும்பை உவமை கூறினார். நண்டின் கண் சிறியதாக வெளியே நீண்டிருப்பது போன்று இதன் அரும்பு சிறியது.

## கருப்புப் பூ

நண்டின் கண் கரு நிறங்கொண்டது. அதுபோன்றே அரும்பும் கருமை நிறங்கொண்டது. "நொச்சி மா அரும்பு" என்றதில் உள்ள 'மா' என்னும் அடைமொழி கருமையைக் குறிப்பது. இதன் மலரும் மா மலர் – கருநிற மலர்.

இன்றும் நமது கொல்லைகளில் நொச்சி உள்ளது. அதன் பூவின் கருமை நிறத்தையும் பார்க்கின்றோம். அதனை இலக்கியம் காட்டப் பார்ப்பதில் ஒரு தனி உவகை உண்டு.

திருத்தக்க தேவர் வீர வாளை விளக்க நினைத்தார். அதன் ஒளி திகழும் கருநிறத்தைக் கூற உவமை தேடினார்.

*"நொச்சி மாமலர் நிறத்தன"*[3] என நொச்சிப் பூவின் ஒளி விடும் கருநிறத்தைக் காட்டினார். கருமை எனின் எத்தகைய கருமை?

---

1 கார். நா : 89 : 1. 2
2 நற் : 267 : 1, 2
3 சீவ. சி : 2168

"மணி மருள் நொச்சி"1 யாம். நீல மணி போன்ற நிறம் எனின் கருநீல நிறம். அதனிலும், "மணி ஏர் நொச்சி"2 என நீலமணி போன்று அழகு பெற்ற நிறம் எனப்பட்டது.

இதன் அரும்பு நண்டின் கண்போன்றது எனின் பூவின் அளவு புரிகின்றது. தனியொரு பூ மிகச் சிறியது. அதனைக் கொய்து புறப் பூவாகச் சூடவோ மாலையாக்கி அணியவோ இயலாது. எனவே கொத்தாகவே பயன் கொண்டனர். எத் தகைய கொத்து அது? மணிக்கொத்து. அதனால்,

"மணிக்குரல் நொச்சி"

எனப்பட்டது. குரல் கொத்தைக் குறிக்கும். எனவே புறப் பூவாகச் சூடப்படும் போது கொத்தோடு கிள்ளி எடுத்துச் சூடினர். கொத்து உருவில் செயற்கையிற் செய்து சூடினர்.

திருவிழாவை அறிவிக்கும் போதும், காக்கைக்கு கோவில் படைப்பை பலியிடும் போதும் குயவன்" நொச்சித் தெரியல் சூடி" யதைக் கண்டோம். அந்தத் தெரியலும்,

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடி"3 என்றும்

"ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி"4 -என்றும் கொத்து மாலையாக அமைந்ததே.

நொச்சிப் பூ சிவபெருமானுக்கும் சூட்டப்பட்டது.

"நொச்சியே வன்னி கொன்றைமதி கூவிளம்
உச்சியே புனைதல் வேடம்"5 என்பது ஞானசம்பந்தர் பாட்டு.

மற்றும் தினை விதைக்கக் கொல்லையை உழத் தொடங்கு வோர் பொன்னேர் பூட்டும் முதல் உழவின்போது நொச்சித் தழை மாலையைச் சூடிக் கொள்வர். மதுரைக் கண்ணங் கூத்தனார்,

---

1 குறு : 138 : 5
2 நற் ; 184 : 9
3 நற் : 293 : 1
4 நற் : 200 : 2
5 ஞான. தே : திருக்கச்சி ஏகம்பம் : 2 : 2 : 1,2.

"கருங்குரல் நொச்சிப் பசுந்தழை சூடி
இரும்புனம் ஏர்க் கடி கொண்டார்"[1] என்று காட்டியுள்ளார்.

புறப் பூவாகிச் சிறக்கும் நொச்சி இவ்வாறு பொதுநிகழ்ச்சிக்கும் இடம் தந்தது. அக ஒழுக்கத்திலும் சுவையான இடம் பிடித்துக் கொண்டது.

காதலன் தனது காதலிக்கு அன்புக் கையுறையாக இலை தழை, பூவால் ஆடை தொடுத்துக் கொடுப்பான். இத் தழை ஆடை நொச்சிப் பூவுடன் கூடிய தழைகளாலும் தொடுக்கப்படும்.

"ஐதுஅகல் அல்குல் தழையணிக்கு ஊட்டும்
கூழை நொச்சி"[2] —என்னும் கயமனார் பாடல் தழையாடைக்குக் கொய்ததால் நொச்சி மரம் கூழையாகிக் குறைந்ததையும் காட்டுகின்றது. குறைபடும் அளவில் நிறையக் கொய்து தொடுத்துள்ளார்கள். இது தழையும் பூவும் அகத்தில் பிடித்த இடம்.

## நேரங் காட்டும் நொச்சி

மற்றொன்று, பூ மட்டும் காதல் களவிற்குத் துணைபோன இடம். காதலியைக் களவில் கூட வரும் காதலன் இரவில் உரிய நேரத்தையும் இடத்தையும் குறிப்பிட்டுச் சொல்வான். இது 'குறியீடு' எனப்படும். களவிற்கு உரிய நேரம் நல்ல இருளாகவும் நடு இரவாகவும் அமைய வேண்டும். அதனை,

"நொச்சிப் பூவுதிர் நள்ளிருள் நடுதோள்"[3] —எனக் காட்டினார் கல்லாடனார். இதுகொண்டு நொச்சிப் பூ நள்ளிருள் நடு யாமத்தில் கொத்தாக உதிரும் என்பதையும் அறியலாம். இதனை அறிகுறியாகச் சொல்லியுள்ளான் காதலன்.

நள்ளிரவு அமைதியான நேரம். காதலனைக் கூடுவதற்கு அவன் குறித்த இந்நேரத்தை எதிர்நோக்கிக் காதலியின் கண்கள்

---

1 கார்: நா : 39 : 2, 3.
2 அகம் : 275 : 16, 17
3 கல் : 2 : 18

தூக்கத்தை மறந்துதுடிக்கின்றன. செவிகளும் தேங்கிவிடவில்லை. அவன் சொன்ன குறியில் கவனம் வைத்துள்ளன. அவள் செவி மடலை ஒரு கையாற் குவித்துப் பிடித்துக் கொண்டு கிடக்கின்றாள். தனது துடிப்பை அவளே வெயிடுகின்றாள் :

*"கூடுதல் வேட்கையால் குறிபார்த்துக் குரல்நொச்சிப்*
*பாடு (ஒலி) ஓர்க்கும் செவியொடு பைதலேன் யான்"*[1]

எவ்வொலியும் இல்லாத அமைதியான நள்ளிரவில் நொச்சிப் பூங்கொத்து குளத்து நீரில் விழும். 'உலொக்' என்றொரு ஒலி எழும். இதனை எதிர்பார்த்துக் கிடந்தவள் பேச்சு அது. ஒலியைக் கேட்ட மற்றொருத்தியின் பேச்சு இது:

*"மயிலடி யன்ன மாக்குரல் நொச்சி*
*அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த*
*மணிமருள் பூவின் பாடு (ஒலி) நனிகேட்டு"*[2] யான்

தூங்கவில்லை என்கின்றாள். இவ்வாறு களவுக் காதலிகளுக்கு மணியாக ஒலித்து நள்ளிரவைக் காட்டும் மணிப்பொறியாக நொச்சிப் பூ துணைநின்றது.

தனது வீழ்ச்சியிலும் காதலுக்கு உதவிய நொச்சிப் பூ வீரத்திற்காகக் குருதிக் கறை ஏற்ற கருத்தும் உண்டு.

நொச்சி வீரன் நொச்சி மாலை சூடிப் போர் செய்தான். பகைவன் தாக்கியதால் தன் உடலிலிருந்து கொப்புளித்த குருதி, மார்பிற் கிடந்த மாலையை மூழ்கடித்தது. நொச்சிப் பூவின் கரு நீல நிறம் குருதிப் படிவால் சிவந்த நிறம் ஏறப் பெற்றது. சிவந்து புரளும் நொச்சி மாலையை ஒரு பருந்து பார்த்து 'இது இறைச்சித் துண்டு' என்று கருதி இழுக்க முனைந்ததாம். இக் காட்சியைத் தாம் கண்டதாக வெறிபாடிய காமக்கணியார்,

*"வெருவரு குருதியொடு மயங்கி உருவுகரந்து*
*ஒருவாய்ப் பட்ட தெரியல் ஊன்செத்து (கருதி)*
*பருந்துகொண் டுகப்ப யாம் கண்டனம்"*[3] —என்றார்

இவ்வீரக் காட்சியைக்கண்டு பாடும்காமக்கணியார் மனக்கண்ணில் அகத்திணைக் காட்சி ஒன்று முந்திக் கொண்டு நிற்கின்றது.

---

1 கலி : 46: 12, : 13.
2 குறந் : 138 : 3, 5.
3 புறம் : 271 : 5-7

கரிய நொச்சிப் பூங் கொத்துடன் தழையும் கட்டப்பட்ட தழை உடை மெல்லிய மகளிரது இடையில் கட்டப்பட்டு அழகிய பெண் குறியை மறைத்ததையும்.

*"கருங்குரல் நொச்சிக் கண்ணார் குரூஉத்தழை*
*மெல்லிழை மகளிர் ஐதகல் அல்குல்*
*தொடலை யாகவும் கண்டனம்"*[1] —என்றார்.

## காதல் நன்மரம்

நொச்சிப் பூ இவ்வாறு அகத்திணையிலும் புறத்திணையிலும் இணைந்து நின்று ஈடுகொடுத்ததை மோசி சாத்தனார் என்னும் புலவர் நினைந்து பார்த்தார். நீலமணிக் கொத்தாக நொச்சிப் பூங்கொத்தைக் கண்டார். இப்பூவையும் தழையையும் ஈன்ற தாயாம் நொச்சி மரம் அவருக்கு ஓர் அன்பு மரமாகப் பட்டது. "காதல் நன் மரம்" என்று பட்டம் சூட்டினார். அம் மரத்தை நேர்முகமாக நிறுத்திப் பாராட்டுகின்றார்:

*"மணி துணர்ந்தன்ன மாக் குரல் நொச்சி" யே* — என்று அழைக்கின்றார். சற்று உயர்வு நவிற்சியாகவே,

*"போதுவிரி பன்மர னுள்ளும் சிறந்த*
*காதல் நன்மரம் நீமற் றிசினே"* — என்கின்றார். பூமரங்களிலெல்லாம் சிறந்த மரமாம்! காதல் நன் மரமாம்! அப்படி என்ன சிறப்பு? என்ன காதல்?

*கடியுடை வியன் நகர் காண்வரப் பொலிந்த*
*தொடியுடை மகளிர் அல்குலும் கிடத்தி"* — தழையுடையாக மகளிர் இடையிற் சூழ்ந்து கிடப்பது ஒன்று. இஃது அகச்சிறப்பு; அகக்காதல்.

*"காப்புடைப் புரிசை (கோட்டை) புக்கு மாறு அழித்தபின்*
*ஊர்ப்புறம் கொடாஅ நெடுந்தகை*
*பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே"*[2] — நொச்சிப்

---

1 புறம் : 271 : 2-4
2 புறம் : 271 : 2 — 8.

போரின் சின்னப் பூவாக வீரனது தலைமேலும் உரிமையோடி ருத்தல் இரண்டாவது வீரச்சிறப்பு; போர்க்காதல்.

இப்பாடல், நொச்சிப் பூ பற்றிய ஒரு முத்திரைப் பாடல் என லாம்.

நொச்சி இலை வழிப்பாட்டுக்குப் பயன்படும் இலை. வில்வம், துளசி போன்று ஒரு மண வீச்சுள்ளது. இதனால் வழி பாட்டிற்குப் பயன்படுத்தும் இலைக்குழுவில் (பத்திரத்தில்) இடம் பெற்றது.

## பெயரில் நொச்சி

நொச்சியால் ஓர் ஊர் பெயர்பெற்றது. 'நொச்சி நியமம்' என்பது அது. திருச்சிக்கு அண்மையில் உள்ள ஊர் இக்காலத் தில் 'நொச்சியம்' என அழைக்கப்படுவது. இவ்வூர்ப்புலவர் ஒருவர் 'நொச்சி நியமங்கிழார்' எனப் பட்டார். நொச்சிக்குச் 'சிந்துவாரம்' என்றொரு பெயரைச் சேந்தன் திவாகரம் குறித் துள்ளது. கபிலரும் குறிஞ்சிப்பாட்டில் சிந்துவாரத்தைக் குறித் துள்ளார். இதற்குக் 'கருநொச்சி' என்றே பொருள் குறிக்கப் பட்டுள்ளது.

புறப்பூவில் இஃதொன்றேகருநிறத்தது. ஆனால் இருட்டில் விழும் பூ. இருட்டு வீழ்ந்தால் வெளிச்சம் தோன்றுமன்றோ? வெளிச்சம் தரும் தூய வெள்ளைப் பூ தொடர்ந்து பூக்கின்றது,

# போர் மலர்

### தும்பை

## தும்பை — போர்

"தும்பை (திணை) என்பது சூடும் பூவினாற் பெற்ற பெயர்" — என்றார் நச்சினார்க்கினியர். அனைத்துத் திணை களும் பூக்களாலேயே பெயர் பெற்றனவாயினும் நச்சினார்க்கினியர்

தும்பை ஒன்றை இவ்வாறு எடுத்து மொழிந்தார். இஃது ஒரு சிறப்பாகலாம்.

"... ... ... ... ... ... ... ... - பேர்க்குருதித்
துப்புடைத் தும்பை மலைந்தான்" [1] — என்றபடி களப் போரின் அறிகுறியாகத் தும்பைப் பூ சூடப்பட்டது. வெட்சிமுதல் நொச்சி வரை எதுவாயினும் களத்தில் கைகலப்பு நேரும்போது தும்பைத் திணையாகும். தும்பை என்றாலே போர் என்ற பொருளும் அமைந்தது.

"யுத்தம் ஆகவம் தும்பை சமரம்
... ... ... ... ... இன்னன போரே" [2] — எனப் பிங்கல நிகண்டும் பிற நிகண்டுகளும் பொருள் வகுத்தன. இலக்கியங்கள் பலவும் இப்பொருளில் தும்பையைக் கையாண்டுள்ளன. எனவே, புறத்தில் போர்ப் பூ தும்பைப் பூ.

போர்க்களத்தில் இரு படைகளும் போரில் கைகலக்க இறங்கின என்பதன் சின்னமாக இரு படைகளும் தும்பைப்பூவைச் சூடும். இவ்வாறு தும்பைப் பூ ஒன்றே இரு தரப்பிலும் இடம் பெற்றது. இஃது அடுத்த ஒரு சிறப்புப் போலும்.

## செடியும் பூவும்

இப் பூவைத் தருவது ஒரு செடி. இச்செடி கடல் மட்ட நிலத்திலும் ஏறத்தாழ 3000 அடி உயரப் பகுதி வரையிலும் முளைத்து வளரக்கூடியது. இதனை மருத நிலத்திலும் முல்லை நிலத்திலும் காணலாம். எனவே இது முல்லை, மருதம் என்னும் இரு நிலத்திற்கும் உரியதாகின்றது. நிலத்தாலும் இரண்டிடச் சிறப்பு பெறுகின்றது.

இச்செடி துளசி இனத்தைச் சார்ந்தது.

"துளவியல் தும்பையும்" எனக் கம்பரும், துளசி இயல் புடைய தும்பை என்றார். கபிலர் தம் குறிஞ்சிப் பட்டியலில் "தும்பை துழாய்"[3] என அடுத்தடுத்து வைத்ததும் இக்குறிப்பின

1 புற. வெ. மா: தும்பைத்திணை: 1.
2 பிங். நி: 1473.
3 குறி. பா: 90

தீர்கலாம். இக்காலத்துச் செடியியலார் இதனைத் 'துளசி இனம்' என்றே குறிப்பர்.

தும்பைச் செடியில் சிறு தும்பை, பெருந்தும்பை, கௌ தும்பை, பேய்த் தும்பை, காசித் தும்பை, மஞ்சட் காசித் தும்பை, சிவப்புக் காசித்தும்பை எனப் பலவகைகள் உள்ளன. இவற்றுள் பெருந் தும்பையின் பூவே புறப் பூவாகக் கொள்ளப்பட்டது.

இச்செடி துவண்டு கொடுக்கும் சில பசுங்கொப்புகளாக வளரும். இக்கொப்பின் நான்கைந்து அங்குல வளர்ச்சிக்கு மேல் இரண்டு இலைகள் கொம்பு போலக் கவடு விடும். கம்பரும் இதனைக் 'கவட்டிலை' என்றார். இக் கவட்டிலையை ஒட்டியே பசுங்கிண்ணம் போன்று பூ அமையும். பசுமையான புற இதழ்கள் பெருஞ்சீரக அளவில் பல சுற்றுவட்ட அமைப்பாகச் செறிந் திருக்கும். குழாய் போன்ற இப்புற இதழ்களில் வெண்மையான அக இதழ்கள் விரியும். ஒவ்வொரு குழாயிலும் ஒவ்வொன்றாக அகவிதழ் அமைந்திக்கும் இப்பசுங் கிண்ணத்தின் மையத்தில் அடுத்த இரண்டு கவட்டிலைகள் தளிர்க்கும். இவ்விலைகளின் இடையிலிருந்து பசுங்கொப்பு தோன்றித் தொடரும். இவ்வாறாகத் தும்பைப் பூ தொடர் பூவாகப் பூக்கும். இத்தொடர் நான்கு அல்லது ஐந்திற்கு மேல் போகாது. இவ்வாறு தொடர்ந்து பூத்துக் கொண்டே நீண்டு தோன்றுவதாற் போலும் கம்பர் இதனை, "நெடுந் தும்பை"[1] என்றார்.

இதன் அல்லியாம் அக இதழ் தூய வெண்மை நிறங் கொண்டது. மூன்று சிறு இதழ்கள் ஒட்டிய ஓரிதழாக நாக்கு வடிவில் வெளிப்புறத்தில் விரியும். இவ்விதழின் அடிக்குவிவில் வெண்மையான முட்டை வடிவக் குமிழான ஓர் அகவிதழ் துருத்திக் கொண்டிருக்கும். இதற்குள் மகரம் அமைந்திருக்கும். குழாய் போன்ற புற இதழ் ஒவ்வொன்றிலும் இவ்வாறான அகவிதழ் ஒவ்வொன்று செருகியது போன்று மலரும்.

புற இதழ்களின் கிண்ணத் தொகுப்பு பச்சை நிறங் கொண்டது. அனைத்துப் புற இதழ்களிலும் வெள்ளை அக இதழ் தோன்றாது. ஆங்காங்கு சில, பல புற இதழ்களில் தோன்றும் நிலையில் இத்தொகுப்புக் கிண்ணம் பசுமையாகக் காட்சி தரும். இதனால் "பைந்தும்பை" எனப்பட்டது.

---

1 கம்ப முதற்போர்ப் படலம் : 97 : 4

பல புற இதழ்களில் பல அக இதழ்கள் அமைந்து தொகுப்புக் கொத்தாகத் தோன்றுவதால்,

"கொத்து அலர் தும்பை" என்றும்,

"சுந்தரத் துணர் மென் தும்பை" – என்றும் பாடப்பட்டது எனவே,

தும்பைப் பூ கொத்துப் பூ எனலாம்.

அனைத்துப் புற இதழ்களிலும் அகவிதழ் நிறைவாக ஒரே காட்சியில் மலராது. இந்நிலையில் பைந்தும்பையாகக் காட்சி தரினும் அனைத்து அக இதழும் நிறைந்து அமையின் அஃது அழகிய முழு வெண்மைச் செண்டாக விளங்கும். மலர்களின் வண்ணத்தை அவற்றின் அகவிதழ் கொண்டே சுட்டுவதால்

தும்பை தூயவெண்மை நிறப் பூ.

இவ் வெண்மையான அக இதழ் ஒன்றைத் தனியே எடுத்துச் சூட இயலாது. எனவே பல புற இதழ்கள் செறிந்த கொத்தாகவே சூடினர்.

"கொத்தலர் தும்பை சூடிக்
கோவிந்தன் வாழ்க வென்னா
கைத்தளத் தெஃக மேந்தி
காளைபோல் வேறு நின்றான்"[1] – என்று

திருத்தக்க தேவரும் பாடினார்.

சூடும்போது இலைகளும் இடம் பெறும். பசுங்கிண்ணத் தோடு கிண்ணத்தின் மையத்திலும் கவட்டிலைகள் ஒட்டியுள்ள மையால் இலைகளை எடுத்துவிட்டுச் சூட இயலாது. இலையோடு சூடியதை,

"இளவரிக் கவட்டிலையோடு ஏர்பெறத்
துளவியல் தும்பையும் சுழியச் சூடினான்."[2] –எனக்

கம்பரும்,

---

1 சீவ. சி : 2277.
2 கம்ப : முதற்போர் : 115.

"......................... ............பாசிலை

கமழ்பூந் தும்பை நுதலசைத் தோனே"[1] –என அடை நெடுங்கல்வியார் என்னும் சங்கப் புலவரும் பாடியுள்ளார்.

கல்வியார் "நுதல்அசத்தோனே" என்றது நெற்றியில் தவழு மாறு தலையில் சூடியதைக் குறிக்கும்.

"தும்பைச் சிகழிகை (தலையுச்சி மாலை) மவுலி சூட்டினான்"[2] –என்றும்,

"போந்தையொடு முடித்த பருவத் தும்பை

ஓங்கிருஞ் சென்னி மேம்பட மலைய"[3] – என்றும் கண்ணியாகச் சூடப்பட்டதைக் காட்டுகின்றன.

"பொலந்தொட்டுப் பைந்தும்பை" "பொலந்தும்பை" எனப்பட்டவை செயற்கையில் பொன்னால் மிகுதியாகச் செய்யப் பட்டதைக் காட்டுகின்றன. இயற்கைப் பூ வெண்மை என்பதோடு தூய வெண்மை என்றும் போற்றப்படுவது. இக்கால வழக் கிலும் 'தும்பைப் பூ போன்று தூய வெண்மை' எனப்படும். நிறத்தில் மட்டுமன்றி இதனைச் சூடுவதால் நேரும் செயலும் தூய்மைகொண்டது.

## தும்பை-தூய்மை

தொடக்கத்தில் கண்ட புறப்பொருள் வெண்பா மாலைப் பாடல் தும்பையை, "துப்புடைத் தும்பை" என்றது. 'துப்பு' என்னும் சொல் வன்மை, உணவு, நுகர்வு, பவளம் முதலிய பல பொருள்களைக் கொண்டது. இங்கு மலரைக் குறித்து அடை மொழியானது. எனவே, வலிமைப் பொருள் மெல்லிய மலருக்குப் பொருந்தாது. போர்ப் பூ உணவாகாது. மோந்து நுகர்தற் குரியதாக இங்கு குறிப்பதால் பயனின்று. பவளம் ஒத்துவராது. பின் என்ன பொருளில் அடைமொழியாகியது?

---

1 புறம் : 283 : 14, 15.

2 கந். பு: முதனாள் : 24 : 4.

3 சிலம்பு : 26 : 226, 227.

*"அனுபவமும் தூய்மையும் துப்பென லாகும்"*[1]

*"துப்பு தூ பாவனம் வாலும் தூய்மை"*[2] -எனத் துப்பிற்குத் தூய்மை என்னும் பொருளையும் நிகண்டுகள் வகுத்துள்ளன.

*"துப்புடை மணலிற்றாகிக்*
*கங்கைநீர் சுருங்கிக் காட்ட"*[3] -என்று கம்பரும் தூய்மைப் பொருளில் பாடினார். துப்பின் அடியாக வளர்ந்த துப்புரவு என்னும் சொற்கும் தூய்மை என்னும் பொருள் உண்டு.

*"துப்புரவார் சுரி சங்கு"*[4] -எனச் சங்கின் தூய்மையைத் 'துப்புரவு' என்னுஞ் சொல்லால் அப்பர் காட்டினார். இக்காலத்தும் 'துப்புரவு செய்தல்' என்பது தூய்மைப்படுத்தலைக் குறிப்பதாகவும் வழங்கப்படுகின்றது.

துப்பு மென்மை பெற்றால் 'தும்பு' என்றாகும். தும்பு என்னும் சொல்லும் தூய்மைப் பொருளுடையது. தும்பு + ஐ எனத் 'தூய்மையை உடையது' என்று பெயர்ப்பொருளை விளக்க தும்பை என்னும் சொல்லும் இடந்தருகின்றது.

எனவே, 'துப்புடைத் தும்பை' என்பதற்குத் தூய்மையான தும்பை எனப்பொருள்கொள்ள வேண்டும். நிறத்தாலும் தூய்மை; மறத்தாலும் தூய்மை. போர் மறத்தால் இப் பூவால் நேரும் தூய்மைநெறி குறிக்கத் தக்கது.

தும்பைத் திணையை விளக்கிய தொல்காப்பியர்,

*"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்*
*சென்று தலையழிக்கும் சிறப்பிற் றென்ப"*[5] என்றார்.

இதில் தும்பைத் திணையைச் "சிறப்பிற்று" எனச் சிறப்பித்துள்ளார். இச்சிறப்பை நச்சினார்க்கினியர் பின்வருமாறு விளக்கியுள்ளார்:

---

1 *பிங். நி : 3656*
2 *சேந். தி : பண்புப்பெயர்*
3 *கம்ப : எதிர்கோள் : 2 : 2*
4 *அப். தே : தனித்திரு : 2 : 8*
5 *தொல். பொருள் 70.*

> 'இதனைச் சிறப்பிற்று என்றதனான் அறத்திற் றிரிந்து வஞ்சனையாற் செய்வனவும், தேவராற் பெற்ற வரங்களாற் செய்வனவும் கடையூழிக்கண் தோன்றிய வாதலின் சிறப்பிலவாம். அவை, சிறுபான்மை கொள்க''[1]

இதனால், போர்க்களத்தில் அறத்தில் திரிதல், வஞ்சனை செய்தல் முதலியன நெறித்தூய்மை அற்றவை. வலிமைக்கு நேர் வலிமை என்றில்லாத, வரத்து வலிமை சிறப்பில்லை. இவை யல்லாமல் வீரத்திற்கு வீரம், வீரனுக்கு வீரன், வலிமைக்கு வலிமை, திறத்திற்குத் திறம் என்னும் நெறித்தூய்மைகொண்டது தும்பைத் திணை என்றாகின்றது. சிறப்பில்லாதன யாவும் தெய்வக் கதைகளில் அமைந்துள்ளமையால் விட முடியாமல் 'சிறுபான்மை கொள்க' என்று இழுத்துக்கட்டி அமைதி கூறினார். நெறித் தூய்மைத் தும்பைச்செயல் எத்தகையது?

தும்பைப்போர்ப் பகைவரும் தூயவராதல் வேண்டும். அவர் '*தும்பைப் பகைவர்*''[2] எனப்பட்டனர். எதிர்த்துத் தும்பை சூடும் பகைவர் விழுப்புண் பெற்ற வீரத் தகுதி யுடையவராதல் வேண்டும். அத்தகைய வீரரை எதிர்ப்பதே ''துப்புடைத் தும்பை''ப் போர். விழுப்புண் பெறாத வீரரை எதிர்த்துத் தும்பையைச் சூடமாட்டார். இதனை,

> ''... ... ... ... ... .. ... *வடுவாழ் மார்பின்,*
> *அன்புசேர் உடம்பின் நேர்ந்தோர் அல்லது*
> *தும்பை சூடாது*''[3] விடுத்தனர் என்பதால் உணரலாம்.

இத்தகைய போர் நெறித் தூய்மையை எண்ணியும் தூய வெண்ணிறத் தும்பை புறப் பூவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கலாம் போலும்.

## அடைமொழித் தும்பை

போரில் இவ்வாறு நெறி தழைக்க நிற்பதால் ''தழைத்த தும்பை'' என்று புறக்கருத்து பொருந்தக் குறிக்கப்பட்டது. இத் தழைத்த தும்பையால் வென்றோரைப் பாடும் புலவரும் ''தும்பைப் புலவர்'' எனப்பட்டனர்.

---

1 தொல்: பொருள்: 70 உரை. 3 பதி பத்து. 42; 4—6.
2 பதி. பு: 14: 8, 9,

"ஆடுகொளக் குழைத்த தும்பைப் புலவர்
பாடுதலை முற்றிய கொற்ற வேந்தே"[1] –என ஐயூர் மூலங் கிழார். புலவர்க்குப் பட்டஞ் சூட்டினார்.

புறப் பூவாக மார்பில் அணியத் தாராகவும் தும்பைப் பூ கொத்தோடு தொடுக்கப்படும். போர்க்கோலத்தில் பொகுட்டெழினி யைக் கண்ட அவ்வையார்,

"அலர் பூந் தும்பை அம்பகட்டு மார்பின்
என் ஐ"[2] –என்றார். வீரத்துறைக்கு அன்றி ஒப்பனைத் துறையிலும் தும்பை மாலையாயிற்று.

காமச் சிலம்பம் அறியாத பெதும்பைப் பருவப் பெண் ஒருத்தி. அவளைக் காமக் கலையில் பட்டம்பெற்ற ஒரு தலைவன் அணைத்தான். அணைப்பின் 'கிளுகிளு'ப்பை அறியாத அவள் அவனது மார்பை விலக்கினாள். விலக்கியவளது இளம் பருவ மார்பை அம்மூவனார் என்னும் புலவர்

"தும்பை மாலை இளமுலை"[3] –எனத் தும்பை மாலை யோடு எழுவதைக் காட்டினார். இதுகொண்டு தும்பை மாலையை ஒப்பனைக்காகத் தொடுத்து அணிந்தனர் என்பதை அறியலாம். "இதனை இளமகளிர் அணிவர்" என்னும் உரைக்குறிப்பால் இளம் பெண்கள் விளையாட்டாகவும் தொடுத்து அணிந்தனர் எனக் கொள்ளலாம்.

விளையாட்டுப் பெண்கள் மட்டுமல்லர், திருவிளையாட்டு புரியும் சிவபெருமானுக்கும் சூட்டும் பூ ஆயிற்று.

ஆயினும் புறப் பூவாக அமைந்த தொடர்பிலேயே தும்பைப் பூ பெரும் சிறப்பைப் பெற்றது. இதற்குத்தான் எத்துணை அடை மொழிகள்?

| | |
|---|---|
| புறவிதழ்ப் பசுமையால் | — "பைந்தும்பை" |
| துவளும் இளமையால் | — "பருவத் தும்பை" |
| தொடர் பூவாகையால் | — "நெடுந் தும்பை" |
| தழைத்தமையால் | — "குழைத்த தும்பை" |

1 புறம் ; 21 : 11, 12.
2 புறம் :96 : 1.
3 ஐங், நூ : 127 : 2.

விரிந்த அகவிதழால் — "அலர் பூந் தும்பை"
தூய்மையால் — "துப்புடைத் தும்பை"
களப்போர்க்கு உரிமையால் — "போர்த் தும்பை"
போர்க்கடுமையால் — "வெப்புடைத் தும்பை"
சூடும்போது இசைக்கருவிகள்
துவைத்துமுழங்கப்படுதலால்— "துவைத்த தும்பை"
"தோல்விக்கு ஏதுஆகாமை" எனக்
குறிக்கப்பட்டதால் — "தோலாத் தும்பை"
குறிக்கோளில் வெற்றி விளைப்பதால் — "வாகைத் தும்பை"
பொன்னால் செய்யப்படுவதால் — "பொலந் தும்பை"
பிறவற்றாலும் செய்யப்படுவதால் — "வாடாத் தும்பை"

இத்துணை அடைமொழிகளால் சிறப்படையும் தும்பைப் பூ எவ் அடைமொழி இல்லாமலும் ஒரு சிறப்பைப் பெறுகின்றது. அடைமொழி மட்டு மன்று; தும்பை எனும் பெயரே இல்லாமல் ஒரு தனியிடம் பெறுகின்றது. பொதுப் பெயராகிய 'பூ' என்னும் பெயரே தும்பையைக் குறிக்கும் அளவில்,

*"ஒன்னார் தேயப் பூ மலைந்து"*[1]

— எனத் தும்பை குறிக்கப்பட்டது. போரில் 'பூ' என்றாலே 'தும்பை' என்னும் இடம் பெற்றது தனிச் சிறப்பே.

தும்பையின் பெயரால் 'தும்பை மாலை' என்றொரு சிற்றிலக்கியம் உண்டு. இத்துணையும் பெற்ற தும்பை குணத்தில் எவ்விடத்தைப் பெற்றுள்ளது?

*"தள்ளருந் தும்பை, சாதி சாத்திக மலர்களாமே"*[2] —என்றபடி தும்பை சாத்துவிகக் குணங்கொண்ட மலர். சாத்துவிகம் என்னும் அமைதிக்குணம் முக்குணங்களில் மேம்பட்ட குணம் அன்பு, அருள், அறிவு, பொறை, அடக்கம், வாய்மை என்னும் மென்மைக் குணங்களின் குறியீட்டுச் சொல் சாத்துவிகம், இக்குணங்களுக்கும் உரியதாகக் குறிக்கப்பட்ட,

---

1 பதி, ப : 40 : 9.
2 புட். வி. 88 : 4.

"தும்பை மறையோர் தமக்கு ஆகா"[1] - எனப் புட்பவிதி அறிவிக்கின்றது. "தள்ளருந் தும்பை" என்று பாடிய இந்நூல் ஏனோ மறையோரை இப்பூவிலிருந்து தள்ளிவைத்துள்ளது?

பொதுவிலும் சிறப்பிலும் தும்பை,
வாழ்வில் தூய்மைப் பூ.
தூய்மை தும்பையைத் தொடர்ந்து
வெற்றி வாகை மலரும்.

# வெற்றி மலர்

## வாகை

### வெற்றிப் பூ

தும்பையின் குறிக்கோள் வெற்றி. இக்குறிக்கோளைப் பெற்றவன் 'வெற்றி பெற்றான்' என்பதைவிட 'வாகை சூடினான்' என்பதே பெருவழக்காகும். வாகைப் பூவிற்கே 'வெற்றிப் பூ' என்று பெயர். சேந்தன் திவாகரம்,

"வெல்லுநர் அணிவாகை வெற்றிப் பூவே[2] - என்கின்றது.

போரில் வீரர் படைகள்கொண்டு மோதிக்கொள்ளும் போரே பெரும் அளவினதாயினும் கருத்து மோதலும், கலை மோதலும் போராகவே கருதப்பட்டன. வாகைத் திணையில்,

"பாலறி மரபின் பொருநர்க் கண்ணும்"[3] - என்பதை விரித்த நச்சினார்க்கினியர்,

1 புட். வி : 28 : 1
2 சேந் : தி : மரப்பெயர்.
3 தொல் : பொருள் ; 75 : 7.

"அவை சொல்லானும் பாட்டானும் கூத்தானும்
மல்லானும் சூதானும் பிறவற்றானும் வேறலாம்"

—என வெற்றியைக் கொள்ளும்போர்களைக்குறித்தார். சொற்போர், இசைப்போர், கூத்துப் போர், மற்போர், சூதாட்டப் போர் முதலியவற்றில்வெல்வதும்வாகைத் திணையில் அடங்கும்.

*"கல்வியிற் கேள்வியிற் கொடையிற் படையில்*
*வெல்லுநர் அணிவது வாகை யாகும்"* [1] —எனப் பிங்கல நிகண்டு கேள்வியையும் கொடையையும் இணைத்தது. இவற்றிற் பெறும் வெற்றிக்கும் வாகை சூடப்படும் எனக் காட்டிற்று. உண்மையாகவே இவ்வெற்றிகளுக்கு வாகைப் பூ சூடப்பட்டது எனக்கொள்ள வேண்டியதில்லை. வேண்டுமாயின் பொன்னாற் செய்த வாகைப் பூ சூட்டப்பட்டிருக்கலாம். அன்றி வாகை சூடியதாக மரபிற்குச் சொல்லப்பட்டிருக்கலாம்.

பராசரன் என்றொரு நான்மறை வல்லுநன். அவன் தனது நாவன்மையால் சொற்போரில் எதிர்த்தோரை ஓட்டி வென்றான். அவன்,

*"நா வலங்கொண்டு நண்ணார் ஓட்டிப்*
*பார்ப்பன வாகை சூடி"* [2] *னான்* எனப்பட்டான் வெற்றி விருதாகப் பொன் வாகை சூட்டப்பட்டிருக்கலாம். இது சொற்போர் வாகை.

கலைப் போர் வெற்றியிலும்,

*"... ... — ... ... ... — போர்வாள் மறவர்*
*வருக தாமென வாகைப் பொலந் தோடு*
*பெருநா ளமையம் பிறக்கிடக் கொடுத்து"* [3] ச் சிறப்பித்ததாக இளங்கோவடிகள் பாடினார். எனவே, பெரும்பகுதி செயற்கை வாகை சூடுவதும், வெற்றிபெற்ற நிலையில் பொதுவில் வீரர் இயற்கை வாகைப் பூவைச் சூடி வெற்றி கொண்டாடுவதும் நடைமுறையாக இருந்திருக்கும்.

---

1 *பிங். நி :* 1381.
2 *சிலம்பு :* 23 : 71, 72.
3 *சிலம்பு :* 27 : 42 — 44.

*''வல்லிற் கல்வியிற் படையிற் கொடையில்*

*வெல்லுநர் அணிவாகை வெற்றிப் பூவே''* – எனத்திவாகரம் (மரப் பெயர்) 'வெற்றிப்பூ' என்றே காட்டிற்று.

எவ்வாறாயினும் வாகைப் பூ வெற்றிச் சின்னம். அதன் பெயரால் வாகைத் திணை பெயர் பெற்றது.

இப் பூவை வழங்குவது பெருமரம். வானளாவிய பெருமரம்.

*'' மால் அமர் பெருஞ்சினை வாகை ''*

– எனச் சாத்தனார், கருமுகில்கள் வந்து அமரும், என்று குறிக்குமளவில் பெரிய மரம். எனவே,

வாகைப் பூ கோட்டுப் பூ.

## அத்த வாகை

ஆலமரம் போன்று கிளை பரப்பி நிற்கும் இம்மரத்தின் அடியிடம் 'வாகைமன்றம்' எனப்பட்டது. மன்றம் என்பது அக்காலத்தில் பொதுவில் பலர் கூடும் மரத்தடியிடத்தைக் குறித்தது. ஆல மரத்து இடம் முதலில் மன்றம் எனப்பட்டது. பின்னர், பரவிய பிற மரத்தின் அடியிடமும் இலக்கியப் பாங்கி மன்றம் எனப்பட்டது. இவ்வகையில் மணிமேகலை 'வாகை மன்ற' த்தைக் காட்டுகின்றது:

*''கான்றையும் சூரையும் கள்ளியும் அடர்ந்து*

*காய்பசிக் கடும்பேய் கணங்கொண்டு ஈண்டும்*

*மாமலர் பெருஞ்சினை வாகை மன்றம்''* [1] — என்பதில் இம் மரச் சூழலில் வெப்பமான முள்மரம், புதர்ச்சூரை, கள்ளி, பசிப்பேய் குறிக்கப்பட்டன. இவையாவும் பாலைநிலக் கருப் பொருள்கள். இவற்றோடு வாகை சொல்லப்பட்டுள்ளது.

சேந்தங் கண்ணனார் என்னும் சங்கப் புலவரும்,

*''மல்குசுனை உலர்ந்த நல்கூர் சுரம் முதல்*

*குமரி வாகை''* [2] எனச்சுரத்தில் —பாலை நிலத்தில் வாகை உள்ளதைக் குறித்துள்ளார். இங்கு சுனை என்றது குறிஞ்சி திரிந்த நிலையைக் குறிப்பது.

1 மணி : 6 : 81 - 88. 2 குறுந் : 347 : 1, 2.

குடவாயிற் கீரத்தனார் "அத்த வாகை" என்றார். 'அத்தம்' என்பது பாலை நிலப்பாதை. எனவே பாலை நிலத்துள்ள வாகை என்றாகும். இவை யாவற்றாலும் வாகை பாலை நிலத்து மரம். எனவே,

வாகைப் பூ பாலை நிலப் பூ.

வாகை பாலை நில மரமாயினும் இக்காலத்தில் எங்கும் காணப்படுகின்றது. இலக்கியங்கள் காட்டும் ஓர் அடையாளம் அதன் காய் பற்றியது. இதன் காய் முற்றிய நெற்று. பட்டை யாகவும் சற்று நீண்டும் தோற்றமளிக்கும். சடைசடையாகக் காய்க்கும். காற்றின்போது இந்நெற்றுக்களின் உள்ளீடான விதைகள் 'கலகல' வென ஒலிக்கும் என்பதை,

*"அத்த வாகை அமலை வான்நெற்று*
*அரியார் சிலம்பின் அரிசி ஆர்க்கும்"*[1] —எனக்

குடவாயில் கீரத்தனார் பாடினார். பரல்கள் இடப்பட்ட சிலம்பில் இனிய ஒலியாக இதனைக் கண்டுள்ளார் அவர். இவ்வடையாளத் துடன் இன்றும் வாகையைக் காண்கின்றோம். நாட்டு வழக்கில் ஒரு பழமொழி உலவுகின்றது. "மடையானில் குஞ்சையும் வாகை யில் பிஞ்சையும் பார்க்க முடியாது" என்பர். மேற்கண்ட நெற்று டைய வாகையில் இவ்வடையாளத்தையும் காண முடிகின்றது. ஏன் பிஞ்சைக் காணமுடியாது?

இதன் அரும்புகள் கொத்தாக இருக்கும். பயறுபோல் பசுமையாக இருக்கும். இம் மொக்கின் உச்சிப் பகுதியை நகத்தால் அழுத்தி இழுத்தால் பட்டுநூல் போல நீண்ட மயிரிழைகள் நீளும். இவையே அதன் அக இதழ்கள். இதுபோன்றேதான் நள்ளிர வில் இதன் பிஞ்சு தோன்றி சில நாழிகைகளில் வளர்ந்து காயாகி விடுகின்றது. மாலையில் பூங்கொத்தில் அடையாளமும் காட்டாத பிஞ்சு, காலையில் காயாகத் தோன்றுவதால் மேற்சொல்லப்பட்ட பழமொழி எழுந்துள்ளது. பட்டையான நெற்றும் காண இயலாத பிஞ்சும் கொண்ட வாகையின் பூ மங்கலான வெண்மை நிறங் கொண்டது. மலரும்போது அதன் மயிரிழைகளின் மேல் முனை சற்று பசுமை நிறங் காட்டும். அலர்ச்சியின்போது பட்டின் வெண்மை பளபளக்கும்.

---

1 குறு : 369 : 1, 2.

இதன் இலை கவட்டு இலை. அஃதாவது பிளவுபட்ட இலை. இலையின் மேற்புறம் பசுமையாகவும் அடிப்புறம் புல்லென் றும் இருக்கும். இதனால் இது,

"*புன்புறக் கவட்டிலை*"[1] எனப்பட்டது.

இக்கவட்டிலைக் கொத்தின்மேல் இதன் பூ தோன்றும். மேல் எல்லையாக 15பசும் மொக்குகளிலிருந்து ஓரங்குல அளவில் நீளும் மயிரிழைகள் அழகாகக் காட்சியளிக்கும். ஒரு கொத்தின் முழு மலர்ச்சி வெண்சாமரை வடிவில் சிறியதாகத் தோன்றும்.

## பொன்னும் வாகையும்

இலக்கியங்கள் இப்பூவின் நிறத்தை வெளிப்படையாகக் காட்டவில்லை. 'செங்கழுநீர்' 'வெண்கோடல்' 'நீல்நிற நெய்தல்' 'கருநீலம்' என்றெல்லாம் நிறத்தைக் குறிக்கும் அடைமொழிகளால் மலர்களின் நிறம் தெளிவாக்கப்படுவதுண்டு. இவ்வாறு வாகைப் பூவிற்கு நிறச்சொல் ஒன்றும் அடைமொழியாகச் சொல்லப்பட வில்லை.

"*வாகை ஒண் பூ*"

"*சுடர் வீ வாகை*"— என ஒண்மை, சுடர் என்னும் அடைமொழிகளால் குறிக்கப்பட்டுள்ளது. 'ஒண்மை' ஒளியுடையது என்னும் பொருள் தரும். 'சுடர்' என்பதும் ஒளியைத்தான் குறிக்கும்; நிறத்தைக் குறிக்காது என்பதை வஞ்சிப்பூவின் விளக்கத் தில் கண்டோம். இடத்திற்கு ஏற்ப விளக்கின் சுடரைக் குறிக்கும். எனவே, இவ்விரு அடைமொழிகளும் வாகைப் பூவின் நிறத்தைக் காட்டுவன ஆகா.

நிறச்சொல் அடைமொழி இல்லாமல் பிற அடைமொழி களாலும், உவமத் தொடர்களாலும் மலரின் நிறம் வெளிப்படுத்தப் படும். 'வால் வீ' என்பதில் வால் வெண்மைப் பொருளாகி நிறத்தைக் குறிக்கும். "குருதிக் காந்தள்" என்பது 'குருதி போன்று சிவந்த நிறக் காந்தள்' என்று நிறத்தைக் காட்டும். "மணிக் குரல் நொச்சி' என்பது நீல மணி போன்ற நாச்சிப் பூ" என நீல நிறத்தைக் காட்டும்.

---

1 அகம் : 186 : 10

இவை போன்று வாகையும் அடைமொழி பெற்றுள்ளது. "சுடர் வீ" என்ற காப்பியாற்றுக் காப்பியனாரே,

"பொன்படு வாகை" —என்றார்.

இத்தொடர் கொண்டு பொன் போன்ற மஞ்சள்நிறமுடைய வாகைப் பூ என்னும் கருத்து எழலாம். இவ்வாறு எழுவது மேற்போக்கான நோக்கில் எழுவதாகும். கூர்ந்து நோக்கினால் இக்கருத்து பொருந்தாமை புலப்படும்.

முன்னே கூறப்பட்ட இரண்டு தொடர்களும் அமைந்த பாடல்கள் இரண்டும் ஒரு வரலாற்றுப் பின்னணி கொண்டவை.

ஒவ்வொரு மன்னனும்—காவலனும் ஒவ்வொரு மரத்தைத் தனது பெருமைச்சின்னமாகப் பெற்றிருப்பான். இது 'காவல் மரம்' எனப்படும். இக்காவல் மரத்தைப் பகை மன்னர் வெட்டி வீழ்த்தினால் வென்றவர் ஆவார். வென்ற பின்னரும் வெட்டி வீழ்த்துவர். இதனால் 'காவல் மரம்' படைகளால் தனியே பாதுகாக்கப்படும்.

நன்னன் என்னும் சிற்றரசனது 'காவல் மரம்' வாகை மரம். அதனைக் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்பான் வெட்டி வீழ்த்தினான். இச்செய்தியை,

"... ... ... ... ... ... .... .....நன்னன்
*சுடர் வீ வாகைக் கடி (காவல்மரம்) முதல் தடிந்த*
*தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்*"[1] —என்றும்

"... ... ... ... ... ... ... நன்னன்
*நிலைச் செருவின் ஆற்றலை அறுத்தவன்*
*பொன்படு வாகை முழுமுதல் தடிந்து*"[2] —என்றும்

விளக்கினார்.

இங்கு "பொன்படு வாகை" என்றது வாகைப் பூவை அன்று. வாகை மரத்தைக் குறிக்கும். எனவே 'பொன் நிறமுடைய பூ' என்று பொருள் படாது. ஏன் எனில், பொன்போன்று என உவமையாக வரும் இடங்களிலெல்லாம்,

---

1 பதிற். ப: 40 : 14-16
2 பதிற்று : பதிகம் 4 : 7—9

"பொன் அன்ன வீ"
"பொன் நேர் தாது"
"பொன்போல் பீரம்"
"பொன் மருள் புதுப் பூ"
"பொன் வீக் கொன்றை"
"பொன் வீ வேங்கை" –என உவம உருபு கொடுத்தும் தொகுத்தும் பாடப்படும். இங்கு, "பொன்படு" எனப் 'படு' என்னும் துணைவினையால் கூறப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. படுதல் = உண்டாதல். 'இமய மலையில் பொன் உண்டாகும்' என்பர். குடகு மலையையும் 'பொன்படு மலை' என்பர்.

"பொன்படு நெடுங்கோட்டு இமயம்" (புறம் : 39 : 14,15.)
"பொன்படு நெடுவரை" (புறம் : 166 : 27)
"பொன்படு மால் வரை" (புறம் : 201 : 18)

–என்பவற்றால் அறியலாம். இங்கெல்லாம் 'பொன் உண்டாகும்' என்றே பொருள்கொண்டனர். இவை போன்றே "பொன்படு வாகை" என்றதும் ஆகும். 'பொன் உண்டாகும் வாகை' என்று பொருள்படும். அவ்வாறாயின் வாகையில் பொன் எவ்வாறு உண்டாகும்?

நன்னனது நாட்டில் வாகை மரம் மிகுதி. நாட்டு வளத்தைக் காட்டும் வகையிலும் இஃது அமைந்தது. எனவே, அவன் வாகை மரத்தைக் காவல் மரமாகக் கொண்டான். அவனது நாடு கொண்கான நாடு. அந்நாடு,

"பொன்படு கொண்கான நன்னன் நன்னாடு"[1]

–எனப்பட்டது. இதனையே 'கொங்கு–நாடு' என்பர். (கொங்கு = பொன்) இதனால் பொன் உண்டாகும் அவனது நாட்டு வாகைமரம் "பொன் படு வாகை" எனச் சிறப்பிக்கப் பட்டது. நாட்டின் பொன் வளம், நாட்டின் காவல் மரத்திற்கு ஏற்றிப் பாடப்பட்டது. இங்கு வாகை மரத்தைக் குறிப்பதும் நோக்கத்தக்கது; பூவை அன்று. எனவே, இதுகொண்டு வாகைப் பூவின் நிறம் பொன் நிறமான மஞ்சள் நிறம் என்று கொள்ள இயலாது. இந்நிறத்தில் வாகைப் பூவும் இல்லை.

---

1 நற் : 391 : 6

## மயில் குடுமிப் பூ

வாகை மரம்பற்றிய இலக்கிய அடையாளமாகிய 'வெண் நெற்று', 'கவட்டிலை' 'துய்யென்றிருத்தல்' ஆகியனகொண்டு நாம் காணும் வாகையின் பூ முன்னர் குறித்தமை போன்று வெளிர் நிறங்கொண்டது. துய்யென்றிருக்கும். இதழ்க் கம்பிகள் வெண் பட்டு நூல் போன்றவை. வாகைப் பூ வெண்மை என்பதை நிகண்டு ஒன்றில் காண்கின்றோம். 17-ஆம் நூற்றாண்டில் ஆண்டிப் புலவர் என்பவரால் தொகுக்கப்பெற்ற ஆசிரிய நிகண்டு,

*"போர்க்களந் தனில்வெற்றி*
*புரிவதே, வாகைவெண் பூவையும் வெற்றியம்*
*பூவென் றியம்பினரே"* [1] —எனக் குறிக்கின்றது. இஃது ஒரு சான்றாயினும்—இச்சான்றிற்கு நாம் கண்கூடாக இன்றும் காணும் வாகையின்பூ வெண்மையாயினும்—இதனை உறுதியாக்கப் பெரும்புலவர் மூவரது கருத்துகள் தடைகளாக உள்ளன.

சேந்தங் கண்ணனார் என்னும் சங்கப் புலவர், ஓர் இளமை யான தோகை மயிலைக் காட்டுகின்றார். அதன் தலையில் பள பளக்கும் கொண்டையைச் சுட்டுகின்றார். சிறு விசிறி வடிவில் தோன்றும் அதை உவமையாக்கி வாகைப் பூ தோன்றுவதைக் குறிக்கின்றார் :

*"குமரி வாகைக் கோலுடை நறுவீ*
*மடமாத் தோகை குடுமியில் தோன்றும்"* [2] என்னும்

அவரது கருத்துப்படி வாகையின் கொப்பில் காணப்படும் வாகைப் பூ மயிலினது குடுமி இறகு போன்று செந்நீல நிறங்கொண்டதா கின்றது. இவ்வுவமையையே, கேசவனார் என்னும் புலவரும்,

*"வாகை ஒண்பூ புரையும் உச்சிய*
*தோகை"* [3] —என மாற்றுமுறையிற் பாடியுள்ளார். மயிற் கொண்டையின் உவமைப்படி மேற்கண்ட வாகையின் பூ பள பளப்பது. அக்கொண்டையின் வடிவமைப்பைக் கொண்டது. எனவே, இங்கு உருவ உவமையாகக் கொள்ளலாம்.

---

1 ஆசி. நி 84 : 4
2 குறுந் : 347 : 2,3
3 பரி : 14 : 7, 8.

ஆனால், முன்னே கண்ட வெண்மை நிறம் பொருந்துவதன்று. இவர்களினும் குறிப்பிடத் தக்க புலவராம் கபிலர் கூறும் உவமை ஒன்று மேலும் தடையை வலுப்படுத்துகின்றது. பெரும்புலவர் என்பதால் ஏறும் வலிமை மட்டுமன்று; புறத்திணைத் தொடர்பில் வரலாற்றுக் குறிப்புடன் வெளிப்பட்டிருப்பதும் காரணமாகின்றது

கபிலர் முல்லைக்குத் தேர் ஈந்த பாரியின் உயிர் நண்பர். ஒரு நாள் முல்லையில் கவனங்கொண்டார். பூத்த முல்லையை வண்டுகள் சூழ்ந்து மொய்த்துள்ளன. இக்காட்சியில் மனம்பதித்த அவரது உள்ளம் ஓர் உவமை சொல்ல முந்தியது. புற நிகழ்ச்சி ஒன்று அவரது உள்ளத்தில் நிழலாடியது. வெற்றிபெற்ற செல்வக் கடுங்கோ வாழியாதனாம் சேர மன்னனது போர் வீரர் பனந் தோட்டில் வாகைப் பூவைத் தொடுத்து முடித்துள்ள காட்சி அது. அதனை உவமையாக்கி,

*"பேரர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த*
*கடவுள் வாகைத் துய்வீ ஏய்ப்ப*
*பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை"*[1] —எனப் பாடினார்

இங்கு பனந்தோடு மடக்கி முடிச்சிட்ட நிலையில் முல்லைப் பூப் போன்றுள்ளது. வாகைப் பூ முல்லையை மொய்க்கும் புதல் சூழ் பறவை எனப்பட்டது பொதுவில் வண்டினத்தைக் குறிக்கும். வண்டினத்தில் சுரும்பு ஒன்று. அஃது இறகை விரித்துப்பறக்கும் நிலையில் இறகின் உள்நிறத்தால் ஓரளவான செம்மை தோன்றும் இவ்வாறு வண்டிற்குச் செந்நிறம் கூறப்படுவது உண்டு.

*"செல்லாவாம் செம்பொறி வண்டினம்"*[2] —என நாலடியார் செம்புள்ளிகளைக் குறிக்கின்றது. எனவே, கபிலர்தம் உவமை கொண்டு வாகைப் பூவின் நிறம் செந் நீலம் என்று கொள்ள வேண்டும்.

மயிற்கொண்டை உவமை, சுரும்பின் உவமை இவற்றால் மட்டு மன்றிக் கபிலர் வண்ணித்துள்ள "துய் வீ"யும் வாகையின் அடையாளங்காட்டுவது. பெரும்புலவராகிய கபிலர்— பூக்களின் தொகுப்பிற்கெனக் குறிஞ்சிப்பாட்டில் குறிப்பிடத்தக்க இடம் அமைத்த கபிலர் கருத்தை ஒதுக்கிவிடுதல் அறியாமையாகும். அஃது ஆய்தற்குரியது. ஏதேனும் உண்மை அதில் பொதிந் திருக்கும்.

---

1 பதிற் : 66 : 14—16. 2 நாலடி : 283 : 2.

# வாகை இரண்டு

மேலே காணப்பட்ட வாகை போன்ற மரம் மற்றொன்றையும் இன்றும் காண்கின்றோம். இக்காலத்தில் இது 'தூங்கு மூஞ்சி மரம்' என்று வழங்கப்படுகிறது. 'தூங்கு' என்னும் பெயர் கதிரவன் மறைந்ததும் அதன் இலைகள் இரண்டு ஒட்டி மூடிக் கொள்பவை என்பதால் இடப்பட்ட பெயர். இப்பெயர் இதன் இயற்பெயராகாது. இன்றும் பல முதியோர் இதனைக் 'கருவாகை' என்றே வழங்குகின்றனர். இம்மரமும் முன்னே காணப்பட்ட வாகையும் பலவகையில் ஒற்றுமையும் சிலவகையில் வேறுபாடும் கொண்டவை. ஆனால், ஒரே இனத்தவை.

இரண்டும் பெருமரமாக உயர்ந்து வளர்பவை;
பரவலாகக் கிளைகளைப் பரப்புபவை;
இலைகள் கவட்டிலைகள்;
ஒரே அமைப்பான வடிவமைப்புள்ள பூவைக் கொண்டவை;
துய் என்றிருக்கும் பூவைக் கொண்டவை;
அப்பூக்களும் பளபளப்புள்ளவை.
இரண்டும் மயிரிழை போன்ற இதழ்களைக் கொண்டவை.

சில வேறுபாடுகள்:

முன்னதைவிடப் பின்னது கருமையான மேம் பட்டையைக் கொண்டதால் 'கருவாகை' எனப்படுவது.
கவட்டிலையாயினும் தனியிலை வடிவில் சிறிது வேறுபாடு உண்டு.
பின்னதில் இலைகள் மாலையில் மாலை நேரத்தில் ஒட்டிக் குவிந்துகொள்ளும்.
முன்னதன் பூ வெண்மை நிறம்; பின்னதன் பூவோ செந்நீல நிறம்.

இங்கு இவற்றின் நிற மாறுபாடுகளே எண்ணத்தக்கன.

கபிலரும் பிற இருவரும் குறித்திருக்கின்றவாறு பின்னதாகிய கருவாகையாம் தூங்கு மூஞ்சியின் பூவைக் கொள்ளலாம். பள பளக்கும் செந்நீலத்துடன் விளங்கும் இதனையும் போரின்போது சூடியிருப்பர் என்று கருத இடமுண்டாகின்றது.

மங்கலான வெண்மையினும் செந்நீலம் கவர்ச்சியுடைய தாகையால் இதனையும் வெற்றிச்சின்ன வாகையாகச் சூடியிருப்பர் 'சுடர்வீ' என்பதும் இதற்குப் பொருந்தும்.

எனவே,

வாகைப் பூவில் இருவண்ண வகைகள் உள்ளன:

ஒன்று மங்கலான பளபளக்கும் வெள்ளை;

மற்றொன்று பளபளக்கும் செந்நீலம்.

இரண்டும் வெற்றிக்காகச் சூடப்பட்டன. — என்னும் முடிவைக் கொள்ள நேர்கின்றது.

இவ்விரண்டு வகையையும் கபிலர், பாணர், காப்பியனார், சேந்தனார், கேசவனார் முதலிய முதிர்காலப் புலவர்கள் பாடியுள் ளனர். இவர்களது வண்ணனைகளில்,

*"கோலுடை நறு வீ"*

*"வாகை ஒண் பூ"*

*"சுடர் வீ வாகை"*

*"துய் வீ வாகை"*

*"மென் பூ வாகை"* —எனப்பட்டவை கொண்டு இப் பூ திரண்ட காம்பை உடையது; ஒளியுள்ளது; பளப்பளப்பாகச் சுடர் வது; பஞ்சுபோன்ற இழைகளைக் கொண்டது; மென்மையானது எனுந் தன்மைகளைப் பெற்றதாகின்றது. இன்றும் இருவகை வாகையிலும் இத்தன்மைகளைக் காண்கின்றோம்.

வாகை மரத்தைக் "குமரி வாகை" என்றும், "கடவுள் வாகை" என்றும் "அத்தவாகை" என்றும் காண்கின்றோம்.

இளமையான மரமாக முதன்முதலில் பூக்கும் வாகை குமரி வாகை எனப்பட்டது. இப்பருவ மரத்தின் மலர் எழில் கொண்ட தாகும். இச்சிறப்பை 'குமரி' என்னும் அடைமொழி குறிக் கின்றது.

பாலைநிலத்தில் இப் பூ கொற்றவைக்காகக் குறிக்கப்பட்ட பூ. ஆகையால், "கடவுள் வாகை" எனப்பட்டது. இஃதொரு சிறப்பு. "அத்த வாகை" முன்னர் அறியப்பட்டது.

## சூடிய வாகையும் சூடா வாகையும்

வெற்றி கருகிச் சூடிய நிலையைப் பின்வருமாறு கொள்ள வேண்டும். இப் பூ 'துய்' என்று மென்மையாகவும் தனி இதழ் களின்றியும் இழைத் தொகுப்பாகவும் உள்ளமையால் தனி மலராகக் கொய்து சூடிக்கொள்ளல் பார்வைக்குரியதாகாது. எனவே, கவட்டி லைகளுடன் கூடிய கொத்தாகச் சூடிக்கொண்டனர். இதனை ஐயனாரிதனார் தம் இலக்கணத்தில்,

"இலை புனை வாகை சூடி"[1]

என்று குறித்தார். 'இலை புனை வாகை' எனப்பட்டதால் இதன் இலைகள் புனைவாக — அழகாக அமைந்தன என்றும், இலைக் கொத்தை மடக்கி முடிச் சிட்டுப் புனைந்துகொண்டனர் என்றும் கொள்ளலாம். எவ்வா றாயினும் இலையுடன் சூடப்பட்டது.

இவ்வாகையால் பெயர் பெற்ற ஊர் ஒன்று குறிக்கப்படு கின்றது. 'வாகை' என்னும் இவ்வூர் 'எயினன்' என்னும் வள்ள லுக்கு உரிய ஊர். இவ்வூர் மிக வளம் உடையதாக இருந்தது. வளமான ஊரை மகளிரது எழில் நலத்திற்கு உவமை கூறுதல் மரபு. இம்மரபில்,

"வண்கை எயினன் வாகை யன்ன
இவள் நலம்"[2] – எனப்பட்டது. இவ்வூர்ப் போர்க்களம்,

"கூகைக் கோழி வாகைப் பறந்தலை"[3]

—என்று குறிக்கப் பட்டது. "வாகைப் பறந்தலை" என்பது செய்யுள் வழக்காயிற்று இப்பெயரும் வாகைப் பூவால் அமைந்தது என்பதைப் பரணது பாடல் காட்டுகின்றது. இம் ஊராம் வாகை, சூடும் பூவாகிய வாகை அன்று;

---

1 புற. வெ. மா : வெட்சிக் கொளு.
2 புறம் 351 : 6, 7.
3 குறுந் : 393, 3

"சூடா வாகைப் பறந்தலை"[1] — என்றார்.

வளத்தால், போர்க்களத்தால், வெற்றியால் பெயர் நாட்டிய வாகைப் பூ, புகழ்ப் பூவும் ஆகும். வாகைப் பூ என்றாலே 'புகழ்ப் பூ' என்னும் வழக்கு இருந்தது. இதனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் சுட்டிக் காட்டினார். வாகை என்னும் சொல் அகத்தி யையும் குறிக்கும். ஆனால், வாகைக்குரிய பெருமை அகத்திக்கு இல்லை. சொல்தான் உரியதேயன்றிப் புகழ் உரியதன்று. காட்டுப் பன்றியின் குருதி படிந்த பல்லிற்கு அகத்திப் பூவை உவமையாகக் கூறுவர். இவ்வகையில் அகத்திப் பூவை உவமையாக்கும் கடியலூரார்,

"புகழா வாகைப் பூவின் அன்ன
வளை மருப்பு ஏனம்"[2] —என்றார். அகத்தி புகழா வாகைப் பூ எனவே, வாகை வெற்றிப் பூவுடன் புகழ்ப் பூவும் ஆகின்றது.

## வகைக்குள் புறப் பூக்கள்

வெட்சி முதல் வாகை ஈறாக அமைந்த புறப் பூக்கள் எட்டும் இலக்கண, இலக்கியங்களில் பரவலாகவும் விரவலாகவும் நிரவலாகவும் இடம் பெற்றுள்ளன. பெருமையாகவும் அருமை யாகவும் உரிமையாகவும் பேசப்படுகின்றன. பலவற்றை இலக்கிய அளவிலேயே காண முடிகின்றது. சிலவற்றின் பெயர்கள் மாறின; மறைந்தன. இம்மாற்றத்தாலும் மறைவாலும் மருத்துவத்திற்குப் பயன்பட்ட நிலை மாறுபட்டும் வேறுபட்டும் ஊறுபட்டும் பயனளிக் காது போயின; கெடுதியையும் விளைத்துள்ளன.

தற்காலத்தில் இவற்றில் எப்பூவும் சூடப்படுவதில்லை. புற நிகழ்ச்சியாகிய போர் மரபு இல்லையென்றாலும் ஒப்பனையாகவும் சின்னமாகவும் சூடப்படுவதில்லை. இதனால் பல நல்ல மரபுகள் மாறின; தேய்ந்தன; மறைந்தன. சிலவற்றை அடையாளங் காண்பதே அரிதாயிற்று.

இலக்கிய இலக்கண நூல்கள் காட்டும் அடையாளங்களைக் கொண்டு இவற்றை இனத்தாலும் குணத்தாலும் நிறத்தாலும் நிலத்தாலும் பின்வருமாறு வகுத்தமைக்கலாம்:

1 அகம் : 125 : 19. 2 பெரும்பாண் : 109, 110.

இனவகை:

| | | | |
|---|---|---|---|
| கோட்டுப் பூ | 4 | : | வெட்சி, காஞ்சி, நொச்சி, வாகை, |
| கொடிப் பூ | 3 | : | கரந்தை, வஞ்சி, உழிஞை. |
| நிலப்பூ | 1 | : | தும்பை |
| நீர்ப்பூ | – | : | (இல்லை) |

குணவகை: (வீரத்தின் அடிப்படையில்)

| | | |
|---|---|---|
| அருள் | : | வெட்சி |
| உரிமை | : | கரந்தை |
| முனைப்பு | : | வஞ்சி |
| நாட்டுணர்வு | : | காஞ்சி, நொச்சி. |
| வன்கண் | : | உழிஞை |
| தூய்மை | : | தும்பை |
| வெற்றி, புகழ் | : | வாகை |
| நிலையாமை | : | காஞ்சி |

நிற வகை:

| | | |
|---|---|---|
| செம்மை | : | வெட்சி, கரந்தை, வஞ்சி (வாகை–செந் நீலம்) |
| வெண்மை | : | தும்பை, வாகை. |
| பொன்மை | : | உழிஞை. |
| நீலம் | : | காஞ்சி, நொச்சி. |

நில வகை:

| | | |
|---|---|---|
| குறிஞ்சி: | : | வஞ்சி, தும்பை. |
| முல்லை | : | வெட்சி, உழிஞை, நொச்சி, தும்பை |
| மருதம் | : | கரந்தை, காஞ்சி, தும்பை. |
| நெய்தல் | : | — — — — |
| பாலை | : | வாகை. |

இப்புறப் பூக்கள் போர் கருதியவை அன்றோ? போர் கருதுவோர் மன்னரும் வீரரும் ஆவர். அவருள்ளும் மேம்பட்டு நிற்போர் மன்னர். மன்னருள்ளும் மேம்பட்டோர் மும்முடி மன்னர். அம்மன்னர் தம் உரிமைச் சின்னமாகக் கொண்ட பூக்களை, 'மும்முடி மலர்கள்' எனலாம். அம்மும்முடி மலர்கள் அடுத்து மலர்கின்றன.

# மும்முடி மலர்கள்

## முடி மலர்கள் மூன்று
### ஆர், வேம்பு, பனை.

## தார் – சின்னப் பெயர்

*"மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்*
*மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும் — மும்மாவும்"* [1]

–என மும்மைகளை அடுக்கியுள்ளது திருவள்ளுவமாலைப் பாடல் ஒன்று. இவ்வடுக்கில் 'மும்மலர்' தொடுக்கப்படவில்லை. இவ்வடுக்கில் உள்ளவை முடிமன்னர் மூவேந்தர்க்குரியவை. ஆயினும், இவற்றில் எந்த ஒன்றும் அவர் தம் முடிமேல் இடம்பெறவில்லை. பார்வேந்தர் முடியில் தொடுக்கும் மும்மலரைப் பாட்டின் அடியில் தொடுக்க வேண்டாம் எனக் கருதினரோ என்னவோ? அதற்கென்று சொல்லாமலே விட்டு விடுவரோ?

முடிமேல் இடம் பெறுதற்கு உரிய மும்மலரை மாலையாக்கினார். அதிலும் பொருத்தமாக 'முப்பால்' என்னும் தாராகத் தொடுத்தார் :

---

1- *திரு. மா : சீத்தலைச் சாத்தனார் பாடலெனப்படும்.*

"தாருடைய மன்னர் தடமுடிமேல் தார் அன்றோ,
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்" —எனத் தடமுடி

மேல் தாரை உருவகப் பாங்கில் வைத்தார். இங்கு, பூவாகக் கூறாமல் தாராகக் கூறியது ஒரு மரபு. அரசர்க்கு உரியவற்றை மரபுச் சின்னங்களாகக் கூறும் தொல்காப்பியர்,

"படையுங் கொடியுங் குடியும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறும் தேரும்
தாரும் முடியும் போல்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய"[1] —என்றார்,

இப்பட்டியலில் பூ, தாராகக் குறிக்கப்பட்டது. எனவே பூந்தார் அரசர்க்கு உரிய மரபுப் பொருள்களுள் ஒன்று. பூவின் தார் என்றால் எப்பூவின் தார்?

"தார் எனவே, போர்ப் பூவுந் தார்ப் பூவும் அடங்கும்"[2]
—என்றார் பேராசிரியர்.

போர்ப்பூ முன்னர் விளக்கப்பட்ட புறப் பூக்கள் எட்டும் ஆகும். அடுத்துத் தார்ப்பூ என்றார். அஃது அவரவர் குடிப் பூவைக் குறிக்கும். அதனைத் தார் என்னும் அடைமொழியோடு குறித்தது. குடிக்குரிய சின்னப் பூ 'தார்ப் பூ' எனக் குறிக்கப்படும் சிறப்பை யுடையது என்பதைக் காட்டுகின்றது.

முடிமன்னர் மூவர். அவர் சேர, சோழ, பாண்டியர். அவரவர்க்கு எவ்வெப் பூ உரியது?

சேரனுக்குப் பனம் பூ;
பாண்டியனுக்கு வேப்பம் பூ;
சோழனுக்கு ஆர்ப் பூ.

இவை அவரவர் குடியை அறிவிக்கும் சின்னம். எனவே,

"வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னிய'[3] ராக விளங்கினர். அவரவர் அவ்வப் பூவை அரச அறிகுறியாகத் தவறாமற் சூடிக்கொள்வர். அரசரன்றி மற்றவர் சூடலாமோ? ஏன் சூட வேண்டும்? எப்போது சூடுவர்? தொல்காப்பியர் விடை வைத்துள்ளார்.

---

1 தொல் : பொருள் : 626
2 தொல் : பொருள் : 626 உரை.
3 புற. : 338 : 6, 7.

"வேந்திடை தெரிதல் வேண்டி, ஏந்துபுகழ்
போந்தை ஆரே வேம்பென வரூஉம்
மாபெருந் தானை மலைந்த பூவும்"[1]

இவ்வீரர் இன்ன அரசரைச் சேர்ந்தவர் என்று வேறுபாடு தெரிந்துகொள்ள வீரர் சூடுவர். போரின்போதும் சூடுவர். போர்வெற்றிக் கொண்டாட்டத்தின் போதும் சூடுவர். வெற்றி என்பது சொற்போர் முதலிய எவ்வகைப் போர் வெற்றியாக இருப்பினும் உரிய பூவைச் சூடி அரசன் வென்றதாகவே காட்டிக் கொண்டு ஆடிக் களிப்பர். இதனை,

"படைத்தலைவர் தம்முள் மாறாய் (பலவகைப் போரில் மாறுபட்டு) வென்று ஆடுங்கால் இன்ன அரசர் படையாளர் வென்றார் என்றற்கு அவரவர் பூச்சூடி ஆடுவர்"[2]

—என நச்சினார்க்கினியர் விளக்கினார். எனவே இம் மும்முடிப் பூக்கள் அரசர்க்கு உரிமைப் பூக்களாகி அவர்வழி வீரர்க்கும் உரியவாயின.

## தகுதி என்ன

முடிமன்னர் குடிகளின் சின்னமாகக் கொள்ளப்பட்ட இம் மலர்கள் எச்சிறப்பு கருதித் தேர்ந்துகொள்ளப்பட்டன?

பூவின் அளவில் நோக்குங்கால் எத்தகைச் சிறப்பும் புலப்படவில்லை. இவை மூன்றுமே,

பளிச்சிடும் நிறமுடையன அல்ல;
மணத்திற் சிறந்தன அல்ல;
அளவிற் பெரியன அல்ல; மிகச் சிறியன;
இவற்றிலும் பனம் பூ காட்சிதருவதும் அன்று;
பூவும் சூடப்படவில்லை;
தோற்றப் பொலிவு உடையனவும் அல்ல. பின் எது கருதி கொள்ளப்பட்டன?

---

1 தொல் : பொருள் : 60 : 3—5
2 தொல் : பொருள் : 60 : 3—5 உரை

பூக்களைத் தரும் மரங்களின் மிகுதியும் தகுதியும் கருதிக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும்.

பனை, தமிழ்நாட்டுத் 'தேயமரம்' என்னத் தக்க அளவில் எந்நிலத்திலும் காணப்படுவது. ''பனையாயிரம், பாம்பாயிரம், சிட்டாயிரம்'' என்றொரு பழமொழி ஆயிரக்கணக்கில் பனை கூடி இருப்பதைக் காட்டுகின்றது.

இன்றையத் தமிழகத்தில் மட்டும் நான்கு கோடிப் பனை மரங்கள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

ஆர் மரமும் இவ்வாறு செறிந்திருந்தது. கரிகால் வளவன் காடுகெடுத்து நாடாக்கினான். அவன் கெடுத்த காடுகளில் மிகுதி ஆர்க்காடு. இன்றும் வட ஆர்க்காடு, தென்னார்க்காடு மாவட்டப் பெயர்கள் இவ்வுண்மையைச் சொல்கின்றன. ஒரு காலத்திற் பெருகியிருந்த இம்மரக்காடு அழிக்கப்பட்டதால் இக் காலத்தில் அருகிப்போயிற்று.

வேப்பமரம் ஒரே இடத்தில் செறிந்து காணப்படாவிடினும் எங்கும் பரவலாகக் காணப்படுவது. மிகுதியும் அறிமுகமானது.

இம்மூன்று மரங்களும் மிகுதி நிலை கொண்டவை. மற் றொரு தகுதி நிலையும் உண்டு. இவை மூன்றும் தீங்கு நேராமல் தடுக்கும் மண வீச்சு கொண்டவை. இவ்வகையில் யாவராலும் அறியப்பட்ட சான்றாக வேம்பைக் கொள்ளலாம். இதன் மண வீச்சு நோய்தரும் நுண்ணுயிரிகள் தாக்காமல் தடைஉண்டாக் கும் தகுதி உடையது. இன்றும் அம்மை நோய்த் தடையாகப் பயன்படுத்தப்படுகின்றது. ஆரின் நார் குழந்தை நோய்த் தடை யாகக்கொள்ளப்படுவது. பனையோலைப்பாய் ஒரு நோய்த் தடை. இவற்றின் காற்று வீச்சு தீங்கு தரும் கேடுகளை அணுக விடாது. இதனால் இம் மூன்றும் காற்றாவி எனத் தீங்கு தருவதாக உருவகம் செய்யப்பட்ட பேய்க்குப் பகையாயின. வேம்பிற்குக் காற்றாவி வெம்பும்; ஆரிடம் அணுகாது; பனையில் பேய் பதுங்காது.

எனவே, இம்மரங்களின் மிகுதி கருதியும், தீங்குத் தடை யாம் தகுதி கருதியும் இவை மூன்றும் தேர்வுபெற்றிருக்கும் எனக் கொள்ள இடம் உண்டு.

## குடிப் பூவின் மதிப்பு

இம்மலர்கள் குடிப்பூ என்ற வகையில் தனிச் சிறப்புற்றவை முடி மன்னர் தத்தம் குடிப்பூவை மிக மதித்தனர்; போற்றினர்; சூடிப்பெருமை கொண்டனர். அத்துடன் அழகாகவும் கருதினர்.

யாவற்றிற்கும் மேலாக இப் பூக்களின்பால் அவர்கள் கொண்டிருந்த உரிமை குறிக்கத்தக்கது. அவ்வுரிமை தனி உரிமையாகாமல் அவ்வக் குடிக்குரிய பொது உரிமையாக இருந்தது.

ஒரு குடியைச் சேர்ந்த மன்னர் பிரிந்தாலும் பகைத்தாலும் குடிப் பூவை விட்டாரல்லர்; மாற்றிக்கொண்டாரல்லர். சோழன் நலங்கிள்ளியும் சோழன் நெடுங்கிள்ளியும் பிரிந்தனர்; பகைத்தனர்; போருக்கும் எழுந்தனர். அந்நிலையிலும்,

> *"நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்று*
> *நின்னொடு பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்று"*[1] —என

ஒற்றுமை காட்டிப் பாடப்பெற்றனர். இக்குடிப் பூக்கள் முடிமன்னர்க்கு மட்டும் உரியன அல்ல. அக்குடிவழி வந்த குறுநில மன்னர்க்கும் உரியனவாயின. முடிமன்னர் உறவினராய், அவர்காலத்தில் தனியாக ஆட்சி செலுத்தினும் அவர்க்கும் உரிய பூக்களாயின.

அதியமான் என்பவன் குறுநில மன்னன். உதியஞ்சேரல் என்னும் முடியுடைச் சேரனின் உறவு வழியினன். இவன் மகன் பொகுட்டெழினி. இவனைத் திருமலைக் கல்வெட்டு,

*"சேர வமிசத்து அதிகமான் எழினி செய்த தன்மம்"*[2] —என்கின்றது. அதியனுக்கும் எழினிக்கும் உரிய குடிப்பூ சேரர்க்குரிய பனம் பூவாகவே அமைந்தது. அதியமான் சூடியிருந்ததை அவ்வையார்,

> *"தொன்னிலை மரபின் முன்னோர் போல*
> *ஈகையங் கழற்கால் இரும்பனந் தொடையல்"*[3] – என்றார்,

இதற்கு உரை வகுத்த பழைய உரைகாரர்,

---

1 புறம் : 45 : 3, 4

2 *South Indian Inscription: Vol : 1 : No. 75.*

3 புறம் : 99 : 4 : 5.

"இவனுக்குப் பனந்தார் கூறியது சேரமாற்கு உறவாதலின்"[1] என்றெழுதினார். பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனும் சேரர் வழிவந்த சிற்றரசன் அதியமானும் போரிட்டனர். அதுபோது இருவரும் போந்தையையே குடிப் பூவாகச் சூடினர்.

பாண்டியர் 'செருமாண் பஞ்சவர்' எனக் குறிக்கப்படுவர். ஒருகால் பாண்டிய மன்ன குலத்தவர் ஐவராகப் பிரிந்தனர். ஒருவர் முடிமன்னராக அமைய ஏனையவர் குறுநிலங்களை ஆண்டனர். பாண்டிய நாட்டைச் சேர்ந்த மோகூரை ஆண்ட குறுநில மன்னன் பழையன் மாறன். இவர்கள் யாவரும் வேப்பம் பூவையே குடிப் பூவாகக் கொண்டனர்.

எனவே,

ஒரு குடியில்,

பெரு நில மன்னரானாலும்

குறுநில மன்னரானாலும் குடிப் பூ ஒன்றாகவே இருந்தது.

உறவினரானாலும் அப் பூ

பகை கொள்ளினும் அப் பூ —எனக் குடிப் பூ மாற்றமின்றி ஏற்றம் பெற்றிருந்தது.

தனித்தனியே அவரவர் குடிப் பூ என்ற முறையிலும், பொதுவில் முடிப் பூ என்ற முறையிலும் மூன்றும் யாவராலும் மதித்துப் போற்றப்பட்டன.

இவ்வாறு சிறப்பைப் பெற்ற மூன்றின் தன்மைகளைத் தனித் தனியே காண வேண்டும்.

## ஆர்—ஆத்திப்பூ

### ஆர், ஆத்தியே

முடிமன்னர் குடிகளில், முன்தோன்றி மூத்த குடியில் முதற் குடி சோழர் குடி. சோழர்தம் குடிப் பூ ஆர். இஃது 'ஆத்தி' எனவும் பெயர் பெற்றது. தாதகி, சல்லகி என்னும் பெயர்களை

1. புறம் : 58 : 8.

யும் நிகண்டுகள் கூறுகின்றன. பின்னிரண்டுகள் தாதகி என்னும் பெயர் பிற்காலச் சமய, வழிபாட்டு நூல்களில் இடம் பெற்றுள்ளது

'ஆர், ஆத்தி' என்னும் இரண்டு பெயர்களில் சங்க காலத்தில் பெருவழக்காகவும் முழு வழக்காகவும் இருந்தது 'ஆர்' என்பதே. 'ஆத்தி' என்னும் பெயரை முதன்முதல் கபிலர் கையாண்டுள்ளார். சங்க நூல்களில் அவர் எழுதிய குறிஞ்சிப் பாட்டு ஒன்றிலேதான், 'ஆத்தி' என்னும் சொல் உள்ளது. இதன் தொடர்பில் மற்றொன்றை இங்கே நினைக்க வேண்டி வருகின்றது

முடிமன்னர் குடிப் பூக்கள் மூன்றில் வேம்பும் போந்தையும் கபிலரது குறிஞ்சிப்பாட்டில் இடம் பெறவில்லை. இதுகொண்டு குறிஞ்சிப்பாட்டில் 'ஆத்தி' என்றது குடிப் பூவாகிய ஆரைக் குறிக்காதோ என்னும் ஐயுறவு எழவேண்டியதில்லை. உரையாசிரியர்கள் பலரும் 'ஆர்' என்று மலரைக் குறிக்க வரும் இடங்களிலெல்லாம் 'ஆத்தி' ஒன்றே பொருள் கொண்டுள்ளனர். எனவே கபிலர் 'ஆத்தி' என்றது ஆரையே குறிப்பதாகும்.

காலப்போக்கில் "ஆர்' ஆட்சி அருகி, 'ஆத்தி' ஆட்சி பெருகியது. உலக வழக்கில் 'ஆத்தி' ஒன்றே நிறைந்தது. செய்யுள் வழக்கில் இரண்டும் உலவின.

## காட்டாத்தி, திருவாத்தி

இடைக்காலத்தில் ஆத்தி, காட்டாத்தி, திருவாத்தி என இருவகை அடைமொழி பெற்றது. காடாகச் செறிந்து பெருகிய காட்டு மரமானதால் காடு என்னும் அடைமொழியோடு காட்டாத்தி எனப்பட்டது. பழமையான பெயரகரமுதலிகள் 'ஆர் அலர் = காட்டாத்தி' எனப் பொருள் குறித்தன.

திருவாத்தி ஆனதற்கு ஒரு கதை:

சண்டேசர் என்றோரு சைவ அடியார். விசாரசருமர் அவரது பிள்ளைப் பெயர், ஆர்வத்தால் ஆவினங்களை மேய்க்கும் பணியை மேற்கொண்டார். சிவபெருமானை வழிபடும் உந்துதலால் மேய்ப்பிடத்தில் இருந்த ஒரு மரத்தின் கீழ் மணலைக் குவித்து இலிங்க வடிவமாக்கினார். பெரியபுராணம் இதனை,

"... ... ... ... .... ... ... *ஆத்தியின் கீழ்*
*செங்கண் விடையார் திருமேனி மணலால் ஆக்கி*" 1 வழி

1 *பெரிய : சண்டேசர் :* 32 : 2, 3.

பட்டதாகக் கூறுகின்றது. இந்நிகழ்ச்சியைத் திருநாவுக்கரையரும் திருநாவலூரரும்பாடியுள்ளனர். வழிபட்ட சண்டேசர் வழிபாட்டிற்கு உரிய மலர்களாக,

*"ஆத்தி மலரும் செழுந்தளிரின்*
*முதலா அருகு வண்புறவில்*
*பூத்த மலர்கள் தாம் தெரிந்து"* [1] கொண்டார் — எனச் சேக்கிழார் பாடினார். இதனால் ஆத்திமரம் கடவுள் இடம்பெற்ற மரமாயிற்று. இதன் மலரும் வழிபாட்டிற்காயிற்று,

கடவுள் தொடர்பு உடையவற்றிற்குத் திரு என்னும் அடைமொழி கொடுப்பது மரபு. திருக்கோவில், திருவிழா, திருச்சுற்று முதலிய வழக்குகள் உள்ளன. இம்மரபில் கடவுள் தொடர்பு கொண்ட ஆத்தி, திரு + ஆத்தி = திருவாத்தி ஆயிற்று. ஆத்தி, திருவாத்தி ஆனதன் மூல நிகழ்ச்சி இதுதான்.

ஆனாலும், சேக்கிழார் இங்கு 'திருவாத்தி' எனக் குறித்தாரல்லர். பின்னர் சிறுத்தொண்டநாயனார் புராணத்தில் குறித்தார்.

திருசெங்காட்டாங்குடி சிறுத்தொண்டர் ஊர். சிறுத்தொண்டரை ஆட்கொள்ளச் சிவனடியார் வடிவில் சிவபெருமான் திருசெங்காட்டாங்குடிக்கு வந்தார். தொண்டர் இல்லத்தில் இல்லாமையால் 'யாம் சென்று இவ்வூர்க் கோவிலில் உள்ள ஆத்தி மரத்தின் கீழ் இருக்கின்றோம்; வந்தால் சொல்வீர், — எனச் சொல்லிச் சென்றார். இதனைச் சேக்கிழார்.

*"கண்ணுதலிற் காட்டாதார் "கணபதீச் சரத்தின்கண்*
*வண்ணமலர் ஆத்தியின்கிழ் இருக்கின்றோம்; மற்றவர்தாம்*
*நண்ணினால் நாமிருந்த பரிசுரைப்பீர் என்றருளி*
*அண்ணலார் திருவாத்தி அணைந்தருளி அமர்ந்திருந்தார்"* [2]

— என்றார். இங்கு தான் 'திருவாத்தி' என்னும் சொல்லாட்சியைக் காண்கின்றோம்.

இப்பாட்டில் ஆத்தி இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. ஓரிடத்தில் முன்னே "வண்ணமலர் ஆத்தி" என்றும் பின்னே "திருவாத்தி" என்றும்அமைக்கப்பட்டுள்ளது. முன்னுள்ள

---

1 *பெரிய* 83 : 1, 2.
2 பெரிய. பு : சிறுத்தொண்டர் 41.

தற்கு அமைந்த அடைமொழிகூட செய்யுளின் எதுகை கருதி அமைந்ததேயாகும். சொற்களை இடமறிந்து அமைப்பதில் சேக்கிழார் கவனங்கொள்பவர். சிவபெருமான் வாய்மொழியில் 'திரு' இல்லாமல் 'ஆத்தி' என்று அமைத்தார். தம் வாய்மொழியில் 'திரு' சேர்த்துத் 'திருவாத்தி' என்றார். அடுத்துச் சிறுத்தொண்டரது மனைவியார் வாய்மொழியிலும் ''கடிசேர் திருவாத்தியின்கீழ் இருந்தார்'' என்று அமைத்தார். கடவுளர்தாமே 'திரு' அமைத்துச் சொல்லாமையையும், வழிபாடுடையார் 'திரு' சேர்த்துச்சொல்வதையும் அமைத்த நயம் ஒருபுறமிருக்க மற்றொரு குறிப்பும் இதன்கண் உள்ளது.

திருச்செங்காட்டாங்குடிக் கோவிலின் திருமரம் காட்டாத்தி. இன்றும் இப்பெயரில் வழங்கப்படுவது, இவ்வூர்ப்பெயரும் 'காட்டான்' குடி எனக் காட்டுத் தொடர்புகொண்டது. இத்தொடர் பாலும் காட்டு 'ஆத்தி' யாகும். இந்நினைவுடன் நோக்கினால் முன்னர் 'திரு' அடைமொழியின்றிச் சிவன்வாய் மொழியாகக் குறித்தமை இதன் இயற்பெயரைக் குறிப்பதோடு 'காட்டாத்தி' என்னும் குறிப்பையும் பெறவைக்கின்றது. இக் காட்டாத்தி கோவில் திருமரம் ஆன நிலையில் 'திருவாத்தி' ஆனமையையும் குறிக்கின்றது.

சண்டேசர் நிகழ்ச்சி ஆத்தி, திருவாத்தி ஆவதற்குக்காரணமானது போன்று ஆத்திமலர் வழிபாட்டு மலர் ஆனதற்கும் காரணமாயிற்று. இதற்குமுன் இவ்வாத்திமலர் வழிபாட்டிற்குப் பயன்படவல்லை. அதனால்தான் சண்டேசரும் பக்கத்தில் போய்த் தளிரையும் பிற மலர்களையும் கொய்து வந்தார். தாம் கடவுள் வடிவம் சமைத்த இடத்தில் இருந்தமையால் இதன் மலரைப் பயன்படுத்தினார். இன்றேல் இம்மலர் ஒன்றுகொண்டே வழிபட்டிருக்கலாம்.

சண்டேசருக்குப் பின்னர் தோன்றிய திருநாவுக்கரையர், திருஞானசம்பந்தர், திருநாவலூரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரில் எவரும் ஆத்தி மலரைச் சிவபெருமானுக்கு உரிய மலராக வைத்துப் பாடினாரல்லர். பல மலர்களையும் சூடியவராகப் பாடும் இவர்கள் ஆத்தியைக் குவித்தாரல்லர் என்பது நோக்கத்தக்கது.

சேக்கிழார் முதன்முதலில் ஆத்தியை வழிபாட்டு மலராக இக்கதை ஒன்றில்தான் குறித்தார். அப்பரும் நாவலூரரும் கதையில் மரம் இடம்பெற்ற அளவில் பாடினர். வழிபாட்டு மலராகக் குறித்தாரல்லர். திருநாவுக்கரையர் திருச்சோற்றுத் துறையில் ஆத்திமரம் இடம்பெற்றதைப் பாடினார்.

தூது முதலிய பிற்காலச் சிற்றிலக்கியங்கள் சிவபெருமான் ஆத்தி மாலையை அணிந்திருந்ததைக் கூறுகின்றன.

பிற்கால அவ்வையார்,

"ஆத்தி சூடி அமர்ந்த தேவனை"[1] க் காட்டினார்.

16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய புட்பவிதி என்னும் நூல்.

"ஆர் புனை சடையோன்"[2] -எனப் பாடியது. இங்கும் அடைமொழி அளவில்தான் ஆர்-ஆத்தி வைக்கப்பட்டுள்ளது. சிவபெருமானுக்கு வழிபாட்டிற்குரிய மலர்களின் பட்டியலில் இடம் பெறவில்லை. பொதுவாகக் கோட்டு மலர்களின் பட்டியலில் 'தாதகி' என்னும் பெயரில் உள்ளது. காட்டாத்தி என்னும் பெயரில் பிள்ளையாருக்குரிய வழிபாட்டு மலராக வைக்கப் பட்டுள்ளது. இந்நூல் வழிபாட்டு மலர்களின் பயன்களாகக் கூறும் பட்டியலில் இடம் வைக்கவில்லை. பாவத்தைத் தீர்க்கும் மலர்களின் பட்டியலில் ஆத்தி இல்லை. போகத்தைத் தரும் மலர்களின் பட்டியலில் ஆத்தி இல்லை இந்நூலாசிரியர் கமலை ஞானப்பிரகாசர் தம் முன்னோர் கடைப்பிடித்த மரபுகளை வைத்தே இவ்விதிகளை அறிவிக்கின்றமையால் இவற்கு முன் கடைப்பிடிக்கப்பட்ட விதிகள் இவை எனக் கொள்ளலாம்.

கால வழக்குகள் எவ்வாறாயினும் ஆத்தி மலர் சிவபெருமானுக்கு ஒரு வழிபாட்டு மலரானது உண்மை.

இவ்வாறாக ஆர்-ஆத்தி சோழர்தம் குடிப் பூவாய் அவர் தம் முடி மீதும் ஏறிற்று. வழிபாட்டுப் பூவாகச் சிவபெருமான் அடி மீதும், அணிப் பூவாக மார்பிலும், சூடும் பூவாக முடி மீதும் பெற்றது.

இடையில் ஓர் ஐயத்தைத் தூண்டும் கருத்தைக் கண்டு விடவேண்டும்.

ஏழாம் நூற்றாண்டளவில் வாழ்ந்த கொங்குவேளிர் தமது பெருங்கதையில் பாலை நில மரங்களின் பெயர்களை அடுக்கி யுள்ளார். அவற்றுள்,

---

1 ஆத்தி சூடி : கடவுள் வாழ்த்து : 1
2 புட். வி : 54 1

*"அரவும் அரசும் ஆரும் ஆத்தியும்"*[1] —என ஆர் வேறு, ஆத்தி வேறு எனத் தனித்தனியே காட்டியுள்ளார். எது கருதி வெவ்வேறாகக் கொண்டாரோ? சங்க இலக்கியங்கள் சோழர் குடிப் பூவை 'ஆர்' என்னும் சொல்லாலேயே குறிக்கின்றன. கபிலர் ஆத்தி என்று பொதுவில் குறித்துள்ளார். இவை கருதி இரண்டையும் வெவ்வேறாகக் கொண்டிருக்கலாம். இரண்டும் ஒன்று என்பது முன்னரே காட்டப்பட்டது.

## ஆத்தி நார்

சோழர் குடிப் பூவாக அமைந்த ஆர் ஆத்தியை இன்றும் அடையாளம் காணச் சங்க இலக்கியங்களே துணை செய்கின்றன குடிப் பூவாகிய ஆர்-ஆத்தி கண்ணியாகவும் சூடப்படும் மாலையாக்கப்பட்டும் அணியப்படும். கண்ணியாக்கப்படுதல்,

*"நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்று"*[2] —என மிடைதலாகக் குறிக்கப்பட்டது. மாலையாக்கப்படுதல்,

*"ஆர் புனை தெரியல்"*[3] எனப் புனைதலாகக் குறிக்கப் பட்டது. மிடைவதற்கும் புனைவதற்கும் எது கருவியாயிற்று? இதனை,

*"ஆர் நார் செறியத் தொடுத்த கண்ணி"*[4] யைப் போர் வைக்கோ பெருநற்கிள்ளி என்னும் சோழர் குலத்தவன் சூடியிருந்த தாகக் கூறும் சாத்தந்தையார் பாடல் கொண்டு அறியலாம். 'ஆத்தி மரத்திலிருந்து எடுக்கப்பட்ட நாரால்கட்டப்பட்டகண்ணி' என்று காட்டியுள்ளார். இது கொண்டு ஆத்தி மரத்தில் நார் உரிக்கலாம் என்று தெரிகின்றது. எப்படி உரிப்பது விளக்கந் தருகின்றார், மதுரை மருதன் இளநாகனார்:

---

1 பெருங் : உஞ்சைக் காண்டம் : 52 : 89

2 புறம் : 45 : 3

3 புறம் : 43 : 13

4 புறம் : 81 : 3, 4

"அம்புகொண் டறுத்த ஆர் நார் உரிவையில்
செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி"[1] –என, அம்பின் கூர்மை கொண்டு ஆத்தி மரத்தில் நார் உரித்துக் கரந்தைக் கண்ணி கட்டியதை விளக்கியுள்ளார்.

சேலம் மாவட்டத்தின் சிற்றூர்ப் பகுதிகளில் ஆத்தி மரங்கள் உள்ளன. அவற்றைக் காட்டாத்தி என்றே வழங்குகின்றனர். இதன் பட்டைக்கும் கோலுக்கும் இடையில் படிந்த நாரைக் கத்தி முனை கொண்டு உரித்தெடுக்கின்றனர். அந்நாரைக் கொண்டு பூக்களைத் தொடுக்கின்றனர். மேலும், இந்நாரைக் கொண்டு கயிறு திரித்து ஆடு, மாடுகளைக் கட்டப் பயன்படுத்துகின்றனர். இதற்கு மேலும் குறிப்பிடத்தக்க செய்தி உண்டு. இந்நாரால் சிறு நூல் கயிறுபோன்று திரித்து குழந்தைகளின் இடுப்பில் கட்டுகின்றனர். குஞ்சமாகத் தொங்க விடுகின்றனர். இதனால் குழந்தைகளை நோயும் பேயும் அணுகா என்று நம்புகின்றனர். இச்செய்தி முன்னே குறிக்கப் பட்டதாகிய ஆத்தியின் மண வீச்சு, நோய்க்கும் பேய்க்கும் பகை என்பதற்கும் சான்றாகின்றது.

திருச்செங்காட்டாங்குடியிலுள்ள காட்டாத்தியிலும் இவ்வாறு உரிக்க முடிகின்றது.

இக்கருத்துகொண்டு 'ஆர்' என்னும் குடிப் பூவைத் தரும் மரத்தை அடையாளங் காண முடிகின்றது.

இம்மரம், அடிமர அளவில் மிகப்பருத்தது அன்று. எட்டு பத்து அடி நேரே வளர்ந்து மேலே கொடி படர்வதுபோன்று மேல் மட்டமாக எல்லாப் பக்கமும் பரவித் தழைக்கும். கொடியாக அன்றிக் கிளையாகவே பரவும். கிளைகள் திரிந்து முறுக்கியும், முண்டு முடிச்சாகவும் நேர் ஒழுங்கின்றிப் பரவியிருக்கும். இலந்தை இலைகள் அமைப்பில் சற்றுப் பெரியனவாக இரண்டிலைகள் இணைந்தது போன்று கவட்டிலைகளாகத் தோன்றும்.

அடிமரம் மேற்பட்டையால் கருநிறமாகத் தோன்றும். இதற்கு ஆங்கிலப்பெயர் சூட்டியோரும் *HOLY MOUNTAIN EBONY* என 'தூயமலைக்கருமரம்' என்னும் பொருளில்சூட்டினர். தூய்மை, திருவாத்தி வழக்கால் கொடுக்கப்பட்ட அடைமொழி.

---

1 அகம் : 269 : 11, 12

இம்மரத்தின் கிளைக்கொப்புகளின் காம்பில் சிறு சிறு பசிய மொட்டுகள் தோன்றும். மேல் வரிசையாக மாறி மாறி அமைந்திருக்கும். இம்முகைகளின் உருவம் ஒரு நெல் அளவினது. மூக்கு வளைந்த நெல் என்னும்படி காம்புப் பக்கம் சிறிது வளைந்திருக்கும். பசுமையாக மூடியிருக்கும் புறவிதழ் ஒன்று விரியும். அதனுள்ளிருந்து பத்துப் பன்னிரண்டு எண்ணிக்கையில் மகரம் வெண்மை நிறத்தில் தோன்றும். வெண்மைநிறம் மங்கிய மஞ்சளாக மாறும். பசிய புறஇதழும் மஞ்சளான அல்லியும் கொண்ட மலர். அகவிதழ்கள் தோன்றா. மார்கழி முதல் சித்திரைவரை பூக்கும். இரண்டு நாள் அளவில் உதிர்ந்துவிடும். இவைகளால், இம் மரக் கிளைகளில் தோன்றும் இப் பூ,

கோட்டுப் பூ.
பனிப் பருவப் பூ.
மங்கலான மஞ்சள் நிறங்கொண்டது.
முல்லை திரிந்த சுரத்தில் மண்டியதால் பாலை நிலப் பூ.

இப் பூமரப் பெயரில் திகழ்வது ஆர்க்காடு.

## ஆர்க்காடு

ஆர், ஆத்தியாக, காடு அடைமொழி பெற்றுக் காட்டாத்திப் பெயர் பெற்றது அன்றோ? ஆர் செறிந்திருந்த ஆர்க்காடு இரு மாவட்டங்களாக இன்று குறிப்பிடும் அளவில் பெரும் பரப்பாக இருந்தமை புலனாகின்றது. மாவட்டப் பெயரோடு ஆர்க்காடு என்று ஓர் ஊரும் விளங்குகின்றது.

ஆர்க்காட்டைத் தலைநகராகக்கொண்டு முற்காலத்தில் சோழகுலக் குறுநில மன்னர் ஆண்டனர்.

"படுமணி யானைப் பசும்பூண் சோழன்
கொடி நுடங்கு மறுகின் ஆர்க்காடு"[1] —என்னும் தேவனார் பாடல் இவ்வூர் சோழரது ஊராக விளங்கியதையும், புலிக்

1 நற் : 227 : 5, 6.

கொடிகள் பறக்கும் தெருக்களைப் பெற்றிருந்ததையும் அத் தெருக்கள் ஆராவாரத்தோடு திகழ்ந்ததையும் குறிக்கின்றது.

ஆர்க்காட்டில் இருந்த சோழர் குல வீர மன்னன் வீர இளைஞரிடம் செல்வாக்கு பெற்றவனாக விளங்கினான். அவன் பெயர் அழிசி. அவனது மகன் பெயர் சேந்தன். இருவர் காலத்திலும் ஆர்க்காடு வளம்பெற்று எழிலோடு விளங்கியது. வனப்பு வாய்ந்த நங்கையரின் எழில் நலத்திற்கு வளமான ஊரை உவமை கூறும் மரபில் இவ்வூரும் உவமையாக்கப்பட்டது

*"... ... ... ... இளையர் பெருமகன்*
*அழிசி ஆர்க்காட் டன்ன இவள்*
*பழிதீர் மாண் நலம்"* [1] —எனப் பரணர் பாடியுள்ளார்.

ஒருகாலத்தில் காடாக — சுரமாக — பாலையாக இருந்த நிலம் நாடாக்கப்பட்டு, வளமாக — வயலாக — மருதநிலமாக மாற்றமுற்று ஏற்றம் பெற்றது.

கபிலர் இதற்கு,

*"அமர் ஆத்தி"* [2] —என அடைமொழி கொடுத்தார். இதற்கு நச்சினார்க்கினியர், 'பொருந்திய ஆத்தி' என்று பொருள் எழுதினார். 'குடிக்குப்பொருந்திய' எனப் பொருள் கருதினார் போலும். பிற்கால அவ்வையாரும்,

*"ஆத்தி சூடி அமர்ந்த"* என்றார். இங்கு அமர்ந்த என்பதற்கு வேறு பொருளாயினும் கபிலரது அமர் சொல்லமைப்பை நினைவு படுத்துகின்றது.

## திரு ஆர் ஊர்

ஆர் பெயரால் பெயர் பெற்ற மற்றோர் ஊர், ஆர் + ஊர் = ஆரூர். இது மனுச்சோழன் காலத்தில் சோழர் தலைநகர். அதற்குமுன் இவ்வூர் பற்றிய வரலாற்றுச் செய்தியில்லை. புதிய தலைநகரைக் கொள்ள வேண்டிய நேர்ந்த சூழலில் இப்பகுதி

---

1 குறு : 258: 6, 7. 8.
2 குறி : பா : 87.

வளமாக்கப்பட்டோ புதிய ஊராக உருவாக்கப்பட்டோ தலை நகராக்கப்பட்டிருக்கும் சோழர் ஆட்சித் தொடர்பில் அமைந்த இவ்வூர் சோழர்தம் குடிப் பூவால் பெயர் சூட்டப்பெற்றிருக்கும் எனக் கொள்ளல் பொருத்தமானதே.

இவ்வாறு, ஆர் என்பதற்கு இங்கே ஆத்தி மலர்ப்பொருள் கொள்ளாமல் 'திரு நிறைந்த ஊர்' என்று 'நிறைவு' எனப் பொருள் கொள்ளல் பொருந்தாது. 'ஆரூர்' தெய்வத் தொடர்பில் 'திரு' பெற்றே திருவாரூர் ஆனது. மூலப்பெயர் 'ஆரூர்' என்பதே.

இப் பூ பின்பனிப் பருவப் பூ. இப்பருவத்தில் பூத்து உதிர்ந்து விடும். பூ அளவில் சிறியதாகையாலும்; ஆண்டு முழுதும் பூக்காததாலும் இயற்கைப் பூவைச் சூடுதல் என்பது எப்போதும் இயலாது. எனவே, பொன் முதலியவற்றால் செய்யப் பட்ட செயற்கைப் பூவே மிகுதியாகக் கொள்ளப்பட்டிருக்கும்.

ஆர் நிறைந்த சோழர் குடியைத் தொடர்ந்து பாண்டியர் குடி, பெயர்பெற்ற குடியன்றோ? அவர்தம் குடிப் பூவும் புகழ் மூடி சூடிய பூவாகும்.

# வேப்பம் பூ

## கவரிப் பூ

*"கத்திபோல் இலையிருக்கும்;*
*கவரிபோல் பூ பூக்கும்;*
*தின்னப் பழம் பழுக்கும்;*
*தின்னாத காய் காக்கும் — இது என்ன?"*

—என்பது ஒரு விடுகதை. 'வேப்ப மரம்' என்பது இதனை விடுவிக்கும் விடை

வேம்பு, கருவேம்பு, நிலவேம்பு, மலைவேம்பு, சருக்கரை வேம்பு, சிவனார் வேம்பு எனப் பலவகைப்படும். பொதுவில் வேம்பு என்பது கருவேம்பைக் குறிக்கும்.

"கருங்கால் வேம்பின்" (குறுந் : 24 : 1)

"கருஞ்சினை வேம்பும்" (புறம் : 338 : 5)

"கருஞ்சினை விறல்வேம்பு" (பதிற் : 49 : 16)—என்பவற்றிற் கேற்ப வேம்பின் அடிமரமும், கிளைகளும் கருமை நிறங் கொண்டவை. மேற்பட்டையின் நிறம் கருமை. இவ்வாறு அடிமரத்தாலும் கிளைகளாலும் கருவேம்பு எனப்பெயர் பெற்றது. இதற்கு நிம்பம், பிசிதம் என்றும் மாற்றுப் பெயர்களை நிகண்டு கள் கூறுகின்றன.

இக்கருவேம்பைக் குறிப்பதே விடுகதை. இதில் 'கத்திபோல் இலையிருக்கும்." இலை ஓரம் பற்கள் அமைந்த கத்தி போன்றது. அஃதாவது பற்கள் உள்ள அரத்தின் வாய் போன்றது.

'அரவாய் வேம்பின் அங்குழைப் பொருநர்' (பொருந் : 144.)

'அரவாய்க் கடிப்பகை (வேம்பு)' (மணி : 7 : 73)

'அரம் நிகர் இலை நிம்பம்' (திருவிளை : அன்னக்குழி : 21 : 1)

என்றெல்லாம் இவ்விலையின் ஓரம் சுட்டப்பட்டது, நல்ல பசுமை நிறமுள்ளது. வேம்பு என்றாலே கைப்புச் சுவை—கசப்புச் சுவை நினைவில் எழும். இக்கசப்பு நன்மை தருவது.

தின்னாத காயைக் காய்க்கும் வேம்பு "தின்னப் பழம் பழுக்கும்". வாவல், கிளி முதலிய பறவைகள் விரும்பி உண்ணும் ஒரு பசுங்கிளி தன் சிவந்த அலகில் மஞ்சள் நிற வேப்பம் பழத்தைத் தின்னக் கவ்வியுள்ளது. இவ்வாறு,

"... ... ... ... ... ... ... ...கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழ"[1] த்திற்கு

உவமை சொன்னார் அள்ளூர் நன்முல்லையார். புதிய பொன் கம்பியில் நுழைப்பதற்காக ஒரு பொன் காசைச் சிவந்த விரல் நகத்தால் பிடித்திருப்பது போன்று இருந்ததாம்.

கூர்மையாக வளைந்து சிவந்துள்ள கிளியின் மூக்கிற்கு—
வளைந்து செம்மை நிறம் ஏற்றப்பட்ட கூர்மையான நகம்;
மஞ்சள் நிற வேப்பம் பழத்திற்கு—

1 குறுந் : 67 : 1, 4

மஞ்சள் நிறப் பொன்காசு —பொருந்திய உவமைகளாயின. அவர் சொல்லில்,

"புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்ளுகிர் (நகம்)
பொலங்கல ஒருகாசு ஏய்க்கும்" (ஒத்திருக்கும்) -எனக்

காண்கின்றோம். இதுகொண்டு அக்காலத்தில் ஒருவகைப் பொன் காசு வேப்பம் பழம் போன்று நீண்ட திரட்சியாக இருந்ததையும் அறிகின்றோம். வேப்பம் பழம் விள்ளும் கருத்து இது.

இவ் வேப்பமரம் கிளைகளைப் பரப்பித் தழைத்திருக்கும். இதன் அடிநிழலில் பலரும் கூடுவதால் மன்றம் ஆயிற்று. இதனால் 'மன்ற வேம்பு' எனப்பட்டது. வேப்பம் பூங்கொத்து சிறிய வெண் சாமரைக் கவரி போன்றது. விடுகதையும், "கவரிபோல் பூ பூக்கும்" என்றதன்றோ?

## இளவேனிற் பூ

வேம்பின் பூ கிளையின் சினையாகிய சிறு கொப்பில் பூக்கும். அதனால், "சினையலர் வேம்பு"[1] எனப்பட்டது. ஒரு கொப்பில் பல இணுக்குகள் கிளைத்திருக்கும். ஒவ்வொரு இணுக்கிலும் சில காம்புகளில் இப் பூ மலரும். யாவும் சேர்ந்த ஒரு கொப்புப் பூ நீண்ட கொத்தாகக் காட்சி தரும். கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

"கோட்டு இணர் வேம்பு" என்றபடி இஃது ஒரு கொத்துப்பூ.

கோட்டுப் பூ இனத்தைச் சேர்ந்தது,

இதன் அரும்பு வெண்மையாக நீண்டிருக்கும். வயல் நண்டின் கண் வெளியே துருத்திக் கொண்டு நீண்டிருக்கும்; வெண்மை நிறமானது. இதற்கு,

"வேம்பு நனையன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு"[2] —என வேம்பின் அரும்பு உவமையாகக் கூறப்பட்டது. வயல் நண்டின்

1 கலி : 92 : 77
2 அக : 176 : 8

கண் என்றது மிகப்பொருந்தும். கண் போன்று வடிவமைந்தது இப்பூ. அளவிலும் ஒத்திருக்கும்.

இவ்வரும்பு ஐந்து இதழ்களாக விரியும். மையத்தில் இதன் இதழ் அளவில் ஒரு மகரம் உயர்ந்திருக்கும். இதழ்கள் வெண்மை நிறமானவை. எனவே.

வேப்பம் பூவின் நிறம் வெண்மை.

''அத்த வேம்பின் அமலை வான் பூ''[1] -என இதன் வெண்மை நிறத்தை வான் பூ எனக் காட்டினார் குடவாயிற் கீரத்தனார் இவ்வடியில் 'அமலை' என்றது இதன் பூக்கள் நிறையத் தழைத்திருப்பதைக் குறிக்கும். முன்னே உள்ள, 'அத்தம்' என்பது பாலை நிலத்தின் வழியைக் குறிப்பதன்றோ? பிறரும், 'கான வேம்பு' என்றனர். கொங்கு வேளிர் தமது பெருங்கதையில் பாலை நில மரங்களாக 26 குறித்துள்ளார் இவற்றில் வேம்பு இல்லை என்றாலும், இறுதியில் 'வாகையும் பிறவும்' என்று முடித்துள்ள 'பிற' என்பதில் வேம்பைக் கொள்ள வைத்துள்ளதாகக் கொள்ள வேண்டும்.

எனவே,

வேம்பு பாலை நிலப் பூ.

ஆண்டின் முதற்பவரும் இளவேனிற் பருவம் இப்பருவத் திங்கள்களாகிய சித்திரை, வைகாசியில் இப்பூ பூத்துக் குலுங்கும். புத்தாண்டின் தொடக்கத்தில் பூத்துக் குலுங்கும் இதனைப் புது வருவாயின் அறிகுறியாகக் கொண்டனர். புது வருவாயின்-புத்தாண்டின் அறிகுறியாக இதனைச் சூடியும் அணிந்தும் மகிழ்ந்தனர். புத்தாண்டுச் சமையலில் இதன் பூவைச் சேர்த்தனர் இன்றும் இப்பழக்கம் உண்டு.

புறப்பணி காரணமாகப் பிரிந்த இல்லத் தலைவன் வந்து சேர நேரவில்லை தலைவி இளவேனில் தூதர்களைக் கண்டு வெம்பினாள். வீட்டு முன்றிலில் வேம்பு பூத்துக் குலுங்கியுள்ளது. ஆண்டின் புது வருவாயை இது அவளுக்கு அறிவித்தது. ஆனால், அவன் வரும் வாயை அறிவிக்கவில்லை. கொய்து சூடாமலும், பறித்து அணியாமலும், சமையலில் சேர்க்காமலும் வேம்பின் பூ வீணே கழிகின்றதை அவளால் தாங்க முடியவில்லை

---

1 குறு : 281 : 2

*"கருங்கால் வேம்பின் ஒண்பூ, யாணர்*
*என் ஐ இன்றியும் கழிவது கொல்லோ"*[1] —எனக் கவன்று பேசினாள். இதில் 'யாணர்' என்னும் சொல் புது வருவாயைக் குறிப்பது. இச்சொல் இங்கமைக்கப்பட்டு வேப்பம் பூ புத்தாண்டு புது வருவாயின் அறிகுறி எனக் காட்டி நிற்கின்றது.

பூத்துக் குலுங்குவது மட்டுமன்று; மரத்தைவிட்டு நீத்து வீழ்வதும் ஓர் அறிகுறி. இளவேனிற் பருவம் முடிவதன் அறிகுறி. இருவரும் குலாவுவோம்; இளவேனிலில் வந்து விடுவேன்' என்று தேன் ஊறும் சொற்களைப் பெய்து சென்றவன் வந்தானல்லன் இவளும் இளவேனில் முடிவதன் குறிகளைக் காண்கின்றாள். வேப்பம் பூவும் இடையிடையே உதிர்கின்றது. இவள் முனகினாள்:

*"வேம்பின் ஒண்பூ உறைப்பத் (உதிர)*
*தேம்படு கிளவியவர் தெளியும் பொழுது"* (இளவேனில்)
*"தான் வந்தது; அவரோ வாரார்"*[2] —இவ்வாறு இவள் முனகுவதற்குச் சொற்களை கொடுத்தவர் ஓதலாந்தையார் என்னும் புலவர். அவர் இப்பாடலை 'இளவேனில் பத்' தில் வைத்தார். இளவேனிலுக்குரிய அறிகுறிகளில் வேப்பப் பூவும் ஒன்றாயிற்று.

இவ்வாற்றால் வேப்பம் பூ இளவேனிற் பருவப் பூ.

## வேப்பங் குழை

இப் பூவைப் பாண்டிய குலத்தவர் தம் குடிப் பூவாகக் கொண்டனர். பூவைக் கண்ணியாகத் தலையிற் சூடினர். தாராக்கி மார்பில் அணிந்தனர். இப்பூவின் சொற்கொண்டே பெயர் வழங்கப்பட்டனர். 'வேம்பன்' என்றாலே பாண்டியனைக் குறிப்பதாயிற்று. இதனைச் சூடியும் அணிந்தும்,

"அலர் தார் வேம்பும்" -(சிலம்பு : 23 : 19)
'சினையலர் வேம்பன்' (சிலம்பு : 16 : 149)
'கருஞ்சினை வேம்பின் தெரியலோன்' (புறம் : 45 : 2)
எனப்பட்டனர் பாண்டியர்.

1 குறுந் : 24 : 1, 2    2 ஐங் : 350 : 2, 3, 1.

முடிமன்னர் இப் பூவைவிட இதன் இலையாம் குழையையே மிகுதியும் சூடினர்; அணிந்தனர்; பயன்படுத்தினர். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முதன் முதல் கன்னிப் போருக்குப் புறப்பட்டான். மதுரை ஊரின் வாயிலில் அமைந்த குளத்தில் நீராடினான். பொது மன்றத்து வேம்பின் குழையைச் சூடினான்; புறப்பட்டான். இவ்வீரத் தோற்றத்தை இடைக்குன்றூர்கிழார் பார்த்தார்; பாடினார்:

*"மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி (நீராடி)*

*மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து"* [1] வெற்றியைத் தேடிப் புறப்பட்டான் என்றார். இவரே இவனை,

*"மன்ற வேம்பின் மாச்சினை ஒண்டளிர்*

*நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து*

*செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி"* யன் [2] – எனப் பிறிதோர் பொழுதும் பாடினார். 'ஒண் தளிர்' என்றும் 'ஒண்குழை' என்றும் வேம்பின் இலை பேசப்படும். பெரும்பகுதி 'குழை' என்னும் சொல் இதற்குப் பொருந்துவது. இன்றும் வேப்பிலைக் கொத்து கொண்டு அடித்து மந்திரம் சொல்வோர் 'குழையடித்தல்' என்பர். ஒருவரை வயப்படுத்தக் குழைந்து பேசுவோரைக் 'குழையடிக்கின்றான்' என்றும் கூறுவர்.

எனவே, பாண்டியர் தம் குடிப் பூவாக வேம்பு அமைந்து தன் குழையையும் சேர்த்தது. பூங்கொத்தின் அருமை கருதி எக்காலத்தும் கிடைக்கும் குழையை மிகுதியாகக் கொண்டனர்.

வேப்பிலையைப் பயன்படுத்தியதற்கு முன்னே காணப்பட்ட நோய்த்தடையும் பேய்த்தடையும் ஒரு காரணமாயிற்று. இதனாலேயே இதற்குக் 'கடிப்பகை' (கடி = நோய்; பேய்) என்றொரு பெயர் வழக்கு உண்டாயிற்று.

*"அரவாய்க் கடிப்பகை, ஐயவிக் கடிப்பகை"* [3] என்றது மணிமேகலையும். போர்ப்புண் பெற்ற வீரன் வீட்டிற்குக் கொணரப்பட்டால் அவனை நோய் மூட்டும் நுண்ணுயிரிகள் தாக்காமலும் பேய் உண்ணாமலும் தடைஏற்படுத்த வீட்டின் முகப்பில் வேப்பிலையைச் செருகினர்.

---

1 புறம் : 79 : 1, 2.
2 புறம் : 76 : 4—6.
3 மணி : 7 : 73

பாண்டியன் நெடுஞ்செழியன் போர் முடிந்த நாள் இரவில் புண்பட்டுப் பாசறையில் உள்ள வீரர்களைக் கண்டு ஆறுதல் சொல்லச் சென்றான். படைத்தலைவன் ஒவ்வொருவரையும் காட்ட அழைத்துச் செல்கின்றான். செல்பவன் கையில் வேல் ஒன்றுள்ளது. அதன் தலையுச்சியில் வேப்பிலை செருகப்பட்டுள்ளது.

*"வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகமொடு*

*முன்னோன் (படைத்தலைவன்) முறைமுறை காட்ட"* [1] ப் பாண்டியன் சென்றான். இவ்வாறு கடிப்பகையாக வேலிலும் சூட்டப்பட்டது. இவையெல்லாம் புறத்துறையில் வேம்பு பெற்ற இடம். அகத்துறையிலும் காதல் பேயை ஓட்டும் வேலன் வெறியாட்டம் போடுவான். அப்போது,

*"வேம்பின் வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி"* [2] த் தோன்றுவான். வீட்டின் முகப்பில் வேப்பிலை செருகப்படுவதையும் இலக்கியங்கள் காட்டுகின்றன. இவற்றிற்காக மரத்தில் வேப்பங் குழையைக் கொணர்வதையும்,

*"வேம்புசினை ஒடிப்பவும் காஞ்சி பாடவும்"* [3] —எனப் பாடினர். குழந்தைகட்குக் கடிப்பகையாகக்,

*"கோட்டு இலை வேம்பின் ஏட்டிலை மிடைந்த*

*படலைக் கண்ணி"* [4] சூடியதைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையில் காட்டினார்.

இவ்வாறு பல முனைகளிலும் வேப்பங் குழை பயன்படுத்தப் பட்டது.

## காவல் மரம்

இவ் வேப்ப மரம் பழையன் மாறன் என்னும் பாண்டிய குலத்தவனுக்குக் காவல் மரமாக அமைந்தது. இதனை வெட்டி வீழ்த்திக் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் வென்றதை,

---

1 நெடு : 176 : 177.
2 அகம் : 138 : 4, 5.
3 புறம்: 296 : 1.
4 பெரும்பாண் : 59, 60

*"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்*
*முழாரை முழுமுதல் துமியப் பண்ணி"* 1 எனப் பரணர் பாடினார்.

இதன் பெயரால் 'வேம்பி' என்றோர் ஊர். முசுண்டை என்னும் குறுநில மன்னன் ஒருவனது ஊர் இது. வளமான ஊரா கையால் மகளிர் எழில் நலத்திற்கு உவமையாகக் கூறப் பட்டுள்ளது.

*"பல்வேல் முசுண்டை வேம்பி அன்ன*
*நல்லெழில் இளநல* 2 த்"தை நக்கீரனாரே காட்டியுள்ளார் வேம்பத்தூர் என்றோர் ஊர். இவ்வூரில் வாழ்ந்தவர் வேம்பத்தூர்க் குமரனார் என்னும் சங்க காலப்புலவர்.

வேம்பு சுவையால் கசந்தாலும், குழையாலும் பூவாலும் இனிக்கிறது. தமிழர்தம் மரபுகளிலும் இலக்கியங்களிலும் வாழ்விலும் கைக்கவில்லை. இன்றியமையாத இடம் பெற்றுத் தமிழ் வளர்த்த பாண்டியரது குடிச்சின்னமாக விளங்கியது. இதனால், இதனைத் தமிழ் வளர்த்த சின்னப் பூ என்று சொல்லி மகிழலாம்,

# குருத்து மலர்

## பனை

### பனை ஒரு புல்

சேர மன்னரது குடிப் பூவாகப் பனம் பூ கொள்ளப்பட்டது. பனைக்குப் பெண்ணை, போந்தை, தாலம், தாளி, புற்றாளி, புற்பதி என்னும் பெயர்களை நிகண்டுகள் கூறுகின்றன. சூடாமணி நிகண்டு மட்டும் 'போந்தை' என்னும் பெயரைக் குறிக்கவில்லை. சேந்தன் திவாகரம் போந்தைப் பெயரைக் கூறியதுடன் தனியாக "போந்தை இளம் பனை ஆகவும் புகல்வர்" என இளம்பனை என்னும் பொருளைக் குறித்தது.

---

1 பதிற் : பதிகம் : 5. 2 அகம் : 249 : 9: 10

இப்பெயர்களுள் 'பனை, போந்தை' இரண்டும் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. இவற்றுடன் 'பெண்ணை' என்னும் பெயர் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. 'தாலம்' என்பது இரட்டைக் காப்பியங்களில் காணப்படுகின்றது. 'புற்பதி, தாளி, புற்றாளி' ஆகியன மிக அருகிப் பிற்கால நூல்களில் பேசப்படுகின்றன.

பனையை மரம் என்று வழங்குகின்றோம். ஆனால், இது மர இனத்தைச் சேர்ந்தது அன்று. செறிந்து உறுதிப்பட்டதை வயிரம் பாய்ந்தது என்பர். உட்பகுதி வயிரத்தை, 'உள்வயிர்ப்பு' என்றும் புறப்பகுதி வயிரத்தைப் 'புறவயிர்ப்பு' என்றும் குறித்தார் இளம்பூரணர். இவ்வயிரம் 'காழ்' எனப்படும்.

"*புறக்கா ழனவே புல்லெனப் படுமே*"[1] எனத் தொல்காப்பியம் வகுத்துள்ளது. இதனால், பனை புல் இனத்தைச் சேர்ந்தது. இதனாலேயே 'புற்பதி, புற்றாளி' என்னும் பெயர்களைப் பனை பெற்றது. எத்துணை உயரமாக உறுதியாக வளர்ந்தாலும் பனை புல் இனமே.

புல் இனம், புதர் நில இனத்தைச் சேர்ந்தது. எனவே,

பனையின் பூ புதர்ப்பூ என்னும் நிலப் பூ ஆகும்.

பனையில் ஆண், பெண் வகையுண்டு. இரண்டினமும் பூக்கும். ஆண்பனையின் பாளையிலிருந்து கிளைத்த கதிர்கள் நீண்டு திரண்டு தோன்றும். அக்கதிர்களின் புழைகளிலிருந்து சிறு சிறு பூக்கள் தோன்றும். தடித்த புற இதழ்களில் மூன்று அகவிதழ்கள் விரியும். 6 மகரங்கள் நன்கு விரிந்து தோன்றும். யாவும் ஒரு மிளகு அளவில் அமையும்.

பெண் பனையின் பாளையிலிருந்து பட்டையான புற இதழ் ஒட்டியிருக்கக் கோள வடிவில் அக இதழ் அமையும். போலி மகரங்கள் அமைந்திருக்கும். இவ்வமைப்பு பஞ்சுபோன்று மென்மையானது. இப்பூவே பிஞ்சாகி அஃதாவது நுங்கு ஆகும். இதனைக் கூர்ந்து கண்ட கள்ளிலாத்திரையன் என்பார்,

"*பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்*
*ஓங்கிரும் பெண்ணை நுங்கு*"[2] – என்றார். இவரைச் செடியியல் அறிஞர் எனலாம்.

---

1 *தொல் : பொருள் :* 630   2 *குறு* : 293 ; 2, 3.

இருவகைப் பூக்களுமே மஞ்சள் பாவிய வெண்மை நிறங் கொண்டவை. ஆண், பெண் ஆகிய இருவகைப் பூக்களின் அளவையும், அமைப்பையும் நோக்கினால் இரண்டும் சூடிக் கொள்ளும் வாய்ப்பற்றவை. ஆண் பூ அளவில் மிகச் சிறியது. கதிரோடு சூடிக்கொள்ள இயலாதது. பெண் பூ எடுக்க இயலாதது; கோளவடிவினது. எனவே, இவற்றைச் சூடுவது என்பது ஓர் அறிகுறியே; சொல் அளவான மரபேயாகும்.

பின் எதனைச் சூடினர்?

## வலப்பக்கக் குருத்து

*"இரும்பனை வெண்டோடு மிலைந்தோன்"* (*புறம்* : 45 : 1)

*"இரும்பனம் போந்தைத் தோடும்"* (*பொருந்* : 143)

*"........................ வளர்இளம் போந்தை"*

*"உச்சிக் கொண்ட ஊசி வேண்டோடு"* (*புறம்* : 100 : 3, 4)

*"மிசையலங் குழைய பனைப்போழ் செரீஇ"* (*புறம்* : 22 : 21.)

என்பன சூடப்பட்ட பனம் பூ (?) வை விளக்குகின்றன.

"தோடு" என்பது தடித்த பனை ஓலை.

"வளரிளம் போந்தை" — குருத்து ஓலை.

"ஊசி வெண்டோடு" -- கூர்மையான முன் குருத்து ஓலை; வெண்மை நிறமுடையது.

"பனைப் போழ்" — இரண்டாகப் பிளந்தது

"பனைப்போழ் செரீஇ" — முடியில் செருகிச் சூடிக்கொண்டது.

எனவே, கூர்மையான இளங் குருத்து ஓலையைப் பிளந்து சூடிப்பூச் சின்னமாகச் செருகிக்கொண்டனர் என்று அறிகிறோம். அதிலும் வலப்பக்கத்து ஓலையைச் சூடினர்.

*"கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து ஓலை"*[1] –என்று நச்சினார்க்கினியர் உரை காட்டுகின்றது.

---

1 *பொருந் :* 148 *உரை*

இரண்டாகப் பிளந்ததிலும் வலப்பக்கத்துப் பாதியைச் சூடிக் கொண்டனர். இவர் 'அலர்ந்த ஓலை' என்றதுகொண்டு குருத் தோலை மலர்போன்று கருதப்பட்டதை உணரலாம்.

எனவே, சேரர் சூடிய குடிப் பூ, வெண்மையான நிறத்தில் கூர்மையாகக் குத்திட்டு செருகப்பட்ட பனங்குருத்து; பூ அன்று.

இங்கு 'போந்தை' என்னும் சொல் கவனத்திற்கு உரியது. 'பனை" என்னும் பெயர் முதற்பெயராகப் பொதுவில் அப்புல்லைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'பெண்ணை' என்பதும் ஒரு சிறப்புப் பெயராகப் புல்லைக் குறிக்கும் அளவில் பயன்படுத்தப் பட்டுள்ளது. 'போந்தை' என்னும் சொல்லமைப்பு 'பொந்து' என்னும் நிலை கொண்டது என்பது கொண்டு நோக்கினால் உள்ளே உறுதியற்ற பனையைக் குறிப்பதாகலாம். ஆனால் பொந்துள்ளவை பல வகைகளாக உள்ளன. பனையை மட்டும் சிறப்பாகக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

இச்சொல்லை இலக்கியங்களின் ஆட்சி கொண்டு நோக்கி னால், குடிப் பூவாகச் சூடப்படுவதாக முன்னே கூறிய வலப்பக்கத்து இளம் குருத்தையே குறிக்கின்றது. மேலும், குடிப் பூவாகக் குறிக்கப்படும் இடங்களில் எல்லாம்,

'போந்தை ஆரே வேம்பு' (தொல் : பொருள் : 60 : 3.)

'வேம்பும் ஆரும் போந்தையும்' (புறம் : 338 : 6.)

'போந்தையாம் பூ' (பு. வெ. மாலை : 240 : 2.) —எனப்

'போந்தை' என்னும் சொல்லே அமைக்கப்பட்டுள்ளது. இச் சொல்லுக்கு நச்சினார்க்கினியர் காரண விளக்கம் தந்துள்ளார் அதனையும் சொல்லின் மூலத் தொடர்பு கொண்டு,

"'தோடே மடலே' என்னும் இச்சூத்திரத்துப் பிறவும்
என்றதனால் போந்தை முடித்தாம். அதனிடத்தினின்றும்
போந்ததனால் போந்தை என்றார்."[1] —என்று

'போந்ததனால் போந்தை' என்று பெயர் உண்டானதாகக் காட்டி யுள்ளார். 'பனம் போந்தை' என்னும் தொடரும் இக்குறிப்புடையது இதுகொண்டும் சேரர் குடிப் பூவாம் பனங்குருத்து 'போந்தை' என்ற சொல்லைப் பெற்றதாகின்றது.

---

1 பொருந் : 143 : உரை.

## பனம் புடையல்

இதுவரை தலையில் சூடப்படுவது காணப்பட்டது. மார்பிலும் அணிந்தனர். குடிப் பூவின் சின்னமாகவே அணிந்தனர். இம்மாலை 'புடையல்' என்னும் சொல்லைப் பெற்றது. பனம் பூ மார்பு மாலையைக் குறிக்கும் இடங்களில் எல்லாம் 'புடையல்' என்னும் சொல்லே கையாளப்படுகின்றது. அத்துடன் இப் புடையல் குறிக்கப்படும் இடங்களில் பெரும் பகுதியிலும் உடன் சேர்த்துக் கழல் அணிந்த கால் குறிக்கப்படுகின்றது.

"இரும்பனம் புடையல் ஈகைவான் கழல்" (பதிற் : 42 : 1)

"புடையல் அம் கழற்கால்" (அகம் : 295 : 11) —எனப்

புடையலுடன் 'ஈகையங் கழல்' என்னும் தொடரும் இணைத்துப் பாடப்பட்டுள்ளமை குறிக்கத்தக்கதாகும். இவ்வாறு அகநானூறு புறநானூறு, பதிற்றுப்பத்து என்னும் குறிப்பிடத்தக்க வரலாற்றுச் செய்திகளைத் தரும் சங்க இலக்கிய நூல்கள், இத்தொடர்களை இணைத்துப் பாடுகின்றன. பரணர், அவ்வையார், மாமூலனார் அரிசில் கிழார், காக்கைப் பாடினியார் நச்செள்ளையார், காப்பியாற்றுக் காப்பியனார் என்னும் புலவர் பெருமக்கள் இவ்வாறு பாடியுள்ளோர் ஆவர். இன்னோர் வரலாற்றுச் செய்திகளையும் மரபுக் கருத்துகளையும் வழங்கும் பாங்குடையவர்கள்.

போர்க்களத்தில் போரிட்டுக் குருதி தோய்ந்துள்ளதைப் பாடும் இடத்திலும்,

*"இரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்*
*குருதி பனிற்றும் புலவுக் களத்தோனே"*[1] —என

இணைத்துப் பாடப்பட்டது. இவ்வாறு குறிப்பிடத்தக்க அளவில் இவ்விரண்டும் இணைந்து வருதல் ஒரு கருத்தை உட்கொண்டதாகும்.

சேரர்க்குரிய வீரச்சின்னங்களில் இவ்விரண்டும் இணைந்த மரபாகத் திகழ்ந்துள்ளன. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் அவ்வையார் ஒரு கருத்தை வெளிப்படுத்தியுள்ளார் :

*"தொன்னிலை மரபின்நின் முன்னோர் போல*
*ஈகையங் கழற்கால் இரும்பனம் புடையல்"*[2] நினது

1 பதிற்று : 57 : 2, 3.

2 புறம் : 99 : 4, 5.

தர்யமாக—உரிமைப் பொருளாகப் பெற்றுள்ளாய்—எனத் தொன்மம் மரபாக — முன்னோர் பழக்கமாகக் குறித்துள்ளார்.

எனவே, போந்தையும் புடையலும் குடிப்பூச் சின்னத்துடன் வீரச் சின்னமாகவும் கொள்ளப்பட்டிருந்தன. இத்துணைக்கும் இக்குருத்து, மலர்அமைப்போ மணமோ சுவையோ அற்றது. இக்குறையையும் காட்டும் கபிலர்,

''வண்டு இசை கடவாத் தன்பணம் போந்தை''[1] —என்றார். இருப்பினும் கண்ணிப் பூ நிலையில் போந்தையாகவும் தார்ப் பூ நிலையில் புடையலாகவும் பெயர் பெற்றுள்ள சிறப்பிடம் இதற்கொரு தனித்தகுதியைத் தந்துள்ளது.

## பனியும் மணலும்

பனையிற் குருத்து எல்லாப் பருவத்திலும் தோன்றுவது. பூவோ இரு பனிப்பருவத்திலும் தோன்றும். தனது இனப் பெருக்கத்தை இளவேனிலிலும் வேனிலிலும் உருவாகச் செய்யும். எனவே, **பனம் பூ பனிப்பருவப் பூ ஆகும்**.

பனை எங்கும் பரவலாக முளைத்து வளரும். நீர்ப்பிடிப்பு —நீர்ப்பசை இல்லாத வறண்ட பகுதியிலும் வளரும். ஆனால், மணற்பாங்கான நிலம், அதிலும் கடற்கானல் சிறப்பாக உரியது. கருங்கடற்காற்று அடித்து இதன் குருத்தை மாய்க்க, அதனால், 'அணங்கும் கடற்கானல்' என்று பாடப்பட்டுள்ளது.

நெய்தல் நிலத்து அடும்பு பற்றிப் படரும் என்றும், அடி மரம் புதையுமாறு கோடைக்காற்று மணலை இதனடியில் குவிக் கும் என்றும், அதனால் உயரமாகத் தோன்றிய இது குட்டை யாகித் தோற்றமளிக்கும் என்றும் பாடப்பட்டுள்ளது. சேரர் நாடு மலைநாடாயினும் மலையின் மேற்குப் புறக் கடற்கரை நெய்தல் நிலமாகும். எனவே,

---

1 *பதிற்று :* 70 : 6, 7.

பனம் பூ நெய்தல் நிலப் பூ.

சூடுதற்கு உரித்தான போந்தை—குருத்தோலை பிற பூக்களோடு ஒப்பனைக்கும் ஆயிற்று. இதன் மடலில் குவளையை வைத்துப் பின்னினர்; முடைந்தனர்; சூடினர். கொன்றை மலரை இணைத்துக் குடுமியில் சூடினர். வெட்சி மலரை இணைத்து சுரியிரும் பித்தையில் சூடினர். வாகை மலரை இணைத்துச் வெற்றி கொண்டாடினர். வேப்பம் பூவைக் கொத்தாகச் சேர்த்துச் சுரிந்த குடுமியிற் செருகினர். கடப்பம் பூவை இணைத்துச் சூடினர். ஆநிரைகளை மேய்க்கும் ஆயர் வேங்கைப் பூவை இத்தோட்டில் புனைந்து அணிந்தனர்.

"கிழித்துக் குறுக நறுக்கி வாகையொடு இடை வைத்துத் தொடுத்த பனங்குருத்து, முல்லை முகைக்கு ஒப்பாகவும், வாகை வீ அம்முல்லையைச் சூழ்ந்த வண்டிற்கு ஒப்பாகவும் உவமம்"[1] கொண்டதைப் பதிற்றுப் பத்தின் பழைய உரைகாரர் விளக்கினார்.

இவ்வாறெல்லாம் இதனை ஆடவரே சூடினர். இக்காலத்தில் மகளிர் தாழை மடலில் பிற பூக்களை வைத்துத் தைத்துச் சூடுவதுபோன்று அக்கால ஆடவர்க்கு இது விருப்பமாக இருந்துள்ளது.

## அனைத்தும் பயன்

பூவின் இடத்தைப் பெற்ற இக்குருத்து பலவகையிலும் மக்களது வாழ்வில் பயன்படுத்தப்பட்டது. இருக்க, படுக்க, உறைய, உடுக்க எல்லாம் பயன்பட்டுள்ளது. கோவலனைக் கண்ணகி,

"தாலப் புல்லின் வால்வெண் தோட்டு"த்
-தடுக்கில் அமரவைத்து

"அமுதம் உண்க அடிகள் ஈங்கு"[2] -என்றாள். கோவலன் சமண சமய நோன்பினன். அதனால் 'அடிகளே' எனப்பட்டான். அந்நோன்பிக்கு உரிய தூய இருக்கையாகப் பயன்பட்டது.

1 பதிற் : 66 : 14, 16 உரை
2 சிலம்பு : 16 : 85, 86.

இப்பனை, உள்ளங்கால் முதல் உச்சந் தலைவரை, அஃதா வது வேர் முதல் குருத்து வரை எல்லா உறுப்புகளாலும் மாந்தர்க்குப் பயன்படும் ஒன்று. கும்பகோணத்தில் வாழ்ந்த அருணாசலப் புலவர் என்பார் இதன் பயன்பற்றித் 'தாலவிலாசம்' என்றொரு நூலே எழுதியுள்ளார். 801 வகைகளில் இது பயன்படும் என்று எழுதியுள்ளார்.

இக்குருத்து ஓலையை, அஃதாவது தாலத்தை மடித்து மாறு மடிப்பில் பின்னி, நூலில் கட்டிக் குழந்தைகளின் கழுத்தில் தொங்க விடுவர். இது நோய்த்தடை. கழுத்தில் அது அசைந் தாடும். தாலத்தால் ஆடும் இது 'தாலி' எனப்பட்டது. இதனால் கழுத்தில் அசைந்தாடும் கழுத்தணிகள் 'ஐம்படைத்தாலி', 'மங்கலத்தாலி' என்றும் பெயர் பெற்றன.

இத்தாலம் போன்ற அமைப்புள்ளது நமது நா. இதனால் நமது நாவிற்கும் தால் என்னும் பெயர் அமைந்தது. இத்தாலை ஆட்டி இசையெழுப்பிக் குழந்தைகளை உறங்கவைத்தனர். நாவை—தாலை ஆட்டி இசைப்பதால் இப்பாட்டு 'தாலாட்டு' ஆயிற்று. "தாலோ தாலேலோ" என்று தாலாட்டு பிறந்தது. அதனைக் கேட்கும் பிஞ்சுப் பருவமும் தாலப் பருவமாயிற்று.

போந்தை என்னும் சொல்லும் குறிப்பெயராகியது. 'போந்தை' என்று ஓர் ஊரும் பெயர் பெற்றது. அஃது ஆதன் என்பானுக்கு உரிய ஊர். சீரும் ஆரவாரமும் மிக்க ஊர்.

"நெடுவேள் ஆதன் போந்தை அன்ன
பெருஞ்சீர் ஆகும் கொண்டியளே"[1] என்று பாடினார்

குன்றூர் கிழார் மகனார். இவ்வூரில் வாழ்ந்த சங்கத்துப் பெண் பாற் புலவர் 'போந்தைப் பசலையார்' எனப்பட்டார்.

பனையின் பெயரால் பனையூர், பனங்காடு எனப் பல ஊர்ப் பெயர்கள் எழுந்தன. கிளையும் நிழலும் அற்ற இதன் அடியில் சிவபெருமான் இடம் பெற்றார். இதனால் இவ்விடம் 'திருப்பனந்தாள்' என்னும் ஊராயிற்று. இங்குள்ள கோவிலின் 'திருமரம்' பனை.

தொல்காப்பியத்திற்குப் பாயிரம் பாடிய பெரும்புலவர் பனை என்னும் சொல்லமைந்த பனம்பாரனார் என்னும் பெயரினர். இங்கு விளக்கப்பட்டவை யாவும் பனைக்குப் பாயிரமே என்னலாம். பெருமை விரிவானது. சேரன் குடிப்பூ என்ற தொடர்பில் இத்துணைச் செய்திகளை அறிய முடிகின்றது.

---

1 புறம் : 338 : 4, 5.

# ஒன்றியும் ஒன்றாத மூன்று

முடிமன்னர் பூ மூன்றையும் தோற்ற வகைகளாகப் பட்டியலிட்டால்

| பூ: | நிலம்: | நிறம்: | பருவம்: |
|---|---|---|---|
| ஆர் | : பாலை | — வெளிர் மஞ்சள் | — பின்பனி. |
| வேம்பு | : பாலை | — வெண்மை | — இளவேனில். |
| பனை | : நெய்தல் | பழுப்பு வெண்மை | — பனிப் பருவம். |

இவ்வாறு அமையும். இப்பட்டியலில் சிலவகை ஒற்றுமைகளையும் வேற்றுமைளையும் ஒற்றுமை வேற்றுமைகளையும் மாறி மாறிக் காண்கின்றோம்.

சூடப்பட்ட வகையை நோக்கினால்,

ஆர் — பூ மட்டும், சூடப்பட்டது;
வேம்பு — பூவும் இலைக்கொத்தும் சூடப்பட்டன;
பனை -- மடல் மட்டும் சூடப்பட்டது.

இவ்வகையில் வேறுபடுகின்றன. இவ்வேறுபாடு அவ்வம் மரத்தின் இயல்பால் அமைந்தது. வேம்பிற்கு குழைச்சிறப்பால்

அமைந்தது. இவை எக்காரணங்கொண்டு தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பினும் எவ்வகை ஒருமைப்பாடும் இல்லை. இதில் ஒருமைப்பாடு இருக்கவேண்டும் என்பதன்று; இருந்தால் நல்லது. ஆனால், இவ்வகை ஒரு குறைபாடாக இல்லாமல் இருக்கலாம்.

மூன்றும் மூவர் முடிமீதும் தனித்தனியாகச் சூடப்பட்டனதாம். அவ்வாறே சூடப்பட்டு மூன்று முடிகளும் ஓரிடத்தே கூடி ஒரோவழியேனும் தோற்றமளித்திருக்கலாம் அன்றோ? இவ்வழியிலாவது ஓர் ஒருமைப்பாட்டைத் தோற்றியிருக்கலாம் அன்றோ? அரிதாகவேனும் அவ்வாறு காணப்படாமை மிகக் கவல்வை எழுப்புகின்றது, முப் பூக்களையும் முறையே மும்முடிகளில் ஒருசேரக் காணவில்லையே என்னும் ஏக்கம் எழுகின்றது. ஒரே மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட ஒருமைப்பாடுள்ளவர்கள் பால் இந்த ஒற்றுமை என்னும் ஒருமைப்பாடு அமையாமற் போயிற்றே என்று அவலங்கொள்ள நேர்கின்றது,

இக்காலத்தில் நமக்கு எழும் இக்கவல்வும் ஏக்கமும் அவலமும் அக்காலத்துப் புலவர் உணர்விலும் இழையோடியிருந்தன.

இரண்டு சோழமன்னர் தத்தம் முடிமேல் தமது ஒரே குடிப் பூவை—ஆத்தியைச் சூடிக்கொண்டு நிற்கின்றனர். கோவூர் கிழார் பார்க்கின்றார்; மகிழ்ச்சி கொள்ள வகையில்லை. ஏனெனில் பகைத்து நிற்கின்றனர். அவர்க்கு எழுந்த உணர்வு கவலையில் தள்ளாடியது.

மற்றொரு காவிரிப்பூம்பட்டினத்துப் புலவர்; காரிக்கண்ணனார் என்னும் பெயரினர். ஓரிடத்தில் இரண்டு வகைப் பூக்களைச் சூடிய முடியினர் ஒன்று கூடி அமர்ந்து அளவளாவிக் கொண்டுள்ளனர். புலவர் பார்த்துப் பூரித்துப் போனார். வியப்பால் கண்களை அகலவிழித்துப் பார்த்தார். ஒரு மன்னன் ஆர் சூடிய பெருந்திருமாவளவன் என்னும் சோழன். இணைந்திருந்தவன் வேம்பு சூடிய பெருவழுதி. புலவர்க்கு மகிழ்ச்சி கொப்பளித்தது.

'பலராமனும் கண்ணனும் கூடியிருப்பதுபோலக்
காட்சி அளிக்கின்றீர்கள். இதனினும் இனிய காட்சி வேறு
உண்டோ!' -என்றார். தமிழ்க் குலத்தில் பிறந்தோர் உடன் பிறந்தோராக வாழவேண்டும் என்னும் கருத்திலேயே பலராமனையும் கண்ணனையும் உவமை கூறினார், உடன் பிறப்புகள் வல்லவர்

களாகவும் இருந்து ஒன்றுபட்டும் இணைந்துவிட்டால் பகையேது? பழியேது? வலனும் நலனும் வலம் வருமன்றோ என்றும் கருதியே இவ்விருவரையும் உவமையாக்கினார். இக்காட்சி தொடரவேண்டும் என்று விரும்பினார்.

*"இன்னும் கேண்மின்"* என்று,

*'ஒருவர் மற்றவர்க்கு உதவுக! இருவரும் என்றும் வேறுபடா தீர்கள். ஒன்றியே வாழ்க!'*[1] – என்று வாழ்த்தினார். மேலும் அத்துடன் ஒன்றையும் குறித்தார்:

'உம்மிடையே பகைமூட்டி உங்களைப் பிரிக்க அலையும் அயலார் நேரம்பார்த்துப் புகுவர். அவர்தம் வேண்டாச் சொற்களைக் காதில் கொள்ளாதீர்;'

*"இன்றே போல்க நும் புணர்ச்சி"*[2]
–என்று தம் உணர்வைச் சொற்களாக்கித் தூவினார். அவர்தம் சொற்கள் முடிவேந்தர்களை ஒன்றுபட ஒட்டாது தடுக்கும் கயவர் வாழ்ந்ததையும் குறிக்கின்றன. இவர்களைத்தான் திருவள்ளுவர்,

*"பகச்சொல்லிக் கேளிர் பிரிப்பர்"*
என்றார். எக்காலத்தும் இக்கயவரும் உளர். அவர்க்கு ஆட்படும் முடிமன்னர் வழியினரும் உளர். முடிமன்னர் நமக்கென விட்டுச் சென்றிருக்கின்ற மாறாத உடைமைகள் இப்பிரிவும் பகையுமாக அமைந்தன.

சில புலவர்கள் தற்புலமைத் தினவைக் காட்ட முடிமன்னர் வேறுபாட்டினை – பகை மூட்டத்தினைப் பாடினர்.

*"ஆருக்கு வேம்பு நிகராமோ அம்மானை"*[3] — என ஒட்டக் கூத்தரும், இதற்கு மாற்றாக,

*"கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானை"*[4]
— எனப் புகழேந்தியும்

---

1 புறம் : 58 : 20.
2 புறம் 58 24—28.
3 தனி : ஒ : பக். 58 : 3
4 தனி : சி : பக். 548.

பாடியனவாகப் பாடல்கள் உள்ளன. தத்தம் மன்னர் பெருமையைப் பேச அவரவர்தம் குடிப் பூவைப் பழித்துப் பாடியது முறையாகுமா? மதித்துப் போற்றத் தக்க ஒன்றை, மிதித்துத் தூற்றிய பழியையே சாரும். அப்பெரும் புலவர்களோ, அவர்தம் பெயரில் மற்றவர்களோ பாடியிருப்பினும் இது வேண்டாத ஒன்று.

இவ்வேண்டாத ஒன்றுடன் வேண்டப்படும் செய்திகளும் தென்படாமற் போகவில்லை.

## நாட்டில் மும்மைப்பாடு; பாட்டில் ஒருமைப்பாடு,

பரஞ்சோதி முனிவர் ஒருசேரக் கூடாத அவர்களைப் பாட்டில் கூடவைத்தார். அக்கூட்டிலும் மூன்று மலர்களை முதற் கண் வைத்து,

*"ஆரொடு மடலவிழ் பனையொடும்*
*அரம்திகர் இலைநிம்பத்*
*தாரொடு"* 1 – மும்முடி மன்னரும் கூடி வந்தால் எப்படியிருக்குமோ அவ்வாறு பெருகியது வைகை என்றார். இத்துடன்,

*"புலியோடு சிலை(வில்) யொடு தருகயலொடு"* ஒன்றாகக் கூடித்தழுவி வந்தது போன்று இருந்தது என்று பாடினார். அவ்வாறு வரவைத்த மூன்று மன்னர்களையும் எந்தச் சொற்றொடரால் குறித்தார்?

*"தமிழ்பயில் அரசர்கள்"*
— என்று மொழி ஒருமைப்பாட்டுத் தொடராக முடித்தார். அவர்க்கு அவ்வாறு ஒரு பேரவா உள்ளத்தே ஊறியது போலும்!

சிலப்பதிகாரம் மூன்று முடிமன்னர்க்கும் உரிய நூல். அக்காலத்திலும் முப்பிரிவாகவே இருந்தனர். அதனைக் குறிப்பது போன்று இம்மன்னர் தொடர்பிலேயே அந்நூல் முப்பிரிவாக — மூன்று காண்டங்களாக அமைந்தது. இருப்பினும் இளங்கோவடி

---

1 *திருவிளை. பு : அன்னக்குழி : 21.*

களாரக்கு அவர்களை ஒன்றுபடுத்திக் காணும் உள்ளுணர்வு இருந்தது.

அவ்வுணர்வை வாழ்த்துக் காதையில் படிப்படியாக வடித்தார். சோழனைப் புகழ்ந்து அம்மானை வரி பாடினார். அடுத்துப் பாண்டியனைப் புகழ்ந்து கந்துக வரி பாடினார். அடுத்துச் சேரனைப் புகழ்ந்து ஊசல் வரி பாடினார். மேலும் புகழத் தொடர்பவர், வள்ளைப் பாட்டு என்று எடுத்துக் கொண்டு அதிலேயே அடுத்தடுத்து மூவரையும் பாடி நூலை நிறைவேற்றினார். இவ்வாறு நூலின் முடிவில் அமைத்த இவ்வமைப்பு இளங்கோவடிகளாரது ஒருமைப்பாட்டு உணர்வின் வடிப்பு எனலாம்.

"இவ்வடிப்பில்,"

*"... ... ... ... ... ... ...செம்பியன் வம்பலர் தார்*

*பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்"*

*"வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்"*

*"பனந்தோடு உளங்கவரும் பாடலே பாடல்"*[1] — என மும்முடி மலர்களையும் குறித்துப் பாடினார். பாடி நூலை நிறைவு செய்தார். ஒரு பெருங் காப்பியம் இம்முடிப் பூக்களுடன் நிறைவு பெறுதல் நமக்கும் மன நிறைவைத் தருகின்றது. மூன்று பூக்களும் நிறைவடைகின்றன.

மலர்களில் அகத்திணை மலர்கள் ஐந்து, புறத்திணை மலர்கள் எட்டு. முடிமன்னர் மலர்கள் மூன்று ஆகியவை தமிழகத்தில் தனிக்குறிப்பிற்குரியவை. இவை, இலக்கணச்சட்டகங்கள்; மரபுவழிக் குறியீடுகள்; நடைமுறைச் சின்னங்கள். அகவாழ்விலும் புறவாழ்விலும் இடம்பெற்றவை; அரசியலில் முடியேறியவை; பதிவானவை. எனவே, இவை வரலாற்றுத் தகுதிபெற்றவை; வழக்காற்றுப் பகுதி கொண்டவை. இவற்றால் இவை வரலாற்று மலர்களும் ஆகும்.

---

1 *சிலம்பு* : 29 : 26, 27, 28.

இலக்கியம் ஒரு பூக்காடு

"கவிதூர்கோ" கோவை. இளஞ்சேரன்

# முருங்கைவரை முகிழும் பூக்கள்



✱ 23

# 4. முருங்கை வரை முந்தும் பூக்கள்.

## அறிமுக மலர்கள்.

### புலவர் நாவிற் பூத்த பூக்கள்.

விண்ணில் ஒளிரும் மீன்களையும் எண்ணிச் சொல்லி விடலாம்.

மண்ணில் மலரும் மலர்களை எண்ணுக்குள் அடக்க முடியாது.

"இறந்தாரை எண்ணிக்கொண் டற்று"[1] எனத் திருவள்ளுவர் இறந்தவர்களை எண்ணுவதையே இயலாததாகச் சொன்னார். அதனைக்கூட இக்காலத்தில் நிறைவேற்றிவிடலாம்.

ஒரு பொழுதில் பிறந்து, மறுபொழுதில் சிறந்து, அடுத்த பொழுதில் இறந்துபோகும் மலர்கள் எண்ணுக்குள் கட்டுப் படாதவை. மலரினது வாழ்வின் காலத்தை நோக்கினால் அதன் வாழ்வு துளிவாழ்வுதான். உலகில் 'துளி வாழ்வு' மேற்கொள்ள ஒருநாளில் தோன்றும் மலர்கள் எத்துணை கோடியோ? எத்துணை ஆம்பலோ? எத்துணை தாமரையோ? இது கருதித்

---

1 குறள் : 22

தான் கணக்கற்ற எண்ணிக்கைக்கு மலர்ப் பெயர்களையே சூட்டினார் போலும்.

ஆயினும், இக்காலச் செடியியலார் கணக்கற்ற நிலையை ஒரு தொகுப்பில் முடக்கினர்; தொகுப்பை வகுப்பில் மடக்கினர்; இனத்துள் ஒடுக்கினர்; அதனையும் குடும்பத்துள் அடக்கினர்.

ஒரே குடும்பத்து மலர்களுள்ளும் எத்துணை வேறுபாடு? மாறுபாடும் உண்டு. இருப்பினும் வேறுபாடும் மாறுபாடும் உயிரினங்களைக் கவர்வதற்குத் தடையாகவில்லை. மணத்தாலும் வண்ணத்தாலும், வடிவாலும் வனப்பாலும் மாந்தர்தம் உள்ளத்தில் தூண்டில்போட்டு உணர்வைச் சுண்டி இழுக்கும் செயல், மலர்களின் பிறவித்தொழில்.

மாந்தரது—அவரிலும் மகளிரது கண்ணில் புகுந்து மனத்தை மயக்கித் தலையிலும் மார்பிலும் தவழ்பவை மிகப் பல அல்ல. மலர்களின் பெருக்கத்தை நோக்க இவ்வெண்ணிக்கை சிலவாகும். சிலவானாலும் மார்பில் ஏறி நிற்பதும் தலையில் அடிவைத்து அமர்வதும் பெருமைக்குரியவைதாம். இப்பெருமைக்கு ஆளாக்க மாந்தர் மலர்களைக் கொய்யும்போது ஆர்வத்தைப் பெய்வர்; சூடும்போது மகிழ்வைச் சுரப்பர்; வாடியவுடன் அவலத்தை வழங்குவர்.

விரும்பி ஏற்றதை வீசி எறிதல் அவலமன்றி வேறென்ன?

"சூடினர் இட்ட பூ"—என்றார் நல்லந்துவனார்.

கூடிப் புணரப்பட்ட குமரியின் எழில் நலத்தை உண்டவன், ஓடிப் பிரிந்து மறந்துவிட்டால், உண்ணப்பட்ட அவள், அவலத்தின் தனி உருவம் ஆவாள்.

இவ் அவலத்து அணங்குகளைத்தாம்,

*"கூடினர் புரிந்து குணன்உணப் பட்டோர்*
*சூடினர் இட்ட பூவோர் அன்னர்* 1 —என்றார்.

பொதுவில் மாந்தர் பயன்கொண்டு பின்னர் தள்ளிவிடும் வகையை நோக்கினால், மலர்கள் கழிபட்ட கைம்பெண்கள்.

---

1 கலி: 22 : 12, 13.

ஆனால், கவிஞர்தம் கண்ணில் பட்டுக் கருத்தைத் தொட்ட மலர், இளமை நலங்குன்றாத கொல்லிப்பாவை ஆகிவிடும். புலவர்தம் பார்வையில் புணர்ந்து, உளத்தில் கருப்பெற்று, நாவில் புதுப் பிறப்பெடுக்கும். 'ஓகோ' என்று உயர்விடம் பெற்றுச் சாகாக் கலை பெறும். இலக்கியத்தில் மலர்ந்து, இவ்வுலகம் வாடினாலும் தான் வாடாது மணக்கும்.

இவ்வாறு, உலக இலக்கியங்களில் இடம் பெற்ற மலர்கள் இன்றும் மலர்ச்சி குன்றாது மணக்கின்றன. உணர்ந்து சொன்னால், மலர் இல்லாத இலக்கியம் கைம்பெண் இலக்கியம் எனலாம். மாந்தர், தன்னைக் கைம்பெண்ணாக்கியதற்குமலர் இலக்கியத்தைப் பழி வாங்குவதாகும் இது. தமிழ் இலக்கியங்கள் யாவும் மங்கல மடந்தையர்.

மாந்தர் மலரைப் பயன்கொள்ள மணம், வண்ணம், வடிவெல்லாம் பார்த்துத் தேர்வு செய்வர். புலவர் பார்வையில் எல்லாம் ஒன்றே; ஏதும் இல்லாது போனாலும் நன்றே.

முல்லையில் வைத்த மனத்தை முருங்கையிலும் வைப்பர்,
தாமரையில் தாவிய கண்களை தணக்கத்திலும் தாவவிடுவர்.
நெய்தலைப் பாடிய வாய் நெருஞ்சியையும் பாடும்.
அனிச்சத்தை மோந்தஎழுத்தாணிஅழிஞ்சிலையும் மோக்கும்.
அல்லிமேல் ஓடிய எழுத்து கள்ளிமேலும் ஓடும்.
எப் பூவானால் என்ன?
வெந்தயப் பூ எச் சிறப்புடையது?

ஒருநாள் பாவேந்தர் பாரதிதாசனார் கண்ணில் பட்டுவிட்டது; தங்கமாகிவிட்டது.

"*வெந்தயச் செடிகளின் மேல்*
*மின்னிடும் தங்கப் பூக்கள்*"[1] என்றார். மன்னரது போர் வலிமையைக் குறிக்க,

"*நீ, நயந்து நோக்கும்வாய் பொன் பூப்ப*" என்பர். கவிஞர் நயந்து நோக்கினால் பொன் பூக்கின்றது.

---

1 *அழகின் சிரிப்பு: சிற்றூர் : 4.*

## இலக்கிய அறிமுகம்

புலவர் நாவிற் பொருந்திய பூக்கள் தமிழ் இலக்கியத்தில் நூறு எண்ணையும் கடந்து நிற்கின்றன. சங்கக் கவிஞர் முதல் நம் தங்கக் கவிஞர் வரை யாவரும் மலர்களை இலக்கியங்களில் பதித்துள்ளனர். அவை பெற்றுள்ள அறிமுகங்களின் வகையாலும் முறையாலும் இலக்கியங்களில் பல உத்திகள் உருவாயின. முன் கண்ட அக, புற இலக்கண வாய்ப்போ, வேறு ஏதும் தனித் தன்மையோ பெறாமல் இலக்கியங்களில் அறிமுகம் பெற்றுள்ள மலர்கள் பல. அவற்றை 'அறிமுக மலர்கள்' என்று குறிக்கலாம்.

இவற்றுள் முதன்மைப் பூ, முடிவுப் பூ என்றில்லை. இலக்கியத்தில் யாவும் ஒன்றே. ஆயினும், இலக்கியங்களில் பெற்றுள்ள இடமிகுதி, வண்ணனைப் பாங்கு, உவமை வாய்ப்பு, உருவக முத்தாப்பு முதலியன கொண்டு ஒருவகையாக அடுத்தடுத்து வரிசை கொடுக்கலாம். இவ்வரிசை துல்லியமான வரிசையன்று; தோராயமானதுதான். இதற்கே ஆழ்ந்த ஆய்வும் தேர்ந்த கணக்கீடும் விடுபடாக் கூர்த்த நோக்கும், முறைதெரி கவனமும் கொள்ள வேண்டும். இவற்றால் ஒரு முறையான வரிசை அமையும். இவ்வரிசையில் அறிமுக மலர்கள் அமையும்.

புலவர்தம் பட்டறிவுப் பசுமையால், சொற்சித்திரத்தால், புலமைப் பூரிப்பால், நுழைபுலச் சிறப்பால் மேலோங்கித் தோன்றும் அறிமுக மலர்கள் பல. அவற்றுள் முந்திக்கொண்டு மலர்ந்தது காந்தட் பூ.

# I கை மலர்

### (காந்தள், தோன்றி, கோடல்)

## முந்தித் தோன்றி

முந்தி நிற்கும் பூ. ஆம், காந்தள் ஒருவகையில் முந்தி நிற்கும் பூ ஆகும். தமிழ்நாட்டைப் பூக்காடாகக் காட்டக் கபிலர் இலக்கியம் தொடுத்தார் அன்றோ? 99 பூக்களை அடுக்கியவர்,

> "......................வள்ளிதழ்
> ஒண்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்" 1 – எனக்

காந்தளை முதலில் வைத்தார்.

---

1 கு. பா : 61.

பூவிற்கு விதி வகுக்கப் புகுந்தார் கமலை ஞானப்பிரகாசர். புகுந்தவர், கொடிப் பூக்களைப்பட்டியலிட்டார். அதன் புகுமுகமாக,

*"மருவாரும் காந்தள், காட்டு மல்லிகை, முல்லை, மௌவல்."* 1

—எனக் காந்தளை முந்தி வைத்தார்.

கபிலரது குறிஞ்சிப் பாட்டும், கமலை ஞானப்பிரகாசரது புட்பவிதியும் பூக்களை அடுக்கிக் காட்டும் இலக்கியங்கள். முன்னது முற்காலத்து நூல்களுள் பூத்தொகுப்பைப் பொறுத்த அளவில் முதல் நூல். பின்னது, பிற்காலத்து நூல்களுள் இதுவரை இறுதி நூல். இவ்விரண்டு எல்லையான நூல்களிலும் காந்தள் முந்திடம் பெற்றுள்ளமை காந்தளுக்கு ஒரு சிறப்பு. இச்சிறப்பு நாமாக இழுத்து இணைத்துக் காண்பதாகவும் ஆகலாம். ஆனாலும், இதன் முதன்மைக்கு மற்றொரு பிடிப்பும் இருக்கின்றது. சங்க இலக்கியங்களில் பூக்கள் பெற்றுள்ள இடங்களைத் தனித் தனியே எண்ணினால் காந்தள்தான் முதலிடம் பெறுகின்றது. மிகுதியான இடத்தைப் பெற்றுள்ள வகையில் ஒருவகை முதன்மை இதற்கு அமைகின்றது.

நிகண்டுகள்,

*"காந்துகம் தோன்றி பற்றை கோடல் என்*
*றாய்ந்த நான்கும் காந்தள் ஆகும்"* 2 —எனக் காந்தளின் பெயர்களைக் காட்டுகின்றன. மேலும் 'கோடை, இலாங்கலி' என்னும் பெயர்களையும் நிகண்டுகள் காட்டுகின்றன.('இலாங்கலி' என்னும் பெயரைத் தென்னைக்கும் உரியதாக அந்நிகண்டுகள் கூறுகின்றன.)

இதன் வேர்ப்பகுதியாகிய கிழங்கு, கலப்பை வடிவில் அமைந்திருப்பதால் 'கலப்பைக் கிழங்குக் கொடி' என்று வழங்கப் படுகின்றது. இதன் இலை வெற்றிலை வடிவில் சற்று நீட்சி கொண்டது. இவ்விலையின் நுனியில் பற்றிப் படர்வதற்கேற்ற சுருள் நரம்பு இருப்பதால் 'தலைச்சுருளி' எனப்பட்டது. இதன் காய் காக்கையின் மூக்கு வடிவத்தில் உள்ளதால் 'காக்கை மூக்குக் கொடி' 3 என்றுபேசப்படுகின்றது. இம்மூன்றுபெயர்களும் கொடிக் குரிய பெயர்கள்.

---

1 பு. விதி : 8 : 1.
2 சே. தி: மரப் பெயர்ப்பகுதி
3 சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்—பக்கம் : 64 திரு பி. எல். சாமி.

இனி மலரின் தொடர்பில் உண்டான பெயர்களைக் காணலாம்.

இம்மலரின் இதழ்கள் ஆறு. இவை ஆறும் செவ்வொளி தரும் நிலையில் ஆறு விண்மீன்களின் தொகுப்பாகிய கார்த்திகை போலக் கண்டனர். 'கார்த்திகைப் பூ' என்றனர். இத்துடன் ஆன நான்கு பெயர்களும் வழக்குப் பெயர்களே.

மேலும் 'இஞ்சம்' என்னும் பெயரை அகர முதலிகள் குறிக்கின்றன. அடியார்க்கு நல்லார் 'உச்சிச் செலுந்தி' என்னும் ஓரு பெயரை உரையில் தந்துள்ளார்.

இலக்கியங்களில் குறிக்கப்படும் பெயர்களில் 'இலாங்கலி' என்பது கலப்பைப் பொருள்தரும் சொல். எனவே, முன்குறித்த படி கொடியைக் குறிப்பதாகும். 'கோடை' என்பது கோடலின் மரூஉ மொழி. 'காந்துகம்' என்பது நிறம் கருதி எழுந்தகற்பனைப் பெயர். இதன் விவரம் பின்னர் காணப்படும். பற்றை என்பது பற்றிப் படர்தலைக் குறிப்பதாகலாம். ஆனால், 'பற்றிப்படரும் பல இருக்க இஃதொன்றிற்கு மட்டும் இப்பெயர் வருமா' என்னும் வினா எழுவதால், இப்பெயர்க் காரணத்தைப் பின்வருமாறு கொள்ள வேண்டும்.

இப் பூ தன் வளர்ச்சியில் நிறம் மாறித் தோன்றுவது. இந்நிற மாற்றங் கரணியமாக இப்பெயர் நேர்ந்திருக்கும். எவ்வாறு? ஒழுக்கம் இல்லாதவன் 'பற்றையன்' எனப்படுவான். இருமனப் பெண்டாம் பரத்தை 'பற்றைச்சி' எனப்படுவாள். தகாத பிறவிகள்—தப்பிப் பிறந்தோர் 'பற்றை' எனப்படுவர். நம்மாழ்வார்,

*"பாரிலோர் பற்றையைப்*
*பச்சைப் பசும்பொய் பேசவே"* 1

— என்று பாடினார். இத்தகையவர் நேரத்திற்கு நேரம் மனம் மாறுவர். இக் காந்தள் மலரும் தன் வளர்ச்சியில் நிறம்மாறித் தோன்றுவதால் இப்பெயரைப்பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு இழிவான பெயரை இடுவார்களோ எனின், பிற்காலத்தார் இப்படியும் செய்வர் என்றே சொல்ல வேண்டும். 'தூங்குமூஞ்சி' என்று ஒரு பெயர் வெற்றிப்பூ வாகைக்கு இடப்

1. திருவாய். 3 : 9 : 7.

பட்டதே இதற்குச் சான்றாகும். 'பற்றை' என்னும் சொல் வழக்கு இலக்கியத்தில் இல்லாமையும் பிற்காலத்தோரால் படைக்கப்பட்டிருப்பதும் இவ்வாறு கருத இடந்தருகின்றது. எனவே, 'பற்றை' என்னும் பெயரைப் பூவிற்குக் கொள்ள வேண்டும்.

இதுவரை காணப்பட்ட இதன் பல பெயர்களுள் இலக்கியங்களில் மிகுதியும் இடம் பெற்ற பெயர்கள்.

காந்தள், தோன்றி, கோடல்'—என்னும் மூன்றுமேயாகும்.

இம்மூன்றில் 'காந்தள்' என்பதன் மறு பெயர்களாகவே மற்றைய இரண்டும் குறிக்கப்படினும், இரண்டும் இதன் வகைகளேயாகும். இலக்கிய வழக்கைக் கொண்டு நோக்கின் மற்றொரு கருத்து எழுகின்றது. இம்மூன்று பெயர்களும் சொல்லளவில் மட்டும் வேறுபாடுடையனவா? மலர் அளவிலும் வேறுபட்டனவா?

அஃதாவது காந்தள் ஒன்றா?
அதன் வகையால் இரண்டா?
அன்றி மூன்றா?
ஒன்றில் மூன்றா?
மூன்றும் ஒன்றா?

நிகண்டுகள் காந்தளின் மறுபெயர்களாகத் தோன்றியையும் கோடலையும் கூறுகின்றன. ஆனால், நப்பண்ணனார் என்னும் சங்கப் புலவரோ தமது ஒரு பாட்டிற்குள்ளேயே,

''கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்,
... ... ... ...
உருவமிகு தோன்றி"[1] —என்று காந்தளையும் தோன்றியையும் தனித்தனியே கூறி வேறு வேறு மலர்களாகக் கொள்ள வைத்துள்ளார்: கேசவனாரும் நல்லந்துவனாரும் இவ்வாறு இரண்டையும் வெவ்வேறாகக் காட்டினர்.

''கோடற் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்ப'' [2] —என்று நப்பூதனாரும்,

---

1 பரி : 19 : 76, 78; — 14 : 13 - 16; 11 ; - 20, 21.
2 முல். பா : 95, 96.

"காலங் கருதித் தோன்றி கை குலப்பக்
கோடல் வளைந்த வள்ளலர் உகுப்ப" [1] —என்று கல்லாடனாரும் தோன்றியையும் கோடலையும் வெவ்வேறாகக் காட்டியுள்ளனர்.

கபிலரோ,

"ஒண்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்"

—எனத் தம் குறிஞ்சிப் பாட்டின் 62 ஆம் அடியிலும்,

"கோடல், கைதை,கொங்குமுதிர் நறுவழை" —என 83 ஆம் அடியிலும்,

"தும்பை, துழாஅய், சுடர்ப்பூந் தோன்றி" —என 90 ஆம் அடியிலும் காந்தள், கோடல், தோன்றி மூன்றையும் தனித்தனியே வெவ்வேறு மலர்களாகப் பாடியுள்ளார். கபிலரது மதிப்பீடு இலக்கியத்தில் மதிக்கத்தக்கது. கபிலர் பூப்பெயர்களின்சொற்களை மட்டும்தொகுத்தார் என்று சொல்லமுடியாது. பொருளும் வகையும் அறிந்தே தொகுத்துள்ளார். பிறரது ஆட்சிகளையும் கபிலரது ஆட்சியையும் கொண்டு நோக்கினால் மூன்றும் ஓரினத்தின் வெவ்வேறு தன்மையில், அக்காலத்தில் கொள்ளப்பட்டன என்று கொள்ள வேண்டும்.

குறிப்பிடத்தக்க பல மலர்கள் செம்மை நிறமும் வெண்மை நிறமும் கொண்டு இருவகைகளாக உள்ளன.

கபிலர் குறிஞ்சிப்பாட்டில் இவ்விருவகைகளாக அமையும் மலர்களின் பெயர்களைக் கையாண்டுள்ளமை கவனிக்கத் தக்கதாக உள்ளது. முல்லை என்றால் பொதுவில் வெண்மை முல்லையைக் குறிக்குமாதலால் முல்லை என்று அடைமொழியின்றிக் குறித்தார். செம் முல்லையைத் 'தளவம்' என்னும் சொல்லால் குறித்தார். இதுபோன்றே ஆம்பல் என்றும், குவளை என்றும் இரண்டாகக் குறித்தார். தாமரையில் வகைகளைத் தனித்தனியே குறிக்காமல் 'முட்டாட்டாமரை' எனப்பொதுப் பெயரைக்குறித்தார். ஆனால், காந்தளைக் 'காந்தள், கோடல், தோன்றி' என இரு நிற வகைகளுடன் பொதுக் காந்தளையும் தனியாகக்கொண்டு மூன்றாகக் குறித்துள்ளார். இதுகொண்டும் பிற சங்கப் புலவர்

1. கல் 20 : 7, 11.

பாடியுள்ளமை கொண்டும் காந்தளை மூன்று வகையாகக் கொள்ள வேண்டும். எவ்வாறு வேறுபடுத்திக் காண்பது? இதற்கு இம்மூன்று சொற்களையும், அவற்றின் பொருள் நிலைகளையும், புலவர்கள் காட்டிய உவமைகளையும் விரித்துக் காணவேண்டும்.

அதற்குமுன்னர் இப்பூவின் பொது அமைப்பை அறிதல் இன்றியமையாதது.

## தலைகீழ் மலர்ச்சி

காந்தள் எழிலை ஏந்தி நிற்கும் மலர்க்குமரி. வண்ணக் கலவையின் வனப்பு மலர். இவற்றிற்கும் மேலாக இது தனது அரும்புத் தோற்றம் முதல் அலரும் பருவம் வரை ஒரு புதுமை வளர்ச்சிகொண்ட மலர். பிற மலர்களின் மலர்ச்சியை ஒப்பிடும் போது இதன் மலர்ச்சியைத் 'தலைகீழ் மலர்ச்சி' எனலாம்.

காந்தட் கொடியில் இதன் அரும்பு தோன்றி ஒரு புறம் சாய்ந்து நிற்கும். இவ்வரும்பின் புறவிதழ்கள் பசுமையானவை. அரும்பின் முனை சற்று வளைந்திருக்கும். இம்முனை செந்நிறங் கொண்டது. கொடிக்காம்புடன் தலைசாய்த்திருக்கும் தோற்றம் பாம்பு தலை நீட்டிக்கொண்டிருப்பது போன்றது.

அடுத்த வளர்ச்சியாக இதன் காம்பைக் குறிக்க வேண்டும். இக்காம்பு பக்கவாட்டில் 5, 6 அங்குலம் நீண்டு வளரும். இந் நீட்சியால் இது 'துடுப்பு' எனப்படும்.

இத்துடுப்பின் முனை கீழ்நோக்கி வளைந்து தான் தாங்கி யுள்ள அரும்பைத் தலைகீழாக்கும். இத்தோற்றம் வளைந்த பிடியுடைய குடை ஒன்றைக் கையில் தொங்கவிட்டிருப்பது போன்றதாகும்.

அரும்பு முகையாகிப் போதாகும். தொங்கிய அளவில் இதழ் கள் விரியும். இதழ்கள் ஆறு புடைத்து விரிவடையும். ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு விரல் போன்றிருக்கும். இதழின் வண்ண எழிலை இப்போது காணலாம். அடியில் இளம் பசுமை நிறம், நடுப்பகுதி மஞ்சள் அல்லது வெள்ளை. மேற்பகுதி இளஞ் சிவப்பு. முனை சிவப்பு எனத் தோற்றமளிக்கும். இப்பருவ வடிவ அமைப்பு, பாம்பு படம் விரிக்கத் துவங்கும் நிலைபோன்றது.

ஒவ்வொரு இதழும் நீண்ட நடுநரம்பின் இரு புறமும் அலை அலையாக ஓரம் நெளிந்து நெளிந்து அழகாகக் காட்சி யளிக்கும். வளமான இதழ், மூன்று அங்குல நீளமும் அரை அங்குல அகலமும் கொண்டது. பளபளக்கும் வண்ணங்களை வழங்குவது. எழில் மங்கையின் மெல்லிய கைவிரல் போன்றது.

இதழ்கள் மேலும் தனித்தனியே விரிந்து கவிந்திருப்பது. விரல்கள் கவிந்த கையைத் தொங்கவிட்டிருப்பது போன்றிருக்கும்.

புறவிதழ்கள் பசுமையாக மேல் மட்டமாக விரிந்திருக்க அகவிதழ்கள் ஆறும் தனித்தனியே வளைந்து தோன்றும். இத் தோற்றம் குடைவடிவங்கொண்டது. இந்நிலையில் இதனைக் 'குடைப் பூ' எனலாம்.

இந்நிலையில் மேல் மட்டமாகப் புறவிதழ்கள் தெரியும் அதற்குக் கீழே வளைந்த நிலையில் அகவிதழ்கள். அவற்றிற்குக் கீழே ஆறு மகரங்கள் பக்கவாட்டில் தனித்தனியே நீண்டிருக்கும். ஒவ்வொன்றின் முனையிலும் ஒரு நெல் அளவில் தட்டையாகத் தாதை ஏந்திய தகடுகள் ஒட்டிக்கொண்டிருக்கும். அவற்றின் கீழே கீழ் நோக்கிய நிலையில் சூலகப் பொகுட்டு அமைந்திருக்கும். சூலகப் பொகுட்டின் மைய முனையிலிருந்து சூல்முடி ஒன்று நீண்டு தன் முனையில் மூன்று மயிரிழைப் பிரிவுடன் தோன்றும்.

இக்குடைப்பூ மேலும் தொடர்ந்து மேல்நோக்கி இதழ்களை விரிக்கும். இதனை விரிக்கும் என்பதை விடக் குவிக்கும் என்பதே பொருத்தமானது. இவ்வாறு மேல்நோக்கியவாறு குவிந்து நிற்பதே இதன் அலர் நிலையாகும்.

இந்நிலையை நோக்கினால் மற்றையப் பூக்களின் மலர்ச்சிக்கும் இதன் மலர்ச்சிக்கும் அமையும் வேறுபாட்டால் இதனைத் 'தலைகீழ் மலர்ச்சி' என்பது பொருந்தும்.

இவ்வமைப்புடைய காந்தள் தன் நிற வேறுபாட்டால் இரு வகைப்படுகின்றது. சூடாமணி நிகண்டு,

*"காந்தள் செங்காந்தள் பற்றை இலாங்கலி*
*தோன்றியும் பேர்"* —என்றும்
*"காந்துகம் கோடல் கோடை கருதுவெண்*
*காந்தளாகும்"*[1] —என்றும் செந்

---

1 சூடா. நி: மரம் : 24 : 1, 2.

நிறங்கொண்டது தோன்றி; வெண்ணிறங்கொண்டது கோடல் என்றது. ஆனால், பிற நிகண்டுகள் இவ்விரண்டு பெயர்களையும் மாறுபாடாகவும் குறித்துள்ளன. சான்றாகப் பிங்கல நிகண்டு,

*"தோன்றி பற்றை இலாங்கலி செங்காந்தள்"* [1] —என்றும்

*"கோடல் தோன்றி கோடை வெண்காந்தள்"* [2] என்றும் தோன்றியைச் செங்காந்தள் வெண்காந்தள் என இரண்டின் பெயராகக் கூறியது.

*"வெண்காந்தள் செங்காந்தள் என்றிரு விகற்பமும்*
*கொண்டே வழங்கும் கோடைப் பெயரே"* [3] —எனச் சூடாமணி நிகண்டு கோடையைச் (கோடல்) செங்காந்தள், வெண் காந்தள் இரண்டிற்கும் பெயராகக் கூறியது.

நிகண்டுகள் நிற்கத் தேர்ந்த உரையாசிரியராகிய நச்சினார்க்கினியரும் இக்குழப்பத்தை வழங்கியுள்ளார். குறிஞ்சிப் பாட்டின் உரையில் பூக்களை விளக்கும் இவர்,

"ஒண்செங்காந்தள்"

என்பதற்கு, "ஒள்ளிய சிவந்த கோடற் பூ" என்று எழுதிக் கோடலைச் சிவப்பென்றார். அடுத்துக் 'கோடல்' என்று வரும் இடத்தில் "வெண்கோடற் பூ" என்று வெண்மையாக எழுதியுள்ளார். [4] கோடல் ஒன்றையே இவ்வாறு இரண்டுமாகக் கூறியுள்ளமை குழம்ப வைக்கின்றது. இக்குழப்பத்திற்குக் காரணியம் இப்பூ நிறம் மாறித் தோன்றுவதே.

இக்குழப்பம் தீரக் கோடல், தோன்றி என்னும் இரு சொற்களின் மொழி வரலாற்றைக் காணவேண்டும். இவ்விரண்டிலும் 'கோடல்' என்னும் சொல் அமைவு ஒரு முடிவுகொள்ளப் பெரிதும் துணைநிற்பதால் முதலில் அதனைக் காணலாம்.

---

1 *பிங். நி :* 2892
2 *பிங். நி :* 2893
3 *சூடா. நி ; மரம் :* 24 : 1, 2.
4 *குறி. பா : உரைக்குறிப்பு.*

# கோடல்

## சொல்லில் கோடல்

'கோடல், கோடை' என்னும் இரண்டின் முதல்நிலை 'கோடு' என்பது. கோடு – அல்; கோடு – ஐ எனப்பிரிபடும். கோடலின் இறுதி நிலையாகிய 'அல்' தொழிற்பெயர் இறுதி அன்று. தொழிற்பெயர்த் தொடர்பில் அமைந்த பெயர் இறுதியாகும் இதுபோன்று இறுதிகொண்ட பெயர்களாக 'மௌவல், செம்மல், சேடல்' என்பன இங்கு கருதத்தக்கன. இவை போன்று 'முல்லை, குல்லை' முதலியவை தம் ஐகார விகுதியால் 'கோடை' என்பதற்குச் சான்றாகின்றன. இறுதிநிலை இவ்வாறு அமைய, 'கோடு' என்னும் முதல்நிலை தரும் பொருள் யாது?

கோடு, பலபொருள் ஒரு சொல். மரக்கொம்பு, வளைவு, மலை முகடு, யானைக் கொம்பு (மருப்பு), சங்குமுதலிய பலபொருள் களைக் குறிப்பது. இவற்றுள் இங்கு யானைக் கோடு, சங்கு என்னும் இரண்டும் இயைபு உடையவை. இவ்விரண்டும்வெள்ளை நிறத்தன. காந்தளில் வெண்மை நிறங்கொண்ட இதழ்களைக் கொண்டது வெண்காந்தள். இலக்கியங்கள் நிறத்தாலும் வடிவா லும் யானை மருப்பையும் சங்கையும் இயைத்துப்பேசுகின்றன. இவற்றால் கோடல், கோடை என்பன வெண்மை நிறங்குறிந்து எழுந்த பெயர்களாகும். அகநானூற்றில் உம்பற்காட்டு இளங் கண்ணனார் என்பார்,

''வரிவெண் கோடல் வாங்குகுலை வான் பூ''[1] –என்றார். இவ்வடியில் 'வெண்கோடல்' வெண்மைநிறத்தை நாட்டுகின்றது. இறுதிச்சீர் 'வான் பூ' வெண்மைக்கு முத்திரையிடுகின்றது. இவ்வெண்மையும் வரியாக—கோடாக அமையும் என்பதை ''வரிவெண்கோடல்'' என்னும் அடைமொழி குறிக்கின்றது.

மேலும், வெண்மை அடைமொழியுடன் குறிக்கப்படும் இக்கோடல் செம்மை அடைமொழியோடு சொல்லப்படவில்லை, எனவே, 'கோடல், கோடை' என்னும் பெயர்கள் வெண்காந் தளுக்கே உரியவை. இதனை, அடுத்து வரும் இலக்கிய விளக்கங் களாலும் தெளியலாம்.

---

1 அகம் : 264 ; 8.

# துடுப்பு முதல் குடை வரை

கோடல் வெண்மை நிற இதழ்களை உடைய காந்தள். வெண்மைப் பெயரெனினும் இதழ்கள் வெண்மை நிறம் ஒன்றையே கொண்டவை அல்ல. பொதுவாகவே காந்தள் தன் ஓரிதழிலேயே ஒன்றிரண்டு மூன்று நிறங்களைக்கொண்டது. அவ்வண்ணங்கள் பூவின் வளர்ச்சியில் மாற்றம் பெறுவன. இந்நிற மாற்றமும் இதற்கு வண்ணக் கோலமாகின்றது. இக்கோலத்தால் காந்தள் புலவர் பெருமக்களது மனத்தைக் கவர்ந்து சுண்டி இழுத்துப் பல்வகையாக உவமை கூறிப் பாடவைத்துள்ளது.

அத்துடன் இப்பூவை வண்ணித்த புலவர்களது கருத்துகளில் ஒருமித்த பாங்கு அமைந்துள்ளதைக் காண்கின்றோம். வண்ணனையாகவோ உவமையாகவோ ஒரு புலவர் ஒன்றைப் படைத்து மொழிந்தால் அடுத்தவர் அதனை ஏற்று, எடுத்து மொழிந்துள்ளார். இவ்வாறு படைத்தும் எடுத்தும் மொழிந்துள்ளமை அங்கொன்று இங்கொன்றாக அன்றிப் பரவலாகவே இலக்கியங்களில் அமைந்துள்ளன. இவற்றைக் கால வாரியாக அன்றி இலக்கியப் பாங்கில் நோக்குவோம்.

கண்ணன்சேந்தனார் என்னும் புலவர் அரும்புடன் நீண்டிருக்கும் காம்புத் தண்டைக் காண்கின்றார். மற்ற மலர்களின் காம்பைவிட இக்காம்பு அதிக அளவில் நீண்டது. முனையில் அரும்பைத் தாங்கிநிற்கும் தோற்றம் படகைத் தள்ளும் துடுப்பு போன்று இருந்தது. அதனால், "நீடிதழ் நெடுந் துடுப்பு"[1] எனப்பட்டது.

"தண்கமழ் கோடல் துடுப்பு ஈன"[2] -என்று காம்பு நீண்டுவளர்வதைத் "துடுப்பு ஈன" என்றார். இத்துடுப்பு அரும்போடு பக்கவாட்டில் கைநீட்டியது போன்று எடுப்பாகஇருப்பதைக் மூவாதியர் என்பார்,

"தண்ணறுங் கோடல் துடுப்பு எடுப்ப"[3] -என்றார்.

---

1 அகம் : 78 : 9.

2 திணை. ஐ : 21.

3 ஐந். எ: 17.

இத்துடுப்புடன் கோடலின் அரும்பு முனை சிவப்பாகத் தோன்றும். இது காற்றில் அடிபட்டு அசைந்து தடுமாறுவதைக் கண்ட நல்லந்துவனார், கள்ளைக் குடித்தவன் தடுமாறுவது போன்றுள்ளதாக,

*"களிபட்டான் நிலையேபோல் தடவுபு துடுப்பு"*

—எனப்பாடி

அதன் முனையில் அமைத்த சிவப்பை உன்னி அத்துடுப்பு தீக்கடைக்கோலுடன் தீப்பொறியைப் பெற்றிருப்பதாக,

*"ஞெலிபுடன் (தீக்கடைகோலுடன்) நிரைத்த*
*ஞெகிழ் இதழ்க் கோடலும்"* 1

—என்று நிறைவு செய்தார்.

இத்துடுப்புடன் அரும்பு தலைசாய்த்து முகையாகும் நிலையில் பாம்பு ஒன்று தலை நீட்டி இருப்பதுபோன்று கருதுமாறு இருந்ததைக் கண்ணன் சேந்தனார்,

*"கோடல் அம் கூர்முகை கோள் அரா நேர் கருத"* 2

—என்றார்.

இம்முகை போதாகி மலராகிறது. இதழ்கள் வெளிவளைவாகப் புடைத்து நிற்பது புல்லாலங்கண்ணியார் பார்வையில் சினங்கொண்ட பாம்பு தன் படத்தை விரித்திருப்பதாகப் பட,

*"வெஞ்சின அரவின் பை அணந்தன்ன (விரித்ததுபோன்று)*
*தண்கமழ் கோடல் தாது பிணி அவிழ"* 3 என்றார்.

இதனை வழி மொழிபவர்போன்று மதுரைக் கண்ணங்கூத்தனார்.

*"அணர்த்து எழு பாம்பின் தலைபோல் புணர் கோடல்"* 4

—என்றார்.

நன்கு மலர்ந்து நிற்கும் நிலையில் கோடல் தன் அழகிய இதழ்களில் முக்கால் பகுதி வெண்மை நிறமும் முனை செம்மையுமாகக் காட்சி தரும். இந்நிலையில் தான் இது தன் வெண்மை நிறத்தில் நின்று,

---

1 கலி : 101 ; 8, 4.
2 திணை ஐ : 29.
3 அகம் : 154 : 6, 7.
4 கார் ; நா : 11

"வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூ"[1]

எனப்பட்டது. வெண்மையும் அதிற்கோடுகளும் அதன் வளை யும் சுட்டப்படுகின்றது. பிரிவுத் துன்பத்தால் தலைவியின் கைகள் மெலிய, அங்கு அணியப்பட்டிருந்த சங்கு வளையல்கள் கழன்று விழும். அக்காட்சிக்கு உவமையாக்கி,

"ஊழுறு கோடல்போல் எல்வளை உகுபவால்"[2]

—என்றார்.

"... ... ... ... இவட்கே
அலங்கிதழ்க் கோடல் வீ உகுபவைபோல்
இலங்குஏர் எல்வளை இறை ஊரும்மே"[3] —(முன்கை

களினின்று விழும்)—என்று எடுத்துமொழிந்தார் நல்லந்துவனார். அவரே,

"கமழ் தண்தாது உதிர்ந்துக ஊழுற்ற கோடல் வீ
இதழ்சோரும் குலைபோல இறைநீவு வளையாள்"[4]

—என்றார்.

கோடல் மலர் முழுவதும் விழுந்தாலும், தனித்தனி இதழாக விழுந்தாலும் இச்சங்கு வளையலையே பொருத்தமாக்கிப் பாடினர். இங்கு ஓரிதழ் தானே உதிர்கிறது. இதற்கேற்ப உடைந்த சங்கு வளையலின் துண்டு கூறப்பட்டது. கந்தரத்தனார் என்பார்,

"கோடு உடைந்தன்ன கோடல்"[5]

—என்று இதழ் உதிராத நிலையிலும் உடைந்த சங்கு வளையலைப் பொருத்திப் பார்த்த புலவர் பலர். இதழ் வெண்மையாயினும் அதன் முனை செம்மை நிறமும் இடையிடம் கிச்சிலி நிறமுமாக இருக்கும். அக்காலத்துப் பொருள்களுக்கு வண்ணம் ஊட்டப் படுதல் ஒரு கலை. இவ்வாறு வண்ணத்தை ஊட்டுவது 'ஊட்டி' எனப்பட்டது. 'வண்ணம் ஊட்டியது போன்ற தளிர்' என்று பாடிய புலவர் பெயரை அறிய முடியாமல் அவருக்கே 'ஊட்டியார்'

1 அகம் : 264 : 3.
2 கலி: 48 : 1,
3 கலி : 7 · 15 17.
4 கலி : 121 : 13, 14.
5 அகம் : 28 : 6,

என்று பெயரிட்டு மகிழ்ந்தனர். அவ்வாறு வண்ணம் ஊட்டப் பட்ட சங்கு வளையலே இங்கு பொருத்திப் பாடப்பட்டது.

கோடு என்றதும் புலவர்க்கு யானைக்கோடுதான் நினைவில் எழும்.

வெண்காந்தளாம் கோடலின் நிறைவு நிலை அதன் இதழ்கள் ஆறும் கீழிருந்து விரிந்து ஒவ்வோர் இதழும் வளைந்து கீழ்நோக்கிக் கவிந்திருப்பதாகும். ஆறும் வளைந்து கவிந்திருக்க அதன் கீழுள்ள ஆறு மகரங்களும் ஆறு குறுக்குக்கம்பிகளாக அமைய, கீழே தொங்கும் சூல்முடி கம்பாகத் தோன்றும் காட்சி ஒரு வெண்கொற்றக் குடை வடிவில் இருக்கும். அதனால், புறப் பொருள் இலக்கணம் விரித்த ஐயனாரிதனார் இதனைக் "குடையலர்"— 'குடை உருவப் பூ' என்றார்.

"*குடையலர் காந்தள் கொல்லிச் சுனைவாய்*"[1] —என்பது அவரது வாய் மொழி.

கோடல் பூவின் நிறைநிலை இவ்வாறு குடையாகித் தண் ணிழல் வழங்குவதாக அமையும். இக்கோடலின் வளர்ச்சி வரலாற்றை இங்கே காணப்பட்ட உவமைகள் வழியில் கூறினால், துடுப்பாய் எடுத்து, பாம்பாய் ஆடி, விரலாய் விளங்கி, சங்கு வளையலாய் முறிந்து, வெண்கொற்றக் குடையாய் நிறைந்தது. இதனைப் பாடல் அடிகளாக்கினால்,

"*வண்துடுப்பாய்ப் பாம்பாய், விரலாய், வளைமுறியாய்*
*வெண்குடையாம் தண்கோடல்*"[2] —என்று அமையும்.

இவ்வடிகள் இவ்விடத்திற்காக எம்மால்கட்டப்பட்டனவல்ல. ஏறத் தாழ ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னரே கோடலின் வளர்ச்சியைத் தொகுத்துக் காட்டுவது போன்று எழுதப்பட்டன. வாகும். கணிமேதையார் அன்று கணித்துப் பாடிய இவை கோடல் வரலாற்றின் மாணிக்கச் சுருக்கமாகும்.

ஆசிரியர் நல்லந்துவனார் இதனையும் மூன்றாகச் சுருக்கி,

---

1 *புற. வெ. மா :* 240 : 1.

2 *திணை. நூ :* 119 : 3, 4.

*"கொடியியலார் கைபோல் குவிந்த மலர்;*
*அரவு உடன்றவைபோல் விரிந்த குலை;*
*குடைவிரிந் தவைபோலக் கோலு மலர்"*[1] —என்று தொகுத்தார்.

இவ்வரலாற்றுக் கூறாகிய இரு பாடல்களின் அடிகள் தாம் 'கோடல்' என்னும் வெண்காந்தளை அடையாளங்காட்டுபவை. குடையளவாகப் பூத்து நிற்கும் நிலையே இதன் நிறைநிலை. இவ்விருவர் பாடல்கள் இன்றேல் கோடலை அடையாளங் கொள்ளல் அரிது. எனவே, இவையிரண்டும் சிக்கல் தீர்க்கும் பாடல்களாகின்றன.

பொதுவில் இப்பூ மணமுள்ளதாகப் பேசப்படுவது. இதன் மணம் கருதியும் எழில் கருதியும், பல்வகை ஆடவரும் மகளிரும் சூடி மகிழ்ந்தனர். பெரிதும் கண்ணியாகவும் கோதையாகவும் சூடினர்.

*"கோடல் நீடிதழ்க் கண்ணி"* —எனத் தலைமக்கள் சூடியதை நெடுநல்வாடை (56) காட்டுகின்றது.

*"........கோடல் வாங்குகுலை வான்பூ*
*பெரிய சூடிய கவர்கோல் கோவலர்"* —என்னும் அகநானூற்று (264 : 2,3) அடிகளால் ஆநிரை காக்கும் இடையர் சூடியதை அறிகின்றோம். இப்பூவிலும் பெரிய பூவாகத் தேர்ந்து சூடினர் போலும்; பெருமளவிலும் சூடினர் போலும்.

கோவலர் போன்று பலரும் சூடியிருப்பர். ஆனால், கோடற் பூ குறவர் குடிக்குரிய பூ. மூலத்தால் குறிஞ்சி நிலப் பூ அன்றோ? இக்குடியில் ஒருகால் தலைவனாக விளங்கியவன் ஏறைக்கோன் என்பான். இவன்,

*"கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்"*[2] —எனப்பட்டான். இதனையும் குறக்குலப் புலவராம் குறமகள் இளவெயினி பாடியிருப்பது இப்பூ குறக்குடிக்குரிய பூ என்பதைக் குறிப்பதாகும். கோடல், ஏறைக் கோனது அடையாளப் பூவாக விளங்கியது.

---

1 *பரி* : 20 : 98–100
2 புறம் : 157 : 7.

இப்பூவைத் தனியாகச் சூடியதோடு பிற பூக்களோடும் இணைத்துச் சூடியதை,

*"கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை*
*நாறிதழ்க் குவளையொடு இடைப்பட விரைஇ*
*ஐதுதொடை மாண்ட கோதை"* [1]

— என்னும் சிறைக்குடி ஆந்தையார் பாடல் குறிக்கின்றது. வெண்மையும் முனை செம்மையும் கொண்ட இது முழுதும் வெண்மை கொண்ட முல்லைக்கு எதிர் வீ ஆகியது. இதன் எழில் கருதி இரண்டு பூக்களின் இடை இடையே வைத்துத் தொடையாக்கப்பட்டு அது வளைக்கப்பட்டுக் கோதையாகச் சூடப்பட்டுள்ளது. "ஐது தொடை மாண்ட கோதை" என்பதால் இக்கோதை அழகியதாகவும் பெருமைக்குரியதாகவும் கருதப்பட்டதை உணரலாம். மாந்தர்க்கேயன்றிக் கடவுளர்க்கும் சூட்டும் பூவாகியது.

*"கோடல் கூவிள மாலை மத்தமும் செஞ்சடைக் குலாவி"* ச் [2] சிவன் விளங்கியதை ஞானசம்பந்தர் காட்டினார். முருகனும்,

*"கோடலும் மராத்தொடு குரவும் செச்சையும் சூடிய குமர"* [3] னாக விளங்கினான்.

தலையிற் சூடப்பெற்ற இப் பூ ஊர்ப் பெயராகவும் சூட்டப் பெற்றது. மலைஞாலத்தில் கோடற்பள்ளி என்றொரு ஊர் உளது.

இவ்வாற்றால், கோடற் பூ —
காந்தளின் பொது அமைப்புடையது;
கீழிலிருந்து விரிந்து குடையளவாக மலர்வது;
அதன்பின் மலராகவும் இதழாகவும் உதிர்வது,
இதழ் ஒவ்வொன்றும் கீழிலிருந்து பெரும்பகுதி வெண்மை நிறங்கொண்டு
முனை சிவந்திருப்பது.
மாந்தர் சூடும் பூ; கடவுளர்க்குச் சூட்டும் பூ – ஆகின்றது.

---

1 குறு : 62 : 1 — 3.
2 ஞான, தே : திருஅரசிலி : 1 : 2.
3 சந். பு : திருவிளை : 69.

இதுபோன்று தோன்றிப் பூவும் தனித்துக் காணத் தக்கது.

# தோன்றி.

## சொல்லில் தோன்றி.

'தோன்றி' என்னும் சொல்லும் பலபொருள் ஒருசொல். 'தோன்றிக் காட்டுதலைக் கொண்டது' என்பது இதற்கொரு பொருள். புதர்களின் இடையே பளிச்சென்ற சிவப்பு நிறத்தில் பூத்துத் தோன்றுவது இப்பெயர்க்கு ஒரு வெளிப்படையான கரணியமாயிற்று. இதுகொண்டே மலைஞாலத்தார் இதனை 'மேந்தோன்றிப் பூ'—'மேந்தோன்னிப் பூ'[1] என்கின்றனர்.

ஆண்டாள் இத்தோன்றியைப் பார்த்தாள். இதன் செம்மைச் சுடர் திருமாலின் கையிலுள்ள ஆழி சுடர்விடுவது போன்று தோன்றிற்று அவளுக்கு. காதல் கொப்பளிப்பால் அவள் உள்ளத்தை இம்மலர் அவ்வழியாகச் சுடுவது போன்றிருந்ததாம். 'நீ இவ்வாறு சுடாதே' என்று பாடத் துவங்கியவள்,

*"மேற்றோன்றிப் பூக்காள்"*[2] – என்று அழைத்தாள். இவ்வாறு அவளால் இலக்கியத்திலும் 'மேல் தோன்றி'யாக இடம் பெற்றது. இவ்வாறு, மேல் தோன்றி என்பதன் கரணியம் மேலே காட்சியளிப்பது மட்டுமன்று; இதன் மலர்ச்சிச் செயலை நோக்கி இதன் உட்பொருளை உணரவேண்டும்.

முன்னர் கோடல் மலர்ச்சியின் வளர்ச்சியில் அது குடை அளவோடு நின்றுவிடுகின்றது. இத்தோன்றி அதுபோன்றே சிவந்த நிறத்தில் கீழிருந்து குடையளவிலும் மலர்ந்து மேலும் மேல்நோக்கித் தோன்றி வளர்வது. இந்த மேல்நோக்கிய வளர்ச்சிக்குப் பின்னரே இதன்தோற்றம் பளிச்சிட்டுத் தோன்றுவது. எனவேதான் இதற்கு 'மேல் தோன்றி' என்னும் பெயர் அமைந்தது. இஃது அதன் மலர்ச்சிச் செயலால் நேர்ந்த பெயர்.

---

1 *சங். செ : பக்கம் : 74 பி. எல். சாமி.*

2 *நாச்சி. திரு : 10 : 2.*

'தோன்றி' என்பதற்குக் 'குருதி — இரத்தம் 'என்னும் பொருளைப் பழைய அகரமுதலிகளும் சேந்தன் திவாகரமும் குறிக்கின்றன. குருதி செம்மை நிறத்தின் அறிகுறி. இக்குறிப்பை வைத்தே திப்புத்தோளார் என்னும் புலவர் இதனைக் "குருதிப் பூ" என்றார்.

தோன்றி—தோன்—தோல்—தொல்—துல் என்னும் வேரடியாலும் இதன் குருதிச் செம்மைப்பொருள் வெளிப்படுகின்றது. இலக்கியங்களும் குருதி, செந்தீ, விளக்கின் எரி எனும் இவற்றின் தொடர்புடனே இத்தோன்றியைக் குறிப்பதும் நோக்கத்திற் குரியது. இவற்றுடன் இது பெற்றுள்ள அடைமொழியும் சான்றாகின்றது. எங்கும் செம்மைத் தொடர்பான பொருள்களையே உவமைகளாகவும் அடைமொழிகளாகவும் பெற்றுள்ளது. வெண் தோன்றி என்று கருதும் அளவிலும் எங்கும் எவ்வகை அடைமொழியையும் பெறவில்லை. இவை யாவற்றாலும் காந்தளின் குருதிச் செம்மை நிறப் பூவே தோன்றிஆகும்.

எனவே, தோன்றி செங்காந்தள் பூ.

## சிவப்பு விளக்கு

தோன்றி கொடியாலும் மலராலும் முன் கண்ட கோடலைப் போன்றதுதான். நிறந்தான் செம்மை. பொதுவில் கூறப்படும் காந்தளைப்போன்றதுதான் ஆனாலும் தனித்தவொரு மலராகவே பேசப்படுவது. ஏன்?

தோன்றியின் சொற்பொருள் அதன்செம்மையைவிளக்கியது. அதன் மலர்ச்சி வரலாற்றையும், அதற்குப் புலவர் காட்டிய உவமைகளையும் காண்பதால் மற்றைய இரண்டினும் இதுவேறுபடுவதைக் காணலாம்.

இதன் நிறம் செம்மை என்றாலும் அச்சிவப்பு இதழ் முழுதும் நிறைந்திராது. முகைப்பருவத்தில் அடிப்பக்கம் பசுமையாகத் தோன்றும். இதழ் விரிந்தால் இதன் அடிப்பகுதியில் பாதி மஞ்சளும், அதற்குமேல் கிச்சிலி நிறமும் முனை செம்மையுமாகத் தோன்றும். மலர் முற்ற முற்ற மஞ்சளும் கிச்சிலியும் படிப்படியாக நற்சிவப்பாகும். முழு மலர்ச்சி கொண்ட மலர் குருதிச் சிவப்புடையது.

முன் காணப்பட்டமை போன்று இத்தோன்றி மேற்றோன்றியாக மலர்வது இதழ்கள் குவியும் செயலாகும். இதன் ஆறு இதழ்களும் ஒரு குலையாகக் குவிவதை மதுரைக் குமரனார்,

*"குவி இணர்த் தோன்றி ஒண் பூ"*[1]

—என்றார். இதன் மேல் மலர்ச்சியைக் 'குவி' என்றமை இதன் இயல்பைக் காட்டுவதாகும். அடியிலிருந்து விரிந்து வந்த பூ மேல்நோக்கி குவியத் தொடங்கும் ஒரு முறை மாற்றத்தையே 'ஊழ்' என்னும் சொல்லையமைத்து.

*"ஊழுறு தோன்றி ஒண்பூத் தளைவிட"*[2] —எனப்பட்டது. இங்கும் 'ஒண்பூ' என்று குறிக்கப்பட்டது. இவ்வொளியும், எரியும் தீ போன்ற ஒளியாகும். இதனால்தான்,

"எரிமருள் தோன்றி" (அகம் : 218 : 20)
"தாய தோன்றி தீயென மலரா" (பரி : 11 : 21)
"தீவாய்த் தோன்றி" (பெருங் : 2 : 12 : 26)

—என்றெல்லாம் கபிலராலும் நல்லந்துவனாராலும் கொங்கு வேளிராலும் பாடப்பட்டது. ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு சுடராகத் தோன்றும் என்பதை,

"சுடற் புரை தோன்றி" (அகம் : 364 : 6) என்பதனாலும் அறியலாம். சுடர் என்னுஞ்சொல் எரியும் விளக்கின் திரிச்சுடருக்கும் உரிய சொல். இதற்கொப்ப ஒவ்வொரு இதழும் ஒவ்வொரு விளக்குத் திரியாகும். ஐந்து திரிகொண்டு ஐந்து முகமாக எரியும் விளக்கைக் 'குத்துவிளக்கு', 'ஐந்துமுக விளக்கு' என்போம். இஃது ஆறுமுகவிளக்கு. ஆறுமுக அகல் விளக்காக,

*"... ... ... .. ஆய் இதழ்த் தோன்றி*
*சுடர்கொள் அகலின் சுருங்குபினி அவிழ"*[3] — எனப்பட்டது. இங்கு "சுருங்குபிணி அவிழ" என்றது அதன் அரும்பு விரியும் நிலையைக் குறிக்கும். இவ்வாறு புதரில் பூத்துத் தோன்றிய தோன்றியைக் கண்ட சேகம்பூதனார்,

*"தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ"*[4] என்றார்.

---

1 குறு : 107 : 1
2 அகம் : 217 : 10
3 அகம் : 235 : 8, 9.
4 நற் : 69 : 6.

இங்கு, தோன்றியைத் 'தோன்றுபு' எனத் தோன்றுவதாகக் குறிப்பது இது 'மேல் தோன்றி' எனக் காட்டுவதாகும். இதுபோன்றே

"நறு வீ முல்லையொடு தோன்றி தோன்ற" 1

—எனத் தோன்றுவதாகக் குறித்தமையும் குறிக்கத்தக்கது.

விளக்காகக் கூறப்பட்ட இதனைக் கல்லாடரும் விளக்காகக் கொண்டு இதன் பசுமையான நீண்டிருக்கும் தண்டை விளக்குத் தண்டாகக் காண்கின்றார். (இங்கு தண்டு என்பது முன்னே கோடலில் கண்ட துடுப்பு) இத்தண்டு பச்சையாக ஒளிர்வதால் 'மரகதத் தண்டு' என்றார்:

"மரகதத் தண்டின் தோன்றி விளக்கெடுப்ப" 2 ஒளி பரவிற்றாம்.

கொடியில் பல மலர்கள் பூத்திருக்கும் காட்சி வரிசையாக விளக்கு வைத்தது போன்று இருக்குமன்றோ? நாட்டு மக்கள் எப்போது விளக்குவைப்பார்கள்? கார்த்திகையின்போது தானே?

"நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப்
புலமெல்லாம் பூத்தன தோன்றி" 3

—என்னும் மதுரைக் கண்ணங் கூத்தனாரது பாடல் தோன்றியை மருத நிலத்தோடு தொடர்பு படுத்திக் காட்டுகின்றது.

## குருதிப் பூ.

தோன்றி, நிறத்தால் மேலும் முற்றிவிட்டது. நல்ல செஞ்சிவப்பு கொண்டுவிட்டது. இச்சிவப்பு குருதிச்சிவப்பு.

"தோடார் தோன்றி குருதி"யாக (முல். பா: 96)
'குருதிமலர்ந்த தோன்றி'யாகத் (கைந்நிலை;26) தோன்றிப் பெயரிலும்,

1 அகம் : 64 : 6.
2 கல் : 14 : 9.
3 கார்: நா: 29.

'குருதி ஒப்பின் கமழ்தண் காந்த'ளாக (நற்: 399:2)

'காந்தள் குருதி ஒண் பூ' வாகப்

பொதுப் பெயராம் காந்தள் பெயரிலும் 'குருதிப் பூ' என்னும் பெயரைச் சூட்டிக்கொண்டது.

நற்சிவப்பில் திகழும் இதழ்கள் மேல்நோக்கிக் குவிந்து நிற்கும் பாங்கும், அடியிற் சூலகமும், மகரங்களும் சூல்முடியும் தொங்கும் தோற்றமும் சேவற்கோழியின் தலையாகத் தோற்ற மளித்தது மதுரைக் கண்ணங்கூத்தனார்க்கு. அதனை,

*''குவியிணர் தோன்றி ஒண்பூ அன்ன*

*தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்''*[1] – எனச் சேவற் கொண்டைக்கு உவமையாக்கினார். இதனை வழிமொழிவது போன்று திருத்தக்க தேவர்,

*''கொய்ம்மலர் தோன்றிபோல்*

*சூட்டுடைய சேவலும்''*[2] -எனக் கொய்தெடுத்த தோன்றியைக் காட்டினார்.

செம்மை நிறப்பொருள்கள் பலவும் உவமையாகும் போது கேசவனார் செம்மைப் பவளத்தைக் காட்டி,

*''விடுகொடிப் பிறந்த மென்தகைத் தோன்றி*

*பவழத் தன்ன செம்பூ''*[3] -என்று 'செம்பூ' என்னும் பெயரையும் தந்தார். அத்துடன் இதன் தகுதியை மென்மையாகக் குறித்தார். சூளாமணி ஆசிரியரும், ''தோன்றி மென் கொடி''[4] என்றார்.

இத்தகைய தோன்றி மணம் கமழ்வதும் ஆகும்.

*'தோன்றி தோன்ற வெறியேன்றன்றே வீ கமழ் கானம்'*[5] என்றார் மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன்தேவனார்.

---

1 குறு : 107 : 1, 2

2 சீவ. சி:73.

3 பரி : 14 :15, 16.

4 சூளா : சீய : 244

5 அகம் : 164 : 6, 7.

இவ்வாறு வண்ணக் கோலத்துடன் எழில்மிக்கு மணமும் கமழ்வதாயினும் தோன்றியைச் சூடியதாகத் தெரியவில்லை. இருப்பினும் குறிஞ்சிப்பாட்டில் சூடும் பூக்களோடு தொகுக்கப்பட்டிருப்பதால் சூடும் பூவாகக் கொள்ளவேண்டும்.

சூடப்பட்ட தலை தெரியாது போயினும் பெயர் சூட்டப்பட்ட மலை தெரிகின்றது. ஒரு மலைக்குத் 'தோன்றி' என்று பெயர். கருவூர்க்கு மேற்கில் மூன்று கல்லில் உள்ள ஒரு சிறு மலை '*தான்தோன்றி* மலை' எனப்படுகின்றது. இத்தோன்றி மலைக்கு உரியவனாக ஒரு குறுநிலத் தலைவன் ஆண்டான். அவனை,

*''இழுமென இழிதரும் அருவி*
*வான்தோய் உயர்சிமையத் தோன்றிக் கோவே''*[1] —என

ஐயூர் முடவனார் பாடினார். 'தோன்றிப் பூ' மலைப்பெயரில் ஏறி, மன்னன் பெயரிலும் ஊர்ந்தது.

இவ்வாற்றால், தோன்றிப் பூ,
காந்தளின் பொது அமைப்புடையது.
கீழிருந்து விரிந்து குடையளவாகி அதற்கு மேலும்
*மேற்றோன்றியாக மலர்வது.*
மஞ்சள், கிச்சிலி, செம்மை நிறங்களில் விளங்கி
இறுதியில் குருதிச்சிவப்பாகும் செம்பூ.
மணங்கொண்டது.
பெருமளவில் சூடப்படாதது.

## துடிப்பில்லை;
## நெருப்பில்லை.

இங்கு கோடலுக்கும் தோன்றிக்கும் கூறப்பட்ட அடைமொழிகளைக் கொண்டு இரண்டின் வேறுபாட்டையும் அறிதல் வேண்டும். நிறத்தால் வேறுபட்டவை நிற்க,

---

1 புறம் : 399; 33, 34.

கோடலின் காம்பு துடுப்பு எனப்பட்டது;
தோன்றியின் காம்பு அச்சொல்லால் குறிக்கப்படவில்லை.
கோடலுக்குப் பாம்பு உவமை கூறப்பட்டது;
தோன்றிக்குக் கூறப்படவில்லை.
கோடல் குடைப் பூவாகப் பாடப்பட்டது;
தோன்றி பாதி மலர்ச்சியில் அது போன்றிருந்தும் குடைப் பூவாகப் பாடப்படவில்லை.
கோடல் உடைந்த வளையலாக உதிர்வது சுட்டப்பட்டது;
தோன்றி அவ்வாறு சுட்டப்படவில்லை.
இவை நிற்க,
தோன்றி மேல் தோன்றியாகக் காட்டப்பட்டது;
கோடல் மேல் மலர்ச்சியாகக் காட்டப்படவில்லை.
தோன்றி புதரில் பூப்பதாகக் கண்டோம்.
கோடல் அவ்வாறு காணப்படவில்லை.
தோன்றி தோன்றுதல் என்னும்சொல்லால் குறிக்கப்பட்டது.
கோடலுக்கு அச்சொல் அமைக்கப்படவில்லை.

இவை யாவுங் கொண்டு இரண்டையும் தனித்தனியே அடையாளங் கண்டுகொள்ள முடியும். மற்ற வகையில் இரண்டும் ஓரே தோற்றத்தவை.

சுருக்கமாகச் சொன்னால்,
இம்மலரில் வெண்மை நிறங்கொண்டது கோடல்.
செம்மை நிறங்கொண்டது தோன்றி.
ஒரு தனித்தகுதியுடன் பொதுப் பெயரும் ஆவது காந்தள்.

இவ்வாறு மூன்றாகக் காணும்போதும் 'காந்தள்' என்பது பொதுப் பெயராகத்தானே உள்ளது? அவ்வாறிருக்க அதனை ஒரு தனியாகக் கபிலர் பாடியது ஏன்? பிறரும் மற்றவற்றிற்கு வேறுபாடு காட்டியதேன்? எவ்வகையில் காந்தள் தனி ஒன்றாகி இப் பூ மூன்று வகையாகும்? இவ்வினாக்கள் எழுகின்றன. இதற்குக் குறிப்பாக விடை வைக்கும் வகையில்தான் மேலே 'பொதுப் பெயர்' என்று மட்டும் எழுதாது 'ஒரு தனித் தகுதியுடன் பொதுப் பெயர்' எனப்பட்டது.

அத்தனித் தகுதி எது? அத்தகுதியைக் காணக் காந்தட் சொல்லையும், அதன் விளைநிலத்தையும் காண வேண்டும்.

# காந்தள்

## சொல்லில் காந்தள்

காந்தளுக்குரிய பெயர்களில் 'காந்துகம்' என்பது ஒன்று எனக் கண்டோம். காந்துதல்=வெப்பத்தை வெளியிடுதல்—ஒளிபரப்புதல் என்னும் பொருள் தருவது. இச்சொல்,

காந்து—கான்று—கான்—கால் (கால் சீயா முன்—சிலம்பு) —என்னும் வேரடிகொண்டு ஒளிப்பொருளை உணரலாம். இதன் இணைப்புச் சொல்லுருவம் காந்துகம். இதன் அடித்தளப் பொருளிலேயே 'காந்தள்' என்னுஞ்சொல் அமைந்தது. எனவே, பொதுவில் கொடிக்கு இப்பெயர் வழங்கினாலும் மூலத்தால் பூவின் தன்மை கொண்டதாகவே இப்பெயர் அமைந்தது. அப்பூவிலும் சிறந்த நிலைக்குச் சிறப்புப் பெயராகவும் அமைந்தது. இது கொண்டே கபிலர் பொதுவாக இதன் பெயரைக் குறித்த இடத்தும் 'செங்காந்தள்' என்றார். ஆனால், இச்செங்காந்தள் என்னும், அடைமொழி வரும் இடங்களில் மற்றொரு குறிப்பு அமைந்துள்ளது. அக்குறிப்பு யாது?

தோன்றிப் பூ சிவப்பு நிறக் காந்தள். ஆனால், அதன் நிறத்தைக் குறிக்கும் அடைமொழிகளாக உவமப்படும் சொற்களாகிய எரி, குருதி, சுடர் முதலிய சொற்கள் அமைந்திருக்கின்றனவே அன்றி செம்மை அடைமொழிசேர்த்துச் 'செந்தோன்றி' என்று அமையவே இல்லை. ''செம்பூ'' என்றுள்ளது. ஆனால் கோடல் 'வெண்கோடல்' என்று அடைமொழி பெற்றதைக் கண்டோம்.

சங்க இலக்கியங்களில் 'செங்காந்தள்' என்னும் அடைமொழித் தொடர் வருகின்றது. அங்கெல்லாம் சிவப்புநிறத் தோன்றியினின்றும் பிரித்துக் காட்டுவது போன்ற குறிப்பையே காண்கின்றோம். என்ன குறிப்பு?

*''மலைச் செங்காந்தள் கண்ணி தந்தும்''*[1]

—என நற்றிணை

---

[1] நற் : 178 : 2.

'மலை' என்னும் சொல்லை மேலும் அடைமொழியாகவைத்து 'மலையில் பூக்கும் செங்காந்தள்' என்று ஒரு குறிப்பைக் காட்டு கின்றது. இவ்வோரிடம் மட்டு மன்று,

"ஒண்செங்காந்தள் வாழையஞ் சிலம்பு" (நற் : 176 : 6, 7)

"ஒண்செங்காந்தள் கல்மிசைக் கவியும்" (குறு : 185 : 6, 7)

"துறுகல் மீமிசை ஒண்செங்காந்தள்" (குறுந் : 284 : 2, 3)

—என்றெல்லாம் மலைத் தொடர்புடனே 'செங்காந்தள்' சொல்லமைப்பு உள்ளது.

எனவே, 'செங்காந்தள்' என்னும் பண்புத்தொகைத் தொடர் காந்தளுக்குரியதாக அமைந்துள்ளது. இதன் தொடர்பிலேயே அதன் தனித் தகுதி முளைக்கின்றது என்ன அது?

## மலைக் காந்தள்

காந்தள் பூ மலைப் பாங்கில்,

"விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்"[1]
—என்றபடி மலையின் தலை உச்சியிலும்,

"நெடுவரை மிசைஇய காந்தள்"[2]
"நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தள்"[3]
—என்றபடி மலையின் உடற்பகுதியிலும்,

"... ... நறுங்கார் அடுக்கத்துப்
போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்"[4]
—என்றபடி பக்க மலைகளிலும்,

"காந்தட் கொழுமடல் புதுப் பூ ஊதுந்தும்பி
நன்னிறம் மருளும் அருவிடர்"[5]

---

1 குறி பா : 196.
2 பொருந் 83
3 ஐங்: 226
4 அகம் : 288 : 15, 16.
5 அகம் : 188 : 17, 19.

*"... ... விடர்முகை*
*சிலம்புடன் கமழும் அலங்குகுலைக் காந்தள்"*[1]
—என்றபடி மலைப்பிளவுகளிலும்,

*"கடிசுனைக் கவின்ிய காந்தள்"*[2]
—என்றபடி மலைச்சுனை ஓரங்களிலுமாக மலையின் அனைத்துப் பகுதிகளிலும் பூப்பது. பெருமலைகளில் மட்டுமன்றி,

*"... ... உறந்தைக் குணாஅது*
*நெடும்பெரும் குன்றத் தமர்ந்த காந்தள்"*[3]
—என்றபடி திருச்சிராப்பள்ளிக் குன்றிலும் பூக்கும். பூத்து மலையெல்லாம் மணங் கமழ்ந்து "சிலம்பு கமழ் காந்தள்" (ஐங் : 293) எனப்பட்டது. மலையிடமெல்லாம் கமழ்வதால் வண்டுகள் மலைமேல் படையெடுத்துச் சென்று மொய்க்கும். இதனால் மலைக்கே ஒரு பெருமை போன்றும், காந்தள் மலர்ந்தாலே வண்டுகள் படையெடுக்கும் என்பது போன்றும் நாலடியார்,

*"கல்லோங்கு உயர்வரை காந்தள் மலராக்கால்*
*செல்லாவாம் செம்பொறி வண்டினம்"*[4] —என்று நயம்படப் பாடியது.

இவ்வாறாகச் சிறப்பிக்கப்படும் அளவில் காந்தள் மலையில் தோன்றி, மலைக்கு மணம் பரப்பி, எழில் ஊட்டி, மலைநாட்டு மக்களைக் கவர்ந்து, அனைத்து நிலப் புலவர் பெருமக்களையும் ஈர்த்தது. நந்தமிழ் நாட்டில் மலைசெறிந்த பகுதி பழந்தமிழ்ச் சேரநாடாம் இன்றைய மலைஞாலம் அன்றோ? இம்மலைஞாலத்தில் காந்தள் பல்கிப் படர்ந்து மேம்பட்டுத் திகழ்வதால் இதற்கு ஆங்கிலத்தில் 'மலைநாட்டுப் பெருமிதத் தூய மலர்' என்னும் பொருளில் '*MALABAR GLORY LILLY*' எனப் பெயரிட்டனர்.

காந்தள் பெயரில் இவ்வாறு மலைப்பூவாக நிறையப் பூப்பதால் அம்மலைப்பகுதிகள் "காந்தளம் சிலம்பு" (பெரும்பாண் : 372) எனக் காந்தள் அடைமொழியுடன் சிறப்பிக்கப்பட்டது.

---

1 குறு : 239 : 2
2 கலி : 45 : 2
3 அகம் : 4 : 14, 15
4 நாலடி : 283

மேலே காட்டப்பட்ட அடிகளைக் கவனித்தால் மலையின் அடிப்படையோடு குறிக்கப்படும் இம்மலர் 'காந்தள்' என்னும் சொல்லைக்கொண்டே குறிக்கப்பட்டுள்ளதை உணரலாம். இது போன்று கோடல் மலைப்பகுதியாகக் குறிக்கப்படவில்லை. தோன்றியும் அவ்வாறே. இவ்வமைப்பைக்கொண்டு நோக்கினால்,

மலையிடத்துச் சிறப்பாகப் பூக்கும்
செம்மை நிறம் வாய்ந்த இதன் பூ
காந்தள் என்னும் பெயரால் குறிக்கப்
பட்டுள்ளது தெளிவாகும்.

எனவே,

காந்தள் என்பது பொதுவாயினும், 'மலை
நிலத்தது' என்ற அளவில் தனியொரு பூவாகின்றது.

மலைநிலக் காந்தட்பூ தோன்றியைவிட வளமாகவும் சற்றுப் பெரியதாகவும், காம்பு அதைவிட நீண்டதாகவும் இன்றும் காட்சியளிக்கின்றது.

இவற்றையெல்லாம் உட்கருத்தாகக் கொண்டே கபிலர் இதனைத் தனிப்பெயரில் குறித்தார். குறிஞ்சி நிலத்தில் தொகுக்கப்படும் பல நிறப் பூக்களில் இதன் குறிஞ்சித் தன்மை கருதி முதன் முதலில் குறித்தார். பின்னரும் "விண்பெருஞ் சென்னிச்சினை இய காந்தள்" என்றார்.

இதுதான்–மலைப்பூவாகப் பூப்பதுதான் இதன் தனித்தகுதி.

## காந்தள் கை

காந்தள் என்றாலே கை என்று கொள்ளும்படி இலக்கியங்களில் உவமை அமைந்துள்ளது. கையிலும் மெல்லிய மகளிர் கையே உவமையாகும். 'கை' என்று சொல்வதற்கும் மிகப் பொருத்தம் உண்டு.

துடுப்பாக நீண்ட காம்பு முழங்கையிலிருந்து நீண்டிருக்கும் முன்னங்கை போன்றது. அக்காம்பில் மெல்லிய இதழ்கள்வண்ணந் தோய்ந்த விரல்களாகும், இக்கைவிரல் எத்துணை புலவர்களது உள்ளத்தைத் தொட்டுள்ளது?

நத்தத்தனார் : 'செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்' (சிறுபாண்:167)

பரணர் : 'காந்தள் முகை புரை விரல்' (புறம்:144;8, 9)

கூடலூர்கிழார் : 'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்' (குறுந்:167: 1)

கம்பர் : 'கை என மலர வேண்டி அரும்பிய காந்தள்' (கம்ப:வரை:531)

இப்பெரும்புலவர்களது வண்ணனைகளை நோக்கினால். அரும்பு மலரும் நிலையும், கீழ்நோக்கிய விரல் உவமையும் புரியும்,

மிக விரிவடையாமல் இதன் இதழ்கள் கீழ்நோக்கித் தொங்கும் நிலையில் விரல்கள் குவிந்த இரு கைகளைச் சேர்த்து இணைத்துக் கட்டித் தொங்கவிட்டது போன்று காட்சியளித்த தாம், இரு கைகள் எப்போது சேர்த்துக் கட்டப்படும்? சிறைக் கைதியாகும் போது கட்டப்படுமன்றோ! சிறைக் கைதியாவது போரில் தோற்றால் நிகழும். இதனை,

*"போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ, கார்தோன்றும்*
*காந்தள் செறிந்த கவின்"*[1] -எனக் குன்றம்பூதனார் விளக்கினார்.

'கைபோல் காந்தள்-காந்தள் போல் கை' என்றும் இதர விதர உவமையாகப் பேசப்படுவது காந்தள்.

துடுப்பு என்னும் முன்னங்கைமேல் குவிந்து, கூம்பி நிற்கும் இதழ்கள் கைவிரல்களைக் கூப்பி இருப்பதுபோன்றுள்ளன. இக் காட்சி கைகுவித்துக் கும்பிடுவது போன்றதாக,

*"காந்தள்அம் துடுப்பில் கவிகுலை அன்ன*
*செறிதொடி முன்கை கூப்பி"*[2] -என்றார் உருத்திரங் கண்ணனார். இங்கு, கவிதல்என்பதற்கு நச்சர் 'ஒன்றோடொன்று சேர்தல்' எனப் பொருத்தமாக உரை எழுதினார்,

---

1 *பரி:* 18: 34, 35.
2 *பட். பா* : 158, 154,

மலையடுக்கத்தில் இவ்வாறு தோன்றும் காந்தள்,

*''கொடிச்சியர் கைகூப்பி வரைதொழு கைபோல்*
*எடுத்த நறவின் குலையலங்கு காந்தள்''*[1]

—எனப்பட்டது. மலைநாட்டுக் பெண்டிர் மலையைத் தொழுவது ஒரு மரபு. அம்மரபை வைத்துக் காந்தள் தொழுவதாகப் பாடினார். காந்தள் இவ்வாறு தொழும் கையாயிற்று

## காந்தள் வளையல்;
## காந்தள் யானை மருப்பு.

மகளிர் கையான காந்தள், கைவளையலாகவும் அதிலும் உடைந்த வளையலாகவும்,

"உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்" (புறம் : 90 : 1)

''வளைஉடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்'' (மலை : 519) எனக் குறிக்கப்பட்டது. இங்கு வளையல் என்றது மஞ்சளும் செம்மையுமாக வண்ணம் தீட்டப்பட்ட வளையலைக் குறிக்கும்.

வளையலான காந்தள் யானையின் மருப்பாக அமைந்தது. யானை மருப்பு வெண்மையானது. காந்தாளோ செம்மையானது. எவ்வாறு பொருந்தும்? காந்தள் மலர் மருப்பாகக் குறிக்கப்பட வில்லை. அதன் முகையின் முனை செம்மை நிறங்காட்டுவதன்றோ? அதனைக்கொண்டு,

*''கொன்ற யானைக் கோடு கண்டன்ன*
*செம்புடைக் கொழுமுனை அவிழ்ந்த காந்தள்''*[2]

— எனக் கம்பூர்கிழான் பாடக் கபிலரும்,

*''புகர்நுதல் புண்செய்த புன்கோடு போல*
*உயர்முகை நறுங்காந்தள் நாடொறும் புதிது ஈன''*[3]

– என்றார்.

1 கலி : 40 : 11 : 12.
2 நற் : 294 : 6, 7.
3 கலி : 53 : 4, 5.

இருவர் பாட்டிலும் முனை என்றும் முகை என்றும் உள்ளமை கவனத்திற்குரியவை. முகையின் திரட்சியும் முனைக் கூர்மையும் நீட்சியும் ஆகிய வடிவமே யானைக் கோட்டிற்கு உவமையாயிற்று.

இது வடிவு உவமை; முழுதும் வண்ண உவமையன்று.

முனையில்

செம்மை நிறத்தால் ஆன அளவில் உவமை, வண்ண உவமை.

யானையினது முகத்தில் அமைந்த வரிகளுக்கும் புள்ளிகளுக்கும் காந்தட் பூவை உவமையாக்கினர்.

## தீக்குளித்த வண்டு

ஒரு குரங்கு சிறுமலைப்பக்கம் நின்று எதையோ கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது. திடீரென்று கைகளை நெறித்துக் கொண்டு துள்ளித் துள்ளிக் குதித்துக் கத்தியது. அவல ஓசை கொடுத்தது.என்ன நடந்தது?

வளப்பமான இதழ்களையுடையதாகக் காந்தள் மலர்ந்திருந்தது. ஆர்வத்தோடு பறந்து வந்த வண்டு இதழ்களுக்குள்ளே தேன் பருகப் புகுந்தது.

இதனைக் கண்டுதான் குரங்கு,

"... ... .... .. ... ... ...*வண்டு*

*செந்தீ முழுகியது என்று அஞ்சி*"

எழுந்தெழுந்து கைநெறித்ததாம். வண்டு தீக்குளித்ததாகக் கருதிய குரங்கையும், குறும்புக் குரங்கிற்கு எழுந்த அருள் உணர்வையும் ஈங்கோய் என்னும் மலையில் மலர்ந்த காந்தளால் காட்டியது, ஈங்கோய் எழுபது என்னும் நூல். காந்தள் இவ்வாறு நெருப்பாகியது.

ஒரு வண்டு தீக்குளிக்க மற்றொரு வண்டினமாம் தும்பி நீல மணியாகியது. காந்தட் பூவின் தேன் பருக ஒரு தும்பி அதனை ஊதியது. நீண்டிருந்த காந்தளின் துடுப்பு பாம்பின் உடல் போன்றிருக்க, அதன் முகை பாம்பின் தலைபோன்றிருக்க. அதனை அணுகி ஊதிய நீல நிற வண்டு,

*"பாம்பு உமிழ் மணியில்"*[1] தோன்றிற்று ஓர் ஆசிரியர் பெருங் கண்ணனார்க்கு. காந்தளை ஊதும் தும்பியைப் பார்த்த பாம்பு, தான் கக்கி வைத்த மணிதான் பறந்து போயிற்றோ என மருண்டதாம்.[2]

## பாம்புக் காந்தள்

இதனைக் கண்டு சொன்னவர் ஒரு பாம்புப் புலவர். அவர் பெயர் நாகன்குமரனார். பாம்பறியும் பாம்பின் கால் அன்றோ? காந்தள் நிறையப் பூத்த மலையில் ஒரு களிறு படுத்திருக்க அதனை ஆதிசேடன் என்னும் பெரும் பாம்பின் மேல் திருமால் படுத்திருப்பதாகக் கண்டார் உருத்திரங்கண்ணனார்[3]

இவ்வாறு எத்துணை பாம்புகள்?

ஒரு திருப்பத்தில் காந்தளைப் பார்த்த தலைவி ஒருத்தி பாம்பென்று அலறிக் கண் புதைத்தாள். கண் புதைத்தவளை மாணிக்கவாசகர்,

*"கைமலரால் கண்புதைத்துப் பதைக்குமென்*
*கார் மயிலே"*[4] —என்று மயிலாகப் பாடினார். தலைவி மயில்; காந்தள் பாம்பு. மயில் பாம்புக்கு அஞ்சுமோ? பாம்பைக் கண்டால் மயில் கவ்வும் அன்றோ? ஆம் கம்பர் கவ்வ வைத்தார்.

*"காந்தளின் முகைகண்ணிற் கண்டொரு களிமஞ்ஞை*
*பாந்தளிது எனஉன்னிக் கவ்விய படிபாராய்"*[5] —என்று இராமன் சீதைக்குக் காட்டினான்.

இப்பூ மேல்நோக்கிக் குவிந்து இதழ்கள் முழுதும் பொருந்தாமல் பக்கம் புடைத்துத் தோன்றும் காட்சி பாம்பு படம் விரித்துக் கொட்டாவி விடுவது போன்றுள்ளதாகத் திருத்தக்க தேவர் பாடினார்.[6] இவ்வாறெல்லாம் காந்தள் பாந்தளாயிற்று.

---

1 குறு : 239 : 3—5
2 அகம் : 138 : 16—19
3 பெரும்பாண் : 372, 373
4 திருக்கோ : 283 : 3, 4.
5 கம்ப : வனம்புகு : 9
6 சீவ. சி : 165.

# இறைச்சிக் காந்தளும் சிறுகைக் காந்தளும்

ஒரு பருந்து செக்கச்சிவந்த காந்தளைப் பார்த்தது. தனக்குரிய இறைச்சி உணவாகக் கருதி எடுத்தது.[1]

ஒரு சேதா (கறவைமாடு) பார்த்தது. தனக்கும் உணவாகும் என்று தின்றது. தின்னும் போது மலரின் சிவந்த தாதுத் தூள் அதன் முகத்தில் படிந்தது. அதனால் அதன் நிறம் மாறுபட்டது. மேய்ந்து நிறம் மாறி வந்த தாயைக் கண்ட கன்று தன் 'தாயில்லையோ' என மயங்கியதாம்.[2] இது கபிலர் வண்ணனை.

ஒரு புலவர், கொல்லையில் வாழை குலையீன்றிருப்பதைக் கூர்ந்து நோக்கினார். தாரின் முனையில் வாழைப்பூ கொழுத்த மடலோடு உள்ளது. பக்கத்தில் காந்தள் பூத்துள்ளது. அப்பூ இதழ்களில் வாழைப்பூவின் முனை தோய்ந்துள்ளது. இக்காட்சி அவருள்ளத்தில் பதிந்துள்ளது. வீட்டிற்குள் வருகின்றார். அழும் குழந்தைக்குத் தாய் – புலவரது இல்லாள் – பால் கொடுக்க முந்துகின்றாள். குழந்தையை மடியில் கிடத்திக் குழந்தையின் வாயில் தனது பால் மார்பைக் காந்தள் மலர்போன்ற கையால் பிடித்து வைக்கின்றாள். இதனைக் கண்டதும் அப் புலவரது எழுத்தாணி சுவடியில் ஓடுகின்றது:

> *"புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை*
> *முலைபால் உறுக்கும் கைபோல், காந்தள்*
> *குலைவாய் தோயும் கொழுமடல் வாழை"* [3]

–என்னும் அடிகள் மிளிர்கின்றன. அறிந்து மகிழ்கின்றோம். ஆனால், எழுதிய புலவரது பெயரைத்தான் அறிந்து மகிழ முடியவில்லை.

இவ்வாறெல்லாம் காந்தள் இலக்கியத்தில் நல்லாட்சி செலுத்துகின்றது.

---

1 மலை : 145—147

2 நற் : 359 : 1-3

3 நற் : 355: 1, 3

## மணக்கும்; சுவைக்கும்.

நிறத்தாலும் வடிவாலும் மலர்ச்சியாலும் இலக்கியச் சான்று கள் பெற்ற காந்தள் மணத்தாலும் தேனாலும் பெற்ற இடங்களும் உள.

'நாறு காந்தள்' என்றும், 'சிலம்பு கமழ் காந்தள்' என்றும் இதன் மணக்குறிப்பு காணப்படும். இதனைச் சூடியதனால் மகளிர் தம் உடலில் இதன் மணம் ஏறப் பெற்றனர். ஒருத்தி,

கவிழ்ந்த கண்ணோடு நோக்கி, மலர்ந்த காந்தள் நாறுபவளாகத் தலைவனால் குறிக்கப்பட்டாள்.[1]

ஒருத்தி, காந்தள் நாறும் சுடர் நெற்றியை உடையவள்[2] எனப்பட்டாள். இவையிரண்டும் கபிலர் பாட்டின் கருத்துகள்

இம்மணம் கருதியும் இதன் எழில் கருதியும் ஆடவரும் மகளிரும் விரும்பிச் சூடினர். பெரிதும் கண்ணியாகவே சூடப் பட்டது.

"மலைச் செங்காந்தள் கண்ணி" (நற்றிணை : 173 :2)

"காந்தள் அம் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்" (பதிற்று பத்து : 81 : 22) என்பதால் செழுங்குடிச் செல்வரும்.

"காந்தள் அம் கண்ணி கொலைவில் வேட்டுவர் (பதிற்று : 30 : 9) என்பதால் கொலைகார வேட்டுவரும், சூடினர்

கோவலர்,

"*காந்தள் அம் கடிமலர்க் கண்ணி நெற்றிய*"[3] ராக விளங்கியதைத் திருத்தக்க தேவர் குறித்தார்.

முருகனுக்கு உரிய அடையாளப் பூ காந்தள்.

"*சுரும்பு முசாச் சுடர்ப்பூங் காந்தள்*
*பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்*"[4] — எனப் பட்டான்.

---

1 ஐங் : 259: 4, 5.
2 ஐங் : 254 : 2, 3.
3 சீவ. சி : 1848
4 திருமுருகு : 43, 44.

இவ்வாறு எளியோரும், செல்வரும், தெய்வமும் சூடும் மலராகக் காந்தள் விளங்கியது.

இதன் தேனும் குறிக்கப்படும் ஒன்றாக இருந்ததை அறிகின்றோம். தேனில் கொல்லிமலைத்தேன் சுவையுடையது என்பர். அம்மலையில் மலர்ந்த காந்தளின் தேன் குறிப்பிட்டுச் சொல்லப்பட்ட ஒன்று.

'கொல்லி மலையின் மேற்குப் பக்கத்தில் காந்தள் நிறைய மண்டிப் பூத்தது. தேனீக்கள் பாய்ந்து பாய்ந்து கோதித் தேனை எடுத்து அடைகளில் தொகுத்தன. அப்படித் தொகுக்கப்பட்ட தேனடைகள் பல தொகுதி தொகுதியாக இருந்தன' என்பதைக்கூறும் பாடல் இது:

*"... ... ... ... ...கொல்லிக் குடவயின்*
*அகல்இலைக் காந்தள் அலங்குகுலைப் பாய்ந்து*
*பறவை இழைத்த பல்கண் இறாஅல்*
*தேனுடை நெடுவரை"*[1]

—இவ்வாறு மலையின் மேற்கு எனக்குறித்ததும் பலகணமாகத் தேனடை இருந்ததும் ஒருகாலத்தில் காந்தள் தேன் குறிக்கத்தக்கதாக விளங்கியதை உணரலாம்.

இத்தேனைத் தொகுக்கும் தேனீக்கள் இத்தேனில் மிக ஆர்வங்கொண்டவை போலும். மலரைக் கண்டதும் பாய்ந்து வீழ்ந்து ஊதியதாகப் பாடியுள்ளனர்.[2] மலரும் வரை காத்திருக்கப் பொறுக்காது வண்டுகள் இம்மலரைக் கிண்டி மலரச்செய்து தேனைப் பருகும்.[3] மலைப்பகுதிகளுக்குத்தேன் உண்ண விரும்பும் வண்டுகள் 'காந்தள் மலரா விட்டால் செல்லா' என்று கண்டோம். காந்தளில் ஊதிய மணிநிறத் தும்பி நல்லிசையைத் தரும் யாழ் நரம்பின் ஓசைபோன்று முரலுமாம்.[4] இதன் தேனின் விடாப்பிடி ஆர்வத்தால் இதில் ஊதிக்கொண்டே இருந்த தும்பி இசையின் தாளம் கெடும் அளவில் தடுமாறி ஊதுமாம். பல மலர்களில் ஊதியவண்டு இறுதியில் காந்தளின் தேனைப்பருகி[5] இம்மலரிலேயே உறக்கத்தைக் கொள்ளும் என்றனர்.

---

1 நற் : 185 : 7—10.
2 குறு : 265 : 1, 2.
3 நற் : 17, 9—11
4 பதிற் : 67 :29—31 உரைக்குறிப்பு
5 அகம் : 182 : 12, 18.

## வண்டு உண்ணாதா?

மலைக்கடவுளுக்கு இப் பூ உரியதாகையால் 'கடவுட் காந்தள்'1 எனப்படும். கடவுட் பூவில் வண்டு படியாது என்றொரு நம்பிக்கை.

"மலர்ந்த காந்தளினது மலரை, இது தெய்வத்திற்கு உரியதென்று அறிந்தும் அதன்பால் நீங்காமல் ஊதியது தும்பி."—உ, வே. சா.

'காந்தள், வேங்கை கண்டதும் (கடவுளுக்கு உரியன வாய்) 'முதலில் மலர்ந்த பூக்களில் தும்பியினம் படிந்து தாதுண்ணும்' என்றும், 'உண்டால் சிறகு உதிர்ந்து விடும்' என்றும் நூலோர் கூறுவர்'2 – அவ்வை' சு. துரைசாமி.

இஃதொரு நம்பிக்கை மரபு. "சுரும்பு உண மலர்ந்த கடவுட் காந்தள்" என்று சுரும்பு உண்ணவே கடவுட் காந்தள் மலர்ந்ததாக பாடப்பட்டமை, மேற்கண்ட நம்பிக்கையை ஒரு மனநிலையளவிலேயே நிறுத்துகின்றது. இஃது வேங்கைப் பூ விளக்கத்தில் விரிவாக ஆராயப்படும்.

## இலக்கணப் பெயர்

பலவகைச் சிறப்போடு வரவேற்பும் பெற்றுள்ள காந்தள் இலக்கண விதிக்கும் தனது பெயர் சூட்டப் பெற்றது. புறத்திணையில் இதன் பெயரில் ஒரு துறை அமைந்தது. தொல்காப்பியம் அதற்கு,

*"நெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும்"*3

—என "வெறியாட்டயர்ந்த காந்தள்" பெயர் சூட்டியது. மேலும் மடல் ஏறுவதற்குப் பெயராகவும் இக்காந்தள் கூறப்பெறும். இதனை இளம்பூரணர்,

---

1 அகம் : 152 : 17
2 பதிற் : 67 : 29—30 உரைக்குறிப்பு
3 தொல், பொருள் : புறத்திணை : 62 : 1, 2.

"காந்தள் என்பதனை மடலேறுதற்குப் பெயராகக் கூறுவார் உளராகலின் 'வெறியாட்டு அயர்ந்த காந்தள்' என்றார். அன்றியும், காந்தள் என்பது மடலேறுதலான் அத்துணை ஆற்றாளாகிய பெண்பால்மாட்டு நிகழும் வெறி "காந்தள்" எனவும் பெயராம்."[1]

—என்று காமக் களத்தில் காந்தள் பெற்ற இரண்டு இடத்தைக் குறித்துள்ளார். இரண்டில் வெறியாடும் வேலன் "காந்தள் சூடி ஆடுதலில் காந்தள் என்றார்" என நச்சினார்க்கினியர் காந்தள் சூடுவதைக் குறித்தார். இதுபோன்று மடலேறும் போதும் காந்தள் சூடப்படும். எனவே, இரு துறைகட்கும் காந்தள் 'சின்னப் பூ' ஆயிற்று.

காந்தளின் பெயரால் 'காந்தளூர்' என்றொரு ஊர்ப்பெயர் அமைந்தது.

*"காந்தளூர்ச் சாலை கலம் அறுத்தருளி"*
—என இராசராசனது மெய்க்கீர்த்தி சொல்லும்.

காந்தள் வேலியிற் படர்ந்து விளங்கும் ஊர் மலைப்பகுதி

*"காந்தள் வேலி ஓங்குமலை நன்னாடு"*[2] —எனப் பட்டது.

ஊராகவும் மன்னனாகவும் பெயர்பெற்ற இது, செல்வராகவும் சிறப்புற்றது. *"காந்தள் மலராக்கால் செல்லாவாம் செம்பொறி வண்டினம்"*[2] என்று நாலடியார் குறித்ததை முன்னரும் கண்டோம். இதனை ஓர் உவமையாகக் காட்டினார். எதற்கு உவமையாக்கினார்? செல்வம் இருப்பவரை நாடியே உறவினர் சூழ்வர். செல்வம்,

*"இலாஅர்க்கு இல்லை தமர்"*[3] என்று செல்வம் இல்லாதவரை நாடிச் செல்லாமைக்கு உவமையாக்கினார். இவ்வகையில் காந்தள் செல்வர் ஆகியது.

---

1 தொல். பொருள் : புறத்திணை : உரைகள்.
2 குறு : 76 : 1.
3 நாலடி : 283 : 4.

செல்வராகச் சிறந்த காந்தள் சான்றோரை மதிக்கும் மலராக வும் பண்புடையதாகவும் பேசப்பட்டது.

காந்தள் தேனில் ஆர்வங்கொண்ட வண்டு அது மலரும் வரை காத்திராது கிண்டி மலரச் செய்யும். அந்நிலையில் காந்தளும் தான் 'மலர்ந்துகொடுப்பது தனது கடன்' என்று கருதி மலர்ந்த தாம். பண்புடையோர் பழங்காலம்முதல் தாம் அறிந்திருந்த செம்மை நிறைந்த சான்றோர் என்று தமது இல்லத்திற்குத் தாமே வரின் அவரை முகம் மலர்ந்து காட்டி வரவேற்பர்; இடந்தருவர்; விருந்தளிப்பர். இவ்வாறு செய்வதைத் தமது கடமையாகக் கொள்வர். இவரை உவமையாக்கிக் கருவூர்க் கதப்பிள்ளை என்பார்,

*"காந்தளம் கொழுமுகை காவல் செல்லாது*
*வண்டுவாய் திறக்கும் பொழுதில் பண்டும்*
*தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட*
*கடனறி மாக்கள் போல இடன்விட்டு*
*இதழ்தளை அவிழ்ந்த"* [1] து என்று சிறப்பித்தார்.

இவ்வாற்றால்,

பொது பெயர் கொண்ட காந்தட் பூ,

சிறப்பாக மலை நிலத்துப் பூப்பெயருக்குரியது. தலைகீழ் மலர்ச்சியுடையது. இதழ், பசுமை, மஞ்சள், கிச்சிலி, சிவப்பு என அடியிலிருந்து பெற்று மலர்ச்சி நிறைவில் பெரும்பகுதி செம்மை நிறங்காட்டுவது.

மணமுள்ளது.

பலவகையினராலும் சூடப்படுவது.

முருகனுக்குரியது.

சுவைத்தேன் கொண்டது.

— என்றமைகின்றது.

தோன்றியுடனும் கோடலுடனும் பொருத்திப் பார்த்தால், **தோன்றி :** தோன்றியும் செம்மை; காந்தளும் செம்மை.

---

1 குறு : 265 ; 1-5.

இரண்டும் மேல்நோக்கிய வளர்ச்சியுடையவை.
காந்தள் சற்றுப் பெரிதாக வளப்பமானது.
காந்தளின் காம்பு நீள் துடுப்பு எனப்படும்.
தோன்றிக் காம்பு சிறியதாகத் துடுப்பு எனப்படாது.

கோடல்: கோடல் வெண்மை; காந்தள் செம்மை.
இரண்டின் காம்பும் துடுப்பு எனப்படும்.
இரண்டிற்கும் மருப்பும் பாம்பும் உடைவளையும் உவமையாகும்.

மூன்றும் ஒரே அமைப்பில் தத்தம் நிற வளர்ச்சியில் நிறம் மாறுபவை.

## மூன்றின் பொதுமை:

## மூலத்தால் குறிஞ்சி

தொல்காப்பியத்தில் ''தெய்வ உணாவே'' (பொருள் : 18) என்னும் நூற்பா அகத்திணைகளின் கருப்பொருள்களைக் குறிப்பது. இதன் உரையாசிரியர் யாவரும் குறிஞ்சித் திணைப் பூவாக வேங்கை, குறிஞ்சி, காந்தள் எனக் காந்தளையும் குறித்தனர்.

பேராசிரியர் தம் திருச்சிற்றம்பலக் கோவை உரையிலும்

''காந்தள் குறிஞ்சி நிலத்துப் பூ''

''பைங்காந்தள் என்று குறிஞ்சிக்குரிய பூவிலே முடித்தலான்''[1] –எனக் காந்தளுக்குக் குறிஞ்சி நிலத்தைச் சொன்னார்.

பின்னர் தோன்றிய அகப்பொருள் விளக்கமும்,

*''... ...வேங்கை குறிஞ்சி காந்தள்*

*... ......... ... ... ......... ... .........*

*... ...குறிஞ்சிக் கருப்பொருளே"* (20 : 5, 12) –என்றது.

பிற இலக்கண நூல்களும் இவ்வாறே குறித்தன.

---

1 திருக்கோ : 1 உரை

"... ... ... ...குன்றம்
குருதிப் பூவின் குலைக் காந்தட்டே" -என்னும் குறுந் தொகையின் முதற்பாடல் போன்று பிற இலக்கியங்களும் குறிஞ்சித் திணைப்பாடல்களில் இப்பூவை வைத்துள்ளன.

முன்னே காந்தளை மலைப்பூவாகக் காட்டிய பலபாடல் களாலும் இதை உணரலாம்.

எனவே, காந்தட் பூ குறிஞ்சி நிலப் பூ.

ஆயினும் பரவிய அளவில் பிற நிலங்களிலும் இடம் பெற்றது.

"........... ... புணர்கோடல்
பூங்குலை ஈன்ற புரவு"[1] -எனப் புரவாம் முல்லை நிலத்தில் புணர்ந்தது. முல்லை நிலத்து முல்லைப் பூவுடன் தோன்றி பூப்பதை,

"நறுவீ முல்லையுடன் தோன்றி தோன்ற
வெறியேன் றன்றே வீகமழ் கானம்"[2] -என்றுபாடி முல்லை நிலக் கானம் மணப்பதை வெளிப்படுத்தினார் தமிழக் கூத்தன் நாகன்தேவனார்.

"நீரயற் கலித்த நெறிமுகைக் காந்தள்"[3] -எனக் கேசவனார் நீர்நாட்டு மலராகப் பாடியுள்ளார். மருத நிலத்து ஊர்கள் புலம் எனப்படும். "புலமெல்லாம் பூத்தன தோன்றி"[4] எனும் கண்ணங்கூத்தனார் பாடல் இப்பூ மருத நிலமெல்லாம் நிறைந்ததைக் காட்டியது.

நெய்தல் நிலமாம் கடற்கரை மணல் மேடுகளில் கீழைக் கடற்கரை ஓரமாகக் காந்தள் பூப்பதை இன்றும் காண்கின்றோம்.

இவ்வாறு காந்தள் நானிலத்திலும் காணப்படுகின்றது.

ஆயினும் இது மூலத்தால் குறிஞ்சி நிலப் பூவாகும்.

---

1 கார். நா : 11
2 அகம் : 164 : 6, 7.
3 பரி : 14 : 13
4 கார். நா : 26

## காலத்தால் மழை

இப் பூ முல்லை, பிடவம் முதலிய கார்காலப் பூக்களோடு சேர்த்துப் பேசப்படுவது. தனியாகவும்,

காந்தள் : ''கார்க்காந்தள் முகை வென்ற விரல்''
(யாப். வி : மேற்கோள்)

''..............நெறிமுகைக் காந்தள்
கார் மலிந் தன்று'' (பரி : 14 ; 13, 17)

கோடல் : ''தண்ணறுங்கோடல் துடுப்பெடுப்பக் கார் எதிரி
விண்ணுயர் வானத் துறுமுரற்ற'' (ஐந் : எழு :17)

''பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தெனப்
புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்''
(நெடுநல் : 2, 5)

தோன்றி : ''...... மென்தகைத் தோன்றி
பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மணந் தன்று குன்று'' (பரி : 14 : 15-17)
-எனப்பட்டது

இவ்வாறெல்லாம் காந்தளை அதன் வகைகளுடன் கார் காலப் பூவாகக் காண்கின்றோம்.

பருவமல்லாத காலத்தில் பெய்யும் வம்ப மாரியைக் கண்டு உண்மையில் கார்காலம் வந்ததாகக் கருதி மலரும் மலர்களில் இப்பூவும் இடம் பெற்றது.

''காரென் றயர்ந்த உள்ளமொடு தேர்வில்
பிடவும் கொன்றையும் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே''[1] -எனக் காந்தளும் வம்பமாரிக்கு மலர்ந்து தன் மடமையைக் காட்டியது .இதனாலும் கார் கால மலர் என்றுணரப்படும்.

இப் பூ ஆடித்திங்களில் பூக்கத் தொடங்கி மார்கழி வரை பூக்கும். கார்காலத்தில் பூக்கத் தொடங்கி முன் பனிப் பருவம்

---

1 நற். 99 : 8-10

வரை தொடர்ந்து பூக்கும். ஓராண்டில் இஃதொரு பாட்டம். முன் பனிப் பருவமாகிய அற்சிரத்திலும் இப்பூ காணப்படுவதால்,

*"... — ... ... ... காந்தள்*
*நீடிதழ் நெடுந்துடுப்பு ஒசியத் தண்ணென*
*வாடை தூக்கும் வருபனி அற்சிரம்"*[1] —என முன்பனிக் கால வாடைக்காற்றால் இப்பூ ஒசிந்ததைக் காட்டினார் நக்கீரனார்.

இருப்பினும் இது கார்காலப் பூவே.

அகல் விளக்கைப்போல மலர்ந்தது என்றும், சுடர்விட்டது என்றும் குறிக்கப்படுவதால் இது அந்திப்பொழுதில் மலரும் பூ. மாலையில் மலரும் முல்லையுடன் மலர்ந்ததாகப் பாடப்பட்டுள்ளமையும் இது அந்தி நேரப் பூ என்று அறியலாம். உண்மை நிலையும் இஃதேயாக உள்ளது.

அந்தியில் மலரும் இப் பூ மறுநாள் காலையிலும் தன் மலர்ச்சியைத் தொடரும். மறுநாள் மாலையளவில் தன் முழு வளர்ச்சியை எட்டுகின்றது. தன் தன் முற்றிய முழு நிறத்தையும் மறுநாள் அளவில் பெறுகின்றது. எனவே இப் பூ செடியில் மூன்று நாள்களுக்குக் குறையாமல் மலர்ந்து நிற்பதைக் காண்கின்றோம்.

இதுவரை கண்ட யாவற்றையும் தொகுத்தால்,

காந்தள்,

கொடிப் பூ. இலை முனையில் பற்றிப் படரும் சுருள் நரம்புகொண்டது.

குறிஞ்சி நிலப்பூ.

கார்காலப் பூ.

அந்தியில் மலரும் பூ.

நீண்ட காம்பைக் கொண்டது.

தலைகீழ் மலர்ச்சியுடையது.

ஆறு இதழ்களைக் கொண்டது.

பசுமை, வெண்மை, மஞ்சள், செம்மை எனவும்

பசுமை, மஞ்சள், கிச்சிலி செம்மை எனவும் வண்ணப் படிகளைக்கொண்டது.

---

1 அகம் : 78 : 8–10.

நிறம் மாறி முற்றுவது.

காந்தள், கோடல், தோன்றி எனமூன்று வகையினது.

கவர்ச்சியான எழில்கொண்டது.

புலவர் பலரால் பாடப்பெற்றது.

பல உவமைகளுக்குக் களமானது.

நிறைவான இலக்கிய மலர்.

பரவலாக இலக்கியங்களில் மலர்ந்து படிப்போரை உவப்பிப்பது இப்பூ. அருகியதாக இக்காலத்திலும்பூத்துக் காண்போரது கண்களைக் குளிர்வித்து உள்ளத்தையும் உவப்பித்து வருவது. இதனை உணர்ந்த செடியியலார் இதற்குப் 'பேருவப்பை ஊட்டும் தனிச்சிறப்புடையது' என்று பொருள்படும் '*GLORIOSA SUPERBA*' என்னும் பெயரைச் சூட்டினர். மலைப்பாங்கில் இப்பூவைக் காணும் போது உண்மையாகவே நம்மையும் அறியாமல் பேருவப்பைக் கொள்கின்றோம். முன்னே குறிக்கப்பட்ட இதன் ஆங்கிலப் பெயரும் இதன் பெருமையையும் தூய்மையையும் காட்டியதைக் கண்டோம்.

காந்தளைப்பற்றி விரிவாகவும் விளக்கமாகவும் காணப்பட்ட கருத்துகளுக்கு ஒரு முத்திரை குத்தவேண்டும்.

இங்கு இவ் ஆய்வு இலக்கியப் போக்கில்தான் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வமைப்பும் மரபும் இலக்கியச் சான்று ஒன்றைக் கொண்டே எடுக்கப்பட்டன அல்ல. இலக்கியத் கருத்துகளைத் தொகுத்துக் கண்டபோது குழப்பமே மிகுந்தது. 'காந்தள் மூன்றா; ஒன்றா? கோடலுக்குந் தோன்றிக்கும் வேறுபாடுகள் யாவை? காந்தள் தனி ஒன்றாகவும் உள்ளதா?' — என்னும் சிக்கலான வினாக்கள் எழுந்தன. எழுந்த குழப்பத்தையும் சிக்கலையும் போக்கிக்கொள்ள இப்பூவை நேரில் கண்டு ஆராய வேண்டியதாயிற்று. ஒரு பயணத்தை மேற்கொண்டேன்.

மலைஞாலத்து மலையில் குமிழி, தேக்கடி, கோட்டயம் பகுதிகளிலும் அதன் மலைச்சாரல் காடுகளிலும் காந்தள் மலர்ப் பரப்பைக் கண்டும், கூர்ந்து ஆய்ந்தும் வகைகளுக்கான அடையாளங்களைக் காண முடிந்தது. நாகப்பட்டினம் பகுதியில் பரவை என்னும் சிற்றூரின் கடற்கரை மணல்மேட்டில் கார் காலத்தில் பூக்கும் காந்தளை அவ்வப்போது கண்டு ஆய்ந்ததும் பயனளித்தது.

கண்கண்ட இப்பட்டறிவைக்கொண்டு இலக்கியக் கருத்துகளை ஆய்ந்து முறைப்படுத்தி நோக்கியபோது நமது புலவர் பெருமக்களது இயற்கை இயலைப்பற்றிய நுண்ணறிவைக் கண்டு வியக்க நேர்ந்தது. காலம் பல கோலங்களை மாற்றியிருப்பினும் ஒரு சிறிதளவில் பருவ மாற்றம் ஒன்று தவிர மற்ற அனைத்து முனையிலும் இன்று கண்டு எழுதப்பட்டவைபோன்றே சங்ககாலப் புலவர்களது வண்ணனைகளும் உவமைகளும் விளக்கங்களும் விளங்குகின்றன. உள்ளத்தை வியப்பிலும் உவப்பிலும் ஆழ்த்தும் உணர்வுகளைப் பெற முடிகின்றது.

எனவே, இவ்வாய்வு அகச்சான்றுகளுடன் புறச்சான்றுகளையும், நேரிற்கண்டு பெற்ற உணர்வார்ந்த அறிவையும் கருவிகளாகக் கொண்டதாகும். நெஞ்சம் நிறைந்த பணியாகவும் அமைந்தது.

இச்சிறப்பெல்லாம் கருதியே கபிலர் பெருந்தகை குறிஞ்சிப் பாட்டில் இப் பூவை முதற்கண் வைத்தார் எனலாம்.

இதனை முதற்கண் வைத்துச் சிறப்பித்தது போன்றே இறுதிக்கண் வைத்து நிறைவு செய்வதும் ஒரு மேம்பாடு ஆகுமன்றோ? இம் மேம்பாட்டைப் பெற்ற பூ ஒன்று உண்டு.

அஃது, எது?

குறிஞ்சிப் பாட்டில் பூக்களது பட்டியலை நிறைவேற்றும் கபிலர்,

"மாயிரும் குருந்தும் வேங்கையும் பிறவும்"—என வேங்கைப் பூவை வைத்து நிறைவேற்றினார். இந்நிலையாலும் பிற பொருத்தங்களாலும் அடுத்து மேம்பட்டு நிற்கும் அறிமுக மலர்,

வேங்கைப் பூ.

# 2. புலி மலர்
## வேங்கைப் பூ

### மேம்பாட்டு மரம்

மேம்பட்ட அறிமுக மலர்களில் மேலோங்கித் தோன்றுவது வேங்கைப் பூ. ஆம், ஓங்கி வளர்ந்துள்ளதால் மலைக்கு ஓங்கல் என்று பெயர். ஓங்கல் மேலும் ஓங்கி வளர்வது வேங்கை மரம். மலைமேல் பெருமரமாக வளர்ந்துவானளாவிப் பரவித்தோன்றுவது இம்மரம். இதனை, உயர்வு நவிற்சியாகக் கொங்கு வேளிர்,

*"இமையோர் உலகுக்கு ஏணி யாகிய*
*கான வேங்கைக் கவர்சினை"*[1] —என்று

'மேல் உலகத்திற்கு ஏணி' என்றார்.

புறநானூற்றிலும்,

"ஓங்குநிலை வேங்கை" யாகக் (புறம்: 265 : 2) காண்கின்றோம். இம்மரம்வானளாவிவளர்ந்துஓங்கிய நிலைகொண்டது. 'ஓங்கு நிலை' என்னும் அடைமொழி காட்சியளவில் ஓங்கி உயர்ந்து வளர்வதையும் குறிக்கும்; கருத்தளவில் ஓங்கி உயர்வதையும் குறிக்கும்.

பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர் தம்மை "ஓங்கு நிலைப்பரிசிலேன்"[2] எனஅறிமுகப்படுத்திக்கொண்டார். இதற்கு "உயர்ந்த நிலைமையை உடைய பரிசிலேனாகிய யான்" என்று உரை வகுக்கப்பட்டது. எனவே, வேங்கையும் கருத்தளவிலும் காந்தளுக்குச் சமமான இலக்கியச் சிறப்பு பெற்றதாகும்.

இம்மரம் உயரமாகவும், கிளைகள் கவடு விட்டுப் பக்கத்தில் பரவியும் தழைகள் தணிந்தும் பரவி நிற்கும்.

இதில், வேங்கை, உதிர வேங்கை, உரோம வேங்கை, மணிமுத்து வேங்கை எனப் பிற்காலத்தார் மருந்து வகைக் கேற்பவும், பிறவற்றிற்குமாக வகைப்படுத்தினர். இப்பெயர்களுள் உரோம வேங்கை என்பது மயிர் செறிந்த வேங்கைப் புலியைக் குறிப்பதாகலாம். இதன் மறுபெயர்களாகச் சேந்தன் திவாகரம்,

---

1 பெரும் : வத்தவம் : 3 : 68, 69
2 புறம் : 211 : 7.

*"கருங்கால் வேங்கை இறுஞ்சினைப் பொங்கர்*
*நறும்பூக் கொய்யும் பூசல்"* [1] எனவும் பூசலாயிற்று.

*"இன்னா இசைய பூசல் பயிற்ற"* [2] என்றும்,

*"புலி புலி என்னும் பூசல்"* [3] என்றும் பூசலாகக் குறிக்கப்படும்.

'பூசல்' என்றால் 'ஆரவாரமான கூச்சல்' என்று பொருள். மாறுபட்ட போர் இரைச்சலையும் குறிக்கும். இங்கும் 'புலி' என்னும் பொய்யான மாறுபாடு இருப்பதாலும் இது பொருந்தும். ஆனால் இக் கூச்சல் ஒரு பாதுகாப்புக்கும் உதவிக்கும் அழைப்பது போன்றுள்ளதால் 'பாதுகாப்புக்குரிய கூச்சல்' என்னும் பொருளில் "ஏமப் பூசல்" எனப்படும்.

*"தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை*
*மலைமார் இடூஉம் ஏமப் பூசல்"* [4] —என்றார் பெருங்கௌசிகனார். இக் குறும்பு வேலையை இளஞ்சிறாரும் செய்வர். கன்றுகளை மேயவிட்ட இளஞ்சிறார் பரந்த வேங்கை மரத்தடியில் விளையாடுவர். வேங்கை அரும்புப் காலத்தில் அவர்கள் ஆர்வம் பூவின்மேல் விழும். கொத்தாக ஒளிரும் பூங்கொத்தைப் பறித்துச் சூடி விளையாட ஆர்வம் எழுவது இயற்கை. இவர்களால் ஏற முடியாது. ஏற முடியாத நிலையில் மகளிர் கையாளும் முறையைக் கையாள்வர்.

*"மன்ற வேங்கை மலர்பதம் நோக்கி*
*ஏறாது இட்ட ஏமப் பூசல்"* [5] கேட்டு ஆடவர் ஓடிவந்து உண்மையறிந்து பறித்துக் கொடுப்பர்.

இவ் ஏமப் பூசல் மற்றொன்றிற்கும் உதவியாயிற்று. பூக்களைக் கொய்ய இளங்குமரிகள் 'புலி புலி' என்று ஏமப் பூசலிடுவர். அப்பக்கமாக வரும் கட்டிளங்காளை உதவிக்கு ஓடிவருவான்

---

1 மது : 296
2 அகம் : 52 : 4.
3 அகம் : 48 ; 7.
4 மலை : 305,
5 குறுந் : 241 : 4, 5.

குமரிகள் நகைப்பர். அவன் பகைப்பானா என்ன? இதனை வாய்ப் பாக்கிக் கொள்வான். அவனும் நகையாடுவான். இதன் தொடர்பில் காதல் முகிழ்க்கும்; களவு தொடங்கும்; தொடரும்; திருமணத்தில் நிறைவடையும், 'ஏமப் பூசல்'[1] இவ்வாறு மங்கலத்திற்கு உதவும்.

மங்கையர் ஆடவர் உதவியுடன் வேங்கை மலரைக் கொய்யப் பூசலிடாது ஆடவரை அழைத்துப் பாடுவர். அப்பாட்டையும் பாலைப் பண்ணாக — பஞ்சுரமாகப் பாடுவர். இதனை ஓதலாந் தையார்,

*"வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்"*[2] —என்றார். ஆடவர் தணிந்த கிளைகளை வளைத்துக் கொடுக்க மகளிர் பாய்ந்தும் குதித்தும் ஓடி ஓடிக் கொய்வர். வியர்க்க வியர்க்க ஓடி ஓடிக் கொய்வர்.

*"வேங்கை நறுமலர் வெற்பிடை யாம்கொய்து*
*மாந்தளிர் மேனி வியர்ப்ப"*[3] —என வியர்த்ததை ஒருத்தியைக் கூறவைத்தார் மாறன் பொறையனார்.

வேங்கை மலரைக் கொய்ய எழுந்த ஏமப் பூசலுக்குப் 'புலி' என்னும் சொல் பயன்பட்டது. அது 'வேங்கை' என்ற சொற்பொருளின் தொடர்பு. ஆனால், அச்சொல் மட்டும் தொடர்பு அன்று. பூவின் நிறமும் கொத்தான வடிவமும் தோற்றமும் புலியோடு பொருந்துபவை. மரமும் அதற்குத் துணைநின்றது, இவற்றாலும் சொல்லளவாலும் இரண்டையும் மயங்க வைத்ததால் இவற்றின் வேறுபாடு அறிவிக்க அடைமொழிகளைக் கொடுத்தனர்,

வேங்கைமரம் பூத்து நாளை அறிவிப்பதால் "நாள்வேங்கை" 'என்றும், வேங்கைப்புலி பிற விலங்குகளைப் பற்றிக்கொள்வதால் 'கோள் வேங்கை' என்றும் வேறுபடுத்திக் காட்டினர்.

*"நாள்வேங்கை பொன்விளையும் நன்மலை நன்னாட,*
*கோள்வேங்கை போற்கொடியார் என்னையன்மார்"*[4]

—என்றும்

1 அகம் : 48
2 ஐங் : : 311 : 1.
3 ஐந். ஐ : 15:1, 2.
4 திணை. நூ : 20 :1, 2.

"நாள்வேங்கை நீழலுள் நண்ணான் எவன்கொலோ,
கோள்வேங்கை அன்னான் குறிப்பு"[1] —என்றும்
பாடல்களில் அமைத்தனர்.

"பூத்த வேங்கை"; "பூவா வேங்கை" —எனப் பூவாலும்

"பாயும் வேங்கை"; "பாயா வேங்கை"— எனப்பாய்வாலும் வேறுபடுத்தினர். இவ்வடை மொழிகளால் மரம், விலங்கு எனப் பொருள் வெளிப்படுவதால் இதற்கு "வெளிப்படை" என்றொரு இலக்கண அமைப்பும் அமைந்தது.

## மரமா? விலங்கா?

ஓர் ஐயம் எழலாம். வேங்கை என்னும் சொல் முதலில் மரத்திற்கு அமைந்ததா? விலங்குக்கு அமைந்ததா?

சங்க இலக்கியங்களில் மர வேங்கைக்கு மிகுதியான ஆட்சி உள்ளது. பொதுவில் இச்சொல் சங்க இலக்கிய அளவில் 158 இடங்களில் ஆளப்பட்டுள்ளது. இவற்றில் 141 இடங்களில் மர வேங்கையைக் குறிக்க வந்துள்ளது. 17 இடங்களில் விலங்கைக் குறிக்கின்றது. விலங்கைக் குறிக்கும் இடங்களிலும் சில இடங்களில் 'கொடுவரி வேங்கை' என்றும் 'வாள்வரி வேங்கை' என்றும் அடை மொழி பெற்றே குறிக்கப்படுகின்றது. மரமும் விலங்கும் அடுத்தடுத்து வரும் இடங்களில் ஓரிடம் தவிர மற்றெங்கும் 'புலி' என்னும் சொல்லே விலங்குக்குக் குறிக்கப்பட்டுள்ளது.

பிற்காலத்தில் வர வர வேங்கை மரம், பூ பற்றிய ஆட்சி இலக்கியங்களில் குறைந்து கொண்டே வந்துள்ளது. தற்காலத்தில் இடமே அற்றுப் போயிற்று. அருகிவரும் இடைக்காலப் பிற்கால நூல்களிலும் 'வேங்கைப் புலி' 'புலி வேங்கை' என்றும், 'வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடகாரி'[2] என்றும் 'புலி என்னும் சொல்லும் இணைந்தே நிற்பதைக் காணலாம்.

மேலும், சங்க இலக்கியங்களில் காணும் ஏமப் பூசலில் 'புலி புலி' என்றுதான் பூசலிடப்பட்டது. 'வேங்கை வேங்கை'

---

1 திணை: நூ : 81 : 8, 4
2 முது : 15 ; 1.

என்று பூசலிடப்படவில்லை. சங்க இலக்கியங்களில் விலங்கைக் குறிக்கப் 'புலி' என்னும் சொல்லே மிகுதியாக இன்னும் சொன்னால் நிறைவாக (167 இடங்களில்) ஆளப்பட்டுள்ளது.

இவற்றையெல்லாம் ஒருங்கு வைத்து நோக்கும்போது 'வேங்கை' என்னும் சொல் மரத்திற்கே உரியதாகின்றது.

சொல்லமைப்பிலும், 'வெம்மை' என்னும் பண்புச்சொல் 'வெம்' என்னும் பண்படியில் நின்று விகுதிபெற்று (ஈங்கை, காங்கை போங்கை, மூங்கை.) வேங்கை ஆனதாகக் கொள்ள வகையுண்டு. முன்னரும் "வெப்புள் விளைந்த வேங்கை" என்று கண்டோம். மலைப் பாறைகளிடையே பெருவெப்பத்தில் வளர்வதாகையாலும் அவ்வாறு வளரும் பலவற்றுள் இது குறிக்கத்தக்க ஒன்றாக இருத்தலாலும் இச்சொல் அமைந்தது எனலாம்.

மரத்திற்கான வேங்கை என்னும் சொல் விலங்காம் புலிக்கும் ஏறியது எவ்வாறு? பெரும்பகுதி வேங்கைப் பூவின் கொத்தாலும் சிறு பகுதி வேங்கை மரத்தாலும் புலி இயைபுடையதாயிற்று. வேங்கையின் உவமையால் புலிவேங்கை புலப்பட்டதே முழுக் காரணம் எனலாம்.

வேங்கை மரக்கிளை கரிய பட்டையைக் கொண்டது. இக் கருநிறமும் கிளையின் திரட்சியும், புலியின் உடல் மயிர் நிறத்தையும் உருவத் திரட்சியையும் நினைவு படுத்துவனவாயின. கருங் கிளையில் கொத்தாக நீண்டு தவழ்ந்த செம்மை நிற மலர் வரி, புலி உடலில் வரி வரியாக அமைந்த செம்மைக்குப் பொருத்தமாயிற்று (தனிப்பூ சிறுத்தைப்புலியின் உடற்புள்ளிக்குப் பொருத்தமாயிற்று) இரண்டும் சேர்ந்த தோற்றம் புலிக்கு உவமையாக,

"மறப்புலிக் குழூஉக் குரல் (மயிர்) செத்து (என்று
கருதி)"[1] –என்று கருங்கிளையும்.

"வேங்கை ஒள்வீ புலிப்பொறி கடுப்ப"
–எனச் செம்பூவும்

சேர்ந்து

"உறுபுலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கை"[2]

–என்றும்

1 பரிற் : 41 : 7
2 கலித் : 38 : 1.

"புலிக்கேழ் (நிறம்) வேங்கைப் பூஞ்சினை"[1] –என்றும், உவமை காட்டப்பட்டன.

வேங்கை பூத்ததை,

"வேங்கை அம் புலி ஈன்றன"[2] –என்று செங்கண்ணனார் புலியை பெற்றெடுத்ததாகவே பாடினார். இவையெல்லாம் மரக் கிளைகள் புலிகளாகத் தோற்றமளித்தவை.

வேங்கைப் பூ கொத்தாகவும் தனிப் பூவாகவும் உதிரும். அவ்வுதிரல் படிந்து கிடக்கும் இடங்களால் தோன்றும் காட்சிகள் புலிக்காட்சியாயின.

வேங்கை மரத்தடியில் குன்றத்துக் குறவர் சிறு சிறு குடிசை கட்டியிருப்பர். அது குரம்பை எனப்படும், அதன்மேல் வேங்கைப் பூங்கொத்துகள் வரிவரியாக உதிர்ந்து படிந்திருக்கும். கருமை யான குரம்பைக் கூரையும் அதன்மேல் செம்மையான பூங்கொத்தும் சேர்ந்த அமைப்பு புலி நிற்பது போன்றிருந்ததாம். அதனைப் பார்த்த யானை ஒன்று புலி என்று அஞ்சியது.[3] இவ்வாறு குரம்பை, புலி ஆயிற்று.

வேங்கை மரத்தடியில் கரும்பாறைகள் சற்று நீட்சியாக அதிக உயரமின்றிக் கிடக்கும். அவற்றின் மேல் வேங்கையின் விரிந்த பூங்கொத்து விழுந்து கிடக்கும். இக்காட்சி,

"இரும்புலி வரிப்புறங் கடுக்கும்"[4]

–இது கரும்பாறை கரும்புலி ஆனகாட்சி.

வேங்கை மரத்தடியில் மட்டமான தரைமேல் வேங்கை மலர் கள் வீழ்ந்து சிதறிக் கிடக்கும். இக்காட்சி புலித்தோலை விரித்துப் போட்டது போன்றிருந்தது.[5] இது, தரையே புலித்தோலான காட்சி.

புலியைப் பெற்ற வேங்கை புலிக்குட்டியையும் பெற்றது மிகச் சிறிய கரும்பாறைக் கற்கள் முட்டிக் கொண்டு கிடக்கும் இதனைத் 'துறுகல்' என்பர்.

---

1 அகம் : 228 : 8
2 நற் : 389 : 1
3 அகம் : 12 ; 9–11
4 புறம் : 202 : 20
5 அகம் : 205 : 19, 20.

*"கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையில் தோன்று"*[1] மாம்.

கல்லும் வேங்கையால் இவ்வாறு புலியாகத் தோற்றமளித்தது; புலிக்கு உவமையாகவும் அமைந்தது. ஒரு புலிக்குட்டி தாய்ப் புலிக்குப் பக்கத்தே கிடந்தது. அக்குட்டி வேங்கைப் பூங்கொத் துடன் கூடிய தழைக்கொத்து போன்று இருந்ததைச்[2] செழியனார் பாடினார்.

ஒரு குட்டி மட்டுமன்று, இதோ மூன்று குட்டிகள் தனித் தனியே கிடக்கின்றன. இன்னும் மயிர் காணவில்லை. தோல் மூடிய இறைச்சித் துண்டுகள்போல் தனித்தனியே கிடக்கின்றன. இதனை, வேங்கைத் தழைக்கொத்துகள் மூன்றுசிறு சிறு பூங் கொத்துக்களுடன் தனித்தனியே கிடப்பன போன்றிருந்தது என்றார் அவ்வையார்.[3] பாட்டியும் அச்சமில்லாது எங்கிருந்தோ புலிக்குட்டிகளை, அதிலும் குகை முடுக்குக்குள்ளே கிடந்த வற்றைப் பார்த்திருக்கிறார்.

வேங்கைப்புலி, வேங்கை மரமாகியதையும் காண்கின்றோம். வண்டு ஒன்று வேங்கைப் பூவின் தேனை உண்ண ஆர்வங் கொண்டது. பறந்து வந்த வழியில் ஒரு வரிப்புலி படுத்திருந்தது. அதன் தோற்றம் அதற்குப் பூத்த வேங்கைக் கிளையாகத் தோன்றிற்று. வண்டு,

*"வேங்கையஞ் சினையென விறற்புலி"*[4] யைச் சுற்றியது.

வலிமை வாய்ந்த ஆண் புலி ஒன்று. மதம்பொழியும் யானை ஒன்றை எதிர்த்தது. அதன் அழகிய முகத்திற் பாய்ந்து தாக்கிற்று. தாக்குதலை ஏற்ற யானை தன் வெள்ளிய கோட்டால் புலியின் உடலில் குத்தியது. அதன் மருப்பு குருதிக்கறையாகச் சிவத்தது. குத்துப்பட்ட புலி பின்வாங்கிவந்து குகையிற் சோர்ந்து கிடந்தது. வாடிக்கிடந்த புலியை ஈழத்துப் பூதன் தேவனார் என்னும் புலவர்,

---

1 குறு : 47 : 1, 2
2 நற் : 383 : 1, 2
3 அகம் : 147 : 1—4
4 கலி : 46 : 5

'கோடைக்கால வெப்பத்தால் உலர்ந்து காய்ந்து
வாடிய வேங்கையின் கிளைபோலக் கிடந்தது (புலி)'[1]
—என்றார்.

புலி இவ்வாறு உருவத் தோற்றத்தால் வேங்கையானது போன்று உறுமும் ஒலியாலும் வேங்கையோடு தொடர்புடைய தாகப் பாடினார் மாங்குடி மருதனார். முன் கண்ட ஏமப் பூசல் ஆரவாரமாக எழுமன்றோ? இவ் ஆரவார முழக்கம் போன்று களிறு ஒன்றைத் தாக்கி முழங்கிய புலியின் முழக்கம் இருந்ததாம். [2]

## மரத்தைக் குத்தும் மதயானை

யானைக்கும் புலிக்கும் பிறவிப் பகை. ஒன்றையொன்று நினைந்தாலே தாக்க எழும். ஒரு யானை.

*"புதுவதாக மலர்ந்த வேங்கையை*
*அதுவென (புலியென) உணர்ந்து அதன் அணிநலம்*
*முறுக்கிய"*[3] தாம்.

'களிறு அம்பால் அடிபட்டபின்னர் ஊக்கங்கொண்டெழுந்து தன் வலிமையை நிலைநாட்டும்'[4] என்றார் திருவள்ளுவர் இது களிற்றின் இயற்கைத் தன்மை. புலியால் தாக்கப்பட்ட யானை அப் புலியைத் தேடியும் அலையும். எப்புலியானாலும் தாக்கும். புலி போன்று தோன்றும் எதையும் தாக்கும். தாக்கப் புலியைத் தேடி அலைந்த களிறு ஒன்று பூத்த வேங்கை மரத்தைப் பார்த்தது. பூங்கொத்தோடு தோன்றும் அதன் கிளை, மரத்தின் மேல் புலி ஏறி இருப்பது போன்று பட்டது. சினம் முற்றிய களிறு வேங்கையின் அடிமரத்தில் கோட்டால் குத்தியது. பச்சை மரத்தில் பாய்ந்த மருப்பை இழுக்க முடியாமல் கத்தியதை நல்லந்துவனார் பாடியுள்ளார்.[5]

---

1 குறுந் : 843 : 2-6,
2 மது. கா : 296–298
3 கலி : 49 : 1, 6
4 "புதையம்பிற் பட்டுப் பாடூன்றுங் களிறு" —குறள் : 597
5 கலி : 88 : 6—9

இதுபோன்று வேங்கை மரத்தைப் புலியாகக் கருதிய ஒரு யானை வேங்கை மரத்தையே தாக்கியது பூவுடன் கூடிய பெருங் கிளையைத் தும்பிக்கையால் முறித்தது. முறித்ததைப் பிளந்தது. பிளந்ததைப் பூங்கொத்துடன் தனது மிகப்பெருந்தலையில் சார்த்திக்கொண்டது. ஒரு பிளிறலுடன் வீர நடைபோட்டது. இந்நடையையும் தலையில் சார்த்திய வேங்கைக் கிளையையும் இணைத்து,

'பகைப்புலத்தைத் தாக்கப் புறப்பட்ட படை வீரர் தண்டு என்னும் போர்க்கருவியை (கதை என்னும் படை) தோளில் ஏந்தி வீர நடைபோட்டது போன்று இருந்தது'[1] —எனப் பரணர் பாடல் காட்டுகின்றது.

## உணவு வேங்கை

புலிப் பகையாக வேங்கையுடன் தொடர்புகொண்ட யானைக்கு வேங்கை ஓர் உணவு விடுதியாயிற்று. வேங்கைப் பூவையும் தழையையும் யானை உணவாகக் கொள்ளும். சிவந்த பூங்கொத்தை அது உணவாகக் கொள்வதை நெருப்பைப் போன்ற உணவுருண்டை (கவளம்) என்றனர்.

"..................கருங்கால் வேங்கை

*எரிமருள் கவளம் மாந்திக் களிறு*"[2] தன் தும்பிக்கையைத் தன் நெற்றியில் உயர்த்தி நீட்டி நின்றது. நுதலில் கிடந்த கை, கல்லின்மேல்ஊரும் பாம்புபோல் தோன்றியதாம். இது மாமூலனார் எழுத்தோட்டம்.

'யானை' வேங்கைப்பூவைத் தான்உண்ணுவதுமட்டுமன்று;

"தன் கன்றோடு இளமையான பெண் யானையையும் தும்பிக்கையால் தழுவி அழைத்துச் சென்று, வேங்கையின் பெரிய கிளையை முறித்து, அதிலுள்ள பொன் போன்ற பூங்கொத்தைக் கவளமாக ஊட்டும்.'[3] இது பாலை பாடிய பெருங்கருங்கோ கருத்தோட்டம்.

---

1 பதிற்று : 41 : 7-13
2 அகம் : 349:10-14
3 நற் : 202 3-6.

உணவளித்த உணவு விடுதி ஓய்வெடுக்கப் படுக்கையறையும் வழங்க வேண்டுமன்றோ? வழங்கியது. வழங்கிய இடம் தனது அடிமரத்திடந்தான். ஆனால், அது மண்தரையானாலும் மணியறையாயிற்று. அதிலமைந்த படுக்கை மெத்தென்ற அமளி. 'கமகம' என மணங்கமழும் அமளி. தனது மெல்லிய பூக்களைச் சொரிந்து பரப்பிய படுக்கை. மென்மைக்கும் மணத்திற்கும் சொல்லவா வேண்டும்! இன்பமாகத்துயில் வருவதற்கு இனிய இசைக்கும் ஏற்பாடு செய்தது வேங்கை. பூக்களில் மொய்த்த வண்டுகள் நீலாம்புரி பாடின. திருமங்கையாழ்வார் பாடுகின்றார்:

*"கடிகொள் வேங்கையின் நறுமலர் அமளியின்*
*மணியறை மிசைவேழம்*
*பிடியினோடுவண்டு இசைசொலத் துயில்கொளு"***மாம்**[1]

வண்டு இசை சொல்லியதாம்.

## வண்டு மூசாதா?

வண்டு இங்கே வந்தது ஏன்? மலரென்றிருந்தால் வண்டு வராமலோ போகும்? அதிலும் பெயர்பெற்ற வேங்கை மரம். கொத்துக் கொத்தான பூக்கள். இதனை வண்டு ஒதுக்கிவிடுமா என்ன? திருமங்கையாழ்வார் பாடியதுபோன்றே வேங்கையில் வண்டு மொய்ப்பதை,

*"குறுஞ்சிறைப் பறவை (சுரும்பு)*
*வேங்கை விரி இணர்ஊதி"*[2] –என்றும்,
*"கணிநிறை வேங்கை மலர்ந்து வண்டு ஆர்க்கும்"*[3]
–என்றும்

*"விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்"*[4]

–என்றும் பாடினர். முன்னரும் வண்டு வேங்கைப் பூவெனப் புலியைச் சுற்றியதைக் கண்டோம். அதே வண்டு யானையின் முகத்

1 பெரிய திரு · வாலி : 3 : 3, 4.
2 அகம் : 182 : 11, 12.
3 திணை ஐ : 9 : 3, 4.
4 அகம் : 88 :1.

திலமைந்த வேங்கைப் பூப்போன்ற புள்ளிகளையும் சுற்றியதாம். ஆனால், நிகண்டுகள்,

"சண்பகமும் வேங்கையும் வண்டு உணா மலர்"[1] – என்கின்றன. பிற்கால நூலான பண்டாரமும்மணிக்கோவையும்,

"சுரும்பு ஊண் வெறுத்த துதைமலர் வேங்கை"[2] –என்கின்றது. இதற்கு உ. வே. சா. அவர்கள் "வேங்கை மலரில் வண்டு விழாதென்பர்" எனக்குறித்தார். பிற நிகண்டுகள் வேங்கையில் வண்டுபடியாது என்றன. இவ்வாறு கூறுவானேன்?

பொதுவாகக் 'கடவுளர் இடம்பெற்ற மலர், இடம் முதலியவற்றில் வண்டு மொய்க்காது' என்றொரு மரபு உண்டு. காந்தள் முருகனால் விரும்பப்பட்ட நிலையில் 'சுரும்பு மூசாச்சுடர்ப்பூங் காந்தள்'[3] எனப்பட்டது. மணிமேகலையில் 'புத்த பீடிகையின் மேல் வைக்கப்பட்ட அரும்பு மலரும்; மலர்ந்தது என்றும் வாடாது; அதில் வண்டும் மொய்க்காது' – என்றும் உள்ளன.

இவற்றின் நோக்கில் பார்த்தால், வேங்கை ஒரு வகையில் தெய்வத் தொடர்புடையதாகக் கொள்ளப்பட்டதை எண்ணலாம்.

கழுவுள் என்பான் ஒரு குறுநிலத் தலைவன். அவனுக்கு உரிய ஊர் காமூர் என்பது. அவ்வூரில் இருந்த ஒரு வேங்கை மரம் பூதத்தால் தரப்பட்டதாகக் கருதினர்.[4] இதனாலும் வேங்கை தெய்வத் தொடர்பானதாகலாம்.

கற்புடைத் தெய்வம் கண்ணகியார் தம் இறுதிப் பதினான்கு நாள்கள்,

"எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதணத்து ஆங்கண்
ஏதிலாளன் கவலை கவற்ற
ஒருமுலை யறுத்த திருமா வுண்ணி"[5] யாக இடம்

பெற்றதை மதுரை மருதன் இளநாகனாரும் குறித்துள்ளார்.

---

1 பிங். நி : 2767
2 பண். மு. கோவ் : 14 : 5
3 திருமுருகு : 43.
4 அகம் : 365 11, 15.
5 நற் : 216 : 6, 9.

கண்ணகியார் தொடர்பில் வேங்கை தெய்வத் தொடர்புடையதா கின்றது. ஒன்றை இங்கே நோக்கத்திற்கொள்ளலாம். கண்ணகியார் வரலாற்றிற்குப் பின்னர் அவரோடு தொடர்புடைய பல நிகழ்ச்சி கள் தமிழ்நாட்டார்க்கு வாழ்வியல் மரபுகள் ஆயின. அவ்வகையில் இவ்வேங்கையும் மதிக்கத்தக்க ஒன்றாயிருக்கும். அதனால், வண்டு மூசாது என்னும் எண்ணம் எழுந்தது. சங்க இலக்கியங் கள் வேங்கையில் வண்டு படியாததாகக் காட்டவில்லை. இது கொண்டு நோக்கினும் சங்க காலத்திற்குப் பின்னர் இந்நம்பிக்கை எழுந்திருக்கலாம் என்று கொள்ளலாம்.

இதன் தொடர்பில் மற்றொன்றை இங்கு நினைவு கூற வேண்டும். வேங்கைப் பூவிற்கு நிறத்தையும் மணத்தையும் தாதையும் குறித்திருப்பது போன்று தேனைக் கொண்டிருப்பது பற்றிச் சிறப்பான குறிப்பு ஏதும் இல்லை. ஆயினும் வண்டு படிந்ததாகப் பல இடங்கள் உள்ளமை வேங்கை வண்டு மூசும் மலர்தான் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## தாளும் தித்தியும்

இவ்வேங்கைப் பூவின் தாதுத் தூள் பொன் நிறமானது. மலர் மங்கையர் சுணங்கிற்கு உவமையானது போன்று இத்தாது அவர்தம் 'தித்தி'க்கு உவமையாயிற்று. 'தித்தி' என்பது சுணங்கு போன்று ஓர் அழகுத் தேமல். 'சுணங்கு' இதழ்கள் விரிந்த மலர் போன்று அகன்று படரும். 'தித்தி' என்பது புள்ளிகளாகத் தோன்றும். சுணங்கு மார்பிடங்களில் படரும். தித்தி உடலில் எங்கும் பலபுள்ளியாகத் தோன்றும். இத்தித்தி,

*"...................நெடுந்தால் வேங்கை*
*அம்பூந் தாது உக்கன்ன*
*நுண்பல் தித்தி"*[1] —என வேங்கைத் தாது உதிர்ந்தது போன்றது. தித்திக்கு உவமையான இத்தாதை மகளிர் பொன் னிற அழகு கருதித் தம் மார்பிடங்களில் "விரிமலர் வேங்கை நுண் தாது அப்பிக்"[2] க் கொண்டு காட்சிக்குரியவராகுவர்.

---

1 *நற்* : 157 : 8—10   2 *திருமுருகு* : 86.

இத்தாதைத் தாமே மார்பிடங்களில் அப்பிக்கொள்வதை விடத் தம் காதலர் கையால் சொரிந்து தூவுவது ஒருக் காமக் களியாட்டாகும்.

ஒரு காதல் மங்கை, புலிபோலப் பூத்த வேங்கைப் பூங் கொத்தைக் கொய்தாள். ஒளி மிக்க அப்பூங்கொத்தில் பதிந்திருந்த தாதுத் தூளை உகுத்தாள். உகுத்தவள் அண்டி நின்ற காதல னிடம் நீட்டினாள். அவன் தன் கையில் அதனை ஏந்தினான். வேங்கை தந்த தூளை அவளது மார்புச் சுணங்கு என்னும் வேங்கையோடு படியுமாறு அவளது கொங்கைக் குவட்டின்மேல் பெய்தான். அவன் கையால் பெய்துகொள்வதில் அவளுக்கொரு அவா. இவ்வாறு எழுதிக்காட்டுவதிலே சிவஞானமுனிவருக்கு ஒரு புலமை அவா. அவாவில் வெளிவந்த பாடல்:

*"புலியுரு மருளப் பூத்த பூந்துணர் வேங்கை ஒள்வீப்*
*பலபறித் துகுத்த தாது பைந்தொடி மகளிர் நீட்ட*
*அலர்கரத் தேந்தி அம்பொற் சுணங்கெனும் வேங்கையோடும்*
*குலவுவெங் களபக் கொங்கைக் குவட்டின்மேற் சொரியப்*
*பெய்தார்"[1]* —என்பது

மாந்தர்தம் வாழ்வியலில் இவ்வாறெல்லாம் பங்குகொண்ட வேங்கை கடவுளர்க்கும் உரியதாயிற்று.

இவ்வேலன் வேங்கை மலரும் சூடுபவன். குமரமுருகன் குன்றக் குரவர்தம் குலதெய்வம். குறக்குமரி தன் திருமணம் விரைந்து நிறைவேற வேண்டி,

"மன்ற வேங்கை மலர்சில கொண்டு

மலையுறை கடவுள் குலமுதல் வழுத்"துவாள். (ஐங்குறு நூறு : 259 : 2, 3.) இவ்வகையில் காதல் துறைப் பூசைக்கு வேங்கைப் பூ வழிபாட்டு மலராயிற்று.

சிவபெருமான் "கணிவளர் வேங்கையோடு கடிதிங்கள் கண்ணி"[2] சூடியவன். சிவ பூசெய்க்கு வேங்கைப் பூ பயன் படுத்தப்படும். திருமாலிய ஆழ்வார்கள் வேங்கையைப் பாடி யுள்ளனர். அருகக்கடவுளை வழிபட எழுந்த சீவகன்,

1 காஞ். பு - திருக்கண் : 256.
2 அப். தே. பொது

''சினைய செண்பகம் வேங்கையோடு''[1] கொண்டு வழி பட்டதைத் திருத்தக்கதேவர் காட்டியுள்ளார்.

## இலக்கிய வேங்கை

இத்துணை சிறப்புற்ற வேங்கையின் பெயரைச் சூடிக் கொண்டவை உள. தமிழகத்திற்கு வடக்கே ஒரு நாட்டுப் பகுதி 'வேங்கை நாடு' எனப் பெயர்பெற்றது. ''வேங்கை வளநாடன்'' என அந்நாட்டு மன்னன் வீரசோழியத்தில் குறிக்கப்படுகின்றான்; கல்வெட்டுகளும் பேசும். 'வேங்கையூர்' என்றொரு ஊர் மேற்கில் உளது. ''விறல்மிகு வேங்கை வெற்பு'' என வேங்கையின் பெயர் சூடிய மலையொன்றைப் புறநானூறு (336:6,7.) சுட்டுகின்றது.

கானப்பேரெயில் என்னும் ஊர்த்தலைவன் ''வேங்கை மார்பன்'' எனப் பெயர்கொண்டவன். (இங்கு வேங்கை புலியைக் குறிப்பதாகவும் அமையலாம்.)

இலக்கணத்தில் பொதுமொழிக்குச் சான்றாக வேங்கை என்னும் சொல்லும் இடம்பெற்றது. வேங்கை என்று தனி மொழி யாகவும், வேம்+கை எனத் தொடர்மொழியாகவும் அமையப் பயன்பட்டது.

வேங்கையைப்பற்றிய கருத்தை இத்துடன் நிறுத்தினால் குறை நிற்கும்; நிறைபெற்றதாகாது. ஏனெனில் புலவர் பெரு மக்கள் பார்வையில் வேங்கை சுவையான கற்பனைகளை படைத் துள்ளது. அவற்றைக் காட்டாவிடில் இலக்கியம் சிணுங்கும்.

வேங்கையோடு புலியும் யானையும் கொண்ட இயைபை விடத் தோகை மயில் கொண்ட இயைபு அழகானது. மலை மயில் வேங்கை மேல் தங்குவது.

கபிலர் பார்வை, வேங்கை மரத்தில் ஏறியது.

ஒருகிளையில் தோகைமயில் நிற்கின்றது. பொன்னெனப் பூத்த மலர்க்கொத்துகளின் சூழலில், அதனை,

---

1 சீவ. சி :1608 : 3.

"*இழையணி மகளிர் போலத் தோன்றும்*"[1] —என்றார்.
தொடர்ந்து தன்பார்வையை அம்மயிலின் மேல் செலுத்தினார் போலும். அது தன் அலகால் பூக்களைக் கோதும் தோற்றத்தைப்,

"*பூக்கொய் மகளிரின் தோன்றும்*"[2] —என்றார்.

கொல்லன் அழிசி என்பாரும், "பூக்கொய் மகளிராக"[3] மயிலைக் கண்டார் மருதன் இளநாகனார் பார்வையில்,

"*சூறும் பொறை அயலுறுநெடுந்தாள் வேங்கை*
*மடமயில் குடுமியில் தோன்றி*"*யது*[4] இது குடிசையை மயில் உடலாகவும். வேங்கைப் பூங்கொத்தை மயிற் குடுமியாக வும் கண்ட காட்சி போலும்.

"பூக்கொய் மகளிரில் தோன்றும்" —என்றவர் தொடர்ந்து தன் பார்வையை விரிவாக்கிப் பறவைப்பார்வையாக்கினார். அப்பகுதி மலைகளின் சூழலைத் அப்பார்வைக்குள் வைத்தார்.

'இரண்டு மலைகள் எதிர்எதிராக உள்ளன. இரண்டி னின்றும் இரண்டு அருவிகள் விழுகின்றன. இடையிலே மாணிக்க நிறப்பாறை. அதில் ஒரு பெரு வேங்கை மரம் வானளாவி நிற்கின்றது. அதிரும் அருவியின் நீர்த்துளிகள் வேங்கையின்மேல் விழுகின்றன. அவைபட்டு வேங்கை அரும்புகள் மலர்களாகின்றன'

இக்கருத்தமையப் பாடியப் பாட்டு இது:

"*எதிர்எதிர் ஓங்கிய மால்வரை அடுக்கத்து*
*அதிரிசை அருவிதன் அஞ்சினை மிசைவீழ,*
*முதிர்இணர் ஊழ்கொண்டு (மலர்ந்த்) முழவுத்தாள்*
*எரிவேங்கை*"[5]

கண்ட காட்சியைக் கவிதையாக்கினார்; காட்சியின் உள்ளுறையாக இல்லறக் கருத்து ஒன்றை பொதியவைத்துள்ளார். பொதியை அவிழ்த்தால்,

---

1 ஐங் : 294 : 2
2 ஐங்: 297 : 2
3 குறு. 26; 8
4 அகம்: 363 : 6, 7
5 கலி 44 : 2— 4,

| காட்சி | : | கருத்து |
|---|---|---|
| எதிரெதிர் இருமலைகள் | — | தலைவன், தலைவன் சுற்றத்தார்; |
| அவற்றிடை அடுக்கம் | — | தலைவன் மனை; |
| வீழும் இரண்டருவி | — | இரு சுற்றத்தார் செய்யும் சிறப்புகள் ; |
| கொத்து மலர்ந்தது | — | தலைவி மக்களைப் பெற்றமை; |
| வேங்கை | — | தலைவி |

—என்னும் உள்ளுறைக் கருத்தில் வேங்கையை இல்லறத் தலைவிக்குப் படைத்தார். இதற்கு விளக்கம் எழுதிய நச்சினார்க்கினியர்,

"வேங்கை சிறப்பெய்தினாற்போலத்
தலைவியும் நின் இல்லின்கண் வந்து சிறப்பெய்துமாறு"

- என்றார். இதனால் மலைச்சூழலில் வேங்கையின் சிறப்புடைமை வெளிப்படுகின்றது. வேங்கை இல்லறம் ஏற்கநிற்கும் மங்கல மங்கையாகக் கபிலர் கருத்தால் காணப்பட்டது.

காப்பியாற்றுக்காப்பியனார் பார்வையிலும் இதுபோன்று வேங்கை மெல்லிய மகளிர் எழில், மேலும் சிறக்க விளங்கும் பொன் இழைகளை அணிந்ததற்கு

*"மலர்ந்த வேங்கையின் (போல) வயங்குழை அணிந்து"* [1]

—எனப் பொன் கொத்தாகப் பூத்த வேங்கையைச் சொன்னார். இங்கு வேங்கை மங்கல மடந்தை.

வாழ்நாளெல்லாம் மங்கல மடந்தையாகவே நிறைந்துவிடுவோரும் உளர். கழிகல மகளிராகிக் கைம்பெண்ணாவோரும் உளர். வேங்கை அப்பங்கிற்கும் ஈடு கொடுத்தது.

கோடை நீடிய காலம். சுனையும் வரண்டு அருவி நீரும் விழவில்லை. கடுங்கோடை. பெரும் வரட்சி தாக்கியது. கன்று காலிகள் அலைந்தன, பால்தரும் ஆவினங்களுக்கும் இரையில்லை அக்காலத்திலும் தழைத்திருந்தது வேங்கைமரம். ஆயர் ஆவினங்களை ஓட்டிச்சென்று தமது கூரிய வாளால் பூக்களுடன் தழை

---

1 *பதிற் :* 40:22,

களைக் கழித்தனர். கிளைகளும் வீழ்ந்தன, இந்நிலையில் கழிக்கப் பட்டு நிற்கும் வேங்கையைக் கருங்குழலாதனார் என்னும் புலவர் பார்வையிட்டார். நெஞ்சில் இது அவருக்கு அவலக் காட்சியாகப் பதிந்தது. சில நாள்கள் ஓடி மறைந்தன. இக்காட்சி நெஞ்சினின் றும் மறையவில்லை.

சோழநாட்டை ஆண்ட பெருமன்னன் கரிகாற்பெருவளத் தான் திடீரென இயற்கையெய்தினான். நாடே கவன்றது. கவன்ற புலவரும் அரண்மனைக்கு ஓடினார். அவலக்காட்சிகள் நெஞ்சைப் பிழிந்தன. கரிகாலனது உரிமை மகளிர் மங்கல அணி முதலிய அணிகளையும் பட்டுடைகளையும் களைந்து அவலக் கோலத்தின் கிடந்தனர்.

பூ இழந்த தலையைப் பார்த்தார்; இழந்த வேங்கையின் உச்சி நினைவில் எழுந்தது. பொன்னணிகலன்கள் இழந்த கழுத் தைப் பார்த்தார்; பொன்னிறப் பூங்கொத்தை இழந்த வேங்கை யாகப் பட்டது. மணிமுத்து மாலை களைந்த தோற்றம், மணி யரும்பை உதிர்த்த மரமாகப்பட்டது. பட்டாடை வெறுத்த இடை, பசிய தழைகளைக் கழித்த வேங்கையையே கண்ணில் நிறுத்திற்று. கேள்வனை இழந்து வீழ்ந்தரற்றும் அவலம், கிளைகள் வெட்டப் பட்ட வேங்கையாயிற்று. இவர்களும் வாழ்வில் கழிகல மடந்தையர்; வேங்கையும் கழிகிளை, கழிதழை, கழியரும்பு, கழிமலர் ஆகிய கைம் பெண். கைம்பெண்களைக் கண்ட துக்கத்தில் புலவர்,

> *"பூவாள் கோவலர் பூவுடன் உதிரக்*
> *கொய்து கட்டழித்த வேங்கையின்*
> *மெல்லியல் மகளிரும் இழைகளைந் தனரே"* 1 — என

ஓலமிடும் பாட்டை வடித்தார்.

திருத்தக்கதேவர் பார்வையில் இராசமாபுரத்துப் பசும் பொன் மாளிகையொன்று பட்டது. அதன் மேல்மாடத்து உச்சி மேல் அழகிய மயில்கள் கூட்டமாக வானத்தைச் சுவைத்தவாறே உள்ளன. இத்தோற்றம்,

'பொன்போற் பூத்துள்ள வேங்கைமேல் அழகிய மயிற் கூட்டம் இடம்பெற்றுக்கருங்காரின்வரவைஎதிர்நோக்கிஇருந்தது?

---

1 புறம். 224 : 15—17.

போன்றது'[1] -எனப் பாடப்பட்டது. இவ்வாறு வேங்கை பைம் பொன் மாளிகையாயிற்று.

கண்ணனார் என்னும் புலவர் கண்ணில் ஆழ்ந்த காட்சி ஒன்று:

'புலியோடு மோதியது ஒரு களிறு. வென்றுவிட்டது. வேங்கை மரத்தடியில் இப்போர் நடந்தது. வென்ற களிறு எய்ப்பு நீங்கத் தன் தும்பிக்கையை உயர்த்தி ஒரு பெருமூச்சு விட்டது. அம்மூச்சுத் தாக்குதலால் வேங்கைப் பூக்கள் தனித் தனியே சிதறிப் பாய்ந்தன. இக்காட்சி, கொல்லன் ஊதுலையினின்றும் எழும் காற்றால் உலை நெருப்புப் பொறி பிதிர்ந்து பாய்வதைப் போன்றிருந்தது. பாய்ந்து பக்கத்துக் கரும்புதரில் படிந்த காட்சி மின்மினிப் பூச்சி தாவிப் படிந்தது போன்றது என்றார்.

கருங்களிறு கொல்லனாக, தும்பிக்கை ஊது உலையாக, அதன் உள் துளை உலைக் குழாயாக, களிறு காலை ஊன்றியது உலைத்துருத்தியை மிதித்ததாக, பெருமூச்சு உலையின் வெப்பக் காற்றாக, செம்பொன் நிறப் பூ நெருப்பின் பிதிர்வாக, சிதறல் பொறிப்பாய்வாக, மினுமினுப்புடன் கீழிறங்கிய பொறி மின்மினிப் பூச்சியாக, தாவியதை ஏற்ற தாய் கரும்புதராக, ஒவ்வொரு நிலையினும் பொருந்தக் கூறிய திறம் சுவை பயப்பது.

நேரிற் பாடலைச் சுவைப்பது காட்சியை நேரிற் காண்பதாகும்:

*"புலிப்பகை வென்ற புன்கூர் யானை,*
*கல்லகச் சிலம்பில் கையெடுத் துயிர்ப்பின்*
*நல்லிணர் வேங்கை நறுவீ, கொல்லன்*
*குருகூது மிதிஉலைப் பிதிர்விற் பொங்கிச்*
*சிறுபல் மின்மினி போலப் பலவுடன்*
*மணிநிற இரும்புதல் (புதரில்) தாவும்"*[2]

புலவர்கள் பார்வை மட்டுமோ? புரவலர் பார்வையில் வேங்கை படாமலோ போகும்? ஒரு முடிமன்னன்; பாண்டிய மன்னன்; இளம்பெருவழுதி என்பது அவன் பெயர். மலைப்

1 சீவ. சி : 87 2 அகம் : 202 : 3-8

பயணத்தை மேற்கொண்டான் போலும். கண்ட கண்கள் மலர்ந்தன. ஏனெனில் கண்டவை யாவும் மலர்ந்தவை. சுனையில் நீலமலர் மலரைக் கண்டான்; சுனை சூழ்ந்த அசோக மரக் கிளையெல்லாம் பொன்பூ மலரக்கண்டான்; அவற்றுடன் காய் கனி நிறங்களில் மாறுபட்ட நிறத்தில் வேங்கை, பொன்னாக மலரக் கண்டான். இக்காட்சியை,

*''நனைவேங்கை ஒள்ளிணர் மலர*

*மாயோன் ஒத்தலின்''*[1] –என்று திருமாலை ஒத்ததாகப் பாடினான். எவ்வாறு திருமாலுக்கு ஒப்பாயிற்று? பரிமேலழகர் தமது உரையில் ஒப்பிடுகின்றார்:

'நீல மலரைச் சூழ்ந்த செயலை மலர், அவன் பொன்புனை உடுக்கைக்கு ஒப்பு; குன்றத்துக் காய் கனி போல மலர்ந்த வேங்கை, அவன் (திருமாலின்) மணிமுடிக்கு ஒப்பு' – இவ்வாறு ஒப்பிட்டுக் காட்டப் பாடியவனும் பொன் முடி சூடிய மன்னன். அவன் பார்வையில் பொன்முடியாகப் பட்டதில் வியப்பில்லை.

இவ்வாறெல்லாம் வேங்கை பொன் நிறமாக, பொன் அணியாக, பொன் மாலையாக, பொன் முடியாக விளங்குவதால் பொன்னிற்கே தனது பெயரைச் சூட்டியது.

பொன்னைக் குறிக்கும் சொற்கள் பலவற்றுள் வேங்கை என்பதும் ஒன்று.

*''ஆடகம், வேங்கை, அரிசெய் தாது*

*... ... ... ... ... ... ...*

*இந்த வகைப்பெய ரெல்லாம் பொன்னே''*[2] – என்று பிங்கல நிகண்டு பட்டியலில் அமைத்துள்ளது. பிற நிகண்டுகளும் அமைத்துள்ளன.

பொலிக; பொன்னில் பெயர் பொறித்த வேங்கை பொலிக!

---

1 பரி : 15 : 32, 38.
2 பிங் நி: 1232.

# 3. பொன் மலர்

## கொன்றை

### பொன்மலர் நாற்றமுடைத்து

பொன்னாகப் பொலியும் பூக்களில் கொன்றை நிறைவான இடம் பெற்ற பூவாகும். இலக்கியங்களில் பொன்பொன்னாகப் பூக்கின்றது:

'பொன்கொன்றை' (பொருந் : 201)

'பொன் வீக் கொன்றை' (நற் : 246 :8)

'கொன்றைப் பொன் நேர் புது மலர்' (அகம் : க.வாழ்த்து:1)

'பொன் என மலர்ந்த கொன்றை' (ஐங் : 420 : 14)

'பொன் எனக் கொன்றை மலர' (நற் : 242 : 3)

'பொன் நேர் கொன்றை மாலை' (ஞான : தே மீய்ஞ்சூர்:3:1)

—என்றெல்லாம் கொன்றையைப் பொன்னாக, பொன்போலக் காண்கின்றோம். பொன்னாலான தாளமிட்டுப்பாடும் திருஞானசம்பந்தர்,

"கொன்றைகள் பொன் சொரிய"க்[1] – கண்டார். சங்க இலக்கியங்களில் தோய்ந்த பாவேந்தர் பாரதிதாசனார்,

"நின்றசெங் காந்தட்பூ நேரில் கை ஏந்தநெடும்
கொன்றைமலர் பொன்னைக் கொட்டுகின்றாள்" [2] – என்று

காந்தளைக் கை ஏந்த வைத்துக் கொன்றையை வள்ளலாக்கிப் பொன்னையே கொட்டவைத்துள்ளார். பொன் வாணிகர் ஒருவரது மகன் ஒரு புலவர். பெயர் நப்பூதனார். இளமை முதல் பொன்னின் ஒளியைக் கண்டவரன்றோ? அப்பழக்கத்தில் போலும்,

"கொன்றை நன்பொன் கால"[3] – என்று கொன்றை பொன்னின் ஒளியைக் காலுவதாக — வீசுவதாகக் கண்டார். அதிலும், பொன்னின் மாற்றுப் பார்த்தவர்போல் "நன்பொன்" என்றார். இவ்வொளி மாங்குடி மருதனார் பாட்டில்,

---

1 ஞான. தே : புகலி : 6. 8.      3 முல். பா : 94.
2 தமிழ்ப்பாட்டு எக்காளக் குயில் : 1, 2.

"சுடர்ப் பூங் கொன்றை"[1] யாகச் சுடர்கின்றது. அச் சுடரைக் கண்ட பேயனார்,

"... ... ... ... ... ... கொன்றை
அடர்பொன் என்னச் சுடரிதழ் விரியும்[2] -எனத் தகட்டுப் பொன்னாகக் கண்டு, அப்பொன்னையும்

"சுடுபொன் அன்ன கொன்றை"[3] -என உருக்கி வார்த்த சுடுபொன் என்றார். குமரகுருபரர்

"கொன்றை எரியிலிட்ட பொன்ஒக்கும்"[4] - என்றார்.

இவையெல்லாம் கொன்றையின் நிறங்கருதிய வடிப்புகள்.

கொன்றை கொத்தாகப் பூக்கும். "முறியிணர்க் கொன்றை" "தூங்கிணர்க் கொன்றை" 'கொன்றை ஒள் ளிணர்" என்றெல்லாம் இணராகப் பாடப்பட்டுள்ளது. இக்கொத்தும் ஒரே தொகுப்பான கொத்து அன்று. மேலே மலரும், கீழ் கீழே போது, முகை, அரும்பு, நனை என்னும் அடுக்குமாக நீண்டிருக்கும் கொத்தாகும். தூக்கிக் கட்டித் தொங்கவிட்டது போன்றிருக்கும். இதனை,

"ஆய்பொன் அவிரிழை தூக்கி யன்ன
நீடு இணர்க் கொன்றை"[5] -என மருதங்கிழார் நீண்ட கொத்தெனக் காட்டினார். அதனால், 'தேர்ந்த பொன்னால் செய்யப்பட்டு ஒளிவிடும் இழை அணி போன்றது' என்றும் காட்டினார். இழை உருவம் பெற்ற கொன்றைக் கொத்தை,

"இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி இணர சுடர்விக் கொன்றை"[6] -என்று நீண்டிருப் பதையும் அடிமுனையில் சுரிந்திருப்பதையும் காட்டினார் மருதன் இளநாகனார். இதைத் தொடர்வார் போன்று ஓதலாந்தையார் என்பார்,

"பொன்செய் புனைஇழை கட்டிய மகளிர்
கதுப்பில் தோன்றும் புதுப்பூங் கொன்றை"[7] -என பூங்

---

1 மது. கா : 277
2 ஐங் : 430 : 1, 2
3 ஐங் : 432 : 2
4 திருவாரூர் நான்மணிமாலை : 39 : 2, 3.
5 அகம் . 364 : 4, 5,
6 நற் : 302 : 1, 2.
7 குறுந் : 21 : 1, 2

கொத்தின் மேல் பசுந்தழை இருப்பதையும் இணைத்து மகளிரது கதுப்பாகவும் காட்டினார். அஃதாவது கூந்தலில் பதித்து தொங்கும் இழையாம். இவ்வாறு கொத்தில் தொடர்ந்து பூத்திருப்பதால்,

*"பொன் தொடர்ந்தன்ன தகைய நன்மலர்க்*
*கொன்றை ஒள்ளிணர் கோடுதொறுந் தூங்க"*[1] –எனப் பொன் தொடராகப் பாடினார் இளவேட்டனார். இத்தொடரையும் பொன்மாலையாக்கி,

*"நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன"*[2] –என்று கேசவனார் பாட, அதனையொட்டிப் பாவேந்தர் பாரதிதாசனார்,

*"கொன்றை பூத்த தங்கக் கோவை*
*தென்றலால் ஆடும்"*[3] –எனத் தங்கக் கோவையாக்கினார். இத்தங்கக் கோவையின் தொங்கலில் பதக்கம் ஒன்று தொங்க வேண்டாவோ? அப்பதக்கமும் ஒரு தங்கக் காசாக இருப்பின் அழகன்றோ? ஆம் பூங்கொத்தில் முனையில் உள்ள போது பொன் காசு போன்றிருக்கும். போது என்பது மலரும் பக்குவத்தில் சற்று வாய்பிளந்திருக்கும் அன்றோ? அதனால் தவளைவாய் போன்று சற்றே திறந்துள்ள கிண்கிணி என்னும் சதங்கையைக்காட்டி,

*"தவளைவாய் பொலஞ்செய் கிண்கிணிக்*
*காசின் அன்ன போது ஈன் கொன்றை"*[4] யாக வண்ணிக்கப் பட்டது.

இஃது இளங்கீரந்தையார் கைவண்ணம்.

பேயனாரால் ஒரு பொன் கொட்டிவைத்த பேழை காட்டப் பட்டுள்ளது:

'கவலைக் கிழங்கு தோண்டி எடுத்ததால் ஓர் அகன்ற குழி. அதில் கொன்றையின் ஒளிவிடும் பூக்கள் வீழ்ந்து நிறைந்திருக்கின்றன. இத்தோற்றம் பொன்னைப் பெய்து வைத்த பேழை திறந்து வைத்தது போன்று உள்ளது'

இப் பேழையைக் காட்டும் பாட்டு இது:

---

1 நற் : 221 : 3, 4
2 பரி : 14 : 10
3 குயில் பாட்டு : குன்றூர்ப் பாட்டு : 187, 188.
4 குறுந்:148 : 2, 3

"கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி
கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய் (மூடி) திறந்தன்ன"[1] இருந்த

தாம். இவ்வாறு பல வகையானும் பொன்னாகப் பேசப்பட்டது கொன்றை.

கொன்றையின் நிறம் இவ்வாறு பெரும்படியாகப் பொன் என்று பாடப்பட்டிருப்பதற்கேற்ப அதன் மணம் குறிக்கப்படவில்லை. ஒரு சில இடங்களில் "நாறு இணர்க் கொன்றை" "நறுங்கொன்றை அலங்கல்" என மணம் பற்றிய குறிப்பைக் காண முடிகின்றது. இயல்பாக மலர்களுக்குள்ள மண அளவிலேயே கொன்றை மணம் கொண்டது. கவர்ந்திழுக்கும் அளவில் மணச்சிறப்பைப் பெற்று விட்டால் "பொன் மலர் நாற்றம் உடைத்து" என்னும் பழமொழி இயற்கையிலேயே உண்மையாகியிருக்கும்.

## மரத்தில் கொடிப் பூ

நீடு தொடராக — மாலையாகப் பூக்கும் இதன் கொத்து ஒரு கொடியில் அமைப்பாகப் பூக்கள் மலர்ந்தமைபோன்றிருக்கும். இதன் இரண்டு கொத்து அடுத்தடுத்துத் தொங்குமானால் ஒரு மாலை போன்றே தோன்றும். ஒவ்வொரு கொத்தும் ஒரு கொடிக் கொத்தாகத் தோன்றும். இக்கொத்தில் பூக்கள் ஒழுங்காக அமைந்திருப்பதால் இக்கொத்து "கொடிஇணர்" எனப்பட்டது. "வண்டு படத் ததைந்த கொடியிணர்.........கொன்றை" (குறு : 21 : 1, 3.)

"......... – ...கொன்றை
.................................
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த" (குறு : 66 : 1, 4.)

"புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்" (நற்: 296 : 4)

"கொன்றை கொடியிணர் ஊழ்ப்ப" (பரிபாடல் : 8 : 24.)

---

[1] குறுந் : 233 : 1—3

இவ்வாறு 'கொடியிணர்' என்னும் தொடரால் கொன்றைக் கொத்து குறிக்கப்பட்டது. இத்தொடர் கொன்றை ஒன்றற்கே இலக்கியங்களில் காணப்படுகின்றது. மேலிருந்து கீழே தொங்கும் இதன் காம்பு ஒருகொடிபோன்று அமைய, இக்கொடியில் மலர்கள் ஒழுங்காக அமைந்திருப்பது இக்கொன்றைக்குத் தனி அமைப்பானது. மேலும் இக் கொத்து தொகுப்பான பார்வையில் ஒரு கொடி போலத் தோன்றும். இக் 'கொடியிணர்' என்னும் அடைமொழியே பிற்காலத்தில் இதற்குச் 'சரக்கொன்றை' என்னும் பெயர் ஏற்பட அடித்தளமாயிற்று.

கொன்றையில், சரக்கொன்றை, பெருங்கொன்றை, புலிநகக் கொன்றை, சிறு கொன்றை, மயிற்கொன்றை, மந்தாரக்கொன்றை, காக் கொன்றை, எருமைக் கொன்றை, செங் கொன்றை, நரிக் கொன்றை, கிடைக் கொன்றை எனப் பல வகைகள் உள்ளன. இவற்றில் இலக்கியங்களில் பெரிதுபடப் பேசப்படுவது சரக் கொன்றையே; கொடியிணர் எனக்குறிக்கப்பட்ட கொன்றையே.

இக்கொன்றைக்கே காயின் கருமை காரணமாகக் 'கருங் கொன்றை' என்ற பெயரும், சிவனுக்குரியதானதால் 'திருக்கொன் றை' என்ற பெயரும் அமைந்தன. இப் பூ நிறைவாக மலர்ந்த நிலையில் வட்ட வடிவமாக இராது. ஒரு கீழ்ப்பக்கம் ஓரளவில் இதழ்கள் சிறியதாகச் சுற்று விளிம்பு குறுகிவரும். இது சிவபெருமானுக்குரிய வகையில் தெய்வத் தன்மை பெற்றதையும் உள்ளத்தில் கொண்டு இச்சுற்றுவிளிம்புத் தோற்றத்தை 'ஓம்' வடிவாகக் கண்டனர் சைவர். 'ஓம்' பிரணவம் என்று குறிக்கப்படுமன்றோ அதனால் 'பிரணவக் கொன்றை' என்ற பெயர் ஏற்பட்டது. திரு. வி. க. அவர்களும் "கொன்றை பிரணவத்துக்கு அறிகுறி"[1] என்றார்கள்,

மேலே காணப்பட்ட பெயர்கள் யாவும் நாட்டு வழக்கில் உள்ளவை. சரக்கொன்றை, புலிநகக் கொன்றை என்னும் பெயர்கள் உரையாசிரியர்களால் பேசப்படும். பிறவெல்லாம் ஓரளவில் மருத்துவத்தாரால் எழுதப்படுபவை.

பிங்கல நிகண்டு, "இதழி, கடுக்கை, தாமம், கொன்றை" (2666) என்று சொல்லி, மேலும் "மதலை, ஆர்க்குவதம் என்றாகும்" என மேலும் இரண்டைக் குறித்தது. சேந்தன் திவாகரம்

---

1 பெரி: பு : தடுத்தான். குறிப்புரை

ம்தலையை விடுத்தது; 'ஆர்க்குவதம்' என்பதை 'அக்குவதம்' என்றது. சூடாமணி நிகண்டு இதனைக் சூறிக்கவில்லை. யாவற்றையும் தொகுத்தால் வரும் ஆறு பெயர்களில்,

'கொன்றை'

'கடுக்கை'

'இதழி' – என்னும் மூன்றுமே நூல்வழக்கு. தாமம் மிகப் பிற்காலத்தில் நூல் வழக்கு மற்றைய மூன்றில் இதழி சங்க இலக்கியங்களில் இல்லை. கடுக்கை பத்துப் பாட்டில் இல்லாதது. கொன்றை ஒன்றே சங்க இலக்கியம் முதல் பல்கால இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ள பெயர்.

## கார் நறுங் கொன்றை

இது, "புனக் கொன்றை" (ஏலாதி : 5 : 2)

"வியப் புறவின் வீழ்துளியான் மாக்கடுக்கை" (திணை. நூ : 98 : 1) என முல்லை நிலத்ததாகக் குறிக்கப்படும்.

"காடுங் கடுக்கைக் கவின்கொளப் பூத்தன"
(கார். நா : 4 : 2)

முல்லை நிலத்து மரமாயினும் முல்லையை ஒட்டிய மலைப்பகுதியில் இடம் பெற்றிருக்கும். அதனால்,

*"புழற்காய்க் கொன்றை கோடணி கொடியிணர்*
*ஏ கல் மீமிசை மேதக மலரும்"* [1] என்று மலைமேல் மலர்வதாகவும்,

*"நெடும்பொறை மிசைய குறுங்காற் கொன்றை* [2]
*"... ... ... அறையறையாத் துயல்வர*
*வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவம்"* [3] —என்றெல்லாம் பாறைப் பிளவிலும், முல்லை சான்ற பாலையிலும் இடம் பெற்றதாகும். ஆயினும், இது மலரால் முல்லை நிலத்ததே யாகும்.

---

1 நற் : 296 : 4, 5.
2 ஐங் : 480
3 நற் : 46 : 7, 8.

மேலே காட்டிய அடிகளில் வரும் "கோடு அணி கொடியினர்" என்பதில் கோடும் 'குறுங்கால்' என்பதும் இது மரக் கிளையிற் பூப்பது என்றும்? அம்மரம் குட்டையானது என்றும் அறிவிக்கின்றன. எனவே, இது கோட்டுப் பூ.

இக் கோட்டுப் பூ,

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகம்.க.வா.)

"கண்ணி கார் நறுங் கொன்றை" (புறம், -க. வாழ்த்து :4)

"அதிர்பெயற் கெதிரிய சிதர்கொள் தண்மலர்" (ஐங். 458 : 2)

".... ... ... ... புதுப்பூங் கொன்றைக்
கானம் கார் எனக் கூறினும்" (குறுந் : 21 : 3, 4.)

—என்றபடி கார்காலத்தில் மலரும் பூ. பருவம் அல்லாத கார் என்னும் வம்ப மாரியையும் உண்மைக் கார் கால மழை என்று மயங்கிப் பூக்கும் பூக்களோடு சேர்த்துப் பாடப்படும். இக் கொன்றையைத் தனியாகவே காட்டி'

"ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய
பேதையங் கொன்றை"[1] —என்றார் பேயனார்.

பிறகும் இவ்வாறு பாடியுள்ளனர்.

இப்பூவின் வளர்ச்சிப் பருவத்தை நோக்கினால்,

வாய் நெகிழாத பசிய மொட்டு, சிறுமிகள் விளை
யாடக் கொள்ளும் கழற்சிக்காய் போன்றிருக்கும்.

வாய் நெகிழ்ந்த போது,
கிண்கிணி போன்றும், பொன்காசு போன்றும்
பொன்னாற் செய்த வட்டுக்காய் போன்றும்
தோன்றும்

மலரோடு கூடிய கொத்து,
மாலை போன்றும்,
விரிந்த மலரின் இதழ், மடலாகவும்

---

1 ஐங் : 462 : 1, 2.

தோன்றும்.

இயற்கையில் கொன்றை மலரின் நிறம் நல்ல மஞ்சள் நிறத்தில் பளிச்சிடும். இதனால்,

*"... ... ... ... ... ...கொன்றை போல*
*மாமலை விடரகம் விளங்க மின்னி"[1]* —என மின்னலுக்கு உவமை கூறினார் அவ்வையார். இம்மலர் இடியுடன் கூடிய மழையை ஏற்று மலர்ந்துள்ளபோது நிறத்தின் மங்கலாலும், நீர்த் துளி நிற்பதாலும்,

*"அதிர்பெயற் கெதிரிய சிதர்கொள் தண்மலர்*
*மாண்நலம் இழந்தவென் கண்போன் றனவே"[2]* எனக் கண்ணீரால் அழகிழந்த கண் உவமையாயிற்று.

இதன் தாதுத் தூளும் முன் கண்டது போன்று பொன் தூள் போன்றது; மஞ்சள் நிறத்தது. வரகின் அரிசியால் புழுக்கிய உணவிற்கு இதனை உவமை கூறினார் மாமூலனார்,

*"வரகின்*
*.... ... ... ... ....அடுப்பேற்றி*
*இணர்ததை கடுக்கை ஏண்டிய தாதின் (தாதைப்போல)*
*குடவர் புழுக்கிய பொங்கவிழ் புன்கம் (உணவு)"[3]*

என்பது அவர் பாட்டு.

கார்காலத்தில் இப்பூ கொத்துக் கொத்தாய்ப் பூத்துக் தொங்கும் காட்சி கண்ணுக்கு நிறைவானது. மரமே ஓரே மஞ்சளாகத் தோன்றும்படி மரமெங்கும் பூவே நிறைந்திருக்கும்.

## "கொன்றை வேய்ந்தான்"

இதன் பொன்னிறப் பொலிவும், புதுமலர் மெருகும் கொய்து சூடிக் கொள்ள அழைக்கும். முல்லை நிலத்துக் கோவலர் சூடியும்

---

1 நற் : 371 : 1, 2.
2 ஐங் : 458 : 2, 3,
3 அகம் : 393 : 5, 14, 15, 16.

அணிந்தும் மகிழ்வர். இடைக்குலத்து மகளிர் கதுப்பிலும் குழலிலும் சூடிக்கொள்வர். ஏறு தழுவலின்போது,

"வென்றி மழவிடை ஊர்ந்தார்க் குரியளிக்
கொன்றையன் பூங்குழ லாள்"[1]

-எனக் கொன்றைப் பூச் சூடிய இடையர் மகள் அடையாளங் கூறப்பட்டாள். நல்ல மழை பெய்து நீர்கண்ட உழவர் முதலில் பொன் ஏராக,

"கடிஏர் பூட்டுநர் கடுக்கை மலை"[2] ந்தனர்.

போர்க்களத்து வீரரும் பனங்குருத்தைப் பிளந்த மடலுடன்
"நாறு இணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணிய"[3]
ராக விளங்கினர்.

பாலை நிலத்திலுள்ள மள்ளரும் மழைக்காலத்தில் கொன்றை பூக்கும்போது,

"சுடுபொன் அன்ன கொன்றை சூடி
கடிபுகு வனர்போல் மள்ளர்"[4] -எனப்பட்டனர்.

திருமணத்திற்குச் செல்வோர் (கடி புகுவனர்) மணமலர் சூடிச் செல்வர் என்பதையும் இது காட்டுகின்றது.

முன்னையத் தமிழ்நாடாகிய இன்றைய மலைஞாலத்து மகளிர் தம் புத்தாண்டு நாளாக 'விசு' என்னும் 'விசுக்காணி' கொண்டாடுவர். இதுபோது பொன்போன்ற கொன்றைப் பூவைப் பரப்பி மகிழ்வராம். ஆண்டெல்லாம் பொன் கொழிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தில் இவ்வழக்கத்தைக் கொண்டுள்ளனர். இதனை உழவர் பொன் ஏர் பூட்டுதல் என்பதோடும், அதுபோது பொன் நிறக் கொன்றையைச் சூடினர் என்பதோடும் இணைத்துக் காணலாம்.

மாந்தர் கொன்றையை அணிந்தமை முற்காலப் பழக்கம். கடவுளர்க்கு அணிவித்த பழக்கம் முற்காலத்தும் இக்காலத்தும் இலக்கியங்களிலும் காணக் கிடைக்கும் ஒன்று.

கொன்றை சிவபெருமானுக்கு உரியதாக்கப் பட்டது அவருக்கு உரிய பூக்களில் கொன்றையே முதலிடம் பெற்றது.

---

1 சிலப்பு : 17 : 11 : 1, 2.
2 பதிற் : 43 : 16
3 பதிற் : 67 : 13.
4 ஐங் : 432 : 2, 3.

"கண்ணி கார் நறுங் கொன்றை"[1] –எனக் கண்ணியாக் மட்டும் அன்று; "வண்ண மார்பில் தாரும் கொன்றை"யாக அமைந்தது. இரண்டுடன்,

"........கொன்றைப் பொன்னேர் புதுமலர்
தாரன் மாலையன் தைந்த கண்ணியன்"[2] ஆனார்.

சங்க இலக்கியங்களில் சிவபெருமானை வாழ்த்தும் பாடல் களிலெல்லாம் கொன்றை சுட்டப்படும். கொன்றையின் மதிப்பு சிவபெருமானின் மதிப்பாகவே அடியார்களால் கருதப்பட்டது. பாரதக் கதையில் அபிமன்னியு போர். சூழப்பட்டு நிற்கும் அபி மன்னியுவிற்காக வீமன் புகுந்தான். அவனைத் தடுக்க நினைத்த சயத்திரதன் சிவனிடம் பெற்ற கொன்றையை வீமன் எதிரே ஏவினான். வீமன் "கொன்றைத் தொடை மாலை கண்டளவில் கை தொழுது வீழ்ந்தான்." இது கண்ட திட்டத்துய்மன் வீமனைப் பழித்தான். வீமன்,

"எங்கள் குடிப்பிறந்தார் எல்லாம் இறந்தாலும்
சங்கரன் நன் மாலைதனைக் கடவோம்" –என்றான்'

(பாரதவெண்பா : துரோண பருவம் : 13-ஆம் நாட்போர்) இவ் வாறு சிறப்புற்றது கொன்றை. சிவனுக்கே "கொன்றையாண்டி என்று ஒரு பெயர் உண்டு.

கொன்றை முடிக்காத சடையாகச் சிவன் சடையைக் காண முடியாது. கொன்றையை இவ்வாறு சடையில் செருகிக்கொண்ட தால்— வேய்ந்துகொண்டதால் அவருக்குக் "கொன்றை வேய்ந் தான்" என்னும் பெயர் உண்டாயிற்று.

அவ்வையார் ஆத்தியைச் சூட்டி "ஆத்தி சூடி" என்று பெயரமைத்தமை போன்று, கொன்றையை வேய்ந்து "கொன்றை வேய்ந்தான்" ஆக்கி அப்பெயரால் "கொன்றை வேய்ந்தான்" என்னும் நூலையும் வழங்கினார். இந்நூலுக்குப் பிற்காலத்தே "கொன்றை வேந்தன்" என்ற பெயர் மாறலாயிற்று. இக்கருத் தைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் தெரிவிக்கின்றார்கள் வெண்செந்துறை என்னும் செய்யுள் இலக்கணத்திற்குச் சான்று காட்டும் பேராசிரியர்,

---

1 புறம் : க. வாழ்த்து : 1, 2. 2 அகம் : க. வாழ்த்து 1, 2.

"*கொன்றை வேய்ந்த செல்வன் இணையடி*"[1] —என்று "வேய்ந்த" என்றே எழுதிக் காட்டினார். நச்சினார்க்கினியரும் இப்பாடமே கொண்டார். யாப்பருங்கல விருத்தியிலும் இப்பாடமே உள்ளது. பிற்காலத்தார் கடவுள் வாழ்த்தைப் பிள்ளையார்க்கே காட்ட வேண்டும் என்னும் கருத்தில் 'கொன்றை வேந்தனாகிய சிவனது செல்வன்– பிள்ளையார் இணையடி' என்று பொருள் கொள்ள, "கொன்றை வேந்தன்" எனப் பாடத்தை மாற்றினர் போலும்.

ஆத்தி சூடி என்னும் தொடரில் 'சூடி' என்னும் சொல் உளது. கொன்றை வேய்ந்தானில் 'வேய்ந்தான்' என்னும் சொல் உளது. இரண்டும் தலையில் சூடுதலையும் வேய்தலையும் அஃதாவது செருகுதலையும் குறிப்பதாக அமைந்துள்ளன. இப் பொருத்தம் 'கொன்றை வேய்ந்தான்' என்பதே பொருந்துவது என்பதைக் காட்டுகின்றது.

சிவனுக்கு எந்த அடியார் முதலில் கொன்றையைச் சூட்டி அவருக்கு உரியதாக்கினரோ அறியோம். ஆனால், ஆத்தியைச் சூட்டியவர் விசாரசருமர் என்பதை ஆத்தி மலர் விளக்கத்தில் கண்டோம். தன் வழிபாட்டிற்குத் தடைசெய்த தந்தையையே தடிந்தவரன்றோ விசாரசருமர்? அதனைப்பாராட்டிச் சிவபெருமான் விசாரசருமரைச் சிவ அடியார் அனைவருக்கும் தலைவராக்கினார். தனக்கு ஒப்பாக அதிகாரம் கொடுத்தார். தாம் உண்ட கலன், உடுப்பவை, சூடுபவை யாவற்றையும் விசாரசருமருக்கு வழங்கிச் 'சண்டேசுர'ப் பதவியையும் அளித்தாராம். அப்பதவி வழங்கப் பட்டதன் சான்றிதழ்போன்று,

"*... .. ... .. அவர்முடிக்குத்*
*துண்ட மதிர்சேர் சடைக்கொன்றை*
*மாலை வாங்கிச் சூட்டினார்*",[2] இதுகொண்டு கொன்றை ஒரு சான்றுப்பொருள் ஆருமளவில் சிவபெருமான் முடியேறியதாயிற்று. விசாரசருமரும் ஆத்தியைச் சூட்டிக் கொன்றையைப் பெற்றுக்கொண்டார்.

சங்க இலக்கியம் முதல் இன்றையச் சைவ இலக்கியம் வரை சிவனுக்கு எதைச் சூட்ட மறந்தாலும் கொன்றையை மறப்பதில்லை. தேவார மூவரும் இதனைப் பாடாத வகையில்லை என்னும் அளவில் பாடல்களில் அமைத்துள்ளனர்.

---

1 தொல் : பொருள் : செய் : 149 உரை
2 பெரி. பு : சண்டேசுர : 56 : 3, 4.

# தவம் செய்யும் கொன்றையும் தவிலடிக்கும் கொன்றையும்

கொன்றைப் பூவில் உருவாகிய காய் இலக்கிய இடம் பெற்றது. இக்காய் கருமை நிறத்தில் நீண்டு தொங்கும். இதன் நீட்சியும் நிறமும் தொங்கி அசைதலும் கல்லாடர் கண்ணில் கருமை எலி – காரெலியின் வாலாகத் தோன்றிற்று. அதன் வாலைச் சொல்லுபவர் கடுக்கையின் சிறு காயை எலியின் உடலில் அடைய வைத்தது போன்ற வால் என வைத்து,

"கடுக்கைச் சிறுகாய் அடைத்த வால் கருப்பை"[1] –என்றார். காரெலிக்குக் கருப்பை என்பது இலக்கியப் பெயர். இதுகொன்றையின் நெற்றாக முற்றாத சிறிய காயைப் பற்றியது.

நன்கு முற்றி நெற்றான காய் யாழின்கோட்டிற்கு ஒப்பாக்கப்பட்டது மாமூலனாரால். அதனையும் ஒரு வரலாற்று நிகழ்ச்சியுடன் இணைத்தார்:

> 'எவ்வி என்பான் ஒரு குறுநிலத் தலைவன். அவன் பாணர்க்கு வாரி வழங்குபவன். அவன் போர்க்களத்தில் வீழ்ந்தான். அவனை இழந்த பாணர் தாம் இதுவரை தொழுது மீட்டிவந்த யாழையே முறித்து வீசிஎறிந்தனர். அவ்வாறு முறித்து வீசப்பட்ட யாழின் கோட்டை–மருப்பைப் போலக் கொன்றை நெற்றுகள் மரத்திலிருந்து உதிர்ந்தன"[2] –என்றார்.

இக்காய் திரண்டுருண்டு தொங்கும் தோற்றம் தவம் செய்வோரது திரண்ட சடைக்கற்றை போன்றது. இவ்வாறு ஒவ்வொரு காயும் ஒவ்வொரு சடைத் திரட்சியாக மரமெல்லாம் தொங்குவதைக் கண்ட சல்லியன்குமரனார் என்பார் மரத்தோடு சேர்த்து உவமையாக்கினார். பொரிந்துள்ள அடிமரத்தைக் கொண்ட கொன்றை மரம் ஆடாது அமர்ந்திருக்கும் தவத்தவர். மேலே தொங்கும் நெற்றுக் காய்கள் சடைக் கதிர்கள். இவ்வாறு பொருத்தமாக்கி,

---

1 கல் : 68 : 12    2 அகம் : 15 : 8–11

*"பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை*
*நீடிய சடையொடு ஆடா மேனிக்*
*குன்றுறை தவசியர் போல"*[1] —என்றார்.

இவ்வகையில் கொன்றை ஒரு முனிவர்.

சடையாகத் தோன்றிய இது சடைக்குரிய மயிராகவும் பார்க்கப்பட்டதில் வியப்பில்லை. இயற்கைக் காட்சியை ஒப்பனை அமைப்பில் வண்ணிக்கும் கல்லாடர்,

சுரும்புகள் வரிசையாக மொய்த்த கொன்றைப் பூங்கொத்தாகிய மாலை தொங்கியது; பல வரிசை வரிசையாகத் தொங்கின. அதன் நீண்ட காய்களின் கொத்து கவரிமானின் மயிரால் ஆன கவரிபோன்று அமைந்தது.[2]

(இது வெண்கவரி அன்று; கருங்கவரி; கருங்சாமரை.)
—என்று பாடினார்.

இக்காய், காற்றால் உதிர்ந்து பாறைமேல் கிடப்பது கண்ட பாணர்க்கு ஓர் ஐயம் எழுந்ததாம். காற்றால் உதிரும் காய் பாறைமேல் விழும்போது ஒலி உண்டாகும். மேலும் மேலும், விழ விழத் தொடர்ந்து ஒலிக்கும். பாறை பறையின் தோல்பரப்பு போன்றிருக்கும். விழும் காய் பறையில் அடிக்கும் கடிப்பு—கம்பு போல இருக்கும். இவற்றை ஒருபார்வையில் பார்த்தப் பாணர்க்குப் '*பறை முழக்கோ*' என்று ஐயம் எழுமாறு இருந்ததாம். இவ்வாறு பாடியவரை அறிய முடியவில்லை. பாட்டையாவது அறிவோம்:

*" ... ... ... ... ... ... ... பாணர்*
*அயிர்ப்புக் (ஐயம்) கொண்டன்ன கொன்றையந் தீங்கனி*
*பறையறை கடிப்பின் அறையறையாத் (பாறைகள்*
*தோறும்) துயல்வர*
*வெவ்வளி வழங்கும்"*[3]

இக்காய் உள்ளே கூடானது. அதனால் 'புழற்காய்' எனப்படும். உவமைக்குப் பயன்பட்ட இப் புழற்காய் இசைக்கும் பயன்பட்டது. 'கொன்றையந் தீங்குழல்' பற்றி முன்னரே காணப்பட்டது. கோவலர்.

---

1 நற் : 141 : 3, 5
2 கல் : 14 : 5, 6
3 நற் : 46;5 —8

*"ஒழுகிய கொன்றைத் தீங்குழல் மூரற்சியர்"*[1]

எனப்பட்டனர். கொன்றைக்காயின் உள்ளே உள்ள விதைகளை ஒருபக்கம் துளையிட்டு எடுத்துவிட்டு ஊதும் குழலாகப் பயன் படுத்தினர்.

"கோற்கைக் கோவலர்
கொன்றையங் குழலர்" (அகம் : 54 : 10, 11.)
"பல்லா தந்த கல்லாக் கோவலர்
கொன்றையந் தீங்குழல் மன்றுதொறும் இயம்ப"
(நற் : 364 : 9, 10.)

என்றெல்லாம் பல இடங்களில் காணப்படும். இக்குழல் கோவலர்க்கே உரியது. அவர்தம் சூழலில் வளர்ந்த கண்ண னுக்கும் உரித்தாக்கப்பட்டது.

இவ்வாறு குழல் செய்யப் பயன்பட்டதன்றி இக்காய் வேறு எதற்கும் பயன்படாதது. பயன்படாத இக்காய், கொன்றை மரத்தில் சடை சடையாகப் பெருகிக் காய்க்கும். பயன்படும் காய்கள் இது போல் காய்க்கவில்லையே என்று ஏக்கங்கொண்டார் கொங்கு வேளிர். இதைப்போலப் 'பயற்றின் நெற்று பெருகினால் எத் துணை பயன்' என்று கருதினார். அதனிலும் 'ஒவ்வொரு பயற்றங் காயும் கொன்றைக் காய் போன்று பெரிதாக இருந்தால் எவ்வளவு நன்மை' என்றும் அவரது உள்ளம் எழுந்தது. ஆனால் இயற்கையில் 'அமையாது போயிற்றே' என்று கவன்றார். திருவள்ளுவர் இரப்பு வாழ்வைப் படைத்த 'உலகியற்றியான் பரந்து கெடுக" என்றார். கொங்குவேளிற் படைத்தவனை அலையவைக்காமல் குற்றஞ்சாட்டுகின்றார்:

*"ஒருபேர் உலகம் படைத்த பெரியோன்*
*... ... ... ... ... ... ...*
*கொன்றையம் பசுங்காய் பெருக்கியும், பயற்றின்*
*நன்றுவிளை நெற்றினைச் சிறுக்கியும்"* படைத்தான்.

*"இனையவை பிறவும் இசைவில; எல்லாம்*
*படைத்தோன் படைத்த குற்றம் இவை"*[2] –என்றார்.

இக்கருத்து வாழ்வியல் நலன்கருதும் பொருளியல் கருத்தன்றோ?

---

1 கலி : 106 : 3

2 பெருங்கதை : மகத : 15:3, 5, 6, 9, 10.

இவ்வாறு கொன்றைக்காயின் பயனின்மையும் பேசப்பட்டது எனவே காயால் கொன்றைக்கு இசைத்துறை தவிர வேறு சிறப்பில்லை. இம்மரத்தின் கிளையாவது யாழ் செய்வதற்குப் பயன்பட்டது. இம்மரம் இந்தியாவில் பரவலாக இடம்பெற்றது. முன் குறித்ததுபோன்று *INDIAN LABURNUM* எனப் பெயர் பெற்றது. ஆயினும் செடியியலார் சயாம் நாட்டில் உள்ள இவ்வினப்பெருக்கத்தைக் கருதிப்போலும் 'சயாம் மரம்' *SIAMESE TREE* எனக் குறியிட்டனர்.

இப்பூவின் சிறப்பு கருதி நேபாளத்தார் மரங்களில் இதனை மன்னனாகக் கொண்டு 'அரச மரம்' என்னும் பொருளில் 'இராச விருட்சம்' என்று வழங்குகின்றனர்.

கொன்றைப் பூவின் தோற்றம் முதல் நிறைவு வரை ஒரு வரிசைப்படுத்தினால்,

கழற்சிக்காய் போன்ற மொட்டு;

பொன் வட்டுக்காய் போன்ற போது;

மாலைபோன்ற கொத்து மலர்;

மடல் மடலாய்த் தனிமலர்;

கூந்தல் போன்ற காய்;

துளையுடைய நெற்று – என அமையும். இவற்றை இரண்டு வரிகளில் வடித்தார் கணிமேதையார்:

*"கழலாகிப் பொன்வட்டாய்த் தாராய் மடலாய்க்*
*குழலாகிக் கோல்சுரியாய்க் கூர்ந்து"*[1]

இது கொன்றையின் வரலாற்றுச் சுருக்கம்.

---

1 திணை. நூ : 98 : 8, 4.

# 4. கொங்கை மலர்.

## கோங்கு.

பொன் நிறம் வாய்ந்த பூக்களின் வரிசையில் கோங்கு இடம் பெற்றது. "கோங்கின் பொன்மருள் பசுவீ"[1] எனப்பட்டது. இதன் புறவிதழ் பொன் நிறமற்றதாயினும் முகை ஆடகப் பொன்னைக் கட்டிவைத்த பொற்கிழி எனப்பட்டது.

இது விரிவது,

"... ... ... ... ... கொழுங்கோங்கு தூங்கு
ஆடகப் பொற்கிழி அவிழ்க்கும்"[2] -என்றார் குமரகுருபரர்.

விரிந்த மலர் குடைபோன்றது. இதனையும்,

"கோங்கு பொற்குடை கொண்டு அவிழ்ந்தன" – எனப் பொன் குடையாகப் பாடினார் யசோதர காவிய ஆசிரியர். நல்லந்துவனார்க்கோ,

"தண்ணறுங் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்
பொன்னணி யானைபோல் தோன்"[3] றிற்று.– இவ்வாறெல்லாம் இம்மலர் பலவகையிலும் பொன்னாகக் காட்சி தருவது. கொங்கு என்றால் பொன். கொங்கு நீண்டு 'கோங்கு' ஆனது போலும். இத்துடன் அம் விகுதி சேர்த்துக் 'கோங்கம்' எனப்படும்.

'துரு' என்னும் சொல்லும் 'பொன்' என்னும் ஒரு பொருள் தரும். நீர்ப் பூக்களில் நீலம், நீல + உற்பலம் = நீலோற்பலம் எனப்படும். கோங்கைப் பொன் நிற உற்பலமாகக் கொண்டு 'துருமோற்பலம்' என்னும் பெயர் சூட்டப்பெற்றது, இப்பெயர் மற்றொரு காரணத்தாலும் அமைந்ததாகலாம். 'துருமம்' என்பது மரங்களின் பொதுப்பெயர். நீலம், நீரில் தோன்றும் உற்பலம். கோங்கு மரத்தில் தோன்றுவதால் துருமம்+உற்பலம்=துருமோற்பலம் என்றாகியிருக்கலாம். இது வடமொழிப்பெயர்.

பொன்னைக் குறிக்கும் சொற்களில் 'காரம்' என்பதும் ஒன்று. கோங்கின் முகை கன்னிமைப் பருவ உறுப்பாகிய மார்புக்கு உவமை கூறப்படுவது. இவ்வகையில் 'கன்னியின் பொன்' என்று

---

1 ஐங்: 367 : 1, 2.
2 மீ. பி. த 10 : 8, 4.
3 கலி : 42 : 16, 17.

குறிப்பிடும் பொருளில் 'கன்னிகாரம்' என்றொரு பெயர் இதற்கேற்பட்டது போலும்.

சூடாமணி நிகண்டு கோங்கிற்குத் துருமோற்பலம், கன்னிகாரம் என்னும் பெயர்களோடு நிறுத்திக்கொண்டது.[1] பிங்கல நிகண்டு 'பிணர், குயா' என்னும் இரு பெயர்களை அறிவிக்கச்[2] சேந்தன் திவாகரம் 'பவனி' என்றொரு பெயரோடு 'ஞாழல்' என்னும் பெயரையும் குறித்துள்ளது[3] 'ஞாழல்' என்பது எவ்வகையிலும் பொருந்தாத சொல். ஞாழல் என்பது தனியொரு மரம். இத் திவகாரம் கொடுக்கும் மயக்கங்களில் இஃதும் ஒன்று. இந்நூலில் சில இடைச்செருகல் உண்டு என்பர். அவ்வாறு அமைந்திருக்கலாம்.

மற்றையச்சொற்களில் 'பிணர்' என்பது 'சுரசுரப்பு' என்னும் பொருள் தருவது. சுரசுரப்பை உரையாளர் 'சருச்சரை' என்பர். கோங்கு மரம் "பொரியரைக் கோங்கு"[4] எனப்படும். பொரி = சருச்சரை. இப் பிணர் என்னும் சொல் இலக்கியங்களில் யானையின் தும்பிக்கைக்கு அடைமொழியாக்கப்படும். தும்பிக்கை சருச்சரை வாய்ந்தது. கோங்கின் கிளைகளும் இதுபோன்று அமைந்தது. இக்காரணத்தால் 'பிணர்' என்னும் பெயர் பெற்றது. மற்றைப் பெயர்கள் காரணமற்றவையாக உள்ளன. நூல்களிலும் இடம்பெற்றில. இதனாற்போலும் பின்னர் எழுதப்பட்ட சூடாமணி நிகண்டு இப்பெயர்களையெல்லாம் விடுத்தது.

இப்பெயர்களில் 'கன்னிகாரம்' சங்க இலக்கியங்களில் இல்லை. சிலப்பதிகாரத்தில், *''கடிமலர் அவிழ்ந்த கன்னி காரத்துத்*
*தொடிவளைத் தோளி ஒருந்தி தோன்றி''*[5] —என
வருகின்றது. ஆனால், சங்க நூலான கலித்தொகையில்,

*''மாவீன்ற தளிரின்மேல்*
*கணிகாரம் கொட்கும் கொல்''*[6] என்பதில் 'கணிகாரம்' என்பதற்குக் 'கோங்க மலர்' என்றபொருள் கூறப்பட்டுள்ளது. இச்சொல் நிகண்டில் இல்லை. இச்சொல் கணிகை + ஆரம் என்றாகலாம். ஈழநாட்டு நல்லூர்ப் பொன்னம்பலப் பிள்ளை என்பார்

---

1 சூடா : மரப்பெயர் : 4 : 1 : 2.
2 பிங். நி : 2683
3 சேந். தி : மரப் பெயர்த் தொகுதி
4 ஐங் : 367 : 1.
5 சிலம்பு : 11 : 110, 111.
6 கலி: 143: 4, 5.

எழுதிய "கணிகை துன்று அமைப்பில் கோங்கு"[1] என்னும் அடிகொண்டு கணிகை ஆரம் என்று கருதலாம். கணிகையர் கவர்ச்சி உறுப்பிற்கு உவமையானதால் இப்பெயர் அமைந்திருக்கலாம். இலக்கியங்களைக் கொண்டு இவ்வாறு நாட்ட இயலாது. கணிகாரம் என்று கொண்டால் பொன்னாகக் கவனிக்கப்படுவது என்னும் பொருளால் பெற்ற பெயர் எனலாம்.

இக் கணிகாரம் என்னும் சொல்லன்றிக் கோங்கு, கோங்கம் என்னும் இரண்டு சொற்களுமே இலக்கிய வழக்கு.

இவ்வாறு பெயர்களை அடுக்கிக்கொண்ட கோங்கு இலக்கியங்களில் மங்கையரது முகிழ்த்த மார்பிற்கு உவமையாக அடுக்கப்பட்டது. இள மார்பைக் குறிக்க — வண்ணிக்கக் கோங்கின் முகை பயன்படாத இலக்கியம் இல்லை எனலாம்.

"கோங்கின் முகைஎனப் பெருத்தநின் இளமுலை"[2] என்னும் கலித்தொகை போன்று பல இடங்களில் காணப்படும். இங்கே பெருத்தமைக்குக் கூறப்பட்டது.

"முகைவனப் பேந்திய முற்றா இளமுலை"[3] என வனப்பிற்கும் இளமைக்கும் காட்டப்பட்டது. இதன் முகை அடிபருத்து முனை குவிந்துள்ள வடிவத்தைவைத்து,

... ... ... ... "அடிபரந்த
கொம்மை கொண்ட தன்மைய வாகிக்
கோங்கரும்பு அழித்த வீங்கு இளமை"[4] கொண்டது
—எனப்

பாடப்பட்டது. 'யாணர்க் கோங்கின் குவி முகை" என்றும், "கோங்கின் குவிமுகை அவிழ" என்றும் இப்பூவின் குவிவைக் காட்டுவர். இதற்கேற்ப மார்பின் குவிவிற்கும் "குவி" அடைமொழி கொடுத்து அகநானூறு (240 : 11) முதலிய இலக்கியங்கள் காட்டுகின்றன.

---

1 இரகு வமிசம் : (தமிழ்)
2 கலி 56 : 28, 24.
3 புறம் : 336 : 10.
4 பெருங் ; இலா : 2 ; 209-211

இம்முகை முற்றிய மரத்தின் முகையாக இருத்தல் சிறப்பாம். மரம் முற்றியது: ஆனால் முகை முதிராதது; மார்பு முற்றாத இளமையது என, நயமாக,

"முதிர் கோங்கின் முகையென" (கலி : 59 ; 23)

"கோங்கின் முதிரா இளமுகை ஒப்ப" (கலி : 117 : 2, 3)

"முகைவனப் பேந்திய முற்றா இளமுலை" எனும் இவ் வடிகள் பேசுகின்றன.

இவற்றைக்கொண்டு கோங்க முகையின் அமைப்பை —தன் மையை அறியலாம். அடி பரந்திருக்கும்; முனை குவிந்திருக்கும்; இதழ் மென்மையானது; வனப்புடையது; விளங்கக் கூடியது; முகை களில் பெருத்துத் தோன்றுவது; முகைத்து நிற்பது —என்றெல் லாம் காணமுடிகின்றது.

இம்மலரின் இதழ்கள்,

*"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப் பூ"* [1]

என்றபடி இம்மலரின் இதழ்கள் புல்லியவை; மெல்லியவை. இதழ்கள் நிறைவாக விரிந்துள்ள நிலையில் விரித்த குடை போன்றிருக்கும். அதனால் 'குடைப் பூ' எனப்பட்டது.

பொன்னிறமான இப்பூ மகளிர் தலையிற் சூடிக்கொள்ளும் 'திருகுப் பூ' என்னும் தலையணி போன்றது என்று காட்டும் நக்கீரர்,

'தேர்ந்த கலைத்திறம் வாய்ந்த கம்மியன் அரதனக்
கற்களைப் பதித்து இழைத்துச் செய்த திருகுப் பூ உரு
வத்தில் மலர்வது கோங்கம்' என்றும், 'பெரிய பூ'[2]

என்றும் வண்ணித்தார்.

இப் பூ தனிப் பூவாகத் தொடர்ந்து பூத்திருக்கும் காட்சி யைக் கண்ட பாரதம்பாடிய பெருந்தேவனார்,

---

1 நற் : 48 : 3

2 நற் : 86 : 5-7.

'கார்த்திகைத் திங்களில் ஏற்றப்படும் விளக்கு வரிசை போல — நெடுங் கொடியாகப் பல பூக்கள் விளங்கின'[1] —என்று பாடினார்.

*"புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ*
*வைகுறு மீனின் நினையத் தோன்றி"*[2] —என அப் பெருந் தேவனாரே வானத்தில் ஒளிரும் விண்மீன்களின் நினைவை எழுப்புவதாகப் பாடினார்.

மலர் இவ்வாறு விளங்க, மலரின் உள்ளே நடுவண் அமைந்த பொகுட்டு எலியின் வளைந்த காது போன்று தோன்று வதை வைத்து மருத்துவன் தாமோதரனார்.

*"வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன*
*குடந்தையஞ் செவிய கோட்டெலி"*[3] —என எலியின் காதிற்கு உவமையாக்கினார்.

இதன் தாதுத் தூளும் பொன்னிறமானது. மகளிரது பசலைக்கு உவமையாகக் கூறப்பட்டது. 'கணிகாரம்' என்னும் பெயருடன் பாடிய கலித்தொகை,

'மாந்தளிர் போன்ற நிறங்கொண்ட மங்கையர் உடலில் பொன்னிறமான பசலை, மாந்தளிர் மேல் கோங் கந் தாது கொட்டியது போன்று அழகு செய்தது'[4] -என்று பாடுகின்றது.

இம்மலர் ஐந்து பெரிய இதழ்களையுடைய தனிப் பூ. நீண்ட தனிக் காம்பில் பூக்கும். இரண்டு மூன்று காம்புகள் அடுத்தடுத்துச் சேர்த்திருக்கும். இச்சேர்க்கை கொண்டு,

*"தேன்பாய்ந்து ஆர்க்கும் தெரியிணர்க் கோங்கு"*[5]

*"முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே*[6] —எனப்பட்டது இருப்பினும் இது தனிமலராகவே கொள்ளத்தக்கது.

---

1 நற் : 202 : 9-11
2 நற் : 48 : 3, 4.
3 புறம் 321 : 4, 5
4 கலி : 148 : 4—6
5 அகம் : 158 : 16
6 ஐங் : 366 : 5

பொன் போன்ற நிறத்தில் அழகிய பூவாயினும் பரவலாகச் சூடிக் கொள்ளப்படவில்லை. ஓரோவொருகால் ஆடவர் சூடுவர். வேங்கை மலருடன் இதனையும் மிலைச்சியதாகக் காண்கின்றோம். (ஐங் : 367). தலைவன் பரத்தைக்குக் கோங்கம் பூவாலாகிய படலையை வழங்கியதாகத் தலைவிச் சினந்தாள் (ஐங் : 370). தலைவன் ஒருவன் தலைவிக்குக் கையுறையாக இம் மலரை வழங்கிய கருத்து உள்ளது (ஐங் : 366). பெருமளவில் அல்லாமல் அருகிய வழக்காகவே இப் பூ சூடுதற்குப் பயன்பட்டுள்ளது.

இக்கோங்கமரம் மலைப்பகுதிகளில் வளரும்.

*"தண்ணரும் கோங்கம் மலர்ந்த வரையெல்லாம்"*
(கலி : 42 : 16)

*"ஓங்குவரை அடுக்கத்து...............*
*... ... ... ... ... ... ... ... ....*
*தேன்பாய்ந்து ஆர்க்கும் தெரியிணர்க் கோங்கு"*
(அகம் : 153 : 14, 16)

*"வேங்கை வெற்பின் விரிந்த கோங்கு"* (புறம் : 336 : 9.) –என்றெல்லாம் மலையிடம் குறிக்கப்பட்டுள்ளது. இவைகொண்டு, இதனைக் குறிஞ்சி நில மலர் என்று கொள்ளலாம். ஆயின் மேலே கண்ட "ஓங்குவரை அடுக்கத்து" என்பது மலைப் பூவாகக் குறித்தாலும், இப்பாடலின் இறுதியடி "மைபடு மாமலை விலங்கிய சுரன்" என்று சுரத்தை–பாலையைச் சுட்டுகின்றது. மேலும் தலைவன் தலைவியை உடன் போக்காக அழைத்துச் செல்லும் பாலைத் திணைப் பாடல்களில் இக்கோங்கு குறிக்கப்படும். "பல்பூங் கோங்கம் அணிந்த காடே"[1] எனப் பாலை குறிக்கப் பட்டுள்ளது. ஐங்குறுநூற்றில் பாலைத்திணைப் பாடல் ஒன்று (370) அத்திணைக்குரிய முதற்பொருளோ, உரிப்பொருளோ பெறாமல் உளது. கருப்பொருள் கொண்டே அதன் திணையை வரையறுக்கவேண்டும். அப்பாடலில் வரும் கருப்பொருள் கோங்கு ஒன்றே. எனவே, அதற்கு உரைவகுத்த பழைய உரைகாரர்,

"இது பாலைத்திணைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையால் பாலையாயிற்று" எனக் காட்டியுள்ளார். அவரே, 366ஆம் பாடலின் உரைக்குறிப்பில்,

---

1 நற் : 202 : 11

"அவன் தந்த கோங்கம் பூவால் விளைந்ததெனப் பூத்தரு புணர்ச்சி கூறியவாறாயிற்று. இது கருப்பொருளாற் பாலை"
—எனக் குறித்தார்.

பாலைத்திணைப் பாடல்களிலேயே மிகுதியாகக் கோங்கைக் காண்கின்றோம். கோங்குடன் சேர்த்துப் பாடப்படும் இலவமும் இதுபோன்றே மலையில் மலர்வதாகக் குறிக்கப்படினும் பாலைத் திணைப் பாடல்களிலே இடம் பெற்றுள்ளது.

எனவே, கோங்க மலர் மூலத்தால் பாலைநில மலர். குறிஞ்சி மலையில் விளங்குவதால் குறிஞ்சி திரிந்த பாலை நில மலர் என வேண்டும்.

நிலத்தால் இவ்வாறு இருநிலைகாட்டி மயக்கும் கோங்க மலர் தான் மலரும் பருவத்தாலும் நம்மை மயக்குகின்றது.

*"திணிநிலைக் கோங்கம் பயந்த*
*அணிமிகு கொழுமுகை உடையும் பொழுது"*[1] வந்தது
—என இளவேனிற்

பருவம் சுட்டப்படுகின்றது. இப்பாடல் ஐங்குறுநூற்றில் இளவேனிற்பத்தில் அமைந்தது. இதுபோன்று அகத்திலும் இம்மலரைக் குறித்துக் கூறி, "இகழுநர் இகழா இளநாள் அமையம்"[2] (இளவேனிற்காலம்) என இளவேனிலே குறிக்கப் பட்டுள்ளது. குறுந்தொகை 254 ஆம் பாடலும் கோங்கின் தலையலர் இளவேனிலில் தோன்றியதாகக் குறிக்கின்றது. நற்றிணையில்,

*"கோங்கம் குவிமுகை அவிழ ....*

....... ... ... ... ... ...

*முற்றா வேனில் முன்னிவந் தோரே"*[3] —என முற்றா வேனிலாம் இளவேனிற்கு உரியதாகக் காண்கிறோம். இவை கொண்டு கோங்க மலர் இளவேனிற் பூ என்றாகின்றது.

இத்துடன் ஆங்காங்கே முதுவேனிற் பூவாகவும் இதனைக் காண்கின்றோம். ஒரு தலைவன்,

---

1 ஐங் : 343 : 2, 3. 3 நற் : 86 : 7, 9.
2 அகம் : 25 : 12

'கோங்க மலரை அணிந்து வேனிற் பருவத்தில்தேரோடு வந்தான்' (ஐங் : 367) எனக் காண்கின்றோம். புறநானூறு 'வேனிற் கோங்கு' என்றே குறிக்கின்றது. பொதுவில் வேனில் என்று குறித்தால் அது முதுவேனிலைக் குறிப்பதாகும். இவை கொண்டு இப் பூ முதுவேனிலிலும் மலரும் என்றாகின்றது. தலையலராக இளவேனிலிற் பூத்துத் தொடர்ந்து முதுவேனிலில் பூக்கும். இவ்வாறுசில ஒரு பாட்டம் இளவேனிலிலும் சில பாட்டம் முதுவேனிலிலும் பூப்பதால் தனக்கென ஒரு பருவத்தைக் கொள்ளாது

''*பருவம் இல் கோங்கம்*''[1] – என நப்பண்ணனார் பாட நேர்ந்தது. இதற்கு உரை கண்ட பரிமேலழகரும்,

''காலங் குறியாது பூக்கும் கோங்கு''– என்றார்.

இவ்வாற்றான்,

கோட்டுப் பூவாகிய கோங்கு, மஞ்சள் நிறத்ததாக, பாலை நிலத்தாக, இரு வேனிற் பருவத்ததாக மலரும் பூவாகும்.

இம்மலர் இலக்கியப் பாங்கில் சுடர்விட்டுப் பொன்னொளி வீசுவதாகும்.

'காட்டு வழியிற் காற்றடிக்கும் போது இதன் மலர் காம்பிலிருந்து கழன்று சிதறி வீழ்வது, ஒருவன் கையில் வைத்திருந்த நெருப்புச் சுடரை விட்டெறிவது போன்று தோன்றும்'[2] –என்றார் சேரமான் இளவேட்டுவனார். தனி நிலையில் இவ்வாறு தோற்றும் கோங்கம் குரவத்தோடு சேர்ந்து தோன்றுவதைப் பார்த்தார் கணிமேதாவியார். குரவ மரத்துக் காயைக் குழவியாகவும் பாவையாகவும் புலவர் பாடினர். ''குரவம் பாவை'' என்ற தொடர் செய்யுள் வழக்கு. இவ்வழக்கையும் உளத்துக் கொண்ட அவர் கோங்க மரத்தைச் செவிலித் தாயாகக் காண்கின்றார். அதன் முகை தாயின் பால் நிறைந்த மார்பகமாகப் படுகின்றது. அம்மலரை அண்டிக் குரவங்காய் தொங்குகின்றது. இக்காட்சியைக் கற்பனையில் வடித்துள்ளார்:

''*தான்தாயாக் கோங்கம் தளர்ந்து முலைகொடுப்ப*
*ஈன்றாய் நீ பாவை இருங்குரவே*''[3] — என்ற இப்பாட்டு

---

1 *பரி* : 19 : 79
2 *அகம்* ; 158 : 16-18.
3 *திணை : நூற் :* 65 : 1, 2

மரங்களிலும் ஈன்ற தாயையும், பாலூட்டும் செவிலித் தாயையும் கற்பிக்கின்றது.

குரவம் பாவையால் தாயான கோங்கைக் கொங்கு வேளிர் அப்பாவைக்குப் பொன் அணிகலமாக்கினார். இவர்காணும் குரவம் பாவை பூப்போலும் அழகிய கண்ணையுடைய பாவை. அதனைக் கொய்து குழந்தையாகத் தாலாட்டிய மகளிர், அப்

*''பூங்கன் பாவைக்குப் பொற்கலம் இவையெனத்*
*தேங்கண் சாரல் திருந்துசினை மலர்ந்த*
*கோங்கந் தட்டம் வாங்கினர் வைத்''*[1] *தனர்.*

கோங்க மலரின் இதழ்கள் அகலமான தட்டையுருவில் உள் ளமையால் 'கோங்கந் தட்டம்' என்றார்.

வடமோதங்கிழார் என்னும் புலவர் குரவ மலரோடு கோங் கைக் கண்டார். குரவமலர் வெண்மையானது. அதன் மகரங்களும் வெண்மையானவை. இந்த வெண்மை இதழை வெள்ளியாக் கினார். கோங்கந் தட்டத்தை ஒரு பொன் தட்டாக்கினார். அத் தட்டையும் துலாக்கோலின் தட்டாக்கினார்.

'இசைக்கும் வண்டினம் குரவ மலரில் ஊதிக் கிண்டு கின்றது. அதனால் அதன் வெண்மையான இதழ்கள் உதிர் கின்றன. கீழே விரிந்துள்ள கோங்க மலரில் விழுகின்றன இக்காட்சியில் கோங்க மலர்

*''பொன்செய் கன்னம் (துலாத்தட்டு) பொலிய, வெள்ளி*
*நுண்கோல் (சிறுகம்பி) அறைகுறைந் துதிர்வன போல''* [2]

இருந்ததாம். சீத்தலைச் சாத்தனார் பார்வையில், நயமான கற் பனை எழுந்தது. கோங்க மலர் விரிந்துள்ளது. அதன் அண்டை யில் கிளிமூக்கு மாங்கனி ஒன்று மலரில் பட்டுப் பட்டு அசைகின் றது. அதையொட்டிக் கிளையில் தோகைமயில் அமர்ந்துள்ளது. இவற்றை,

*''செம்பொன் தட்டில் தீம்பால் ஏந்திப்*
*பைங்கிளி (க்கு) ஊட்டுமோர் பாவையாம்''*[3]

---

1 பெருங் : 2 : 14:28-25.
2 அகம் : 317 : 8, 9
3 மணி : 19 : 68, 69.

—என்றார். கோங்கமலர் செம்பொன்னாலாகிய தட்டு; மாங்கனி பைங்கிளி; தோகை மயில் தீம்பால் ஊட்டும் பாவை. நயமான பொருத்தம் மிளிர்கின்றது,

கோங்க மலர், தான் பொன் தட்டாக நின்று குரவத்தின் வெள்ளியை ஏற்றதன்றோ? அது தன் தாதைப் பொன்தூளாகக் கொண்டது. பூதப்பாண்டியன் இப் பொன்தாதைப் பார்த்தான் மலரிலிருந்து உதிர்கின்றது. கீழே இலவ மலர் செக்கச் செவேலென மேல் நோக்கி மலர்ந்துள்ளது. இது பவளக் கிண்ணமாயிற்று. இக்கிண்ணத்தில் பொன்தூள் நிறைகின்றது. அதனையும் விலைகூறி இளவேனில் என்னும் விற்பவர் வருகின்றார். இதனை,

> *"இனச்சிதர் உகுத்த இலவத்து ஆங்கண்*
> *சினைப்பூங் கோங்கின் நுண்தாது, பகர்நர் (இளவேனில்)*
> *பவளச் செப்பில் பொன்சொரிந் தன்ன"*[1] —என்றார்.

இவ்வாறெல்லாம் எங்கு நோக்கினும், எவர் நோக்கினும் கோங்க மலர் பொன் தொடர்புடனே ஒளிவிடுகின்றது. மஞ்சள் நிறத்தால் பொன்னான இம்மலர்,

பொற்கிழியாய் அவிழ்ந்து,
பொற்குடையாய் விரிந்து,
பொன்னணியாய் விளங்கி,
பொன் திருகுப் பூவாய்த் துலங்கி,
பொன் துலாத்தட்டாய் நின்று,
செம்பொன் தட்டாக மிளிர்ந்து,
பொன் தூளாய்ப் பொலியக் காண்கிறோம்.

இப்பொன் தூளை ஏற்ற பவளக் கிண்ணமாக இலவம் இதனோடு இணைந்தது. இக்கற்பனை வகையில் மட்டுமன்றி கோங்கமும் இலவமும் இயற்கையில் இலக்கியத்தில் இணைந்த நண்பர்கள்,

கோங்கு மலரும்போது அதன் இலைகள் உதிர்ந்துவிடும். அறவே இலைகள்இல்லாத கிளையில் மெல்லிய முகைகள் தோன்றி

1 அகம் : 25 ; 9-11

மலரும். முதன்முதலாகப் பூக்கும் இப்பூ 'தலையலார்' எனப் படும். இதனை,

"இலையில் அஞ்சினை இனவண் டார்ப்ப
முகையேர் மென்முகை அவிழ்ந்த கோங்கின்
தலையலர் வந்தன"[1] —எனப் பார்காப்பான்

என்னும் புலவர் பாடிக் காட்டினார். இக்கோங்கைப் போன்றே இலவமும்,

"இலயில மலர்ந்த முகையில் இலவம்" (அகம் : **11** : 3)

"இலையில மலர்ந்த ஓங்குநிலை இலவம்"
(ஐங்குறு : 338 : 2)

என்றபடி இலைகள் உதிர்ந்த பின் மலர்வதாகும். இலையுதிர் மலர்ச்சியால் இவை இரண்டும் ஒன்றுபடுத்திப் பேசப்படும். மேலும் இரண்டும் பாலை நில மலர். இலக்கியங்களில் அடுத் தடுத்து இடம் பெற்றவை.

இரண்டிலும் பஞ்சு தோன்றும் என்ற ஒரு கருத்து உண்டு. அது பொருந்துவதாக இல்லை. கோங்கின் வண்ணனைகளாக கருத்துகளாக வழங்கும் தமிழ் இலக்கியங்களில் எவ்வொரு இடத்திலேனும் கோங்கிற் பஞ்சு உண்டு எனப்படவில்லை. ஒரு சிறு குறிப்பும் இல்லை. இக்கருத்து எவ்வாறு எழுந்தது என்பதை இலவத்தின் கருத்து விளக்கத்தில் காணவேண்டும்.

மேற்காட்டப்பட்ட சில ஒற்றுமைகளால் நண்பர்களாகிய இவை இரண்டும் மறு சில வகை வேறுபாடுகள் கொண்டவை. இவ்வேறுபாடுகளால் கோங்கிற்கு மாறாக இலவம் குறிக்கப் பட்டது.

பருவம் இல்லாத கோங்கம் என்று பாடியபரிபாடல் அடுத்து இலவத்தை வைத்து,

"பருவமில் கோங்கம் பகைமலர் இலவம்"[2] —என்று பகை மலராக இலவத்தைக் குறித்தது. எவ்வகையில் பகை?

கோங்க மலரின் நிறம் மஞ்சள்;

---

1 குறுந்: 254 : 1—8 2 பரி : 19 : 79

இலவத்தின் மலர் நிறம் செம்மை. மஞ்சளும் செம்மையும் வேறுபட்ட நிறங்கள். இவ்வேறுபாட்டைப் பகையாகக்கொண்டார். இதற்கு உரைவகுத்த பரிமேலழகரும் 'நிறத்தாற் பகைத்த மலரை யுடைய இலவம்' என்றார். மேலும் 'பருவம் இல்லாத' கோங்கு என்று அடைமொழி கொடுத்து, அடுத்துப் 'பகை' என்று இலவத்திற்கு அடைமொழி கொடுத்திருப்பதால் மலரும் பருவம் கருதிப் பகை கூறப்பட்டதாகும். பாலை பாடிய பெருங்கடுங்கோ என்பார்,

*"ஆனேற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்"*[1]

— *என்று*

'எதிரிய இலவமாகக் குறித்தார். இங்கு 'எதிரிய' என்றதற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர்,

"பூக்கள் காலத்தை எதிர்கொண்ட இலவம்"

–எனக் காலத்தை - பருவத்தைக் குறித்துக் காட்டியதும் இங்கு நோக்கத்தக்கது. எனவே, பருவமில்லாத கோங்கிற்குப் பருவமுடைய இலவம் பகையாயிற்று. மேலும் மர வளர்ச்சியிலும் கிளை அமைப்பிலும் கொண்ட வேறுபாடுகளும் பகைக்குத் துணைக் கரணியங்களாகலாம்.

பகைமலராயினும் கோங்குடன் கொண்ட பிற இணைப்புகளால் இலக்கிய நிலையில் கோங்கை அடுத்து இலவம் காணத் தக்கதாகின்றது.

## 5. நெருப்பு மலர்.

### இலவம்

*"இலவம் பஞ்சில் துயில்"*[2] என்றார் பிற்கால அவ்வையார். துயில்வதற்கு இனிய மெத்தையில் துயில்கின்றோம். பஞ்சு மெத்தையிலா துயில்கின்றோம்? தேங்காய் நாரில் துயில்கின்றோம்; துணிகள் திணிக்கப்பட்ட முண்டு முடிச்சு மெத்தையில் துயில்கின்றோம்; செயற்கை நுரைப் பாளத்தில் துயில்கின்றோம்.

---

1 கலி 26 :5. 2 ஆத்தி சூடி : 26.

புதுமை வளர்ச்சி பஞ்சைப்பற்றவில்லை. நாட்டுப்புறமும், பழைமை மரபும் பஞ்சு மெத்தைகளைப் பற்றியுள்ளன. ஆனாலும் அப்பஞ்சும் சங்ககாலப் பஞ்சா என்றால் இல்லை என வேண்டியுள்ளது.

நாம் பயன்கொள்ளும் மெத்தை, தலையணைப் பஞ்சு இலவ மரத்தின் பஞ்சுதான் ஆனால், சங்ககாலத்தில் கொள்ளப்பட்ட இலவு வேறு; இன்று கொள்ளும் இலவு வேறு.

இரண்டும் அமைப்பாலும் காட்சியாலும் பலவற்றாலும் ஒன்றே போன்றவைதாம். இரண்டும் ஓங்கி வளரும்; சுற்று வட்ட மாகக் கிடைக்கையில் வளரும் கிளைகளை உடையவை. இலைகள் ஒத்தவை. காய்களும் ஒரே அமைப்பானவை. இரண்டிலும் பஞ்சு உண்டு.

ஆயினும், சங்க கால இலக்கியங்களில் குறிக்கப்படும் இலவம்,

"நீள் அரை இலவத்து அலங்கு சினை" (பெரும்பாண்:83)

"நீள் அரை இலவத்து ஊழ்கழி பன்மலர்" (அகம்:17:18)
—எனவும்

"ஓங்குநிலை இலவம்" (ஐங் : 338 : 2)

-எனவும் நீண்ட அடிமரத்தைக் கொண்டதாகவும், ஓங்கி வளர்ந்த நிலையின தாகவும் பேசப்பட்டது. பிற்கால இலவம் இவ்விரண்டாலும் ஓரளவில் ஒத்தது. முன்னது அடிமரம் பருத்து நீண்டது. பின்னதை விட உயரமாக ஓங்கியது.

முற்காலக் குறிப்புடைய இலவம் தனது அடிமரத்தில் முள் களைக் கொண்டது.

"முள்ளரை இலவத்து ஒள்ளிணர் வான் பூ"(ஐங் : 320: )

"முள்ளுடை
இலவம் ஏறிய கலவ மஞ்ஞை" (ஐங் : மிகை : 3 : 1, 2.)

"முளிகொடி வலந்த முள்ளுடை இலவம்" (நற் :105 : 1) இவ்வாறு அடிமரம் முள்ளைக் கொண்டது. மேல் கிளைகளில் முள்ளமைப்பு இல்லை. இம்முள்ளும் கம்பிபோன்று அமைந்த

கூர்மை உடையதன்று. அடிமரத்தில் முட்டு முட்டு அமைப்பாகக் கூம்பு வடிவத்தில் அமைந்திருக்கும். களிறு தன் தினவைக் குறைத்துக்கொள்ள இம்முள்ளமைந்த அடிமரத்தில் உராய்ந்து தேய்த்துக்கொள்ளும்.

"களிறு புலம்உரிஞ்சிய கருங்கால் இலவம்"[1] - என்றார் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார். ஆண்யானை தேய்த்துக் கொள்ளும் அளவில் இம்முள் சற்று உறுதிவாய்ந்தவை. மேலுள்ள பாடல் கொண்டு இதன் அடிமரம் கருமை நிறங்கொண்டது என்பதையும் அறியலாம்.

பிற்கால இலவம் முள் அற்றது. அடிமரம் சற்றுவெளிரியது.

எனவே, முன்னைய இலவம் 'முள்ளிலவம்' எனப்படும். சங்க இலக்கியங்களில் இலவம் என்பது இம் முள்ளிலவத்தையே குறிக்கும். முள்ளிலவின் அடிமரம் பருத்து நீண்டிருப்பது மட்டு மன்றி முட்டுக்கொடுத்த சுவர் போன்ற அமைப்புடையது, பின் இலவுதிரண்ட சுற்றுவட்டமானது.

இவை யாவற்றினும் மலர் நிறங்களே இவையிரண்டின் வேறுபாட்டை காட்டுபவை.

முள்ளிலவம்,

"எரி உரு உறழ இலவம் மலர" (கலி : 33:10)

"எரிப் பூ இலவத்து ஊழ்கழி பன்மலர்" (ஐங் : 3681)

என்றபடி நெருப்புப் போலும் சிவந்த நிறங்கொண்டது. முன்னர் இலவம் பூவைப் 'பவளக் கிண்ண'மாகக் கண்டதற் கொப்பப் பவளம் போன்ற கருஞ்சிவப்பு நிறங்கொண்டது. இதன் கருஞ்சிவப்பு நிறத்தைத் திருத்தக்க தேவர், இறைச்சி பிளந்தது போன்ற நிறமாகவும், அதன் இடையே நெருப்பு முளைத்துள்ளது போன்றும் குறித்து,

"ஊன்தகர்த் தனைய போன்றும்
ஊடெரி முளைப்ப போன்றும்
தோன்று பூ"[2] —என்றார். ஓதலாந்தையார் "முள்ளரை

1 அகம் : 309: 7. 2 சீவ. சி : 1701

இலவத்து, "ஒள்ளிணர் வான் பூ"[1] என்றபடி பளபளக்கும் செவ்வொளி கொண்ட பூவாகும்.

பின்னிலவம், மஞ்சள் நிறங்கொண்டது. இம்மஞ்சளும் பளிச்சிடுவது அன்று; சற்று மங்கலானதேயாகும்.

இவையிரண்டும் பஞ்சு தரும் மரங்கள். இக்காரணத்தால் ஆங்கிலத்தில் இவ்விரண்டும் 'பட்டெனும் பஞ்சு மரம்' என்னும் பொருளில் "*Silk cotton tree*" எனும் பெயரிடப்பட்டன. இவற்றின் வேறு பாட்டைக் குறிக்க மலரின் நிறங்களை வைத்து 'செம்பூப் பட்டெனும் பஞ்சுமரம்' *Red flower Silk cotton tree* என்று முள்ளிலவமும், 'மஞ்சட்பூப் பட்டெனும் பஞ்சுமரம்'—*Yellow flower silk cotton* எனப் பின் இலவும் குறிக்கப்பட்டன.

இங்கு ஒன்றைக் கருதல் வேண்டும். முன்னதாகிய முள்ளிலவத்தினின்றும் மலர் நிறத்தால் வேறுபடும் பின்னதைக் குறிக்கவே "கோங்கிலவம்" என்னும் குறியீடு எழுந்தது. பின்னது பஞ்சு முதலிய அமைப்பால் இலவம் ஆயினும் மலரால், கோங்கு மலர்போன்று மஞ்சள் நிறங்கொண்டது என்பதைக் குறியாக வைத்துக் 'கோங்குமலர் போன்ற மஞ்சள் நிறமுடைய இலவம்' என்னும் பொருளில் 'கோங்கிலவம்' எனப்பட்டது. இத்தொடர் உவமத் தொகைத் தொடர். இத்தொடரில் கோங்கு இலவத்திற்கு அடைமொழி என்பதை உணர்ந்து பொருள் காணின் இத்தொடர் கோங்கைக் குறிப்பது அன்று; இலவைக் குறிப்பது என்பதை அறியலாம்.

இதனைப் பிறழ உணர்ந்தோர் 'கோங்கிலவம்' என்பதைக் கோங்கின் மறுபெயராகக் கொண்டு கோங்கிற்கும் பஞ்சு உண்டு என்றனர். கோங்கு வேறு; இலவம் வேறு. இரண்டிலவத்திற்கும் வேறுபாடு காட்ட எழுந்த தொடரே 'கோங்கிலவம்' இஃதும் பிற்கால வழக்கு; இலக்கிய வழக்கன்று.

பிற்கால ஆங்கிலப் பெயர் இவ்விரண்டின் மலர்நிற வேறுபாட்டைக் காட்டுவது போன்ற இவற்றின் செடியியற் பெயர்கள். இவற்றின் இட வேறுபாட்டைக் காட்டுகின்றன. இரண்டும் காய்கள் முற்றியதும் வெடித்துப் பஞ்சைப் பறக்க விடுபவை

---

1 ஐங்: 320 : 1

இக்குறிப்புடைய பொருள் கொண்டு இரண்டும், '*BOMBAX*' எனப்பட்டன. இம்முறையிலேயே இவற்றின் வேறுபாட்டைக் குறிக்க முள்ளிலவத்தை '*BOMBAX MALABARICUM*' என்றும், பின்னதை '*BOMBAX PENDANDRUM*' என்றும் குறித்தனர், பிற்காலத்தமைந்த இவ்வாங்கிலப் பெயர்களில் முன்னது *MALABARICUM*' என மலைஞால நாட்டுக் குறி பெற்றதும் பின்னது அவ்வாறு பெறாததும் கொண்டு சங்ககால முள்ளிலவம் மலை நாட்டு மரமாகும் எனக் கொள்ளலாம். சங்க இலக்கியங்களிலும் இவ்வாறே காணலாம். பின்னது மலையில் மட்டுமன்றிப் பிற நிலங்களிலும் இடம் பெற்றது.

இரண்டும் நன்றாக முற்றி மஞ்சள் நிறப் பழமாகி உள்ளே பழத்திரட்சியின்றிப் பஞ்சாக வெடிக்கும். பழமென்று காத்திருந்த கிளியை ஏமாற்றி "இலவு காத்த கிளி"யாக்கும்.

முள்ளிலவம் தனது பஞ்சுச் சிறப்பால் அதன் பெயரையும் தனக்குக் கொண்டதாகும். பஞ்சைக் குறிக்கும் சொற்களில் பூளை என்பதும் ஒன்று. அதனிலும்,

"இலவம் பஞ்சின் பேர் பூளையாகும்" (சேந். தி.)

"நொய்யதோர் இலவம் பஞ்சு நுவன்றபேர் பூளைதானே"
(சூடா. நி : பல்பொருள் : 21 : 1)

—என இலவு தனக்கே பஞ்சுப் பெயரை உரிமையாகக் கொண்டது பெரும்பாணாற்றுப்படையும் இலவின்,

*"பூளையம் பசுங்காய் புடைவிரித் தன்ன*
*வரிப்புற அணில்"*[1] என்றது. மலைஞாலத்தில் இந்நாளிலும் இதனைப் பூளாமரம் என்றே வழங்குகின்றனர்.

பஞ்சிலும் முன்னது இனிய மென்மையும் வெண்மையும் பட்டுப் போன்ற பளபளப்பும் கொண்டது. இதன் பஞ்சே பஞ்சணைக்குப் பயன்படுத்தப்பட்டது. திருத்தக்க தேவர் இதனைத் தெளிவாக்கியுள்ளார். முன்னே கண்ட,

1 *பெரும்பாண் :* 84, 85.

1'இறைச்சிப் பிளவு போன்றதும், முளைத்த நெருப்பு போன்றதுமான செம்மைப் பூக்களைக் கொண்ட முள்ளிலவின் அணில் போன்ற பசுங்காய்; அப்

''*பைங்காய் கான்றமென் பஞ்சி ஆர்ந்த*
*மெல்லணை*''1 —என்று காட்டப்பட்டுள்ளது.

இவையெல்லாங் கொண்டு, முற்காலத்து இலவு என்பது
முள்ளுடைய அடிமரம் கொண்டது;
அவ்வடிமரம் உதை சுவருடன் பருத்து நீண்டது;
இலையில்லாமல் மலர்வது;
பசுங்காயில் வெண்மையான விதைகளைக் கொண்டது;
மென்மையான பஞ்சைக் கொண்டது;
பழங்காலப் பஞ்சணைகளுக்குப் பயன்பட்டது;
தன் தனித்தன்மையாகக்,
கருஞ்சிவப்பான மலர் கொண்டது.

செஞ்செவே பூக்கும் இப் பூ தனிப் பூவாகும். தடிப்புள்ள இதன் புறவிதழ் கிண்ண அமைப்புடையது. மேலே 3 பிரிவானது.

அகவிதழ் ஐந்து. சற்றுத் தடிப்பானவை. தனித்தனியே விரிந்திருக்கும். இவற்றின் செம்மையே பளிச்சிட்டுத் தோன்றும்.

சூலகத்தில் மகரங்கள் 60க்கு மேல் அமைந்து அவற்றின் மேற்பகுதி முடிச்சாகிப் பின் 16 அளவில் விரிந்து நிற்கும்.

இலைகள் யாவும் உதிர்ந்த கிளைகளில் இப்பூக்கள் வரிசை யாகப் பூத்துத் தோன்றும். ஒருகிளையில் இவ்வாறு தொடர்ந்து வரிசையாகப் பூத்திருப்பது ஒவ்வொன்றும் ஒவ்வொரு விளக்காகக் கார்த்திகைப்

''*பெரு விழா விளக்கம் போலத்*'' 2

தோன்றும். முகைகள் யாவும் மலர்ந்து நெடிய ஒழுங்காகத் தோன்றுவதை அவ்வையார், கார்த்திகை விளக்கின் விரிசையாகப் பாடினார்.

---

1 *சீவ. சி* : 1701 2 அகம் : 185 ; 18.

"இலைகளே இல்லாமல் அனைத்து முகைகளும் மலர்ந்துள்ள இலவம் கார்த்திகை நாளில் மகளிர் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு நிறைய ஏற்றிய அழகிய சுடர்விளக்கின் நெடிய ஒழுங்காக அழகுடன் தோன் றும்"[1] — என்றார். மலரின் புறவிதழ்க் கிண்ணம் அகல் விளக்காகவும், செவ்விய அகவிதழ் எரியும் சுடராகவும் தோன்றின. மகளிர் மகிழ்ச்சி ஆரவாரமான இரைச்சலைப்போன்று காற்றின் அலைப்பால் மரத்தில் எழுந்த பேரோசை இருந்தது.

மரம் முழுதும் செம்மை மலர்களே நிறைந்திருந்த தோற்றத்தை,

*"மலையுறு தீயில் சுரமுதல் தோன்றும்"*[2] — என மலையே தீப்பிடித்தது போன்றிருந்ததாக ஓதலாந்தையார் பாடினார்.

தீக்காடாக மலர்ந்திருந்த இலவ மரம் ஒன்றில் தோகை மயில் ஒன்று ஏறியது.

*"... ... ... — முள்ளுடை*
*இலவம் ஏறிய கலவ மஞ்ஞை*
*எரிபுகு மகளிர் ஏய்க்கும்"*[3] — என்றமை மலரின்

மிகுதியையும் அவற்றின் தொகு நிறத்தையும் காட்டுகின்றது. அத்துடன் நெருப்பில் இறங்கிய மகளிர் என்பது உவமைப் பொருத்தத்துடன் அக்காலத்து மகளிர் கணவரை இழப்பின் எரிபுகுநிலையும் பதிவாக்குகின்றது.

தீப் போலும் பூக்களைக்கொண்ட மரத்தில் பெருங்காற்று மோதுவதால் மலர்கள் சிதறித் தரையில் வீழ்வதை இடியுடன் கூடிய நெருப்பு வானத்திலிருந்து தரையில் வீழ்வது போன்றிருந்ததாக[4] ஓதலாந்தையார் வண்ணித்தார்.

காற்றின் மோதலால் அன்றி இயற்கையாகவே வீ யாகும் மலர் ஒவ்வொன்றாகக் காம்பினின்றும் கழன்று உதிரும். இதனை,

'பெருவிழா அமைந்த பழம்பெருமையுடைய மூதூரில் ஏற்றப்பட்டுள்ள நெய் விளக்குகளிலிருந்து விழும் சுடர் போல விழும், —என்றும்,

1 அகம் : 11 : 3-5.
2 ஐங் : 338 : 2, 3.
3 ஐங் : மிகை 3 : 1-3.
4 ஐங் : 320 : 1-4

'வீழ்ந்தவைபோக எஞ்சியுள்ள சில மலர்கள்
வைகறைப் போதில் வானில் தோன்றும் சில விண்மீன்
களைப் போன்று காட்சியளிக்கும்[1] —என்றும்
கயமனார் வண்ணித்தார்.

இலவத்தின் முழு மலர் இறைச்சித் துண்டாகவும், முளைத்த நெருப்பாகவும், சுடர் விளக்காகவும், எரிந்து விழும் நெய் விழுதாகவும், வைகறை விண்மீனாகவும் தோன்றியதைக் கண்டோம்.

மலரின் ஓர் இதழ் தனது தடிப்பாலும் மென்மையாலும் செம்மையாலும் மகளிரது வாய் இதழுக்கு உவமையாக இலக்கியங்கள் பலவும் பாடின.

"இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்" (பெரும்பாண் : 27)
"இலவிதழ்ச் செவ்வாய் இளமுத் தரும்ப" (சிலம்பு : 14 : 136)
"இலவிதழ்ச் செவ்வாய் காணாயோ" (மணி : 20 : 51)

இவ்விதழின் மென்மையும் செம்மையும் மகளிரது அடிகட்கும் உவமையாயின. "இல்வம் போது ஏரெழிற்றகைய சீரடிகள்"[2] என்றார் திருத்தக்கதேவர். அவ்வடிகள் செம்பஞ்சிக் குழம்பால் மேலும் செம்மை ஊட்டப்பட்டதை எண்ணிய அவரே இலவ இதழுக்கும் அரக்குச் செம்மையை ஊட்டி "இலவம்பூ அரக்குண்டன்ன பஞ்சிமெல் அடியினாள்"[3] —என்றார்.

மகளிரது செவ்விதழுக்கும் சீரடிக்கும் உவமையான இலவிதழ் புலவரது நாவிற்கு உவமையாகிப் பெருமைகொண்டது. பெரும்புலவர் பரணர், மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேர மன்னனது கொடைப் பெருமையைப் பாடினார். அவனைப் புலமையில் மேம்பட்ட சான்றோர் ஏத்திப் பாடியதைக் குறித்தார். குறிக்கின்றவர், அச்சான்றோரது நாவின் நிறத்தையும் நேர்மையையும் "அம் செந் நா" என்னும் தொடரால் குறித்தார். இதில் உள்ள செம்மை நேர்மையுடன் நாவின் நிறத்தையும் குறிப்பதாகும். அச்செம்மை நிறத்தை,

"இல(வ)மலர் அன்ன அஞ்செந் நாவின்
புலமீக் கூறும் புரையோர்"[4]

1 அகம் : 17 : 18-21
2 சீவ. சி : 1588
3 சீவ. சி : 1881
4 அகம் :142 : 1, 2.

-என இலவ மலர்ச் செம்மை கொண்டு காட்டினார். இதனால் இலவ மலர் சான்றோர் நாவிற்கு உவமையாகி மிக உயர்ந்த இடத்தைப் பெற்றதாகின்றது.

இம்மலர்பற்றிய செய்திகள்—வண்ணனைகள்:

"வியன் காட்டு இயவின்", "ஆலியின் தாஅம் காடு", "மைபடு மாமலைவிலங்கிய சுரன்", 'பயந்தபு கானம்' என்றெல்லாம் பாலைநிலத்தோடும், குறிஞ்சி சேர்ந்த பாலையோடும் அமைந்துள்ளன. இலவம் அமைந்த சங்கப் பாடல்கள் மிகுதியும் பாலைத் திணைப் பாடல்களாகவே உள்ளன. பெருங்கதை ஆசிரியரும் பாலை நிலப் பட்டியலிலேயே இலவை வைத்தார். எனவே,

இது பாலை நிலப் பூ.

"தண்பத வேனில்", "தாதவிழ் வேனிலோ வந்தது" "உள்ளார் கொல்லோ இலவம் மலர்ந்த இளவேனிலை" என்றெல்லாம் இலவ மலர்ச்சியின் காலம் இளவேனிலாகக் குறிக்கப் பட்டுள்ளது. இக்காலத்தும் மாசி இறுதி தொடங்கி இலைகள் உதிர்ந்து வர சித்திரை நடு அளவில் பூக்கள் தோன்றுவதும்

இலவம் பூ இளவேனிற் பருவப் பூ எனக் காட்டுகின்றது.

இளவேனிற் காலத்தில் இதன் மலரைக் காக்கை மைனா முதலிய பறவைகள் இரையாக உண்ணும்.

இலவ மலரின் நிறைவாக அது பெற்றுள்ள பெயர்களைக் காணவேண்டும்.

இலவ மரத்தைப் 'பஞ்சு மரம்' என்பது நாட்டுவழக்கு. இங்கு நிகண்டுகள் வகுக்கும் பெயர்களைக் காண வேண்டும். சேந்தன் திவாகரம் "பொங்கர்"[1] என்னும் மறுபெயரைமட்டும் குறித்தது, பிங்கலமும் சூடாமணியும் இப்பொங்கருடன் "சான்மலி", "பூரணி"[2] என்னும் இருபெயர்களைக் குறித்துள்ளன

'பொங்கர்' என்பது பலபொருள் ஒரு சொல். சோலை என்னும் பொருள் இவ்வொரு மரத்திற்கு மட்டும் பொருந்தாது. மரக்கொம்பு என்றொரு பொருள் உண்டு. இலவத்தின் கிளைகள்

---

1 சே. தி : மரப்பெயர்.
2 பிங் : 2710
2 சூடா. நி ; மரப் : 29 : 3.

பருத்தவை அன்று. கொம்புகளாகப் பக்கவாட்டில் கிடக்கை முறை யில் விரிந்திருப்பன. இவ்வமைப்பு பெரும்பாலும் இலவத்திற்கே உண்டு. இக்கொம்பு அமைப்பினால் 'பொங்கர்' என்னும் பெயர் அமைந்திருக்கலாம்.

"பூரணி" என்பது வடசொல். உள்ளே பொதிந்து நிறைந் திருப்பது என்னும் பொருளால் இப்பெயர் அமைந்திருக்கலாம்.

சான்மலி என்னும் பெயர் பிற்கால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. இச்சொல்லைச் சமற்கிருதமாகக் கொண்டனர் இச்சொல்லமைப்பு தமிழ்ப்பாங்குடையது. சால் என்னும் உரிச் சொல்லடியாகத் தோன்றிய சொல்லாகும். இப்பெயரையே செடி நூலார் எடுத்துக்கொண்டு இலவத்திற்கு (சால்மாலியா) '*Salmalia Malabarica*' எனப்பெயர் சூட்டியுள்ளனர்.

சான்மலி என்னும் பெயரில் தீவு ஒன்று கந்தபுராணத்தி லும் நைடதத்திலும் குறிக்கப்படுகின்றது. இது இலவமரங்கள் நிறைந்த தீவு என்றும் முள் இலவம் கொண்ட தீவு என்றும் விவரிக்கப்படும். இத்தீவு இக்காலத்து ஆசுத்திரேலியா என்றும் கருதுவர்.

சான்மலிசாரம் என்பது இலவ மரத்தின் பிசின் என்பர்.

தமிழ் இலக்கியங்களைப் பொறுத்த அளவில் இலவு, இலவம் என்னும் இரண்டுமே செய்யுளாற்றுச் சொற்கள்.

மருத்துவத்தில் இலவம் பூவிற்கு ஓரிடம் உண்டு. இப் பூவைக் கொண்டு கறுக்குநீர் செய்து குடிப்பர். இது குருதிப் பெருக்கை அடக்குவது, மலம் இளக்கி என்பர். சிறு நீரைப் பெருக்கும். இதன் காய்ந்த பூவும் மருந்துக்கு ஆகும். இதன் விளைபொருளாம் பஞ்சு சீழை வற்றச் செய்யும். பிசினும் மருந் தாகும்.

மலரால் கண்ணுக்குக் காட்சியாகி, பஞ்சால் படுக்கைக்கு இனிமையாகி விளங்குவது இலவம்.

இலவமும் கோங்கும் இணைந்த இருமலர்கள். கோங்குடன் இணைத்துப்பேசப்படும் மற்றொன்று குரவம். இலவத்தின் அளவில் இணைப்பு இல்லை. இலக்கிய ஆட்சியிலும், மலரளவிலும் இதன் கருத்துக் காணத்தகும் நிலையுடையதன்று. கோங்கத்துடன் கொண்ட இணைப்பாகக் காணும் இடங்கருதி அடுத்துக் குரவம் எடுத்துக்கொள்ளப்படுகின்றது.

# பாவை மலர்.

## குரவம்.

கோங்க மரத்துடன் சேர்த்துப் பேசப்படுவது குரவம், பேச்சில் மட்டுமன்றி அதற்கண்டையில் வளரும் தொடர்பு கொண்டது. மலர், காய் முதலியவற்றினாலும் தொடர்பு கொள்வது.

இது குரா, குரவு, குரவம் எனும் பெயர் வளர்ச்சிகொண்டது. இதன் மலரைப் பொறுத்த அளவில் ஒரு குழப்பத்தைத் தீர்த்தல் முதற்கருத்தாகின்றது. இம்மரத்தின் காய் 'பாவை' எனப்படும். இக்காயின் அமைப்பு கைகால் இல்லாத சிறு குழந்தை வடிவில் தலைப்பகுதி போன்று மேலும், உடற்பகுதி போன்று அடியும் அமைந்திருக்கும். இதனால் இதனைக் 'குழவி' என்றும் கூறினர். செய்யாப்பாவை என்றனர். ஐங்குறுநூற்றில்,

*"நறும்பூங் குரவம் பயந்த*
*செய்யாப் பாவை கொய்யும் பொழுதே"* [1]

—என்னும் பகுதிக்கு உரை எழுதிய அதன் பழைய உரைகாரர் 'கொய்யும்' என்னும் சொல் கொண்டு 'பாவை' என்பதற்குப் 'பூ' என்று எழுதினார். மேல் அடியில் "நறும் பூங்குரவம்" என்பது பூவைக் குறிக்கும். கீழுள்ள பாவை காயைக் குறிக்கும். இவ்வாறிருக்க அவ்வுரைகாரர் பூவைப் பாவை என்று எழுதியதால் குராவின் பூதான் பாவை எனப் பிற்காலத்தவர் சிலர் எழுதினர். இது தவறானதே. எனவே குரவம் பூ தனி. அதன் காய்தான் பாவை எனப்படும். இதனைப் பின்னர் வரும் கருத்துகளாலும் உணரலாம்.

குரவம் கோங்கொடு வளரும் மரம் என்று குறித்தோம். இதன் அடிமரம் *"குறுநிலைக் குரவு"*[2] என்றபடி குட்டையானது. ஆனால் கிளைகள் *"குரவம் நீள் சினை"*[3] என்றபடி நீண்டு வளர்பவை. *"குரவத்து ஓங்குசினை"*[4] என்றபடி உயர்ந்தோங்கி வளர்பவை. 'தலைவியே! நீ வண்டலம் பாவை செய்து விளையாடுவதற்கு உரிய குரவ மரத்து நிழல் உள்ளது'[5] என்று தலைவன் குறித்தான். இதுகொண்டு அதன் நிழல், மரத்தின் தழைச் செறிவைக் காட்டுகின்றது. எனவே, இதிற் பூக்கும் குரவ மலர் கோட்டுப் பூவாகும்.

---

1 ஐங் : 344;
2 நற் 56 : 1.
3 ஐங் : 369 : 4.
4 அகம் : 317 : 11, 12
5 திணை. நூ : 70 : 1.

கோங்கம் போன்று குரவமும் பாலை நில மரம்.

*"குரவம் மலர மரவம் பூப்பச்*
*சுரன் அணிகொண்டன்று கானம்"*[1] -என்னும் அடிகளாலும், ஐங்குறு நூற்றின் 369 ஆம் பாடலுக்கு அதன் உரைகாரர், "இது பாலைக்குரித்தாகிய வேனிற்கண் நிகழும் குரவும் குயிலும் கூறுதலால்"-என்பதாலும் குரவ மலர் பாலை நில மலர்

*"பின்பனி அமையம் வருமென முன்பனி*
*கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே"*[2] -என்றபடி முன்பனிக் காலத்தில் இம்மரம் கொழுந்துவிட்டு அப்பருவ இறுதியில் அரும்பை ஈனும். பின்,

*"... .... ... ... ... ... குரவு மலர்ந்து*
*அற்சிரம் (பனிக்காலம்) நீங்கிய அரும்பத வேனில்"*[3] -வருவதைக் குறிப்பதன்படி இளவேனிற்பருவத்தில் மலர்ந்தும் காய்த்தும் விளங்கும். இதன் காய் 'பாவை' என்னும் சிறப்பால் காய்ப்பருவமுங்கொண்டு இது இளவேனிற் பூவாகியது. ஐங்குறு நூற்றில் இளவேனிற் பத்தில் இக்குரவம் குறிக்கப்படுவதும் துணையாகின்றது. எனவே, குரவ மலர் இளவேனிற் பருவ மலர்.

இதன் அரும்பு,

*"அரவு எயிற்றன்ன அரும்பு முதிர் குரவின்"*[4] -என்றபடி பாம்பின் பல் போன்ற வடிவுடையது. பாம்பின் பல்போன்று அரும்பும் பூக்களைக் குறிக்கும்,

*"குரவும் தளவும் குருந்தும் கோடலுந்*
*அரவுகொண்டு அரும்ப"*[5] - எனும் கொங்கு வேளிர் பாடலும் பொருந்துகின்றது.

இதனைக் கபிலர் "பல்லிணர்க் குரவம்"[6] என்றார். இங்கு இணர் என்பது அதன் பல இதழ்களைக் குறிக்கும். இவ்வாறே இதற்கு நச்சரும் உரை எழுதினார். கச்சிப்பேட்டு இளந்தச்சனாரும்

1 ஐங் : 357
2 நற் : 224 : 2, 3
3 அகம் : 97 : 16, 17.
4 அகம் : 237 : 3.
5 பெருங்: உஞ்சை : 49 : 98, 99
6 குறி. பா : 69

"குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ"[1]

—என இதன் பல இதழ்களை இணராகக் குறித்து இப்பூவின் அமைப்பு குவிவானது என்பதையும் 'குவியிணர்' என்பதாற் காட்டினார். இவ்வடியில் இப்பூவைப் பற்றிய மற்றைய இரண்டு கருத்துகள் உள. ஒன்று இதன் காம்பு குறுகியது என்பது. இதனைத் திருத்தக்க தேவரும்,

"குறுந்தாள் குரவின் குவிமுகை"[2] —என்றார்.

மற்றொன்று இப்பூவின் நிறம் பற்றியது. 'வான்பூ' என்றபடி இது வெண்மை நிறப் பூ. இதன் இதழ்கள் உதிர்வதற்கு,

"... ... ... ... ... ... வெள்ளி
நுண்கோல் அறைகுறைந் துதிர்வனபோல்"[3] —என

வெள்ளிக்கம்பி உவமையாக்கப்பட்டிருப்பது கொண்டும் இதன் வெண்மையை அறியலாம்.

இப்பூவின் முழு உருவ அமைப்பில் இது "குறுமலர்"[4] தான். திருத்தக்க தேவரும் இதன் காம்பையும் சேர்த்துக் குறும்பூழ்ப் பறவையின் காலை உவமையாக்கினார்.[5] இவ்வாறு குவிந்த குறுமலர்கள் பல பூப்பதை,

"பல் வீ பட்ட பசுநனைக் குரவம்'[6] —என்றார்

மிளைகிழான் நல்வேட்டனார்.

இலக்கியங்களில் இதன் பூவைவிடக் காய்தான் நயம்படப் பாடப்பட்டுள்ளது. மகளிர் இக்காயைப் பாவையாக—பொம்மையாகக்கொண்டு தொட்டிலிலிட்டுத் தாலாட்டி விளையாடுவர். இக்காயிலிருந்து சங்குத் தூள்போல் உதிர்வதை முன்னரும் கண்டோம். இக்காய் பருவ காலத்தில் சாம்பல் நிறத்தில் கிளைகளில் ஆங்காங்கு தொங்கிஅசைவது காட்சிக்கு இனிமை பயக்கும். சிறு குழந்தைப்பொம்மை தொங்கி ஆடுவதுபோன்றிருக்கும். இக்காய் காரணமாக இம்மரமே 'குரவம் பாவை' என்ற பெயரையும் பெற்றது. இலக்கியத்தில் பல்லிடங்களில் இம்மரம் 'குரவம் பாவை' என்றே குறிக்கப்படும்.

---

1 நற் : 266 : 2
2 பெருங்: மகத : 1 : 192
3 அகம் : 317 : 9 10.
4 பெருங். நர : 2 : 17, 18
5 சீ. சி : 1651
6 குறு : 341

"... ... ... ... ... ... குரவத்து

ஓங்கு சினை நறு வீ"[1] – என்னுமாப்போல் இஃது ஓரளவில் மணமுள்ள பூவாகையால்,

"ஆடுடை இடைமகன் சூட"ப்[2] –பயன்பட்டது.

மாணிக்கவாசகரும்,

"குரவுவார் குழல் மடவாள்"[3] – என உமையைக் குறித்தார்

பொய்கையாழ்வார்,

"குராநற் செழும்போது கொண்டு —வராகத்

தனியுருவன் பாதம் பணியுமலர்"[4] –என்றார். இவற்றால் இது கடவுளரோடு தொடர்புபடுத்தப்பட்டுச் சூட்டும் பூவாகவும் அமைந்தது.

இதற்குக் கோட்டம், குடிலம், கோபிதாரம் என்னும் மறு பெயர்களை நிகண்டுகள் வகுத்துள்ளன. இப்பெயர்கள் மரத்தாலும் காயாலும் அமைந்தவை.

இம்மலரளவில் நோக்கினால்,

குரவம் பூ,

கோட்டுப் பூ; பாலைநிலப் பூ; இளவேனிற் பூ;

வெண்மை நிறப் பூ; குவிந்த சிறு பூ; சூடும் பூ;

சூட்டும் பூ.

இது கோங்கத்துடன் இணைய, கோங்கு இலவத்துடன் இணைய இவை மூன்றும் ஒரு முக்கூட்டு மலர்களாகின்றன. இவை போன்று முக்கூட்டான மலர்கள் புன்னையும் தாழையும் ஞாழலும். இவை மூன்றும் நெய்தல் நிலத்தில் அடுத்தடுத்து இடம் பெற்றவை. இலக்கியத்திலும் அவ்வாறே. மூன்றனுள்ளும் புன்னை அதிக இடம்பெற்றது.

---

1 அகம் : 317 : 11, 12.
2 நற் : 266 : 8.
3 திருவா : சத : 17 : 2.
4 திருவாய் : இயற்பா ; 2 : 81.

# 6. முத்து மலர்.

## புன்னை.

"புன்னையொடு ஞாழல் பூக்கும்"[1] –என அம்மூவனார் ஐங்குறுநூற்றில் இரண்டிடங்களிலும், குறுந்தொகையில் ஓரிடத்திலும் பாடியுள்ளார். இவர்போன்று புன்னையையும் ஞாழலையும் இணைத்துக் கடுவன்மள்ளனார் முதலிய புலவர்களும் ஆங்காங்கே பாடியுளர்.

புன்னையொடு தாழையை இணைத்து,

"மன்றப் புன்னை மாக்கிளை நறுவீ
முன்றில் தாழையொடு கமழும்"[2] என நெய்தல் தத்தனாரும் மற்றும் கீரங்கீரனார், சாத்தனார், இளங்கோவடிகளார் முதலிய பல புலவர்களும் பாடியுளர்.

புன்னையொடு ஞாழலையும் தாழையையும் கூட்டி,

"தெரியிணர் ஞாழலும் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின் கைதையும்[3] –என நல்லந்துவனாரும் மற்றும் கருவூர்க் கண்ணம்பாளனார், கணிமேதையார் முதலிய புலவர்களும் பாடியுளர்,

இவ்வாறு இரண்டும் மூன்றும் பாடப்படும் இடங்களிலெல்லாம், 'கானல்', 'பெருங்கடற்கரை', 'பெருமணல்', 'துறைவன்' 'சேர்ப்பன்' என்னும் நெய்தல் நிலச்சொற்கள் இடம் பெற்றுள்ளன இவை மூன்றையும் நெய்தல் நிலத்திற் கண்டு உவந்த புலவர் பெருமக்கள் பாடிக் களித்தனர். அவர்தம் பாடல்களில் அவ்வவற்றின் தன்மைகளும் எழிலும் பயனும் சில செடியியற் கருத்துக்களும் தெரிவிக்கப்படுகின்றன.

இவை மூன்றும் நெய்தல் நிலத்தவையாயினும் — கடல் மணற்பாங்கில் வளர்வனவாயினும் புன்னை கடற்கரையோரத்திலும் உள்ளிடங்களிலும் வளர்வதாகும்.

---

1 ஐங் : 108 : 1
2 நற் : 49 : 8
3 கலி : 127 : 1, 2

"குலவு மணல் அடைகரை நின்ற புன்னை"

(குறு : 236 : 34)

"ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னை"

(குறு : 311 : 5)

என்பன கொண்டும் இதன் கரைவளர் நிலையை அறியலாம்.

கடற்கரையில் இடம் பெற்றதால் கிழக்கிலிருந்து வீசும் கடற்காற்றால் நாள்தோறும் தாக்கப்படும். இத்தாக்குதலால் இதன் கிளைகள் மேற்கு நோக்கி வளைந்து வளரும்; இதனிலும் கவனம் வைத்த பிசிராந்தையார்.

*புன்னை பூத்த இன்நிழல் உயர்கரை*

.... .... ... ... ...

... ... ... ... —

*மேக்குயர் சினை"* 1 — என மேற்றிசை நோக்கி உயர்ந்து வளர்ந்துள்ளதைக் குறித்தார். நெய்தல் நிலப் பறவையாகிய நாரைகள் மேற்கு நோக்கிய கிளைகளிலேயே பாதுகாப்பாகத் தம் இருப்பிடங்களைக் கொண்டன. மற்றொரு புலவரும்,

*"கருங்கோட்டுப் புன்னை குடக்கு (மேற்கு) வாங்கு*

*பெருஞ்சினை"* 2 — என மேற்கு

நோக்கி வளைந்துள்ளதைப் பாடினார்.

இந்நிலைகொண்டும் நோக்கும் போது நெய்தல் நிலத்திற்குரிய மர வகைகளில் புன்னை உரிமையான இடம்பெற்றதாகின்றது. மேலே கண்டுள்ள முக்கூட்டாகிய மூன்றிலும் புன்னையே இலக்கியங்களில் மிகுதியான இடத்தைப் பெற்றுள்ளது.

அதிக இடத்திலும் அகநானூற்றில் ஒரு வியப்பான அமைப்பைப் பெற்றுள்ளது. 25 பாடல்களில் இடம் பெற்றுள்ளது. அப்பாடல்களின் எண்கள் பின்வருபவை. அகநானூற்றுப் பாடல் எண்கள்:

10, 20, 30, 40, 45,
70, 80, 100, 106, 145,
170, 180, 190,

---

1 நற் 91 : 2 6. 2 நற் : 167 : 1.

230, 240, 250, 260, 270, 290,

310, 320. 340, 350, 360, 370. சில போசமற்றவை பத்தளவு எண்களுள்ள பாடல்களிலும் அவற்றிலும் பெரும்பகுதி பத்து அடுக்கிலும் அமைக்கப்பட்டுள்ளமை இயற்கையில் அமைந்த தா, தொகுத்தோர் ஒரு கவனங்கொண்டு அமைக்க அமைந்ததா என்று எண்ணத் தோன்றுகின்றது.

புன்னை மரங்கள் செறிந்த இடங்களைக் குறிக்கும் தொடர் கள் இவை: "புன்னைக் கானல்"

"புன்னைத்துறை"

"புன்னைப் பொதும்பர்"

"புன்னைய நறும்பொழில்"

"புன்னைய முன்றில்"

"புன்னையங்கொழுநிழல்"

–இவைகொண்டும் புன்னையால்

நெய்தல் நிலப் பெருஞ்சிறப்பையும் அறியலாம்.

இம்மரம் மிக உயரமாக வளர்வதன்று. அடிமரம் சற்றுக் கருமை நிறத்தில் ஓரளவு சுருச்சரை கொண்டது. "பராரைப் புன்னை" என்றது போன்று அடிமரம் சற்று பருத்தது. அடி மரம் "நெடுங்காற் புன்னை", "கொடுங்காற் புன்னை", "முடத் தாள் புன்னை" என்பனவற்றிற்கேற்பச் சற்று நீண்டதாகவும் வளைந்தும் தோன்றுவது.

கிளைகளும், "கருங்கோட்டுப் புன்னை", "நெடுஞ்சினைப் புன்னை" என்றமைக் கேற்பக் கருமையாகவும் நீண்டும் தோன்றும்.

இக்கருங்கிளையில் தழைத்த இலைகளையும் அரும்பு களையும் மலர்களையும் புலவர் உவந்து கண்டு சுவைத்துப் பாடியுள்ளனர். இவற்றின் வேறுபட்ட நான்கு நிறங்களால் இம் மரம் ஒரு நான்மணிக்கடிகை போன்று பாடப்பட்டது.

நிறங்களில் மனம்பதித்துப் பாடுதலில் வல்ல உலோச் சனார் பார்வையில் மலர்ந்த புன்னை பதிந்தது. மரம் கருநிறம்; இலை கருப்பச்சை–நீலநிறம்; அரும்பும் மலரும்வெண்மை; தாதுத் தூள் பொன்நிறம். இவற்றை வைத்து,

"இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை;
நீலத்து அன்ன பாசிலை; அகந்தோறும்
வெள்ளி அன்ன விளங்கிணர்; நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தாது உதிரும்"[1] — என்று

வண்ணித்தார். இஃதொரு புன்னையின் வரலாற்றுச் சுருக்கப் பாடல். இரும்புச் சாட்டில், பச்சைமரகத மணியாலான இலைத் தொழிலில், வெள்ளி மணிக்கொத்துகள் பொன் தூளொடு நான்மணிக்கடிகையாயிற்று.

பரஞ்சோதி முனிவர் பார்வையிலும் இந் நோக்கு முளைத்தது:

"மரகதம் தழைத்து, வெண்முத் தரும்பிப்
பொன்மலர்ந்து வாங்கும்
திரைகடற் பவளக் காடு செய்வன கன்னிப் புன்னை"[2]

—என இலைகளை மரகதங்களாய்க் கண்டார். அரும்புகளை முத்துக் களாகப் பார்த்தார். தாதுத்தூளைப் பொன்னாக நோக்கினார். இவற்றைக் கண்ட திரைகடல் பவளத்தை வழங்க வைத்ததாகக் கற்பித்தார்.

புன்னையின் இலை கரும்பச்சை நிறத்தது. கரும்பச்சையை நீலமாகச் சொல்லல் மரபு. அதனால் பல்லிடங்களிலும் நீலமாக "நீலத் தன்ன பாசிலை" எனப்பட்டது. இலைகள் தழைத்த மரம் தொலைத் தோற்றத்திற்கு ஒரே நீலமாகத் தோன்றும். இதனால், மரத்தையே "நீல்நிறப்புன்னை" (நற் : 4 : 2 : 163 : 8) என்றனர் அம்மூவனாரும் மற்றொருவரும்.

இதன் இலை தடிப்பானது. நீள்வட்ட வடிவினது. மேற் புறம் நல்ல வழவழப்பும் பளபளப்பான ஒளியும் உடையது. கதிரவன் ஒளியில் மின்னல் போல் இதன் பளபளப்பு பளிச் சிடுவதால்,

"மின் இலைப் பொலிந்த" (அகம் : 80 : 11)
"மின் இலைப் புன்னை" (குறு 5 : 2)

—எனப்பட்டது. இவ்விலையின்

---

1 நற் 249 : 1-4.
2 திருவிளை : தருமி : 18 : 3, 4.

வடிவத்தையும் நிறத்தையும் ஒளிவிடுதலையும் கண்ட பாவேந்தர் பாரதிதாசனார் சிறு குழந்தைகளது காலில் அணியும் தற்காலப் புதுமைச் செருப்பாகக் கண்டார். குடும்ப விளக்காம் ஒரு தாய்,

"புன்னை இலைபோல் புதையடிச் செருப்புகள்
சின்னவர் காலில் செருக"[1] -வைத்துப் பாடினார்.

புன்னையின் எழிற்பெருமையை அதன் அழகுப் பூக்களே சேர்த்தன. இதன் அரும்பு வெண்மை நிறமுடையது. உருண்டை வடிவினது. நிறத்தாலும் வடிவாலும்,

"முத்தம் அரும்பும் முடத்தாள் முதுபுன்னை"[2] – என்று முத்தாகக் கூறப்பட்டது. இவ்வாறு முத்தை உவமையாகவும்,

"நெடுங்கால் புன்னை நித்திலம் (முத்து) பூப்பவும்"[3] -என உருவகமாகவும் கூறினர். நிறத்தாலும் வடிவாலும் முத்தைப் போன்றதாயினும் முத்துப்போன்ற நல்வெண்மை கொண்டதன்று. சற்று மங்கிய வெண்மை. இதனையும் கருத்திற்கொண்டு, கழுவித் தூய்மை செய்யாத முத்து என,

"மண்ணா முத்தம் அரும்பிய புன்னை"[4] -என
நெடுஞ்சேரலாதன் என்னும் சேர மன்னனும்,

"மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்
புன்னை அரும்பிய"[5] -என இளந்திரையனார் என்னும் சோழ மன்னன் பெயர்கொண்டவரும் பாடினர். புன்னை அரும்பு —முத்து உவமைத் தொடர்பில் சுவையான பாடல்கள் உருவாயின.

'பூம்புகார் நகரின் கடற்கரை. ஒரு சிறுமி மணல்வீடு கட்டி விளையாடிக் கொண்டிருந்தாள். ஒரு பேரலை வந்து மணல் வீட்டை மூழ்கடித்துப் போயிற்று. அலைகள் வேண்டுமென்றே தன் வீட்டைக் குலைத்ததாகக் கருதினாள் அறியாச் சிறுமி. அலறிப்புடைத்துக் கொண்டு ஓடினாள். ஓடுகின்றவள் 'கடலே என் தாயிடம் சொல்கிறேன் பார்' என்று ஓலமிட்டுக் கொண்டே ஓடினாள். ஓடிய விரைவில் கழுத்திற்கிடந்து

1 குடும்ப விளக்கு : பக்கம் 16.
2 திணை. ஐ : 50.
3 சிறுபாண் : 59
4 அகம் : 30 : 13.
5 நற் : 94 : 5, 6

அலைந்த முத்து மாலை அறுந்து முத்துகள் சிதறிக்கடற் கரை மணலில் பரவிக்கிடந்தன. அப்பக்கம் போவோர் வருவோர் முத்துகளைப் புன்னையரும்போ முத்தோ என்று மயங்கிப் பேதுற்றனராம்''

இச்சுவைக் கருத்தை வழங்கும் பாடல் :

*''முன்னைத்தம் சிற்றில் முழங்கு கடலோதம் மூழ்கிப் போக*
*அன்னைக் குரைப்பன் அறிவாய் கடலே என்றலறிப் பேரும்*
*தன்மை மடவார் தளர்ந்துகுத்த வெண்முத்தம் தயங்கு கானல்*
*புன்னையரும் பேய்ப்பப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே*
*எம்மூர்''*[1]

ஒரு பாடலையே ஓரிலக்கியமாகப் படைத்தவர் 'எவரோ அறியோம்' என்று நாம் பேதுற வேண்டியுள்ளது. இவ்வாறே பேதுற வைக்கும் 'எவரோஒருபுலவர்' முத்தொள்ளாயிரத்தில், பாண்டியனது நாட்டுவளத்தைக் கூறுபவர்,

'நத்தையின் வெண்முட்டையும் புன்னையின் குவிந்த
மொட்டும்
இளைய பாக்கின் பாளையும் சிதறிக் கிடந்து யாவும் ஒளி
விடும்
முத்துகள் போன்று தோற்றமளிக்கும் பாண்டியனது
பாண்டி நாடு''[2]
—எனக் கூறினார்.

இவ்வரும்பிற்கு முத்துமட்டுமன்றி மற்றொரு பொருத்தமான உவமையைப் புலவர்கள் படைத்தனர்; படைத்து வளர்த்தனர். பல்லியின் சிறு முட்டை வெண்மையாகவும் உருண்டையாகவும் இருக்கும். புன்னை அரும்பிற்கு ஈடுகொடுக்கும் உவமப் பொருள்; அளவாலும் ஒத்தது.

*''பொரிப்புறப் பல்லிச் சினையீன்ற புன்னை''*[3] —என மாறன் பொறையனார் என்பார் பாட, அதனை விரித்து வழிமொழிந்தார் முன்றுறையரையனார். குவிந்த அரும்பு பல்லிமுட்டை;

1 *தனிப்பாடல்.*
2 *முத் :* 56.
3 *ஐந். ஐ :* 43.

அரும்பு விரிந்தமை பல்லிமுட்டை நெறிக்கப்பட்டு உடைந்தமை போன்றதாயிற்றாம். அஃதும் பொரி போன்று விரிந்ததாம். இதனை,

*... .... ... — பல்லி*

*நெரித்த சினைபோலும் நீளரும் புன்னைப்*

*பொரிப் பூ"* 1 என்றார்.

*சீரான அளவுடைய அரும்பிற்குப் பல்லிமுட்டை பொருந்திய* உவமையாயிற்று. வளத்தில் முற்றிய புன்னை மரத்தில் அரும்பிய முகை ஒன்றை இளநாகனார் பார்த்தார். அளவில் சற்றுப் பெரிய முகை. முட்டையில் சற்றுப் பெரிய முட்டை நினைவிப் பட்டது. அது ஊர்க்குருவியின் முட்டை.

*"உள்ளூர்க் குரீஇக் கருவுடைந் தன்ன*

*பெரும்போது அவிழ்ந்த கருந்தாள் புன்னை"*2 —எனப் பெரும் போதினைக் குறித்துக்காட்டி ஊர்க்குருவி முட்டை உடைந்த பாங்கை உவமையாக்கினார்.

முட்டை போன்ற முகை இயற்கையாக மலர்வதுடன் கடல் அலையின் நீர்த்துளி காற்றில் சிதறி நனைந்து மலரும் என்பதை உலோச்சனார் காட்டியுள்ளார் (குறுந்தொகை : 175 : 2—4). இதனைத் 'தூவற் கலித்த' என நீர்த்தூவலால் தழைத்ததாகவும் 'தூவற்கு எதிரிய' என்று தூவலை ஏற்றுக் கொண்டதாகவும் மாங்குடி கிழாரும், அம்மூவனாரும் பாடினர். இவ்வாறு தூவலை ஏற்று மலர்ந்துள்ள நிலையில் ஓர் உவமையும் எழுந்தது.

*"... ... — ... ...தூவற்கு எதிரிய*

*மீன்கண் டன்ன மெல்லரும்பு ஊழ்த்து"*3 —என முகை விரிந்து நிற்கும் நிலையில் விண்மீன் போன்று சற்று மஞ்சள் ஒளிபெற்றதைக் காட்டினார். இம் மஞ்சள் ஒளி ஏது? அதுதான் மலரின் தாதுத் தூள் வழங்கும் பொன் நிறம்.

*"... ... ... ... ...புன்னை*

*பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவன்"*4 என்று அம்மூவனார் காட்ட கற்பனைக் கம்பன்,

---

1 பழ : 317
2 அகம் : 281 : 6
3 அகம் : 10 : 1, 2
4 ஐங் : 110 : 1, 2

''பொற்கிழி விரித்தன சினைப் பொதுள்வ புன்னை''[1] என்று, பொன் பொதியை அவிழ்த்த காட்சியாக்கினார். இதழ்களின் வெண்மையைப் பொதியை மூடிய வெண்மைப் பட்டுத் துணியாகவும், முகை விரிதலை மலர்ச்சியாகவும், உள்ளே மஞ்சள் நிறத்தாது தோன்றுவதைப் பொதிந்த பொன்னாகவும் பாடிய நயம் சுவைத்தற்குரியது.

இப்பொன்தாது, மலரில் நிறையந் தோன்றுவதால் மலரின் நிறமே பொன்னாகத் தோன்றும். இவ்வாறு மலர், தாதினால் பொன் நிறம் கொண்டதை,

''புன்னை நறுவீ பொன்னிறம் கொளா''[2] என்று 'கொளா' என்னும் சொல்லமைத்துக்காட்டினார் மோசிக்கரையனார் என்பார். இதனையே புன்னையிற் பொன் உண்டாகும் என்னும் பொருளில் ''பொன்படு புன்னை'' எனப்பட்டது.

பொன்னிறங்கொண்டு விரிந்து ஒளிரும் மலர்க்கொத்திடையே ஒரு நாரை வந்து அமர்ந்தது. வெண்மையான நாரை நிறைமதிபோன்றும், பொன்னேந்திய புன்னை மலர் விண்மீனாகவும் இளங்கோவடிகளார்க்குத் தோன்ற,

''நிறைமதியும் மீனுமென அன்னம்நீள் புன்னை அரும்பிப்
பூத்த''[3] –எனப் பாடினார்.

வெள்ளிநிற மலர் பொன்னிறம் பெற்றுப் பொன்மலர் நாற்றம் பெற்றது போன்று மணத்தையும் பரப்பும். இம்மலர் மணத்தால் ''கடிமலர்ப் புன்னை'' என்றும், தேர்வால் ''ஆய்மலர்ப் புன்னை'' என்றும், பொன்னொளியால், ''திகழ்மலர்ப் புன்னை'' என்றும் கலித்தொகையில் அடைமொழிகள் பெற்றது. இம்மணம் பக்கமெல்லாம் பரவிக் கமழும். கடற்கரையில் பரதவர் காயவைக்கும் மீன் புலால் மூக்கை மூடிக்கொள்ளும் அளவில் கெடுநாற்றத்தைப் பரப்பும். அதனைப் புன்னைமலரின் மணம் போக்கும். ''புலால் அகற்றும் பூம்புன்னை'' (திணை: நூ ; 1)

''கடும்புலால் புன்னை கடியும் துறைவ'' (திணை நூ : 43:1)

''கயற்புலால் புன்னை கடியும்'' (நாலடி : 97 : 2, 3)

---

1 கம்ப : கார் : 74 : 4.
2 அகம் : 260 : 9
3 சிலம்பு : 7 ; 29

என்றெல்லாம் பாடினர். இம்மணம் விழாமணம் போன்று பரவிப் புலாலின் கடுமணத்தைக் கடிவதை உலோச்சனாரும்,

"...... புன்னை
விழவு நாறும் விளங்கிணர் விரிந்துடன் கமழும்"1 —எனப் பாடினார்.

இவற்றால் புன்னை மலர் மணம் கமழ்வது என்பதை அறியலாம். இம்மணம் கருதியும் எழில் கருதியும் இம்மலரை ஆடவரும் மகளிரும் கொய்து சூடினர். பல மலர்கள் கூடிய கொத்தான இம்மலர் எழில் மிக்கது. இதன் வெண்மை கருதி "வால் இணர்" என்றும், தாதின் பொன் நிறங்கொண்டு "பொன் இணர்" என்றும் பளிச்சிடுவது கொண்டு "விளங்கு இணர்" என்றும் பலவாறாக 'இணர்' எனப்பட்டது

இதன் மரம் தன் கிளைகளை மணலில் படியும் அளவில் தாழப்பரப்புவதால் மகளிர் கூட்டம் எளிதில் பூக்களைக் கொள்வர். "நின்றபுன்னை நிலந்தோய் படுசினை"யின் "தாதுசேர் நிகர்மலர் கொய்யும் ஆயம்" எனப்பட்டனர். ஆடவரும் "மெல்லிணர்க் கண்ணி மிலைந்த"னர்.

இவ்வகைகளாக இதன் மலர் புலாலின் கெடுநாற்றத்தைப் போக்கவும், சேரியை மணங்கமழச் செய்யவும், மகளிர் ஆடவர் சூடவும் பயன்பட்டது. பரதவ இனத்தார் இம்மலர்க் கொத்தை மிகுதியாகவே சூடினர் போலும். அவர்கள் 'சூடியவை போக எஞ்சிய மலர்களே காயாகக் காய்த்தன' என்றார் உலோச்சனார். அதனை,

"சூடுநர் தொடுத்த மிச்சில் (எஞ்சிய) கோடுதொறும்
நெய்கனி பசுங்காய் தூங்கும்"2

—என்றார். இதன்கண் உள்ள "நெய்கனி பசுங்காய்" என்பதால் இக்காயின் பருப்பிலிருந்து எண்ணெய் எடுக்கப்படுதல் அறிவிக்கப்பட்டது.

புன்னையின் கருத்துகளைத் தொகுத்தால்,

அடிமரம் வளைந்து சருச்சரையாகப் பருத்தது;

கிளைகளும் வளைந்தவை;

---

1 நற் : 63 : 3, 4 2 நற் : 278 : 4, 5.

இரும்புபோன்று கரிய நிறத்தவை;
இலைகள் கரும்பச்சையில் வழவழப்பும் மெருகும் உடையவை;
அரும்பு முத்தைப்போன்று வெண்மையும் உருட்சியும் கொண்டது;
பல்லிமுட்டை நெறிக்கப்பட்டது போன்று மலர்வது.
பொன்நிறத் தாதை நிறையக் கொண்டது;
காய்கள் பசுமையாக உருண்ட வடிவத்தவை;
எண்ணெய் வழங்குபவை —என அமைகின்றது.

புன்னை இலக்கியங்களில் மட்டுமன்றிப் பயனிலும் அகத் திணையில் இடம் பெற்றது; புறத்திணையிலும் இடம் பெற்றது.

அகத்திணையில் புன்னை மரம் புணர்ச்சிக்குரிய இடமாக அமைந்தது. களவுப் புணர்ச்சியின் புணர்ச்சிக் களமாக அமைந் ததைப் பல இலக்கியங்கள் ஆங்காங்கு குறித்துள்ளவற்றை முறைப் படுத்திக் காணலாம்:

புன்னை நன்கு தழைத்துக் கிளைகள் மணலோடு தாழ்ந்து சூழ்ந்திருக்கும். இதனால் உள்ளிடம் இருள் திணிந்து களவுப் புணர்ச்சிக்குத் தக்கதாயிற்று.

கடலாடச் சென்ற கோவலனும் மாதவியும் கடற்கரையில் தாழை சூழ்ந்த வேலியிடையே புகுந்தனர். அவ்வேலிக்குள் புன்னை மர நிழலில் புதுமணற்பரப்பில்தான் களிப்படைய முனைந்து, பூசல் நேர்ந்து, கானல் வரி பிறந்தது.

புன்னையைப் புணர்ச்சிக் களமாகக் குறிக்கும்போது நயம் மிக்க ஒரு பாடற் சுவையை வழங்கித்தான் நிறைவு செய்ய வேண்டும்.

ஒரு பரதவ இனத்துக் குமரன். நேற்று அக்குப்பத்துக் குமரியுடன் கூடிக் களித்தவன். இன்றும் வந்துள்ளான். இடம் மாறி நிற்கின்றான். அஃதும் புன்னை மரப் பொதும்பர்தான். ஆனால், தழைத்துநிற்கும் இளைய மரம். குமரி தோழியை அனுப்புகின்றாள். எத்துணை நாள் இந்தக் களவையே நீட்டிப் பது? திருமண எண்ணத்தை அவன்பால் எழுப்ப வேண் டாமா? அதற்கு இன்று அவனை மறுப்பது ஒரு வழி. அதனை எவ்வாறு மறுப்பது? அவன் நின்ற புன்னையையே வாய்ப்பாக்கிக் கொண்டு தோழி பேசுகின்றாள்:

'காதல் தலைவ! இன்று ஏன் புதிதாக இளைய புன்னையின் அடியில் நிற்கின்றாய்? இப்புன்னையைப் பற்றி நீ அறியாய். இஃது ஒரு தனிச்சிறப்புடையது. இஃது எங்களால் வளர்க்கப்பட்ட புன்னை. அவளும் நானும் தோழிமாரும் சிறு குழந்தைகளாய் இப்பக்கம் விளையாடினோம். அப்போது ஒரு புன்னைக் கொட்டையை விளையாட்டுப் போக்கில் மணலுக்குள் அழுத்திப் புதைத்தோம். அதனை மறந்தும் போனோம். ஒருநாள் அது முளைவிட்டது. எங்களது பழைய நினைவால் அதன்மேல் எங்களுக்கொரு பரிவு எழுந்தது. எங்களுக்கு ஊட்ட வந்த நெய்யையும் பாலையும் அதற்கு ஊட்டினோம்; ஊற்றினோம்; ஊற்றி வளர்த்தோம். ஒருநாள் எங்களது அன்னை இவ்வளர்ப்பைப் பார்த்தாள். மிக மகிழ்ந்தாள். எங்களால் வளர்க்கப்பட்ட அதனை மிக மதித்தாள். தன் மகளால் வளர்க்கப்பட்டது என்று பரிவு கொண்டாள். மிக விரும்பினாள். எங்களிடம்,

'உங்களால் வளர்க்கப்பட்டதால் இப்புன்னை எனக்கு உங்களைவிடச் சிறந்ததாகப் படுகின்றது. உங்களால் வளர்க்கப்பட்ட இவள் உங்களினும் இளையளாகையால் உங்கட்கு தங்கையாவாள்.

—என்று சொன்னாள். அதனால் இப்புன்னை எங்கள் தங்கை. உனது குமரிக்கும் தங்கை. தங்கை இருக்க அவள் முன்னே கூடிக்களிப்பாரோ? அம்மவோ! உன்னோடு இப் புன்னையடியில் கூடிக் குலவ அவள் நாணமாட்டாளா? நினைக்கவே எனக்கும் நாணமாக உள்ளது. வேறு தழைத்துள்ள மரத்தடியா இல்லை? —என்று நயம்பட உரைத்தாள் தோழி. தோழி பதித்த சொற்களைக்கொண்ட செய்யுள் இது:

*"விளையா டாயமொடு வெண்மணல் அழுத்தி*
*மறந்தனம் துறந்த காழ்முளை அகைய*
*நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப*
*நும்மினும் சிறந்தன்று நுவ்வை ஆகுமென்று*
*அன்னை கூறினள் புன்னையது சிறப்பே.*

*அம்ம! நாணுதும் நும்மொடு நகையே*
*விருந்தின் பாணர் விளரிசை கடுப்ப*
*வலம்புரி வான்கோடு நரலும், இலங்குநீர்த்*
*துறைகெழு கொண்க! நீ நல்கின்*
*நிறைபடு நீழல் பிறவுமார் உளவே"*[1]

—நயம் சுரக்கும் இப்பாடலைச் சுரந்தவரை அறியோம். இப்பாடல் இலக்கிய நயத்திற்கு நற்றிணையின் ஒரு நற்றுணை.

இவ்வாறு அகத்திணையில் இன்பியல் நாடகத்திற்கு இடந் தந்தது புன்னை. புறத்திணையிலோ துன்பியல் நிகழ்ச்சி இடம் பெற்றது. அந்நிகழ்ச்சி உண்மை நிகழ்ச்சி; ஒரு வரலாற்று நிகழ்ச்சி; அவ்வரலாற்றையும் அகத்திணையின் தொடர்பிலேயே காண்கின்றோம். அகத்திணை நூல்களாகிய அகநானூறும் நற்றிணையுமே வழங்குகின்றன. எனவே புன்னை அகத்திணைத் தொடர்புடனே புறத்திணையில் புகுகின்றது. மற்றொரு வகையிலும் வரலாற்றில் அகப்பொருள் வாழ்வின் தொடர்பும் கொண்டதாகும். அதனைப் பின்னே காணலாம்.

நக்கீரர், கயமனார், வெள்ளி வீதியார், எவரோ ஒருவர் ஆகியோரது பாடல்களைக் கொண்டு ஒரு வரலாற்றை வகுக்க முடிகின்றது. அஃது இது:

குறுக்கை என்றொரு நகரம். அதனை இருப்பிடமாகக் கொண்டு பெரிய திதியன் என்னும் குறுநில மன்னன் ஆண்டான். அவன் புன்னை மரத்தைத் தனது காவல் மரமாகக் கொண்டான். திதியனோடு அன்னி என்னும் குறுநில மன்னன் பகை கொண்டான். பெரிய திதியனது காவல் மரமாம் புன்னையை வெட்டி வீழ்த்தி அவனை அவலப் படுத்த விருப்பங்கொண்டான். அன்னியின் அரிய நண்பன் எவ்வி என்பான், 'திதியனுடன் போரிட வேண்டாம் அவனது புன்னையை வீழ்த்த வேண்டாம்' என்று நயமாக மொழிந்தான்; நன்மொழிகளால் தடுத்தான். அன்னி எவ்வியின் சொற்கேளாது குறுக்கையைத் தாக்கினான். காவல் மரமாம் புன்னையை வெட்டி வீழ்த்தினான். அதனைக் கண்ட அன்னியைச் சேர்ந்த பாணர் இசை முழக்கி ஆரவாரம் செய்தனர்.

1 நற் : 172

தனது காவல் மரம் வீழ்த்தப்பட்டதைப் பொறாத பெரிய திதியன் முனைப்போடு போரிட்டு அன்னியை வீழ்த்தினான்.

இவ்வரலாற்றில் புன்னை மரம் பெரிய திதியனின் காவல் மரமாக அமைந்து ஒரு பெருமை பெறுகின்றது. ஆயினும் அன்னியால் வீழ்த்தப்பட்டு அவலம் எய்தியது. துன்பியல் நிகழ்ச்சிக்கு ஆளாகியது. இவ்வவலத்தைக் கயமனார்,

> "தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய
> நன்னர் மெல்லிணர்ப் புன்னை போலக்
> கடுநவை"[1] —என்று காட்டினார்.

அவலம் எய்தும் புன்னை தன்னால் அன்னி அவலம் எய்தவும் கரணியமாக நின்றது. அன்னி அவலம் எய்தியதை நக்கீரர்,

> "பொன்னிணர் நறுமலர்ப் புன்னை வெஃகித்
> திதியனொடு பொருத அன்னி போல
> விளிகுவை"[2] —என்று காட்டினார்.

இவ்வாறு பெயர்பெற்ற புன்னைபற்றிய பெயர்களாக நிகண்டுகள் 'புன்னாகம்', 'நாகம்' இரண்டைக் குறிக்கின்றன. சூடாமணிநிகண்டு ஒன்று மட்டும் 'நாகம்' என்னும் பெயரைக் குறித்துள்ளது, நாகம் பெருமரம். குறிஞ்சிநில மரம். எனவே, இது பொருந்துவதன்று. மற்றையப் 'புன்னாகம்' என்பதும் நாக மரத்தின் இனமானது. புன்னை என்னும் அடைமொழி நாகத்தின் இனத்தைக் குறிப்பதே யாகும். புன்னாகம் என்னும் சொல்லைச் சங்க இலக்கியங்களில் பரிபாடல் ஒன்றில் மட்டும் காண்கின்றோம். அப்பரிபாடலும்,

"வரையன புன்னாகமும்"—என மலையிடத்து மலராகக் குறிக்கின்றது. எனவே, புன்னாகம் வேறு, புன்னை வேறு. நிகண்டுகள் வழங்கும் குழப்பங்களில் இஃதும் ஒன்று.

ஆனால் முத்தொள்ளாயிர ஆசிரியர்,

> "புன்னாகச் சோலை புனல்தெங்கு சூழ்மாந்தை
> நன்னாகம் நின்றலரும் நன்னாடன்" —என்று பாடி

1 அகம் : 145 : 12—14 2 அகம் : 126 : 15, 17.

யுள்ளமை புன்னாகம் புன்னையோ என்று ஐயங்கொள்ள வைக்கின்றது. இவ்வடிகளில் "புனல் தெங்கு" என்பது தாழை யைக் குறிக்கும். தாழையுடன் சேர்த்துக் கூறப்பட்டதால் புன்னை என்று கொள்ளலாம் எனினும் பரிபாடல் கூறியது போன்று உறுதிப்பாடு கொள்தற்கில்லை.

இவ்வாறு கருத்தெழுந்ததற்குக் கரணியம் புன்னையும் தாழையும் இணைத்துப் பேசப்படுவனவாகும். பேச்சில் மட்டு மன்று. வளர்ச்சியிலும் இரண்டும் அடுத்தடுத்துப் பின்னிப் பிணைந்து,

*"முடத்தாள் புன்னையும் மடற்பூந் தாழையும்*
*வெயில்வரவு ஒழித்த பயில்பூம் பந்தர்"* – இட்டு

விளங்கும். எனவே, புன்னையைத் தொடர்ந்து தாழை கவனத்தை ஈர்ப்பது.

# 7. மடல் மலர்

## தாழை

தாழையைக் குறிக்கும் பெயர்களை ஆய்வது தாழையின் கருத்திற்கும் துணையாகும்; காலப்போக்கில் சொல்லாட்சியின் வளர்ச்சிக்கும் திரிபிற்கும் அறிமுகம் ஆகும்.

தாழையைக் குறிக்கும் சொற்களாக ஒன்பது சொற்கள் உள்ளன. நிகண்டுகளும் இலக்கியங்களும் இவற்றைக் காட்டு கின்றன. அச்சொற்களை, அவை எழுந்த கால வளர்ச்சி கருதி யும், இலக்கிய ஆட்சி கருதியும் ஒரு வரிசைபடுத்திக் காட்டலாம். அவ்வரிசையுடன் அச்சொற்களின் இலக்கிய வழக்கையும் உலக வழக்கையும் பொருத்திக் காண்பது இவ்வரிசைக்கு ஒரு விளக்க மாகவும் அமையும்.

1. தாழை : அனைத்துக்கால இலக்கியப் பெயர்; உலக வழக்குப் பெயர்.
2. கைதை : அனைத்துக்கால இலக்கியப் பெயர்; உலக வழக்கில் அருகிய பெயர்.
3. கைதகை : சங்க இலக்கியத்தில் இல்லை.

4. கண்டல் : பத்துப்பாட்டில் இல்லை.

5. முண்டகம் : ஐந்திணை எழுபது தொடக்கமாக ஆட்சி.

6. முடங்கல் : சிலப்பதிகாரம் தொடக்கமாக ஆட்சி.

7. மடி : நிகண்டுப் பெயர்; செய்யுள் வழக்கில்லை.

8. முசலி : நிகண்டுப் பெயர்; செய்யுள் வழக்கில்லை.

9. தெங்கு : தென்னையின் தொடர்பில் இலக்கிய ஆட்சி.

இவற்றுள் தெங்கு என்பது தென்னைக்குரிய பெயர். தென்னைக்குரிய பெயர்களை அறிவிக்கும் நிகண்டுகள் தாழை என்னும் சொல்லையும் அறிவித்துள்ளன. இலக்கியங்களிலும், "தாழை இளநீர் விழுக்குலை" (திருமுருகு : 307) தென்னைப் பெயராகத் தாழை இடம் பெற்றுள்ளது. குறிஞ்சிப் பாட்டில் 80ஆவது அடியில் தாழை என்னும் சொல்லும் 83ஆவது அடியில் கைதை என்னும் சொல்லும் உள. பின்னருள்ள கைதையைத் தாழம்பூவாகக் கொண்டார் நச்சர். ஆனால் முன்னுள்ள தாழைக்குத் "தெங்கிற் பாளை" எனத் தென்னையாகப் பொருள் எழுதினார். தென்னையும் தாழையும் புறக்காழன என்னும் வகையில் ஓரினமாகும்; புல்லினமாகும். அடிப்பகுதி, சருச்சரை, தாள், குருத்து, காயின் வடிவமைப்பு முதலியவற்றாலும் ஓரளவாக ஒற்றுமை உடையவை. ஆயினும் தாழைக்கு விழுது உண்டு; தென்னைக்கு இல்லை. தாழை,

"வீழ்த் தாட்டாழை" (நற்றிணை : 78 : 4)

"வீழ்த் தாழை" (பட்டினப்பாலை : 84)

"வீழ்த் தாழை" (குறுந்தொகை : 228 : 1) என்றெல்லாம் விழுதுடன் குறிக்கப்பட்டது. தென்னையோ,

"வீழ் இலி தாழைக் குழவித் தீநீர்" (பெரும்பாண் : 357) -என 'வீழ் இலி' என்னும் அடைமொழியுடன் குறிக்கப்பட்டது. இவ்விழுது வேறுபாடு போன்றே மேலும் தென்னையின் ஓலை மட்டைகள் கீழ்நோக்கித் தாழ்ந்து தொங்கி வளர்வதால், 'தாழ் தாழை தண்டலைய' (பொருநர் : 181) எனத் 'தாழ் தாழை' எனப்பட்டது. இவ்வாறு 'வீழ்தாழை' 'தாழ்தாழை' என்னும்

வேறுபட்ட அடைமொழிக் குறிப்புகள் இரண்டின் வேறுபாட்டைக் காட்டின.

மேலும் தாழை நீர்ப்பிடிப்பில் வளர்வது- "அலை நீர்த் தாழை அன்னம் பூப்பவும்" என்றார் நத்தத்தனார். தென்னைக்கு நீர்ப்பிடிப்பு வேண்டுவதன்று. இவ்வேறுபாட்டையும் வைத்துத் தாழையைப் 'புனல் தெங்கு' என முத்தொள்ளாயிரம் குறித்தது. இக்குறிப்பன்றித் தாழையைத் தெங்காகக் குறிக்கும் இடம் தென் படவில்லை. எனவே, 'தெங்கு' என்னும் சொல் தாழைக்கு உரிமையுடைய பெயர் அன்று.

'முசலி' என்னும் பெயர் நிகண்டுகளில் மட்டுமே காணப் படுவது. இச்சொல் பல்லியினம், சில கருவி வகை முதலிய பல பொருள் தரும் ஒரு சொல். 'முசற்றாழை' என்றொரு வழக்கு உளது. அஃதும் தாழையைக் குறிப்பதன்று. இலக்கிய வழக்கும் இல்லை. எனவே, முசலி தாழையின் உரிமைப்பெயர் ஆகவில்லை.

மடி என்னும் பெயர் தாழைக்கென நிகண்டுகளில் காணப் படுகின்றது. ஒரு நரம்பில் இதன் தாள் இரண்டாக மடிந்திருப்ப தனாலும், பூவின் மடல் மடித்துச் சூடப்படுவதாலும், மடலை மடித்து மலர்முகை போல் புனைந்து சூடப்படுவதாலும் இப்பெயர் அதற்குக் குறிக்கப்பட்டது.

"தூதுஒய் பார்ப்பான் மடிவெள் ளோலை" (அகம் : 337 : 7) என எழுதி மடிக்கப்பட்ட பனை ஓலை முடங்கல் "மடிவெள் ளோலை" எனப்பட்டது, இவைபோன்றே தாழையும் இப்பெயர் பெற்றுள்ளமையால் 'மடி' என்னும் பெயர் தாழைக்கு மட்டும் உரியதன்று.

முடங்கல் என்னும் பெயரும் நேர்முகமாகத் தாழையைக் குறிப்பதன்று. இச்சொல்லிற்கு முடங்கிய வினையால் 'வளைவு' என்று பொருள். இறால் மீன் காய்ந்து கருவாடாக வளைந்து தோன்றும். அதனை, "இறவின் துய்த்தலை முடங்கல்" என முடங்கலாக (நற்றிணை 358 : 8) நக்கீரர் குறித்தார். தூக்கணங் குருவியின் வளைந்த சிறகு. "முடங்கல் சிறைய தூங்கணங்குரீஇ" என (குறுந்தொகை : 375 : 5) முடங்கலாகக் குறிக்கப்பட்டது. உள்ளே கல்பெற்றதால் வளைந்தகொடிப்பவளத்தை இளங்கோவடி களார் "கல்லுடை முடங்கல்" என முடங்கலாகவே (சிலம்பு : 14 197) குறித்தார். இவ்வகையிலேயே,

"முதிர்பூந் தாழை முடங்கல் வெண்டோட்டு" எனச் சிலப்பதிகாரத்தில் (8 : 49) தாழை முடங்கிய மடல் குறிக்கப்பட்டது. இத்தாழை மடலில் செய்தி எழுதப்பட்டு அனுப்பப்பட்டது. எழுதி மடிப்பு விழாமல் வளைத்து முடக்கினர். இதனால் கடிதம் 'முடங்கல்' எனப்பட்டது. இதனைப் பொதிந்து அரக்குவைத்து பதிவஞ்சலாக அனுப்புவதை "மண்ணுடை முடங்கல்" என்றது சிலம்பு. எனவே, 'முடங்கல்' என்னும் சொல்லும் தாழைக்கே உரியதாக வில்லை.

'முண்டகம்' என்னும் சொல் 'முள்' என்னும் முதனிலை கொண்டது. அதுகொண்டே,

> "முள்ளுடை மூலம் யாவும்
> முண்டக மென்றே சாற்றும்" 1 —எனச் சூடாமணி

நிகண்டும் பிற நிகண்டுகளும் சாற்றின. இம் முள் தொடர்பிலேயே

> "தாமரைப் பெயரும் தாழையும் கள்ளும் (கள்ளி)
> முள்ளுடை முள்ளியும் நெற்றியும் முண்டகம்" 2

—எனத் தாழையும் முண்டகப் பெயர் பெற்றது. மேலுள்ள அடிகளில் 'முள்ளி' என்னும் கழி முள்ளிக்கு மட்டும், முள் என்னும் அடைமொழியை அமைந்திருப்பது அதன் முள் தன்மையை வலியுறுத்தவே. அதற்கு 'முள்' என்னும் முதல் நிலையில் 'முள்ளி' என்னும் பெயர் அமைந்திருக்கின்றது. முண்டகம், முள்ளி என்று வரும் இடங்களில் எல்லாம் உரையாசிரியர் 'நீர்முள்ளி, கழிமுள்ளி' என்றே பொருள் எழுதினர். தாழையையும் கழிமுள்ளியையும் அடுத்தடுத்துக் கூறவேண்டிய இடங்களில்,

> "தாழை அன்னம் பூப்பவும்,
> கடுஞ்சூல் முண்டகம் கதிர் மணி கழாஅலவும்"3

—என்றும்,

> "முண்டகங் கெழீஇய மோட்டு மணல் அடைகரை
> பேஎய்த் தலைய பிணர் அரைத் தாழை" 4

—என்றும்,

கழிமுள்ளியை 'முண்டகம்' என்னும் பெயரால் குறித்தனர். சங்க இலக்கியங்களில் ஐந்திணை எழுபதில் ஓரிடத்தில் (60 : 2)

---

1 சூடா. நி : மரம் : 63 : 2.
2 பிங். நி : 3971.
3 சிறுபாண் : 146 : 147.
4 அகம் : 130 : 4, 5.

"முண்டகக் கானலுட் கண்டேன்" - என வருகின்றது; இடச்சூழல் கருதி இங்கு முண்டகத்திற்குத் தாழை என்று பொருள் கொள்வர். மற்றெங்கும் தாழைப் பொருளில் முண்டகப் பெயர் இல்லை. எனவே, முண்டகமும் தாழைக்கு மட்டும் உரிய பெயர் அன்று.

அடுத்துக் 'கண்டல்' என்னும் பெயர் தாழைக்குக் குறிக்கப் பட்டுள்ளது. நற்றிணையில் பல இடங்களில் இச்சொல் பயின்று வரும். அங்கெல்லாம் அதன் உரைகாரர் பின்னத்தூர் நாராயண சாமி அவர்கள் 'கண்டல் ஒரு மரம்' என்ற தாழையினும் வேறு பட்ட ஒரு மரமாகப் பொருள் எழுதியுள்ளார். அவர் அவ்வாறு கருதக் கரணியம் இது போலும்: கண்டல் சூழ்ந்த இடங்களைக் கூறும் பாடல்கள், "கண்டல் வேலிக் காமர் சிறுகுடி"

(நற் : 74 : 191 : 5)

"கண்டல் வேலி அவன்ஊர்" (நற் : 74 : 10)

"கண்டல்வேலிக் கழிநல்லூர்" (நற் : 372 : 13)

"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை" (நற் : 207)

"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை" (நற் : 363 : 1)

—என்றெல்லாம் கண்டல் வேலியாக அமைந்துள்ளதையும், அவ்வேலி அமைந்த இடங் களை 'ஊர், சிறுகுடி, படப்பை' என்று பிற நிலப் பெயர்களால் குறிப்பதையும் கொண்டதைக் கருத்திற் கொண்டதாகலாம். மேலும் மேற்காணப்பட்ட பாடல்கள் யாவும் உலோச்சனார் ஒரு வரால் பாடப்பட்டவை. பிற நிலச் சொற்கள் அமைக்கப்பட்டிருப் பினும் அச்சொற்கள் பொதுவாகவும் அமைபவைதாம். தாழையும் வேலியாக அமையும்.

*"... ... ... ... கொழுமடல் தாழை*
*மாலை வேல்நட்ட வேலியாகும்"* 1

-எனத் தாழை வேலியை மாலை மாறனார் காட்டினார். தாழையின் மறுபெயராகிய கைதைப் பெயரிலும் வேலி கூறப்பட்டது (சீவ. சி : 546 :2)

---

1 குறு : 245 ; 3, 4.

கண்டல் என்னும் பெயர் தாழைக்குப் பெரும்பகுதி உரிய தாகும், இச்சொல் தாழையைக் குறிக்கும் குறிப்புப்பொருளோடு அமைந்த இடங்கள் பல. தாழையில் அடிப்புறம் வளைந்துள்ளது. அதன் நிறம் ஓரளவான நீல மணி நிறம் போன்றது. இதனைக் குறிக்கும் சேந்தங் கண்ணனார் பாடல்,

"*தெண்டிரை மணிப்புறம் தைவரும்*
*கண்டல வேலிநும் துறைகிழ வோர்க்கே*"[1] – என்று 'கண்டல்' என்னும் பெயரில் தாழையைக் குறிக்கிறது. இவ்வடிகளில் கடல் அலைகள் தடவும் அடிப்புறம் என்றுள்ளமையும் நினைக்கத்தக்கது. நாலடியாரும், "கண்டல் திரையலைக்குக் கானல்"[2] என்றார்.

தாழையின் பசிய பெருங்காய் கழன்று கழிநீரில் விழுவதை குறிக்கும் நம்பி குட்டுவனார் என்பார்,

"*கானல் கண்டல் கழன்றுகு பைங்காய்*
*நீல்நிற இருங்கழி உட்பட வீழ்ந்தென*"[3] – எனக் கண்டல் பெயரில் பாடினார். தாழையில் தாதுத் தூள் நிறைய உண்டு. அதனை உதிர்த்து ஒருவர் மேல் ஒருவர் தூவி மண மேற்றி விளையாடுவர். கடல் அலையில் தூவி விளையாடுவர். இதனைக் குறிக்கும் பரிபாடல்,

"*கண்டல் தண்தாது திரைநுரை தூவாரும்*"[4] – எனக் கண்டல் பெயரில் பாடியது. எனவே கண்டல் தாழைக்குரிய பெயரில் ஒன்றாகின்றது. ஆனால் தாழைக்கு மட்டும் உரியது அன்று.

'கண்டல்' என்னும் சொல் 'முள்' என்னும் பொருள் தொடர்பில் உள்ளது. 'கண்டகம்' என்னும் சொல் இதன் மறு உருவம்.

"*கண்டகம் முள்ளே கடுவும் ஆகும்*"[5] – என்னும் பிங்கலத்தின்படி இது முள்ளைக் குறிப்பது. முள்ளின் சிறப்பால் பெயர்பெற்ற முள்ளிக்கும் 'கண்டகம்' என்ற பெயர் உண்டு என்பதைச் சூடாமணி நிகண்டு,

---

1 நற் : 54 : 10, 11.
2 நாலடி : 194 : 3.
3 நற் : 346 : 1, 2.
4 பரி : 101
5 பிங் : தி : 2854.

"ஒள்ளிய கண்டல் முள்ளி
உரத்த முண் டகமே"[1] —எனக்காட்டிற்று. முள்ளியின் தளிர் சுருண்டிருக்கும்; தழைத்திருக்கும். இதனையும் குறித்துப் பாடிய கணிமேதையார் முள்ளிக்குக் கண்டல் என்னும் பெயரை அமைத்து,

"... ... ... ... ... முறி (தளிர்) திரிந்த
கண்டலந் தண்தில்லை கலந்து கழிசூழ்ந்த
மிண்டலந் தண்டாழை யிணைந்து"[2] —எனப்பாடினார்.

இதன்கண் தாழையும் உளது. கண்டலும் உளது; இங்கு கண்டல் முள்ளியைக் குறிக்கின்றது;

எனவே, கண்டல் முள்ளிக்கும் உரிய பெயராகித் தாழைக்கு மட்டும்] உரிமையாகாது நிற்கின்றது. 'கண்டல்' என்னும் சொல்லாட்சி பத்துப்பாட்டில் இல்லாமையும் கருதத்தக்கது' பத்துப்பாட்டிற்குப் பின்னர் செய்யுள் வழக்கான சொல். 'கைதை, கைதல்' என்றாகியது "கைதல் சூழ் கழிக் கானல்"[3] —எனப் பாடினார் ஞானசம்பந்தர்.

அடுத்த கேதகை என்னும் சொல் கைதை என்பதன் வட மொழி ஆட்சி. இச்சொல் சங்க இலக்கியங்களில் இல்லாதது.

கைதை என்னும் சொல் தாழைப்பொருளில் தாழையைப் போன்றே இலக்கிய வழக்கு கொண்டது. பிற்கால இலக்கியங் களிலும் இடம்பெற்றது. ஆனால், உலக வழக்கில் இல்லாதது.

நயமாகக் கூறினால் கையைத் தைக்கும் முள்கொண்டதால் 'கை தை' எனப் பெயர்பெற்றது என்னலாம். 'கைதவம்' என்னும் சொல் வஞ்சத்தைக் குறிக்கும். கைதவன் பாண்டியன். இவ்வாறு இருவகைப் பொருளுக்கும் இச்சொல்லமைப்பு பயன்படுவதால் எவ்வடித்தளத்தில் இச்சொல் அமைந்தது எனக்காணல் எளி தாயில்லை. 'கைதை' என்னுந் சொற்கு 'வயல்' என்றொரு பொருளையும் பிங்கலம் கூறுகின்றது. எதுவாயினும் தாழைக்குரிய பெயராகிய இவ்வொன்று வேறெம் மலரையும் குறிக்காத பெயராக உளது. எனவே, கைதை தாழைக்குரிய மறுபெயர் எனலாம்.

---

1 தடா நி : மரம் 63 : 1
2 திணை நூ 61 : 2—4
3 ஞான தே : நாகை : 4 : 4

தாழை என்னும் சொல் இதற்குரிய பெயராக அமைந்துள்ளது. இனித் தாழையின் — அதன் மலரின் கருத்துகளைக் காணலாம்.

மலர்களில் மனம் பதித்த புலவர்கள் சிலர் அவற்றிற்கு வரலாற்றுச் சுருக்கம் போன்று ஒவ்வொரு பாடலை வடிக்கும் பாங்கைக் காண்கின்றோம். கோடலுக்குக் கணிமேதையார் இரண்டு அடிகளில் ஒரு வரலாற்றுச் சுருக்கம் வடித்ததைக் கண்டோம். அவரே கொன்றைக்கும் நான்கு அடிகளில் படைத்தார். உலோச்சனார் புன்னைக்குப் படைத்தார். தாழைக்கும் அவ்வாறு ஒரு வரலாற்றுச் சுருக்கப் பாடல் உளது. இவையெல்லாம் செடியியல் இலக்கியங்கள். நக்கண்ணையார் என்னும் அன்னைப் புலவர் அதனை ஈன்றுள்ளார். ஒவ்வொரு உறுப்பிற்கும் ஒவ்வொன்றை உவமைகாட்டி விளக்கியுள்ளார்

'தாழையின் அடிப்பகுதி பருத்தது. சருச்சரை கொண்டது. அச்சருச்சரை செதில்செதிலாக உள்ளமையால் இறால் மீனின் முதுகு போன்றது. இதன் இலை முள்களையுடையது. அதன் அமைப்பு சுறாமீனின் கொம்பு போன்றது. இதன் அரும்பு வெண்மையாக முனை கூரியது. இத்தோற்றம் பெரிய களிற்றின் மருப்பு போன்றது. இவ்வரும்பு முதிர்ந்து தலை சாய்த்து நிற்பது அழகிய மான் தலைசாய்த்துப் பார்ப்பது போன்றது. மலர்ந்து பரவும் மணத்தால் விழாக் களம்போல் கமழ்கின்றது'— இக்கருத்தமைந்த பாடல் இது:

*"இறவுப் புறத்தன்ன பிணர்படு தடவுமுதல்;*
*சுறவுக் கோட்டன்ன முள்ளிலைத் தாழை;*
*பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்புமுதிர்*
*நன்மான் உழையின் வேறுபடத் தோன்றி,*
*விழவுக்களம் கமழும்"*[1] —இதனை ஒரு தொகுப்புப் பாடல் எனலாம். இத்தொகுப்பிலும் ஒரு சுருக்கத் தொகுப்பை வெண்கண்ணனார் என்னும் புலவர் தருகின்றார்:

*"பேஎய்த் தலைய பிணர்அரைத் தாழை*
*எயிறுஉடை நெடுந்தோடு"*[2]

---

1 நற் : 19 : 1—5     2 அகம் : 130 : 5, 6

தாழையின் பச்சை மடல்கள் பரவி விரிந்திருக்கும் தோற்றம் தலை விரித்த பேய்போன்றதாம். இப்பசிய தாள்கள் இருபுறமும் விரிந்து வளைந்துள்ள தோற்றம்,

"உருகெழு யானை உடைகொண் டன்ன"[1] –எனயானைக்கு மேலிட்ட உடைப்போர்வை போன்றது எனப்பட்டது. அடிப் பகுதி சருச்சரை கொண்டது. 'பல்போன்று முள் கொண்ட நீண்ட பூமடல்' —என்கின்றது இவ்வண்ணனை.

இத்தாழையை அடிமுதல் நுனிவரையாகும் விளக்கங்களைப் பல இலக்கியங்கள் காட்டுகின்றன.

அடிப்பகுதி சருச்சரையுடன் சற்று நீல நிறத்தது. விழுது கள் கொண்டது; வளைந்தது என்பனவற்றை எட்டுத்தொகை நூல்கள் பேசுகின்றன.

இதன் பசிய மடல்,

''முள் இலைத் தாழை'' (நற்: 335 : 5 : 19 : 2)

''முட்புறம் பொதிந்த நெட்டிலைக் கைதை''

(மு.கோவை : 5 : 11)

–என்றெல்லாம் இலையாகக் கூறப்பட்டுள்ளது. இலை இதற்கு மரபுப் பெயர் அன்று. தாள், ஓலை, ஏடு, தோடு, மடல் இவை களே உரிய மரபுச் சொற்கள். இருப்பினும் பூவின் இதழ் 'மடல்' என்று குறிக்கப்படும். பூவிற்கும் பசிய தாளுக்கும் வேறுபாடு தோன்றவே 'இலை' என்று பாடினர்.

இவ்வோலை ஓரங்களில் முள்ளைக் கொண்டது. இஃது எயிறு எனப்பட்டது. வளைந்து இருந்ததால் ''கூன் முள்'' எனப்பட்டது. இருபக்க ஓரங்களிலும் வரிசையாக இம்முள் அமைந்தமை கொண்டு சுறா மீனின் கோடும்,[2] ''வாள்போல் வாய'' ''அரவுவாள் வாய்'' (நற் : 235) என ஈர்வாளும் உவமை யாக்கப்பட்டன.

தாழையின் அரும்பு வெண்மையாகத் திரண்டு முனை கூர்மையாகத் தோன்றுவதனால்,

---

1 நற் : 299 : 1 2 குறுந் : 245 : 8

பெருங்களிற்று மருப்பின் அன்ன அரும்பு"[1] –எனக் களிற்றின் மருப்பாகவும்,

"வயிறுடைப் போது வாலிதின் விரீஇ"[2] –என அடி திரண்டுள்ளமை வயிறாகவும் பாடப்பட்டது.

அம்முகை விரியும் காட்சி,

"அகமடல் பொதுளிய முகைமுதிர் வான்பூங்
கோடு வார்ந்தன்ன வெண்பூந் தாழை"[3]

–எனச் சங்கு உடைந்த நீட்சியாகப் பாடப்பட்டது. தாழையில் வெண்மையும் செம்மையும் உண்டென்று கண்டோம். வெண் டாழையே பெரும்படியாக இலக்கியங்களில் பேசப்படுவது.

"வெள்வீத் 'தாழை' (குறுந்தொகை : 163 : 4)

"தாழை வெண்பூ" (குறுந்தொகை : 226 : 5)

வெண்மை என்றாலும் சற்று மஞ்சள் கலந்த வெண்மையேயாகும். இம்மடல் சற்று நெகிழ்ந்து விரிந்திருக்கும் தோற்றம் அன்னம் போன்றதாகையால்,

"தாழை அன்னம் பூப்பவும்"[4]

எனப்பட்டது. இத்தோற்றமே "தாழை வெண்பூ குருகென மலரும்" என நாரை உருவாகக் கூறப்பட்டது. இம்மலரின் மடல் குறிப்பிடத்தக்க அளவில் பெரியதாகையால் "மடல் பெரிது தாழை"[5] எனப்பட்டது. இலக்கியங்கள் மலரின் மடலை அடைமொழியாக வைத்து "மடற்றாழை" என்றே பாடின. மேல் மேல் சுற்றடுக்காகப் படிந்துள்ள இம்மடல்களுக்குள்ளே தொகுதி தொகுதியாக உள்ள மகரம் "சோறு" எனப்பட்டது.

"... ... ... .... .... ...முள்ளிலைத் தாழை
சோறு சொரி குடவயின்" (நற்றிணை : 315 ; 4, 5)

"சோற்று மடல் கைதை" (வில்லிபாரதம் : கண்ண)

"கூன்கைதை சோறு கால்வன" (திருவிளை : நாட்டுச் சிறப்பு : 41 : 1, 2)

---

1 நற் : 19 : 8
2 அகம் . 180 : 7
3 நற்றிணை : 203 ; 3, 4
4 சிறுபாண் : 146
5 முதுரை : 12 : 1

"வெண்சோறு ஏந்தி" (சிதம்பர மும்மணிக்கோவை 5 : 19)

–என்றெல்லாம் பலகால இலக்கியங்களிலும் சோறாகக் காணலாம். மாறன் பொறையனார் இதனை 'இழுது' –வெண்ணெய் என்றார்.

தாழையின் தாதுத் தூள் சாம்பல் நிறத்தில் உள்ளது. இருப்பினும் வெண்ணிறம் என்பர். சோற்றுத் திரளை உதறினால் நிறையத் தாதுத் தூள் கொட்டும். தாழைக்கு இதன் தாதுத்தூள் ஒரு சிறப்பு. இத்தூள் அதிகம் தோன்றும் ஒன்று. வண்டு மொய்க்கும்போது தொடர்ந்து உதிர்ந்து கொண்டேயிருப்பது மற்றொன்று. இதனைத் "தாழாது உறைக்கும்" என்றார் நல்லந்துவனார். கோடைக் காற்றடிக்கும்போது அப்பரப்பெல்லாம் பரவும். நன் மணமுள்ளது.

இது திருநீறு என்றும் பேசப்பட்டது.

தாழை இவ்வாறு 'நீறு பூசியும் சிவன் தலையில் இடம் பெறவில்லை' என்றும், 'சோறு வழங்கியும் சிறப்புறவில்லை' என்றும் குமரகுருபரர் பாடினார்.

"வெண்பொடி பூசி
இருந்தவ முஞற்றியும் யாம்பெறற் கரிய
செஞ்சடை"[1] –என்பது, அவர்தம் பாடல்.

சுதமதி மணிமேகலைக்கு உவவனத்தின் மலர்க்காட்சிகளை விளக்குகின்றாள்: நீரில் தாமரை மலர்ந்துள்ளது. நீர்க்கரையில் தாழை பூத்து அதன் தாதுத் தூள் உதிர்கின்றது. அத்தூள் தாமரை இதழ்களில் படிந்துள்ளது. இதனைக் காட்டிப் பேசும் சுதமதி,

"விரைமலர்த் தாமரை கரைநின் றோங்கிய
கோடுடைத் தாழை கொழுமடல் அவிழ்ந்த
வால்வெண் சுண்ணம் ஆடியது இதுகாண்"[2] –என்றாள்.

இதற்கு மணிமேகலையின் முகத்தை உவமையாக்கிப் பேசினாள்:

'நீ தேரோடும் தெரு வழியே வந்தாயன்றோ ? தேரால் எழுந்த துகள் உன் முகத்தில் படிந்துள்ளது. அதனால்,

---

1 சித. மு. கோவை : 5 : 14-16    2 மணி : 4 : 16-18

*"வயங்கு ஒளி மழுங்கிய மாதர்நின் முகம்போல்"* [1] -இத் தாமரை உள்ளது' -என்றாள். இதுகொண்டும் தாழையின் தாதுத்தூள் தூசிபோன்று மங்கிய வெண்மை நிறங்கொண்டதும் காணப்பட்டது.

இத்தூள் மணமுள்ளது மகளிர் தூவியும் பூசியும் படிய வைத்தும் களிப்பர். *"தாது துகள் உதிர்த்த தாழையங் கூந்தல்"* [2] என்றமை கொண்டு இத்தூளைச் சோற்றிலிருந்து கூந்தலில் உதிரச் செய்துகொள்வர் என்று தெரிகின்றது.

மலரையும் சோற்றையும் தூளையும் கூட்டி இவை மணம் பரப்புவதை மாறன் பொறையனார் பாடினார்.

'மலர் வளைந்த முள்ளைக்கொண்டது. மடல்மடலாக அமைந்தது. கூம்பியிருந்த முகை அவிழ்ந்தால் ஒளிப் பூ ஆகும். மடல்களின் உள்ளே சோற்றுத் திரள் வெண்ணெய் போன்று தோன்றும். இவற்றால் தாழை தழைத்துள்ள சூழலெல்லாம் மணம் கமழும். அம்மணம் தெய்வ மணம் போன்றது' —என்னும் பொருள் அமைத்துப் பாடினார்.

"மடல் பெரிது தாழை மகிழினிது கந்தம்" என்னும் மூதுரைப் பாடல் தாழம்பூ மணமற்றதுபோன்ற குறிப்பைத் தருகின்றது. மகிழம் பூவின் சிறுமையையும் தாழை மடலின் பருமையையும் நோக்க இதன் மணம் குறைவாகப் படலாம். இயல்பில் தாழம்பூ மணத்திற் குறிக்கத்தக்கது. இங்கு தெய்வ மணங் கமழும் என்றது போன்று முன்னர் விழாக் களம் போன்று கமழ்வதைக் கண்டோம்.

கடற்கரையில் அமைந்த பாக்கத்துச் சிறுகுடியில் பரவியுள்ள புலால் வீச்சைப் போக்கும் செயலையும் இம்மணம் செய்யும்.

*"சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலாம் அறுக்கும்"* [3]
*"புலவுப் பொருதழித்த பூநாறு பரப்பு"* [4]
—என்றும்,
*"கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழை"* [5] —என்றும்

1 மணி : 4 : 15
2 அகம் : 353 : 19.
3 நற் : 203 : 6.
4 அகம் : 131 : 8.
5 சிலம்பு 6 : 166.

தாழம்பூவின் நன்மணம் சிறப்பிக்கப்பட்டது. இதன் ஆங்கிலப் பெயர் *FRAGRANT SCREWPINE* என்பது *Frgrant* = நறுமண முள்ள என இது நறுமணத்தாற் பெயர்பெற்றது. தாழை மலரின் மடல் அமைப்பைக் கருதியும், மணம் கருதியும் மகளிரும் ஆடவரும் சூடிக் களித்தனர். நெய்தல் நில மக்களுக்கு இம்மலர் தனி உரிமை. ஒரு தலைவன் இம்மலரைக் கொய்வதற்காகத் தலைவி யைத் தூக்கி நின்றான். அவள் பறித்தாள்; சூடினாள். இதனை,

"*கைதை தூக்கியும்*"[1] என்று மிளைகிழான் நல்வேட் டனார் குறித்தார்.

மகளிரேயன்றி ஆடவரும் "மடற்றாழை மடல் மலைந்து" மகளிரோடு குலவியதைப் பட்டினப்பாலை கூறுகின்றது.

தாழம்பூவின் மணம் மனமகிழ்ச்சிக்கு மட்டுமன்று, மருந் தாகவும் பயன் தருவதாகும். இதன் மணம் ஒரு பூச்சிக்கொல்லி யாகும். அம்மைநோய் கண்ட இல்லத்தில் இம்மலரைக் கட்டித் தொங்கவிடுவதால் அந்நோய் வளர்க்கும் நுண்ணுயிரிகள் அழியும். இம்மலரின் மடலிலிருந்து வடிக்கப்படும் பனிநீர் இந்நோய்க்கொரு மருந்து.

நூல்களாக எழுதப்பட்ட பனையோலைச் சுவடிகளைப் பூச்சிகள் அரிக்காமல் பாதுகாக்க இப்பூவின் மணம் பயன்படும். இதன் தாதுத் தூளையும் இதற்குத் தூவுவதுண்டு.

இம்மலரின் மலர்ச்சிபற்றிய கருத்தொன்றைக் கந்தபுராண ஆசிரியர் கச்சியப்பர் கூறியுள்ளார்;

"*மின்பொருட்டினால் கேதகை மலர்ந்திடும்*"[2]

"*மின்கண்டு அலர்கின்ற கொந்தார் கண்டல்*"[3] —என்பவை அவரது அறிவிப்பு. மலர்கள் பொதுவில் ஒளிக்கு மலரும். தாழையோ பளிச்சிடும் ஒளியாகிய மின்னலுக்கு மலர்வதாகின்றது.

இதன் காய் நீள் உருண்டையாகத் தேங்காய் அளவில் உள்ளது. இதனை,

"*நீர்மலி கரகம்போல் பழந்தூங்கு முடத்தாழை*"[4] – என நல்லந்துவனார் நீர்நிறைந்த கலயம் என்றார். இதனைச் சிறு

1 நற் : 349 : 3.
2 க. பு : 2 : 1 : 7.
3 க. பு : 2 : 3 : 1.
4 கலி : 133 : 4.

மத்தளம் போன்றது என்றும் கூறுவர். இக்காயை விழாப் பந்தல்களில் ஒப்பனைக்காகக் கட்டித் தொங்கவிடுவர்.

தாழையின் பல உறுப்புகளும் இவ்வாறு இலக்கியங் பாங்கில் உவமிக்கப்பட்டும் உவமையாகிச் சிறப்பனபோன்று இலக்கிய வண்ணனைகளிலும் கற்பனைகளிலும் இடம் பெற்றுள்ளன. தாழையின் மலர் நாரைக்கு உவமிக்கப்பட்டதைக் கண்டோம்.

'முதுகு வளைந்த இறால் மீன் ஒன்று நாரையின் அலகுப் பிடியிலிருந்து தப்பியது. கடல் நீரில் சேர்ந்து விட்டது. ஓரத்தில் கிடக்கும் அது மணற்கரையில் வளர்ந்துள்ள தாழையைப் பார்க்கின்றது. தாழை மலர் நாரையாகத் தோன்றுகின்றது. அதற்கு அஞ்சி நடுங்கியது'[1] —என்று கற்பித்தார் கோட்டியூர் நல்லந்தையார். இதுபோன்று சுவைபயக்கும் கற்பனைகளுக்கும் பயன்பட்டது. புராணக் கதைகளுக்கும் கருவியாயிற்று.

காம உணர்வை உருவகமாக்கிக் காமன் என்றொரு சிறு தெய்வத்தைப் படைத்தனர். காம எழுச்சிக்குத் துணைசெய்ப வற்றை அவனது படைக்கருவிகளாக்கினர்.

*''வஞ்சியர் பெருஞ்சேனை*
*கைதை உடைவாள்''*[2] —தாழையின் மடல் ஒளியுடன் நீளமாக ஓரங்களில் கூரிய முள்களைப் பெற்றிருப்பதால் ஈர்த்து அறுக்கும் வாள் ஆயிற்று. இதனாலேயே காமனுக்குக் ''கைதைச் சுரிகை (உடைவாள்)யன்'' என்றொரு பெயரை நிகண்டுகள் வகுத்தன. பரஞ்சோதிமுனிவரும்,

*''முள்வாய்க் கைதை வாள் எடுப்ப''*[3] —என்றும்

*''காம ஆயுத சாலைகள் போல் கைதை''* —என்றும் பாடினார்

ஆடவர் தாழைமலரைச் சூடுவதில்லை என்றும், அதற்குச் சிவனின் சாவம் காரணியம் என்றும் கூறும் கதை வழக்குள்ளது. அஃது ஒரு கட்டுக்கதை என்பதை முன்பகுதியில் கண்டோம். சிவன் சூடுவதில்லை என்பதைக் குமரகுருபரரும் பாடினார்.

---

1 *நற்றிணை* : 211 : 3-7.
2 *அறப் சத* : 91 : 2
3 *திருவி. பு : தருமி* : 20 : 27

புராணக் கதைகள் நிற்க, சாதிப்பாகுபாட்டிலும் தாழை இடம்பெற்றது. சாதிப்பிரிவை மாந்தர்க்குள் மட்டுமோ வகுத்தனர். கல்லிலும் சாதி கண்டவர் பாம்பிலும் சாதி கண்டனர். அதற்குத் தாழையையும் ஒரு சான்றாக்கிக் கொண்டனர்.

பாம்பு கடித்து நஞ்சு இறங்கிய இடத்தை மோந்து பார்த்தால் அங்கு ஆவின்பாலைக் காய்ச்சிய மணம் வீசுமாயின் அப் பாம்பு அந்தணச் சாதி. நந்தியாவட்ட மலர் மணம் வீசுமாயின் அஃது அரசர் சாதி.

*"தாழைத் தடமலர் வணிகன் நாறும்"*[1] அரிதார மணம் வீசினால் வேளாள சாதி.

இவ்வாறு திருத்தக்க தேவர் காட்டும் சாதியில் தாழை மணம் வணிக சாதிப் பாம்பாகியது. இக்கருத்து சித்தர் ஆரூட மென்னும் நூற்கருத்தென்று நச்சினார்க்கினியர் காட்டினார்.

தாழை இவ்வகையில் பாம்பாக மணப்பது ஒரு தாழ்வு போலப் பட்டாலும் தாழையைத் தாழ்ந்து நிற்பதாகக் கொள்ள வேண்டியதில்லை. தாழை என்னும் சொல்லில் 'தாழ்' என்னும் முதனிலை நிற்பினும் இம்மலர் தாழாத மலர். வளையாமல் நெளியாமல் தரை நோக்கித்தாழாமல் குத்திட்டு மலர்ந்து நிற்பது. இதனால்,

*"தாழாது உறைக்கும் தடமலர்த் தாழை"*[2] –எனப்பட்டது. இவ்வடியில், *'தாழாது'* என்பது 'தொடர்ந்து தாதுத் தூளைக் கொட்டுவது' என்னும் பொருளோடு 'தாழாதது' என்னும் பொருளையும் கொள்ள வைக்கின்றது.

இத்தாழாத தாழை மலரின் இதழ் 'வெண்தோடு', 'முள் தோடு' எனத்தோடாகவும், 'மடல் *தாழை*' என மடலாகவும் பெயர் பெறும். இவ்விதழ் உள் அடுக்கு அடுக்காகப் போகப் போகச் சிறுத்துப் பலவாக இருப்பதால் இதனைக் கொத்தாகக் கருதி,

*"வால் இணர் மடற்றாழை"*[3] –என்றார் உருத்திரங் கண்ணனார். இம்மடல் அகலமாகவும் நீண்டும் விளங்குவதால் இம்மலர்,

1 *சீவ சி :* 1287 : 8
2 *கலி :* 121 : 10
3 *ப. பா :* 118

"*தடமலர்த் தண்டாழை*"[1]

"*தாழைக் தடமலர்*"[2] —எனப்பட்டது.

இம்மடல் முள்ளுள்ளதாயினும் அம்முள் களையப்படாமலே சூடிக்கொள்ளப்படும். இதன் மணம் நோய் போக்கும். மலர்த் தாது மணத்தூளாகப் பயன்படும். மற்றும் தாழை மாந்தர்க்குப் பலவகையில் பயன்படும். இதன் விழுது வீட்டிற்கு வண்ண மடிக்கும் துகிலிகையாகும். இதன் நார் கயிறாகி ஊசலுக்கும் பிறவற்றிற்கும் பயன்படும். ஓலையால் தாழம்பாய் உருவாகும்; தாழங்குடையாகும். இதன் உறுப்புகள் பயன்பட்டாலும் பூவால் தான் இதற்குச் சிறப்பும் மதிப்பும் உள. 'பூந்தாழை' என்னும் உலக வழக்கும் இதற்குச் சான்று.

"நெறிமடற் பூந்தாழை" (பழமொழி : 75 : 3)

"கடற் புலவு கடிந்த மடற் பூந்தாழை" (சிலம்பு : 6 : 166)

"மடற் பூந்தாழையும்" (மணிமேகலை : 8 : 9) —என

இலக்கியங்களும் பூந்தாழையாகப் பேசும்.

'பூந்தாழை' என்றொரு ஊர் தஞ்சை மாவட்டத்தில் உளது. தாழையூற்று, தாழைக்காடு, தாழையூர், தாழந்திருவாயில் எனப் பல ஊர்கள் தாழையால் பெயர் பெற்றுள்ளன.

இத்தாழை,

"*ததர்பிணி அவிழ்ந்த தாழை வன்புதர்*
*தயங்கிருங் கோடை தாக்கலின் நுண்டாது*
*வயங்கிழை மகளிர் வண்டில் தாஅம்*"[3] —என்றபடி

தாழை புதராக வளர்வது. எனவே, இப் பூ,

புதர்ப் பூ - அஃதாவது நிலப்பூ.

நெய்தல் நிலப் பூ.

வெண்மை நிறத்தது; இளஞ்செம்மையிலும் பூக்கும்.

வேனிற் பருவப் பூ.

---

1 கலி: தொ : 131 : 10

2 சீவ. சி : 1287

3 நற் : 299 : 2

"தாழை மணக்குதடி கொண்டையிலே
தாழாமேவாயேண்டி அண்டையிலே" என்பதொரு நாட்டுப் பாடல். இப்பாடலில் தாழையின் மணம் ஒரு குமரியை அண்டையிலே அழைக்க வைத்தது. இத்தாழையே ஒரு குமரியைத் தழுவி நிற்பதாகும்.

அவள் "குமரி ஞாழல்"

# 8. குமரி மலர்

## ஞாழல்

'குமரி, கன்னி' என்னுஞ் சொற்கள் உயர் திணையில் பெண் பாலுக்குரியவை. இளம் மகளிரைக் குறிப்பவை. அவருள்ளும் திருமணம் பெறாதவர்க்கு உரியவை. உண்மையைச் சொன்னால் உடற் புணர்ச்சி கொள்ளாத மகளிர்க்கே உரியவை. இச்சொற்களை அஃறிணைக்கும் அடைமொழியாக்கிப் பாடினர்; பேசினர். அதற்குத் தொல்காப்பியத்திலும் உரையாசிரியர்கள் இடம் வகுத்தனர். அஃறிணைப் பொருள்களை உயர்த்திக் கூறுவதற்காக அடைமொழியாக்கலாம். அவ்வாறு ஆக்குவது இலக்கணம் அன்று. என்றாலும்,

"*வழக்கி னாகிய உயர்சொற் கிளவி*" 1 — என்று கொள்ளப்பட்டது.

இவ்வகையில் அடைமொழி பெற்றவை சில. வாழை "குமரி வாழை" எனப்படும். 'வாழைத் தார்' என்னும் குழந்தையை ஈனாத நிலையில் இது குமரி. நன்கு தழைத்து முதன் முதலாகப் பூக்கும் இளமையான வாகை "குமரிவாகை" எனப்பட்டது. பயன்படுவதற்காகப் பொதிந்து வைக்கப்பட்டுள்ள அஃதாவது பயன்படாமல் பொதிந்து வைத்துள்ள நெற்கூடு "குமரிக்கூடு" எனப்பட்டது. மற்றோரால் அணுக முடியாத படை – அழியாப் படை "குமரிப் படை" எனப்பட்டது. இவ்வாறு தாய்மை பெறாமை, தழைத்த இளமை, பயன்படாத பொதிவு, அழியாமை ஆகிய தன்மைகள் கருதிக் "குமரி" என்னும் சொல் அடைமொழியாக்கப்படும்.

---

1 தொல் : சொல் : 27 : 3.

இதுபோன்று, 'கன்னி' என்னும் சொல்லும் பயன்பட்டது. "கன்னிப் புன்னை" என இளமைக்கும், "கன்னிப் போர்", "கன்னிப் பேச்சு" என முதல் நிகழ்ச்சிக்கும் 'கன்னி' குறிப்புச் சொல்லாயிற்று.

ஞாழல் இவ்விரண்டு அடைமொழிகளையும் பெற்றுள்ளது

இம்மரம் செடி நிலையிலிருந்து மரமாகும் பருவத்தில் இதன் தழைத்த தழைகள் பசுமைக் காட்சி வழங்குபவை. இதன் தழைகளைக் கொய்து இளமகளிர் தழையாடையாக உடுப்பர். இப்படியொரு குமரி இதனை உடுத்தி அழகுக் காட்சியளித்ததைக் கண்ட ஒரு தலைவன்,

"*கானல் ஞாழல் கவின்பெறு தழையள்*"[1] – என்றான். இது கொண்டும் இத்தழையின் எழிலை உணரலாம். மேலும் ஒரு முறை கொய்யப்பட்டு மறுபடி அரும்பும் தழை மேலும் அழகு தருவது. இவ்வழகையும் இளமைப் பசுமையையும் கொண்டே சேந்தங்கண்ணனார் என்னும் புலவர்,

"*... ... ... ... ... ...தழையோர்*
*கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்*"[2] – எனக் குமரியாகப் பாடினார்.

இவர் பெயரை முன்பின்னாகக் கொண்ட கண்ணன் சேந்தனார் என்னும் புலவர், "கன்னி இளஞாழல்"[3] என்று கன்னி என்றதோடு இளமையையும் இணைத்து மிடுக்கான இளமையைக் காட்டினார். இதற்கு மெருகு கூட்டுவது போன்று 'நறுமை' என்னுஞ் சொல்லையுங் கூட்டி இளங்கோவடிகளார்,

"*கன்னி நறு ஞாழல்*"[4] –என்று பாடினார்.

இக்கன்னி அடைமொழியால் ஞாழல் ஒரு சிறப்பைப் பெற்றுள்ளது. முன்னே கூறிய தொல்காப்பிய உரையாசிரியர் எடுத்தாண்டுள்ளவற்றில் 'கன்னி' அடைமொழியை இந்த ஞாழலுக்கே சேர்த்துக் "கன்னி ஞாழல்" என்பதையே எடுத்துக்காட்டாகக் காட்டினர். அங்கு, குறிக்கப்படுவது 'உயர்வு கருதி' யாகையால் ஞாழல் ஒருவகை உயர்வு பெற்றதாகின்றது.

---

1 ஐங் : 191 : 3.
2 நற் : 54 : 9, 10
3 திணை. ஐ : 49.
4 சிலம்பு : 7 : 9 : 2

இவ்வடைமொழிகளோடு மகளிர்ச் சொல் ஒன்றையும் அடைமொழியாகப் பெற்றுள்ளது. பைஞ்சோலை ஒன்றை வண்ணிக்கும் இறையனார் அகப்பொருளின் உரையாசிரியர் எனப்படும் நக்கீரர், ''*பாதிரியும் பாவை ஞாழலும் பைங்கொன்றையொடு*

*பிணியவிழ்ந்து*''[1] —என்று பாவையாக்கினார்.

'குமரி', 'கன்னி', 'பாவை' —என்னும் மூன்று அடைமொழிகளைப் பெற்றமையால் ஞாழல்,

இளமைச்சிறப்பும் எழிற்பசுமையும் உயர்த்திக் கூறப்படும் பாங்கும் கொண்டதாகின்றது.

''... ... ... ... ....*திரையுலாப் பரப்பின்*

*ஞாழல்*''[2] —என்றும்,

''.... ... ... ... ...*ஞாழல்*

*தெண்டிரை மணிப்புறம் தைவரும்*''[3] —என்றும்,

''*எக்கர் ஞாழல்*''[4] —என்றும் குறிக்கப்படும். கடற்கரையில் வளர்வது. மணற்பாங்கில் தழைப்பது. எனவே இது நெய்தல் நிலத்தது.

''ஞாழல் ஓங்கிய'' ''கருங்கால் ஞாழல்'' ''சிறியிலைப் பெருஞ்சினை'' ''கருங்கோட்டு இருஞ்சினை'' ''கொழுநிழல் ஞாழல்'' என்பவற்றால் இம்மரம் ஓரளவில் உயரமானது என்றும், கருமையான அடிமரத்தையும் கருமையான கிளைகளையுமுடையது என்றும், சிறிய இலைகளைக் கொண்டது என்றும், நல்ல நிழல் தருவது என்றும் உணரலாம். இக்கிளைகள் தழைத்து, வளைந்து, கவிந்து தரையில் தவழும் அளவில் தோன்றும். ''நீர்க்கால் ஞாழல்''[5] என்பதுகொண்டு நீரிலும் நின்று வளர்வதை அறியலாம்.

எனவே, ஞாழற் பூ கோட்டுப் பூ.

தழையால் குமரியும் கன்னியும் பாவையுமான ஞாழல் தனது பூவால் எத்துணை அடைமொழிகளைப் பெற்றுள்ளது?

''நறு வீ ஞாழல்'' (நற்றிணை : 96 : 1)

---

1 இறை. அகப்; நூற்பா 2 உரை
2 மணி : 8 : 5, 6
3 நற் : 54 : 9, 10
4 ஐங் : 141
5 கலி : 56 : 1, 2

"நறு வீ ஞாழல்" (குறுந்தொகை : 318 : 2)

"புது வீ ஞாழல்" (குறுந்தொகை : 215 : 6)

"பொன் வீ ஞாழல்" (அகம் : 70 : 9)

"செவ் வீ ஞாழல்" (அகம் 249 : 1)

"சிறுவீ ஞாழல்" (நற்றிணை : 315 : 6)

–இவைகொண்டு ஞாழற் பூ மணங்கொண்டதையும் புதுமலரின் குறிப்பையும் அதன் நிறத்தையும் அளவையும் காண்கின்றோம். இவற்றுள் இதன் அளவு சிறியது. சிறிய பூ என்பதை விடச் சின்னஞ்சிறிய பூ எனலாம். உள்ளபடி சொன்னால் இது ஒரு பொடிப் பூ. அவ் வளவில் மிகச் சிறியது. எவ்வளவில் சிறியது?

"ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்"[1] என்றார் குன்றியனார். ஐயவி என்னும் வெண்சிறு கடுகு அளவில் சிறியது. மற்றொரு உவமையால் அம்மூவனார் இதனை வழிமொழிகின்றார்.

"ஆரல் மீனின் முட்டைகளைப்போன்றது ஞாழல் மலர். அம்முட்டைகள் தொகுப்பாக ஒன்று திரண்டிருப்பது போன்று தொகுதியாக உள்ளது. அவை கீழே பூத்துள்ள நெய்தற் பூவின்மேல் உதிரும்.[2]

அக்காட்சி கடல் நீர்த்துளிகளை ஊதைக் காற்று தூற்றுவது போன்றிருக்கும்"

இவ்வுவமையால் ஞாழற் பூவின் பொடி அளவு தெரிகின்றது. மேற்கண்ட அம்மூவனாரது பாடலில் "சினை மருள் திரள் வீ" என்பதில் "சினை" என்பதற்குத் தினை என்றொரு பாடம் உளது. இப்பாடத்திற்குத் துணை நிற்கின்றது கபிலரது பாட்டு. அவர் ஒரு கடற்கரைக் காட்சியை வடித்தார்.

'மணல்மேட்டின்மேல் ஒரு ஞாழல் மரம். அதன் மலர்கள் மணற்பரப்பில் உதிர்ந்துள்ளன. நண்டுக் கூட்டம் அவற்றின் மேல் ஓடிச் தம் கால்களால் கோலமிட்டுள்ளன.[3]

இத்தோற்றம்

காயவைத்துள்ள தினையை அழகிய மகளிர் கையால் துழாவுவது போன்றுள்ளது.' —என்று பாடினார். இது கொண்டும் ஞாழற் பூ தினையளவு சிறியது எனக் காணலாம்.

---

1 குறுந் : 50 : 1

2 குறுந் : 397 : 1

3 நற் : 267 ; 2—6.

மேலே காணப்பட்ட அடைமொழிகளில் "பொன் வீ ஞாழல்" என்பதும் "செவ் வீ ஞாழல்" என்பதும் அதன் நிறத்தைக் காட்டுகின்றன. பொன் இங்கு செம்பொன் போலும். "செவ் வீ" என்றபடி இதன் நிறம் சிவப்பு. தினையரிசி உவமையாக்கப்பட்டதற்கொப்ப அதன் செம்மை நிறத்தது என்னலாம். காமவேளின் இளவல் சாமவேள் நிறத்தை இப்பூவிற்கு நல்லந்துவனார் உவமையாக்கி "நிறங் கிளர்பு கஞலிய ஞாழல்"[1] என்றார். ஆம், ஞாழற்பூ செம்மை நிறத்தில் தொகுப்பாகத் தோன்றுவதால் நிறம் கிளர்ந்து விளங்குவது

தனிப் பூவின் அளவையும் நிறத்தையும் கண்டோம். இப் பொடிப்பூ தொகுதியாக திரண்டிருப்பதைச் "சினைமருள் திரள் வீ" என்னும் தொடர் சுட்டுகின்றது. இவ்வாறு பலபூக்கள் திரண்டு ஒரு கொத்தாக உள்ளமையால் "பொன் இணர் ஞாழல்" (ஐங்குறு : 169 : 2) "குவி இணர் ஞாழல்" (பதிற்றுப்பத்து : 51 : 5) எனப் பட்டது. அக்கொத்தும் பலவாக ஒருங்கு திரண்டு தழைத்திருப்பதால் "இணர் ததை ஞாழல்" எனப்பட்டது. (பதிற்றுப் பத்து : 30 : 1)

இவற்றையெல்லாம் ஒருங்கு நோக்க,

ஞாழற் பூ
ஐயவி அன்ன சிறியது;
செம்மை நிறத்தது;
தொகுதியாகத் திரண்ட கொத்துப் பூ;
மணமுள்ளது;
நிறையப் பூப்பது —என்றாகின்றது.

மேலுள்ள தொடர்களை மேலும் ஒரு நோட்டமிட்டால் ஒரு சொல்லே மீண்டும் மீண்டும் அமைந்துள்ளது தென்படும். அது தான் "வீ" என்னும் சொல். ஆம், ஞாழல் குறிக்கப்படும் இடங்களில் எல்லாம் "வீ ஞாழல்" என்றே குறிக்கப்படுவது கொண்டு இப்பூ விரைவில் உதிர்ந்துவிடுவது என்பதை உணரலாம்.

இப் பூ பொடிப் பூவாயினும், தொகுதியாகக் குவிந்திருப்பதாலும் நிறம் கிளர்ந்து விளங்குவதாலும் சூடிக்கொள்ளப்பட்டது. கபிலர், "மணம் கமழ் நறு வீ" என்றபடி கமழும் மணமும் மகளிரை

---

1 கலி : 26 : 4.

யும் ஆடவரையும் சூடிக்கொள்ளத் தூண்டும். கடற்கரையில் கன்னி ஒருத்தி, "கன்னி நறு ஞாழல் கையில் ஏந்தி"[1] நின்றதைக் கண்டு மயங்கிக் கலங்கினான் ஒரு காளை என்றார் இளங்கோ வடிகளார். ஞாழற் பூங்கொத்தைக் கொய்து சூட நின்றவள் போலும் அவள்.

மற்றொருத்தி ஞாழலின் முதிர்ந்த பூங்கொத்தைக் கொய்து கூந்தலில் கலந்து செருகி முடித்துக்கொண்டதை நல்லந்துவனார்·

*"... ... ... ... ... ஞாழல் முதிர் இணர் கொண்டு*
*கழும முடித்து .... ... ... ஈங்கே வருவாள்"*[2] – என்று

தலைவனைப் பேச வைத்தார். இவைகொண்டு மகளிர் ஞாழற் பூவை சூடியதை அறியலாம். ஆடவரும்,

*"... ... ... ... ... ஞாழல்*
*வண்டுபடத் ததைந்த கண்ணி"*[3] – யராக விளங்கினர்,

தலையிற் சூடியது மட்டுமன்றி, நீலத்தையும் நெய்தல் பூவையும் இதனுடன் சேர்த்து மாலையாகக் கட்டி மார்பில் அணிந்தனர்.

ஞாழலின் பெயர்களை நிகண்டுகள் குழப்பியுள்ளன.

'பலினி' என்றொரு பெயரைமட்டும் சூடாமணி நிகண்டு குறித்தது. பிங்கல நிகண்டு பலினியுடன் 'நாகம்' என்னும் பெயரையும் கூட்டிக் கொண்டது. சேந்தன் திவாகரமோ பலினியை விட்டது.

*"நறவம் சுள்ளி நாகம் ஞாழல்"* —என 'நறவம்', 'சுள்ளி' என்னும் இரண்டையும் சேர்த்துக் கொண்டது. இச் சேந்தன் திவாகரமே.

*"நறவம் சுள்ளி அருப்பலம் அனிச்சம்"* — என அனிச்சத்திற்கும் இவ்விரு பெயர்களையும் குறித்துள்ளது. இவற்றுள் நறவம் என்பது கொடி. ஞாழல் மரம். எனவே பொருந்தாது. சுள்ளி அனிச்சத்தோடு ஆராயவேண்டியது. அவ்வாய்வால் ஞாழலுக்குப் பொருந்தாமை புலப்படும்.

---

1 சிலம்பு : 7 : 9 : 2
2 கலி : 56 . 2, 3.
3 அகம் : 370 : 10.

நாகம் வேறு ஞாழல் வேறு. குறிஞ்சிப்பாட்டில், ஞாழலும் நறவமும் நாகமும் தனித்தனியே காட்டப்பட்டுள்ளன. எனவே, பலினி தவிர மற்றைப் பெயர்கள் ஞாழலுக்கு உரியன அல்ல.

கல்லாடம்,

*"பொன்னுறு ஞாழல் புலிநகம் கடுக்கும்"*[1] – என ஞாழற் பூ புலி நகம்போன்றதாகப்பாடியது. இதுகொண்டே இரண்டிடங்களில் உ. வே. சா. அவர்கள் ஞாழலைப் புலிநகக்கொன்றைஎன்று குறித்தார்கள். புலிநகத்தின் வடிவம், அளவு இரண்டிற்கும் எவ்வகையிலும் இந்தப் பொடிப் பூ ஒத்து நிற்பதன்று.

தமிழின் சிறப்பெழுத்தைத் தன்னிடையே கொண்ட ஞாழல் பொடிப் பூ வாயினும் தமிழ்ச் சான்றோர்தம் இயற்கை மனப்படிவில் தோய்ந்தது. இப் பூவால் பெயர் பெற்ற புலவர்கள்,

மதுரை அளக்கர் ஞாழலார்,
குமிழி ஞாழலார் நப்பசலையார் என்னும் இருவர். இருபாற்புலவர்கள் இப்பெயர் பெற்றமை ஒரு சிறப்பாகின்றது.

## 9. வலம்புரி மலர்; தொடை மலர்.

### மராஅம்—கடம்பு.

செம்மையும் வெண்மையும் கொண்ட ஓரினப் பூக்களின் வரிசையில் கடம்பு இடம் பெற்றதாகும். இதில் செங்கடப்பம் பூ வெண்கடப்பம் பூ என இருவகைகள் உள. இவ்விரு நிறங்களையும் கொண்ட பிற பூக்களுக்கும் இதற்கும் குறிப்பிடத்தக்க வேறுபாடு உண்டு. பிற பூக்கள் இவ்விரு நிறவேறுபாடு ஒன்றன்றிப் பிற தன்மைகளில் ஒத்தவை. இக்கடம்பம் பூ இரண்டும் மரத்தால் ஒத்தவை. நிறத்தால் மட்டுமன்றி நிலத்தாலும், பூக்கும் பருவத்தாலும், மலரின் அமைப்பாலும் வேறுபாடுடையவை. இவை மட்டுமன்றிப் பெயராலும் ஒரு வேறுபாட்டுக் குறிப்பு உண்டு.

செங்கடம்பு, வெண்கடம்பு[1] இரண்டற்கும் பொதுப்பெயர் மராஅம் என்பது. மராஅம் என்றாலும் மரவம் என்றாலும் ஒன்றே. (குராம்–குரவம் என்பது போன்றது) மராஅம் என்பது இரண்டற்

1 கல்லாடம் : 50 : 6

கும் பொதுப்பெயராயினும் சங்க இலக்கியங்களில் பெரும்பாலான இடங்களில் வெண்கடம்பைக் குறிக்கவே வந்துள்ளது. ஆங்காங்கே செங்கடம்பை ஒரோ வழி குறிக்கும். இவ்வேறுபாட்டை இப்பெயர் வந்துள்ள முன்பின்னான பொருளமைப்பு கொண்டே காணவேண்டும். ஆனால், கடம்பு என்னும் பெயர் செங்கடம்பைக் குறிக்கும்.

கடம்பைக் காட்டிலும் மராஅம் என்னும் சொல்லே சங்க இலக்கியங்களில் அதிகம் ஆட்சி பெற்றுள்ளது. எனவே, மராஅம் பற்றிய கருத்தை முதலில் கண்டு அதன் தொடர்பில் அடுத்துக் கடம்பை–செங்கடம்பைக் காண வேண்டும்.

அதற்கு முன் ஒன்றைக் குறிக்க வேண்டியுள்ளது.

நமது பண்டைய இலக்கிய இலக்கண நூல்கள் கிடைத்தற்கரிய கருவூலங்கள்; பொன் பொதிந்த பெட்டகங்கள்; மணிகள் மலிந்த பேழைகள்; சுவைக்கனித் தோட்டங்கள். அவை யாவற்றையும் நாம் துய்ப்பதற்குத் தடையாக அடைப்பான்களும் பூட்டுகளும் முடிச்சுகளும் உள்ளன. அவற்றை, ஒதுக்கி வழிகாட்டியும் திறந்து பழி நீக்கியும், அவிழ்த்து ஒளிகாட்டியும் உதவியோர் உரையாசிரியர்கள். அவர்களது அருட்பணியை நாம் பாராட்டவும் நன்றிகூறவும்–ஏன்–போற்றவும். வணங்கவும் கடமைப்பட்டுள்ளோம். இத்துடன் ஒரு சிறு குறையையும் குறிக்க நேர்கின்றது.

தமது உரைகளால் மூலத்தைத் தெளிவாக்கியவர்கள் ஒரோவழிச் சில இடங்களில் மிகச் சில இடங்களில் குழப்பத்தைத் தந்துளர். சில இடங்களில் உரையைவிட மூலம் தெளிவாக உள்ளது. உரையால் ஏற்படும் குழப்பத்தை மூலம் தெளிவுபடுத்துகின்றது. இதற்கு இம்மராஅமும் ஒரு சான்றாகின்றது.

குறிஞ்சிப் பாட்டில்,

அடி 66 : ''எரிபுரை எறுழும் சுள்ளி கூவிளம்''
அடி 85 : ''பாங்கர் மராஅம் பல்பூந் தணக்கம்''

–என்பவற்றில்

வந்துள்ள ''சுள்ளி'' ''மராஅம்'' இரண்டிற்கும் நச்சினார்க்கினியர் பின்வருமாறு உரை எழுதியுள்ளார்:

''சுள்ளி — மராமரப் பூ''
''மரா அம் — மரவம் பூ''

கபிலரது குறிஞ்சிப் பாட்டின்படி சுள்ளி ஒரு வகைப் பூ. மராஅம் வேறுவகைப்பூ. நச்சர் எழுதிக்காட்டியுள்ள மராஅமும் மரவமும் ஒன்றே. பத்துப் பாட்டில் மராஅம் எட்டிடங்களில் வந்துள்ளது. அவற்றுள் ஐந்திடங்களில் மராமரம் என்றும் மரவம் என்றும் நச்சரே பொருள் எழுதியுள்ளார். சிறுபாணாற்றுப் படையில் 'கடம்பு' என்று எழுதினார். திருமுருகாற்றுப்படையில் செங்கடம்பு என்று எழுதினார். அதற்கும் 'வெண்கடம்பு' என்றொரு பாடம் உளது. கலித்தொகையில் இரண்டிடங்களில் மராஅம் உளது ஓரிடத்தில் வெண்கடம்பு என்றும் மற்றோரிடத்தில் மராமரம் என்றும் நச்சரே எழுதியுள்ளார். எனவே, நச்சரது உரைகளே மராஅமும் மரவமும் ஒன்றே என்று காட்டுகின்றன. அவரே சுள்ளியையும் மராமரம் என்று எழுதியுள்ளமையால் ஒரே வகைப்பூவை இரண்டிடங்களில் காட்டியதாகின்றது. ஒரேபாட்டில் அடுத்தடுத்து அமையும் பூக்களில் கூறியது கூறலைக் கபிலர் செய்தார் என்றால் அது பெருந்தவறு மேலும் பரிபாடலில் பரிமேலழகரும்,

"மராமலர்த் தார்"[1] என்பதில் "மராம் — வெண்கடம்பு' எனப் பொருள் காட்டியுள்ளார்.

எனவே, நச்சர் சுள்ளிக்கும் 'மராமரம்' என்று பொருள் கொண்டதால் ஒரு குழப்பத்தைத் தந்தவராகின்றார்.

இவ்வோரிடத்தில் உள்ள மாறுபாடன்றி வேறெவ்விடத்தும் மராஅம் பற்றிக் குழப்பம் இல்லை.

"*இந்துளம் மரா கதம்பம் இயைந்த நீபம் கடம்பாம்*"[2]

—எனக் கடம்பிற்குக் கூறப்பட்ட பெயர்களில் மராம் தவிரப் பிற சொற்கள் வடசொற்கள். இவற்றில் எச்சொல்லும் சங்க இலக்கியங்களில் இடம் பெறவில்லை. இது பிற்கால அமைப்பு

சேந்தன் திவாகரம்,

"மரா வெண்கடம்பின் பெயரா கும்மே" என்றது, இலக்கிய ஆட்சியில் பெரும்பாலான இடங்களில் அமைப்பிற்குப் பொருந்துவதாகும் பொதுவில் இம் மரத்தை மரவம், மராஅம் என்று குறிப்பிடும் இடங்களிலும் வெண்கடம்பையே குறிக்கும். சிலம்பில் மரவம் என்பதற்கு அடியார்க்கு நல்லார் 'வெண்கடம்பு'

---

1 *பரி* : 15 : 20 2 *சூடா. நி : மரம்* : 25 : 2

என்றெழுதினார். அரும்பத உரையாசிரியர், 'கடம்பு' என்று எழுதி, மேலும் "குங்கும மரமுமாம்' என்று குறித்துள்ளார். இஃது எவ்வகையில் என்பதற்கு நிகண்டு தவிர வேறு சான்று இல்லை.

இலையுதிர்ந்த நிலையில் இம்மரத்தின் நிழல் கோடு கோடாகத் தோன்றுவதை "வரி நிழல்" என்றனர். இந்நிழல் வலை கட்டினாற் போன்றது என்பதை "வலை வலந்தன்ன மென்னிழல்"(பொருந் : 51) என்றார் முடத்தாமக்கண்ணியார்,

எனவே, இங்குமுதலில் வெண் கடம்புப்பொருள் தொடர்பில் மராஅம் பற்றி அறியலாம்.

## 9. (அ) மராஅம்—வெண்கடம்பு.

மராஅம் பூவைத் தரும் மரம் பெரியது. ஆலமரத்துடன் சேர்த்துப் பேசப்படுவது.

*"மள்ளர் அன்ன மரவம் தழீஇ*
*மகளிர் அன்ன ஆடுகொடி நுடங்கும்"*[1]

—என இம்மரம் வீரனாகக் கூறப்படும் அளவில் உறுதி வாய்ந்தது. "ஆலமும் தொல்வலி மராஅமும்" (கலி : 101 ; 13) என்று இதன் வலிமை உறுதி குறிக்கப்பட்டுள்ளது.

'நல்லரை மராஅத்த', 'திரள் அரை மராத்து', 'பொரி அரை மராஅம்" 'நெடுங்கால் மராஅத்துக் குறுஞ்சினை', 'இலையில் மராத்த' என்பவற்றால் இம்மரத்தின் அடிப்பகுதி, நன்கு திரண்டது; பட்டை பொரிந்தது; உயரமானது என்றும், இதன் கிளை சிறியது என்றும், இலையுதிர் மரம் என்றும் அறியலாம். மேலும், மேலே காணப்பட்ட அடிமர அமைப்பின் மேல் மரம் உயர்ந்து நீண்டது என்ற குறிப்பையும் கொள்ள வேண்டும். 'நெடுங்கால்' என்று குறிக்கப்பட்ட பகுதி,

1 ஐங் : 400 : 1, 2.

"கருங்கால் மராஅம்" என்று சிலவிடங்களிலும்,

"செங்கால் மராஅம்" என்று பலவிடங்களிலும் குறிக்கப் பட்டுள்ளது. இவைகொண்டு 'அடிமரம் கருப்பா; சிவப்பா; கருப்பும் சிவப்புமா?' என்ற ஐயம் எழலாம். முன்னே கண்ட திரண்டு பொரிந்த அடிமரம்கருமை என்றும், அதற்கு மேல் நீண்டு வளரும் மரப்பகுதி செம்மை என்றும் கொள்ளவேண்டும். இதனை விளக்குவதுபோன்று மாமூலனார் பாடல்,

"... ... ... ... ...செங்கோல்

கருங்கால் மராஅத்து"[1] —எனச் செங்கோல், கருங்கால் எனக்குறித்து அடிப்பகுதி கருமை என்றும் மேற்பகுதி –கிளைகள், –கொம்புகள் செம்மை என்றும் குறிக்கின்றது. இது மலர்த்தும் மராம்பூ கோட்டுப் பூ.

இங்கு மராஅம் எனப்படும் வெண்கடப்பம் பூ, அளவில் சிறியது. "தேம்பாய் மெல்லிணர்" (அகம் : 221 : 8) "வாலிணர்" "வான் மெல்லிணர்" என்னும் தொடர்கள்,

இப் பூ, மென்மையானது;

கொத்தாகப் பூப்பது;

அக்கொத்து வெண்மைக் கொத்து —என்று காட்டுகின்றன, இதன் தனிப் பூ நல்ல வெண்மை நிறம் பொருந்தியது. இவ் வெண்மையை,

"... ... ... ... ...வாலிய

சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்"[2] —என மாமூலனார். தூய வெண்மைச் சுண்ணாம்பு — சுதையைக் குறித்துள்ளார். வடமோதங்கிழார் என்பார், இதன் வெண்மை ஒளியை "வெயில் அவிர் புரையும்"[3] எனக் கதிரவன் ஒளியொடு பொருத்தினார். கல்லாடனார் 'நீர்வேட்கை கொண்ட யானை மலைப்பகுதியில் மராமரத்து மலர் உதிர்வதை வெள்ளிய மழைத்துளி விழுவதாக எண்ணி அங்குமிங்கும் ஓடி அலைந்தது'[4] என்று 'வெள்ளிய மழைத்துளி' என்றார். திருத்தக்க தேவர், 'முடியணிந்த மன்னர்

---

1 அகம் : 127 : 12, 18.
2 அகம் : 211 : 1, 2.
3 அகம் : 317 ; 15
4 அகம் : 199: 1-4,

பின் செல்லும் சட்டையணிந்தவர்போல வெண்கடம்பு பூத்தது'[1] என்று வெள்ளைத் துணியாகப் பாடினார். இதனை வழிமொழி வதுபோன்று பிற்காலக் குமரகுருபரரும்,

"*மரவங்கள் நுண்துகில் வழங்க*"[2] - என்று நுண்ணிய ஆடையாகப் பாடினார்.

தெய்வங்களின் நிறத்தோடு மலர்களை அறிமுகப்படுத்திய கலித்தொகை,

"*ஒருகுழை ஒருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்*"[3]

என ஒரு காதணிகொண்டவனும் வெள்ளை நிறத்தவனுமாகிய பலராமனைக் குறித்தது. இக்கலித்தொகையே நாஞ்சில் படையைக்கொண்ட இப்பலராமன் பசிய துளசி மாலை அணிந்துள்ள தோற்றத்தை வைத்து,

'கொடிய வலிமையுடைய நாஞ்சிற்படையைக் கொண்ட பலராமன் மார்பில் பசிய துளசிமாலை சூழ்ந்திருப்பது போன்று மராமரத்தின் மார்புபோன்ற உயர்ந்த கிளைப்பகுதி களில் பசியமயில்கள் சூழ்ந்திருக்கும்'[4] — என்றது. இவற்றைப் பின்பற்றி பரிபாடலில் கண்ணன் கூத்தனார்

"*நாஞ்சில் வலவன் நிறம்போலப் பூஞ்சினைச்*
*செங்கால் மராஅம்*"[5] –எனப்பாடினார். சீத்தலைச் சாத்தனார், பசிய இலைகளைக்கொண்ட பச்சை மூங்கிலோடு வெண்மையான பூக்கள் செறிந்த மராம் பூவைக் காண்கின்றார்:

" ... ... ... ... *கண்டு*
*நெடியோன் முன்னொடு நின்றனனாம் என*"க்[6]

– கண்ணன் பலராமனொடு நின்றதுபோன்றெனா உவமை கூறினார். இளம்பெருவழுதியார் பாட்டு பலராமன் மாரர்பில் அணிந்துள்ள வெண்மையான மராமலர்த் தார் மலையிலிருந்து அருவி வீழ்ந்தது[7] என்கின்றது.

1 *சீவ. சி* : 1558
2 *மீ. பி. த* : 73 : 8.
3 *கலி* : 26 , 1,
4 *கலி* : 36 : 1, 2,
5 *கார்* : 19.
6 *மணி* : 19 : 76, 77.
7 *பரி* . 15 : 19,

இவற்றால் இம்மலரின் வெண்மைநிறம் சிறப்பிக்கப்பட்டது.

இவ்வெண்மை மலர்களின் தொகுப்பாகிய கொத்து உருண்டு திரண்டு "வெண்கடம்பு பந்தணிந்தவே"[1] எனத் திருத்தக்க தேவர் வண்ணித்தாங்கு வெண்பந்து போன்று காட்சியளிக்கும். இப்பந்துத் தொகுப்பும் மலர்கள் ஒழுங்கில்லாத தொகுப்பன்று. மலர்வரிசை முறுக்கிய புரி அமைப்புடையது. இப்புரியும் பந்து வடிவிற்கமைய மேலே சுரிந்து வரும். இந்நிலையைப் "புரியிணர்" என்றும் "மராஅத்து வால் இணர்ச் சுரிமலர்"[2] என்றும் புரிந்தும் சுரிந்தும் அமைந்தமை பாடப் பட்டது. இப்புரிவும் சுரிவும் வலப்புறமானவை என்பதை,

"வலம்புரி மராஅத்து" (குறு : 22)

"வலஞ்சுரி வாலிணர்" (ஐங் : 383)

—எனக்

குறித்தன. இவைபோன்றே பலஇடங்களிலும் இவ்வாறு வலமாகச் சுரிந்திருக்கும் அமைப்பு பாடப்பட்டுள்ளது.

இவ்வெண்கடம்பு மலைப்பகுதியிலும் சுரத்திலும் வளரும். இது பூத்துக் குலுங்கும் போது மலையே அழகு பெற்று விளங்கும் என்பதைச் சேரமான், எந்தை என்னும் சேரமன்னன்,

"சிலம்பணி கொண்ட வலம்புரி மராஅத்து"[3] —என்றார்.

மலையிடமாகக் குறிக்கப்படுவது நிறைந்த குறிஞ்சி நிலத்தைக் குறிப்பது அன்று.

"பாலை நின்ற பாலை நெடுவழிச்
சுரன்முதல் மராஅத்த" (சிறுபாண் : 11, 12.)

"வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புது வீ" (அகம் : 83 :1)

"நீரில் நீளிடை செங்கால் மராஅத்து" (நற் : 148 : 6, 7)

"சுரன் மராஅத்த"

என இம்மரம் பாலைநிலத்தில் உள்ளமை குறிக்கப்படும். பாலை வழியில் அயலில் இது வளர்வதை "நெறியியல் மராஅத்த"

---

1 சீவ. சி : 1650
2 யாப், வி : 44மேற்.
3 குறுந்தொகை 22 ; 3.

(குறுந் : 92) ''நெறியயல் மராஅம்'' (அகம் : 121 : 8) என்பன கொண்டும் அறிய முடிகின்றது. மேலும் இவ்வெண்கடம்பு பேசப் படும் பாடல்கள் பாலைத் திணைக்குரியனவாக உள்ளன. உடன் போக்கு மேற்கொண்டு சென்றோர் இதன் இலை உதிர்ந்த நிழலில் தங்கியதையும் இதன் பூவைத் தலைவன் தலைவிக்கு வழங்கியதையும் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

இமை யாவற்றாலும் வெண்கடப்ப மலர் பாலைநில மலர்.

அதிலும் குறிஞ்சி திரிந்தபாலை நில மலர்.

இம்மலர்க்குரிய பருவம் இளவேனிற் பருவம். இதனை,

''... ... .... ... காமர் வேனில்
வெயிலவிர் புரையும் வீததை மராஅம்'' (அகம் : 317 : 14, 15.)

''தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை
வேனில் ஓரிணர்'' (குறுந் : 211 : 4)

''.... — வலம்புரி மராஅத்து
வேனில் அஞ்சினை கமழும் ....'' (குறுந் : 22 : 3, 4)

''வேனில் பூத்த மராங் கோதை'' (ஞான. தே : நாகை)

—எனப் பல இலக்கியங்களும் காட்டுகின்றன.

இப் பூ மணம் கமழ்வது.

''— ... ... ... மராஅத்து
வேனில் அஞ்சினை கமழும்'' (குறுந் : 22 : 3, 4)

''வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீ'' (அகம் : 83 : 1)

—என்றெல்லாம் இதன் மணம் குறிக்கப்பட்டுள்ளது. இதன் மணத் தால் பாலைவனமே மணம் கமழுமாம்.

தேனுடன் இம்மலர் விரியும். ஆனால், வெப்பத்தால் காய்ந்த மரத்தில் உள்ள பூ தேன் அற்றதாகும். இக்காலத்தில் தேன்கருதி இம்மலரை ஊதிய தும்பி தேனின்றி ஏமாந்து பெயர்ந்ததைக் காவல் முல்லைப் பூதனார் (குறுந் : 211 : 4, 5) பாடியுள்ளார்.

வெண்மை நிறமும் கொத்துமாகிய இப்பூ மகளிராலும் ஆடவராலும் சூடப்பட்டது. தலைவன் தலைவிக்குக் கையுறை யாக இப்பூவை வழங்கினான். அவள் இதனுடன் தழைகளைத்

தொடுத்துத் தழையாடையாக உடுத்தினாள். இப் பூவைச் சூடிய தால் தலைவி,

"*தேம்பாய் மராஅம் கமழும் கூந்தல்*"[1] கொண்டாள்.

உடன் போக்கில் அழைத்துச் செல்லும் தலைவன் வழியில் பூத்துள்ள மராங்கிளையை வளைத்துக்கொடுக்க அவள் கொய்து தானும் சூடித் தனது பொம்மைக்கும் சூட்டினாளாம் இதனைக் கண்ட அத்தலைவன் உள்ளம் மகிழ்ந்தானாம் (ஐங். 383)

வலமாகச் சுரிந்த இப்பூவை ஆடவர் தமது சுரிந்த குஞ்சியில் சூடிக்கொண்டனர். (அகம் : 83) அவன் கொய்து சூட்டிக் கொண்டது மட்டுமன்றி இயற்கைத்

"*... ... .. ... தென்றல்*
*சுரஞ்செல் மள்ளர் சுரியல் தூற்று*"[2] மாம்.

ஆடவர் இப்பூவைத் தனியாகவும் சூடினர். பிற பூக்களொடும் மாந்தளிரொடும் மரல் நாரில் தொடுத்துக் கண்ணியாகச் சூடினர் (மலை : 428—431.) பாலைநிலத்தில் வாழும் மரவரும் இம்மலரைச் சூடி மகிழ்ந்தனர்.

மரா மரம் ஆலமரம்போன்று பெரியமரம். ஆலமரத்தடியிடம் பலர் கூடும் இடமாக 'மன்றம்' என்று குறிக்கப்படுவது போன்று இம்மரத்தடியும் மன்றமாகக் குறிக்கப்பட்டது. இம்மரத்தின் அடியிடத்தில் போரில் புறங்கொடாது மாய்ந்த வீரரது நடுகல் நாட்டப்படும். இதனாலும், இம்மரத்தில் அச்சமூட்டும் குட்டித் தெய்வங்கள் இடம் பெறுவதாக நம்பினர்.

"*நல்வரை மராஅத்த கடவுள்*"[3] –எனச் செங்கண்மாத்து வேளும்,

"*மன்ற மராஅத்த பேஎ முதிர் கடவுள்*
*கொடியோர்த் தெறூஉம் என்ப*"[4]

— எனக் கபிலரும் பாடினர்

---

1 நற் :20 ; 8
2 அகம் : 21: 12. 13.
3 மலை : 395
4 குறு : 87 ; 1, 2.

இராமாயணத்தை எழுதிய வடமொழிச் சான்றோர் வான்மீகியார் மராமரத்தின் பெயரை 'மரா மரா' என்று தொடர்ந்து சொல்ல ''ராம'' ''ராம'' என்றாகியதால் இறையன்பு கொண்டார் என்பர். இவ்வகையில் இம்மரம் ஒரு மந்திரத்திற்கும் பிடிப்பு தந்ததாகின்றது.

தமிழ் இலக்கியங்களில் இம்மரம் மரா மலரோடு ஓரிடம் பெற்றுவிளங்குகின்றது

இதுவரை கண்ட மலர்ச் செய்திகளைக் கொண்டு,

வெண்கடப்ப மலர்,

'கோட்டுப் பூ. மென்மையானது. வெண்மை நிறங் கொண்ட சிறிய மலர். கொத்தாகப் பூக்கும். அக்கொத்தும் வலப்புறமாகச் சுரிந்து பந்து போன்றிருக்கும். மணம் கமழும். குறிஞ்சி திரிந்த பாலை நிலப் பூ. இளவேனிலில் பூக்கும். ஒப்பனை கருதிச் சூடப்படும்.'

—என்று தொகுக்க முடிகின்றது.

இவற்றுடன் மராஅ மலருக்கென அமைக்கப்பட்டுள்ள ஒரு தனிக் குறிப்பை எடுத்து மொழிய வேண்டும். இங்குக்காட்டப் பட்ட இலக்கிய வரிகளில் ''மராஅ, மராஅம்'', ''மராஅத்து'' என அளபெடை பெற்றுள்ளதைக் காணலாம். பலா, குரா முதலிய சில சொற்கள் இவ்வாறு அளபெடை பெற்று வரும். எனினும் இம் மரா இலக்கியங்களில் குறிக்கப்படும் பாடல் சில இடங்கள் தவிர பல இடங்களில் மிகப் பல இடங்களில் அளபெடை பெற்றே அமைந்துள்ளது. மரா அத்திற்கு அளபெடைஒரு சின்னம் போன்று பெரும்பாலான இடங்களில் அமைந்துள்ளது. இஃது மராஅ மலர்க்கு ஒரு தனிச் சிறப்பாகி ஒரு நிறைவு பெறுகின்றது

# 9. (ஆ) கடம்பு – செங்கடப்பம் பூ.

குறிஞ்சிப் பாட்டின் மலர்ப் பட்டியலில் கடம்புப் பெயர் இல்லை. பட்டியலில் இல்லையெனினும் பின்னர், கடப்பம் பூங் கொத்து உவமையாகச் சொல்லப்பட்டுள்ளது. முன்னர்க் கண்ட பொதுப்பெயர் என்னும் வகையில் இச்செங்கடம்பையும் உள்ள

டக்கியே "மராஅம்" பட்டியலிடப்பட்டுள்ளது. அப்போதுப் பெயரால் மட்டுமன்றிப் பெரும்பாலான இடங்களில் செங்கடம்பைக் குறிக்கக் 'கடம்பு' என்னும் பெயரே கொள்ளப்பட்டுள்ளதால் கடம்புப் பெயரில் செங்கடம்பைக் காண நேர்கின்றது.

மரத்தளவில் இரண்டிற்கும் பெரும் வேறுபாடில்லை. வெண்கடம்பு போன்றதே செங்கடம்பும். இரண்டும் இலையுதிர் மரங்களே. ஆயினும், இக் கடம்பின் இலைகள் நன்கு தழைத்துச் செறிந்து வளரும். மரத்தைச் சுற்றிலும் பரவித்தாழ்ந்து கவிழ்ந்தும் தழைப்பதால் அடிமரப்பகுதி இருட்டாகத் தோன்றுவதை,

"*இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து*"[1] —என்றார் நக்கீரர். கபிலர் "திணிநிலைக் கடம்பு" என்றதற்கேற்ப இம் மரம் உறுதி வாய்ந்தது. இவ்வுறுதியைச் 'செறிந்த தன்மையை உடைய கடம்பு' என்னும் பொருளமைத்து நத்தத்தனார் "துறு நீர்க் கடம்பு" என்றவர்,

"*நறுநீர்ப் பொய்கை அடைகரை நிவந்த*
*துறுநீர்க் கடம்பின்*"[2] —என இம்மரம் உயர்ந்து வளர் வதையும் பொய்கைக் கரையில் இடம் பெறுவதையும் குறித்துள்ளார். பொய்கைக் கரையில் வளர்வதாயினும் இம்மரம் பலைப் பாங்கில் இடம்பெற்றது. எனவே குறிஞ்சி நில மரம்.

எனவே, செங்கடப்பம் பூ குறிஞ்சி நிலப் பூ.

இப் பூ "இணர்க் கடம்பு" என்னும்படி கொத்தாகப் பூக்கும். அக்கொத்தும் உருண்டு திரண்டிருக்கும். ஒழுங்கு வட்டமாக அமைந்த இதன் அரும்புகள் யாவும் ஒரே நேரத்தில் மலர்ந்து தோன்றும். இவ்வாறு ஒரே நேரத்தில் மலரும் இதனைவைத்து ஒரே நேரத்தில் பல கருத்துக்களை வெளியிடும் ஒரு தருக்க முறைபெயர் பெற்றது. அதற்குக் 'கடம்பகோரக நியாயம்' என்று பெயர். கோரகம்என்றால் இளம் அரும்புஎன்று பொருள். கடம்பின் இளம் அரும்பு 'ஒரே நேரத்தில் மலர்வதுபோன்று ஒரே நேரத்தில் பல கருத்துகளை மலர்த்தல்' என்று இத்தொடருக்குப் பொருள்.

---

1 *திருமுருகு* : 10.
2 *சிறுபாண்* : 69, 70.

இம்மலர் சிறிய அளவில் மஞ்சள் பாவிய செம்மை நிறங் கொண்டது. *"எரிகான் றன்ன பூஞ்சினை மராஅம்"*[1] -என இதன் நிறம் நெருப்பின் நாக்களவு நிறங்கொண்டது. இந்நிறத்தையே *"வண்ணக் கடம்பின் நறுமலர்"*[2] என்றார் உருத்திரங்கண்ணனார். இம்மலர்க்கொத்தின் வடிவத்தையும் நிறத்தையும் கொண்டு குறும்பூழ்ப் பறவையின் குஞ்சிற்கு உவமையாக்கினார்.

இப்பூங்கொத்து ஒவ்வொன்றும் உருண்டு சிறு எலுமிச்சம் பழ அளவில் இருக்கும். இக்கொத்துகள் தொடர்ந்து பூத்து ஒரு கோதை மாலை போன்று தொங்கும். கொன்றையும் கோதையாகப் பூப்பதை முன்னே கண்டோம். இவ்வாறு கோதையாகப்பூப்பதை,

"... கடம்பின் துணையார் கோதை" (சிறுபாண் : 69) என்று கூறும் அடிக்கு நச்சினார்க்கினியர்,

"கோதை போலப் பூத்தலின் கோதை என்றார்"

-எனப் பொருள் எழுதினார். இவ்வமைப்பில் இக்கொத்துக்கள் தொடர்ந்து ஒரு தொடையல் போல் பூப்பதைத்தொல்காப்பிய உரைப் பேராசிரியர் செந்தொடைக்கு உவமையாக்கி,

"செந்தொடையும், செய்யுட் பொலிவு செய்யுங்காற் கொன்றையுங் கடம்பும் போல நின்றவாறே நின்று தொடைப் பொலிவு செய்யும் என்பதாம்"[3] —என விரித்தார்

உருள் வடிவப் பூங்கொத்துகள் இவ்வாறு தொடர்ந்து கோவையாகத் தோன்றுவதை மகளிர் கைகோத்திருப்பதற்கு உவமையாக்கினர். மகளிர் கைகளைக் கோத்துப் பிடித்துக் கொண்டு பிடிவிடாமல் ஓடி நீரில் பாய்ந்து நீராடுவர். இதனைக் கபிலர்,

*"திணிநிலைக் கடம்பின் திரளரை வளைஇய*
*துணையறை மாலையில் கைபிணி விடேஎம்*
*நுரையுடைக் கலுழி பாய்தல்"*[4]

— என்று பாடியுள்ளார். திருத்தக்க தேவரும்,

---

1 *மலை* : 498.
2 *பெரும்பாண்* : 203, 204.
3 *தொல். செய்யுளியல்* : 94 உரை
4 *குறி. பா* : 176—178.

*"கடம்பு சூடிய சன்னி மாலைபோல்*
*தொடர்ந்து கைவிடாத தோழி மாரொடும்"* [1] —எனக்

கைகோப்புக்கு உவமையாக்கினார். மேலும், இச்செங்கடப்பம் பூத் தொடர் உருண்டு திரண்டு தோற்றமளிப்பதை,

"உருள் பூ தண் தார்" (திருமுருகு : 11)
"உருள் இணர்க் கடம்பின் ஒலிதார்" (பரிபாடல் : 5 : 81)
"உருள் பூங் கடம்பின்" (பதிற்றுப் பத்து : பதிகம் : 4 : 7)

—எனப் பலவிடத்தும் "உருள் பூ" எனக் குறித்துள்ளனர். பரிபாடலில் மூன்று இடங்களில் வந்துள்ளது. இடைக்கால நூல்களாகிய கல்லாடம், காசி கண்டம் முதலியவற்றிலும் இப் பூ "உருள் பூ" எனப்பட்டுள்ளது. திருமுருகாற்றுப்படை அடிக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர்,

"தேர் உருள் போலும் பூவாற் செய்யப்பட்ட குளிர்ந்த மாலை" —என்று இப் பூக்கொத்தின் வடிவத்தைத் தேர்க்கால் உருளையாக விளக்கினார்.

இப் பூ கார் கால மலர்.

*"தலைப்பெயல் தலைஇய தண்ணறுங் கானத்து*
*இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து"* [2] (செங் கடம்பு)

—என்னும் அடிகள் இப்பூ கார்காலத் தொடக்கத்தில் முதலில் மழை பெய்யும் போது மலர்வதைக் காட்டுகின்றன.

"கார்மலி கதழ்பெயல் தலைஇ ஏற்ற"[3] எனப்பரிபாடலும் இவ்வாறு காட்டிற்று. "கார்நறுங் கடம்பு" (நற் : 34 : 8 புறம் : 23 : 3)

"கார்க் கடம்பு" (சிலம்பு : 24) "காரலர் கடம்பன்" (மணி : 4 : 49)

எனப்பல இலக்கியங்களும் இதன் கார் கால மலர்ச்சியை வைத்துக் 'கார்க்கடம்பு' என்றே பாடியுள்ளன.

---

1 சீவ சி : 990, 3 பரி : 14 1.
2. திருமுருகு : 9, 10.

இதன் தாதுத்தூள் நல்ல செம்மை நிறங்கொண்டது. இத்தூள் உதிர்ந்து பரவிக் கிடப்பது அழகிய காட்சி நல்கும். இதனைப் பட்டுப் பூச்சி நிறம்போன்றது என்றும், பரந்து கிடப்பது புள்ளியிட்ட கோலம் போட்டது போன்று அழகியது என்றும் நத்தத்தனார் பாடினார். (சிறுபாண் : 69—71)

இம்மலர் ஒப்பனைக்காகவோ, மணங்கருதியோ பரவலாகச் சூடப்படவில்லை. நன்னன் என்னும் குறுநில மன்னன் இதனை மாலையாக அணிந்திருந்ததைப் பதிற்றுப் பத்து (பதிகம்:4:7) குறிக்கின்றது. இதனையன்றி மகளிர், ஆடவர் சூடியதாகத் தெரியவில்லை. பாலை நிலத்தில் ஆறலைக் கள்வர் சூடி விளங்கினர்.

இம்மலர் முருகனுக்குரிய மலராகக் கொள்ளப்பட்டது. "உருள்பூந் தண்டார் புரளும் மார்பினன்" எனத் திருமுருகாற்றுப் படை குறிப்பது போன்று பல நூல்களும் முருகனது மார்புமாலையாக இம்மலர் அமைந்ததைப் பாடுகின்றன. தலையிலும் சூடப்பட்டது.

"*கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி*"[1] – என்னும் பிரமசாரி பாடலால் இதனை அறியலாம்.

முருகன் மார்பிலணியும் இம்மாலை புணர்ச்சியின்போது அணியப் பட்டதாகக் கொண்டனர். மேற்காணப்பட்ட திருமுருகாற்றுப்படை அடிக்குப் பொருள் எழுதிய நச்சினார்க்கினயர் "இது போகத்திற்குரிய தார்" என்று எழுதினார். பொதுவில் "மாலை மார்ப" எனவரும் மற்றுமோர் அடிக்கும் "இன்பத்திற்குரிய மாலையணிந்த மார்ப" என்றெழுதிக் காட்டினார்.

முருகன் என்னுஞ் சொற்கு அழகன் என்று ஒரு பொருள். அழகனாகிய அவன் இக்கடம்பைச் சூடுவதால் மேலும் அழகு பெற்றானாம். மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார், "கடம்பின் சீர்மிகு நெடுவேள்"[2] என்று 'கடம்பால் சீர்மிகும் முருகன்' என்று பாடினார். இவ்வடிக்கு உரை வகுத்த நச்சர்,

"*கடம்பு சூடுதலால் அழகு மிகுகின்ற முருகன்*" – என்றார். இவைகொண்டு இம்மலரின் அழகுத் தோற்றத்தை உணரலாம்.

1 *நற் :* 34 : 8
2 *மது. கா* : 613, 614.

இம்மலரைச் சூடுவதாலேயே முருகனுக்குக் கடம்பன் என்றொரு பெயர் அமைந்தது, இப்பெயர், பூவால்தான் அமைந்தது என்பதைப் "பூக்கும் கடம்பா" என்னும் தொடரும் காட்டும்.

பூவைச் சூடுவதோடு முருகன் கடம்ப மரத்தில் இடம் பெறுவதாக கொண்டனர். இதனால் "கடம்பமர் நெடுவேள்" (பெரும்பாண் :75) என்றெல்லாம் —பாடப்பட்டான். இங்கு 'அமர்தல்' என்பது விரும்புவதையும் இடம் பெறுதலையும் குறிக்கும். திருமுருகாற்றுப்படை,

"சதுக்கமும் சந்தியும் புதுப் பூங் கடம்பும்" முருகன் இடம் பெறும் இடங்களாகக் குறிப்பதாலும் 'அமர்தல்' இங்கு பெரும் பகுதி இடம்பெறும் பொருளையே தருவதாகும்.

இதுபோன்றே இக்கடம்பு திருமால் இடம்பெறும் செய்தியையும் பரிபாடல்,

*"ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்*
.... ... ... ... ... .... ... ...
*அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்"*[1] —எனக் குறிக்கின்றது.

"ஆலமரத்தையும் கடம்பமரத்தையும் ஆண்டுறையும் தெய்வங்கட்கு மகிழ்ச்சியுண்டாகவேண்டி அணிதலைச் செய்தற்கு விலங்க இட்டுவைத்த மாலைகள் போலே கொம்புகடோறுந் தூங்கா நிற்கும்"

—என்றெழுதி முருகனும் திருமாலும் தங்குமிடம் கடம்பு என்னும் குறிப்பையும் வைத்தார்.

இக்கடம்பமாலை முருகனுக்கு உரியதாகையால் முருகனை முன்னிட்டு வெறியாடும் வேலன் இம்மாலையை அணிந்தும் மலரைச் சூடியும் ஆடுவான். இம்மலரைப் பனந்தோட்டுடன் சேர்த்துக் கட்டியும் வேலன் வெறியாடுவதை வெறிபாடிய காமக் கணியார் என்னும் பெண்பாற் புலவர்,

---

1 பரி : 4 : 67, 69,

"வெண்போழ் (பனந்தோடு) கடம்புடன் சூடி
.... .... ... .... ... .... ... .. ...
.... .... ... ... ... ... ... ... வேலன்
வெறியயர் வியன்களம்"[1] –எனப் பாடினார்.

இக்கடம்பு மற்றொரு முத்திரை கொண்டதுமாகும். ஒருவகைக் குடிமக்கட்கு இதன் பெயர் அமைந்தது.

"துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றின்னான் கல்லது குடியு மில்லை"[2] – என்னும் மாங்குடி மருதனார் புறப்பாட்டு இவ்வாறு ஒரு குடிப்பெயரை அறிவிக்கின்றது. இத்துடன் கூறப்படும் மற்றைய மூன்று குடிப்பெயர்களும் அவரவர் செய்த தொழில்களாகிய துடி முழக்குதல், பண்ணிசைத்தல், பறையடித்தல் என்பவற்றால் உண்டானவை. இத்தொடர்பில் நோக்கினால் கடம்பமாலை அணிந்து வெறியாடும் தொழில் புரிந்தோர் இப்பெயர் பெற்றவராகலாம். ஆனால் மற்றொரு மக்கட்கூட்டம் இப்பெயரில் வாழ்ந்துள்ளமை இங்கு நோக்கத்தக்கது.

மேலைக் கடற்கரைப்பகுதியில் கூவகத் தீவு என்றொன்று உண்டு. இதனைத் தலைநகராகக்கொண்டு 'கடம்பர்' என்றொரு இனத்தார் வாழ்ந்தனர். அப்பகுதிகளில் 'கடம்பந் தீவு' என்பதும் ஒன்று. இக்கடம்பர்களது மன்னன் தனக்குக் காவல் மரமாகக் கடம்ப மரத்தை கொண்டிருந்தான்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இத்தீவின்மேல் படையெடுத்துச் சென்றான். அங்கிருந்த காவல் மரமாகிய கடம்ப மரத்தை அடியோடு வெட்டி வீழ்த்தி வென்றான். இதனால் அவன் "கடற் கடம்பெறிந்த காவலன்" (சிலம்பு : 23 : 81) எனப் பட்டான்.

இவ்வரலாற்றுச் செய்தியைக் குமட்டூர் கண்ணனார் பதிற்றுப் பத்தில் ஈரிடத்திலும் (பதிற்றுப்பத்து : 11 ; 20.) மாமூலனார் அகத்திலும் (127) பாடியுள்ளர்.

1 அகம் : 98 ; 16—18.
2 புறம் : 335 : 7, 8.

இவைகொண்டு கடம்ப மரத்தால் பெயர்பெற்ற நிலப்பகுதியில் வாழ்ந்த இனத்தார் கடம்பர் எனப்பட்டமை அறியப் படுகின்றது. இக்குடியினர் மிகப் பழங்குடியினர். இவ்வினத்தாரைச் சேர்ந்தோர் தமிழக உட்பகுதியிலும் வாழ்ந்தனர். இவரையே மாங்குடி மருதனார் புறத்தில் குறித்துள்ளார் எனல் பொருந்தும்.

இக்கடற்கரைத் தீவுப் பகுதியில் இடம்பெற்ற கடம்புதான் மூலத்தில் அமைந்தது போலும். தமிழகத்து உட்பகுதியில் மலையிடத்தில் கடம்பு இடம் பெற்றதால் குறிஞ்சி நில மரமாகக் கொண்டாலும் மிகுதியும் தொன்மையும் கருதி இது கடற்பகுதி மரமாகக் கொள்ள வாய்ப்பிருக்கின்றது. இவ்வாய்ப்பைக் கொண்டே இதற்குக் கடற்பகுதி இந்திய ஓக் மரம் — *SEASIDE INDIAN OAK* என்னும் ஆங்கிலப்பெயர் அமைந்தது.

எவ்வாறாயினும் கடம்பினால் ஒரு நிலம் பெயர் பெற்றது; ஓர் இனத்தவர் பெயர்பெற்றனர் என்பன உண்மை. மதுரைக்குக் 'கடம்பவனம்' என்றொரு பெயர் உண்டு. மேலும் கடம்பூர், கடம்பனூர், கடம்பங்குடி எனப்பல ஊர்கள் பெயர்பெற்றுள்ளன.

இத்தகைய கடம்பு அழகிய கடப்பம் பூவைப் பூத்தது மட்டுமன்று. புகழும் பூத்த மரமாம். அதிலும் எத்தகைய புகழ் பூத்தது?

"*புலவரை அறியாத புகழ் பூத்த கடம்பு*"[1] — என்பதாக

நப்பண்ணனார் பாடினார். புலத்தால் — அறிவால் எல்லை அறிய இயலாத புகழ் எனப்பட்டமை இதற்கொரு நல்லிடம் அமைந்தது.

இவ்வாறு நல்லிடம் பெறும் கடப்ப மலரின் வரலாற்றுக் குறிப்பு:

கடம்பு என்பது செங்கடம்பைக் குறிப்பது. குறிஞ்சி நிலத்துக் கார்கால மலர். நற்சிவப்பு நிறங் கொண்டது. கொத்தாகப் பூக்கும். அக்கொத்தும் தொடர்ந்து கோதைமாலை போலத் தோன்றும். இதன் தாது செம்மை நிறத்தது. முருகனுக்குரிய மலர். இப்பூவாலும் மரத்தாலும் ஒரு குடியும் ஊர்களும் பெயர் பெற்றன

—என அமைகின்றது.

---

1 *பரி*: 19 : 2.

பொதுவில் குறித்தால்,

மராஅம், மரவம் எனும் பெயர்கொண்ட இவ்வினம் வெண்மையும் செம்மையுமாக இருவகையது. மராஅம் பொதுப் பெயராயினும் மிகப் பெருமளவில் வெண்கடம்பையே குறிக்கும். கடம்பு என்பது செங்கடம்பைக் குறிக்கும். வெண்கடம்பும் செங் கடம்பும் ஓரினமாயினும் வடிவத்தால் சிறிதளவு மாற்றங்கொண் டவை. இலக்கியங்களில் பரவலாகப் பேசப்படுபவை.

இரண்டிலும் செங்கடம்பு முருகனுக்குரியதாகக் கொள்ளப் பட்டதன் தொடர்போடு திருமாலுக்கு நிறத்தொடர்பில் கொள்ளப் பட்ட பூவை நோக்கினால் நம் முன் வந்து தோன்றுவது காயா என்னும் பூவைப் பூ.

'க' வை அடுத்துக் 'கா' வருவது போன்று கடம்பை அடுத்துக் காயாவைக் காணலாம்.

# 10. மணி மலர்.

## காயா,

### மணிமிடை பவளம்

அகநானூற்றைத் தொகுத்தவர் அதனை மூன்று பிரிவாக வகுத்தார். அவற்றிற்கு முறையே களிற்றியானை நிரை, "மணிமிடை பவளம்", நித்திலக் கோவை எனப் பொருள் தழுவிய பெயர் சூட்டினார். இவை மூன்றனுள் "மணிமிடை பவளம்" என்னும் ஒன்றே இலக்கிய ஆட்சியுடைய தொடர். அதிலும் அகநானூற்றிலேயே இடைக்காடனாரால் உருவாக்கப் பட்ட தொடர். ஆனால் இத்தொடர், "மணிமிடை பவளம்" என்னும் தலைப்பைக்கொண்ட பகுதியில் இல்லை. அடுத்த நித்திலக் கோவைப் பகுதியிலிருந்து எடுக்கப்பட்டது.

இவ்வகையில் "மணிமிடை பவளம்" என்னும் தொடர் ஒரு குறிப்பிற்கு உரியதாகின்றது.

இத்தொடர்க்கு ஒன்பான் மணிகளில் 'நீலமணி நெருங்கிய பவளம்' என்று பொருள். இந் நீலமணிப் பவளத்தை நாம்

அணியாகக் கண்டிருப்போம். இலக்கியம் இதனை நிலத்து மண்ணில் காட்டுகின்றது. மண்ணிற் கிடக்கும் நீல மணி எது? பவளம் எது? இடைக்காடனார் விடை வைத்துள்ளார்:

'முல்லை நிலத்தில் நல்ல மழை தொடங்கியுள்ளது. காலைப் பொழுது. முன் நாள் பூத்த நீல நிறப் பூக்கள் வீழ்ந்து செம்மலாக வாடி கிடக்கின்றன. மழைத் தோற்றத்தால் மண்ணிலிருந்து வெளிப்படும் தம்பலப் பூச்சி என்னும் சிவந்த ஈ அல்லாத மூதாய்ப் பூச்சிகள் அவற்றின் பக்கத்தே ஊர்கின்றன. நீல மலருடன் சிவந்த மூதாய்ப் பூச்சி தோன்றும் காட்சி'

"*மணிமிடை பவளம் போல அணிமிக*"[1] இருந்ததாம். இவ் இடைக்காடனாரே இதே உவமையை மேலும் சுவைபட,

'வைகறைப் போதில் மழைத் தோற்றத்தால் மூதாய்ப் பூச்சி நிலத்திலிருந்து மேல்வந்து குறு குறு என்று நீல மலர்களின் இடை இடையே புகுந்து ஒளிந்து ஓடியது' இக்காட்சி,

"*மணிமண்டு பவளம் போல*"[2] – இருந்தது என்றார். அவரது உள்ளத்தை ஈர்த்ததால் இரண்டிடங்களில் பாடினார் போலும். இவருள்ளத்தை மட்டுமன்று; ஒக்கூர்மாசாத்தனார் சீத்தலைச் சாத்தனார் முதலியோரையும் கவர்ந்தமையால் அவர்களும் அகத்தில் (14, 134) பாடினர்.

இவ்வாறு மண்ணில் கிடந்த மணிமிடை பவளத்தில், பவளம் மூதாய்ப் பூச்சியாயிற்று. நீல நிற மலர் எது?

அது 'காயா' மலர். 'காயாம்பூ' என்றும் அதன் பேரிலியாகக் 'காசாம்பூ' என்றும் வழங்கப்படுவது. இக் காசாவை நிகண்டுகள் 'காசை' என்றன. மேலும் 'அல்லி' என்றும் 'புன்காலி' என்றும் மேற்போக்கான வகையில் குறித்தன.

---

1 "மணிமிடை பவளம் போல அணிமிக
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப"
—அகம் : 804 : 13-15.

2 அகம் :374 : 18

இதன் கருநீல நிறம் கண்ணுக்கிடும் அஞ்சனம் போன்றது.

*"செறியிலைக் காயா அஞ்சனம் மலர"*[1] –என நப்பூதனார் அமைத்தார். நிகண்டுகள் இவ் அஞ்சனத் தொடர்பில் 'அஞ்சனி' எனப் பெயர் சூட்டின. எக்காரணத்தாலோ 'வச்சி' என்றொரு பெயரும் இணைக்கப்பட்டது. இத்துணை பெயர்கள் குறிக்கப்படினும் இதற்கமைந்த மற்றொரு இலக்கியப் பெயர் 'பூவை' என்பது. 'காயா' பூவை' என்னும் இரண்டுமே இலக்கியப் பெயர்கள்.

பூவை என்னுஞ்சொல் நாகணவாய்ப் பறவையையும் காயாவையும் குறிக்கும். பறக்கும் நாகணவாய்ப் பறவையிலிருந்தும் பிரித்துக் காட்ட இனைப் *"பறவாப் பூவை"*[2] என்றார் கடுவன் இளவெயினனார்.

இம்மலர்

முல்லை நிலப் பூ; அந்நிலத்தின் செந்நில வழியிற் பூக்கும்; சிறுபான்மை குறிஞ்சியிலும் பூக்கும்.

கார்காலப் பூ;

காலையிற் பூத்து இரவில் உதிரும்;

குற்றுச் செடிக்கிளையிற் பூக்கும் கோட்டுப் பூ;

புல்லிய பூ;

இதன் முளை அரும்பு கருமை நிறத்தது;

விரிந்தால் மயிற் கழுத்து போன்று பளபளக்கும் நீல நிறத்தது; நீல மணிபோன்றது.

வீழ்ந்து வாடினால் கருமை காட்டுவது.

பல பூக்களாக பரவிப் பூக்கும்;

கொத்துக் கொத்தாகப் பூக்கும்.

மெல்லிய மலர்; மணமும் உண்டு.

இவற்றை அறிவிக்கும் அடிகள் பின்வருவன:

"அரக்கத் தன்ன செந்நில மருங்கிற்
காயாஞ் செம்மல்" (அகம் : 14 : 1)

---

1 அ. பா : 93.    2 பரி : 3 : 73.

"காயாங் குன்றத்து" (நற் : 371 : 1)

"தார்மலர்ப் பூவை" (பரி : 13 : 42)

"கார்பயந் திறுத்தென
மணிமருள் பூவை அணிமலர்" (அகம் : 134 : 2, 3)

"புல்லென் காயா பூக்கெழு பெருஞ்சினை"
(குறுந் : 183 : 5.)

"மணியெனப்
பன்மலர்க் காயாங் குறுஞ்சினை கழலக்
கார்தொடங் கின்றே காலை" (நற் : 242 : 3—5)

"கருநனைக் காயா கனமயில் அவிழவும்"

"கலவ மாமயில் எருத்தின் கடிமலர்
அவிழ்ந்தன காயா" (சீவ. சி : 1558)

"கரிபரந் தன்ன காயாஞ் செம்மலொடு" (அகம் : 133 : 8)

"பன்மலர்க் காயா" (குறி. பா : 70)

"மென்மலர்க் காயாவும்" (கலி : 103 : 1)

"நாற்றமும் மென்மையும் பூவை உள" (பரி : 4 : 29)

காயாபற்றிய இவைகளெல்லாம் அதன் தன்மைகளே. அதற்கென்று தனிச் சிறப்பிருக்குமானால் அச்சிறப்பு அதன் நிறத்தால் வருவதாகும். நீல நிறப்பூக்கள் பல. அவை "மணி" என்னும் அடைமொழியுடன் கூறப்படும். சில:

"மணி நீலம்" (பரி : 17 : 41)

"மணிமருள் நெய்தல்" (ம. கா : 282)

"மணிமருள் மா முள்ளி" (அகம் : 236 : 1)

"மணிதுணர்ந் தன்ன நொச்சி" (புறம் : 272 : 1)

"மணிப் பூங் கருவிளை" (கு. பா : 68)

"மணிப்பூ அவரை" (ம. கா : 292)

"மணிக் குருக்கத்தி" (பெருங் : இலா : 15 : 105)

இவ்வாறு பட்டியல் நீளினும்

"மணிமருள் பூவை" (அகம் : 236 : 1)

"மணிக் காயா" (பொருந் : 201)

—எனப் 'பூவை' என்னும் 'காயா' மணி நிறத்தின் நல்ல கரு நீலத்திற்கு எடுத்துக்காட்டாவது. இதனைக் கருமை என்பது இலக்கிய வழக்கு. இதன் அழுத்தமான கருநீல நிறத்தையே திருமாலுக்கு உவமையாக்கினர்.

"... ... ... .... பூவை
விரிமலர் புரையும் மேனியை" (பரி ; 1 : 6, 7)
"பூவைப் புதுமலர் ஒக்கும் நிறம்" (நான். க : 1)
"பூவைப் பூவண்ணன் அடி" (திரி : 2 : 4)
"காயமலர் நிறவா" (பெரி. திரு : 1 : 5 ; 6)
"காயாம்பூ வண்ணன்" (கூர். பு : இரா : 4)
என்னும் இவை ஒரு சில. இவற்றுள் காணப்படும் காலஅளவுகொண்டுநோக்கின் சங்க இலக்கியங்களில் திருமால் 'பூவை' என்னும் பெயரால் குறிக்கப் படுவதை அறியலாம். இச்சொல் கொண்டே தொல்காப்பியத்தில் இதற்கு ஓர் இலக்கணத்துறை அமைந்தது.

அதற்குப் "பூவை நிலை" —என்று பெயர். அதனையும் புகழ்ச்சியாக

"*தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்*"[1] —என்றார் தொல்காப்பியர். இதற்கு உரைவகுத்த இளம்பூரணர்,

"பூவை மலர்ச்சியைக் கண்டு, மாயோன் நிறத்தை ஒத்ததெனப் புகழ்தல். நாடெல்லை காடாதலின் அக் காட்டிடைச் செல்வோர் அப்பூவையைக் கண்டு கூறுதல். உன்னங் கண்டு கூறினார் போல இதுவும் ஒரு வழக்கு"

—என்று இதனை ஒரு வழக்காகக் குறித்தார்.

இதன் நிறமே இதற்குப் புகழும் போற்றியைத் தந்தது. திருமாலுக்குவமையானதால் இப்புகழ்ச்சி பெற்றாலும் இயல்பில் இதன் நிறம் ஓர் எடுத்துக் காட்டானதே. ஐயனாரிதனாரும்,

"*கறவை காவலன் நிறனொடு பொரீஇப்*
*புறவுஅலர் பூவைப் பூ புகழ்ந்தன்று*"[2] —எனப் புகழ்ச்சியை குறித்தார்.

மகளிரில் கருப்பழகிகள் இப்பூவின் நிறத்தால் குறிக்கப் பட்டனர்.

---

1 தொல். பொருள் : 63 : 10.
2 பு. வெ. மா : பாடாண் : 8

"இக்காயாவின் புதிய மலர் போன்ற நிறத்தையுடைய இக்குமரி அத் தூய்மையான வெள்ளை நிறக் காளையை அடக்கியவனுக்கு உரியவள்"[1] – என இளங்கோவடிகள் குறித்துள்ளார்.

இதற்கும் மேலாக,

பளபளக்கும் கருநீல நிறத்திற்குச் சான்றாகக் குறிக்க எழுந்த புலவர்கள் இக்காயாவையே எடுத்துக்காட்டினர்.

முல்லைக்கலியுள் பூக்களைக்கொண்ட கண்ணியை வண்ணிப்பவர், "*மணிபுரை உருவின காயா*"[2] - என்று நிறங் குறித்துக் காயாவை வைத்தார்.

பல தெய்வங்களின் நிறத்தை வைத்து மலர்களை அறிமுகம் செய்யும் பரஞ்சோதியார்,

"*அங்கதிர் ஆழியான்போல் அலர்ந்தன விரிந்த காயா*"[3]
–என்றார்.

நிறத்தாற் சிறக்கும் இம்மலர் பூத்துத் தோன்றுங்கால் கருநீலக் காடாகத் தோன்றும். உதிர்ந்து கிடக்குங்கால் கருமைக் கம்பளமாகக் காட்சி தரும்.

இம்மலர் மிகப் பரவலாகச் சூடிக்கொள்ளப்படவில்லை. முல்லைநிலத்து மக்கள் அந்நிலத்துப் பூக்களைத் தனியாகவும் தொடுத்தும் சூடும் பாங்கில் இதனையும் கண்ணியாகச் சூடினர். மகளிர் சூடியதாகத் தெரியவில்லை.

ஆனால், மகளிர்க்கே பெயராகியது. "என் பூவைக் கினிய சொற் பூவை"[4] என்றாள் ஒருதாய். 'பூவை பால்கொள் பழகு நெய்ச் சொக்கர்க்கே"[5] என உமை பூவை எனப்பட்டாள். இன்றும் 'பூவையர்' எனப் பாவையர் அழைக்கப்படுகின்றனர். 'காயாம்பூ' எனப் பெண்டிர்க்குப் பெயர் இடப்பட்டுள்ளது.

---

1 "*தூநிற வெள்ளை அடர்த்தாற் குரியவிவ் பூவைப் புதுமல ராள்*" சிலம்பு : 17 : 12 : 2.

2 கலி : 101 : 5.

3 திருவி. பு : குறி : 12.

4 ஐங் : 375.

5 ம. கலம் : 58 :

காயாவின் பெயரால் 'காசாங்காடு, காசாங்குளம்' என் ஊர்ப்பெயர்களும் உள. இப்பெயர் அப்பகுதி ஒருகாலத்தில் காயா மரம் நிறைத்ததன் அறிகுறி அன்றோ? இலக்கியக்காட்டில் இஃதொரு காடு. அடுத்தொரு ஊர். அது பிடவூர்.

# 11. நிலவு மலர்

## பிடா.

பிடா, பிடவு, பிடவம் என்பன இதன் பெயர்கள். பிடாவின் சொல் வளர்ச்சி மற்றைய இரண்டும். வேறு மாற்றுப்பெயரோ மறுபெயரோ இல்லாமையால் நிகண்டுகள் இதனைக் குறிக்க வில்லை. நிகண்டுகள் குறிக்காது போயினும் தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

''*யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்*"[1] – என யாமரத் துடனும் தளவக்கொடியுடனும் குறிக்கப்பட்டது. பிடா மரமேயா யினும் யாமரம் போன்று பெரியதன்று. ஆனால், அகத்தில் "குறும்புதல் பிடவு"[2] எனப் புதலாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் இதனைப் புதர்ச்செடி எனல் கூடாது. ஏனெனில்,

"*முடக்கால் பிடவு*"[3] –என்று கூறி இதன்மேல் மயில் இயலும் எனப்பட்டுள்ளது. மேலும் இதன் கொழுநிழலில் இரலை மான் தன் துணையோடு தங்கும் என்றும் இடைக்காடனார் பாடி யுள்ளார், மயில் இயலுமாறு வளைந்த கிளையையும், கொழுநிழல் தரும் தழைகளும் உடைமையால் இஃதொரு மரமே. குறுமரம் தழை கவிந்து தோன்றும்.

இதன்அடிமரம் கதிரவன் வெம்மையில் காய்ந்து வற்றியதை,

"முளிமுதல்" என்றனர். எனவே முன்னே குறிக்கப்பட்ட "குறும்புதல் பிடவு" என்பதற்குக் 'குறுமையாகத் தழையால் புதல்போலச் செறிந்துள்ள பிடவு' எனப்பொருள்கொள்ளல் வேண்டும்.

---

1 தொல் : எழுத்து : 280.
2 அகம் : 154 : 4.
3 அகம் : 344 : 3.

சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் 'பிடவம்' என்பதற்குக் 'குட்டிப் பிடவம்' என்றெழுதினார். இதனை ஏற்றுத் தமிழ்த்தாத்தா உ. வே. சா. அவர்களும் இதனைக் 'குட்டிப்பிடவம் என்னும் கொடி' என எழுதினார்கள்.[1] அஃதன்று. குட்டிப்பிடவம் வேறு. அது கொடிதான். இப்பிடவம் சிறு மரமே.

இது,

*" ... ... ... ... ... ... ...அகல் நெடும் புறவில்*

*சேணாறு பிடவம்"*[2] –என்றபடி முல்லை நிலத்தது. முல்லை, காயா, கொன்றை முதலிய முல்லைநிலப்பூக்களுடன் வைத்துப் பேசப்படுவது. இவற்றால்,

*"பூவணி கொண்டன்றாற் புறவே"*[3] –எனவும் முல்லைப் புறவு சிறப்பிக்கப்படும் என்று குறிக்கப்பட்டது.

*"பிடவம் மலரத் தளவம் நனையக்*

*கார் கவின் கொண்ட கானம்"*[4] –என இது பூக்கும் பருவத்தைக் கார்ப் பருவமாகக் காண்கின்றோம். வம்பமாரிக்கு மலரும் மலர்களோடு பிடவமும் ஒரு முட்டாளானது.

*"வண்டுவாய் திறப்ப விண்ட பிடவம்*

*மாலை அந்தி"*[5] – என்னும் அடிகள் இது மாலைக்கால மலர் என்பதைக் கூறுகின்றன.

இம்மலர்பற்றிய வரலாற்று அடிகளாக,

*"சிறுகரும் பிடவின் வெண்டலைக் குறும்புதல்*

*கண்ணியின் மலரும் தண்ணறும் புறவு"*[6] – என்பவை அமைகின்றன. 'பிடவு சிறியது. அரும்பு சற்றுக் கரும் புறவிதழை உடையது. அதன் தலைப்பகுதி மலர் விரிவில் வெண்மை தோன்றும். தழைத்திருக்கும். கொத்தாகக் கண்ணிபோல் மலரும் முல்லைநிலப்பூ' — என இதன் விளக்கத்தைப் பெறுகின்றோம்.

---

1 மணி : 3 163 குறிப்புரை
2 முல். பா : 24, 25.
3 ஐங் : 412 : 3.
4 ஐங் : 499 : 1, 2.
5 நற் : 238 : 1, 2.
6 அகம்: 34: 1, 2.

மேலும்,

"இலையில் பிடவம் ஈர்ம்மலர் அரும்ப" (நற் : 242 : 1)
"வான்பிசிர்க் கருவியிற் பிடவுமுகை தகைய" (ஐங்:461:1)
"நெருங்கு குலைப் பிடவம்" (அகம் : 23 : 3, 4)
"குளிர்கொள் பிடவின் கூர்முகை அலரி
வண்டுவாய் திறக்கும் தண்டா நாற்றம்
கூதிர் அற்சிரத்து ஊதை தூற்றும்" (அகம் : 183 : 11-13)
"வெண்பிடவு அவிழ்ந்த" (அகம் :184 :7)

என்பவற்றால், பிடவம்பூ,

'இலையில்லாமல் பூக்களே நிறைந்திருக்கும். மழைத்துளி வீச்சால் மலரும் அரும்புகள் நெருங்கிக் குலையாகப் பூக்கும், முகை கூரியதாகத் தோன்றும். கொத்தாகப் பூக்கும் கமழும் மணத்தைப் பரப்பும். இதன் மலர்ச்சி நிறம் வெண்மை' எனத் தொகுத்துக் காணலாம்.

இதன் முகைக்கொத்து செண்டுபோலத் தொகையாகத் தோன்றுவது ஓர் அழகு. இக்கொத்து விரிந்தால் மலர்கள் வெண்மைநிறத்தில் நல்ல சுற்று வட்டமாகத் தோன்றுவதை,

"... ... ... ... ... ... ... நிலவெனத்
*தொகுமுகை விரிந்த முடக்கால் பிடவின்*"[1] –என வட்ட நிலவாகக் கண்டார் மள்ளனார். அவரே இதன் முகையை மகளிரது பல்லுக்கு உவமையாக்கி,

*"வை ஏர் வாலெயிற்று ஒண்ணுதல் மகளிர்"*

—என்றார்.

கொத்தாகப் பூத்துக் குலுங்கும் இம்மலர்க்காட்சியில் மனம் வைத்த கம்பர் சுவை பயக்கும் உவமை கண்டார்.

ஆயர் மகள் பால் கறக்கின்றாள். கறக்கின்றாளா? இல்லை, கையிலுள்ள முழாவில் பிழிகின்றாள். முழாவில் பால் நுரையுடன் நிறைகின்றது. விளிம்பின் மேலும் பால் நுரை பம்பி நிற்கின்றது. இதனைக் கண்ணில் நிறுத்தி,

---

1 அகம் : 344 : 2, 3.

"பிழிந்த பால்வழி நுரையெனப்
பொருவுவ பிடவம்"[1] — என்றார்.

இவ்வாறு பிடவம் பூ வெண்ணிலவாய், பால் வழி நுரையாய் அழகுதரும் பூ. இப்பூ செம்மண் பாதையில் உதிர்ந்து கிடப்பது செங்கம்பளத்தில் வெண்மை மாக்கோலம் போட்டது போன்று விளங்கிற்றாம்.[2]

இப் பூங்கொத்து வட்டமாகப் பூக்கள் நிறைந்திருப்பதன் தொடர்பால் ஒரு சொல் உருவாகியது. பூந்தட்டைக் குறிக்க உள்ள சில சொற்களில் 'பிடகை' என்பது ஒன்று. இச்சொல் பிடவங்கொத்தின் உவமைத் தொடர்பால் உருவானது.

இப்பூவால் ஓர் ஊர் உளது. அது பிடவூர். பெயர் பெற்ற ஊர். சோழநாட்டில் உறையூர்க்குக் கிழக்கே உள்ளது. வரலாற்றுக் குறிப்புடையது. அவ்வூர்த் தலைவன் நெடுங்கை வேண்மான். அவனால் காக்கப்பட்ட ஊர்.

இச்செய்தியை நக்கீரர் தருகின்றார்.

"... ... தித்தன் உறந்தைக் குணாஅது
நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்"[3]

இடைக்காலத்தில் இஃதொரு வைப்புத்தலம் ஆயிற்று. மற்றொரு இலக்கியக் களமாகவும் இவ்வூர் குறிக்கப்படும். கழறிற்றறிவார் என்னும் சைவ அடியார் எழுதிய 'திருவுலாப்புறம்' என்னும் நூல் இவ்வூரில்தான் வெளியிடப்பட்டது.

இவ்வூர் நச்சினார்க்கினியராலும் காட்டப்பட்டுள்ளது.

இவ்வாறாக பிடவம் பூ,

ஒரு வரலாற்றுப் பெயராகவும்,
ஓர் இலக்கிய களமாகவும் நிறைகின்றது.

---

1 கம்ப : கார் : 47 : 4.
2 அகம் : 154 : 4, 5.
3 புறம் : 395 : 19, 20.

# 12. மீன்கொத்தி வாய் மலர்.

## தளா.

தொல்காப்பியம் ஆகார ஈற்றிற்கு வகுக்கும் விதியில் பிடா வுடன் தளாவையும் குறித்ததைக் கண்டோம். ஆங்குக் குறிக்கப் பட்ட பிடாவைப் போன்றே தளாவும் தளவு, தளவம் எனப் பெயர் வளர்ச்சிபெற்றது.

தொல்காப்பியரைப் பின்பற்றி,

"பிடவும் தளவும்"[1] — என நல்லந்துவனாரும்,

"பிடவம் மலரத் தளவம் நனைய"[2]

—என ஓதலாந்தையாரும்,

"பிடவமும் தளவமும்"[3]

—என இளங்கோவடிகளாரும் பிறரும் பிடவுடன் தளவை இணைத்துப் பாடினர். இவற்றால் பிடவத்தை அடுத்துத் தளவம் அமையத் தக்கது. இத்தளவம் முல்லைக் குடும்பத்தது; முல்லையே, தான். நிறந்தான் வேறுபடும். நிறவேறுபாடு கருதியே இரண்டும் தனித்தனியாகக் குறிக்கப்படும்.

"தண்ணறும் பிடவமும் தவழ்கொடித் தளவமும்"[4] – என்ற படி இஃதொரு கொடிமலர்; முல்லைக்கொடி மலர்.

"கல்லிவர் முல்லை தாழை தளவம்" (குறி. பா: 80)

"அவிழ் தளவம் அகன்தோன்றி நகுமுல்லை" (பொருந் : 199)

"நெடுங்கொடி முல்லையொடு தளவம் மலருதிர" (ஐங் :422)

— என்றெல்லாம் தனித்தனியே கூறப்படும். இதன் நிற வேறுபாட்டைக் குறித்துக்காட்டுவது போன்று,

1 கலி : 103 : 2.
2 ஐங் : 499.
3 சிலம்பு : 13 : 168.
4 கலி : 102 : 2.

"தளவின் பைங்கொடி தழீஇப் பையென
நிலவின் அன்ன நேர் அரும்பு பேணிக்
கார்நயந் தெய்து முல்லை"[1] – முல்லையெனில் அது வெண்மையைக் குறிப்பதை நிலவின் அன்ன நேர் அரும்பு" எனப் பாடிக் காட்டினார் ஓதலாந்தையர். தளவு செம்முல்லை. முல்லைக் கொடிபோன்றே இது பற்றிப் படரும் கொடி. அதனைப் போன்றே புதலாகச் செறிந்து வளர்ந்து பின்னர் வளைந்து கொடியாகப் படரும்

"புதன் மிசை முல்லை தளவமொடு போதவிழ"[2] – என இரண்டும் புதலாக வளருமாயினும், தளவம் முல்லையைவிடச் சற்று அடர்ந்த புதராக வளரும். அதனால் பலரும் இதனைப் புதராக அடைமொழியிட்டுப் பாடினர்,

"... ... ... ... புதன்மிசை
பூமலி தளவமொடு" (குறுந் : 382)
"புதல் இவர் தளவம் (நற் : 242 :)
"புதல் தளவின் பூச்சூடி" (புறம் : 395 : 3)
இதன் நிலமும் முல்லை.

"... ... .... ... முல்லை
போதவிழ் தளவமொடு பிடவங் கவினிப்
பூவணி கொண்டற்றாற் புறவே"[3] –எனவும் புறவெனும் முல்லை நிலத்ததாகக் காண்கின்றோம். முல்லையைப் போன்றே

"பிடவம் மலரத் தளவம் நனையக்
"கார்கவின் கொண்டன்று கானம்"[4] – என்றபடி கார்கால மலர். இதன் அரும்பும் மலரும் செம்மை நிறத்தன. இவ்வரும்பின் வடிவம் 'கவுதாரி' என்னும் இதலின் கால் நகம் போன்று கூர்மை யானது என்பதை ஓரோடோகத்துக் கந்தரத்தனார் என்னும் புலவர்,

"புதன்மிசைத் தளவின் இதன்முட் செந்நனை"[5] – என்றார். இதனால் இதன் அரும்பு கூரிய முனைகொண்டது என்பதையும், செம்மை நிறங்கொண்டது என்பதையும் காட்டினார். இக்கூர்மை

---

1 ஐங் : 454.
2 ஐந் எ :24.
3 ஐங் : 412.
4 ஐங் : 499.
5 அகம் : 23 : 8.

மையும் செம்மையையும் இவற்றுடன் இதன் அடிப்பக்கத் திரட்சி யையும் உளத்தில் கொண்ட புலவர்கள் 'சிரல்' என்னும் மீன்கொத் திப்பறவையின் மூடிய அலகை உவமையாக்கிப் பாடினர்.

*"சிரல்வாய் உற்ற தளவு"*[1] –சிறுமோலிகனார்;

*"பனிவளர் தளவின் சிரல்வாய்ச் செம்முனை"*[2]

ஓதலாந்தையார்;

*"சிரல்வாய் வனப்பினவாகி*

*ஈர்ந்தண் தளவம்"*[3] – மதுரைக் கண்ணன்கூத்தனார்.

திருத்தக்க தேவர் கூத்தாடுவோர் பற்களைப் பார்த்தார். அன்னார் வெற்றிலை — தம்பலம் அடிக்கடி போட்டதால் அவர் தம் பற்களில் செங்காவி ஏறியுள்ளன. அப்பற்கள் குருதி தோய்ந் தன போன்றுள்ளன. அதனால், அவற்றைக் "குருதிக் கூர் எயிறு" என்றார். அக் கூர்ம் பற்கள் போன்றன "கொடித் தளவம்"[4] என்றார்.

இச்செம்மலர் தண்ணென்று குளிரும். அதனால், இது "பனிப் பூந்தளவம்" என்றும், "பனிவளர் தளவம்" என்றும் "தண்டளவம்" என்றும் "ஈர்ந்தண் தளவம்" என்றும் குறிக்கப் படும்.

உண்மையில் தளவம் முல்லைபோன்று மணம் கமழ்வது. "காடே கம்மென்றன்றே"[5] என்றபடி 'கம்' என மணப்பது. அதனால் முல்லையைப் போன்றே மகளிர் "புதல் தளவின் பூச் சூடினர்".[6]

சூடும் பூவாகிய தளவம்,

> கொடியினத்தில் முல்லைக் குடும்பத்தைச் சேர்ந்த தாக, முல்லை நிலத்தில், கார்காலத்தில், மாலை நேரத் தில், செம்மை நிறத்தில் அரும்பி மலர்ந்து தண்ணென்று விளங்கும் பூவாகும்.

சிவந்த பல்லுடன் சிரிக்கும் இக்கொடிப்பெண் தழுவி இன்பங்காணும் ஆண்மரம் உண்டு. அதிலும் அம்மரத்தின் வளைந்த கழுத்தை உறவுப் பாங்கில் தழுவும். இப்பேறுபெற்ற ஆண்மரம் எது? கணிமேதையார்,

---

1 *நற்* : 61 : 8
2 *ஐங்* : 447 : 2.
3 *கார். நா.* 36 : 1, 2.
4 *சீவ. சி* : 1651.
5 *அகம்* : 23 : 5.
6 *புறம்* : 395 : 6.

"*தளவம் குருந்து அணைய*"[1] – என்று அவ்வாண்மரம் 'குருந்த மரம்' என்று அடையாளங் காட்டியுள்ளார். இக்கொடிப் பெண் மட்டுமன்று சிவந்த பெண் தழுவினால் வெண்ணிறப் பெண்ணும் தழுவ வேண்டாவா? இதனையும் அக்கணிமேதை யாரே,

"*... .. .. ... .... — முல்லை*

*பெருந்தண் தளவொடுதம் கேளிரைப்போல் காணாய்*

*குருந்தம் கொடுங்கழுத்தங் கொண்டு*"[2] –என முல்லையும் கூடித்தழுவிக் களிப்பதைப் பாடினார். இவ்வகையால் தளவத்தோடு குருந்து உறவுகொண்டு விளங்குவது. இவ்வாறு தழுவி நிற்கும் மூவரையும், பிரிந்து தவிக்கும் ஒருத்தி பார்த்தால் எந்நிலை பெறுவாள்? தளர்ந்து சாம்பும் அவளைக் கண்ட அவளது தோழி,

"*குருந்தே கொடிமுல்லாய்*

*கொன்றாய் தளவே*"[3] – என்று ஓலமிட்டாள். முல்லை அக்கையும் தளவத் தங்கையும் தழுவப்பெற்றதால் குருந்து அடுத்துக் காணத்தக்கதாகின்றது.

# 13. நான்கில் ஒரு மலர்.

## குருந்து.

"போம்அங்கே பாரும் அந்தப்புன எலுமிச்சை" என்றான்;

'ஆம்' என்றேன். 'அதைத்தான் ஐயா, குருந்தென்றும் அறைவார்' என்றான்[4] —பாவேந்தர் பாரதிதாசனார் தமக்கு வழி சொல்லுவான் போன்று பேசவைத்து நாட்டுப்புறத்தான் வாயில் நல்ல தமிழ் உலவுவதைக் காட்டினார். அதில் 'குருந்து' என்பது 'புனஎலுமிச்சை' என்றார்.

இதே சொற்போக்கில் பிங்கல நிகண்டு,

"*புனஎலுமிச்சை குருந்தெனப் புகலுவர்*[5] – என்றது. மேலும் குருந்திற்குச் சொல்லப்படும் 'குந்தம்' என்பது குருந்தின்

---

1 *திணை. நூ* : 93 : 3.
2 *திணை. நூ* : 105 : 2, 4.
3 *திணை. நூ* : 116 : 1.
4 *அழ. சி. காடு* : 4
5 *பிங். நி* : 2777

மருஉமொழியாகும். 'குருத்து' என்பதன் மெலிந்த சொல்லான வகையில் வேறுபொருள்தரும் சொல்லாகவும் குருந்து அமையும்.

"ஓங்குசினைக் குருந்தின் அல்கு நிழல்"[1] —என்றபடி இது நிழல்தரும் மரம். மராமரத்துடன் உயர்ந்து வளர்வது "ஓங்கு குருந்து"[2] எனவும் உயர்த்தப்பட்டது. மயில் இருந்து அகவும் என்றனர்.

முல்லைக்கொடி பற்றித் தழுவிப் படரும் மரம் இது. "குருந்து அவிழ் குறும்பொறை"[3] என முல்லைநிலக் காடு சொல்லப்படும். மேலும் முல்லை நிலத்து மரம், செடி, கொடிகளுடன் இணைந்தது. எனவே, குருந்து முல்லை நிலத்தது.

"கார் ஆர் குருந்தொடு முல்லை குலைத்தன" (திணை. நூ :112)

"கார் கொன்றையொடு மலர்ந்த குருந்து" (ஐங் : 436)

—இவ்வடிகள் குருந்து கார்ப் பருவத்தில் மலர்வதைக் குறிக்கின்றன.

'பூ மருது, பூங்காந்தள், பூங்கோங்கம் பூந்தாமரை' என்பன போன்று "பூங் குருந்து" எனப் பூச்சிறப்பு குறிக்கப்பட்டது. இப் பூவின் நிறத்தையும் அளவையும் குறிஞ்சிப் பாட்டு அடையாளங் காட்டுகின்றது:

"மா இரும் குருந்தும்"[4] —எனக் குறிக்கப்பட்ட அடைமொழிகளில் 'மா' கருமையையும் 'இரும்' பெரிய அளவையும் குறிக்கும்' நச்சினார்க்கினியரும்,

"கரிய பெரிய குருந்தம் பூவும்"' என்று உரை தந்தார். இதன்படி இப் பூ கருநீல நிறத்தில் பூக்கும். தனிப் பூவாகப் பூக்கும். ஒவ்வொரு பூவும் "குருந்தின் குவி இணர்"[5] என்றதன் படி இதழ் குவிந்தது. தனிப்பூவாயினும் ஒரு கொப்பில் சில அமைவதால் 'இணர்' எனப்பட்டது.

1 அகம் : 304 : 10.
2 திணை. ஐ : 18
3 நற் : 321 : 9.
4 குறி. பா : 95
5 கார் : 15.

இதன் அரும்பு பசுமையாகத் தோன்றுவதால் "நனைப் பசுங் குருந்து"[1] எனப்பட்டது. இவ்வரும்பின் வடிவமைப்பு பாம்பின் தலை போன்றது. இதனைக் கொங்கு வேளிர்,

*"... ... ... ... குருந்தும் கோடலும்*

*அரவுகொண்டு அரும்ப*[2] -எனக் காட்டினார்.

இப்பூ சற்றுப் பெரியதாகையால் இதில் தேன், பிற மலர்களைவிட ஓரளவில் கூடுதலாக இருக்கும் முன்னே முல்லைப் பூ மகட்பேசி நிறைவேறிய திருமணக் காட்சி ஒன்றைக் கண்டோம். அத்திருமணத்தில் சுரும்புதான் நீர் வார்த்துக் கொடுத்தது. வார்த்த நீராக,

*"நிறைந்த பூங்குருந்து உகு தேன் நீர்*

*பெய்து ஆர்த்தன சுரும்பு"*[3] -என வண்ணிக்கப்பட்டமை கொண்டும் இதன் தேனைப்பற்றி அறியலாம்.

முல்லை நிலத்து மக்கள் முல்லைப் பூவுடன் இதனைச் சூடுவர். இதனைச் சூடிக் "குருந்தங் கண்ணிக் கோவல"ராகவும், "குருந்தம் பூங் கண்ணிப் பொதுவ"னாகவும், "முல்லை குருந் தொடு முச்சி வேய்ந்தவ" ராகவும் முல்லைநிலத்து மக்கள் விளங் கினர்.

குருந்து என்றதும் கடவுளர் பங்கில் கண்ணன் கோவியர்க்காகக் 'குருந்தொசித்தது' ஒன்றாகும். குருந்த மரத்தடியில் சிவபெருமான் இடம் பெற்றது ஒன்றாகும். மாணிக்கவாசகர் எழுப்பிய ஆவுடையார் கோவிலின் திருமரமாகக் குருந்து நிற்கின்றது.

*"குருந்த மலரும் குரவின் அலரும் கொண்டேத்தி"*[4] -எனும் ஞானசம்பந்தர் பாடல் இதனைப் பூசெய் மலராகக் காட்டு கின்றது.

இப்பூவைப் பத்துப் பாட்டில் குறிஞ்சிப் பாட்டு ஒன்றில் மட்டுமே காண்கின்றோம். எட்டுத் தொகையிலும் பிற இடைக் கால இலக்கியங்களிலும் ஆங்காங்கு இடம்பெற்றுள்ளது இருப்

---

1 அகம் : 85 : 12.
2 பெருங் : உஞ்ச : 49 : 98, 99.
3 சீவ. சி : 1563
4 ஞா. தே: முதுகுன்று : 5 : 4.

பினும் இப்பூவிற்குத் தனிக்குறிப்பு ஒன்றைப் புறநானூற்றில் மாங்குடி கிழார் வைத்துள்ளார். குடியில் நான்கையும், உணவில் நான்கையும் சிறப்பிக்க "இந்நான்கு அல்லது இல்லை" என்பவர், முதலில்,

" ... ... ... ...குருந்தே முல்லையென்று
இந்நான் கல்லது பூவும் இல்லை"[1] –எனக் குறிக்கத்தக்க

நான்கு பூக்களைத் தேர்ந்து அந்நான்கில் குருந்தம் பூவைக் கோத்தார். இவ்வகையில் இப் பூ 'நான்கில் ஒரு மலர்' ஆகின்றது. அவற்றிலும் இரண்டை அறிய முடியாத நிலையில் இரண்டில் ஒன்றாகின்றது. அதனிலும் மலர்களிற் சிறந்த முல்லையொடு விளங்கும் மலராகின்றது. குருந்தைத் தழுவும் முல்லைக் கொடி யாளின் இனத்துத் தோழிகள் உளர். அவருள் ஒருத்தி அடுத்து வரும் பித்தி.

## 14. பொழுதறி மலர்.
## பித்திகம்.

'பித்தி, பித்திகை, பித்திகம்' என்னும் சொற்களால் குறிக் கப்படும் இது இக்காலத்தில் 'பிச்சிப் பூ' எனப்படுகின்றது. 'பித்தி' என்பதன் எழுத்துப் போலி வழக்கே 'பிச்சி' என்பது. இவ்வழக்கு நச்சினார்க்கினியர் காலத்திலேயே இருந்தது. ஆயி னும் நிகண்டுகளில் 'பிச்சி' குறிக்கப்படவில்லை. சிறுசெண்பகம் கருமுகை, சாதிப் பூ என்னும் மாற்றுப்பெயர்கள் குறிக்கப் பட்டுள்ளன. செண்பக அமைப்பில் சிறியதாகையால் 'சிறு செண்பகம்' என்றும், இதன் முகையின் புறவிதழ் நிறத்தால் 'கரு முகை' என்றும் பெயர் பெற்றது. 'சாதிப் பூ' என்பதை இது போதும் மக்கள் கூறுவர்.

இது முல்லைக் குடும்பத்தைச் சேர்ந்தது. முல்லை நிலத் துக் கொடிமலர்.

கொன்றை, 'கார்' என்னும் அடைமொழியுடன் பாடப்பட் டது போன்று இது "மாரிப் பித்திகம்" என்று பலராலும் பாடப் பட்டுள்ளது. இது மழைக்காலமாகிய கார்ப் பருவத்து மலராயி

1 புறம் : 335 : 2, 3.

னும் கூதிர் காலத்திலும் மலர்வது. கூதிரிலும் மழை உண்டாகையால் அக்குறிப்பைக் காட்டுவது போன்று 'மாரி' என்னும் பொதுச்சொல்லைப் பருவ அடைமொழியாக்கினர்.

இது அந்திக் காலத்தில் மலரும். கூதிர்ப்பருவம் பகற்போதில் வானம் இருண்டு கதிரவன் காணப்படா நிலைகொண்டது அன்றோ? அந்நிலையில் மாலை கழிந்து இரவு தொடங்கும் அந்திப்பொழுதை அறிய இம்மலரின் மலர்ச்சியை அடையாளமாகக் கொண்டனர்.

கொடியில் மலர்ந்தாலும் அரும்பாகக் கொய்துவைக்கப்பட்டு மலர்ந்தாலும் அந்திப்பொழுதிலேயே மலரும். இவ்வாறு கொய்து பூந்தட்டில் வைக்கப்பட்டிருந்த பதம் வாய்ந்த அரும்பு விரிவதைக் கொண்டும் மணப்பதைக்கொண்டும் அந்திப்பொழுது வந்ததை. அறிந்து இரவிற்குரிய விளக்கு ஏற்றப்பட்டதை நக்கீரனார்,

*"..................பிடகை (பூந்தட்டு) பெய்த*
*செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து*
*அவ்விதழ் அவிழ்பதங் கமழப் பொழுதறிந்து*
*இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ"*[1]

—எனப்பாடினார்.

கொடியில் இம்மலர் மிகுதியாகப் பூக்கும்.

*"கோயல் அரும் நிலைய மாரிப் பித்திகம்"*[2] –என்றபடி கொய்யக் கொய்யக் குறையாத அளவில் மிகுதியாகப் பூக்கும்.

"பைங்கால் பித்திகம்" (நெடுநல் : 39 : குறி. பா : 117) என்றதன்படி இவ்வரும்பின் காம்பு பசுமையானது. அரும்பு முனைப்பகுதி செம்மை கொண்டது.

மாரிக்காலத்தில் வருந்தும் தலைவி இவ்வரும்பைக் கண்டு,

*"பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து*
*அரும்பே முன்னும் மிகச் சிவந்தனவே"*[3] –என இதன் சிவப்பைத் தன் ஆற்றாமையால் அதிகப்படுத்திப் பேசினாள்.

---

1 நெடுநல் : 39—42
2 அகம் : 42 : 2
3 குறு : 94 : 1, 2.

இச்செம்மை, அரும்பின் முதுகுப் புறத்தே தோன்றுவதையும், அக்காட்சி மகளிரது கடைக்கண் செம்மைக்கு உவமையாவதையும் பலரும் பாடினர்.

கபிலர்,

"......பித்திகத்து......பெயலேர் மணமுகைச்
செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்"[1]

-எனப்பாட இதனை எடுத்து மொழிவதுபோன்று சிறைக்குடி ஆந்தையார் என்பார்,

"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்"[2]

-என ஓரடியை அவ்வாறே அமைத்துப்பாடினார். இதுபோன்றே "மாரிப் பித்திகம்" என்பதும் பலராலும் அமைக்கப்பட்டது. இப்பூ மணங் கமழ்வது. இதனை அரும்புப் பருவத்தில் கொய்து பனைமட்டையை பசுங்குடையாக்கி அதிற் பெய்து, பொதிந்து வைப்பர். விடியலில் விரித்தால் கம்மென்று மணம் பரவித் தண்ணென்றிருக்கும். இதனைச் சிறைக்குடி ஆந்தையார்,

"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடை பலவுடன் பொதிந்து
பெரும்பெயல் விடியல் விரித்து விட்டன்ன
நறுந்தண்ணியள்"[3] -என்றார்.

இம்மலரின் மணங்கருதியும் எழில் கருதியும் மகளிர் சூடியும் அணிந்தும் ஒப்பனை செய்துகொள்வர். இக்கோதை "பித்திகக் கோதை"[4] எனப்பட்டது. புணர்ச்சிக் காலத்திலும் மகளிர் இப்பூவால் ஆகிய மாலையை முத்துமாலையுடன் மார்பில் அணிந்து மார்பிடம் நெருங்குமாறு காதலன் இறுகத் தழுவியதை நற்றிணை (314) பாடிக்காட்டியது.

ஆடவரும்,

---

1 அகம் : 42 : 1, 2, 3
2 குறு : 222 : 5, 6
3 குறு : 168 : 1—4
4 பெருங் : 1 : 33 : 76,

*"பைங்கால் பித்திகத்து ஆயிதழ் அலரி*

*அந்தொடை ஒருகாழ் வளை"* [1] த்துக் குஞ்சியில் சூடி யதைக் கபிலர் பாடினார்

இவ்வாறு இருபாலரும் விரும்பிச் சூடுவதால் இப்பூ,

*"பித்திகை விரவு மலர் கொள்ளீரோ"* [2] —என விற்கப் படும் பூவாக விளங்கியது.

இதன் முகை மிக மொழுக்கையாக அன்றி ஓரளவில் கூரி யது. காதல் முடங்கல் தீட்டுவோர் இதனை எழுத்தாணியாகப் பயன்படுத்தினர். கோவலனுக்கு எழுதிய மாதவி இதன் அரும்பை எழுத்தாணியாகக் கொண்டு செம்பஞ்சுக் குழம்பில் தோய்த்து உதறித் தாழை மடலில் எழுதினாள்.[3]

இவ்வாறு அக்காலத்தில் பலவகையில் பயன்பட்ட இப்பூ இக்காலத்தில் எளிய மக்களும் சூடப் பயன்படுவது. "உச்சி வகிடெடுத்துப் பிச்சிப் பூவைச்ச கிளி பச்சைமலைப் பக்கத்திலே மேய்வதாக" இக்காலத்திலும் கேட்கின்றோம் அன்றோ?

முல்லையினத்துப் பித்திகம் மண அமைப்பாலும் வடிவமைப் பாலும் இலக்கியத்தில் இடம் பெற்றது. மணமும் குறிப்பிடத் தக்க வடிவமைப்பும் அமையாத மலர்களும் பாடப்பெற்று அறிமுக மாயினமைக்குப் பகன்றை ஓர் எடுத்துக் காட்டாகும்.

## 15. சுரிமுக மலர்.

### பகன்றை.

'ஒரு வண்ணாத்தி வெளுத்த துணிக்கு கஞ்சிப்பசை தோய்த்தாள். ஒரு தப்பு தப்பி முறுக்கிப் பிழிந்தாள். முறுக் கோடு குளத்து நீரில் போட்டாள். வெண்மையான துணி திருகிய முறுக்கோடு நீரில் மிதந்தது'

கழார்க்கீரன் எயிற்றியனார் என்னும் புலவர் நின்று கண்டார். நீரில் முறுக்கு பிரியாமல் கிடக்கும் துணிக்காட்சி யை ஓர் உவமையாக்க எண்ணம் ஓடியது.

---

1 குறி. பா. 117, 118,
2 நற் : 97 : 7
3 சிலம்பு : 8 : 58—55,

"நீரிற் பிரியாப் பருஉத்திரி கடுக்கும்
பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ"[1] - எனப் பாடினார். ஆம், பகன்றையின் வெண்மையான முகை அவ்வாறு திருகியதாகக் காட்சிதரும். அத்திருகலிலும் முகையின் முனையிலமைந்த திருகலுக்கு ஆலூர் மூலங்கிழார் கண்ட உவமை ஒன்றுண்டு.

'வேள்வித் தொழிலை விடுத்த பார்ப்பான் ஒருவன் வளையல் அறுக்கும் தொழிலை மேற்கொண்டான். வெண்மையான சங்கின் அகன்ற வாய்ப்புறத்திலிருந்து வளையல்களை அறுத்தெடுத்தான். சங்குமுனை சிறிய தாகையால் அதை விடுத்தான்;

இவ்வாறு,

"வளைகளைந் தொழிந்த கொழுந்தின் அன்ன
தளைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை"[2] - என உவமை பெற்றது, பகன்றை முகை. சங்கின் முனை சுரிந்திருப்பது போன்றதால் 'சுரிமுகப் பகன்றை" எனப்பட்டது.

இம்முகை விரிந்தால் இதழ்கள் வட்டமாக நல்ல வெண்மையுடன் காட்சிதரும். இவ்வாறு பல பூக்கள் பச்சை இலைகளின் இடையே தோன்றுவது.

'நீல வண்ணம் ஏற்றிய தோல் கேடயத்தில் ஆங்காங்கு பாண்டில் என்னும் வட்ட வட்ட பளிங்குக் கண்ணாடி பதித்திருப்பது போன்றிருந்ததாம்.'[3]

இன்னும்,

தனியொரு மலர் அகல விரிந்துள்ள புற இதழ்களுடன் வெண்மையான அகவிதழ்கள் வட்டமாக விரிந்து தோன்றுவதைப் பாண்டில் என்னும் வட்டக்கிண்ணத்திற்கு உவமை கூறினார் நக்கீரர்.[4]

---

1 குறு : 330 : 3, 4.
2 அகம் : 24 : 2, 3.
3 அகம் : 217 : 7, 8.
4 நற் : 86 :2—4.

ஒரு செவிலித்தாய் பால் பெய்த வட்டக் கிண்ணத்தைக் கையில் பிடித்து மகளை உண்ண அழைப்பதைப் பார்த்த கயமனார், பால்நிறைந்த அக்கிண்ணம்,

*"... .. ... ... ... பேரிலைப்*

*பகன்றை வான்மலர் பனிநிறைத் ததுபோல்"*[1] – காட்சி யளிப்பதாகப் பாடினார்.

இப்பகன்றைப் பூவின் வெண்மையாலும் பரவிப் பூக்கும் காட்சியாலும் இதனை வெண்மையான புத்தாடைக்கு உவமை கூறினர்.

*"போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன*

*அகன்றுமடி கலிங்கம் உடீஇ"*[2] – என நல்லிறையனார் வடித்ததை ஒற்றி வேறு சிலரும் பாடியுள்ளனர்.

இம்மலர் வட்டமான வெண்மையில் திகழும் என்பதைப் பேயனார் பாடிய "பகன்மதி உருவிற் பகன்றை மாமலர்"[3] என்னும் அடி பளிச்சிட்டுக் காட்டுகின்றது இரவுத் திங்களில் மஞ்சள் நிறம் கலந்திருக்குமன்றோ? அதனால்தான் பகலில் தோன்றும் முழுமதியைக் காட்டி அதன் வெண்மையின் தன்மையையும் புலப்படுத்தியுள்ளார்.

இவ்வாறெல்லாம் இலக்கியத்தில் மணக்கும் பூ இயற்கையில், நச்சினார்க்கினியர் குறிப்பது போன்று,

*"மணமில்லாத பகன்றைப் பூ"*[4] –தான். மணம் இல்லை என்றால் நறுமணம் இல்லை. அறுமணம் உண்டு. எத்தகைய அறுமணம் உண்டு.

*"…. … …. பகன்றைப் பொதியவிழ் வான்பூ*

*இன்கடுங் கள்ளின் மணமில கமழும்"*[5] -கழார்க்கீரன் எயிற்றியனார் கடுங்கள்ளின் மூக்கை அடிக்கும் அறுமணத்தைக் குறித்தார். அது நறுமண மன்று என்பதை "மணமில கமழும்" என்று நயமாகக் குறித்தார்.

---

1 அகம் : 219 : 3, 4.
2 புறம் : 393 : 17, 18.
3 ஐங் : 456 : 2.
4 கலி : 73 : 2 உரை;
5 குறு : 330 : 5.

நறுமணம் இல்லாமையால் விரும்பிச் சூடப்படவில்லை. அறவே சூடப்படாதது அன்று. சூடும்பூ வகையில் இணைவதும் அன்று. பெரும்பகுதி சூடப்படாமல் விடுக்கப்பட்டமையால் பிறர்க்கு ஒன்று ஈயாது வீழும் உயிரினத்திற்கு உவமையாக,

*"பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்*
*சூடாது வைகியாங்கு"*[1] –என்றார் ஔவையார்.

இருப்பினும் இதன் 'வெண்மை, மாமலர்' என்னும் பெருமை கருதிக் கள் விற்கும் மகளிர் கண்ணியாகச் சூடி,

*"பகன்றைக் கண்ணிப் பழையர் மகளி"*[2] *ராக*–விளங்கினர்-விற்கும் கள் நாற்றத்தோடு இக்கள் நாற்றத்தையும் இழைய வைத்தனர் போலும். ஆயர் குல ஆடவரும் தலையிற் சூடி,

*"பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவல"*[3] ராக விளங்கினர்.

சில ஏர்வைத்து உழும் எளிய உழவரும் பகன்றையை மாலையாக்கிக் கதிர் அறுக்குங்கால் அணிந்தனர். வெண்மை திகழும் இம்மாலை, தோய்த்து வெளுத்த கலிங்க ஆடைபோன்று இருந்ததாம்.[4]

நறுமணமற்ற இம்மலரையும் சூடிய பாங்கை எண்ணுங்கால் தமிழர் மலரில் எத்துணையளவு ஆர்வங்கொண்டிருந்தனர் என்பதையும் தம் வாழ்வில் மலரை எப்பங்கில் வைத்திருந்தனர் என்பதையும் உணரலாம்.

இப் பகன்றை முன்னே கண்டது போன்று,

"பனித்துறைப் பகன்றை" மேலும்,

"இவர் பகன்றை" ; "கொழுங்கொடிப் பகன்றை" என்பவைகளால் இது மருதநிலத்தது; கொடிப் பூ எனஅறியலாம்.

இக்கொடி நார் கொண்டது, சற்று வலியது. பாகற்கொடியையும் இக்கொடியையும் முறுக்கி மாட்டைக் கட்டினர்.

---

1 *புறம்* : 285 : 18, 19
2 *மலை* : 459.
3 *ஐங்* : 87 : 1.
4 *பதிற்று* : 76 : 12, 13.

"தலைபிணி அவிழாச் சுரிமுகப் பகன்றை
சிதரலந் துவலை தூவலின் மலரும்
தைஇ நின்ற தண்பெயற் கடைநாள்"[1] -என ஆலூர் மூலங்கிழார் குறிக்கின்றபடி இது பனிக்காலப் பூ. காலையில் மலரும். அம்மலர்ச்சியும் மழைத்துளியின் வீச்சால் நேரும்.

நிறைவாக இதன் பெயர்பற்றிய கருத்து ஒன்றைக் கூற வேண்டும். பகன்றை என்னும் ஒன்றே இதன் இலக்கியப்பெயர். 'சிவேதை' என்றொரு பெயரை நிகண்டுகள் குறிக்கின்றன. இதனைச் 'சிவதை' என்றும் வழங்கினர். ஆனால், இந்நிகண்டு களே "கிலுகிலுப்பை பகன்றை" என்று 'கிலுகிலுப்பை' என்றொரு பெயரைத் தருகின்றன.

குறிஞ்சிப்பாட்டில் பகன்றைக்கு உரைஎழுதிய நச்சர்,
"பகன்றை — பகன்றைப் பூ. இது சிவதை; 'பகன்றைப் பூ உறநிமிண்ட பாசிலைத் தாமரை" என்புழி வெள்ளிவட்டில் உவமை கோடலான் இது கிலுகிலுப்பை அன்று"[2] -எனக் கிலுகிலுப்பைப் பெயரை மறுத்தார் சேந்தன் திவாகரம், பிங்கலம் என்னும் இரு நிகண்டுகளும் முறையே 9, 10-நூற்றாண்டின. நச்சர் 14-ஆம் நூற்றாண்டினர். எனவே, நிகண்டு தந்த பெயரையே மறுக்கின்றார் எனலாம்.

சிவதைப் பெயர் நிற்க,

சிலம்பின் உரையாசிரியர் அடியார்க்குநல்லார் பகன்றை என்பதற்குப் "பெருங்கையால்" என்றொரு புதுப்பெயரைக் குறித்துள்ளார்.[3] இது பற்றி விளக்கம் இல்லை. எனவே பகன் றைக்குச் 'சிவதை' என்றொரு பெயரைக் கொள்ள முடிகின்றது.

சிவதை என்னும் சொல்லுக்கு நாணல், தெற்குத் திசை என்னும் பொருள்களும் உள. மருத்துவ நூல்களில் வெண் சிவதை, கருஞ்சிவதை என இருவகை சொல்வர். அதற்குக் கூறப் படும் சுவை பகன்றைக்கும் ஓரளவில் ஒத்திருப்பதால் அதன் கொடியில் வெண்மைக் கலப்பும் கருமைக் கலப்பும் இருப்பதைக் கொள்ள வேண்டுமேயன்றி மலரில் இவ்விரு நிறம் கொள்ளுதற்கு இல்லை.

1 அகம் : 24 : 3—5
2 குறி. பா: 88 உரை.
3 சிலம்பு : 13 : 157

பகன்றை, மணத்திற் குறிக்கத்தக்கது அன்று என்றாலும் இலக்கியத்தில் குறிக்கத்தக்க அளவில் இடம்பெற்றுள்ளது. நல்ல உவமைகளைப் படைக்க உதவியிருக்கின்றது. பகன்றை போன்று மணச் சிறப்பில்லாது, இலக்கிய இடங்கொண்ட 'பீர்க்கு' தொடர்ந்து காணத் தக்கதாகின்றது.

## 16. பசலை மலர்.

### பீரம்.

பீர் என்பது இதன் பிள்ளைப் பெயர்.

*"பீர் என் கிளவி அம்மொடுஞ் சிவணும்"*[1] -என்னும் தொல்காப்பியம் காட்டுவதுபோல் "பீரம்" என்றாயிற்று. குறிஞ்சிப் பாட்டும் "பீரம்" என்றே பாடியது. நிகண்டுகள் பிள்ளைப் பெயரை விட்டன.

"பீரம் பீர்க்கு"—எனப் பீர்க்கு என்றன. குறிஞ்சிப் பாட்டில் நச்சர் "பீரம் = பீர்க்கு" என்றே உரை எழுதினார். பீர்ப்பூ, பீரம்பூ' என்பதைவிடப் 'பீக்கர்ம் பூ' என்பதன் எளிமை வாய்ப் போக்கில் அமைந்து இச்சொல் உருவாகியது. இக்காலத்தும் 'பீர்க்கு' என்பதே வழக்கிலுள்ளது.

இதில் பெரும்பீர்க்கு 'படலிகை' எனப்பட்டது. பேய்ப் பீர்க்கு என்றொன்று உண்டு.

*"சுரையொடு பேய்ப்பீர்க்குஞ் சுமந்த"*[2] -என்பது புறப் பொருள் வெண்பா மாலை.

*"இவர்கொடிப் பீரம் இரும்புதல் மலரும்"*[3] -என்னும்படி இப் பூ ஒரு கொடிப் பூ. இக்கொடி தழைத்த புதரில் படரும்.

*"மாரிப் பீரத்தலர்"*[4] என்றும்,

*"கார்தோன்றப் பீர் தோன்றி"*[5] என்றும் பல்லிடங்களில் வரும். எனவே இது கார்ப் பருவப் பூ. ஐங்குறுநூறு,

---

1 தொல் : எழுத்து : 366
2 பு. வெ. மா : 60
3 ஐங் : 464 : 2
4 குறு : 98 : 5
5 திணை. நூ : 100

*"பீரம் இரும்புதல் மலரும் அற்சிரம்"*[1] – என முன்பனிக் காலத்தை ஓரிடத்தே குறிப்பது அக்காலத்து அருகிப் பூப்பதையே காட்டும்.

இஃது ஆயர்தம் குடிசைகளின் கூரைமேல் படர்வதும், குறிஞ்சிச்சாரற் காடுகளில் குறிக்கப்படுவதும், முல்லைத் திணைப் பாடல்களில் இடம் பெற்றிருப்பதும் இது முல்லைநிலப் பூ எனக் காட்டுகின்றன.

*"சிறு பீர் வீ ஏர் வண்ணம்"*[2] –என்னும் நக்கீரர் தொடர் 'இப் பூ சிறியது; அழகிய வண்ணமுடையது' என்பதைக் குறிக்கின்றது. சிறு பூவிலும் தனிப் பூ, அழகிய வண்ணமென்றால் எவ் வண்ணம்?

"பொன்போல் பீரம்" (நெடு : 14)

"பொன்னென இவர்கொடிப் பீர்" (ஐங் : 464)

"பொன்புனை பீரத்தலர்" (ஐங் : 452)—எனப் பல இலக்கியங்கள் இதன் பொன்னிறத்தைப் பேசுகின்றன. ஆம், பொன் போன்ற மஞ்சள் நிறப் பூ.

நிறம் பொன்; ஆனால், மணம் மண். குறிப்பிடத்தக்க எம்மணமும் இல்லாத பூ. மணத்தின் நாடி பார்க்கும் வல்லமை கொண்டது வண்டு. அதனிலும் தும்பி நாடி, வல்லுநர். ஒரு குமரிப்பெண் அதனொடு பேசுகின்றாள்:

> "தும்பியே, முள்வேலியில் படர்ந்த பீர்க்கம் பூவை ஊதித் தேனைப் பருகினாய். ஆனால் ஏன் முகம் சுளித்தாய்? தேன் சுவைத்தாலும் அப்பூவில் மணம் இல்லாததால் முகம் வேறு பட்டாய்; அறிவேன். நீ ஒன்று செய்திருக்கலாம். எம் உடம்பில் படர்ந்துள்ள பசலையை ஊதியிருக்கலாம். மணத்தில் மகிழ்ந்திருப்பாய்". இவள் பேச்சைக்கொண்ட பாட்டில் வேண்டிய பகுதி இது:

*"... ... ... ... – பீரம் ஊதி வேறுபட*

*நாற்றம் இன்மையின் பசலை ஊதாய்"*[3] – இவ்வாறு மணம் இல்லாமையைத் தும்பியைச் சேரவைத்துப் பாடியவர்

---

1 ஐங் 464 : 3
2 அகம் : 57 : 12, 13.
3 நற் : 278 : 7, 8.

இக்கருத்தாலேயே பெயர் பெற்றவர். 'தும்பிசேர் கீரனார்' என்பது அவர் பெயர்.

பீரத்தில் மணமில்லாததால் உடலில் படர்ந்த பசலையை ஊதுமாறு கூறியது ஏன்? அதுதான் இப்பீரத்திற்கே உள்ள இலக்கியச் சிறப்பு.

காதலனைப் பிரிந்த காதலி அப்பிரிவால் உள்ளம் தொய்வுற்று உடலும் தேய்வாள். அதன் அறிகுறியாக உடலில் மலர் மலராகத் தேமல் படரும். அது நெற்றியில் பளிச்சென்று தெரியும். அதன் சுற்று வடிவமும், பொன் நிறமும் பீர்க்கம் பூப் போன்று தோன்றும். ஊரார் அலர் உரைப்ப அதன் தாக்குதலாலும் காதலி இதைப் பெறுவாள். இதனால் உடல் பசந்து தோன்றுவதால் 'பசலை' எனப்படும்.

''ஊரலர் தூற்றும் உய்யா விழுமத்துப்
பீர் அலர் போலப் பெரிய பசந்தன'' (கலி : 149 : 48, 49)

''... ... ... ... ... நுதலே
பீர் இவர் மலரிற் பசப்பூர்ந் தனவே'' (நற் : 197 : 1, 2)

இப்பசலை அக இலக்கியத்தில் இன்றியமையாத ஒன்று. அதற்கு இப் பூ இன்றியமையாத உவமை. இவ்வொன்றை உயிராகக் கொண்டே இப் பூ இலக்கிய வாழ்வில் நிற்கின்றது.

இம்மலர் அழகுதான். இவ்வழகு மகளிர் நெற்றியில் ஊருமானால் நெற்றியின் அழகு மாறும். நல்லந்துவனார், இதனை,

''... ... ... ... நறுநுதல்
பீரலர் அணிகொண்டு பிறைவனப்பு இழந்தது''[1] – என்றார்

பசலைக்கு உவமை பீர் என்பது நிலைத்ததாயிற்று. பசலை என்பதன் குறியீட்டுச் சொல்லாகப் பீர் அமைந்தது. ஒரு பெண் உடலில் பசுப்பு தங்கியதை,

1 கலி : 53 : 14, 15.

"கார்தங்கி நின்றகொடி (விமலை)
காளையைக் (சீவகனை) காண்ட லோடும்
பீர்தங்கிப் பெய்யா
மலரிற் பிறிதா யினளே"[1] -எனப்பட்டது. இக் குறியீடு மேலும் ஆழமாகியது.

குமரகுருபரர் படைக்கும் காட்சி:

சிவபெருமான் மீனாட்சியை மணந்து பாண்டிநாட்டு அரசாட்சியை மேற்கொண்டார். அரசுக்கோலம் பூண்டார். ஒவ்வொன்றாக மாறிற்று. தலையில் இருந்த கொன்றைப் பூ போய் வேப்பம் பூ ஏறியது. இதனால் கொன்றை அவரைப் பிரிந்தது அன்றோ? இப்பிரிவு அதற்குத் துயரமாகி அதன் உடலைப் பசப்பித்தது. இதை ஒரே அடியில்,

"பொன்பூத் தலர்ந்த கொன்றை பீர் பூப்ப"[2] – என்றார். இங்கு "பீர் ப்ப" என்பதற்குக்கொன்றை 'உடல் பசப்படைய' என்று பொருள். ஒரு மலருக்குப் பசலை உண்டாவதும் அப்பசலைக்கு மற்றொரு மலர் உவமையாவதும் ஒரு புதியபடைப்பு.

இலக்கியத்தில் ஓர் உடல் பெற்றதுண்டு இப் பீரம். அஃதும் நன்மை காட்டுவதன்று. அழிவின் அறிகுறியாயிற்று.

கொல்லையில் புதரில், வேலியில் பீரம் படரலாம். இல்லத்தில், மனையில், மன்றில் முளைத்துப் படரக்கூடாது. மனையில் பீரம் முளைத்தால் அது 'பாழ்மனை' என்று பொருள்.

"முனைகவர்ந்து கொண்டெனக் கலங்கிப் பீர்எழுந்து
மனைபாழ் பட்ட"[3] – என்று ஏனாதி பட்டம்பெற்ற நெடுங்கண்ணனாரும்

"... ... ... .... .... சிற்றில் ஆங்கண்
பீரை நாறிய"[4] -என்று கபிலரும்,

கொள்ளைக் கூட்டத்தாரது பகைக்கு அஞ்சி,

1 சீ. சி : 1960
2 ம. கல : 2 :சரிதகம் 1.
3 அகம் : 373 : 1, 2.
4 புறம் : 116 5, 6.

"ஊரெழுந்து உலறிய பீர் எழு முதுபாழ்"[1] – எனக் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும், மனையும் இல்லும் பாழும் பாழ்பட்டதைப் பீர்க்கு முளைத்ததுகொண்டு காட்டினர்.

பீர்க்கு மணமற்றது; அழகு செய்வதற்கு உவமையாவது; ஊர் பாழ்பட்டதற்கு அறிகுறியாவது. நிறைகளைவிடக் குறைத் தன்மைகளே இருப்பினும் அக இலக்கியத்திலும் புற இலக்கியத் திலும் பரவலாக இடம்பெற்றுள்ளமையால் இந்நூலிலும் இவ் விடத்தைப் பெற்றுக்கொண்டது. பீர்க்கம் பூ சூடும் பூ அன்று. சூடப்பட்டதாக வழக்கிலும் இல்லை; இலக்கியத்திலும் இல்லை. ஆனால், குறிஞ்சிக்குமரி குவித்த மலர்களில் (குறிஞ்சிப்பாட்டில்) "பாரம் பீரம் பைங்குருக் கத்தி"[2] என இடம்பெற்றுள்ளது மட்டும் இதற்கொரு தகுதி.

இதனையடுத்து இருப்பைப் பூவைக் கொள்ளலாம்; ஏன்?

# 17. இனிப்பு மலர்.

## இருப்பை.

மணமில்லாத மலர் பூக்கும் இலக்கியத் தோட்டத்தில் மணம் மீறிய பூ மலர வேண்டாவா? பசலைப் பூ இலக்கிய உடலில், பால்முத்துப் பூ பழக வேண்டாவா? இழிவாகப் பாழ்செய்யும் இலக்கிய மனையில், இனிப்பாகப் பால் சுரக்கும் இருப்பைப் பூ இருக்க வேண்டுமன்றோ? இவ்வகையில் இருப்பை பீரத்தை அடுத்து இடம்பெறுகின்றது.

பீர்க்கிற்கும் இருப்பைக்கும் எந்த ஒட்டுறவும் இல்லை. பீர்க்கு மணம் அற்றது. இருப்பை மிகு மணம் உற்றது. முன்னது சுவையற்றது. பின்னது இனிப்புச் சுவை தருவது. அஃது இதழ் விரி பூ. இது குட இதழ்ப் பூ. அது கொடிப் பூ. இது கோட்டுப் பூ. போனது முல்லை நிலப் பூ. வருவது பாலை நிலப்பூ.

இரண்டிற்கும் ஓர் ஒற்றுமை உண்டு. இரண்டும் சூடாப் பூக்கள். இச் சூடா ஒற்றுமையிலும் ஒரு மாற்றம் உண்டு. பீர்க்குக்குப் பத்துப்பாட்டில் இடம் உண்டு. சூடப் பயன்படாமலே

---

1 அகம் : 167 : 10, 2 குறி. பா. 93.

குறிஞ்சிக் குவியலில் இடம் பெற்றது. இருப்பை குறிஞ்சிப் பாட்டிலும் இல்லை; பத்துப் பாட்டிலும் இல்லை. எனவே, எட்டுத்தொகை தொடக்கமாக இருப்பையின் இருப்பைக்காணலாம்.

உள்துளையோடு சுவையையும் உடைய இருப்பையைப் பற்றிய ஒரு வரி,

"கான இருப்பை வேனல் வெண்பூ"[1] என்பது இவ் வடிவை அதன் வரலாற்றுச் சுருக்கவரி எனலாம். 'கானம்' என்ப தால் பாலைநிலப் பூ. இதற்கு "அத்த இருப்பைப் பூ" என்பதும் துணையாகும். 'வேனல்' என்பதால் முதுவேனிலாம் கோடைப் பருவப் பூ. 'வெண்பூ' அதன் வெண்மை நிறத்தை கூறுகின்றது. இதுபோன்று,

"கூடுகுவி வான் பூ" (அகம் : 35 : 8)

—என்பது அதன் அகவிதழ் ஒரே வார்ப்பைப் போன்று கூடிக் குவிந்திருப்பதைச் சொல்கின்றது.

"தூம்பு (துளை) உடைத்திறள் வீ" (அகம் : 95 : 7)

"தொள்ளை (துளை) வான் பூ" (அகம் : 149 : 3)

—என்பன அதன் உள்துளை உடைமையைச் சொல்கின்றன.

அடுத்து அது பிறந்து வளர்ந்து வீழும் வாழ்வியற் பருவங் களை இளங்கீரனார் மூன்றடிகளில் தந்துள்ளார். அதற்கொரு அறிமுக உரை கூற வேண்டும்.

அம்புகளை இட்டுவைக்கும் குடலை 'தூணி' எனப்படும். அதற்குள் உள்ள ஒவ்வொரு அம்பிற்கும் அதன் சுனை கெடாத வாறு ஒவ்வொரு குப்பி மூடியாக இடப்பட்டிருக்கும். இக்குப்பி போன்றது இருப்பை மொட்டு. அம்பின் தலையிலுள்ள அக் குப்பியைத் திறந்தது போன்று இருப்பை மலர் தோன்றும். பல அம்புகள் தூணியில் இருப்பது போன்று பலபூக்கள் கொத்தாக மலரும். அம்மலர், காம்பிலிருந்து கழன்று செந்நிலத்தில் முத்துப் போன்று உதிரும். இவற்றை அறிவிக்கும் அடிகள் இவை:

---

1 குறு : 329 : 1.

*"யாத்த தூணித் தலைதிறந் தவைபோல்*
*பூத்த இருப்பைக் குழைபொதி குவியிணர்*
*கழல்துளை முத்திற் செந்நிலத் துதிர"*[1] —முதலடியில் பிறப்பாம் அரும்புக்கு ஓர் உவமை; வளர்ந்த மலருக்கோர் உவமை; வீழ்ந்த வீக்கு ஓர் முத்தான உவமை.

இப்பருவ வளர்ச்சியைக் கல்லாடனார் விரித்துள்ளார்.

*அம்பு நுனை போல் அரும்பு; செப்புத் தகடு போன்ற சிவந்த தழை. அத்தழையிடையே நெய்போன்ற முகப்போடு துளையுடைய பூ; அதன் வாய்ப்புறம் தூய்யென்ற இழைகள்; புறவிதழாம் ஆரத்திலிருந்து கழன்று காற்றடிப்பில் ஆலங்கட்டி போல் சிதறி விழுதல். சிவந்த நிலத்தில் அதுவெண்மையாகத் தொடர்ந்து கிடப்பது இறைச்சிமீது கொழுப்பு கிடப்பது போன்றது"*[2]

—என்று வண்ணித்தார். இதனை முழு வரலாறு எனலாம்.

உவமைகள் ஓய்ந்துவிடவில்லை.

பாலை பாடிய பெருங்கடுங்கோ தொடர்கின்றார் :

'பூனையின் அடிபோன்ற குவிந்த முகிழ்;

*யானையின் மருப்பைக் கடைந்தது போன்ற துளைபெற்ற* வான் பூ.'[3] இவ்வாறு மேலும் இரண்டு உவமைகள். பெயர் காட்டாத ஒரு புலவர் இதனை உவமையாக்கி, "இருப்பைப்பூவைப் போன்ற இரால் மீனின் தலை"[4] — என்றார்.

எத்துணை உவமைகள்? ...!

அம்புக் குப்பி, முத்து, ஆலங்கட்டி, கொழுப்பு, பூனையின் அடி, கடைந்த யானை மருப்பு, இரால் மீன் தலை. இதன் புறவிதழுக்கும் ஓர் உவமை : வேலின் இலைபோன்றதாம். வண்ணத்திற்கும் வடிவத்திற்கும் ஏற்ற உவமை இது.

உவமை வழி இலக்கியம் படைக்க உதவிய இருப்பைப் பூ, முத்து வெள்ளையில் திரண்ட முத்தன்ன எழில் கொண்டது. அழ

---

1 அகம் : 225 : 10—12.
2 அகம் : 9 : 1—10.
3 அகம் : 267 : 6, 7.
4 நற் : 111 : 1, 2.

கான அமைப்புடன் அதன் அழுத்தமான மணத்தைக் குறிக்க வேண்டும். சற்று அளவை மீறிய மணமே.

இருப்பை பூத்தால் அப்பகுதியெல்லாம் அதன் மணம் உயிரினங்களை அழைக்கும். விலங்கினங்களைக் கவர்ந்திருக்கும். தொடர்ந்து அம்மணத்தைக் கொள்ளின் மூக்கை மூடிக் கொள்ளும் அளவில்கூட அதிக அழுத்தமானது. இவ்வழுத்தமும் அதன் சிறப்பிற்கு அறிகுறியாகும்,

''ஆலையில்லா ஊருக்கு இருப்பைப் பூ சருக்கரை'' என்னும் பழமொழி அதன் இனிப்புச் சுவையை அறிவிக்கின்றது. அதன் அழுத்தமான மணம் அவ்வினிப்பில் ஒரு தெவிட்டலை ஏற்படுத்தினும் 'தெவிட்டும் சுவை' என்னும் சிறப்பு இதற்குண்டு.

கண்ணுக்கினிய முத்துக் காட்சியைக் காட்டி 'இனிப்புள்ள என்னை உண்ண வாரீர்' என அழுத்தமான மணம் என்னும் அழைப்பை அனுப்பும் இருப்பை, விருந்தோம்பும் பண்பை நினைவுறுத்துவது.

அழைப்பை ஏற்றுக் காதல் இணைகள் விருந்துண்ணும். 'சற்றே பிரிந்து வந்த ஆண் மான் உதிர்ந்து கிடக்கும் இப்பூவைக் கண்டு தன் துணையை அழைத்து அதனை உண்பித்ததாம்.' [1]

'தின்னும் மான்களை மாடுமேய்க்கும் சிறார் வில்லால் விரட்டுவர். விரட்டிவிட்டுக், கிழ மாடுகளை மேய விடுவர்.' [2]

இருப்பையின் இனிப்பால் கரடிக்கு எச்சில் ஊறும். ஈன்ற கரடிகள் உதிர்ந்து கிடப்பவற்றை உண்ணும்.[3] ஆண் கரடிகள் மரத்தின்மேல் ஏறி ஒவ்வொன்றாகப் பறித்துத் தின்னும். [4] மரத்தில் ஏறிப் பறித்துத் தின்பதற்கு கல்லாடனார் காரணியமும் கூறினார்.

'வேடர் வருவர்; தின்னும் ஆர்வத்தில் அவர் வருகையைக் காண இயலாது போகும், என்று மரத்தின்மேல் ஏறிக் கனிந்த பூக்களாகப் பறித்துத் தின்னும்'.[5]

---

1 அகம் : 321. : 4 — 7.
2 அகம் : 107.
3 அகம் : 95 : 4 — 9.
4 அகம் : 149 : 3, 4.
5 அகம் : 171 : 11, 15.

விலங்குக்கு விருந்தாவது போன்று பறவைகளுக்கும் விருந்தாகும். 'வாவல் வேப்பம்பழத்தைத் தின்னும். அதில் வெறுப்புத் தோன்றின் அக் கைப்புச் சுவை மாற இனிப்புள்ள இருப்பைப் பூக்களைத் தின்னும்.' 1 இதனால் பழந்தின்னும் வாவல் பூத்தின்னும் வாவல் ஆகின்றது.

இது மாந்தருக்கும் சுவையான தின்பண்டம்; சிற்றுணவு; ஊட்ட உணவு; நோய்போக்கும் மருந்துமாகும்.

கனிந்த இப்பூ தேன்போன்ற கசிவைத் தரும். இதனை எடுத்து உண்பர். ஒவ்வொன்றாகச் சுவைப்பர். சேர்த்து வைத்துத் தட்டையாக்கிஉரியபொருளிட்டுஉண்பர். வெல்லத்துடன்சேர்த்து உருண்டையாக்கி உண்பர். தேனுடன் கலந்து 'குல்கந்து' செய்து ஊட்டம் சேர்ப்பர். இப்பூ நீர் வேட்கையைத் தணிக்கும். பாலை நிலத்து வெப்பத்தைத் தணித்துச் கொள்ள இதனைத் தின்பர்.

இவ்வாறெல்லாம் பயன்படுவதால், வேடர்குலப் பெண்கள் உதிர்ந்த பூக்களை ஈன்ற பெண்கரடிகள் தின்றபின் எஞ்சிக் கிடப்பவற்றைத் திரட்டுவர். திரட்டி மூங்கிற் குழாயில் அடைப்பர். ஊர்க்குள் சென்று விற்பர். தெருத் தெருவாகத் திரிந்து விற்பர். 2

இவ்வகையில் விற்பனைப் பொருளாகிப் பொருளியலிலும் இருப்பை இடம் பெறுகின்றது.

இப்பூவைக்கொண்டு குடிநீர் செய்து பருகலாம். அரைத்துப் பாலில் கரைத்துப் பருகலாம். பூவை வதக்கி கருக்கு நீரிடலாம். இவற்றால் சிறு நோய்கள் தீரும்.

இதனைக் காயவைத்துப் பொடியாக்கிப் பக்குவம் செய்து சருக்கரை செய்வர். மயக்கந்தரும் செயற்கைக்கள் — சாராயம் — காய்ச்சலாம். இதன் மருத்துவத் தன்மைகளை அகத்தியர் குண பாடம்,

"குன்றா இருப்பையின்பூ கூர்மதுரம், வாசனையாம்;
தின்றாற் பயித்தியமும் சேருங்காண் — மன்றலுறுந்
தார்குழலே! பித்தசுரம் தாகந் தணிந்துவிடும்

1 நற் : 279 ; 1—8, 2 அகம் : 381 ; 1—7.

வார்தயக்க மெய்தும் வழுத்து" இதில் இருப்பையின் மிகு சுவையும் மணமும் குறிக்கப்படுகின்றன; மருந்தாக்கி உண்டால் பித்த சுரம் போகும்; வெறும் பூ, நீர்வேட்கையைத் தணிக்கும்; சிலருக்கு உடல்நிலைக்கேற்ப அழலை உண்டாக்கும்; பித்தத்தை உயர்த்தும் என்றெல்லாம் கூறி இறுதியில் இப்பூவைப் போற்றுமாறு முடித்துள்ளார்.

இதனில் அறிவியற் பாங்கு ஒன்றும் உண்டு. இப்பூவின் சாற்றை எடுத்து இருப்புத் தூளில் கலந்து பக்குவம் செய்து அத்தூளை மை போன்று குழைத்தெடுக்கலாம்.

இத்துணை அரிய பயன்கொண்டது இப் பூ.

இருப்பையின் பெயரால் ஓர் ஊர் உண்டு. அது வளமான ஊர். 'விராஅன்' என்னும் வள்ளலின் ஊர்.[1] இவ்வூரைப் பரணர் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இலுப்பூர், இருப்பைக்காடு, இலுப்பை எனும் ஊர்களும் உள்ளன.

இத்துணை சிறப்புடைய இருப்பைப் பூவிற்குக் கபிலர் குறிஞ்சிப் பாட்டில் இடம் வைக்கவில்லை. காரணியம் இது. சூடும் பூ அன்று. உருண்டு திரண்டு முத்துப்போல் தோன்றும் இதனை மாலையாகக் கோக்க இதன் துளை வாய்ப்பு தருவது. கோத்து அணிந்தால் முத்துமாலை போன்று அழகையும் ஊட்டும். அணியாதது ஏன்?

இதன் இனிப்புச் சுவையே காரணியம் ஆகும். இனிப்பைத் தரும் சாற்றுக்கசிவு உடலில் பிசுபிசுப்பை ஏற்றுமாதலால் சூடவோ அணியவோ இயலாததாயிற்று.

சூடாப் பூ என்றாலும் இது இலக்கியத்தில் வாடாப் பூ.

---

1 நற் : 350 : 4.

# 18. நள்ளிருள் நாறி மலர்.

## மயிலை.

குறிஞ்சிப்பாட்டில் இடுகுறிப் பெயர்களால் குறிக்கப்படும் மலர்கள் பல. காரண இடுகுறியாகக் குறிக்கப்படுபவை சில. காரணப்பெயராக குறிக்கப்படுபவை மிகச் சில. ஒரு மலர் மட்டும் காரணச் சிறப்புப்பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. அவ்வொன்றும் நள்ளிரவில் மலர்ந்து மணக்கும் காரணத்தைக்கொண்டு ''நள்ளிருள் நாறி''[1] எனப்பட்டுள்ளது. பூவிற்குரிய பெயரன்றி அடைமொழியளவில் மட்டும் குறிக்கப் படுவது இஃதொன்றே. பிற்காலத்தில் ஒரு மரத்தைப் 'பீ நாறி' என்றனர். ஒரு செடிக்குப் 'பீ நாறிச் சங்கு' என்று பெயர்.

பெரும்புலவர் கபிலரால் கூறப்பட்டுள்ள 'நள்ளிருள் நாறிப் பூ' எது?

இதற்கு நச்சினார்க்கினியர் ''இருவாட்சிப் பூ'' என்று, பொருள் எழுதியுள்ளார். இதற்கு அடிக்குறிப்பெழுதிய உ. வே. சா. அவர்கள்,

''இருள்வாசி என்பது இருவாட்சி யென்று வழங்குகின்றது''

—என்று எழுதிக் காட்டியுள்ளார்கள். இருளில் மலர்ந்து மணப்பது என்னும் பொருள் தரும் 'இருள்வாசி' என்பது 'நள்ளிருள் நாறி' என்பதன் வடமொழிக் கலப்புடைய ஒரு மொழி மாற்றாக உள்ளது. 'இருள்வாசி' என்பது 'இருவாட்சி' என வழக்கில் மருவும். காலப்போக்கில் இருவாட்சியிலுள்ள 'இரு என்பதற்கு 'இரண்டு' என்று பொருள்கொண்டு, 'வாட்சி என்பதை 'வாய்ச்சி' எனக்கொண்டு 'இரண்டு வாய்போல மலர் வது' என்னும் பொருளில் 'இருவாய்ச்சி' என்றனர். இதன் முகை வெடிப்பாக மலர்வதைக்கொண்டும், மலர்ச்சி வாய் அளவில் அமைவது கொண்டும் பரஞ்சோதி முனிவர் இதனை ''வெடிவாய்ச் சாதி" என்றார். இவ்வாறாக இதன் பெயர் சிறு குழப்பத்தைை ஏற்படுத்தியது.

---

1 குறி. பா : 94.

வாய் என்னும் தொடர்பு கொண்டு பதிற்றுப்பத்தில் (81 ; 22) ''பெருவாய்மலர்'' என்றதை இவ் இருவாட்சியாகவும் கூறினர்.

இவற்றுள் இருவாட்சி என்பதைமட்டும் இலக்கியங்களில் காணலாம். அவற்றுள்ளும் சங்க இலக்கியங்களில் இச்சொல் இல்லை. காப்பியங்கள், தேவாரம் முதலியவற்றிலும் இப்பெயர் இல்லை. பெரியாழ்வார் பாடியுள்ளார்.[1] நிகண்டுகளில் இருவாட்சி உள்ளது. நிகண்டுகளால் இதன் இயற்பெயரை அறிய முடிகின்றது.

''*மருமேவும் இருவாட்சிக்கு மயிலையும் அநங்கமும் பேர்*''[2]

- என்று சூடாமணி

நிகண்டு குறிக்கின்றது. சேந்தன் திவாகரம் அநங்கத்தைக் குறிக்கவில்லை இவ்வாறு குறிக்கும் நோக்கில் நிகண்டுகள் ஒரு தவறு செய்துள்ளன. 'இருவாட்சி' என்பது இதன் இயற்பெயர் போன்றும் 'மயிலை' மறுபெயர் போன்றும் குறிக்கின்றன. இஃது உண்மையன்று என்பதை 'மயிலை' என்னும் சொல்லாட்சி புலப் படுத்தும். 'இருவாட்சி' என்னும் சொல்வழக்கு சங்கப் பாடல்களில் இல்லாமையும் பிற்காலத்தவரால் அருகியே கையாளப்பட்டமை யும் கண்டோம். மயிலை, சங்க இலக்கியங்களில் பெரும் ஆட்சியாக இல்லாது போயினும்புறநானூற்றில் ஓரிடத்தில் இடம் பெறுள்ளது. தொடர்ந்து,

''*மயிலையும் செயலையும்*''[3] - என மணிமேகலை முதல் அனைத்துக் காப்பியங்களிலும் திருவிளையாடற்புராணத்திலும் சிற்றிலக்கியங்கள் சிலவற்றிலும் மயிலை பேசப்பட்டுள்ளது. இவ்வாறு பரவலாக இடம்பெற்றுள்ளமையாலும் 'மயிலை' என்னும் சொல் இடுகுறிப்பெயராக உள்ளமையாலும் இஃதே இயற்பெயராகும். ''நள்ளிருள் நாறி'' என்பதன் மொழிமாற்றாக அமைந்த 'இருவாட்சி' எவ்வாறு இயற்பெயராக முடியும்?

அவ்வாறாயின் ''நள்ளிருள் நாறி'' என்பதும் காரணச் சிறப்புப் பெயர்தானே. 'அச்சொல்லால் ஏன் கபிலர் குறிஞ்சிப்

---

1 *செண்பகம் மல்லிகை யோடு*
*செங்கழுநீ இருவாட்சி*
*எண்பகர் பூவும் கொணர்ந்தேன்*
*—பெரி, தி : 2 ; 7 ; 10.*

2 சூடா. நி, : மரப்பெயர் 8

3 மணி : 24 : 88.

பாட்டில் குறித்தார்' எனும் வினா எழலாம். அக்காலத்தில் நள்ளிருளில் நாறும் சிறப்பால் இப்பூ ஒன்றே கருதப்பட்டு இத்தொடர் அமைக்கப்பட்டிருக்கும் என்பதே அதற்கு விடை.

எனவே, 'மயிலை' என்னும் இடுகுறிப்பெயரே அதன் இயற்பெயர் என்றாகின்றது. இச்சொல் கொண்டே இப் பூவின் தன்மைகளை நாம் அறிய முடிகின்றது.

தொன்மை நூலாகிய புறநானூற்றில் இம் மயிலை,

*"கானக் காக்கை கலிச்சிறகு ஏய்க்கும்*
*மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள்"*[1] – எனப் பாடப்பட்டுள்ளது. ஒரு குறுமகள் தன் கூந்தலில் இருமருங்கும் இப்பூவாலாகிய கோதையைச் சூட்டிக்கொண்டுள்ளாள். இக்காட்சிக்குக் காட்டுக்காக்கையின் தழைத்த சிறகு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. கானக் காக்கையின் சிறகின் விளிம்புகள் வெண்மை இறகு கொண்டவை. அவ்வெண்மையும் ஒழுங்கும் கொண்டு மயிலை பூங்கோதைக்கு உவமையாயிற்று.

"*இல்வளர் முல்லை மல்லிகை மயிலை*"[2] -என்றபடி மயிலை இல்லத்தில் வளரும் முல்லை இனத்துக் கொடி மலர். இது கொடிமல்லிகை எனவும் குறிக்கப்படும்.

"மௌவல் சூழ் மயிலைப் பந்தர்" (*சீவ. சி* : 485)

"பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர்" (திருவிளை : தருமிக்கு : 19.) என்பனவற்றின் படி பந்தரில் படர்வது.

முல்லை, மௌவல், மல்லிகை முதலிய முல்லை நில மலர்களுடன் சேர்த்துப் பேசப்படுவதால் இது முல்லை நில மலர்.

இதன் நிறமும் முல்லை மல்லிகைபோன்ற வெண்மை உடையது. இதனைப் பரஞ்சோதி முனிவரும்,

*"வெள்ளை மந்தார முல்லை மல்லிகை வெடிவாய்ச் சாதி*
*கள்ளவிழ் மயிலை ஆதி வெண்மலர்"*[3] – என வெண் மலராகப் பாடினார்.

---

1 *புறம்*: 342 : 1, 2.
2 *சிலம்பு*: 5; 191,
3 *திருவிளை. பு : இந்திரன் முடி* : 12 : 2, 3

மருத்துவத்தில் இப்பூ குருதிப் பித்தத்தைப் போக்கும் மருந்தாகும்.

மயிலை என்னும் இயற்பெயர்கொண்ட இக்கொடிப் பூ முல்லை நிலத்தில், வெண்மை நிறத்தில், கார்காலத்து நள்ளிரவில் பூத்து மணம் பரப்பி "நள்ளிருள் நாறி" எனும் சிறப்பைப் பெற்ற பூவாகும்.

இனத்தாலும் நிறத்தாலும் பிறவற்றாலும் மயிலையுடன் கொகுடி தொடர்புடையது.

## 19. கோவிற் பெயர் மலர்.

### கொகுடி.

மயிலைப் பூவைப் போன்று கொகுடி என்பதும் சங்க இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் பேசப்படும் பூ. குறிஞ்சிப் பாட்டு ஒன்றில் மட்டும்,

"*நறுந்தண் கொகுடி*" [1]

— என 'மணத்துடன் குளிர்ச்சி உடையது' என்னும் அடைமொழியோடு குறிக்கப்படுகின்றது.

இஃதும் ஒரு முல்லையினப் பூ. எனவே, இஃதொரு கொடிப் பூ. பிற்காலப் 'புட்பவிதி'யும், "இருவாட்சி கொகுடி பிச்சி இவையெலாம் கொடிப்பூ வாமே" என்றது. இலக்கியங்களில் அருகிய இடம் பெற்றுள்ள பூ. தேவார மூவரில் திருஞானசம்பந்தர் மட்டும்,

"..... ..... ..... ..... *புன்னையே கொகுடி முல்லை*" [2] எனப்பாடியுள்ளார். தோலாமொழித்தேவர் தமது சூளாமணிக் காப்பியத்தில்

"*குவிமுகைக் கொகுடி*" [3] —எனப்பாடி இதன் முகை முல்லைபோன்று கூரியதன்று; குவிந்த அளவில் மொட்டை முகை எனக்காட்டுகின்றார்.

---

1 குறி. பா : 81.
2 ஞா. தே : வடகுரங்கு : 1 : 1.
3 சூளா : தூது.

இவ்வொரு வேறுபாடன்றி மற்றவகைகளில் முல்லைபோன்று அமைந்தது இப் பூ. வெண்மைநிறப்பூ. காட்டுப்பகுதிகளில்அருகித் தோன்றும்.

இக்கொடிப் பந்தரின் கீழ் ஓர் அருவுருவத் திருவுருவம் இடம் பெற்றது. அது பின்னர் கோவிற் கட்டடமாகியது. கொகுடி முல்லையில் இடத்தைக்கொண் டதால் எழுந்த கோவில் 'கொகுடிக்கோவில்' எனப் பெயர்பெற்றது. சீர்காழிக்கு மேற்கே ஆறு கல் தொலைவில் உள்ள 'தலைஞாயிறு' என்னும் ஊரில் உள்ளது. இதனை மேலைச் சீர்காழி என்றும் வழங்குவர். தேவாரத்தில் இது திருக்கருப்பறியலூர் எனப்படும். இக்கோவிலை ஞானசம்பந்தர்,

*"குற்ற மறியாத பெருமாள் கொகுடிக் கோயில்"*[1] என்றும்

*சுந்தரர்.*

*"பூஞ்சோலைக் கொகுடிக் கோயில்"*[2] —என்றும் பாடியுள்ளனர்.

பூப் பெயரால் கோவில் பெயர் பெற்றமை மிகக் குறைவு அவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்றாகக் 'கொகுடிக் கோவில்' அமைந்துள்ளதால், இப்பூவைக்

*'கோவிற் பெயர் மலர்' என்று சொல்லலாம்.*

## 20. கோசிக ஆடை மலர்.

### பாதிரி.

'பூவோ, பூ!

பாதிரிப் பூ!' — பூக்காரி வீதி வழியே விலை கூறினாள். கணவனைப் பிரிந்து அறையிற் கிடந்த மனைக்கிழத்தி நெஞ்சம் சோர்ந்தாள். பூக்காரியின் சொல்லோடு பாதிரிப் பூவின் மணமும் புகுந்து அவளைத் தாக்கிவிட்டன. பாதிரியின் மணம் பிரிந்தோர் உள்ளத்தில் காம உணர்வைக் கெல்லிவிடும் தன்மை வாய்ந்தது. அவ்வுணர்வுக் கெல்லலால் நொந்த அவள் தன்னை மறந்து பூக்காரிக்காக நெஞ்சம் நொந்தாள். அவளுக்கு இவள்நோவானேன்?

1 ஞா. தே : கருப்பறியலூர் : 10 : 3,
2 சுந் . தே : கருப்பறியலூர் : 1 — 11,

'பாதிரிப் பூ, கணவனைப் பிரிந்துள்ள தன்னை ஒருமுறை தாக்கியதிலேயே நெஞ்சத்தில் சோர்வை ஏற்படுத்தியதே. தன் கூடையிலேயே இம்மணத்தை வைத்துக் கொண்டு செல்பவள் கணவனை விட்டில் விட்டுப் பிரிந்தன்றோ போகின்றாள். இவளை அம்மணம் எவ்வாறு தாக்குமோ? இரங்கத் தக்கவள். என அவளுக்காக நொந்து கொண்டாள். இதனை,

*"..... ... ... ... பாதிரி*
*வாலிதழ் அலரி வண்டுபட ஏந்திப்*
*புதுமலர் தெருவு தோறும் நுவலும்*
*நொதுமலாட்டிக்கு நோம் என் நெஞ்சே"[1]*

— எனப் பேசவைத்தார் பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பாதிரிப் பூ குடிநீருக்கும் தன் மணத்தை ஏற்றுவது மலர்ந்த மலரைப் புதிய மண் பானையில் பெய்து வைப்பர் பின்னர் எடுத்து விட்டு அப்பானையில் நீரை ஊற்றிவைப்பர்.

*"ஒண்ணிறப் பாதிரிப்பூ சேர்தலால், புத்தோடு*
*தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு"[2]*

— என நாலடியார் பாடியபடி இதன் மணத்தைப் புதிய பானை ஓடுவாங்கிக் கொள்ளும். பின் தன்பால் ஊற்றப்பட்ட நீருக்கு ஏற்றும். இவ்வுண்மையை நீலகேசிக் காப்பியமும் பாடியது.

'பாதிரிப் பூ வாடி அழியும். புதிய பானை ஓடும் உடைந்து அழியும். ஆனால் அவற்றிலிருந்த பாதிரியின் மணம் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கு இடம் மாறினாலும் அழியாதது போன்று உயிரும் அழிவில்லாதது'[3]

— என நீலகேசி குண்டலகேசியுடன் வாதிட்டாள்.

கபிலரும்,

"தேங்கமழ் பாதிரி"[4]

— என இதன் மணத்தைக்

---

1 *நற் : 118 : 2—5.*
2 *நாலடி : 139*
3 *"பாதிரிப்பூப் புத்தோடு பாழ்ப்பிணுந்தான் பல்வழியும் தாதுரித்தாங் கேடின்மை" — நீலகேசி : குண்டல : 58.*
4 *குறி . பா : 74.*

குறித்துப் பாடினார். ''நரைவாய் வாடல் நாறும்'' என்றபடி வாடிய இதன் பூவும் மணக்கும்.

பாதிரி ஒரு மரம். எனவே, இது கோட்டுப் பூ.

''அத்தப் பாதிரி'', ''கானப் பாதிரி'' என்பனவற்றால் இது பாலை நிலப் பூ. பிற நிலங்களில் இக்காலத்திலும் அருகித் தோன்றுவது.

"வேனிற் பாதிரி" என்றபடி முதுவேனிலில் பூக்கும். இளவேனிலிலும் பூப்பதை ஐங்குறுநூறு (346) பாடியுள்ளது.

நீண்ட கொப்பில் காம்பிற்கு ஒரு பூவாக 20 பூக்கள் வரை மலரும். காம்பிலிருந்து புறவிதழ் மங்கலான மஞ்சள் நிறத்தில் ஐந்து மூக்கோண இதழ்களுடன் குப்பிபோன்றிருக்கும். அதனைப் ''பாதிரித் தூத்தகட்டுமலர்'' என்றனர். அப்புறவிதழிலிருந்து கருஞ்செந்நீல – ஊதா நிறத்தில் அடியில் புனலாக மேலே ஐந்து இதழ்கள் விரியும். புறவிதழிலிருந்து தொடரும் அகவிதழ்ப் புனல் சற்று முதுகு வளைவாகத் தோன்றுவதால் இது,

''வேனிற் பாதிரிக் கூனி மாமலர்'' (அகம் : 257 : 1) என்றும்

''வேனிற் பாதிரிக் கூன்மலர் அன்ன'' (குறுந் : 147 : 1) என்றும் கூனல் மலராகப் பேசப்படும். அகவிதழ்கள் ஐந்தில் இரண்டு சற்றுத் தாழ்வாகவும் மூன்று மேல் நிலையாகவும் அமைந்திருக்கும். இதழ்கள் யாவும் மிக மென்மையாக, மேற்பகுதி துய்யென்றிருத்தலால்,

''அத்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ'' (அகம் : 191 : 1)

''துகிலிகை அன்னத் துய்த்தலைப் பாதிரி" (நற் : 118 : 8)

— எனத் துய்த்தலையாகப் பாடப்பட்டுள்ளது.

அகவிதழின் புறமெல்லாம் மேற்கண்ட ஊதா நிறங் கொண்டது.

இப்பூவைப் புலவர்கள் கூர்ந்து நோக்கிப் பல உவமைகளால் வண்ணித்துள்ளனர். இதன் கருஞ்செந்நீல நிறத்தையும், இதழ்களில் துய்யென்ற பஞ்சுத் தன்மையையும், இதழமைப்பையும் உளத்துக் கொண்டு,

''ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய

துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி'' 1 —என ஓவியர்கள் அரக்கு வண்ணத்தில் தோய்த்த துகிலிகை என்னும் ஓவிய எழுதுகோலை உவமை கூறினார் பாலைபாடிய பெருங்கடுங்கோ.

இதன் இதழமைப்பையும் பஞ்சுப் பாங்கையும் நிறத்தையும் கொண்டு திருத்தக்க தேவர் நத்தையின் நாக்கைப் பொருத்தி,

''... .... ... பாதிரி

ஒத்த பூ உடற்றிய நாவின் நாகு''2 —என்றார்.

மற்றுமோர் ஆழ்ந்த உவமைகாட்டப்பட்டுள்ளது. அதனால் இம்மலரைப் பொதுமக்களும் நன்கு அறிந்திருந்தமை புலப்படுகின்றது, பூவின் புறத்தோற்றப் பார்வையோடு அகத்தோற்றத்தையும் கண்டு வண்ணித்துள்ளமை இம்மலருக்கொரு தனிச்சிறப்பு எனலாம்.

கடியலூர் உருத்திரங்கண்ணனார் ஒரு யாழை விளக்க முனைந்தார். யாழினது பத்தர்மேல் தோல், மூட்டமாக ஒட்டிப் போர்த்தப் பட்டிருக்கும். அத்தோல் இலக்கியங்களில் 'பச்சை' எனப்படும் 'பச்சைப் போர்வை' என்பர். யாழின் பத்தரைத் தோலில் பொதிந்து, தோலின் பொருந்துவாய் தைக்கப்பட்டிருக்கும். அத்தோல் 'துவர்' என்னும் காவி நிறம்ஊட்டப்படும். காவிநிறத்தோடு தைக்கப்பட்டுள்ள பொருந்துவாயின் தையல் ஒழுங்கிற்கு ஓர் உவமை கூறி விளக்க எண்ணினார் பெரும்புலவர்.

பாதிரிப் பூவில் மனம்பதித்துக் கூர்ந்து நோக்கிய அவர் அதன் வயிற்றிடத்தை வகிர்ந்தும் பார்த்துள்ளார். பாதிரி இதழ்களின் உட்பக்கம் தோல் மயிர் போன்று பஞ்சிழைகளைக் கொண்டது. இதழின் நடுநரம்பு இணைத்துத் தைக்கப்பட்டது போன்று அமைந்தது, இதனை மகளிரது வயிற்றில் அமைந்த மயிர் ஒழுங்கிற்கு உவமையாகக் கூறுவர். கோப்பெருஞ்சோழன்,

''வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன

மயிர் ஏர்பு ஒழுகிய அங்கலுழ் மாமை''3 என்றுபாடியுள்ளார்

1 நற் : 118 : 7, 8.
2 சீவ. க : 52,
3 குறுந் : 147 : 1, 2.

இம் மயிர் ஒழுங்கு போன்ற உள்ளிதழின் அமைப்பை யாழ்ப்பத்தரைப் பொதிந்து தைத்த பச்சைக்கு – தோலுக்கு உவமை கூறிவிளக்கினார். அவ்வடிகள் இவை:

*... ... ... பாதிரி*
*வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன்*
*உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சை (நிறமுட்டிய தோல்)"* 1

இவ்வாறு மயிரொழுங்காகத் தோன்றும் உள்ளிதழ்கள் இணைந்துள்ள பகுதி நல்ல மஞ்சள் நிறங்கொண்டு விளங்கும். எனவே, இம்மலர் புறவிதழால் பொன் தகடு போன்ற மஞ்சள் நிறமும், அகவிதழ்கள் புறத்தே கருஞ்செந்நீல நிறமும், அகவிதழ் களின் உள்பகுதி பட்டுபோன்றபஞ்சமைப்புடன் செந்நீலநிறமும், அகவிதழ்களின் அடிப்புறம் மஞ்சள் நிறமும் கொண்டு பன்னிறப் பாங்கில் விளங்கும்.

இஃதன்றி புறத்தோற்றம் வெண்மையாகவும், உட்பகுதி செம்மையாகவும் அமைந்த பாதிரி வகையும் உண்டு.

நிறத்தால் வேறுபடினும், இதழின் பட்டுபோன்ற அமைப் பால் ஒரே வகையினதாகும். பட்டு போன்ற பளப்பளப்பும் பஞ்சு படர்ந்த மென்மையும் நன்னிறமும் கொண்டமையால் இஃது ஒரு வகைப் பட்டாடை போன்றதாயிற்று. பட்டாடைகளில் 'கோசிக ஆடை' என்பது ஒன்று. இதனை உவமையாக்கித் திருத்தக்கதேவர்

*"கோசிக ஆடை பூத்தன பாதிரி"* 2 —என்றார். இதனல்

இதனைக் 'கோசிக ஆடை மலர்' எனலாம்.

நன்கு விரிந்த இதன்மலரைத் தொடலைமாலையாக்கிமகளிர் அணிந்து மகிழ்ந்தனர். அதிரல் பூவோடு இதன் பூவையும் கூந்த லில் செருகிக் களித்தனர்.

கேரளத்தில் மலைஞாலப் பெண்கள் திருவாதிரைத் திரு நாளில் ஒரு நோன்பு மேற்கொள்வர். அது தம் மங்கலநாண் நீடிக்க வேண்டி மேற்கொள்வது. அதுபோது திருமணம்ஆனோர் பாதிரிப் பூவைச் சூடிக்கொள்வர். திருமணம் ஆகாதோறும் மங்கலம் பெற வேண்டிச் சூடிக்கொள்வர்.

---

1 பெரும்பாண் : 4—6. 2 சீவ. சி : 1650

*"பாதிரி அம்பிகைக்கு அணியின் இல்லாள் எய்தும்"* [1]

— எனப் புட்ப விதி நல்ல மனைவி கிடைக்கப் பாதிரிப் பூவை அன்னைக் கடவுட்குச் சாத்துமாறு அறிவிக்கின்றது.

பாதிரியின் பெயரால் திருப்பாதிரிப்புலியூர் அமைந்துள்ளது.

ஞானசம்பந்தர்.

*"பூக்கமழும் புனற்பாதிரிப் புலியூர்"* [2] —எனப் பாடியுள்ளார்.

இதற்குப் பாடலம் என்றொரு பெயர். இப் பெயரால் வட நாட்டில் பாட்னா என்னும் பாடலிபுத்திரம் பெயர்பெற்றது. சேக்கிழாரும்,

*"பாடலி புத்ரமென்னும் பதி"* [3] —என்றார்.

இம்மரத்தின் கிளை முருங்கைபோன்று வலுவின்றி எளிதில் ஓடியும் புல்லியது. இதனால் இதற்குப் 'புள்காலி' என்றொரு பெயர் உண்டு. இப்பெயர்களை நிகண்டுகள் குறித்துள்ளன.

கோசிகை ஆடை போர்த்த பாதிரியாரைப் பற்றிப்படர்ந்து தழுவும் பூங்கொடி ஒன்று உண்டு. அஃது அதிரல்.

# 21. நடுநாள் மலர்.

## அதிரல்.

பாதிரியோடு அதிரல் கொண்ட உறவு மண உறவு. பாதிரி போன்று ஈர்ப்பு மணம் இல்லையென்றாலும் மனத்தால் அதனுடன் சேர்த்துப் பேசப்படும். ஒரு தோழி தலைவனிடம்,

'தலைவனே, நீ பொருளீட்டச் செல்வதால் உனக்கு ஊதியந்தான். அனால், ஆ தனால் ஓர் இழப்பு நேர்வதை மறந்தாய். தலைவியைத் தழுவும்போது அவள் கூந்தல் 'கம்' மென்று மணங்கமழுமே அதனை இழந்து போகின்றாய்'

—என்பவள், அம்மணத்திற்கு ஓர் உவமை கூறினாள்:

---

1 *புட். வி : 40 : 1*
2 ஞான. தே : *திருப்பாதிரி* : 8.
3 *பெரி. பு : திருநாவு : 38.*

'அதிரல் பூவையும் பாதிரிப் பூவையும் சிறு செங்காலிப் பூவையும் இட்டு மூடிவைத்திருந்த பூஞ்செப்பைத் திறந்தவுடன் 'கம்மென்று மணம் கமழுமே அதுபோன்றமணம்'[1] என்றான். பாதிரியோடு சேர்க்கப்படும் தகுதி பெற்றது அதிரல். இவ்வுறவு மட்டுமன்று; இரண்டும் அடுத்து அடுத்து மலர்பவை. இலக்கியங்களில் இரண்டும் ஒரே இடத்தில் உதிர்ந்து கிடப்பதையும்[2] இரண்டும் சேர்த்துக் கூந்தலில் முடியப்படுவதையும்[3] காணலாம். இவ்வுறவு மட்டுமன்று; அதிரல் கொடி கோங்க மரத்திலும் படரும், பாதிரி மரத்தையும் சுற்றித் தழுவிப் பற்றிப் படரும். இவ்வகையால் அதிரல் பாதிரியோடு இணைத்துப் பேசத்தக்கது.

இப்பூங்கொடி மரங்களில் மட்டுமன்று; வீரரைப் புதைத்த புதைகுழிக் கற்களின் மேலும் படர்ந்து வீரர்க்கு நாட்பூ சூட்டும்.[4]

இது தூறாக முளைக்கும். பல முளைகளில் கிளைக்கும். அப்போதும் தூறாகவே தோன்றும். அதனால் 'அதிரல்' என்னும் சொல்லுக்கு

*''அதிரல் விரி தூறு''*[5] —என 'விரிதூறு' என்று பொருள் கூறின நிகண்டுகள். எனவே, அதிரல் என்பது இதற்குக் காரணப் பெயராயிற்று. இத்தூற்றிலிருந்து படரும் கொடி நுண்ணிய திரட்சிகொண்டது. பல வளார்களாகச் செறிந்து படரும். நீண்டு படரும் பசிய நிறங்கொண்டதாகக் காணலாம். இவற்றை,

''நுண்கொடி அதிரலொடு'' (அகம் : 237 : 2)

''வரிமென் முகைய நுண்கொடி அதிரல்'' (அகம் : 391 : 2)

''ததர்கொடி அதிரல்'' (அகம் : 289 : 2)

''மாக்கொடி அதிரல்'' (நற் : 52 : )

''பைங்கொடி'' அதிரல் (அகம் : 157 : 6) —எனும் அடிகளிலும் காண்கின்றோம்.

இக்கொடி காற்றில் அடித்தூறுடன் சேர்ந்து அசைவதை இரவில் காவலர் அசைந்து நடைபோடுவதற்கு உவமையாக்கினார் நப்பூதனார்.[6]

---

1 நற் : 337 : 3 — 6.
2 அகம்: 99; 5—7; 237: 1, 2.
3 அகம் : 261 : 1 — 3.
4 அகம் : 289 : 1 — 3.
5 சேந். தி: மரப்பெயர்.
6 முல். பா : 51 — 54.

இக்கொடி பாலை நிலத்து மரங்களாகிய கோங்கிலும் பாதிரியிலும் படர்வது. வீரர்தம் புதைக்குழிமேல் படர்வது கூறப் பட்டது. இப்புதைகுழி பாலை நிலத்தில் அமையும். இதனை,

*''... ... ... அதிரல்*
*நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்*
*சுரம்''* 1

—என இளங்கீரனார் பாடினார். இங்கு கூறப்பட்டமை போன்று இது சுரத்தில் படரும் பாலைநில மலர்.

*''புதுப்பூ அதிரல் தாஅய்*
*கதுப்பறல் அணியும் காமர் பொழுதே''* 2

— என இளவேனிற் பத்தில் அதிரல் கூறப்பட்டது. மாமூலனார் ''வேனில் அதிரல்'' 3 என்று பாட அவ் வேனில் ''முதிரா வேனி'' 4 லாகிய இளவேனில் என்று பாலைபாடிய பெருங்கடுங்கோ விளக்கிக் காட்டினார். இவற்றால் இப்பூ இளவேனிலில் பூக்கும் பூவாகும்.

இளவேனிலில் எந்நேரத்தில் பூக்கும்?

இஃது இரவு நேரத்தில் பூக்கும். இதனை வேம்பற்றூர் குமரனார் பாடிய,

*''எல்லி (இரவில்) மலர்ந்த பைங்கொடி அதிரல்* 5 – என்னும் அடியாலும் அறியலாம். இரவில் எந்நேரத்தில் மலரும்? நப்பூதனார் நேரத்தைக் கண்டு காட்டியுள்ளார்.

*''கையமை விளக்கம் நந்துதொறும் மாட்ட*
*நெடுநா ஒண்மணி நிழத்திய நடுநாள்*
*அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்''* 6 –என,

'கைத்திரிகொண்டு அணைந்த விளக்குகளை ஏற்றும் இரவில், மாடுகளின் கழுத்து மணி ஒலியும் அடங்கிய நடு நாளில் — நள்ளிரவில் அதிரல் பூத்த'தை கூறியுள்ளார், எனவே,

---

1 அகம் 289 : 2 — 4.
2 ஐங் : 345
3 அகம் : 393 ; 25
4 நற் : 337 : 3
5 அகம் : 157 : 6
6 முல். பா : 49-51.

அதிரல் நள்ளிரவில் பூக்கும் பூ.

இரவில் மலர்ந்த அதிரல் பூவை யானை வைகறையில் உணவாகக் கொள்வதை முன்னே கூறிய குமரனாரே அறிவிக்கின்றார்.

இப் பூ முல்லைக் குடும்பத்தைச் சார்ந்தது. சிலப்பதிகாரத்தில் அரும்பத உரைகாரர் இதனைக் "காட்டு மல்லிகை"[1] என்றார். இங்கு காடு, சுரம். அஃதாவது பாலைநில மல்லிகை எனப்படும். இதற்கே அடியார்க்கு நல்லார் "மோசி மல்லிகை" என்று விளக்கந் தந்தார்.

'மோசி' என்பது 'திரண்டு கூர்மைகொண்டது' என்னும் பொருளைத் தருவதாகும். இதற்கேற்ப அதிரலாம் மோசி மல்லிகையும் அடிமுதல் திரண்டு முனை கூர்மை காட்டும் அரும்பைக் கொண்டதாகின்றது. இது பொருத்தமும் ஆகும். இதற்கேற்ப இப் பூவின் முகை,

*"குயில் வாய் அன்ன கூர் முகை அதிரல்"*[2] –எனப்பட்டது ஔவை யாரால்.

இது கூர்மையைக் குறிக்கும் வடிவ உவமை. காவன்முல்லைப் பூதனார்,

*"பார்வல் வெருகின் (பூனையின்) எயிற்றன்ன*
*வரிமென் முகைய மென்கொடி அதிரல்"*[3] –என்றார் இது வடிவொடு வண்ண உவமையுமாகும். குயில் வாய்க் கூர்மையும், பூனைப் பல் கூர்மையும் கொண்ட இம்மல்லிகை 'மோசி மல்லிகை' எனப்பட்டது.

நச்சினார்க்கினியர், புறத்தின் பழைய உரைகாரர் முதலியோர் இதனைப் 'புனலிக்கொடி, புனலிப் பூ, புனலி' என்றே கூறினர். 'புனலி' (புனல் + இ) என்னும் சொல் நீர்ப்பிடிப்பைக் குறிப்பது. இதன்கொடி ஓரளவில் நீர் நைப்புள்ளது. அதனால் தான் 'மென்கொடி', 'பைங்கொடி' எனப்பட்டது. வரண்ட பாலை நிலத்தில் இதன் ஓரளவு நீர்ப்பிடிப்பு ஒரு தனியாகக் குறிக்கப் பட்டது போலும். மேலும், மற்றொரு வண்ணனை இந் நீர்ப் பிடிப்பை இயைத்து நோக்கவைக்கின்றது. அது கூதிர்கால வண்ணனை:

---

1 சிலப்பு : 18 : 156
2 புறம் : 269 : 1.
3 அகம் : 391 : 1, 2

ஈங்கை அரும்புடன் அதிரல் பூவும் மணல் மேட்டில் உதிர்ந்து கிடந்தது. மான் ஒன்று அவற்றின் மேல் அடி வைத்து அழுத்தி நடந்தது அப்போது இரண்டிலிருந்தும் நீர் குமிழியிட்டு வந்தது. இக்காட்சி வெள்ளியை உருக்கும் குப்பியாகிய மூசையைக் கவிழ்த்ததால் உருகிய வெள்ளி 'குப்' பென்று வெளிவந்ததுபோன்று இருந்ததாக[1] மோசி கண்ணத்தனார் பாடினார்.

இங்கே குறிக்கப்பட்ட நீர், கூதிர் காலத்தில் குறிக்கப்படுவதால் பெரும்பகுதி மழை நீராகாது. மலரின் நீர்ப்பிடிப்பாகலாம். இதுகொண்டு 'புனலிப் பூ' எனப்பட்டிருக்கும்.

இப் பூ முல்லைக் குடும்பத்தது என்ற அளவில், அதிலும் மல்லிகைப் பெயர்பெற்ற அளவில் இதன் நிறம் வெண்மை என்பது கூறாமலே பெறப்படும். அவ்வெண்மையிலும் ஒவ்வொரு இதழிலும் சிறு வரிக்கோடு அமைந்திருப்பதை

*''வரிமென் முகைய மென்கொடி அதிரல்''*[2] – என்னும் அடி காட்டுகின்றது. சிலம்பு இதனை, *''விரிமலர் அதிரல்''*[3] என்றது.

இப் பூ ஆடவரால் கண்ணியாகவும், மகளிரால் பிற பூக்களுடன் சேர்த்துக் கோதையாகவும் சூடப்படும். விரும்பிச் சூடப்படும் பூவாதலால் விற்பனைப் பூவாகவும் இருந்தது.

பூ விற்போர் அகன்ற வட்டிலில் அதிரல் பூக்களை நிறைத்து மேலும் வைக்க இடமில்லாமல் பிற பூக்களைக் ஒழித்தனர்' —என்பதைக் காவல் முல்லைப் பூதனார்,

*''... .... ... ... ... ...அதிரல்*
*மல்கல் வட்டியர் கொள்விடம் பெறாஅர்*
*விலைஞர் ஒழித்த தலைவேய் கான்மலர்''*[4] – எனப் பாடினார்.

இவ்வாற்றால்,

அதிரல் பூ, கொடிப்பூ: பாலை நிலப்பூ;

---

1 நற் : 124 : 4–8.
2 அகம் : 391 : 2
3 சிலம்பு : 13 : 153.
4 அகம் ; 391 : 2—4.

இளவேனிற் பருவத்தில், நள்ளிரவில் பூக்கும்;
வெண்மை நிறமானது; இதழில் சிறு கோடு கொண்டது,
மணங் கமழ்வது;
சூடும் பூ ஆகும்.

இதனைச் சிலப்பதிகார அரும்பத உரைகாரர் 'காட்டு மல்லிகை' என்றார். இலக்கியங்களில் 'காடு, கான்' என்னும் சொற்கள் அவ்வவ்விடங்களில் அமையும் பிற கருப்பொருள்களுக்கேற்ப சுரம் என்னும் பாலைநிலத்தையோ, முல்லை நிலத்தையோ குறிக்கும். இங்கு பாலையைக் குறித்தது.

நச்சினார்க்கினியர் குளவியைக் காட்டு மல்லிகை[1] என்றார். குளவி, முல்லைக் குடும்பத்தைச் சார்ந்தது. இவ்வகையில் அதிரலுக்கடுத்துக் காணத்தக்கது. ஆனாலும், குளவி காட்டுமல்லிகையாகுமா?

# 22. மலைப்பச்சை மலர்.

## குளவி.

முல்லைக் குடும்பத்துக் குளவி நீர்நிலைக் கரையில் இடம் பெறும் கொடியாகும்.

"நீரிழி மருங்கின் ஆரிடத் தமர்ந்த
குளவி"[2] –என்பதும்,

"குளவி (மலர்கள்) மொய்த்த (விழுந்து கிடக்கும்)
அழுகற் சின்னீர்"[3] — என்பதும், இருபால் யானைகள் குலவியவாறு "குளவித் தண்கயம் (குளம்) குழையத் தீண்டி"னர்[4] என்பதும் இக்கொடி நீர்நிலைப்பக்கத்தே

1 குறி: பா : 76 உரை,
2 அகம் : 272 :7, 8
3 குறு :56
4 நற் :232 :2,

வளர்வதைக் காட்டுகின்றன ஆங்குள்ள இற்றி மரத்தின்மேலும் பற்றிப்படரும்.[1]

இது புதராகத் தோன்றும், அதிலும் செறிந்த புதராக மூள்ளம் பன்றி பதுங்கியிருக்கும் அளவில் செறிந்த புதராகும்.[2] இதன் இலை குறிப்பிடத்தக்கது. "பருஇலைக் குளவி" என்னும் படி பெரிய அளவினது. நல்ல பச்சை நிறங்கொண்டது. அடர்ந்து தழைப்பது; தண்ணென்று குளிர்ச்சி தரும். இதனை மூவாதியர்,

"இலையடர் தண்குளவி ஏய்ந்த பொதும்பர்"[3] —எனப் பொதும்பராகக் குறித்தார். இது போன்று, இதன் இலை செறிந்திருப்பதை,

"அடை (இலை) மல்கு குளவியொடு கமழுஞ் சாரல்"[4] என்று அறிவிக்கும் அடியில் சாரல் என்னுஞ் சொல் இதன் இடம் மலைச்சாரல் என்று அறிவிக்கின்றது. ஆம், இது மலைநிலப்பூ.

"வள்ளிதழ் குளவியும் குறிஞ்சியும் குழைய" (மலை : 335)

"பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவி" (நற் : 346 : 9)

-என்னும் அடிகளோடு குளவி அமைந்த பாடல்கள் குறிஞ்சித் திணைப்பாடல்களாக அமைந்தமையும், களிறும் குரங்கும் இதன் மேற் படுத்தும், இதனைத் தின்றும் குழைத்தும் பயன்படுத்தியமை யும் இது மலைநிலப் பூ என்பதைக் காட்டுகின்றன.

பச்சைப் பசேலென்றிருக்கும் இதன் செறிந்த இலைகளின் அடித்தொடர்புடனே இம்மலர் தோன்றும் இதன் புறவிதழ்கள் பசுமை நிறத்தன. இம்மலரின் அகவிதழ் வெண்மையானதாயினும் இலைப்பசுமையும், புறவிதழ்ப் பசுமையும், அகவிதழின் புறத் தோற்றமும் இலைப்பச்சைப் பாங்கிலேயே அமைந்தவை. இதனால், இது 'மலைப் பச்சை' எனப்பட்டது.

புறநானூற்று உரைகாரர் இதற்கு 'மலைமல்லிகை' என்றே உரை வகுத்தார்.[5] நிகண்டுகளில் திவாகரமும் சூடாமணியும் 'மலைப்பச்சை' என்றே, குறித்தன. இடைக்காலத்தோர் குளவியை 'மலைப்பச்சை' என்றே வழங்கினர் ஆனால்,

---

1 ஐங் : 2791, 2.
2 அகம் : 182 : 6-8.
3 ஐந். எ : 8 : 1
4 புறம் : 90 : 1, 2.
5 புறம் : 168 : 12 உரை.

நச்சினார்க்கினியரோ 'காட்டு மல்லிகை' என்றார், இது பொருந்தாது.

இதன் பூவைப்பற்றிய குறிப்பைவிட இலைக்குறிப்பு சிறப்பாக உள்ளது, ஆயினும் மணமுள்ள இதன் பூ, மகளிராலும் ஆடவராலும் சூடப்பட்டது.

"நாறு இதழ்க் குளவி" (புறம் : 380 : 7)
"கமழுங் குளவி" (பதிற் : 12 : 10)
"குளவிக் கடிபதம் கமழுங் கூந்தல்" (நற் : 246 : 9)
"குவளையொடு பொதிந்த குளவி நாறு நின் நறுநுதல்" (குறுந் : 59)

—என்னும் அடிகள் இது மணப்பதையும், மகளிர் கூந்தலிலும் நெற்றியிலும் படுமாறு சூடுவதையும் குறிக்கின்றன.

'களிறும் புலியும் போரிட்டன. குருதி வழிந்தோடி அந்நிலம் செங்களம் ஆயிற்று. குருதிப் புலால் நாறியது' அக்

"குருதிச் செங்களம் புலவுஅற வேங்கை
உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்"[1] — என்றார் பேரிசாத்தனார். குருதிப் புலால் நாற்றத்தைத் தடுக்கும் அளவில் இதற்கு மணம் உண்டு என அறிகின்றோம்.

கொல்லிமலையில் குளவி குறிக்கப்பட்டதுபோன்று பிட்டங்கொற்றனது குதிரை மலையிலும் குறிப்பாகப் பாடப்பட்டது. வீட்டு முன்றிலில் இது அமைந்திருந்தமையால்,

"கூதாளங் கவினிய குளவி முன்றில்"[2] —எனப்பட்டது. இக்குளவி முன்றிலில் கூதாளமும் அழகுபெற்று விளங்கியதாம். இங்கு மட்டுமன்று, இக்கூதாளம் பல்விடங்களிலும் குளவியொடு இணைத்துப் பாடப்பட்டுள்ளது:

"... — ... .... ... குளவியொடு
வெண்கூதளந் தொடுத்த கண்ணி" (திருமுருகு : 192)
"நாறிதழ்க் குளவியொடு கூதளங் குழைய" (புறம் : 380:7)
"குல்லை குளவி கூதளங் குவளை" (நற் : 376 : 5)

1 அகம் : 268 : 2-5. 2 புறம் : 168 : 11—14.

எனவே,

குறிஞ்சி நிலத்தில், கொடிப் பூவாக, இலைச் செறிவால் மலைப்பச்சை என்று பெயர் பெற்று, அகவிதழ் வெண்மை நிறங் கொண்டு, மணங்கமழும் இப் பூ, கார்காலத்து மாலைநேரப் பூவாகும். இதுபோன்று வெண்மை நிறங்கொண்ட இதன் இணைப் பூ கூதாளி அடுத்துக் காணத்தக்கது.

## 23. குருகு மலர்.

### கூதாளி.

குளவியொடு குலவி நிற்கும் கூதாளி, கொடி இனம். குறிஞ்சி நிலம் என்னும் அளவில் அதனுடன் ஒற்றுமை உடையது. குடும்ப வகையில் இது தாளி வகையைச் சேர்ந்தது. தாளை உடையது தாளி. தாள் இல்லாத சில இனமும் பிற ஒற்றுமையான தன்மையும் பயனும் கருதித் தாளி எனப்படும். அவ்வகையில் இது அமைந்தது. 'கூ' என்னும் அடைமொழி 'நிலம், கூர்மை, தழைப்பு, ஒலி' என்னும் பல பொருள்களில், இங்கு 'தழைப்பு' என்னும் பொருளில் அமைந்தது.

இதன் இயற்பெயர் 'கூதாளி.' இச்சொல் இகர இறுதி கெட்டுக்'கூதாள்' என்றாகி, அம் விகுதி பெற்றுக் 'கூதாளம் எனப்படும். இவ்வமைப்பை நச்சினார்க்கினியர் சான்று[1] காட்டுவதன் வாயிலாகக் காட்டியுள்ளார்.

நிகண்டுகள் 'துடி' என்னும் மற்றொரு பெயரையும் குறிப்பிட்டுள்ளன.

இது குற்றாக வளர்ந்து பின் வளைந்து சாய்ந்து கொடியாகும்.

பாகற்கொடி இதன் முற்றிய இலைகளில் படர்ந்து காய்த்திருப்பதை.

"... ... ... ... *பசும்பிடிப் பாகல்*
*கூதள முதிலைக் கொடிநிரைத் தூங்க*"[2] —என இளநாகனார் பாடியுள்ளார். எனவே, இதன் பூ கொடிப் பூ.

---

1 தொல் : எழுத்து ; 247 உரை        2 அகம் : 255 : 13, 14.

"...... — — சிறுமலைச்
சிலம்பில் கூதளங் கமழும்"[1] —என்றும்,

"... ... .... ... ...நயவருஞ் சாரல்
கூதள நறும்பொழில்"[2] என்றும் பாடப்பட்டுள்ளமை இது குறிஞ்சி நிலப் பூவெனக் காட்டுகின்றன.

கார்ப் பருவம் கடந்து கூதிர்ப் பருவத்தில்
கூதளி பூத்து மணம் கமழும்.

—என்னும் கூற்றங் குமரனார் இதனை, "கூதிர்க் கூதளம்"[3] என்றபடி இது கூதிர்ப் பருவப் பூவாகும்

இதன் காம்பு "குறுந்தாட் கூதளி"[4] என்னும் பரணர் தொடர்ப்படி குறுகிய காம்பை உடையது. இக்காம்பில் வெண்மை நிற மலர் பூத்திருக்கும். இது 'வெண்கூதளம்' எனப்படும்.

புதர் போன்று வளர்ந்த குற்றில் இவ்வெண்மைப் பூ மலர்ந்திருப்பதற்கு, புதரின் கிளையில் வெண்மையான நாரை—குருகு அமர்ந்திருப்பதை உவமையாக்கிப் பரணர்,

"பைம்புதல் நளிசினைக் குருகு இருந்தன்ன
வண்பிணி அவிழ்ந்த வெண்கூதாளம்"[5] — என்றார்.
இவ்வுவமையை எடுத்து மொழிவது போன்று அவ்வையார்,

'கூதளம் பூவாற் கட்டிய மாலையை வானத்தில் வீசி எறிந்தாற்போன்று பசிய கால்களையுடைய வெண் குருகு தன் சிறகை விரித்து வளைத்துப் பறந்தது'[6]

—என்றார். இந்நாரை உவமை மிகப் பொருத்தமானது. இப் பூ வெண்மை அடைமொழியுடன் பல புலவராற் பாடப்பட்டுள்ளது. இதுகொண்டு 'செங்கூதாளம்' என ஒன்று உண்டு எனக் கொள்ளலாம். சங்க இலக்கியங்களில் இவ்வாறு கொள்ளக் குறிப்பேதும் இல்லை இளங்கோவடிகளார்,

"விரிமலர் அதிரலும் வெண்கூதாளமும்"[7] —என வெண் கூதாளத்தையும்

---

1 அகம் : 47: 16, 17.
2 நற் : 313 : 7, 8.
3 நற் : 244 : 2
4 குறுந் : 60 : 1
5 அகம் : 178 : 9
6 அகம்: 273 : 1, 2.
7 சிலம்பு : 13 : 156.

"திறுமலைச் சிலம்பிற் செங்கூதாள மொடு[1] – என்றும்

"செண்பகம் கருவிளம் செங்கூதாளம்[2] – என்றும் ஈரிடங்களில் செங்கூதாளத்தையும் காட்டியுள்ளார். இவற்றிற்கு "வெண்கூதாள நறும்பூ" செங்கூதாள நறும்பூ" என உரை எழுத பட்டது. வேறு நூல்களில் இவ்வாட்சி இல்லை.

பசிய குறுகிய காம்புடன் கூடிய இப்பூ உள் துளைகொண்ட பூ. இத்துளை தூம்பு என்றும், உளை என்றும் வழங்கப்படும். இப்பூ காம்பிலிருந்து கழன்று விழுவதை நாகன்போத்தன் என்பார் கைவளை கழன்று விழுவதற்கு உவமையாக்கினார்.

"... ... .... ... .... .... கைவளை
நீர்திகழ் சிலம்பின் ஓராங் கவிழ்ந்த
வெண்கூ தாளத்து அம் தூம்பு புதுமலர்
ஆர்கழல் உகுவ போலச்
சோர்குவ"[3] –எனப் பாடியுள்ளார்.

இது மணங்கமழும் பூ. இதன் மணத்தை "அசையா நாற்றம்"[4] என்றார் இளவேட்டனார். எனவே மகளிரும் ஆடவரும் சூடினர். வெறியாடும் வேலன் குளவியொடு,

"வெண்கூதாளம் தொடுத்த கண்ணிய"னாக[5] –விளங்கினான்.

இதன் தாதுத் தூள் பொன் நிறமானது. இப்பூவில் உராய்ந்து போன ஒரு பன்றியின் முதுகில் இப்பொன் தாது படிந்து,

"பொன்னுரை கட்டளை கடுப்ப"[6] –போயிற்றாம். பன்றியின்முதுகைப் பொன்னைஉரைத்துப்பார்க்கும் உரைகல்லாக்கியது இதன் தாதுத்தூள்.

இப்பொன் தாதைக்கொண்ட கூதாளி மலர்,

கொடிப் பூ; குறிஞ்சி நிலப் பூ; கூதிர்காலப் பூ;

வெண்மை நிறங்கொண்டது; இதிற் செம்மை வகையும் உண்டு

மணங்கொண்டது; சூடும் பூ. நிற உவமையால் இஃதொரு குருகு மலர்.

---

1 சிலம்பு : 14 : 83.
2 சிலம்பு : 22 : 40.
3 குறுந் : 282 : 4—8.
4 அகம் : 272 : 8.
5 திருமுருகு : 192.
6 அகம் : 178 : 9

# 24. தேர்க்கால் மலர்.

## வகுளம்.

மணங்கமழும் மலர்களில் மகிழம் பூவின் மணம் மகிழ்வைத் தருவது. மகிழம் பூத்தால் கம்மென்று இனிமை தவழும். "மகிழ் இனிது கந்தம்" என இனிதாகக் குறித்தது பொருத்தமானதே. 'மகிழைத் தருவதால் மகிழம்' என்று நயமாகக் கூறலாம். ஆனால், 'மகிழம்' என்னும் சொல் 'வகுளம்' என்பதன் மரூஉமொழியாகும்.

குறிஞ்சிப்பாட்டு (70), பரிபாடல் (12 : 79), திணைமாலை நூற்றைம்பது (24) ஆகிய மூன்று சங்க இலக்கிய நூல்களில் மட்டும் ஒவ்வோரிடத்தில் வகுளம் வந்துள்ளது. தொடர்ந்து காப்பிய ஆசிரியர், தேவாரத்தார், புராணத்தார், சிற்றிலக்கியத்தார் எனப் பலரும் வகுளத்தைக் கையாண்டுள்ளனர். பரிபாடலின் திரட்டுப் பாடல் ஒன்றில் 'மகிழம்' அமைந்துள்ளது. அஃது அக் காலத்திலேயே இவ்வாறு மருவியதன் அறிகுறியாகலாம். அன்றி 'வகுளம்' என்பது இந்நூலில் 'மகிழம்' என மாற்றப்பட்டிருக்கலாம்.

சேந்தன் திவாகரம் 'வகுளம் இலஞ்சி மகிழ்மர மென்ப" என வகுளத்திற்கு இருபெயர்களை அறிவித்தது. பிற நிகண்டுகள் 'கேசரம்' என்னும் வடசொல்லை அறிவித்துள்ளன. இவற்றுள் 'இலஞ்சி' என்னும் சொல்லைத் திருவிளையாடற்புராணம்[1] கையாண்டுள்ளது. கம்பரும் கையாண்டுள்ளார். 'மகிழம்' என்னுஞ் சொல் உரையாசிரியர்களால் வகுளத்தின் பொருளாகக் காட்டப் பட்டுள்ளது. பரவலாக இடைக்காலப் பிற்கால இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளது.

மொழி முதலில் வகரத்திற்கு மகரம் போலியாக வழக்கில் அமையும். 'விழித்தான்' என்பதை 'முழித்தான்' என்பர். இது போல் 'வகுளம்-மகுளம்' ஆயிற்று. ளகரத்திற்கு ழகரம் ஈடு கொடுத்து வரும். 'பவளம், பவழம்' எனப்படும். இவ்வகையில் 'மகுளம்-மகுழம்' ஆயிற்று, 'மகுழம்' என்பதன் வாய்ப்போக்கு மாற்றம் 'மகிழம்' ஆயிற்று. இக்காலத்தில் 'மகிழம்' என்பதே யாவருக்கும் புரியும் நிறைவழக்காக உள்ளது.

வகுளம் மரவகை. குறிஞ்சி நிலத்தில் தினை விதைப் பதற்காக,

---

1 "தாதவிழ் மல்லிகை முல்லை இலஞ்சி தடங்கோங்கம்"
—திரு. பு : தருமி : 3

"நறுந்தண் தகரம் வகுளம் இவற்றை"[1] வெறும் புதரை வெட்டுவது போன்று வெட்டி எறிவதைக் கணிமேதையார் காட்டியுள்ளார்.

"அணிமலர் வேங்கை மராஅம் மகிழம்
... .... .... ... ... ... ... ... .... ...
மணிநிறங் கொண்ட மலை"[2] என்னும் பரிபாடலும் மலையில் வகுளத்தைக் காட்டுகின்றது. எனவே வகுளம் குறிஞ்சி நிலக் கோட்டு மலர்.

இதன் பூ மிகச் சிறியது. அழகிய அமைப்புடையது. மங்கிய மஞ்சள் நிறங் கொண்டது. இம்மலரின் வடிவமைப்பைத் திருத்தக்க தேவர் தேர்க்காலின் வடிவமைப்பிற்கு ஒப்பிட்டுள்ளார்.

"கோடு தையாக் குழிசியோ டாரங்கொளக் குயிற்றிய
ஓடு தேர்க்கால் மலர்ந்தன வகுளம்"[3] எனப்பாட,
இதற்கு உரை வகுத்த நச்சர்,

"குறட்டோடே ஆர்கள் அழுந்தத் தைத்துச் செய்த தேருருளை; மேற்சூட்டு வையாத தேருருளை. மகிழ், தேருருளை போலே பூத்தன" —என்று விளக்கினார். எனவே, இம்மலரைத் 'தேர்க்கால் மலர்' எனலாம்.

இச்சிறுமலர் காம்பிலிருந்து கழன்று கீழே வீழ்கின்றது. இக்காட்சி ஒரு சிறு சிலந்திப் பூச்சி கீழே வீழ்வது போன்றதாகத் திருத்தக்க தேவர்,

"மதுக்கலந் தூழ்த்துச் சிலம்பி வீழ்வனபோல்
மலர்சொரிவன வகுளம்"[4] என்று வண்ணித்தார்.
அளவாலும் நிறத்தாலும் கால் அமைப்பாலும் மகிழம், சிலந்தி போன்றதே.

கம்பர் கொப்பூழ்க்கு இப்பூவை உவமையாக்கினார். இராமன் உருவைச் சொல்லாற் காட்டும் அநுமன் வாயிலாக,

"... ... .... ... ... .... ....பூவொடு
நிலஞ்சுழித் தெழுமணி உந்திநேர்; இனி
இலஞ்சியம் போலும் வேறுவமை யாண்டரோ"
என் 'இராமனது கொப்பூழ்க்கு இலஞ்சியமாம் வகுளம் அன்றி வேறில்லை' என்றார்.

---

1 திணை. நூ : 24 : 1
2 பரி. திரட்டு 1 : 7, 9
3 சீவ. சி : 1650
4 சீவ. சி : 2108

இப் பூ மரத்திலிருந்து கழன்று வீழ்ந்து வாடினாலும் மணமும் தேனும் கொண்டு திகழ்வது.

இதனைத் திருத்தக்கதேவர் செவ்வந்தியோடு சேர்த்து,

'வகுளப் பூ முதிர்ந்து கழன்று வீழ்ந்து வாடிக் காய்ந்து கிடக்கும்போதும் வண்டுகள் மொய்த்துத் தேனை நக்கக் கொடுத்துக் கிடக்கும்' என்பதை,

"மலர்ந்த செவ்வந்திப் போதும் வகுளமும் முதிர்ந்து வாடி
உலர்ந்துமொய்த் தளிதேன் நக்கக் கிடப்பன"[1]
—எனக்கூறி உவமையாக்கி,

'நற்குடும்பத்தில் தோன்றிய நல்லோர் செல்வம் குறைந்தாலும் தம்பால் 'இல்லை' எனக் கையேந்திய வர்க்கு, உயிரைப் பண்டமாற்றாக்கியேனும் கொடுத்து உதவுவர். —என்னும் பொருளுரையை வழங்கியுள்ளார். மலர்ச்சிக்குக் கூறப்படும் கவிமரபில் வகுளம், மகளிர் எச்சில் உமிழ மலரும் என்பர்.

வகுளம் பூ கழன்றபின் மையத் துளையுள்ளதாகையால் நாரால் கோத்துத் தலையில் சூடுவர். இதனைச் சிவனுக்குரியதாக ஞானசம்பந்தர் பாடினார், பிறரும் பாடினர்; இப் பூ நம்மாழ்வார்க் குரிய சின்னப் பூ என்பதை அவரே,

"... .... ... .... ... ...வன்குருகூரான்
நாட்கமழ் மகிழ் மாலை மார்பினன்
மாறன் சடகோபன்"[2] என்று பாடினார்.

வகுளம், பூவாற் சிறியதாயினும் மணத்தாற் பெரிது.

## 25. பொன் தகட்டு மலர்.

### செருந்தி.

செருந்தி ஒரு மரம். ஒருவகைக் கோரையும் உண்டு. பூவின் தொடர்பில் மரமாகக் கொள்ளும் குறிப்புகளே இலக்கியங்களில் காணப்படுகின்றன. கலித்தொகையில் மராமரப் பூ, காஞ்சி மரப் பூ, ஞாழல் மரப் பூ, இலவ மரப் பூ ஆகியவற்றோடு இச்செருந்திப் பூவும் கூறப்பட்டுள்ளது. இறுதியில் அப்பாடல்,

1 சீவக : பு : தகும் : 17    2 திருவாய் : 4 : 10 : 11.

"போதவிழ் மரத்தொடு பொருகரை கவின்கொள"[1] — என் 'மரம்' எனவும் காட்டியது. இவ்வாறு மரங்களை அடுக்கும் இலக் கியங்களும் மர இனத்தோடே செருந்தியைக் காட்டும். நிகண்டு களும் 'செங்கோடு, பஞ்சரம்' என்னும் பெயர்களைக் கூறு கின்றன.[2] இவையும் மரக் குறிப்புடையவை.

ஆயினும், உரையாசிரியர்கள் நெட்டிக்கோரை, வாட்கோரை, தட்டான்கோரை, கோரை என்றெல்லாம் பொருள் எழுதினர். இதற்குக் கரணியங்கள் உள.

"இருஞ்சாய் அன்ன செருந்தி"[3] என்றார் ஓரம்போகியார். சாய் என்பது டஞ்சாய்க் கோரையைக் குறிக்கும். அதுபோன்ற செருந்தி என்றமையும் ஒரு கரணியம். 'யானை நின்றால் மறையும் அளவு வளர்ந்துள்ள செருந்தி' என்பதைக் "களிறுமாய் செருந்தி"[4] என்றார் மாங்குடி மருதனார். யானை மறையும் அளவை மலைப் புல், கோரை முதலியவற்றின் வளர்ச்சிக்குக் கூறுவர். மேலும், மழை வறண்ட காலத்திலும், மாந்தர் வாழ் வற்ற பாழிடங்களைக் குறிக்கும்போதும் சொல்லப்படும் கோரை முதலியவற்றோடு இச் செருந்தியும் சொல்லப்படும். எனவே, உரையாசிரியர்கள் அவ்விடங்களில் கோரையாக எழுதினர். ஆனால், அங்கெல்லாம் பூக்கும் குறிப்பு இல்லை. மேலும், ஓரிடத்தில் கோரையாகக் கூறும் நச்சினார்க்கினியார், குறிஞ்சிப் பாட்டில் 'செருந்தி – பூ, பிடி செருந்திப் பூ என்று எழுதினார். புட்ப விதியும் கோட்டுப் பூ என்றது. எனவே பூவைக்குறிக்கும் செருந்தி மரவகையைச் சேர்ந்தது. எனவே, செருந்திப் பூ கோட்டுப் பூ.

"செருந்தி தாஅய இருங்கழிச் சேர்ப்பன்" (ஐங் 112)
"எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழ" (ஐங் : 141)
"நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ
... ... ... — ....
கழியுங் கானலும்" (அகம் : 150 : 9, 12)

— என்றெல்லாம் நெய்தல் நிலத்தில் செருந்தி கண்டு காட்டப்பட்டுள்ளது. எனவே, இது நெய்தல் நில மலர். நெய்தலை ஒட்டிய மருதநிலத்திலும் காட்சிதரும்.

1 கலி ; 26 ; 7.
2 சூடா, நி : மரம் ; 7 ; 1;
3 ஐங் : 18 ; 1.
4 மது. கா : 172.

செருந்தி மலர,

"நோதக வந்தன்றால் இளவேனில்" [1] என நல்லந்துவனார் இளவேனிலைக் காட்டினார். நல்லூர் நத்தத்தனார் இதனைத் "தலைநாட் செருந்தி" என்றார். ஆண்டின் ஆறு பருவங்களில் இளவேனில் பருவம் முதற்பருவமாம் தலைப் பருவம். இப்பருவத்தில் மலர்வது செருந்தி. குறுவழுதியார் என்பார்,

*"நனைத்த செருந்திப் போதுவாய் அவிழ*
*மாலை மணியிதழ் கூம்பக் காலை*
*கள்நாறு காவியொடு தண்ணென மலரும்"[2]* — என

இது காலைப் பொழுதில் மலர்வதைக் குறித்தார்.

எனவே, செருந்தி இளவேனிற் பருவத்தில் காலைப் போதில் மலரும் பூ.

*"அரும்பலர் செருந்தி நெடுங்கால் மலர்"* [3] எனும் அவ்வையார் பாடல் இப்பூவின் காம்பு நீண்டிருப்பதைக் காட்டுகின்றது. *"வண்டுபட விரிந்த செருந்தி"* [4] என்னும் தொடர் இம் மலர் நன்கு விரிந்து மலர்வதைக் குறிக்கின்றது. இவ்வாறு நீண்ட காம்பில் நன்கு விரிந்த மலரை நல்லந்துவனார் கண்டார். மருண்டுபோனார். ஏன்? 'செருந்தியா! பொன்னா!' என மருண்டார். அவ்வுணர்வில்,

*"தலைநாட் செருந்தி தமனியம் மருட்ட"* [5] என்று பாடினார் ஆம், இதன் நிறம் பொன் நிறமாம் மஞ்சள் நிறம். அம்மூவனார் அதன் இதழ்களைக் கண்டு,

*"பொன் அடர்ந்தன்ன ஒள்ளிணர்ச் செருந்தி"* [6] —என்றார். இங்கு அடர்தல் தகடாதல். 'பொன் அடர்ந்தன்ன' என்பதற்குப் 'பொன் தகடானதுபோன்று' என்று பொருள். செருந்திப் பூவின் இதழ் பொன் தகடுபோன்றது. இதனால் இதனைப் 'பொன்தகட்டு மலர்' எனலாம். இப்பூ வீயாகி விழும் காட்சியைத் திருநெல்வேலியிற் கண்ட ஞானசம்பந்தர்,

*"செருந்தி பொன் மலர் திருநெல்வேலி"* [7] என்று பொன் மலராகப் பாடினார். அவரே சாய்க்காட்டில் பார்த்து,

---

1 கலி : 26 : 8.
2 அகம் : 150 : 8-10.
3 புறம் : 390 : 8.
4 அகம் : 240 : 12, 13.
5 சிறுபாண் : 147.
6 அகம் : 280 : 1.
7 ஞான. தே : திருநெல் : 1

"செருந்தி காலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடே"[1] என்றார். "பருதியஞ் செல்வன் போல் நனையூழ்த்த செருந்தி"[2] என்னும் கலித்தொடர் இதன் மஞ்சள் ஒளிகதிரவன் ஒளிபோன்றிருப்பதைக் காட்டுகின்றது. இதுபோன்றே "ஒள்ளிணர்ச் செருந்தி" என இதன் ஒளி பாடப்பட்டது. இத்தொடர் இது கொத்தாகப் பூப்பதையும் குறிக்கின்றது.

இவ்வாறு குறிப்பன போன்றே செருந்தி,

மஞ்சளாம் பொன்னிற ஒளியில், இதழ்கள் பொன்தகடுகள் போன்று நீண்ட காம்பில் கொத்தாகப் பூக்கும்.

செருந்திப் பூவால் வடிக்கப்படும் மருந்து நஞ்சைக் கட்டும் என்பது வள்ளலார் கண்டது.

"இதன் பூவைப் பாவை என்றலும், அதனை மகளிர்க்கு உவமை கூறலும் மரபு" என்று உ. வே. சா. அவர்கள் குறித்துள்ளார்கள்[3]

*"பரதவர் தொடுப்பன வலைகள்*
*சேய நீள்விழிப் பரத்தியர்*
*தொடுப்பன செருந்தி"*[4]

—எனச் சேக்கிழார்

நெய்தல் நிலப் பெண்கள் தொடுப்பதைப் பாடினார். இதனாலும் இது சூடும் பூவாகும். ஆழ்வார்கள் பலரும் இச்செருந்தியைப் பாடியுள்ளார்.

## 26. செவி சூடும் மலர்.

### செயலை.

செயலை, பிண்டி, அசோகு என்பன ஒரு மரத்தின் பெயர்கள். மூன்றும் சங்க இலக்கியங்களில் உள்ளவை. இவற்றுள் பிண்டி வேறுபொருளையும் கொண்டது. அசோகு அக்காலத்தில் குறைந்த வழக்கு. மேலும் இவ்விரண்டும் சமண சமயக் கடவுளுக்குரிதாக ஆளப்பட்டன. இவற்றால் செயலை என்னும் பெயர் இதற்குரிய முதன்மைப் பெயராகின்றது.

1 ஞான. தே : சாய்க்காடு : 9.
2 கலி : 26 : 2.
3 ஐங் : 18 குறிப்புரை.
4 பெரி : பு : திருக்குறிப்பு : 84

பிற்காலத்தில் அசோகை நெட்டிலிங்கம் என்றனர். பல்கலைக்கழகச் சொற்பொருட் களஞ்சியமும், கலைக்களஞ்சியமும் இவ்வாறு குறித்துள்ளன. நெட்டிலிங்கம் கிளைகளைப் பரப்பாமல் நெடு நெடுவென உயர்ந்து வளர்வது. செயலை,

"சினையெலாம் செயலை மலர"[1] - என்றதன்படி கிளைகளைப் பரப்புவது.

"ஓங்குசினை தொடுத்த ஊசல் பாம்பென"[2] – என்றபடி ஊசல் கட்டி ஆடும் அளவில் கிளைகளைக்கொண்டது. மகளிர் விளையாடும் அளவிற்கும், மலைப் பாதைகளில் வெப்பத்திற்குத் துணையாகும் அளவிற்கும் நிழல் தரும் மரம். எனவே, நெட்டிலிங்கம் வேறு; செயலை வேறு. இலையமைப்பாலும், தளிர், பூ இவற்றாலும் வேறுபாடு உடையவை,

செயலையின் பூவைப்போன்று இதன் தளிருக்கும் சமமான தகுதிஉண்டு. நிறத்தாலும் பயனாலும் இலக்கிய இடத்தாலும் இரண்டும் ஒத்த இடம் பெற்றவை. இரண்டும் செக்கச் சிவந்தவை; அணியப்படுபவை; உவமைப் பொருளானவை; இலக்கிய வண்ணனை பெற்றவை.

தளிர்,

"அழல்ஏர் செயலை அம் தழை" (அகம் : 188 : 11)—எனத் தீயின் செம்மையாகவும்,

"அத்தச் (சிவந்த) செயலைத் துப்பு (பவளம்) உறழ் ஒண்டளிர்" (ஐங் : 273) — எனப் பவளச் சிவப்பாகவும் சொல்லப்பட்டது.

"ஊட்டி அன்ன ஒண்டளிர்ச் செயலை" (அகம்:68:5) —என இயற்கைச் சிவப்பு போதாதென்று மேலும் சிவப்பை ஊட்டியது போன்றது எனப்பட்டது.

தளிர்போன்றே பூவும்,

"எரிநிற நீள்பிண்டி இணர்"(திணை. நூ:63)

"செந்தீ ஒண்பூம் பிண்டி" (மது. கா : 701) —எனத் தீச்செம்மையாகக் கூறப்பட்டது. திருமங்கையாழ்வார் கற்பனை கூட்டி,

1 பரி : 15 : 31. 2 அகம் : 68 : 5, 6.

"தாதுமல்கிய பிண்டிவிண்டு அலர்கின்ற
தழல்புரை எழில்நோக்கிப்
பேதை வண்டுகள் எரிவன வெருவரும்"[1] - என 'நெருப்பைப் போலும் இதன் மலரைப் பார்த்த வண்டுகள் மரம் எரிவதாக அஞ்சும்' என்று பாடினார்.

இவற்றால் செயலை மலரின் சிவப்பையும் மெருகையும் அறியலாம்.

இதன் நிறவளர்ச்சி காந்தள்போன்று மாற்றங்கொண்டது. அரும்பில் மஞ்சளாகத் தோன்றும், கிச்சிலி நிறத்தில் போதாகும் சிவந்த நிறத்தில் மலராகும். செக்கச் சிவந்த நிறத்தில் அலராகும்.

மற்றொரு குறிப்பு இம்மலருக்குண்டு. இதன் புறவிதழால் புல்லியே இதன் அகவிதழும் ஆகும், தனியே அகவிதழ் இல்லை சிவந்த புறவிதழ்களின் இடையே மகர நரம்புகள் செண்டாகத் தோன்றும்,

முறுக்குண்டு பிணிந்துள்ள புறவிதழ் "பிணிநெகிழ் பிண்டி"[2] என்றதன்படி நெகிழ்ந்து மலராகும். 'பல்பூம் பிண்டி",[3] "பிண்டி இணர்"[4] என்பவையும் இது கொத்தாக மலர்வதைக் குறிக்கின்றன. இக்கொத்து தொங்கி அசைந்தாடும் இவ்வாறு தொங்கி அசைவதை நல்வழுதியார் என்பார்,

'பொன்னைச் சுட்டு உருக்கிய தன்மையில், திறமையான
வேலைப்பாட்டுடன் செய்யப்பட்ட குழை என்னும் மகளிர்
காதணி தொங்கி அசைவதாகக் குறித்தார்'

இவ்வாறு காதணியாக மற்றொரு காதணி அமைப்பிற்கே கூறினார். இப்பூங்கொத்தை ஒருத்தி காதிற் செருகி அடிமேல் அடி ஒதுங்கிப் பூங்கொடி போன்று நடந்தாளாம். ஆம், செயலைப் பூ காதிற் செருகி அணியாவது. இதனை,

"சுடுநீர் வினைக்குழையின் ஞால (தொங்க)ச் சிவந்த
கடிமலர்ப் பிண்டிதன் காதிற் செரீஇ"[5] -என்றார் நல்வழுதியார்.

"ஒண்பூம் பிண்டி ஒருகாது செரீஇ" என அகத்துறைத் தலைவனும், காதில் சூடினான். செயலைப் பூ மாலையாக அணியப் படுவதன்று. காதிற் செருகவே பயன்பட்டது. மலரைப் போன்று

1 பெரி. திரு : 2 : 9.
2 பரி. திரட்டு 1 ; 8.
3 குறி.பா ; 88.
4 திணை. நூ : 63:1
5 பரி : 12 : 87, 88.

தளிரும் காதணியாகச் செருகிச் சூடப்பட்டது. பூவுடன் சேர்த்தும் தனித் தளிராகவும் செருகிக்கொண்டனர். மேலே அகத்துறைத் தலைவன் ஒருகாதில் செயலை மலரைச் செருகியதைக் கண்டோம். அவ்வாறு செருகியவன் அதன் சிவந்த தளிரையும் சேர்த்தே செருகிக் கொண்டான். காதில் பூ அமர, அதன் தளிர் தொங்கித்தோளில் அசைந்தாடியதை,

*"அம் தளிர்க் குலவுமொய்ம்பு (தோளில்) அலைப்ப*[1]
- என்றார் கபிலர்.

இவ்வாறு இதன் தளிர் காதில் செருகி அணியப்படுவதை

"வண்காது நிறைத்த பிண்டி ஒண்டளிர்" (திருமுருகு:30)

"செயலைத் தண்டளிர துயல்வரு காதினன்" (திருமுருகு : 206) - என முருகனுக்கும் ஏற்றிப்பாடினார் நக்கீரர்.

தளிர்த் தழை இவ்வாறு காதணியாவதோடு தலைவிக்குத் தலைவனால் தழையுடையாக்கி வழங்கவும் பயன்பட்டது. மகளிர் விரும்பியும் தழையுடையாக்கி அணிந்து மகிழ்ந்தனர். இவ்வாறு தழையுடைக்காகத் தளிர் கொய்யப்பட்டதால்,

*"திருந்திழை அல்குற்குப் பெருந்தழை உதவிச்*
*செயலை முழுமுதல் ஒழிய"*[2] -என மரமே மொட்டையானதாகப் பாடப்பட்டது.

மகளிரது உடல் நிறத்திற்கு இத்தளிர் உவமையாகக் கூறப்படும்.

*"செயலை அந்தளிர் அன்னவென்*
*மதனில் மாமெய்"*[3] -என்றாள் ஒரு தலைவி.

இச்செயலையை,

"சிலம்பின் தலையது செயலை" (ஐங் : 211)

"மணிகெழு நெடுவரை அணிபெற நிவந்த
செயலை" (நற்: 244 : 9, 10) என்பவை மலையிடத்து மரமாகக் காட்டுகின்றன.

*"மைந்தார் அசோகம் மடலவிழ் கொந்தார்*
*இளவேனில் வந்தது"*[4] - என்னும் அடிகள் இம்மலர் இளவேனிற் பருவத்தில் மலர்வதைக் குறிக்கின்றன.

---

1 குறி. பா : 119
2 குறுந் :214
3 நற். 244 : 10, 11.
4 சிலம்பு :8 : வெண்பா

கோட்டுப் பூவாகிய செயலைப் பூ குறிஞ்சி நிலத்தில் இளவேனிற் பருவத்தில் மலர்ந்து, புறவிதழே அகவிதழாகச் செக்கச் சிவந்த நிறத்தில் செவியிற் சூடப்படும் மலராகும். அதன் தளிரும் மலர்போன்ற தகுதிபெற்றது.

இச்செயலை, சுனையில் மலரும் நீலத்துடன் சேர்த்துப் பாடப்படும். நீலமலர் காதலனால் காதலியின் காதில் செருகப் படுதல் அன்புப் பழக்கம். செவியில் செருகப்படும் ஒற்றுமையால் இரண்டும் இணைத்துப் பேசப்படும்.

*"சுனையெலாம் நீலம் மலரச்*
*சினையெலாம் செயலை மலர"*[1] — என்றார் இளம்பெரு வழுதியார். மலரைப்போன்று தளிரும் நீலத்துடன் இணைக்கப் படும். வையையாற்றில் மகளிர் நீராடினர். நீராட்டத்தில் ஒப்பனைப் போட்டியும் நேர்ந்தது. ஒருத்தி நீல மலரைக் காதிற் செருகிக்கொண்டு மற்றொருத்தியின் முன்னே காட்சி தந்தாள் இவள் உடனே தனது காதில் செயலையின் சிவந்த தளிரைச் செருகி எழில் காட்டினாள். இதனைப் பாடும் நல்லந்துவனார்

*"சாய்குழைப் பிண்டித் தளிர்காதில் தையினாள்;*
*பாய்குழை நீலம் பகலாகத் தையினாள்"*[2] —எனச் செயலைத் தளிரின் செம்மை நிறம் நீலமலரில் எதிரொளித்து அதன் நீல நிறத்தையும் பகலவன் நிறம் போலச் சிவப்பாக்கிவிட்டதாகப் பாடினார்.

சமயப் பாங்கிலும் புராணப் போக்கிலும் செயலை பெற்ற இடம் நயமும் நகைப்பும் கொண்டது.

சமணக் கடவுளாகிய அருகதேவன், "பூமலி அசோகின் புனைநிழல்"[3] அமர்ந்தவன். சமயத் துறையில் அசோக மரம் சமணத்தாரது உரிமையாகப் பேசப்படும். அருகதேவன் அமர்ந் திருக்கும் அசோகு மாலையாகவே பூக்கும் என்பர். அருகனது இருக்கையானதால் இம்மரத்தின் நிழல் நிலத்தில் விழாது என்ப தை இளங்கோவடிகளார், "பிண்டிப் பொதுநீங்கு. பொது நிழல்"[4] என்றார். ஆனால் அவரே

---

1 பரி :15 : 30, 31.
2 பரி : 11 : 95, 96.
3 நன் : 1
4 சிலம்பு : 15 : 152

"கோதைதாழ் பிண்டிப் கொழுநிழல்"[1] –என்றார்.

"பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த நான்முகன்" என்றார் நன்னூலார். எனவே நிழல் விழாது என்பது பொருந்தவில்லை.

காமவேள்கொண்ட ஐந்து மலர்க்கணைகளில் அசோக மலர் ஒன்று. காமனால் எய்யப்பட்டால் "அசோகு துயர் செய்யும்"[2] என்பர். ஐந்தில் இது 'கவர்ச்சி ஊட்டுவது' என்பர்

மலர்களின் மலர்ச்சிக்குச் சில இயற்கைக் கரணியங்கள் கூறப்படும். தாழை மலர் மின்னலுக்கு மலரும் என்று கண்டோம். கவிஞர்களது கற்பனை மரபுகள் சில உள.

அசோக மரத்து ஊஞ்சலில் மீனாட்சியம்மை அமர்ந்து ஆடினார். தமது காலை அதன் அடிமரத்தில் உதைத்து உந்தி ஆடினார்.

"ஊசலை உதைத்தாடலும்
ஒண்டளிர் அடிச்சுவடுறப்பெறும் அசோகு நறவு
ஒழுகுமலர் பூத்துதிர்வது"[3] – எனக் குமரகுருபரர் 'மகளிர் உதைக்கு அசோகு மலரும்' என்றார். மேகதூதத்தில் ஒரு தோழன் பேசினான்:

'எனது வீட்டிலுள்ள அசோகு என் காதலி இடது காலால் உதைத்தால் ஒழியப் பூக்காது. வாயில் உள்ள எச்சிற் கள்ளை உமிழ்ந்தால் அல்லாமல் மகிழ மரம் மலராது' இப்படியொரு பட்டியல் உண்டு. இருந்தாலும் அசோகு உதைவாங்கித்தான் மலரவேண்டும் என்றில்லை. இனிய இளவேனிற் சூழலில் மலரும் மலர்.

இம்மலர் 'செவியிற் செருகப்படும் மலர்' என்றும் தனக்கென ஒரு தகுதி பெற்ற மலர்.

---

1 சிலம்பு : 11 : 8
2 அறப்பளீசுர சதகம் : 90 : 2.
3 மீ. பி. த : 96 : 1.

# 27. கூன் முள் மலர்.

## முள்ளி.

முள்ளை உடையது என்னும் பொருளில் இதன் பெயர் 'முள்ளி' என அமைந்தது. "முள்ளுடை மூலம் யாவும் முண்டகம் என்றே சாற்றும்"[1] என்றதன்படி இதற்கு 'முண்டகம்' என்னும் பெயர் உண்டு. இலக்கிய வழக்கில் மிகுதியும் இப்பெயர் காணப்படும்.

கடற்கரையின் மணல் மேட்டில் இம்முள்ளி செடியாக வளர்ந்து பூக்கும்.

*"முள்ளி நீடிய முதுநீர் (கடல்) அடைகரை"*[2]
-என ஓரம்போகியாரும்

*"முண்டகங் கெழீஇய மோட்டுமணல் அடைகரை"*[3]
-என வெண்கண்ணனாரும் பிறரும் இதனைக் கடற்கரை மணல் மேட்டில் கண்டு பாடினர்,

*"மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறுபுலர்ந்து*
*இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்"*[4]
-என்னும் உலோச்சனார் பாடல் மேலும் விளக்கமாக உப்பு விளையும் செறுவை-வயலைக் குறித்துக் காட்டி இது உப்பங் கழியின் மலர் என்றது. இதனால், இது 'கழி முள்ளி' எனவும் வழங்கப்படும்.

இஃது ஒரோவழி கடற்கரையை அடுத்த மருத வயற் பகுதியில் நீரில் வளரும். இதனை 'நீர் முள்ளி' என்றனர் இடைக் காலத்தார். "நீர் முள்ளி முண்டகம் ஆகும் என்ப"[5] என நிகண்டுகளும் 'நீர் முள்ளி' என்னும் பெயரை அமைத்தன ஆனால், இப்பெயர் மருத வயற்பகுதியில் வளரும் முள்ளியையே குறிக்கும். உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் கழன்று விழுந்த இதன் மலர்களை மருத ஊர் மகளிர் விளையாடுவதற்குத் தொகுப்பர்[6] என மருதநிலத்திற்குப் பாடிக்காட்டினார்.

ஒரே அமைப்புடைய செடியாயினும் இடத்தால் 'கழிமுள்ளி' 'நீர் முள்ளி' என்றும் பெயர் பெற்றது.

---

1 சூடா. நி : மரம் : 63 : 2.
2 ஐங் : 21 : 1
3 அகம் : 13 : 5
4 நற் : 311 : 4, 5
5 பிங். நி : 3002
6 அகம் : 26 : 1—4

முள்ளைக்கொண்ட தாழையும், முள்போன்ற சுனைப்பைக் கொண்ட தாமரையும் 'முண்டகம்' என்னும் பெயரைக்கொண்டன. முள்ளைக் கொண்ட பிற பூக்களும் உள. அவ்வாறிருக்க இதற்கு மட்டும் 'முள்ளி' என்னும் பெயர் அமைவானேன்? மற்றவற்றை விட இதன் முள் குறிக்கத்தக்க கூர்மையும், வளைவும், வெண்மையும் கொண்டது. இவற்றிலும் இதன் வளைவு,

"கூன்முள் முள்ளி" (அகம் : 26 : 1)

"கூன்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்" (குறுந் : 51:1) —எனக் 'கூன்' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டது. இதன் கூர்மை, வெண்மை, வளைவு இவற்றையெல்லாம் உளத்துக் கொண்ட அம்மூவனார்,

"அணிற்பல் அன்ன கொங்கு முதிர் முண்டகம்"[1]

—என அணிலின் பல்லை உவமையாக்கினார். கல்லாடனார் காரெலியின் இணைந்த பற்களை உவமையாக்கினார்.[2] சிறப்பாக இம்முள்ளின் கூனல் கொண்டே இது முள்ளாற் பெயர் பெற்றது. எனவே, இதனைக் 'கூன் முள் மலர்' எனலாம்.

முள்ளி மணல்மேட்டில் தழைத்திருக்கும்.

இதன் வேர்ப்பகுதியில் நண்டு புகுந்துகொள்ளும்.[3] இதன் தண்டாகிய தாள்களைக் கொண்டு சிறு குடில்களின் கூரை வேயப்பட்டது. இதனை,

"கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிணர்க் குரம்பை
கொழுமீன் கொள்பவர் பாக்கம்"[4] —என ஒரு புலவர் விளக்கியுள்ளார். பரதவர் வாழும் பாக்கங்களில் உள்ள சிறிய குடிசைகள் இத்தாளால் வேயப்பட்டதை இவ்வடிகள் காட்டுகின்றன. இதனைக் "குறும்புதல் முண்டகம்" எனக் கல்லாடர் குறித்தார்.

இவற்றால் இஃதொரு சிறு செடி என அறியலாம்.

இவற்றிற்கேற்ப இஃதொரு சிறு நிலச்செடி.

எனவே, இது நிலப்பூ.

---

1 குறுந் : 49 : 1
2 கல் : 68 : 12, 13.
3 ஐங் : 22, 28.
4 நற் : 207 : 1-3.

மணி என்னும் அடைமொழி பெற்ற நீல நிறப் பூக்களில் இம்முள்ளியும் ஒன்று. "மணிப் பூ முண்டகம்"[1] என்றும் "மாமலர்"[2] என்றும் இலக்கியங்கள் பேசும். பருவ காலத்தில் முதலில் பூக்கும் இப் பூ ஒளிவிடும் மணிபோன்று மலரும் என்பதை நல்லூர் நத்தத்தனார்,

"கடுஞ்சூல் (முதற் சூல்) முண்டகம்
கதிர்மணி கழ அலவும்" [கழலுமாறு பூக்கவும்)[3]

—எனப் பாடினார். இதுபோன்றே

"மணிமருள் மலர முள்ளி"[4] —எனப் பரணரும் பாடினார்

இவ்வாறு இம்முள்ளிப் பூ நீல நிறங் கொண்டது.

இப்பூவின் முழுக்காட்சியில் நீல நிறம் பளிச்சிடும். இப் பூவின் காம்பு "கொடுங்கால் மாமலர்"[5] என்றபடி வளைந்தது. இக்காம்பிலிருந்து இம்மலர் கழன்று விழும். அப்போது மலரின் அடிப்பகுதி மட்டும் வெண்மையாகத் தோற்றமளிப்பதை உக்கிரப் பெருவழுதி,

"... ... .... .... ....குவிகுலை கழன்ற
மீன்முள் அன்ன வெண்கால் மாமலர்"[6] என்றார்.

இவ்வாறு பெருங்காற்றால் இம்மலர்கள் கழன்றுசுழன்று உருண்டு வீழும்போது,

'நூலிற்கோத்த முத்துக்கள் அறுந்து வீழ்வதைப்போன்று காட்சிதரும்' என்றார் உலோச்சனார். இங்கு "நூலறு முத்து"[7] என்றது அறுந்து சிதறி விழும் செயலுக்குக் கூறப்பட்டவினையுவம மாயினும், பெருங்காற்றில் கழன்று வீழும் போது இம்மலரின் அடிப்பகுதியில் வெண்மைத் தோற்றம்வெளிப்படுவதால் முத்தின் வெண்மையும் காம்புத் தொடர்பில் கொள்ளலாம்.

மேலே கண்டபடி இப்பூ குவிந்து குலையாகப் பூக்கும். ஒரு தலைவி தன் தலைவனிடம் குறிப்பாக,

நான் நாள்தோறும் முண்டகப் பூவைக் கொய்வேன். அவ்வாறு கொய்ய வரவில்லை என்றால் அன்னை என்னை இல்லத்தில் அடைத்து விட்டாள் என்று நீ அறியலாம்.[8] —என்றாள். இதுகொண்டு இப்பூவை

1 நற் : 191 : 9.
2 குறுந் : 51 : 1
3 சிறுபாண் : 148
4 அகம் : 286 : 1
5 பெரும்பாண் : 215.
6 அகம் : 26 : 1, 2.
7 குறுந் : 51 : 2, 3.
8 நற் : 191 : 9.

விளையாடுவதற்கும், சூடிக் கொள்வதற்கும் கொய்வதை அறியலாம். எனவே இது சூடும் பூ.

மழை வறண்ட காலத்திலும் இப் பூ ஓரளவில் பூக்கும். அவ்வாறு பூத்து உப்பங்கழியின் காய்ந்த சேற்றின் மேல் சிதறிக் கிடப்பதை உலோச்சனார் பாடியுள்ளார்.[1]

இப்பூவின் பெயரால் முள்ளியார் என்றொரு புலவர் வாழ்ந்தார். அவர் எழுதிய நூல் 'முள்ளியார் கலித்தொகை'. இன்று கிடைக்காத நூல்.

இவ்வாற்றான் இது நெய்தல் நிலத்தில் இளவேனிற் பருவத்தில் நிலப் பூவாக, நீலநிறத்தில் பூக்கும், வளைந்த கூரிய முள்களைக் கொண்டது என்று ஆகின்றது.

## 28. தார் மணி மலர்.

### அடும்பு.

'அடப்பங்கொடி' என வழங்கப்படும் அடும்பு நாட்டுப் புறத்தாரால் 'குதிரைக் குளம்புக் கொடி' எனப்படும். இதன் இலை கவட்டிலையாக விலங்குகளின் குளம்பின் வடிவமைப்புஉடையதாயினும் குதிரைக் குளம்பு போன்று முன்பக்கம் ஒன்று கூடிய வளைவானதன்று. மானின் குளம்பு போன்றும் ஆட்டின் குளம்பு போன்றும் உள்ளது.

"*மானடி அன்ன கவட்டிலை அடும்பு*"[2] — என நம்பி குட்டுவனும்,

"*கர்னல் அடும்பின் கவட்டிலை, மானின்
குளம்பு ஏய்க்கும்*"[3] — எனப் புகழேந்தியும் 'மானடி போன்ற இலை' என்றனர். 'ஆட்டின் அடி போன்றஇலை' என்னும் பொருளில் ஆங்கிலத்தில் *GOATS FOOT* எனக் குறிக்கப்பட்டது.

"*அடும்பு இவர் அணி எக்கர்*"[4] — என்றபடி கடற்கரை மணல்மேட்டில் இக்கொடி படரும். கோடைக்காற்று மணலை இதன் மேல் குவிக்க இக்கொடி அக்காலத்தில் மணலுக்குள் புதைந்தும் தோன்றும். இவ்வாறு நீர்ப்பிடிப்பு இல்லாத மணல்

---

1 நற் : 311 : 3, 4.
2 குறு : 243 : 1.
3 நள. வெ : 259.
4 கலி : 132 : 16.

மேட்டில் இக்கொடி படர்வதால் கொடியும் நீர்ப்பிடிப்பு அற்ற தாகும். அதனால், "வறள்கொடி" [1] எனப்பட்டது. இதற்கு "நீரற்ற இடத்தில் எழுந்த அடும்பு" என்றார் நச்சர். கருமை மிகுதிவாய்ந்த செம்மை நிறத்துக் கொடியாகையால் "அடும்பின் செங்கேழ் மென்கொடி" (அகம் 80 : 8, 9)' "கருங்கொடி அடும்பு" (கலி : 15) எனப்பட்டது. இக்கருமை கருதியே "மாக்கொடி" எனவும் பாடப்பட்டது. இருப்பினும் இலை நற்பசுமை நிறங் கொண்டதாகையால் "பாசடும்பு" எனப்பட்டது.

விளையாட்டு மகளிர் இக்கொடியைப் பறித்து விளையாடுவர். நோன்பிருக்கும்பெண்கள் மணல் மேட்டில் அமர்வதற்கு இக்கொடி களைப் பறித்தெறிந்து போட்டிருப்பர் என்பதை முக்கல் ஆசான் நல்வெள்ளையார் என்பார் காட்டியுள்ளார்.[2]

கோடைக் காலத்தில் காற்று தூற்றியமணலால் புதையுண்ட இக்கொடி கார்காலத்தில் தளிர்க்கும். கூதிர்காலத்தில் தழைக்கும். இக்கால இறுதியில் அரும்பு காணும். முன்பனிக்காலத்தில் பூக்கும். தொடர்ந்து பூக்குமாயினும் இதற்குரிய பருவம் முன்பனியே.

ஓரை மகளிர் என்னும் விளையாட்டு மகளிர் இவ்வழகிய அரும்பைக் கொய்வதை ஒரு பொழுது போக்கு விளையாட்டாகக் கொண்டனராம்.

இதன் பூ தனிப் பூ. செந்நீல நிறத்தில் அழகாகப் பூக்கும் இப் பூவின் தோற்றம் குதிரையின் கழுத்தில் கட்டப்படும் சதங்கை மாலையின் மணி போன்ற வடிவமைப்புடையது. இதன் இலையை மானடியாகக் கூறிய நம்பி குட்டுவன் என்னும் சேர மன்னன்,

"*அடும்பின், தார்மணி அன்ன ஒண் பூ*" [3] — எனத் தார் மணியை உவமையாக்கித் 'தார்மணி மலர்' என இதற்கு இலக்கியப் பெயர் சூட்ட வாய்ப்பாக்கினான். 'தார்மணி' என்னும் இவ்வுவமை இப்பூ முழு அலர்ச்சி பெறாத மலர்ப் பருவத்திற்குப் பொருந்துவது. நன்கு விரிந்த அலர் பாலிகை போன்றது. கூலங்களின்முளைகளை இட்டு வைக்கும் சிறுமண் குவளை 'பாலிகை' எனப்படும், இப் பாலிகையை உவமையாக்கிக் கணிமேதையார்,

"*... ... — அடும்பெலாம்*
*பாலிகை பூக்கும் பயின்று*"[4] என்றார். இவ்வுவமைப் பொருத் தத்தைக் கொண்டு நிகண்டுகள் பலவும் "அடும்பு பாலிகை"

---

1 பட் : பா : 65.
2 நற் : 272 : 2, 3.
3 குறு : 248.
4 திணை. நூ : 51.

எனப் பாலிகையை இதற்கொரு பெயராகக் காட்டின. அகர முதலி களிலும் 'பாலிகை' என்னுஞ் சொல்லுக்கு 'அடும்பு' என்னும் பொருளைக் காண்கின்றோம்.

கடற்கரையில் குலவும் தலைவனும் தலைவியும் இக்கொடி படர்ந்த மேட்டில் அமர்ந்து களிப்பர். அதுபோது அவன் அவளது கூந்தலில் இப் பூவைக் கோதையில்சூட்டுவான். இதனை

*"மாக்கொடி அடும்பின் மாயிதழ் அலரி*
*கூந்தல் மகளிர் கோதை கூட்டும்"* [1] — என்றும்,
*"ஆய்பூ அடும்பின் அலர்கொண்டு, உதுக்காண்*
*கோதை புனைந்த வழி"* [2] — என்றும் பாடினர். மகளிரும் இம்மலருடன் நெய்தல் மலரைத் தொடுத்த கோதையைக் கூந்த லில் சூடுவர். [3] எனவே, இது சூடும்பூவாகும். குறிஞ்சியிலும் இடம் பெற்றது.

*"அடும்பும் கொன்றையும் வன்னியும் மத்தமும்"* [4] எனச் சிவன் தலையிலும் ஏறியது.

# 29. பொங்கு அழல் மலர்.

## முருக்கு.

*"மணமற்ற செம்முருக்கது பூத்து அலர்ந்தென்ன?*
*மலராது போகிலென்ன?"* [5] – என்றார் அறப்பளீசுர சதக அருணாசலக் கவிராயர். முருக்க மலர் மணமற்ற மலர். அதனால் சூடப்படாமல் பயனற்ற மலர். அப்பயனற்றதை,

"உதவாத பேர்க்கு வெகுவாழ்வு வந்தாலென்ன?
ஓங்குமிடி வரிலென்ன?" — எனும் ஒரு கருத்துரை விளங்கப் பயன்படுத்தினார். முருக்க மலர்பற்றிய பிற்காலப் பார்வை இது, முற்காலப் பார்வை எத்துணையோ வண்ணனை களை விளைவித்தது; உவமைகளை வழங்கியது. அவற்றின் மூலம் செடியியல் எண்ணங்களைத் தூண்டியது. சங்கப் புலவர் பலர் இதன் நனை முதல் மலர்வரை தம் பார்வையைப் பதித்துப் பல பாட்டோவியங்களைத் தீட்டினர். அவற்றைப் படிப்படியாக அடுக்கினால் ஒரு தொடர் ஓவியமாகும்.

1 நற் : 145 : 2, 3.
2 கலி : 144 : 30, 31.
3 குறு : 400 : 1—4
4 அப். தே : காட்டுப் : 6.
5 அறப். ச : 22.

முருக்கின் நனை, கரும்பச்சை நிறப் புற இதழால் மூடப் பட்டது. அதனால் "கருநனை"[1] என்றார் குன்றியனார்.

நனை முற்றிய அரும்பில் புறவிதழ், கருமை குறைந்து பசுமை நிற்கும்; பாசரும்பு ஆகும். புறவிதழ் விரிந்து அகவிதழ் செம்மையான முகை தோன்றும். இதனைச் சாத்தனார் "பாசரும்பு ஈன்ற செம்முகை முருக்கு"[2] என்றார்.

முகை விரிந்து அகவிதழ்களின் செம்மை விளங்கும் மலரைச் "செம் பூ முருக்கு"[3] என்றார் நெடுங்கண்ணனார்.

அரும்பு முதல் மலர் வரையுள்ள இதன் வடிவமைப்பிற்கும். செம்மை நிறத்திற்கும் பல உவமைகள் படிப்படியாக எழுந்தன.

"*முருக்கு அரும்பு அன்ன வள்ளுகிர் வயப்பிணவு*"[4] -எனப் புலியின் வளமான நகத்திற்கு உவமையாக்கினார் வெள்ளிவீதியார். இதனை மாற்றியமைத்துப் "புலியின் பற்றிக்கொள்ளும் நகம் போன்ற முருக்கின் சிவந்த முகை"[5] என்று இதன் முகை வடிவத்தைக் காட்டினார் பெருங்கடுங்கோ. முகை புலிநகத்தில் வடிவமைப்போடு சிவந்திருப்பதை எண்ணிய மாறன் பொறையனார்,

"*உதிரந் துவரிய வேங்கை உகிர்போல்*
*எதிரி முருக்கு அரும்ப*[6] -எனக் குருதிக்கறை படிந்த புலி நகத்தைக் காட்டினார். கொடிய வேங்கை நகத்தைக் காட்ட விரும்பாத வடமோதங்கிழார்,

"*மகளிர் ஊட்டு உகிர் கடுக்கும்*[7] - எனச் செவ்வண்ணம் ஊட்டிய மகளிர் கைநகத்தைக் காட்டினார். இவையாவும் இப்பூவின் து வடிவமைப்பின் பதிவுகள்.

செக்கச் சிவந்த இம்மலரின் நிறம் உவமைகள் அடுக்கப் பெற்றது. இதன் செம்மை நெருப்புச் செம்மையாக்ப் பலரால் பாடப்பட்டது.

கருவூர் நன்மார்பன் என்பார், "பொங்கு அழல் முருக்கின் ஒண் குரல்"[8] என்றார். விரிந்த அகவிதழ்கள் தீயின் நாக்குகளாகவும், சிற்றிதழ்கள் தீப்பிழம்புகளாகவும், மகரங்கள் சிதறும் தீப்பொறிகளாகவும் அமைந்து 'பொங்கும் நெருப்பு மலர்,

---

1 அகம் : 41 ; 2
2 அகம் : 229 : 16.
3 குறு : 156
4 அகம் : 862 : 5.
5 அகம் 99 : 1-8.
6 ஐந் : 81.
7 அகம் : 317 : 5.
8 அகம் : 277 ; 15—17.

என்பதற்குப் பொருத்தமாகும். இத்தொடரை அடித்தளமாகக் கொண்டு போலும் இப்பூ மலர்ந்த காட்டை ஆங்கிலத்தில் *FLAME OF FOREST* என்றனர். இந் நன்மார்பனாரே இதே பாட்டில் இப்பூவிற்கு ஓர் உவமை கூறினார். சண்டைச் சேவல் பகைச்சேவலைத் தாக்கும்போது தனது கழுத்தின் இறகைச் சிலிர்த்துக்கொள்ளும், அதனைக் காட்டிச் 'சேவல், போர்புரி எருத்தம் (கழுத்துப் பிடரி) போலக் கருவிய பொங்கழல் முருக்கு'' எனப்பட்டது. இச்சேவற் பிடரி உவமை, அடுத்து வரும் கவிர்ப் பூவுடன் நோக்குவதற்கு நினைவிற்கொள்ள வேண்டியதா கின்றது.

பொங்கிய நெருப்பாகச் செவ்வொளி சிதறுவதுபோன்ற தோற்றத்தைக் கண்ட கணிமேதாவியார்,

''*எரி சிதறிவிட்டன்ன ஈர்ம் முருக்கு*''[1] -எனக் கணித்தார். இவர் கணிப்பில் நிறம் நெருப்பாயினும், நெருப்பின் வெம்மை இன்றி ஈரமாம் தண்மை தெரிகின்றது. பூக்கள் நிறைந்த கிளை ''எரிமருள் பூஞ்சினை''[2] எனப்பட்டது குன்றியனாரால். பூத்த முருக்க மரங்களைக்கொண்ட நீர்த்துறைக் கரை ''முருக்கு தாழ்பு எழிலிய நெருப்பு உறழ் அடைகரை''[3] எனப்பட்டது பாலைக் கௌதமனாரால்.

யானையளவில் ஒரு கரும்பாறை கிடந்தது. அதன்மேல் சிவந்த மலர் விரிந்த முருக்க மரக்கிளைகள் படிந்திருந்தன. கடுங்காற்று வீச்சால் செம்மலர்கள் அலைந்தன. அக்கல், ''அழல் பொழியானையின் ஐ எனத் தோன்றும்''[4] என்றார் பெருங்கடுங் கோ. நெருப்பைப் பொழிகின்ற யானையாக 'ஐ' என்னுமாறு வியப்பை வழங்கியதாம்.

நெருப்பேயன்றி இதன் செம்மைக்கு அரக்கைக் குறித்தார் நத்தத்தனார்.[5] இதன் தனி இதழுக்குப் பவளத்தை உவமையாக் கினர் இருவர். குளத்து நீரில் இதன் சிவந்த இதழ் உதிர்ந்தது. இதனை மணிபோன்ற கண்ணாடிக்குள் பவளத்தை எறிந்தது போன்றிருந்ததாக[6] நல்லந்துவனார் பாட, கணிமேதாவியாரே பின்வருமாறு 'பவளம் பதித்த பொற்றாலி' என்றார்:

---

1 திணை : நூ : 64
2 அகம்: 41: 3
3 பதிற் : 23 : 20
4 அகம் : 223 : 5—7.
5 சிறுபாண் : 256.
6 கலி : 33 : 3, 4

நல்ல மலர்ச்சியின்போது இதன் புறவிதழ் மஞ்சள் நிறம் பெறும். இதன்மேல் சிவந்த அகவிதழ் தோன்றுவதைப் 'பொற்றாலி' என்றார். செல்வச் சிறுவர்க்கு ஐம்படைத்தாலி செய்துகொடுக்கும் பொற்கொல்லர் போலப் பூத்ததாம்.[1] இதனையே அடுத்த பாட்டிலும் "பொன்னுறு உறுபவளம் போன்ற புணர்முருக்கம்"[2] என்றார்.

இப்பவள இதழ் மகளிரது செவ்வாய்க்கு ஈடாயிற்று. இதன் செம்மை போதாதென்று இதற்கும் செந்தூரவண்ணமூட்டி "முருக்கிதழ் குலிகம் ஊட்டி வைத்தன்ன முறுவற் செவ்வாய்"[3] என்றார் திருத்தக்க தேவர், மகளிரது இயல்பான இதழ்ச் செம்மை மேல், தம்பலம் தின்றதால் ஏறிய சிவப்பையும் கருதினார் போலும்.

வளையாபதி ஆசிரியரோ கணிகையரை "முருக்கலர் போற் சிவந்து ஒள்ளியர்"[4] என்றார்.

இவ்வாறாக, முருக்கமலர் புலி நகமாக, மகளிர் நகமாக, பொங்கு அழலாக, எரி சிதறியதாக, யானை பொழி நெருப்பாக, சேவற் பிடரியாக, அரக்காக, பவளமாக, மகளிர் செவ்வாயாக, அவர்தம் உடலாக வண்ணிக்கப் பெற்றது.

முருக்க மலர்க் கருத்துகள் யாவும் பாலைத்திணைப் பாடல்களிலேயே அமைந்துள்ளன. பாலைபாடிய பெருங்கடுங்கோ இதனை "வெங்காட்டு"டன் குறித்தார். எனவே இது பாலை நில மலர்.

பொங்கழல் முருக்கு மலர "இளவேனில் வந்தது"[5] என்றும் "முருக்கரும்ப ... இளவேனில் காண்டொறும்"[6] என்றும் இம்மலரின் பருவம் இளவேனிலாகக் கண்டு காட்டியுள்ளனர். இக்காலத்தும் இது பொருந்துவதே. இளவேனிற் காலத்தில் குயில் இதன் இதழ்களைக் கோதித் தின்னுமாம்.[7] இளவேனிற் பருவத்திலும்,

> *"வைகுபுலவர் விடியல் மைபுலம் பரப்ப,*
> *கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கு"*[8]

—என்றபடி விடியற்போதில் மலரும்.

---

1 திணை. நூ : 66, 67.
2 திணை. நூ : 66, 67.
3 சீவ. சி : 1454
4 வளை : 62
5 அகம் : 277 : 18.
6 ஐந். ஐ : 31
7 அகம் :229 : 16
8 அகம் : 41 : 1, 2.

"நாறாப் பூவும் தேவருக்காம்"[1] —என்றபடி எம்மலரையும் தம்மலராகக் கொள்ளும் சிவன் முடியில் இம்மலரையும் சூட்டினர். "எருக்கொடு முருக்கும்... ... ஆறும் ஓர் சடைமேல் அணிந்த எம்மடிகள்"[2] என்று ஞானசம்பந்தரும் பாடினார்.

இம்மலரைத் தரும் மரம் முள் கொண்டது. "செம்முகை அவிழ்ந்த முண்முதிர் முருக்"[3] கெனச் சங்க இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் கண்டாலும் இன்றும் கண்ணால் காணும் இம்மரம் முள்ளைக் காட்டுகின்றது.

இம்மரம் உறுதியற்றது; செறிவில்லாதது; பளுவில்லாதது. யாழின் பத்தர் செய்யப் பயன்பட்டது. வேல் வீசியும் அம்பெய்தும் பயிற்சி பெறுபவர் இம்மரத்தைக் குறிப்பொருளாகக் கொண்டனர். கோசர் இவ்வாறுபயின்றதைக் காரிக்கண்ணனார்[4] பாடியுள்ளார். 'படிவ உண்டிப் பார்ப்பன மகன்' தனக்கு வேண்டிய கைத்தண்டை இம்மரத்தால் செய்து கொள்வதைக் குறுந்தொகை காட்டுகின்றது. மரம் இவ்வாறு இசைத்துறைக்கும், போர்த்துறைக்கும், ஆன்மத் துறைக்கும் பயன்படினும் மணங்கமழாத ஒன்றால் ஒரு குறையாகப் பேசப்படுவதுண்டு. சூடப்படாமையால் குறிஞ்சிப் பாட்டில் இடம் பெறவில்லை. பாரதியார் தமது தேசியப்பாடல்களின் முன்னுரையில்,

"தேவலோகப்பாரிசாதமலர்கள்சூடத்தகுதிகொண்ட திருவடிகட்கு எனது மணமற்ற முருக்கம் பூக்கள் அணிக் குறையை விளைக்கும்" —என முருக்கமலரை மணமற்ற தாற் குறையாக எழுதினார். எதற்கு எழுதினார்? அவையடக்கத் திற்கே எழுதினார். முருக்க மலராக அவரே கூறிய அவரது பாடல்கள் சிறப்பற்றனவா என்ன? அவர்தம் பாடலுக்குவமையானதாலும் முருக்க மலர் குறிப்பிடத்தக்க இலக்கியத் தகுதியுள்ள மலரேயாகும்.

---

1 பட்ப: வி : 84
2 ஞான: தே: அச்சிறு 7
3 அகம்: 99 : 2
4 புறம் : 169

# 30. சேவற் கொண்டை மலர்

## கவிர்.

முருக்கு இனத்தைச் சேர்ந்தது கவிர். மரத்தாலும், மலரின் நிறத்தாலும் இரண்டும் ஒத்தவை. இரண்டிற்கும் மரமெங்கும் முள் உண்டு. இலக்கியங்களில் கவரின் முள் குறிக்கப்படவில்லை. ஆயினும், இதன் பூவைப்பற்றி இலக்கியங்கள் காட்டும் கருத்துகள் நாம் தற்காலத்தில் காணும் கலியாண முருங்கை என்பதுடன் முழுமையாக ஒத்துள்ளன. கலியாண முருங்கையில் முருக்கு போன்ற முள் உள்ளதை அறிவோம்.

நிகண்டுகள் "*கவிரே கஞ்சுகம் முள்முருக்காகும்*"[1] —எனமுள் முருக்காகச் சொல்கின்றன. இதுகொண்டு போலும் உரையாசிரியர்கள் 'கவிர்' என்பதற்கு 'முள்முருக்கு' என்றே பொருள் எழுதினர். இரண்டிற்கும் உள்ள பிற ஒற்றுமைகளால் நேர்ந்ததாகவும் கொள்ளலாம். இலக்கியங்களை நுணுகி நோக்கின் இரண்டும் வெவ்வேறானவை என அறியலாம். இரண்டின் பூவைப்பற்றிய விளக்கங்களே வேறுபாட்டியப் போதுமானவை.

இரண்டும் நிறத்தால் ஒத்த சிவப்பானவை. ஆனால், வடிவமைப்பில் வெவ்வேறானவை. முருக்கு மலர் சண்டைச் 'சேவலின் பிடரி சிலிர்த்ததைப் போன்றது' என்று கண்டோம் ஆனால், கவிர்ப் பூவோ,

"கவிர்ப் பூ அன்ன நெற்றிச் சேவல்" (அகம் : 267 : 11, 12)
"கவிர்ப் பூ நெற்றிச் சேவல்" (புறம் : 326 : 6)
"கவிர் அலர் பூத்த சென்னி வாரணம்" (கல் : பாயிரம்)
— எனச் சேவலின்

நெற்றியென்னும் கொண்டையாகக் காட்டப்பட்டுள்ளது. முருக்கு மலர் சேவலின் பிடரி; கவிர் சேவலின் நெற்றிக் கொண்டை சேவலின் நெற்றிக்கொண்டை என்பது தலைக்குமேல் அமைந்தது. முன்பகுதியை அடுத்தடுத்துச் சிறிய சிறிய செம்மையான தசை அமைப்பைக் கொண்டது. இதுபோன்று கவிர்ப் பூவின் அமைப்பும் உளது. பெரிய அகவிதழை அடுத்தடுத்த அதே அமைப்பில் அகவிதழ்கள் சிறுத்துச் சிறுத்து அமைந்திருக்கும். முற்றிலும் சேவற் கொண்டைக்குப் பொருந்துவது. முருக்கு இக்கொண்டை

---

1 *பிங். நி* : 2695.

யமைப்பிற்கு மாறுபட்டது. இஃதொன்று இரண்டும் வெவ்வேறானவை எனக் காட்டுகின்றது.

முருக்கிற்குக் கூறப்பட்ட புலிநகம், நெருப்பு, பவளம், முதலியன கவிர்க்கு எங்கும் கூறப்படவில்லை. பொருந்துவனவாகவும் இல்லை.

பிற்காலத்தில் முருக்கு இதழ் மகளிர் வாய்க்குக் கூறப்பட்டிருப்பினும், முற்கால இலக்கியங்களில் ஓரிடத்தில் மட்டும் 'செவ்வாய்' என வாய் நிறத்தளவிற்குமட்டும் அமைந்துள்ளது. கவிரின் இதழே மகளிர் செவ்வாய் இதழிற்கு மிகுதியாகக் காட்டப்பட்டுள்ளது.

*''கவிர் இதழ் அன்ன காண்பின் செவ்வாய்''* (அகம் : 3: 15)

*''கயல் கண்; கவிர் இதழ்''* (பரி : 22 : 29)

*''கரை நின்றுதிர்ந்த கவிர் இதழ்ச்செவ்வாய்''* (சிலம்பு: 13 : 165)

*''கவிரோ இதழோ''* (மணி : 6: 123)

—எனப் பலரால் கவிரே மகளிர் வாயிதழிற்குக் காட்டப்பட்டுள்ளது.

கண்ணகியார் கோட்டம் அமைந்த செங்கோட்டு நெடுவரையில் உள்ள சிறுநீர்நிலைக் கரையில் கிடக்கும் சிவப்பு நிறக் கற்களை இளங்கோவடிகளார்,

*''கவிர் இதழ்க் குறுங்கல்''* [1] —என அக்கற்கள் இக்கவிரின் இதழ் போன்றன என்றார். ஒருவகை நாரையின் தூவியிறகு ஓரளவு செம்மையுடன் கவிர் இதழின் வடிவத்தில் இருப்பதால் வாயிலான்தேவன் என்பார் அதற்கு உவமை கூறியுள்ளார். [2]

இவ்வுவமைகள் பலவும் கவிரைத் தனியொரு மலராகவே காட்டுகின்றன.

பல உவமைகள் இருப்பினும் சேவலின் நெற்றிக்கொண்டை உவமை மிகப் பொருந்துவதாகி இதனை 'சேவற்கொண்டை மலர்' என்று சொல்ல வைக்கின்றது.

முருக்கும் கவிரும் வேறு வேறு என்பதைத் திரு பி. எல். சாமி அவர்களும் தம் நூலில் காட்டியுள்ளார்கள். [3] செடியியலாரும் இரண்டையும் வேவ்வேறாகவே கொண்டு தனித் தனிப் பெயரிட்டுள்ளனர்.

---

1 சிலம்பு : 30 : 47.
2 குறு : 103
3 சங்க : செடிகொடிகள் : பக்கம் 96—98

குமட்டூர் கண்ணனார், "*கவிர் ததை சிலம்பில் துஞ்சும் கவரி*" 1 — என இக்கவிர் மலைப் பகுதியில் உள்ளதைக் காட்டியுள்ளார். பிற குறிப்புகளும் இது குறிஞ்சி நிலத்ததாகவே கொள்ள வைக்கின்றன. இஃதும் வேனிற் பருவத்தில் பூப்பது. முள் முருக்கு போன்றே சூடப்படாதது. எனவே, குறிஞ்சிப்பாட்டில் இடம்பெறவில்லை.

இக்கவிரில் வெண்மை நிறப் பூவகை உண்டு. இலக்கியங்களில் இதற்குக் குறிப்பும் இல்லையென்றாலும் இக்காலத்திலும் அனைத்து வகையிலும் செங்கவிரோடு ஒத்த வெள்ளைப் பூ உள்ளது. செங்கவிரின் காய் விதை செம்மை; வெண்கவிரின் காய் விதை வெள்ளை. இவ்வேறுபாடு ஒன்றன்றி மற்றனைத்தாலும் இரண்டும் ஒத்தவையே. வெண்மைப் பூ அருகித் தோன்றுவது. மருத்துக்குப் பயன்படுவது. இதன் 'சாற்றைக் கொண்டு ஈயத்தை நீறாக்கலாம்' என்பர்.

ஆய் என்னும் குறுநில மன்னனது மலைநாட்டில் ஒரு பக்க மலை,

"*கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்*" 2 எனக் கவிர் என்னும் பெயர் பெற்றது. வரலாற்றுப் பெயர்பெற்ற இதற்குப் புராணக் கருத்து ஒன்றை நச்சினார்க்கினியர் சீவக சிந்தாமணி உரையில் எழுதியுள்ளார். வேளிரால் கொண்டு வரப்பட்டதாகக் குறிக்கப் படுபவை சில உள. தேவர் உலகத்துக் கற்பகம் "தேவரது சாவத்தால் தன்னிலையென்றிப் பூ அளவே உண்டாயிற்றென்க; மந்தாரமும் அவ்வாறாம்; கவிரும் அவ்வாறாம்" 3 என மரமில்லாமல் பூவே தோன்றுவதாகக் குறித்தார், இதன்படி இது தாயில்லாமல் பிறந்த பிள்ளை போலும். இருப்பினும் இலக்கியத்தாய் இதன் பிறப்பையும் வளர்ச்சியையும் தழைப்பையும் உண்மையாகவே காட்டுகின்றாள்.

---

1 பதிற் : 11 : 21,
2 அகம் 198 : 15
3 சீவ : சீ : 1710 உரை,

# 31. களரிப் பொன் மலர்

## ஆவிரை.

தொல்காப்பியத்தில்[1] 'ஆவிரை' என்னுஞ்சொல் குறிக்கப் பட்டுப் புணர்ச்சி விதி பெற்றுள்ளது. வல்லின முதன்மொழியோடு புணரும்போது இறுதி ஐ கெட்டு அம்முச்சாரியைச் சேர்ந்து 'ஆவிரம் பூ' என்றாகும். பிற்காலத்தார் 'ஆவாரை' என்றனர். அஃதும் 'ஆவாரம் பூ' எனப்படும்.

ஆவிரை மூன்று வகைப்படும் என முன்னே குறிக்கப் பட்டது.[2] ஆயினும் பெரிய அளவில் குற்றுச் செடியாகக் கிளை விட்டு வளரும். கோட்டுப் பூவாம் ஆவிரையே சிறப்புடையதாகும்.

"விரிமலர் ஆவிரை"[3] என்பதற்கேற்ப இப் பூ தன் 5 அகவிதழ்களை நன்கு விரித்துச் சமதளமாக மலரும். "பொன் நேர் ஆவிரைப் புதுமலர்"[4] என்றதன்படி இதன் அகவிதழ்கள் பொன்போன்ற மஞ்சள் நிறங்கொண்டவை. அதிலும், அடர் 'பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங் கண்ணி"[5] என்றதன்படி பளிச்சிட்டு ஒளிரும் பொன்போன்ற மஞ்சள் நிறங்கொண்டவை. அகவிதழ்களின் இடையே கிச்சிலி நிற வரிகள் உள்ளன. இதன் பொன் நிறத்தால் இது 'பொன்னாவிரை' என்றே வழங்கப்படும்.

இது 'களரி ஆவிரை' எனப்பட்டது. சங்க இலக்கியங் களில் "கள்ளி போகிய களரியம் பறந்தலை" எனக் களறி என்னும் காட்டுக் களர் நிலம் கள்ளியுடன் பேசப்படும். எனவே, இது முல்லை திரிந்த பாலை நிலத்ததாகும்.

தைத்திங்களாம் முன்பனிப்பருவத்தில் பூக்கத்தொடங்கித் தொடர்ந்து இரண்டு பருவங்கள் பூக்கும்.

இப் பூ அகத்துறையில், மடலேறுவோன் "அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்து"ச்[6] சூடப்படும் பூவாகும். இதனை மடலேறும் சின்னப் பூவாகவே காணலாம். தலைவன் மட்டு மன்றிப் பனைமடலால் ஆன 'மடன்மா' என்னும் குதிரை வடிவிற் கும் அணிவிப்பான்.[7]

---

1 தொல். எழுத்து : 284
2 இந்நூல் பக்கம் : 97, 98
3 குறி. பா : 71.
4 குறு : 173 : 1
5 கலி : 140 : 7
6 கலி : 138 : 9, 10
7 குறு : 173,

இஃதன்றி, "அடர்பொன் அவிர் ஏய்க்கும் ஆவிரங்கண்ணி" என ஆடவர் ஒப்பனைக்காக அணிந்ததையும் காண முடிகின்றது. மகளிரும், அணிந்து

"களரி ஆவிரைக் கிளர்பூங் கோதை
வண்ண மார்பில் வனமுலை துயல்வர"[1] விளங்கியுதையும் காண்கின்றோம்.

பிங்கல நிகண்டு மட்டும் இதற்குப் 'பகரி'[2] என்றொரு பெயரைப் பகர்கின்றது.

ஒருவகை நெல் 'ஆவாரம்பூச் சம்பா' என்று பெயரிடப் பட்டுள்ளது. ஆவிரம்பூ மருத்துவத்தில் நற்பயன் தருவது. நீரிழிவை நீக்கி, உடலைப் பொன்னொளியாக்கி,

"—அங்கத்தாம் (உடலுறுப்பின்),
மாவைக் (உப்பழுக்கை) கற்றாழை மணத்தை
அகற்றிவிடும், பூவைச்சேர் ஆவாரம் பூ"
—என்றது அகத்தியர் குணபாடம்.

இதன் பூவால் இன்சுவைக் கறுக்கு நீர் உண்டாக்கிப் பருகுவர். இதன் வித்தும் இதற்குப் பயன்படுத்தப்படும். இப்பூ இதழைத் தேனில் இட்டுக் குல்கந்து செய்து உண்பர். இவற்றால் குளிர்ச்சியும் உடல் வலிவும் பெருகும். இஃது எளிய மாந்தர்க்குப் பொன்னூட்ட உணவாகும்.

இத்துணை நலந்தரும் இது காட்டுப் பூவாயினும் சுட்டொளிரும் பொன்னொளி கொண்டமையால் 'களரிப்பொன்மலர்'.

## 32. மழைத் துளி மலர்.

### மா.

### (தேமா, கலிமா.)

'மணப்பெண் கருப்பா, 'சிவப்பா?'

'மா நிறம்'

—இவ்வுரையாடல் நாட்டுப் பேச்சில் நாம் கேட்டுப் பழகியது. மாநிறம் என்றால் எந்நிறம்? மா மரத்து இளந் தளிரின் நிறம். இது கருப்பும் சிவப்பும் கலந்த கருஞ்சிவப்பில்

---

1 அகம் : 301 : 14, 15. 2 பிங். நி : 2862

மெருகுள்ளது. இந்நிறம் தமிழரது உடலின் மரபுவழி நிறம். தோற்றகால மாந்தனது உடல் நிறமும் இஃதே. மாந்த உடலிய லார்க்கும் ஒப்ப முடிந்தது இது.

"மாவின் தளிர் புரை மேனியர்" (திருமுருகு: 144)

"மாஅத்து அம் தளிர் அன்ன நன் மா மேனி" (குறு:331) -எனப் பல தமிழ் இலக்கியங்களிலும் காண்கின்றோம். இந் நிறத்தை,

"கழி கவின் இளமாவின் தளிர் அன்னாய்"[1] -எனக் கழி கவினாக-மிகுந்த அழகாகக் கொண்டனர் தமிழர்.

இவ்வாறு நிறத் தொடர்பால் மட்டும் அன்று; இதன் பெயர் இம்மரத்தைத் தமிழரது உடைமையாகக் காட்டுகின்றது. 'மாங்காய். மாங்கனி' என்னுந் தமிழ்ச் சொற்களே மாங்கோ (*MANGO*) மாங்கி (*MONKE*) எனமேலை மொழிப்பெயர்களாயின. இதன்செடியியல் பெயர் மாங்கிஃபெரி (*MANGIFERA*). இதனிலும் தமிழ் ஒலிப்பைக் காணலாம். வடமொழியினர் இதனை 'ஆமிரம்' என்பர், ஆமிரம், மாமரம் என்பதன் திரிபாகும்.

இம்மரத்தின் தொன்மை இடங்களாக வடமலை அடிவாரம், கடாரம், மலை நாடு எனக் கருதினும், இதன் சொல், தமிழ் மலை யிடத்தையும் மண்ணிடத்தையுமே அடையாளங் காட்டுகின்றது.

தமிழ் இலக்கியங்களில் மாம் பூவைவிடத் தளிரே மிகுதியும் ஆட்சி கொண்டுள்ளது. "மாவின தளிர்"[2] என்றார் நல்லந்து வனார். பூக்களுக்குரிய பருவத்தைக் குறிப்பது போன்றமைந்த இளவேனிற் பத்தில்,

"எரிகால் இளந்தளிர் ஈனும் பொழுதே"[3] என இதன் தளிர் தோன்றும் பருவம் இளவேனில் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

இம்மரம் "பூத்த மாஅத்து"[4] என இதன் பூக்கொண்டும் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இப் பூ மிகச் சிறிய பூ. ஐந்து மிகச் சிறிய அகவிதழ்களைக் கொண்டது. சற்று செம்மை பாவிய மஞ்சள் நிறங்கொண்டது. கொத்துக் கொத்தாகப் பூக்கும். ஒவ் வொரு கொத்திலும்மேல் எல்லையாக 2000 பூக்கள் வரை இருக்கும் என்பர் செடியியலார். அத்துணைப்பூக்களும் வடுவாகுவன அல்ல.

அப் பூ,

---

1 கலி : 57 : 13
2 கலி : 28 : 17 : 132 : 11
3 ஐங் : 349
4 ஐங் : 10 : 4

"... ... ... ... கழனிக்
கருங்கோட்டு மாஅத்த அலங்குசினைப் புதுப் பூ
மயங்கு மழைத் துவலையின் தாஅம்[1] -என மழைத்துளி வீழ்வது போன்று உதிரும் எனப்பாடினார் பரணர். இப்பூ சிறிய மழைத்துளியின் அளவினதாகும். எனவே, இதனை 'மழைத் துளி மலர்' எனலாம்.

இம்மலர் மெல்லிய மணங்கொண்டது. கூடிப் புணர்ந்த தூய காதலர் உடல் பூரித்து மணக்கும். அம்மணத்தை இம் மணத்திற்கு உவமையாக்கி ஓரம்போகியார்

"எக்கர் மாஅத்துப் புதுப்பூம் பெருஞ்சினை
புணர்ந்தோர் மெய்ம்மணம் கமழும்[2] என்றார். இது கொண்டே போலும் காமவேளின் மலர்க்கணைகளில் மாம் பூவும் இணைக்கப்பட்டது. இப் பூங்கணை தைத்தால் "ஒள் சூதமலர் மெய்ப்பசலை உண்டாக்கும்"[3] என்று அம்பலவாணக் கவிராயரும், "நீள் பசலை மாம் பூ"[4] என ஒரு புகழேந்தியாரும் பாடினர்.

இம்மரம் அனைத்து நிலத்திலும் இடம்பெற்றது. ஆயினும் மிகுதியும் மருதநிலக் கருப்பொருளாகவே காணப்படுதலின் இது மருத நிலப் பூவாகும். இளவேனிலில் தளிர் தோன்றி வேனிலில் பூக்கும்.

மாமரத்தில் கனிமரம் என்றும், வடு, காய் மரம் என்றும் இக்காலத்தும் வழங்குவர். இதனை இலக்கியங்களும் காட்டு கின்றன. 'தேமா' என்பது தேம்-சுவையுடைய-மா எனக் கனி மரத்தைக் குறிக்கும். சங்க இலக்கியங்களில் 'தேமா' என்னும் பெயர்

"... — ...பலவின் கனியும்
வேறுபடக் கவினிய தேமாங்கனியும்"[5] எனக் கனித் தொடர்புடனேயே மிகப் பல இடங்களில் குறிக்கப்படுகின்றது. ஆங்கிலத்திலும் தேமா என்பதை *SWEET MANGO* என்றனர். 'மா' என்னும் பெயர்,

"நறு வடி (வடு) மாவின் பைந்துணர்[6] -என வடுவின் தொடர்புடனே பல்லிடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வகை வேறுபாட்டால் இருவகைப் பூவிலும் சிறிதளவு வேறுபாடு உண்டு.

---

1 அகம் : 236 : 6—8
2 ஐங் : 19.
3 அறப். ச : 90 : 2
4 இ. ச : 16
5 மது. கா : 527, 528
6 கலி : 41 : 44

ஓரே வகையில் சிறிதளவு வேறுபாடு கொண்ட மலர்களைத் தனித்தனியாகக் காந்தள்-தோன்றி-கோடல் என்றும், "கட்கமழ் நெய்தல்-மணிப்பூ நெய்தல்' என்றும் பாடியமை போன்று இம் மாவையும் கபிலர் "தேமா" (குறி. பா : 64) "கடிகமழ் கலிமா" (குறி : பா : 76) என இரு வகையாகப் பாடியுள்ளார்.

இவற்றில் 'கலிமா' என வடுச் சிறப்புடையதைத் தழைத்த தாகவும், 'கடிகமழ்' என மணங்கமழ்வதாகவும் குறித்திருப்பதும் நாட்டு நடப்பிலும் பொருத்தமாக உள்ளன.

தேமாங்காய், தேமாங்கனி, தேமாந்தண்பூ தேமாநறும்பூ என்றெல்லாம் யாப்பிலக்கணத்தில் மூவசை நான்கசைச் சீர்களின் பெயர்களாக இத் தேமா அமைந்தது,

## 33. நாறா வெண் மலர்.

### கரும்பு.

அதியமான் முன்னோர் கரும்பைக் கொண்டு வந்து பயிரிட்டதாக அவ்வையார்[1] பாடினார். அவர் 'வானத்து அமிழ்தம் போன்ற சுவைச்சாறுடைய கரும்பை இங்கு தந்தனர்' என்றார். இப்பாட்டின் பழைய உரைகாரர் வானம் என்பதை அமிழ்தத் திற்கு அடைமொழியாக்காது கரும்பிற்கு அடைமொழியாக்கிக் "கரும்பை விண்ணுலகத்தினின்றும் கொண்டுவந்து" என்று, கதை கட்டினார். எவர் ஏற்றாலும் செடியியல் அறிவு ஏற்க இயலாதது இது. எனவே, வேறு புலத்திலிருந்து கொண்டு வரப்பட்டது என்பதே கருத்து. அப்புலம் சோழநாடாகவும் இருக்கலாம்.

கரும்பிற்கு வேழம், கன்னல் எனும் பெயர்கள் இடைக் காலத்தவரால் வழங்கப்பட்டன. நிகண்டுகளும் குறித்துள்ளன.

வேழமும் கரும்பும் புல்லினம் என்ற வகையில் ஓரினத் தவை. ஆனால், இரண்டும் வெவ்வேறானவை.

"*கரைசேர் வேழம் கரும்பின் பூக்கும்*"[2] —என வேழத்தையும் கரும்பையும் வெவ்வேறாகவே சங்க இலக்கியங்களில் காணலாம்,

---

1 *புறம்* : 392 : 19—21 2 *ஐங்* : 12 : 1,

வேழம் உள்ளே கூடுள்ள நாணல் தட்டை வகை. கரும்பு கூடற்ற இனிய சாறுள்ளது. வேழத் தட்டை கரும்பின் அமைப்பில் இருப்பதால் இடைக்காலத்தார் 'வேழக் கரும்பு' என்றனர். சேக்கிழாரும்,

*"வேழக் கரும்பினொடு மென் கரும்பு தண்வயலில்"*[1] —என வேழக்கரும்பு என்றதோடு இரண்டின் வேறுபாட்டையும் காட்டினார். பிற்காலத்தவர் இதனைப் 'பேய்க் கரும்பு' என்றனர். எனவே, வேழம் வேறு; கரும்பு வேறு.

கன்னல் என்னுஞ் சொல் சங்க காலத்தில் நாழிகை அறியும் மண் வட்டிலைக் குறித்தது. கரும்பைக் குறிக்குஞ் சொல்லாக இல்லை. திருத்தக்கதேவர் 'கரும்பின் சாறு' என்னும் பொருளில் முதலில் கையாண்டார். நிகண்டுகள் கரும்பிற்கு இப்பெயரையும் சேர்த்தன. பின்னரே 'கன்னல்' என்னுஞ் சொல் கரும்பைக் குறிக்கப் பயன்பட்டது.

மூங்கில் போன்று கணுக்களைப் பெற்றுள்ள தோற்றத்தால் மூங்கிலுக்குரிய 'கழை' என்னும் சொல்லால் கரும்பைக் குறிக்கத் தொடங்கினர். 'வயலில் விளையும் மூங்கில்' என்பதாக "பழன வெதிர் (மூங்கில்)"[2] எனப்பட்டது. 'இக்கு' என்னும் பெயர், சுவை கருதி எழுந்த பெயர். யாவற்றையும் நோட்டமிட்டால் 'கரும்பு' என்னும் ஒன்றே இதற்குரிய பெயராகின்றது.

வயல் மூங்கில் என்ற வழக்கும்,

*"அகல் வயல் நீடு கழைக் கரும்பு"* (அகம் : 217 : 3, 4)

*"அகல்வயல் கிளைவிரி கரும்பின்"* (அகம் : 235 : 11, 12) என்னும் அகல்வயல் குறிப்பும் இதற்கு வேண்டிய நீர்ப்பிடிப்பும் இதன் மருத நிலவாழ்வைக் காட்டுவனவாகும். புல்லினமாகையால் இதன் பூ புதர்ப்பூவாம் நிலப்பூவாகும்,

*"பனிகடி கொண்ட பண்பில் வாடை"*[3] யால் இது மலர்வது குறிக்கப்படும். எனவே பனிப்பருவப் பூ.

சிறிய அளவில் பல அரும்புகளின் தொகுப்பு குத்திட்டு நிற்கும் தோற்றத்தை,

*"கரும்பின் வேல்போல் வெண்முகை"*[4] — என வேலைப் போன்றதாகப் பாடினர்.

---

1 பெரி. பு : ஏனாதி : 2 : 1.
2 ஐங் : 91.
3 அகம் : 235 : 15.
4 நற் : 366 : 8. மலை : 116.

இவ்வரும்புத் தொகுப்பு, கரும்பின் பசிய தாளால் மூடப் பட்டிருப்பதைச் சூல்கொண்ட பச்சைப் பாம்பாகக் கழார்க்கீரன் எயிற்றியனார் பாடினார். இத்தோற்றத்தைக் 'கூம்பு' என்னுஞ் சொல்லால்,

"*கனைத்த கரும்பின் கூம்பு பொதி அவிழ*"[1] – என்றார் அவர். பொதி அவிழ்ந்த பூ வெண்மையாகக் கவரிபோன்று காட்சியளிக்கும்.

"*நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ*
*கோடைப் பூளையின் வாடையொடு துயல்வர*"[2] – என்ற படி கோடைக்காலப் பஞ்சைப்போலக் காட்சிதரும். இப்பூங் கொத்து மழையில் நனைந்திருப்பதற்கு மழையில் சிறகுகள் பிசிராக வளைந்து நிற்கும் குருகை உவமை கூறினார் அவ்வெயிற் றியனார். ஆற்றின் கரைகளில் இப் பூ வரிசையாகப் பூத்துக் காற் றில் அசைந்தாடுவதைக் கண்ட உருத்திரங்கண்ணனார் காவிரிப் பூம்பட்டினத்துக் கடைவீதியின் இரு மருங்கிலும் உயர்த்தப்பட்டு அசைந்தாடும் வெண்மையான துணிக்கொடிகளுக்கு உவமை யாக்கினார்.[3] இவ்வாறெல்லாம் இதன் வெண்மை நிறமும், பஞ்சுத்தன்மையும், கொத்தின் வடிவமைப்பும் வண்ணிக்கப் பட்டன.

இதன் மென்மை கருதித் தூக்கணங்குருவியின் சேவல் தன் பேடையின் குஞ்சுப் பேற்றிற்காகக் கூட்டில் கொண்டுபோய் வைத்ததாம்.[4] இப் பூவை வஞ்சிமரக்கிளையில் உறங்கிய நாரை இரையாக அருந்தும்.[5]

இவ்வாறெல்லாம் பயன்படினும் இதற்குக் குறிக்கப் பட்டுள்ள குணம், மணம் இல்லாமைதான்.

"*தேம்பொதி கொண்ட தீங்கழைக் கரும்பின்*
*நாறா வெண் பூ*"[6] –என நாறாத—மணக்காத—பூவாகும் தீங்கழைக் கரும்பாகத் தன் இனிய சுவைச்சாற்றால் உலகத் திற்கே இனிப்பை வழங்கும் பெருமை இதற்குண்டு. ஆயினும் அப்பெருமை இப்பூவின் மணம் இன்மையால் குறைவதை நாலடியார்

---

1 குறு : 85 : 3.
2 அகம் : 217 : 4, 5.
3 பட். பா: 161, 162.
4 குறு : 85 : 2–6.
5 புறம் : 384 : 2, 3.
6 குறு : 85 : 3, 4.

*"தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி*
*தேங்கமழ் நாற்றம் இழந்தாங்கு —ஓங்கும்*
*உயர்குடியுட் பிறப்பின் என்னாம் பெயர்பொறிக்கும்*
*பேராண்மை இல்லாக் கடை"*[1] –என்று பாடி உயர்குடியில் பிறப்பினும் பேராண்மை இல்லாமைக்கு உவமையாக்கினார். இஃது இப்பூ தன் தாய்க்குப் பெற்றுத்தந்த சிறுமையாகும்.

மற்றொரு வகையிலும் இப்பூ விரும்பப்படாத ஒன்றாகும். கரும்பில் இது பூப்பதால் அதன் சாற்றுப் பிடிப்பு குறைவதை எண்ணிப் பயிரிடுவோர் பூப்பதை விரும்பார். இதற்குக் காரணியம் இதன் பூவொன்றிலேயே ஆண் பெண் உறுப்புகள் இணைந்திருக்கின்றமையுமாகும்.

என்னதான் மணமற்ற நாறா வெண்மலர் ஆயினும் 'வேலின் தோற்றம்போல விளங்கும் கரும்பின் ஒண்பூ அசையும் "நாடெனப்படுவது நினதே"[2] என நாட்டு வளம் கரும்பால் குறிக்கப்படும். நாறா வெண்மலராகிய இது நாட்டு வளத்தின் அறிகுறிப் பூவுமாகும்.

# 34. வெண்கவரி மலர்.

## வேழம்.

'வேழம்' என்பது பலபொருள் ஒருசொல். யானை, ஓர் இசை, மூங்கில் கரும்பு, கொறுக்காந் தட்டை ஆகியவற்றைக் குறிக்குஞ் சொல். இவற்றுள் மூங்கில், கரும்பு, தட்டை மூன்றும் பயிரினம்.

கரும்பிற்கும் வேழத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் கண்டோம். அதுபோன்றே வேழமும் மூங்கிலும் வேறுபாடு உடையவை. ஆனாலும், வேழம், வடிவமைப்பாலும் உள் கூட்டாலும் மூங்கில் போன்றதாகையால் மூங்கிலையும் குறிக்குஞ்சொல்லாயிற்று. "காம்பு (மூங்கில்) கண்டன்ன தூம்புடை வேழம்"[3] என்னும் அடியும் மூங்கில் தொடர்பைக் காட்டுகின்றது. "தூம்புடை வேழம்" என்றது உள் கூடாக இருப்பதைக் குறிப்பதாகும். யானை தன் முகக்கையைத் தூம்புஎன்னும் உள்துளையுடையதாகப் பெற்றுள்ளதால் அதற்கும் இச்சொல் அமைந்தது. எனவே, 'வழை'

1 நாலடி : 199.
2 புறம் : 35 : 9–12.
3 ஐங் : 20 : 3.

என்னும் சொல்லின் மூலப்பொருள் உள்துள்ளை உடைய்த்து என்பதாகின்றது.

சாற்றைக் கொண்ட கரும்பு 'மென் கரும்பு' என்றும் அவ்வகையில் வேறுபட்டுச் சாறில்லாத இது வேழக்கரும்பு என்றும் பாடப்பட்டன. இதனைப் பேய்க்கரும்பென்பர்.

இவ்வேழம் மூங்கில் அமைப்பில் குச்சியாக அமைந்ததால் அக்காலத்தில் வீட்டுக் கூரைக்கு வரிச்சுக் கம்பாகப் பயன் படுத்தினர்.[1]

எனவே, வேழம் என்பது தனியொன்றைக் குறிக்கும் பாங்கில் கொறுக்கைச்சி – கொறுக்காந்தட்டை எனப்படும் நாணலைக் குறிப்பதாகும்.

ஐங்குறுநூற்றில் 'வேழப்பத்து' என்னும் தலைப்பில் பத்து பாடல்கள் உள்ளன. அவற்றால் பல கருத்துகளைப் பெற முடிகின்றது. வேழப்பத்து என்பது மருதத்திணையில் அமைந்துள்ளது. அப்பாடல்களில் கழனியில் பூக்கும் என்றும், நீர்க்கரைகளில் பூக்கும் என்றும், மருதத் துறையில் நீராடும் மகளிர்க்குத் துணையாகும் என்றும் வயலைக் கொடி (பசலைக் கொடி) இதனைச் சுற்றும் என்றும் பாடப்படும். இவைகொண்டு இது மருதநிலப் பூ என அறியலாம்.

மூங்கில் இனத்தால் புல்லினமாகிய வேழம் புதர்ப்பூவாம் நிலப் பூவாகும். "*புதல்மிசை நுடங்கும் வேழ வெண்பூ*"[2] என்பதாலும இதனை உணரலாம்.

"*வளரா வாடை உணர்பு நனி தீண்டலின்*
*வேழ வெண்பூ விரிவன*"[3] — என இதன் மலர்ச்சி வளராவாடையில் குறிக்கப்பட்டுள்ளது. எனவே, முன்பனிக்காலத்தில் மலரும்.

"கரைசேர் வேழம் கரும்பின் பூக்கும் (ஐங். 12)

"வேழம் கரும்பின் அலமருங் கழனி" (ஐங் : 18)

— என்பன இப்பூ கரும்பின் பூவைப் போன்றது எனக் காட்டுகின்றன. கரும்பின் பூப்போன்றதாயினும் அதனைவிடச் சற்று அளவில் சிறியதாக, அதனைப்போன்ற மகாத்தாகப் பூக்கும். அக்கொத்து ஓர் ஒழுங்கான அமைப்புடையது, அதனால், "கொடிப் பூ வேழம்"[4] எனப்பட்டது. இங்கு, கொடி

1 பெரும்பாண் : 263
2 ஐங் : 17 : 1.
3 நற் : 241 : 4, 5.
4 ஐங் : 17, 19.

என்பது ஒழுங்கமைப்பைக் குறிக்குஞ் சொல், இவ்வொழுங்கமைப்பு கருதியே திருத்தக்க தேவர் ''கொடிக் கரும்பு'' [1] என்று பாடினார்.

''வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வெந்து வீசு கவரியின் கன்றிய'' (நற் : 241 : 5, 6)

''பரியுடை நன்மான் பொங்கு உளை (கவரி) அன்ன
அடைகரை வேழ வெண்பூ'' (ஐங் : 13)

''வெழ வெண் பூ வெள் உளை'' (ஐங் : 19)

— என்றெல்லாம் இதன் வெண்மை நிறம் குறிக்கப்படும். இத்துடன் ஒழுங்கமைப்புடன் கொத்தாகவும்அமைந்த தோற்றத்தையும் கொண்டு வெண் கவரியாகவும், குதிரையின் தலையில் ஒப்பனைக்குச் சூட்டப்படும் தூவிக் கவரியாகவும் கூறப்பட்டுள்ளது. இவற்றால் இது 'வெண் கவரி மலர்' ஆகின்றது.

இப்பூங்கொத்தின் தோற்ற வெண்மையாலும் குவிந்த ஒழுங்காலும் காற்றின் அலைச்சலாலும், ''*வேழ வெண் பூ விசும்பொறு குருகின் தோன்றும்*'' [2] என வானத்தில் பறக்கும் குருகு போன்று தோன்றுவதாகப் பாடப்பட்டது.

காற்றில் அசைந்தாடிப் பக்கத்தில் உள்ள மாமரத்தின் இளந் தளிர்களில் உராய்ந்து அவற்றை நுடங்க வைக்கும்' [3] என்று பாடியுள்ளனர்.

இஃதும் கரும்புப் பூப் போன்று மணமற்றதுதான். எனவே, சூடும் பூ அன்று. ஆயினும் பரத்தையர் தமக்கு இசைவாரை அறிய இதனைப் பயன்படுத்தினர். நள்ளிரவில் இப்பூவை விற்பது போன்று கையிற்கொண்டு திரிவர். எதிர்ப்படும் ஆடவரது கருத்தறிய இதனைக் கொடுத்துப் பார்ப்பர். அவர் ஏற்றால் தமக்கு இசைந்ததாகக் கொள்வர். இதனை ஓரம்போகியார்,

*''.... ... ... வேழ வெண்பூப் பகரும்*
*தண்துறை யூரன பெண்டிர் (பரத்தையர்)*
*துஞ்சூர் யாமத்தும் துயில் அறியலரே''* [4]

— எனப் பாடினார். இப் பாட்டில் வரும் 'பகரும்' என்பதற்கு 'விலைகூறுதல்' என்று பொருளாயினும், இவ்விடத்தில் இதற்குக் "கொள்வார் குறித்துக் கொடுக்கும்" என எழுதினர், இதன் கருத்து, தம்மைப் புணர்ச்சி இன்பத்திற்கு ஏற்றுக் கொள்பவரது இசைவைக் குறித்துக்

---

1 சீவ. சி : 1184.
2 ஐங் : 17.
3 ஐங் : 14.
4 ஐங் : 18.

கொடுத்துப் பார்ப்பர்' என்பதாகும். இவ்வகையில் இப் பூ நீர் நோட்டம் பார்க்கும் பூவாகப் பயன்பட்டது.

மணமற்றதாயினும் இலக்கிய மணம் வீசும் மலராகும். இலக்கியத்தில் தமிழ் இலக்கியத்திற்கு வெண்கவரி வீசும் மலராகும்.

இக்குடும்பத்தைச் சேர்ந்தனவாக இலக்கியத்தில் மயங்க வைக்கும் இரண்டு உள்ளன. அவை உந்தூழும் வேரலும் ஆகும்.

# 35. தன்னுரிமை மண மலர்.

## உந்தூழ்.

மூங்கில், புல்லினத்தில் முதற்பிறப்பு; பெரும்பிறப்புமாகும். மூங்கிலில் 30 இனம் உண்டெனச் செடியியலார் கணக்கிட்டுள்ளனர். மூங்கிலைக் குறிக்கத் தமிழில் 25 சொற்கள் உள்ளன. அவற்றுள் பொதுப்பொருளில் 13 சொற்கள் சங்க இலக்கியங்களில் வந்துள்ளன. அப்பெயர்கள் கரணியப் பெயர்களாகப் படினும் இனவகை குறித்தும் அப்பெயர்களைத் தமிழ்ச் சான்றோர் அமைத்திருப்பர் எனக்கொள்ள இடமுண்டு. இச் சொற்களும் தமிழ்ச் சான்றோரது செடியியல் அறிவைக் காட்டுவனவாகின்றன,

அவற்றுள்ளும் பூவைக் குறிக்கும் முகமாக இரண்டு வகைகளை இலக்கியங்கள் காட்டுகின்றன. ஒன்று உந்தூழ்; மற்றொன்று வேரல். முன்னது பெருமூங்கில்; பின்னது சிறு மூங்கில். கபிலர் குறிஞ்சிப்பாட்டில் இரண்டையும் தனித்தனியே குறித்துள்ளார்.

"தொத்துந்தூழ்"[1] -என்னும் கபிலர் தொடர் 'தொத்து + உந்தூழ்' என்றே பிரித்தற்கு உரியது. இதன்படி 'உந்தூழ்' என்பதே சொல். ஆனால், சில இடங்களில் புணர் மொழியைப் பிரித்ததில் 'முந்தூழ்' என்று கொண்டனர். மலைபடுகடாத்தில்,

"அலமருமுந்தூழ்"[2] – என்றுள்ளது. இத்தொடரை 'அலமரும் + உந்தூழ்'. என்றும் பிரிக்கலாம்; 'அலமரும் + முந்தூழ்' என்றும் பிரிக்கலாம். 'முந்தூழ்' என்றும் பிரித்து அச் சொல்லையும் வழங்கினர். அகநானூற்றில்,

---

1 குறி : 65.　　2 மலை : 132.

"... ... .... ... ... முன்றில்

(உ) முந்தூழ் ஆய்மலர் உதிர"[1] – என்றுள்ளது. இங்கும் 'உந்தூழ்' என்றிருப்பதே 'உதிர' என்று வரும் சீருக்கு நிறைவான மோனையாகும். குறுந்தொகையில்,

"தோன்று முந்தூழ்"[2] – என்றுள்ளதைத் தோன்றும் + உந்தூழ் என்று பிரிக்க வேண்டும். நச்சினார்க்கினியர் உந்தூழ் என்றே பல இடங்களிலும் கொண்டார். எவரோ ஒருவர் 'முந்தூழ்' என்று பிரித்து வழங்கிவிட்டமையால் அச்சொல்லையே நிகண்டுகளும் கையாண்டன. 'முந்தூழ்' என்பதை விட 'உந்தூழ்' என்பதற்குப் பொருட் பொருத்தம் உண்டு.

பெருமூங்கில் செடியியலின்படியும் நடப்பிலும் ஒரு நாளில் 3 அங்குலம் முதல் 16 அங்குலம் வரை வளர்ச்சிகொண்டது. கணுக்கணுவாக உந்துமுறையான நேர்ஒழுங்கில் வளரும் வளர்ச்சி கொண்டு உந்து + ஊழ் (முறை, ஒழுங்கு) எனப்பெயர்பெற்றது. எனவே, 'உந்தூழ்' என்பதே இதற்கு உரிய சொல். 'முந்தூழ்' பிறழப் பிரிபட்டதால் நேர்ந்த சொல்.

மூங்கில் இனம் குறிஞ்சி நிலத்தது. (சில வகை பாலை நிலத்தவை) எனவே, உந்தூழ் குறிஞ்சி நிலத்தைச் சார்ந்தது. மலையைக் குறிக்கும் 'வரை' என்னும்சொல் மூங்கிலுக்கும் உரியது. இரண்டினும் உள்ள பிறவித் தொடர்பைக் குறிப்பது இச்சொல்

"உந்தூழ் ஆய்மலர் உதிர ...
வாடை தூக்கும் வருபனி அற்சிரம்"[3]

–என இப் பூ உதிரும் பருவமாக முன்பனிக்காலம் குறிக்கப்படுகின்றது. இப்பூவின் பருவமும் முன்பனிக்காலமே.

இதற்கு 'ஆய்மலர்' என்னும் அடைமொழியைத் தந்தவர் நக்கீரனார். மேலும் கபிலர் இம்மலரை,

"உரிது நாறு அவிழ் தொத்து"[4] – என அடைமொழிகள் தந்து இதற்கு மூன்று விளக்கம் வைத்துள்ளார். உரிது நாறு = தனக்கு உரித்தாக நாறும்; அவிழ் = விரிந்த; தொத்து உந்தூழ் = கொத்தினை உடைய பெருமூங்கிற் பூ. இவ்வாறே நச்சினார்க்கினியர் பொருள் விரித்துள்ளார். இருபெரும் புலவர்களது அடைமொழிகளால் இப்பூ ஆராய்ந்தெடுக்கத்தகும் மலர் என்றும்,

---

1 அகம் : 78 : 7, 8.
2 குறு : 239 : 6.
3 அகம் : 78 : 8, 10.
4 குறி : பா : 65.

கொத்தாக உள்ளது என்றும் அறிவதோடு தனக்கென உரித்தாக ஒருவகை மணத்தை உடைய மலராகவும் கொள்ள நேர்கின்றது. எனவே 'தன்னுரிமை மண மலர்' எனலாம்.

இக்கொத்து சிறு சிறு பூக்கள் கதிராக அமைந்து சில கதிர்கள் கூடிய கொத்தாகும். இப்பூவின் நிறம் பற்றி இலக்கியத்தில் குறிப்பில்லை. என்றாலும் இதன் நிறம் பசிய வெண்மையாகக் காண்கின்றோம். குறிஞ்சிப்பாட்டில் தனிக்குறிப்புடன் இடம் பெற்றுள்ளமையால் அக்காலத்தில் சூடப்பட்டிருக்கும் எனக் கொள்ளலாம்.

பொதுவாக மூங்கில், பலவகையில் மக்கட்குப் பயன்படுவது. சிறப்பாக இதன் கணுவில் தோன்றி முற்றும் ஒருவகை விதை வெண்ணீல நிறங்கொண்டது, இது முத்துஎனப்படும். இதனால் முத்து விளையும்இடங்களில் மூங்கிலும் இடம்பெற்றது.

இப்பூவில் காய் தோன்றிக் கனியாகி அதிலிருந்து ஒரு வகை அரிசிதோன்றும் இது மூங்கிலரிசிஎனப்படும். மலைநாட்டுக் குறவர் இதனை உணவாகக் கொண்டனர். இவ்வரிசியை அடுத்து வரும் வேரலோடு காணவேண்டும்.

அரிசியையும் முத்தையும் தரும் சிறப்புடைய இதற்கு ஒரு குறையையும் ஒரு நம்பிக்கை காரணியமாகக் கூறுவர். மூங்கில் கூட்டமாகப் பூத்தால் நாட்டில் வற்கடம், வறுமை ஏற்படும் என்றொரு நம்பிக்கை உண்டு.

இந்நம்பிக்கை உந்தூழின் தன்னுரிமை மணத்தைக் கெடுக்கவில்லை. இதன் உரிமைபோன்று ஓர் உரிமையைக் கொண்டது, இதன் இனத்தைச் சேர்ந்த வேரல்.

# 36. அரிசி தரும் மலர்.

## வேரல்.

"*விரிமலர் ஆவிரை வேரல் சூரல்*"[1] – எனக் குறிஞ்சிப் பாட்டு வரிசையில் 'வேரல்' ஒரு பூவாகக் குறிக்கப்பட்டுள்ளது. இதனைச் 'சிறு மூங்கிற் பூ' என்றார் நச்சர். முன்கண்ட உந்தூழைப் 'பெருமூங்கில்' என்றே எழுதினார். வேரல், சிறு மூங்கில் என்பதை,

---

1 குறி : பா : 71.

*"முழுநெறி அணங்கிய நுண்கோல் வேரல்"*[1] – என்று பெருங்கௌசிகனார் கூறும் "நுண்கோல் வேரல்" என்பதாலும் அறியலாம். இவ்வடியால் இவ்வேரல்,

"வழிமுழுதும் பின்னி வளர்ந்த நுண்ணிய கோல்களை உடைய சிறுமூங்கில்" –என நச்சரால் விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு இது பின்னிவளர்வதால் தோப்புகளுக்கு வேலியாக அமைக்கப்பட்டது.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்" என்னும் குறுந் தொகை (18) போன்று நற்றிணையும் (232 :4) சூடாமணியும் (சீயவதை:227) வேரல் வேலியாக அமைவதைப் பாடியுள்ளன.

*"வேரல் பூவுடை அலங்கு சினை"*[2] – என நக்கீரர் இதன் பூவைக் குறித்துள்ளார். கபிலராலும் பாடப்பட்டுள்ளமையால் இதன் பூ உந்தூழின் பூ போன்று சூடவும் பயன்பட்டதை அறியலாம்.

வேரல், உந்தூழைப் போன்றே குறிஞ்சி நிலத்தில் முன்பனிப் பருவத்தில், பசியவெண்மை நிறத்தில் கொத்தாகப் பூக்கும்.

பொதுவாக மூங்கிலில் அரிசி விளைவதைக் கண்டோம். அவற்றுள்ளும் 'வேரல்' என்னும் சிறு மூங்கிலின் அரிசி குறிக் கத்தக்கது. மிகுதியும் இவ்வரிசியே விரும்பிக் கொள்ளப்பட்டது இதனை மற்றொரு சான்றாலும் உறுதியாக்கலாம். மூங்கில் அரிசிக்கு இரண்டு பெயர்களும் உள்ளன. ஒன்று தோரை; மற்றொன்று வேரல். வேரல் என்னும் பெயரைப் பெற்றமை கொண்டே அதன் பூ தரும் அரிசி சிறப்புடையதாகின்றது.

இப்பூ காயாகிக் கனியாகி உள்ளே அமைந்த வித்தே அரிசியாகின்றது. இவ்வகையில் இதனை 'அரிசி தரும் மலர்' எனலாம். மூங்கில்களில் அரிசி இதன் தனி உரிமை.

---

1 மலை : 228.   2 திருமுருகு : 297.

# 37. புல் அல்லா மலர்.

## நரந்தம்.

மலைஞாலத்தில் குமிழிப் பகுதியிலிருந்து எங்கும் 'நாரங்க வெள்ளம்' கிடைக்கும். நாரத்தம் பழச்சாறு கலந்த குடி நீர்தான் 'நாரங்க வெள்ளம்' எனப்படுவது. நாரத்தைக்கு 'நாரங்கம்' என்பது மலைஞாலத்தார்வழக்கு. பிங்கலமும்சூடாமணி நிகண்டும் இச்சொல்லைக் குறித்துள்ளன. நாரத்தையின் இலக்கியச் சொல் 'நரந்தம் – நரந்தை' 'நரந்தையின் மரூஉமொழி களே நாரத்தையும் நாரங்கமும்.

இலக்கியங்களில் 'நரந்தம்' என்பதற்கு 'நரந்தம் பூ' என்றும் 'நாரத்தம் பூ' என்றும் பொருள் விரிக்கப்பட்டது. கலியில் நச்சர் ''நரந்தப்பூ'' என்றார். குறிஞ்சிப்பாட்டில் ''நாரத்தம் பூ'' என்றார். சிலம்பில் அடியார்க்கு நல்லார் 'நரந்தைப் பூ' என்றார்; அருஞ்சொல்லுரைகாரர் 'நாரத்து' என்றார். எனவே, 'நரநதம்' என்பது நாரத்தையாகின்றது. அதிலும் மலைநாரத்தையைக் குறிக்கும். மலைநாட்டு நாரங்க வெள்ள வழக்கும் இதனைச் சொல்கின்றது.

நரந்தம் என்னும் பெயரில் ஒரு வகைப் புல் உண்டு. அது நறுமணம் உள்ளது. ''*நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி*'' [1]

— என்றபடி மணமுள்ள

அப்புல்லைக் கவரிமான் விரும்பித் தின்னும். அதன் மணத்திலும் சுவையிலும் மனம் வைத்த மான் கனவிலும் அப்புல்லைக் கண்டு மகிழுமாம். [2] இப்புல்லிலிருந்து வடித்தெடுக்கப்படும் பனி நீரை மலர் மாலைகளில் தெளித்து மணமேற்றுவர். இப்புல்லும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றது. இடத்திற்கேற்ப உரை யாசிரியர்கள் இப்புல்லைக குறிததுக் காட்டியுள்ளனர்.

குறிப்பிடத்தக்க மலர்களைத்தரும் மரங்களோடு இந் நரந்த மரமும் சேர்க்கப்பட்டு ''*நரந்தமும நாகமும் விரிமலர் பரப்பி*'' [3]
— என்பது போன்று இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சோலை களில் இம்மல ர்விளங்குவதை

காவே,

1 *புறம்* : 132 ; 4.
2 *பதிற்* : 11 ; 22—22
3 *மணி* : 3 : 162

*சுரும்பிமிர் தாதொடு தலைத்தலை மிகூஉ*
*நரந்த நறுமலர்''* [1] — என்றார் நல்லழிசியார். நரந்த் மரம் வேங்கை மரத்தண்டையில் பெரிதும் வளரும் போலும்.

செறிந்த மரங்களைக்கொண்ட பெரிய காவில்

*வேங்கைமரத்து மலர்கள் உதிர்ந்து கிடப்பவனவற்றுடன்*
*நரந்தம் பூவும் உதிர்ந்து பரவிக் கிடக்கும்* [2] — என மையோடக் கோவனார் என்பார் பாடியுள்ளார். நக்கீரரும்

*''புலிக்கேழ் உற்ற பூவிடை (வேங்கைப் பூவிடையே)*
*பெருஞ்சினை*
*நரந்த நறும்பூ நாள்மலர் உதிர''* [3] — என்று வேங்கையுடன் காட்டினார்.

இத்தொடர்புகளால், நரந்தம் பூ, கோட்டுப் பூ எனவும் குறிஞ்சி நிலப் பூ எனவும், வேங்கை மலரும் கார்காலத்தில் மலர்வது எனவும் பொருந்துகின்றது.

இப் பூ வெண்மை நிறங்கொண்டது. ஓரளவில் முல்லைப்பூ போன்று மணந்தருவது. இதன் மணத்தால் ''நறும்பூ,'' ''நாறு நரந்தை'' என்றெல்லாம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

அதியமான் நெடுமான் அஞ்சி,

'தான் காதலிப்பார்க்கு (அன்புடையார்க்கு) மாலை சூட்டுத லான் நரந்தம் பூ நாறும் கைகளை உடையவன்' [4] எனப்பட்டான், இக் கையால் தன்தலையை நீவி அன்புகாட்டியதை அவ்வையார்,

*''நரந்தம் நாறும் தன்கையால்*
*புலவு நாறும் என்தலை தைவருமன்னே''* [5] — என்று பாடினார்.

இப்பூவை மகளிர் கூந்தலில் சூடுவர்.

*''நரந்தம் நாறும் குவையிருங்கூந்தல்''* என்னும் தொடர் ஓரெழுத்தும் மாறுமல் பரணராலும்,[6] பனம்பாரனாராலும்[7] பாடப் பட்டுள்ளது. ஒரு தலைவன் காதலியுடன் குலவும்போது கூந்தலி லிருந்து நரந்தங்கோதையை விரலால் சுற்றி மணம்பெற்ற விரலை மோந்து மகிழ்ந்தானாம். [8]

---

1 பரி 416 : 14 : 16
2 பரி : 7 : 11 18.
3 அகம் : 141 : 25, 26.
4 புறம் : 285 பழைய உரை.
5 புறம் : 235 : 8, 9.
6 அகம் : 266 : 4.
7 குறு : 52 : 3.
8 கலி : 54 : 5 — 7.

*"நரந்தம் பல்காழ் கோதை சுற்றிய*
*ஐதமை பாணி வணர் கோட்டுச் சீறியாழ்"* [1] —என்பதால் யாழிற்கும் இதன் மாலை சூட்டப்பட்டதை அறிகின்றோம்.

பிற்காலத்தில் இப் பூ எவ்வகையிலும் பயன்படவில்லை. காப்பியக் காலம் வரை நரந்தம் குறிப்பிடத்தக்க மலராக உள்ளது. மணமுள்ள புல்லைவிட மிகுதியாகப் பாடப்பட்டது. புல் ஒன்று இதன் பெயரில் இருப்பதால் இது 'புல் அல்லாத பூ.

# 38. பீலி ஒண்பொறி மலர்.

## கருவிளை; செருவிளை.

'கருவிளை' என்னும் பெயரிலேயே கருமை விளைகின்றது. கபிலர் அதற்கு மேலும் "மணிப் பூங் கருவிளை"[2] —என அதன் பூவிற்கு நீல மணியின் நிறத்தை ஏற்றினார். இளவேட்டனார் என்பார் அதற்கு மேலும்,

*"மணிகண்டன்ன மாநிறக் கருவிளை ஒண் பூ"*[3] —என மணி, மாநிறம், ஒண்மை என அடுக்கினார். இவ்வாறு அடுக்கும் அளவில் இப் பூ கரு நீல – நிறங்கொண்டது.

மயில் தோகையில் கண் கண்ணாகப் பளபளப்பதைப் பொறி என்பர். அப்பொறியைப் போன்று இப்பூ வடிவமைப்பும் ஒளி விடும் கரு நீலமும் கொண்டதால்,

"பீலி ஒண்பொறிக் கருவிளை"[4] எனப்பட்டது. புதலாக வளர்ந்து பரவிப் பூத்திருக்கும். இதன் கொடி வாடைக்காற்றில் அசைவதை மயில் தோகை அசைந்தாடுவதாவும் பாடினார் கிள்ளிநியமங்கிழார் என்பார்.

நீல நிற நெய்தல் பூ மகளிர் கண்ணிற்கு உவமையாவது போன்று இக்கருவிளைப் பூவும் உவமையாகியது. மாற்றுப் பாங்கில்

"கண்ணெனக் கருவிளை மலர" (ஐங் : 464)
கருவிளைக் கண்போல் மாமலர்" (நற் : 262 : 1)

---

1 புறம் : 302 : 4, 5.
2 குறி. பா : 68
3 நற் : 221 : 1
4 குறுந் : 110

"கருவிளைக் கண்போற் பூத்தன" (கார் : 9)
-எனப் பலராலும் பொருத்தப்பட்டது.

உழவுத் தொழிலால் உடல் கருத்த வேளாளன் உடல் நிறத்தால், "கருவிளை புரையும் மேனியன்"[1] எனப்பட்டான். மேல் அகன்று அடி குவிந்த இதன் அமைப்பைக் கொண்டு புலவர் ஏறு மீனாட்சிசுந்தரனார், "கடிதடங் காக்கணமே"[2] எனப் பெண் குறிக்கு உவமையாக்கினார்.

இதற்கு உரைகாரர் காலத்திலேயே 'காக்கணம்' என்னும் பெயர் வழங்கலாயிற்று. கருவிளைக்கு மாறுபட்ட நிறங்கொண்ட வெண்மைப் பூ உண்டு. அது 'வெண்காக்கணம்' எனப்பட்டது. 'செரு' என்றால் 'மாறுபாடு' என்று பொருள். கருமைக்கு மாறுபட்ட வெண்மை கொண்ட காக்கணம் 'செருவிளை' எனப்பட்டது. குறிஞ்சிப்பாட்டில் "செருவிளை மணிப்பூங் கருவிளை"[3] -என இரண்டு வகை 'விளையும்' அடுத்தடுத்து வைக்கப்பட்டதன் நோக்கத்தை உணர்ந்த நச்சர் 'செருவிளை' என்பதற்கு 'வெண் காக்கணம்' எனப் பொருள் எழுதினார்.

இவ்வெண்காக்கணம் அருகிக் காணப்படுவது போன்றே இலக்கியங்களில் குறிஞ்சிப் பாட்டு ஒன்றில் ஓரிடத்தில் மட்டும் அருகி அமைந்துள்ளது. இப் பூ மருந்துக்குப் பயன்படும் இரும்பைக் குழம்பாக்க இம்மலர்ச்சாறு பயன்படும் என்பர்,

இஃதொரு கொடிப் பூ. புதலில் படர்வதாகப் பாடப் பட்டுள்ளது.

"தண்புனக் கருவிளை"[4] என்பதாலும் குறிஞ்சி நில மலர்களோடு கூட்டிப் பேசப்படுவதாலும் இது குறிஞ்சி நிலமலர்.

*"கருவிளை மலர ... ... ... ....*

*.... .... .... ... ... ... ... ... ...*

*சிதர் சினை தூங்கும் அற்சிரம்"*[5] -என்பதால் வாடைக் காற்று வீசும் முன்பனிக்காலம் இதன் பருவமாகும். முன்பனிக்கால வாடைக்காற்றால் இது பூப்பதையும் அசைந்தாடுவதையும் பாடியுள்ளனர்.

நாட்டு வழக்கில் 'காக்கட்டான், காக்கரட்டான்' என்பது ஆண்டாள் இதனைக் "கார்க்கோடப் பூ"[6] என்றாள். சங்கு

---

1 *சிலம்பு : 22 : 89*
2 *ஊ. ப. ப. அ : 79*
3 *குறி. பா : 68*
4 *நற் : 262 : 1*
5 *அகம் : 294 : 5, 11.*
6 *நாச்சியார் : 10 : 1.*

வடிவத்தில் இது தோன்றுவதால் வடமொழியாளர் 'சங்கு புட்பம்' என்றனர். 'காக்கொன்றை' என்றொரு வழக்கும் உண்டு. புட்ப விதி நூலார்,

> *''கருமுகைக் கருங்காக்கொன்றை*
> *முருகாரும் வெண்காக் கொன்றை''*[1]

என்றார். நிகண்டுகள் 'கண்ணி' என்றொரு பெயரையும் கூட்டிக் காட்டியுள்ளன. வேலியில் சூடுவாரற்றுப் படரினும் இலக்கியத்தில் தனது கருநீல நிறத்தாலும் வடிவமைப்பாலும் இடம் பிடித்துக் கொண்டு குறிஞ்சி மேடையிலும் கூடியது.

## 39. பாம்புப் பெயர் மலர்.

### நாகம்.

*''நாக நறுமரம்''*[2] – எனக் கொங்கு வேளிர் பாடியபடி இம்மரமே மணங்கொண்டது. அகில், சந்தனம் முதலிய மணந் தரும் மரங்களுடன் இந்நாகமும் சேர்த்துப் பேசப்படும். இதன் கை மணங் கருதியும், மிகு அனல் கருதியும் இதன் விறகு நெருப்பால் "நிணச்சோறு (பிரியாணி) சமைத்தனர்.

குறிஞ்சிப்பாட்டில் 83ஆம் அடியில் 'வழை' என்றொரு பூ குறிக்கப்பட்டுள்ளது. 94 ஆம் அடியில் 'நாகம்' உள்ளது. இரண்டும் வெவ்வேறு மலர்கள். திருத்தக்க தேவரும்,

*''நாகம் சார்ந்து வழையொடும் மரவ நீழல்''*[3] – என இரண்டையும் வெவ்வேறாகக் காட்டியுள்ளார். ''வழையே சுரபுன்னை''[4] என்னும் பிங்கலத்தின்படி 'வழை' என்பது சுரபுன்னையாகும். ஆனால், நச்சினார்க்கினியர் பிறழ உணர்ந்து ஒரு குழப்பம் செய்துள்ளார்.

நச்சர் பத்துப்பாட்டில் மூன்று பாட்டுகளிலும், கலித் தொகையிலும் சீவகசிந்தாமணியிலும் 'நாகம்' என்று வரும் இடங்களில் எல்லாம் ''சுரபுன்னை'' என்று பொருள் எழுதினார். ஆனால், அவரே, குறிஞ்சிப்பாட்டில் மட்டும் 'நாகம்' என்பதற்கு ''நாகப் பூ'' என்று எழுதினார். அதே குறிஞ்சிப்பாட்டில்

---

1 பு. வி: 3
2 பெருங் : இலா : 12 : 111.
3 சீவ. சி: 1569
4 பிங். நி: 2690

முன்னே வந்த 'வழை' என்பதற்குச் "சுரபுன்னை" என்று எழுதினார். வழைதான் சுரபுன்னை. இவ்வகையில் நச்சர் எழுதியது பொருத்தமானது. ஆனால், நாகம் சுரபுன்னை அன்று, பரிபாடலும்,

"*நல்லிணர் நாகம் நறவம் சுரபுன்னை*"[1] – என நாகமும் சுரபுன்னையும் வெவ்வேறானவை எனக் காட்டியுள்ளது,

இதுபோன்று கம்பரும் ஒன்று செய்துள்ளார். நெய்தல் நிலத்து மகளிராம் நுளைச்சியர் தலையில் புன்னை மலர் சூடியிருப்பதை,

"*நாகமும் நாறின நுளைச்சியர் ஐம்பால்*"[2] –எனப் புன்னையை நாகமாகப் பாடினார். புன்னையைப் புன்னாகம் என நிகண்டுகள் எழுதியிருப்பதும், புன்னாகம் என்பதை நாகமாகச் சிலர் கொண்டதுமே கம்பரை இவ்வாறு பிறழ எழுத வைத்தது. நிகண்டுகள் இதற்குக் காட்டும் பிறபெயர்களும் குழப்பமானவை, எனவே, அவற்றை விடுக்கலாம்,

இவற்றைக் கூர்ந்து நோக்கினால், நாகம் என்பது தனியொரு பெயர்கொண்ட மரம். குரங்குகள் தாவிக் குதித்து விளையாடும்,

"... ... .... ...*உயர்பெருஞ் சினை*[3] யை உடைய பெருமரம். மலையின் "*மீமிசை நாக நறு மலர்*"[4] எனப்படுவதுடன் பல இடங்களில் குறிஞ்சி நிலத் தொடர்பிலேயே குறிக்கப்படும். எனவே இது குறிஞ்சி நிலத்தது.

இம்மரம் மலர் அடைமொழியுடன்,

"மலர் நாகத்து" (பொருந்:209) என்றும்,

"நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்து" (சிறுபாண் :108) என்றும் குறிக்கப்படுவதுகொண்டு இம்மரம் குறிக்கத் தக்க மலராகின்றது. "நல்லிணர் நாகம்" என்னும் பரிபாடலின்படி இது கொத்தாகப் பூக்கும். "நறும்போது" "நறுமலர்", "நறு வீ" என்றெல்லாம் இம்மலர் நறுமண அடைமொழியுடன் குறிக்கப்படும்.

1 பரி. 12 : 80
5 கம்ப ; கார் : 48
3 பெரும் ; இலா : 15:5.
4 திருமுருகு : 301, 302.

மலர்களின் நிறங்களைத் தக்கவாறு குறிக்கும் திருத்தக்க தேவர்,

"*மணி மலர் நாகம்*"[1] – என்றுள்ளமை, இம்மலர் நீல மணிபோலும் நீல நிறங்கொண்டதைக் காட்டுகின்றது.

"*ஆசினி முதுசுளை கலாவ மீமிசை* (மலைமேலிருந்து)
*நாக நறுமலர் உதிர*"[2] –என நக்கீரர் ஆசினிப் பலாச் சுளைக் காலத்தில் நாக மலர் உதிர்வதைக் குறித்துள்ளார். எனவே, அப்பலா பழுக்கும் வேனிற் காலம் இதன் பருவமாகும்.

கடும்புனலில் அகப்பட்ட ஒருத்தியைக் காப்பாற்றப் பாய்ந்த ஒரு தலைவன் "நீள் நாக நறும் தண் தார்"[3] மார்பில் அணிந்திருத்ததைக் காண்கின்றோம். இம்மலர் மாலையாகியதை யும், நீள்மாலையாக மணத்துடன் குளிர்ந்து விளங்கியதையும் கொண்டு இதனைச் சூடும் மலர் எனலாம்.

இவ்வாறு குறிஞ்சி நிலத்துக் கோட்டு மலராக், வேனிற் பருவத்தில், நீல நிறக்கொத்தாக, நறுமணத்துடன் மலரும் தன்மைகொண்டது இம்மலர்,

நாகு என்னும் தமிழ்ச்சொல்லடியாகப் பிறந்த நாகம் வட சொல்லான பாம்பைக் குறிக்கும் நாகத்துடன் பொருத்தப்பட்டு

"*ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்* (பாம்பு)"[4] போன்ற மரம் எனப்பட்டதால், இம்மலரைப் 'பாம்புப்பெயர் மலர்' எனலாம்.

இந்நாகப் பெயர்கொண்ட புன்னாகமும், இதனுடன் பிறழ உணரப்பட்ட வழையும் தொடர்ந்து காணத்தக்கவை.

## 40. மாந்தைச் சோலை மலர்.

### புன்னாகம்.

நாக வகையைச் சேர்ந்தது புன்னாகம். புன்மை என்னும் அடைமொழி நாகமரத்தினும் இம்மரம் புல்லியது என்பதைக் கூறு கின்றது.

---

1 சீவ. சி: 1569.
2 திருமுருகு : 301, 302
3 கலி: 39 : 3.
4 புறி: 12; 4

*"புன்னாகச் சோலை புனல்தெங்கு சூழ்மாந்தை*
*நன்னாகம் நின்றலரும்"* [1] —என்னும் முத்தொள்ளாயிரப் பாடல் புன்னாகம் நாகத்தினின்றும் வேறானது என்பதையும், நன்னாகம் என்னும் அடைமொழியால் இதன் புன்மைத் தொடர்பையும் காட்டுகின்றது. சேரனாம் மலைநாட்டு மன்னனது நாட்டுத் தலைநகர்ச் சிறப்பைப் புன்னாகச் சோலையுடன் சுட்டுவதால் இம்மரம் சோலையாகச் சிறந்ததை உணரலாம். இதனைப் போன்றே "நாகப் படப்பை"[2] என நாகமும் தோப்பாக நிறைந்து வளர்வது.

*"வரையன புன்னாகம்"* [3] என்னும் பரிபாடல் கருத்தின்படி புன்னாகமும் நாகம் போன்று குறிஞ்சி நிலத்து மரம்.

இது நாகமர வகையில் புல்லியது எனினும் இதன் இனம் புன்னையாகக் கொள்ளப்பட்டது. நிகண்டுகள் புன்னாகத்தைப் புன்னையென்று காட்டுகின்றன. இருப்பினும் இதன் வேறுபாட்டை உணர்ந்த நச்சினார்க்கினியர் குறிஞ்சிப் பாட்டில் புன்னையினும் வேறாகக் குறிக்கப்படும் "நறும் புன்னாகம்" [4] என்பதற்குப் "புன்னை விசேடம்" என்று பொருள் கண்டார். எனவே, இது புன்னை இனத்தில் ஒரு தனித்தகுதி கொண்டது. பிற இலக்கியங்களும் புன்னாகத்தையும் புன்னையையும் இணைத்துப் பேசுவது போன்று தனித்தனியாக வெவ்வேறு மரங்களாகவும் காட்டுகின்றன.

ஆனால், குறிஞ்சிப் பாட்டின் பூப்பட்டியலில் இடம்பெற்றுப் "புன்னை விசேடம்" என்னும் ஒரு குறிப்பைப் பெற்றுள்ளதன்றி இதன் மலர் பற்றிய விவரம் ஏதும் தெரியக்கூடவில்லை. நறும் புன்னாகம் எனப்பட்டமை கொண்டு நாகமலர் போன்று இஃதும் மணங்கமழும் பூவாகின்றது. இனத்தால் புன்னையாயினும் பெயர், அடைமொழி, மலையிடம், நறுமணம் முதலியவற்றால் நாகமலர் போன்றதாகவே இதன் பிற விவரங்களையும் கொள்ள நேர்கின்றது.

---

1 முத் : சேரன்.
2 பெருங் : இலா : 15 : 6.
3 பரி : 11 : 16.
4 குறி : பா : 91.

# 41. அண்டிரன் முடி மலர்.

## வழை.

*"வரையன புன்னாகம்*
*கரையன சுரபுன்னை"* [1] — எனப் புன்னாகத்தை அடுத்துச் சுரபுன்னை அமைக்கப்பட்டுள்ளது. வண்ணனைப் போக்கில் அமைந்த இவ்வமைப்பு மட்டும் இவ்விரண்டையும் இணைத்துக்காட்டவில்லை. புன்னாகத்தைப் புன்னை இனமாகக் கண்டோம். 'சுரபுன்னை' என்னும் இதன் பெயரே இஃதும்புன்னை இனம் என்று கூறுகின்றது. 'சுரம்' என்னும் அடைமொழி, இது நெய்தல் நிலத்துப் புன்னை அன்று; 'சுரத்துப்புன்னை' எனவேறு படுத்துகின்றது.

இங்கு சுரம் என்றது காடு. மலைசார்ந்த காடு. கரையன என்றது இங்கு மலையடிவாரத்து வையையாற்றுக் கரை.

'சுரபுன்னை' என்பது வழையைக் குறிக்கும் என்பதை முன்னரும் கண்டோம். நச்சரும் புறநானூற்றுப் பழைய உரை காரரும் பிறரும் 'வழை" என்பதற்குச் 'சுரபுன்னை' என்றேபொருள் எழுதியுள்ளனர். நிகண்டுகளும் "வழை சுரபுன்னை" என்னும் ஒரு தொடராலேயே குறித்துள்ளன. இலக்கிய ஆட்சியிலும் 'வழை' என்பதே அதிக வழக்கு.

நாக மரத்தைப் போன்றே வழையும் மலை மரம். "சிலம்பின் வழை" "வழையமை சிலம்பு", "வழையமல் அடுக்கம்", "வழையமல் சாரல்" என்றெல்லாம் மலைப்பகுதிச் சார்பிலேயே வழை பாடப் பட்டுள்ளது.

திருத்தக்க தேவர் இம்மரத்தை அதன் காய்கொண்டு அடையாளங் கூறுகின்றார்- "குடம் புரை காய் வழை" [2] என்று இதன் காய் குடம் போன்றது என்று கூறியுள்ளார்.

"குறிஞ்சிப் பாட்டு இதன் மலரைக் "கொங்கு முதிர் நறு வழை" [3] என்று காட்ட அதற்கு நச்சினார்க்கினியர் "தாது முதிர்ந்த நறிய சுரபுன்னைப் பூ" என்று பொருள் எழுதி இம்மலரின் நறுமணத்தைக் குறித்தார். இவ்விடத்துடன் இம்மலர் பற்றிப் புறத்தில் முடமோசியாரால் குறிக்கப்பட்டுள்ள ஒன்றையும் காண்கின்றோம்.

---

1 *பரி* : 11 : 16, 17
2 *சீவ. சி* : 1918
3 *குறி: பா* : 83.

ஆய் அண்டிரன் என்பான் வழை என்னும் சுரபுன்னை மலரைத் தனது முடிப் பூவாக் கொண்டிருந்ததை,

*"வழைப் பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்"* 1

— எனப் பாடியுள்ளார். இது கொண்டு இம்மலர் சூடும் பூவாக அதிலும் மன்னனது அடையாளப் பூவாக அமைந்திருந்ததை அறிந்து இதனை 'அண்டிரன் முடிமலர்' என்கின்றோம்.

நாகத்துடன் தொடர்பாகப் பாடப்பட்டுள்ளமை கொண்டு இதன் பருவம் வேனிலாகலாம். புன்னைத் தொடர்பால் இதன் நிறம் வெண்மையாகவோ பொன்மையாகவோ அமைந்ததாகலாம்.

முடிமீதேறிய இம்மலர் தன் பெயரில் சிறப்பு ழகரத்தைப் பெற்றுத் தமிழின் மடிமீதும் தவழ்கின்றது.

## 42. எழினி முடி மலர்.

### கூவிளம்.

'வில்வம்' என வழங்கப்படும் மரவகையே சங்க இலக்கியங்களில் 'கூவிளம்' எனப்பட்டுள்ளது. குறிஞ்சிப் பாட்டில் வரும் 'கூவிளம்' என்பதற்கு நச்சர் "வில்வப் பூ"2 என்றே எழுதினார்.

இது விளாமர இனத்தைச் சார்ந்தது. 'தாளி' என்னும் கொடியொன்று உண்டு. அவ்வினத்தைச் சேர்ந்ததாக அதனினும் வேறான ஒரு கொடி 'கூதாளி' எனப்பட்டது போன்று விளத்தின் வேறான வில்வம் 'கூ' அடைமொழி சேர்த்துக் 'கூவிளம்' எனப் பட்டது.

'விளம்' என்பது சங்க இலக்கியங்களில் அதன் சுவையான பழம், மரம், இலைபற்றிப் பேசப்படும்; பூவைப்பற்றி எக்குறிப்பும் இல்லை. கூவிளம் மலைமல்லிகை யாகிய குளவியோடு இணைத்துப் பாடப்படுவது.

*"... .... ... .... .... குளவியொடு*

*கூவிளந் ததைந்த கண்ணியன்"*3 – எனப் பெருங்குன்றூர் கிழார் பாடலால் கூவிளப் பூ ஆடவரால் கண்ணியாகச் சூடப் பட்டதை அறியலாம்.

---

1 புறம் : 131 : 2

2 குறி. பா : 65

3 நற் : 118 : 8, 9

இது மலைநாட்டு மரமாகக் குளவியொடு குறிஞ்சிநிலத் தொடர்புடன் இலக்கியங்களில் அமைந்துள்ளது. கார்காலத்தில் பூப்பது. சிறிய சிறிய மலர்களாகக் கொத்துப் பூவாக மலரும். மஞ்சள் நிறங்கொண்டது. நிறத்தாலும் அமைப்பாலும் எடுப்பான மலர் அன்று. வில்வம் என்னும் இலையே சைவ மதத்தாரால் முழுதும் சிவ வழிபாட்டிற்குக் கொள்ளப்படும். தேவார மூவரும் சைவச் சான்றோரும் இதனை 'வில்வம்' என்றும் 'கூவிளம்' என்றும் பாடியுள்ளனர். முழுதும் இதன் இலையே குறிக்கப்படு வதால் கண்ணியாக இவ்விலையும் சூடப்பட்டிருக்கலாம்.

வள்ளல்களுள் ஒருவனான எழினி என்பான் குதிரை மலைக்குத் தலைவன். அவன் தன் அடையாளப் பூவாக இதனைச் சூடினான், இதனை,

*"ஊரா தேந்திய குதிரைக் கூர்வேல்*
*கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி"*[1] – எனப் பெருஞ்சித்திரனார் பாடினார்.

*"நாறு கூவிள நாகுவெண் மதியத்தொடு*
*ஆறு சூடும் அமரர் பிரான்"*[2] –எனச் சுந்தரர் சிவன் சூடும் மலராகப் பாடினார். பிறரும் பாடியுள்ளனர். எனவே, இது சூடும் பூவும் சூட்டும் பூவுமாகும்.

## 43. வாள் வீர மலர்.

### கூவிரம்.

குறிஞ்சிப் பாட்டில், "எரிபுரை எறுழம் சுள்ளி கூவிரம்"[3] –எனக் 'கூவிரம்' என்றொரு பூ வந்துள்ளது. இதற்குக் "கூவிரப் பூ" என்று நச்சர் பொருள் எழுதியுள்ளார்.

கூவிளம் போன்று 'கூ' என்னும் அடைமொழி பெற்றது இது. இலக்கியப் பாடல்களில் வேறெங்கும் இப்பெயர் இல்லை.

'வீரை' என்றொரு பூ உண்டு. அஃதொரு பாலை நிலத்து மரப் பூ. அதன் இனத்தைச் சேர்ந்த ஒரு மரத்தின் காய் வாள் போன்று பட்டையாக நீண்டது. அதனால் அது 'வாள்வீரம்' எனப்பட்டது. அவரை வகையில் ஒரு கொடி வாள்போன்று

---

1 புறம் : 158 : 8, 9.
2 சுந். தே : சாய் ; 3.
3 குறி. பா : 66.

க்காய்ப்பது,'அது வாள் அவரைக்காய்-வாள் அவரங்காய்-வாளவரங் காய், எனப்படும். அதுபோன்றே வாள்வீரமும் பெயர்பெற்றது.

பரிபாடலில்,

"*மனைமாமரம் வாள்வீரம்*"[1] --என வருகின்றது. இதற்குப் பரிமேலழகர் "வாள்வீரம் என்னும் மரம்; கூவிளை" என்றார். வாள்வீரம் எவ்வகையிலும் 'கூவிளை' என்னும் 'கூவிளம்' ஆகாது. 'கூவிரை' என்பதே 'கூவிளை' எனப் பாடவேறுபாடு ஆகியிருக்கலாம்.

பரிபாடலில் குறிக்கப்பட்ட வாள்வீரம் மலையிலிருந்து வரும் மலர்களுடன் குறிக்கப்படுகின்றது. எனவே, இது குறிஞ்சி நிலத்தது. 'குறிஞ்சி நிலத்துக் கோட்டுப் பூ என்பதன்றி வெறொன்றும் இம்மலர் பற்றி அறிதற்கில்லை.

சொல்லால் வாள் வீரத்தோடு விளங்கும் பூ கூவிரம்.

## 44. நிணக்குடர் மலர்.

### கணவிரம்.

'அலர்தலை உடையது' என்னும் பொருளில் மலருக்கு காரணப் பொதுப்பெயராக 'அலரி' என்றொரு பெயர் உண்டு. "கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி" என அகத்தில் வரும் அலரி இத்தகையது. இச்சொல்லே காரணச் சிறப்புப் பெயராகத் தனியொரு மலரைக் குறிக்கப் பயன்பட்டது, இஃது ஒரு குற்றுச் செடி. வெள்ளை, மஞ்சள், சிவப்பு ஆகிய மூன்று நிறங்களில் பூக்கும். சிவப்பு நிறச்செவ்வலரி, 'கணவிரி' எனப்படும். பரிபாடல் "கணவிரி"[2] என்கின்றது. இதற்குப் பரிமேலழகர் 'செவ்வலரி' என்று பொருள் எழுதினார்.

அலரிப் பூ அடுக்குத் தொகுப்பாக அலர்வது – விரிவது கணம் (தொகுப்பு, அடுக்கு) விரி என்னும் பெயர் பொருத்தமாகின்றது. அலரிக்கு 'அடுக்கு' என்றொரு பெயரையும் நிகண்டுகள் கூறுகின்றன.

கணவிரி என்பதே ஆவிரை, கூவிரை என்பது போன்று கணவிரை எனப்படும். கணவிரம் என்பதும் இலக்கியப் பெயர். திருமுருகாற்றுப்படையில் வரும் 'கணவிரம்' என்பதற்கு நச்சர்

---

1 *பரி* : 11 : 19. 2 *பரி* : 11 : 20

'செவ்வலரி' என்றே எழுதினார். கணவிரத்தையே 'கணவீரம்' என்றனர். நிகண்டுகள் காட்டும் "கரவீரம்' முதலியவை வடசொற்கள். பரஞ்சோதியார் "செழுங்கரவீரம்" என்று கையாண்டார்.

'செவ்வலரி' என்பதே இதன் நிறத்தைக் கூறுகின்றது. பாலைநில வழியில் கொள்ளையடிப்பவர் வழிச் செல்வோரைத் தம் கணையால் அடித்து வீழ்த்துவர். வீழ்ந்தவர் குருதி கொப்பளிப்பக் கிடந்ததை மாமூலனார்,

*"கணவிர மாலை இடூஉக் கழிந்தன்ன*
*புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்"*[1] – என்றார். கணவிரப் பூமாலை புண்ணுமிழ் குருதி போன்றது. மணிமேகலையில் சுதமதி என்பாளது தந்தையைப் புனிற்று ஆ ஒன்று முட்டிக் குடரைச் சரித்தது. குருதி கொட்டும் குடரைக் கையில் ஏந்தி நின்றவனைச் சாத்தனார்,

*"கணவிர மாலை கைக்கொண் டன்ன*
*நிணம் நீடு பெருங்குடர் கையகத் தேந்தி"*[2] – என்றார். இவ்வாறு குருதி தோய்ந்த குடருக்கு உவமையாகியது. இதனை 'நிணக்குடர் மலர்' எனலாம்.

இம்மலர் ஓரளவில் மணமுடையதாயினும் தூய நன்மணம் ஆகாது. 'அலரி' என்னுஞ்சொல் 'அரளி' எனத் திரிந்து வழங்கப்படும். இவ்வரளிக்குப் 'பீநாறி' என்றொரு நாட்டு வழக்கு உண்டு. எனவே, இதனை ஒப்பனை கருதி விரும்பிச் சூடவில்லை. ஆயினும் "கணவிர மாலை இடூஉக் கழிந்தன்ன" என்பது இப் பூமாலை அணியப்பட்டுக் கழித்து இடப்பட்டமை குறிக்கப்படுகின்றது. கல்லாடனார்,

*"போதவிழ் அலரி நாரில் தொடுத்துத்*
*தபங்கிரும் பித்தை பொலியச் சூடி"*[3] –என நாரில் கட்டிக் குஞ்சியில் அழகோடு விளங்கச் சூடியதாகப் பாடியுள்ளார். இங்குள்ள சூழலையும் பிறவற்றையும் நோக்கும்போது மிக எளியவர் ஆங்காங்கு கிடைக்கும் மலரைச் சூடிய வகையாகக் கொள்ள வேண்டியுள்ளது. குறிஞ்சிப் பாட்டில் இப்பூ இப்பெயரில் இடம்பெறவில்லை.

சிவபெருமானுக்குரிய மலர்களில் இஃதும் ஒன்றாகி எண் மாமலர்களில் ஒன்றாக இடம்பெற்றுள்ளது. சிவன், பித்தன் எனப்

---

1 அகம் : 31 : 9, 10.
2 மணி : 5 : 48, 49
3 புறம் : 371 : 3, 4.

படுவதால் பித்தர் இம்மலரால் ஆகிய மாலையைச் சூடியதை மணிமேகலை,

"கணவிர மாலையில் கட்டிய திரள்புயன்"[1] - என்றது.

முருகனுக்கு அமைக்கும் களவழிபாட்டில்.

"பெருந்தண் கணவிர நறுந்தண் மாலை"யை[2] - ஒத்த அளவில் அறுத்துக் கள ஒப்பனையாகத் தொங்க விடப்பட்டிருந்ததை நக்கீரர் பாடியுள்ளார். இம்மலர் பாலை திணைத் தொடர்பில் பாடப்படுவதால் இது பாலைநில மலர், ஆண்டு முழுவதும் பூக்குமாயினும் வேனிற்பருவம் இதற்குரியது.

இம்மலரால் பக்குவமாக்கப்படும் மருந்து பல நோய்களைத் தீர்க்கும் என அகத்தியர் குணபாடம் கூறுகின்றது. ஆயினும், இதில் தோன்றும் மஞ்சள் நிறச் சாறு கொடிய நஞ்சாகும்.

இக்காலத்தில் உரோசா மலர்த் தோற்றத்திற்காக இம்மலரைக் கலப்படமாக மாலையாக்கி விற்கின்றனர். வழிபாட்டிற்கும் மருந்திற்கும் பயன்படுகின்றது. நஞ்சானாலும் நோய் தீர்க்கும் தகுதி பெற்றது.

## 45. வரகுப் பொரி மலர்.
## தெறுழ் வீ.

சங்க இலக்கியங்களில் மட்டும் வரும் மலர்களில் 'தெறுழ் வீ' ஒன்று. கபிலர் புறநானூற்றில்,

"கார்பெயல் தலைஇய காண்பின் காலைக்
களிற்றுமுக வரியில் தெறுழ்வீ பூப்ப"[3] — என இப்பூவை விளக்கியுள்ளார். இதுகொண்டு 'கார்காலத் தொடக்கத்தில் இது பூக்கும்; கண்ணுக்கினிய காலைப் போதில் பூக்கும். களிற்றின் நெற்றியில் தோன்றும் புள்ளிகளைப்போன்ற வடிவத்தில் பூக்கும். அப்புள்ளியின் மஞ்சள் நிறத்தில் பூக்கும்' என்றெல்லாம் அறிய முடிகின்றது.

இவ்வடிகட்கு உரை எழுதிய பழைய உரைகாரர், "தெறுழ் என்பது காட்டகத்தொரு கொடி; புளிமா என்றுரைப்பாரும் உளர்" என்றார். இது கொடி வகைதான் என்பதை மருதன் இளநாகனார் பாடலால் கொள்ள முடிகின்றது. அவர்,

1 மணி. மலர்வனம்: 104
2 திருமுருகு: 236, 237
3 புறம் 119: 1, 2.

'கார்காலப் பெருமழையில் தோய்ந்ததால் தன் நிறம் பசந்த 'தெறுழ்வீ' தன் புதல்மேல் உதிர்ந்து புதலின் நீல நிறத்தைப் பசந்த வெண்மையாக்கியது' [1]

—என்று பாடியுள்ளமை

கொண்டு இது புதலாக வளர்ந்து படருங்கொடி என்றும், மழையால் நிறம் பசப்புறும் என்றும் அறியலாம்.

*"... ... .... ... அரும்பவிழ்ந்து*
*ஈர்ந்தண் புறவில் தெறுழ்வீ மலர்ந்தன"* [2]

— என்னுங் கண்ணங்கூத்தனார்

பாடலால் புறவாம் முல்லைநிலத்தில் பூப்பதை அறிகின்றோம். இங்கு, இப்பூவிற்கு உவமையாக,

"கருங்கால் வரகின் பொரிப்போல்" என வரகரிசியைப் பொரித்தெடுத்த தோற்றம் கூறப்பட்டுள்ளது. முன்னே சொல்லப்பட்டகளிற்றின் முகவரிக்கு இஃதும் ஒத்ததாகும். இதுவடிவுவமை. இவ்வுவமையால் இதனை 'வரகுப் பொரி மலர்' எனலாம். "நல்லிணர்த் தெறுழ்வீ" [3] என்றபடி கொத்தாகப் பூக்கும்.

இதன் பெயர் குறிக்கப்படும் மூன்று இடங்களிலும் 'வீ' என்னும் சொல் சேர்த்துத் "தெறுழ் வீ" என்றே குறிக்கப்பட்டுள்ளமை இதற்கொரு தனிக்குறிப்பாகின்றது.

## 46. எரிபுரை மலர்.

### எறுழம்.

கபிலர் குறிஞ்சிப்பாட்டில் "எரிபுரை எறுழம்" [4] எனக் குறித்துள்ளார். ஐங்குறுநூற்றில் ஒருபாட்டில்,

*"... ... ... விரியிணர்க்*
*கால்எறுழ் ஒள்வீ தாய் முருகமர் மாமலை"* [5]

—என்றுள்ளது.

இம்மலர் குறிஞ்சி நிலத்தில் பூக்கும் கோட்டுப் பூ ('தாய்' என்றதால்) என்றும் கொத்தாகப் பூக்கும் என்றும் ஆகின்றது. கபிலரது "எரி புரை" என்னும் அடைமொழியால் தீப்போன்று

---

1 நற் : 302 : 4, 5.
2 கார் : 25.
3 நற் : 302 : 4.
4 குறி. பா : 66
5 ஐங் : 308

செம்மை நிறங்கொண்டது என்றாகும். நச்சர் "நெருப்பையொத்த எறுழம் பூ" என்றே பொருள் தந்தார்.

ஒன்று இங்கே கருத வேண்டியுள்ளது. இதனைப் பாடிய கபிலர் முன் கண்ட "தெறுழ் வீ' யைப் புறத்தில் வண்ணித்தும் உள்ளார். ஆனால் அவர் தமது குறிஞ்சி மேடையில் இப்பூவை வைத்தாரல்லர். மற்றையோரால் தெளிவாகவோ குறிப்பாகவோ பேசப்படா எறுழத்தைக் கூறித் தம்மாலேயே பிறிதோரிடத்தில் வண்ணிக்கப்பட்டுள்ள தெறுழ் வீயை வைக்காது விடுவாரோ என்னும் வினா எழுதல் இயல்பு. இவ் வினாவால் குறிஞ்சிப்பாட்டிலும் 'தெறுழம்' எனப்பட்டதுதான் பின்னர் 'எறுழம்' ஆக மாறிற்றோ என்னும் ஐயம் எழலாம். ஆனால் "எரிபுரை" என்னும் நெருப்பு நிற அடைமொழி தெறுழ்வீக்குப் பொருந்தவில்லை.

எனவே, இதனைத் தனியொரு பூவாகக்கொண்டு குறிஞ்சி நிலப் பூவாக, கார்காலத்ததாக, இணராக, செம்மை நிறத்ததாக, கோட்டுப் பூவாகக் கொள்ளவேண்டியுள்ளது.

# 47. கோழிக் கால் முள் மலர்.

## சண்பகம்.

நக்கீரர், கபிலர், நல்லந்துவனார் என்போர் சங்கப் புலவர்களில் நன்கு அறிமுகமான புலமைப் பெருமக்கள். மூவரும் ஒத்துப் பேசி முடிவெடுத்தது போன்று சண்பகப் பூவை ஒரு தொடரால் அறிமுகப்படுத்தியுள்ளனர்.

"பெருந்தண் சண்பகம்" என்பது அத்தொடர். இத்தொடரால் சண்பகப் பூ பெருமைக்குரியது – சற்றுப் பெரியது. குளிர்ச்சியானது என அறிமுகமாகின்றது. மற்றையோரும், "பெருஞ் சண்பகம்," "சண்பக நிரை தண்பதம்," "மணங்கமழ் சண்பகம்" 'நாறு இணர்ச் சினைய சண்பகம்" "உயர் சண்பகம்" — என்றெல்லாம் சிறப்பாகப் பாடியுள்ளனர்.

நிகண்டுகள் ஒருமுகமாக இதற்குச் 'சம்பகம்' என்ற மறுபெயரைக் குறித்தாலும் 'சண்பகம்' என்பதே இலக்கிய வழக்கு. சில சிறு நூல்களன்றிச் சங்கம் முதல் காப்பியம் முதலியவற்றிலெல்லாம் 'சண்பகம்' என்றே உள்ளது.

ஓர் உவமை இப்பூவின் வடிவமைப்பையும் நிறத்தையும் அறிமுகப்படுத்துகின்றது.

"... .... .... .... உயர் சண்பகம்

கூடு கோழிக் கொழு முள் அரும்பின"[1] —என்னும் திருத்தக்க தேவர் உவமை, இவ்வரும்பு போர்ச்சேவலின் காலின் பின்னே உள்ள கொழுத்த முள்ளைப் போன்றதெனத் தெளிவாக இதன் உருவத்தைக் காட்டுகின்றது. நிறத்தாலும் இப்பூ அம்முள் போன்றது. இத்துடன் நல்லந்துவனார் சிவபெருமான் நிறத்தைக் குறித்து,

"அரும்பெறல் ஆதிரையான் (சிவன்) அணிபெற (நிறஅழகைப் பெற) மலர்ந்த

பெருந்தண் சண்பகம்"[2] —என்றார். சேவலின் கால் முள் மஞ்சள் பாவிய செம்மை சிவன் நிறம் கருஞ்செம்மை அன்று; செம்மை. சண்பகத்தின் நிறம் இவ்விரண்டிற்கும் பெருமளவில் பொருந்தும். மஞ்சள் பாவிய செம்மை என்பதும் பொருந்துகின்றது. இதில் 'வெண்மைச் சண்பகம் உண்டு' என்பர்.

இப் பூ தனிப் பூவளவில் சற்று பெரியது. ஆண்டாள் பாடியது போன்று குயில் கோதும் அளவுடையது.[3] சிவனது நிறத்தைக் குறித்த கலிப்பாடல்,

"இப் பூ தன் மலர்ச்சிக்குரிய இளவேனிலில் பொய்க்காமல் மலர்ந்தது போன்று தலைவனும் சொன்ன சொல் பொய்க்காது வருவான்" என்னும் கருத்தையும் வழங்குகின்றது.

இளவேனிற் பருவத்தில் மலரும் இம்மலரும் வேங்கை முதலியவற்றோடு பேசப்படினும் நச்சர் முதலிய உரையாசிரியர்கள் இதனைப் பாலை நிலத்துக் கருப்பொருளாகக் குறித்துள்ளனர்.

மேலே கண்ட கலித்தொகையின் 150 ஆவது பாடலில் வரும் கருப் பொருள் இச்சண்பகம் ஒன்றுதான். இதன் உரையிறுதியில் நச்சர்,

"இது பாலைக்குரிய முதலுங் கருவும் வந்து ..."[4] என்றார். இருப்பினும் குறிஞ்சி நிலத்துப் பகுதியிலும் இது குறிக்கப்படுவதால் குறிஞ்சி திரிந்த பாலையே இதற்குரிய நிலமாகும்

இப் பூ மணம் மிக்கது என்று கண்டோம். முச்சிக் கொண்டையில் செருகிக்கொள்வர்.[5] சண்பக மாலையையும் அணிவர்.

---

1 சீவ. சி : 1650.
2 கலி : 150 : 20, 21.
3 நாச்சி : குயில் : 2
4 கலி : 150 : 22, 23 உரை
5 திருமுருகு : 26, 27.

வண்டுண்ணா மலர்களின் பட்டியலில் சண்பகத்திற்கே முதலிடம் உண்டு. வண்டு விடு தூதில் கச்சியப்ப முனிவரும் வண்டைப் பார்த்து,

"*கானிவர் சண்பகமும் கால் உழக்கா*"[1] என்றார். இக் கருத்தைப்பிற்கால இலக்கியங்களில் — அவற்றிலும் புராணங் களில் பரக்கக் காணலாம். ஆனால்,

"வண்டறைஇய சண்பகம்" (பரி : 11 : 18)

"வண்டிமிர் சண்பகம்" (திருவிளை : தருமி : 7 : 3)

— என்பன போன்று பல்வகை இலக்கியங்களும் வண்டு மூசுவதைக் காட்டுகின்றன. எனவே, வேங்கையில் வண்டுபற்றி முன்னே குறித்தவற்றையே இதற்கும் கொள்ளவேண்டும். சண்பகத்தில் வண்டு மொய்க்காது என்பது மன அளவேயாகும்.

இப் பூ, பூசெய்க்குரிய எண்மா மலர்களில் ஒன்று. எனவே, தேவாரத்தில் பாடப்பட்டது. சிவனுக்குரிய மலர். பெரியாழ்வாரும் தம் இறைப்பிள்ளையைச் "சம்பகப் பூ சூட்ட வாராய்" என்று அழைத்தார். பிற்காலப் பாண்டியமன்னனாகிய வங்கிய சூடாமணி மாறன் என்பான் சிவனது பூசெய்க்காகச் சண்பக மரம் நிறைந்த பூஞ்சோலையை உருவாக்கி இப்பூ கொண்டு வழிபட்டுச் 'சண்பக மாறன்' எனப்பெயர்பெற்றான். பூசெயைப் பெற்ற சிவபெருமானும் 'சண்பக சுந்தரர்' என்று பெயர் பெற்றார்.

தஞ்சை மாவட்டத்து மன்னார்குடிக்குச் சண்பகக் காடு என்னும்பொருளில் 'சண்பகாடவி' என்பதொரு புராணப்பெயர். அங்குள்ள திருமாலியக் கோவில் அன்னைக்கடவுள் பெயர் 'சண்பகத்தாயார்' என்பது. அக்கோவில் திருமரம் சண்பகமரம்.

இப்பூ மருத்துவத்திலும் பங்கு கொண்டது. இப் பூ உடல் மறுவையும் பருவையும் நீக்கும் என வள்ளலார் இராமலிங்கரும் எழுதியுள்ளார்.

கவிமரபில் இப்பூ மகளிர் நிழல் பட்டால் மலரும் என்பர். ஆனால், கைம்பெண்ணான மகளிர்க்கு இம்மலர் காய்ந்து வாடிய வாடலாம் சாம்பல் உவமையாயிற்று.

சீவகன் கதையில் கட்டியங்காரன் இறந்ததும் அவனது உரிமை மகளிர் நோன்பு மேற்கொண்டதைக் கூறும் திருத்தக்க தேவர்,

---

1 வ. வி. தூ : கண்ணி 385

"*மாதரார் மயில் அன்னவர் சண்பகச் சாம்பல் (வீழ்ந்து வாடியபூ) ஒத்தார்*"[1] என்றார்.

பெருந்தண் சண்பகத்தின் வாடலும் இலக்கியம் பெற்றது.

## 48. வைர வாள் மலர்.

### நந்திவட்டம்.

'நந்தி' என்னும் சுருக்கப் பெயர்பெற்ற இதனை இலக்கியம் 'நந்திவட்டம்' என்னும். சங்க இலக்கியத்தில் குறிஞ்சிப்பாட்டில் மட்டும் 'நந்தி'[2] எனப்படும். இதனை நச்சர் "நந்தியாவட்டப் பூ" என்றார். நிகண்டுகள் 'நந்தியா வர்த்தம்' என வட்டத்தை வடசொல் வர்த்தமாக்கின. அவை ஒருமுகமாக "வலம்புரி நந்தியாவர்த்தமாகும்"[3] என 'வலம்புரி' எனும் ஒரு மாற்றுப்பெயரைக் காட்டுகின்றன.

இம்மலரில் ஒற்றை அடுக்கு, இரட்டை அடுக்கு என இருவகை உள. ஒற்றை அடுக்கை 'அடுக்கு நந்தியாவட்டை' என்பர். இதன் இதழ்கள் ஒன்றிற்கொன்று குறையாமல்— நந்தாமல் ஒரே வளர்ச்சியில்வலப்புற வட்டமாக அமைந்தமையால் 'நந்தியாவட்டம், வலம்புரி' என்றும் பெயர்களைப் பெற்றது.

இஃதொரு செடி. பால் பிடிப்புள்ளது. இதன் பூ தனிப் பூ. நல்ல வெண்மை நிறங்கொண்டது. கோட்டுப் பூவாகிய இது காட்டுப் பூ. எனவே, முல்லைநிலப் பூ. வேனிலில் பூக்கத் தொடங்குமாயினும் பல பருவங்களிலும் தொடர்ந்து பூக்கும்.

இம்மலர் தண்மையும் மணமுங் கொண்டது. கண்ணில் ஒற்றிக்கொள்வதால் குளிர்ச்சியேறும். இதன் மணத்தால் கண் நோய் நுண்ணுயிரிகள் அழியும். இதன் மணத்திற்கு மருந்துத் தன்மை உண்டு.

பாம்பின் நஞ்சிலும் சாதி வகுத்தோர்,

"*நந்தியா வட்டம் நாறும் நகைமுடி அரசனாயின்*"[4] –என அரச சாதி நஞ்சிற்கு இதன் மணத்தைக் காட்டினர்.

வழிபாட்டுத் துறையில் இது எண்மா மலர்களில் ஒன்று

---

1 *சீவ. சி* : 2349 : 4
2 *குறி. பா* 91
3 *பிங். நி* : 2951
4 *சீவ. சி*: 1287

*"நந்திவட் டத்தொடு கொன்றை வளாவிய நம்பன்"*[1] என அப்பர் சிவன் சூடுவதைப் பாடினார்.

பாரகக் கதைத் தலைவனாகிய துரியோதனன் இம்மலர் மாலைக்குரியவன். அதனால் அவனுக்கு "நந்தியாவர்த்தத் தாமன்"[2] என்றொரு பெயரைச் சூடாமணி நிகண்டு காட்டி யுள்ளது. இம்மலரின் மருத்துவப் பயனைக் கூறும் தேரன் வெண்பாவும் இம்மலரைச் "சுயோதனன் மாலை" என்றது. இம்மலர் கண் நோய் பலவற்றையும் தீர்க்கும் மருந்து மலராகும். அகத்தியர் குணபாடம், கண்ணிற் புண், படலம், கரும்பாவை ஆகிய நோய்களைத் தீர்ப்பதுடன்,

"தந்திபோ லேதெறித்துச் சாருமண்டை நோயகற்றும்
நந்தியா வட்டப்பூ நன்று"- என்றது. இதுபோன்றே இம்மலர் கண்ணின் கடுநோய்களைப் போக்குவதைக் கூறும் தேரன் வெண்பா இம்மலர் மருத்துவர் (வாகடர்) கையில் இருப் பது வைரவாள் கையிலிருப்பது போன்றது என,

(கண் நோய்களை)

"மாள நொருக்குதலால் வாகடர்கைக் கேற்றவச்ர
வாளாகும் சுயோதனன்மா லை" என்றது.

கண்நோய்கள் மாளுமாறு நொருக்கும் வைர வாளாம் இம்மலர், மருத்துவ வகையில் இது 'வைர வாள் மலர்'

## 49. அரக்கு வரி மலர்.

### நறா.

நறா என்பது கொடி. இதன் பூவைப் போன்று கொடிக்கும் ஒரு தகுதி இடம் உண்டு. பூவைச் சூடுவது போன்று கொடியை யும் இலையுடன் கிள்ளிச் சூடிக்கொள்வர். அதற்கு இக்கொடி கொண்டுள்ள மெல்லிய மணமும் காரணியம்.

*"நந்தி நறவம் நறும் புன்னாகம்"*[3]

—எனும் குறிஞ்சிப்பாட்டில் வரும் 'நறவம்' என்னும் நறாவிற்கு உரை எழுதிய நச்சர்,

---

1 அப். தே : ஐயாறு  
2 சூடா : நி : மக்கள் ; 15 : 1.  
3 குறி. பா ; 91

"நறவம் – நறைக்கொடி" என்றே பொருள் எழுதினார்.

'நறா' என்பதே இதன் மூலப்பெயர். 'பிடா, தளா' போன்று இஃதும் சொல் வளர்ச்சி பெற்றது. நறா – நறவு – நறவம் என்னும் பெயர்களில் வழங்கப்பெறும். கொடியைச் சேர்ந்துக் கூறும்போது நறைக்கொடி எனப்படும். இச்சொற்கள் நான்கும் சங்க இலக்கிய ஆட்சிகொண்டவை. நறை தவிர்த்துப் பிற மூன்று சொற்களுக்குத் 'தேன்' என்னும் பொருளும் உண்டு. இரண்டின் வேறுபாடு காட்டும் பாங்கில்,

*"சூடு நறவொடு காமம் முகிழ்விரியச்*
*சூடா நறவொடு காமம் விரும்ப"* [1]
—எனச் சூடும் நறவமாக மலரும், சூடா நறவமாகத் தேறலும் குறிக்கப்பட்டன.

படரும் கொடியில் இம்மலர் கொத்தாகப் பூக்கும். நப்பண்ணனார், "ஊழ் இணர் நறவம்" [2] என இணராகக் குறித்தார்.

மகளிரது செவ்வரி படர்ந்த கண்ணிற்குச் செங்கழுநீர்ப் பூவிதழை உவமை கூறுவதுபோன்று நறவம் பூவின் இதழையும் கூறுவர். குவளை வடிவக் கண்ணில் செவ்வரி படர்வதை,

*" ... ... ... நறவின்*
*சேயிதழ் அனைய வாகிக் குவளை*
*மாயிதழ் புரையும் மலிர்கொள் ஈரிமை"* [3] —என்றனர் இளங்கீரனார்.

இங்கு நறவின் இதழ் "சேயிதழ்" எனச் செம்மையாகக் குறிக்கப்பட்டமை கண்ணின் செவ்வரியைக் குறிக்கவேயாகும். இதன் இதழ் ஒவ்வொன்றும் வெளிர் செம்மைகொண்டது. இதழின் புறம் வளைந்தது. வளைந்த அம்முதுகில் ஒரு சிவப்புக் கோடு – வரி உண்டு. இதனைப் பேரிசாத்தனார் என்பார் சங்கின் முதுகில் அரக்கால் வரி தீட்டியதை உவமையாக்கி.

*"அவ்வளை வெரிநின் (முதுகில்) அரக்கு ஈர்த்தன்ன*
*செவ்வரி இதழ்சேண்நாறு நறவின்"* [4] என்றார். இவ்வாறு செம்மையும் மென்மையும் கொண்ட இதழ் சிறு குழந்தையின் கை விரல்போன்று விளங்கும். இதனையும் கலித்தொகை,

---

1 பரி. திரட்டு 1 : 55, 56.
2 பரி : 13 : 78.
3 அகம் 19 : 9-11.
4 நற் : 25 :1, 2.

"நறா இதழ் கண்டன்ன செவ்விரல்"[1] என்றது. கொத்தான இம்மலரை மகளிர் கைக்கு உவமையாக்கினர். ஒரு தலைவி தன்னோடு தலைவன் குலவிய போது தனது மெல்லிய சிவந்த விரல்கள் அமைந்த கையை எடுத்துக் கண்ணில் ஒற்றிக்கொண்டதை நினைப்பவள்,

"நறாஅ அவிழ்ந்தன்ன என் மெல்விரல் போதுகொண்டு
செறாஅச் செங்கண் புதையவைத்து"[2] என்று எண்ணிப் பூரித்தாள்.

இவை கொண்டு இப்பூவின் மென்மையும், வெண்மையொடு வரியோடிய செம்மையும் விளங்கும்.

முன்னே பேரிசாத்தனார் இப் பூவைச் "சேண் நாறு நறவு" என்றார். அதற்கேற்ப நெடுந்தொலைவு மணம் வீசக் கூடியது.

இம்மணத்தாலும் இதழின் எழிலாலும் மகளிரும் ஆடவரும் நயந்து கண்ணியாகவும் கோதையாகவும் தாராகவும் சூடி அணிந்தனர். (கலி : 91)

நறைக்கொடியின் நாரில் மலர்களைத் தொடுப்பர்.

"நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி"[3] என்றது புறம்.

இவ்வாறு குறிஞ்சி நிலத்து வேங்கைப்பூ தொடுக்கப்பட்டமை கூறப்படுவதாலும் குறிஞ்சித் திணைப் பாடல்களில் மிகுதியாக வருவதாலும் இப் பூ குறிஞ்சி நிலப் பூ. உவமை சொல்லப்படும் "கண் ஈர் இமை" எனத்துளி தோய்ந்த ஈரம் குறிக்கப்படுவதால் இம்மலரிதழும் கார்காலத் துளியை ஏற்றமை கொள்ளப்படும். எனவே, இது கார்காலப் பூ ஆகும்.

எழிலும் மணமும் கொண்ட இப்பூபற்றிப் பிற்கால இலக்கியங்கள் பேசவில்லை.

---

1 கலி . 84 : 22.
2 கலி : 54 : 9, 10.
3 புறம் : 168 : 15.

# 50. இடியப்ப மலர்.

## குருக்கத்தி.

"சேற்றில் வளர் செந்தாமரை" — என்பது சங்க காலப் பழையமொழி.

"குப்பையிலே மலர் கொஞ்சும் குருக்கத்திக் கொடி"[1] —என்பது பாரதியின் புதிய மொழி. இக்கொடி பசுமையான இலைகளைக்கொண்டதால் "பைங் குருக்கத்தி"[2] எனக் கபிலராலும், மாறன் வழுதியாலும் பாடப்பட்டது.

இதன் பூ தலைப்பகுதியில் பஞ்சுபோன்ற இதழ்களை யுடையது. மெல்லிய தன்மையது. இதனை மாறன்வழுதி,

"... ... ... ... ... மதன் இல்
துய்த்தலை இதழ பைங்குருக் கத்தி"[3] —என்றார்.

இதற்குக் 'குருகு' என்பது மறுபெயர். 'குருகு' என்னும் சொல்லுக்கு 'வெண்மை' என்று ஒரு பொருள் உண்டு. இதன் பூ வெண்மை நிறங்கொண்டதாகையால் இப்பெயர் பெற்றது. சங்க இலக்கியத்தில் இப்பெயரை அமைத்துக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் ஒரு சுவையான விளக்கந் தந்துள்ளார். சுவையென்றால் அருமையான சிற்றுண்டிச் சுவை.

சிற்றுணவில் அப்பம் ஒன்று. அரிசியை மாவாக இடித்து நூல் இழைபோலாக்கி அவிப்பது 'இடியப்பம்' எனப்படும். இதனை வெல்லப் பாகில் இட்டும் உண்பர்; பாலில் இட்டும் உண்பர். இதனைக் கூவி விற்போர் 'கூவியர்' எனப்படுவர். குருக்கத்தி என்னும் குருகின் பூ இவ் விடியப்பமாகியது. எவ்வாறு? உருத்திரங்கண்ணனார் காட்டுகின்றார்:

காஞ்சி மரத்தைச் சுற்றிப்படர்ந்து குருக்கத்திக்கொடி பூத்துள்ளது. அப்பூ புன்புறத்தையுடையது, அகவிதழில் வரிக்கோடுகள் உள. இக்கோடுகள் அப்பூவின் தோற்றத்தை நூல் இழைபோல் காட்டுகின்றன. கரிய அடிமரத்தில் வெண் நூலாகப் பூத்திருப்பது கருமையான வெல்லப்பாகொடு இடியப்பம் கிடப்பது போன்று காட்சியளிக்கின்றது.

---

1 பா பா : பகைவனுக்கருள்வாய்.
2 குறி. பா : 93
3 நற் : 97 : 5, 6,

பூங்கொத்து கொடியிலிருந்து கீழே மணற்குழி நீரில் விழுந்து கிடக்கும் காட்சி இடியப்பம் பாலில் வீழ்ந்து கிடப்பது போன்றுளது. —என்றார். அப்பாடல்:

*"குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடி*
*பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூ*
*காரகல் கூவியர் பாகொடு பிடித்த*
*இழைசூழ் வட்டம்*

(நூல் இழைபோன்று வட்டமாகச் சூழ்ந்துகிடக்கும் அப்பம்)

*பால்கலந் தவைபோல் நிழல்தவழ் வார்மணல்*
*நீர்முகந் துறைப்ப"*[1]

இவ்வாறு நூல் இழை வட்டமாக உவமை கூறப்படுவதற்கு ஏற்ப இப் பூ ஓர் ஒழுங்காகக் கோதைபோன்று பூக்கும். சிலப்பதிகாரத்தில் இது 'மாதவி' என்னும் மாற்றுப்பெயர் பெற்றது. அக்காப்பியத் தலைவி மாதவியின் பெயருக்குத் துணை நின்றது. அங்கெல்லாம் இளங்கோவடிகளார் "கோதை மாதவி"[2] என்றே பாடினார். அதற்கு அடியார்க்கு நல்லார் "மாலைபோலப் பூக்கும் குருக்கத்தி" என்று உரை எழுதியதும் நோக்கத்தக்கது.

காஞ்சி மரம் மருத நிலத்தது. அதனைச் சுற்றிப் படரும் கொடி இது. இம்மலர் மணமுள்ள சூடும் பூவாதலால் விற்பனைக்கு வரும். இதனைப் பித்திகையுடன் விற்று வருபவள், "தண்டலை உழவர் தனிமட மகள்"[3] எனப்பட்டாள். மருத நிலத்து உழவர் குலப்பெண்ணால் விற்கப்படுவதாலும் இம் மலர் மருத நில மலர். இளவேனிற் பருவத்தில் மாலையிற் பூக்கும். பூக்கும் பருவத்தாலே இதற்கு 'வாசந்தி' (வசந்தத்தில் மலர்வது) என்றொரு வடசொற் பெயரும் அமைந்தது.

திருத்தக்கதேவர் 'கத்திகை' என்னும் சொல்லை அமைத்துள்ளார். அதுகொண்டு முருகன் சூடியதாக அதன் உரைகாரரும் விரித்துள்ளார். பெரியாழ்வாரும்.

*"குடந்தைக் கிடந்த எங்கோவே!*
*குருக்கத்திப் பூச்சூட்ட வாராய்"*— எனக் கண்ணனுக்காகப் பாடினார். பிறரும்,

*" ... ... ... .... ... முல்லை, கத்திகைப்*
*போது வேய்ந்து"*[4] —விளங்கியதாகவும் பாடியுள்ளனர்.

---

1 பெரும்பாண் : 375 – 379.
2 சிலம்பு : 14 : 118.
3 நற் : 97 : 9
4 சீவ: சி : 1208

எனவே மணமும் வெண்மை எழிலும்கொண்ட இம்மலர் சூடும் பூ.

# 51. பவளக்கால் மலர்.

## சேடல்.

"சேடல் செம்மல் சிறுசெங்குரலி"[1]

—எனக் குறிஞ்சிப்பாட்டில் பாடப்பட்டது சேடல். சங்க இலக்கியங்களில் இவ்வொரு இடத்தில் மட்டும் இடங்கொண்ட பூ இது. இப்பெயர் இடைக் காலப் பிற்கால இலக்கியங்களில் எதிலும் இடம்பெறவில்லை. இதற்கு நச்சினார்க்கினியர்,

"சேடல் - பவளமல்லிகை" என்று எழுதினார். இப்பவள மல்லிகை பிற்காலச் சிற்றிலக்கியங்களில் பேசப்படும். இதுதான் 'பாரிசாதம்' என்பர்.

உ. வே. சா. அவர்களும்,

"இது பவளமல்லிகை எனவும் பாரிசாதம் எனவும் வழங்கும்"[2] — என அடிக்குறிப்பெழுதினார்கள். பாரிசாதம் புராணங்களில் தேவருலகத்திலிருந்து கொணரப்பட்டதாகக் கதைக்கப்படும்.

நிகண்டுகள் சேடல் பற்றியோ, பவளமல்லிகை பற்றியோ எக்குறிப்பும் வைக்கவில்லை. நச்சர் எழுதிய ஒன்றுகொண்டே சேடலைப் பவளமல்லிகையாகக் கொள்ளவேண்டும்.

மல்லிகை என்னும் சொல்லுக்கேற்ப இது முல்லைக் குடும்பத்தைச் சேர்ந்ததே. ஆயினும் முல்லைத் தன்மையோ வடி வமைப்போ கொடியினமோ அன்று. புட்பவிதி,

*"... ... .... பவள*
*மல்லிகை சண்பகம் ஞாழல் கோட்டுப்பூ வகையே"*[3]

—என்றதன் படி பெருஞ்செடியாகிய குறுமரத்தில் பூப்பது. முல்லை நிலத்துரிமை யுடையதாகக் கார் காலத்தில் முன்னிரவில் பூத்து மணம் கமழும்.

இதன் அடிக்காம்பு உள்துளை உடையது. காம்பாம் கால் மட்டும் பவளம் போன்று சிவந்த நிறங்கொண்டது. இதனாலேயே

---

1 குறி: பா : 82.
2 குறி: பா ; 82 அடிக்குறிப்பு.
3 புட் வி ; 2 ; 4.

இது 'பவள மல்லிகை' எனவும் 'பவளக்கால் மல்லிகை' எனவும் வழங்கப்படுகின்றது. இதழ்கள் நல்ல வெண்மை நிறத்தவை கிடைமட்டத்தில் விரிந்து மலராகும். காம்புடன் கழன்று விழும்.

மகளிர் சூடிக்கொள்வர். காம்பு உள்துளைகொண்டதால் நாரால் கோப்பதற்கு வாய்ப்பானது. வழிபாட்டிற்கும் உரிய பூ,

காம்பின் பவள நிறத்தால் 'இது பவளக்கால் மலர்'

# 52. பக்க மலர்.

## பாங்கர்.

*"பாங்கரும் முல்லையும் தாஅய பாட்டங்கால்"*[1]

—என்னும் முல்லைக் கலிப்பாடல் பாங்கரை முல்லையொடு காட்டுகின்றது. பாட்டங்கால் என்றால் 'தோட்டக் கொல்லை' என்று பொருள். எனவே பாங்கர்ப் பூ முல்லை நிலத்துப் பூ.

இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், "பாங்கர்க் கொடியும் முல்லைக்கொடியும் பரந்த முற்றூட்டாகிய தோட்டம்" என்று எழுதினார். ஆம், பாங்கர் ஒரு கொடி. முல்லைக்கொடி போன்றது. முல்லைபோன்று வெண்மை நிறப் பூ.

முல்லையொடு மலர்தல் கூறப்படுதலால் கார்காலமலர். முல்லையைப் போன்று சூடப்படும் பூவுமாகும். ஏறுதழுவும் முல்லை நிலக்காளையர்,

*"குல்லையும் குருந்தும் கோடலும் பாங்கரும்*
*கல்லவும் கடத்தவும் கமழ்கண்ணி மலைந்தனர்"* [2]

– என்று காண்கின்றோம்.

இங்கும் நச்சர் 'பாங்கர்ப் பூ' என்றெழுதியுள்ளார்.

நச்சினார்க்கினியர் உரையால்பொருள் தெளிவுஉண்டாவது போன்று குழப்பமும் நேர்வதைக் கண்டுள்ளோம்.பாங்கரிலும் ஒரு குழப்பம் உண்டு.

குறிஞ்சிப்பாட்டில் குறிக்கப்படும்[3] பாங்கர்க்கு மட்டும் "ஓமை" என்று பொருள் எழுதியுள்ளார். 'ஓமை' என்பது பாலை நில மரம்.

---

1 *கலி* : 111 : 3, 4.
2 *கலி* : 103 : 3, 4.
3 *குறி. பா* : 85.

சங்க இலக்கியங்களில் பல பாடல்களில் ஓமை மரம் குறிக்கப்படும் அனைத்துப் பாடல்களிலும் மரத்தின் பட்டை, புல்லிய இலை உலரிய தலை, காய்ந்த கிளை, நிழல் தருதல் என்பனவற்றையே காணமுடியும். ஓரிடத்திலேனும் பூவைப்பற்றிய செய்தியில்லை பின்வந்த எவ்விலக்கியங்களிலும் பூவைப் பற்றிக்குறிப்பும் இல்லை. கலித்தொகையில் பாங்கர் என்னும் கொடிப் பூவைக் கண்ட நச்சர் அங்கு பூச்சிறப்பில்லாத ஓமையைக் குறித்தது அடிசருக்கிய எழுத்தேயாகும். அச்சருக்கல் எழுத்திலும் 'ஓமைப் பூ' என்று பூ அமையவில்லை. 'ஓமை' என்று மட்டுமே அமைந்தது.

மலர்களிற் சிறந்த முல்லையொடு சேர்ந்த இதனை அவர் விடுத்தாலும் பாங்கர் என்பதற்குப் பக்கம் என்னும் பொருள் இருப்பது போன்று இது முல்லையோடு மதிப்புடைய அதன் 'பக்கமல'ரேயாகும்.

# 53. ஆக்க அரிய மூக்கு மலர்.

## குமிழம்.

குமிழம் பூ என்றதும் 'மூக்கிற்கு உவமையாகும் பூ' என்பது தோன்றும். இரண்டு கண்களுக்கிடையே மூக்கை ஓவியமாகத் தீட்டுவதை இளங்கோவடிகளார்,

"*இருகருங் கயலொடு இடைக் குமிழ் எழுதி*"[1] — என மூக்கைக் குமிழம் பூவாகக் குறித்தார். "குமிழ் மூக்கு இவை காண்"[2] என்றார் சாத்தனார். "தொள்ளைக் குமிழும் மூக்கு ஒக்கும்"[3] என்றார் கம்பர். இவ்வாறு மூக்கிற்குக் குமிழம் பூவைச் சொல்லியுள்ள இலக்கியங்களை நோக்கினால் சிலப்பதிகாரத் தொடக்கமான இலக்கியங்களாகவே அமைகின்றன.

சங்க இலக்கியமாம் கார் நாற்பது,

"*... ... ... ... குமிழின் பூ*
*பொன்செய் குழையில் துணர தூங்க*"[4] -எனப் பொன் குழையாகப் பாடியது. நற்றிணையும் "ஊசலாடும் ஒண்குழை" யாகச் சொல்லி அப் பூ உதிர்ந்து கவிழ்ந்து கிடப்பதைக் "கல்லெனா வரிக்கும்"[5] எனக் 'கூழாங்கல்லைப் போன்று காட்டும்' என்றது.

---

1 சிலம்பு . 5 : 205
2 மணி : 20 : 48.
3 கம்ப. நாடவிட்ட : 52.
4 கார் நா : 28
5 நற் : 286 : 8.

குமிழில் செங்குமிழ், பெருங்குமிழ், நிலக்குமிழ் என மூன்று வகைகள் உள்ளன. நிலக்குமிழ் கொடி. மற்றையஇரண்டும் குறு மரங்கள். ஒன்று முள் கொண்டது. மூன்றின் பழங்களும் மஞ்சள் நிறத்தவை. மானுக்கும் ஆட்டிற்கும் உணவாகும்.

*"உழைமான் அம்பிணை தீண்டலின், இறைமகள்*
*பொன்செய் காசின் ஒண்பழம் தாஅம்*
*குமிழ்"*1 – என்னும் காவல் முல்லைப் பூதனார் பாடல் பெண்மான் உராய்வதால் பழம் உதிரும் என்கின்றது. இது முள்ளற்றது. இதற்குத் தலைமகள் அணியும் பொன்காசு உவமை யாயிற்று. இம்மரம், "அத்தக் குமிழ்"2 எனப்படும். எனவே, பாலை நிலத்து மரம்.

*"இமிழிசை வானம் முழங்கக் குமிழின் பூப்*
*பொன்செய் குழையில் துணர்தூங்க"* — என்னும் கார் நாற்பதின் பாடல் இப் பூ கார்காலத்தில் மலர்வதையும் இது கொத்துப் பூ என்பதையும், தொங்கி அசைந்தாடும் என்பதையும் குறிக்கின்றது. பொன்செய் குழை என்றதனால் இதன் பொன் நிறமாம் விளக்கமான மஞ்சள்நிறம் அறிவிக்கப்பட்டது. தொங்கி அசைதல் குறிக்கப்படுவதால் கோட்டுப் பூவாகும்.

குமிழம் பூ மணி வடிவான சிறிய புறவிதழில் நான்கைந்து பெரிய அகவிதழ்களைக் கொண்டது. புனல்வடிவ அகவிதழ் ஒரு பக்கம் முட்டிக்கொண்டு வளைந்திருப்பதே மூக்கிற்கு உவமை யாயிற்று. இப் பூவின் பெரிய அளவு, முனை மொக்கையாயுள்ள மூக்கிற்கு நிகராக ஈடுகொடுக்கும் உவமையாகும்.

நிகண்டுகள் 'கூம்பல் கடம்பல்'3 என்னும் மறுபெயர்களைக் கூறியுள்ளன. பெயரளவில் கூம்பினாலும் கடம்பு அல்ல என்றாலும் மூக்கிற்கு உவமையானமை இதற்கொரு சிறப்புதான். கம்பர் மூக்கை "ஆக்க அரிய மூக்கு"4 என்றார். ஆக்க அருமையான மூக்குமலர் குமிழம்.

1 நற் : 274 : 4–5.
2 நற் : 6 : 7
3 பிங் : நி : 2685
4 கம்ப : சூர்ப்ப : 125 : 1

# 54. காதுக்கொடி மலர்.

## வள்ளை.

மூக்கிற்குக் குமிழ் என்றால் காதிற்கு வள்ளை என்பர். வள்ளை ஒரு நீர்க்கொடி (மது.கா:254). சேறுள்ள வயலிலும் படரும் (புறம்:399). பின்னிப்பின்னிப்படரும் (புறம் : 16). இதன் கொடித் தண்டு தூம்பான உள் கூடுள்ளது என்பதைப் பரணரும் நக்கீரரும் நன்முல்லையாரும் "அம் தூம்பு வள்ளை"[1] எனப் பாடியுள்ளனர். இக்கொடியின் இலையைச் சமைத்துண்ண மகளிர் கொய்வர்.[2]

இவைபோன்று கொடியையும் கீரையையும் பற்றிய கருத்துகளையே சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது.

மணிமேகலையில்தான் "வள்ளைத் தாள் போல் வடிகாது இவைகாண்"[3] எனக் காதிற்கு உவமையாக முதன் முதலில் வந்துள்ளது. அஃதும் இதன் பூ அன்று; வளைந்து நெளிந்துள்ள இதன் கொடித் தண்டின் வடிவமே காதின் அமைப்பிற்கு உவமை கூறப்பட்டது. கம்பர், இராமன் பேச்சில் "கொடிவள்ளாய் ..........சீதை காதே"[4] என வள்ளைக் கொடியையே காது என்றார் திரிகூடராசப்பக் கவிராயர் சிங்கன் சிங்கி உரையாடலில்.

*"வள்ளைக் கொடியிலே துத்திப் பூ பூப்பானேன் சிங்கி?"*[5]

என்றார்.

வள்ளைக் கொடிக்கும் காதிற்கும் உள்ள உறவைக்காட்டுவது போன்று பிங்கல நிகண்டு 'ளள்' என்னும் சொல்லிற்குக் 'காது' என்னும் பொருளையும் சேர்த்தது.

வள்ளையின் மலர்பற்றிப் பண்டை இலக்கியங்களில் செய்தியில்லை. சுந்தரமூர்த்தி நாயனார்,

*"சள்ளை வெள்ளையங் குருகுதானதுவாம் எனக்கருதி*
*வள்ளை வெண்மலர் அஞ்சி மறுகியோர் வாளை"*[6] – என

இப் பூவைப்பாடி யுள்ளார். இதுகொண்டு, இப் பூ வெண்மை நிறமுள்ளது; கொத்தாகக் குருகு போல் பூக்கும் என்றறியலாம்.

நிகண்டுகள் ஒருமுகமாக இதற்கு 'நாளிகம்' என்றொரு பெயரைக் கூறியுள்ளன. 'நாளம்' என்னும் தண்டுத் தொடர்பில் பெயர் பெற்றது.

---

1 அகம் : 376 : 14; 86 : 5; 46 : 6.
2 பதிற் : 29 :2.
3 மணி : 20 : 5.
4 கம்ப : பம்பை : 81
5 குற். குற : 180
6 சுந். தே : வாஞ்சியம் : 4

இவ்வள்ளைப் பூ படரும் கொடிப் பூவாக, வயல்தொடர்பில் மருத நிலத்ததாக, பருவத்தால் காராக, வெண்மை நிறக்கொத் தாகும் பூ. தன் தாய்த் தண்டு மகளிர் காதை ஒத்தலின் 'காதுக் கொடி மலர்.'

## 55. சிட்டுக் குஞ்சு மலர்.

### ஈங்கை.

ஈங்கை என்பது ஒருவகைக்கொடி. இக்கொடி நிலத்தோடு படிந்து படர்வதன்று. முளைத்துப் புதலாகச் செறிந்து தோன்றும். அதனால், "பனிப்புதல் ஈங்கை", "ஈங்கைப் பைம்புதல்" எனப்பட்டது. இது வளர்ந்து பற்றிப் படர்வதை,

"புதல் இவர் ஈங்கை"[1] என்றனர் எயிற்றியனார். "வெண் கொடி ஈங்கைப் பைம்புதல்"[2] என்றபடி இக்கொடியின் மேற்பட்டை வெண்மை நிறங்காட்டும்.

குளக்கரையிலும் ஆற்றங்கரையிலும் பிரம்புடன் செறிந்து வளர்வதை,

"*பரந்த பொய்கைப் பிரம்பொடு நீடிய*
*முட்கொம்பு ஈங்கை*"[3] எனச் சீத்தலைச் சாத்தனார் பாடினார். இக்கொடித்தண்டில் வரிசையாக முள் உண்டு. இது கொடுக்குபோன்று வளைந்த "கொடு முள்". இதன் இலைக் கொத்து கிளைக்கும் கணுவிலிருந்து நீளும் காம்பில் இதன் பூங்கொத்து தோன்றும்.

இக்கொத்து பல அரும்புகள் செறிந்து அரைக்கோள வடிவில் அமையும். ஒவ்வொரு அரும்பும்,

"*நுண் முள் ஈங்கைச் செவ்வரும்பு*"[4]
—என்றபடி முனையில் சிவந்த நிறங் கொண்டது. எனவே முழுக் கொத்து அரக்கு உருக்கியது போன்றிருக்கும். அரும்பு முதிர்ந்து முகையாகும்போது "இரங்காழ் (இரவவிதை) அன்ன அரும்புமுதிர் ஈங்கை" என்றதன்படி இரவத்தின் விதைப்போன்றிருக்கும். மலரும் பக்குவத்தில் சிவந்த முனையில் துளை தோன்றும். இந்நிலையை,

1 அகம் : 294 : 6
2 ஐங்குறு 456 : 8
3 அகம் : 306 : 2—3
4 குறுந் : 110 : 5.

*"வாங்கு துளைத் துகிரின் (பவளத்தின்) ஈங்கை பூப்ப"* [1] என்றார், நெய்தல் தத்தனார். இது தனி மலரில் சிறிய பூ.

ஒவ்வொரு மலரும் நன்னான்கு அகவிதழ்களையும் அவற்றினிடையே எட்டு அல்லது ஒன்பது பஞ்சுபோன்ற மகரங்களையும் கொண்டது. அகவிதழ்களும் மகரங்களும் வெண்மை நிறமானவை. இவ்வெண்மை வாய்ந்த கொத்திற்குப் பரணர் ஆலங்கட்டியை உவமையாக்கி,

*"... ... ... ... ஈங்கை*
*ஆலி அன்ன வால்வீ தாஅய்"* [2] என்றார். இதிலுள்ள "வால்வீ" என்பதும் இதன் வெண்மையைக் குறிக்கின்றது.

அகவிதழில் நீண்டிருக்கும் மகரங்கள் பஞ்சுபோன்று துய் என்றிருத்தலின் *"வண்ணத் துய்ம் மலர்"* [3] *"ஈங்கைத் துய்த்தலைப் புது மலர்"* [4] எனப்பட்டது. இப்பஞ்சுத் தன்மையாலும், வெண்மையாலும் கொத்தாயுள்ள திரட்சியாலும் இது சிட்டுக் குருவிக் குஞ்சு போன்று தோன்றுவதாகக் கண்ட ஒரு புலவர்,

*"நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன*
*சிறுபல் பிள்ளை"* [5]

—என்றார். பெயர் தெரியாத இப்புலவர் இப்பூவிற்குச் "சிட்டுக் குஞ்சு மலர்" எனப் பெயர் சூட்ட வைத்துள்ளார்.

இப்பூ பாறையில் உதிர்ந்து கிடப்பது பெண்கள் விளையாடி விட்டுப் போட்ட கழற்சிக் காய் போன்றிருந்ததாகக் கண்ணகனாரால் பாடப்பட்டது. [6]

இக்கொடியின் தளிர் பூவைவிட அழகோடு காட்சிதரும். அஃதும் மாரிக்காலத்தில் எழில்பெற்றுத் தோன்றும். அதனால், "மாரி ஈங்கை மாத்தளிர்" [7] எனப்பட்டது. இங்கு மாரி என்பது தளிரால் குறிக்கப்பட்ட பருவம். இது கூதிர்ப்பருவத்தில் அரும்பி மலரும். முன்பனிக்[8] காலத்தில் யாவும் உதிர்ந்துவிடும். எனவே, இது மலர்ச்சியால் கூதிர்காலப் பூ.

---

1 அகம் : 248 : 2.
2 அகம் : 125 : 3, 4.
3 குறுந் : 380 : 6.
4 நற் : 193 : 1, 2.
5 நற் : 181 : 4, 5.
6 நற் : 79 : 1—4.
7 அகம் : 75 : 17.
8 ஐங் : 456.

இது பிரம்போடு சார்த்திப் பேசப்படுவதாலும், பெரிதும் முல்லைத்திணைப்பாடல்களில் பிரிவுத்தொடர்புடன் வருவதாலும் முல்லை சார்ந்த பாலை எனல் வேண்டும். சீத்தலைச் சாத்தனார் ஒரு பாடலில் மருத வயலில் இச்கொடியைக் காட்டியுள்ளார்.[1] நீர்ச்சார்பால் அவ்வாறு கூறப்படினும் நிலச்சார்பால் முல்லை நிலம் திரிந்த பாலைப் பூ என்பதை "இண்டிவர் ஈங்கைய சுரனே"[2]

— என்னும் பெரும்பதுமனார் பாடல் 'சுரம்' என்னும் சொல்லால் குறிக்கிறது.

உரையாசிரியர்கள் இதற்கு 'இண்டு' 'இண்டை' 'இண்டம் பூ' எனப் பொருள் எழுதியுள்ளனர். காரைக்காலம்மையார் 'இண்டை சுடுகாட்டுப் பூ' எனப்பாடியுள்ளார்.

குறிஞ்சிப் பாட்டில் இப் பூ தொடுக்கப்பட்டிருப்பினும் கமழும் மணமோ சூடப்பட்டதாகக் குறிப்போ எங்கும் காணப் படவில்லை.

## 56. கொட்டான் மலர்.

### முசுண்டை.

முசுண்டை ஒரு கொடி. "புன்கொடி முசுண்டை" என்றபடி இக்கொடி புல்லியதுதான். ஆயினும், இதன் இலைகள் நன்கு தழைத்திருக்கும் இத்தழைப்பின் தோற்றத்தால் "கொழுங்கொடி முசுண்டை" எனப்பட்டது.

இதனை 'முசுட்டை' என நாட்டுவழக்கில் கூறுவர். ஆனால் 'முசுட்டை' என நூல் வழக்கில்லை. இதற்கு மறுபெயர் இல்லை. 'முசுண்டை' என்னும் ஒரு பெயரையே கொண்டமையால் நிகண்டுகளில் இடம்பெறவில்லை.

இதன் முகை சற்று திருகிச் சுரிந்திருப்பதால், "சுரிமுகிழ் முசுண்டை" என மதுரைக் காஞ்சியும், அகநானூறும் குறித்தன.

இப் பூ புறத்தே திரட்சியுடையது. வெண்மை நிறங் கொண்டது. அதனால், "வாலிய மலர" "வாலிதின் விரிந்த". "பொறிப்புற வான் பூ" "வெண்பூ முசுண்டை" எனப்பட்டது

1 அகம் : 306. 2 நற் : 2 : 6.

*"குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள் (நடு இரவு)*
*புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூ*
*பொன்போற் பீரமொடு புதல்புதல் மலர"*[1] - என்றார் நக்கீரர். எனவே, இது கூதிர்ப் பருவப் பூ. அப்பருவத்தில் நடு யாமத்தில் மலர்வது. புதர்களில் மலரும். வீட்டு முற்றத்திலும் மலரும்.[2]

கூதிர்ப்பருவத்தில் வானம் மழைபெய்து நின்று தெளிந்திருக்கும்போது விண்மீன்கள் பளிச்சென்று தெரிவதுபோன்று இப்பூ பூக்கும் என்பதை இளங்கண்ணனார்,

*"மழையில் வானம் மீன் அணிந்தன்ன*
*குழையமல் முசுண்டை வாலிய மலர"*[3] -என்றார். பூக்கள் தொடர்பாகப் பூத்ததைக் கண்ட பெருங்கௌசிகனார்,

*"அகலிரு விசும்பின் ஆஅல் (ஆரல்) போல*
*வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை"*[4] -என 'ஆரல்' என்னும் கார்த்திகை விண்மீனாகப் பாடினார்.

இப் பூ புறத்தே திரண்டதாக ஓரளவில் நாற்கோணக் குவிவாகத் தோன்றும். பனையோலையால் முடையப்படும் சிறு பெட்டிபோன்ற கூடையைக் 'கொட்டான்' என்பர். இப் பூ சிறியதாயினும் வடிவமைப்பில் கொட்டான் போன்றுள்ளதால் நத்தத்தனார்,

*"கொழுங்கொடி முசுண்டை கொட்டங் கொள்ளவும்"*[5] எனப் பாடினார். எனவே, இதனைக் 'கொட்டான் மலர்' எனலாம்.

முசுண்டை முல்லையுடனும் முஞ்ஞையுடனும் பிற முல்லை நிலப் பூக்களுடனும் பேசப்படும்.[6] பெருங்கதையிலும் உதயணன் காந்தருவதத்தையைக் களிற்றின்மேல் ஏற்றிக்கொண்டு முல்லை நிலத்ததைக் கடந்தான்[7] என்னும் வண்ணனையில் இப் பூ இடம்பெற்றுள்ளது. எனவே, முசுண்டை முல்லைநில மலர்.

குறுநில மன்னன் ஒருவன் 'முசுண்டை' என இப்பூவாற் பெயர் பெற்றுள்ளான். இப்பூவிற்கு இஃதொரு சிறப்பு. அவனது ஊர் 'வேம்பி' என்பது. இதனை நக்கீரனார்,

*"பல்வேல் முசுண்டை வேம்பி"*[8] -எனப்பாடியுள்ளார்.

---

1 நெடு: வா; 12—14.
2 புறம் : 320 1-3.
3 அகம்: 264 : 1, 2.
4 மலை : 100, 101.
5 சிறுபாண் : 166
6 மது. கா : 281.
7 பெருங் : உஞ்சை : 49 : 111—118.
8 அகம் : 249 : 9.

அக்காலத்தும் சூடப்படாமையால் குறிஞ்சிப் பாட்டிலும் இடம் பெறவில்லை, இருப்பினும் இரவுக் காட்சியில் ஒளிரும் எழிற் பூ.

## 57. பொரி மலர்.

### புன்கு.

கட்டித் தழுவியவன் 'விட்டுப் பிரியேன்' என்று குட்டித் தெய்வங்களின்மேல் ஆணையிட்டான்; சூள் உரைத்தான். இது நடந்த இடம் கடற்கரை மணல்மேடு. இதனை அவள் நினைவு கூர்ந்தாள்;

'அவர் சூள் உரைத்த இடம் வேலன் வெறியாடும் களம் போன்று காட்சியளித்தது. அம்மணற்பரப்பு வேலன் செந்நெல்லின் வெண்மையான பொரியைச் சிதறியதுபோன்றிருந்தது. ஆம் பொரிபோன்ற சிறிய பூக்கள் உதிர்ந்து கிடந்தன. அவ்விடம் புன்க மரத்தின் அடி இடம். அதன் பூக்கள்தாம் சிதறிக் கிடந்தன,

இதனைத் தரும் கோப்பெருஞ் சோழன் பாடல் இது:

*''நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்*
*வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்*
*செந்நெல் வான்பொரி சிதறி அன்ன*
*எக்கர் (மணல்மேடு)''* [1]

புன்கின் பூ என்றாலே புலவர் அனைவரது நினைவிலும் நெல்லின் பொரிதான் நின்றது. பாடிய அனைவரும் ''பொரிப் புன்கு" என்றே பாடினர். அதிலும்,

*''பொரிசிதறி விட்டன்ன புன்கு* [2]

—எனப் பொரி சிதறியதாகப் பாடினர். இவைகொண்டு புன்கம் பூ முழுதும் வெண்மைநிறங் கொண்டது எனக் கொள்ளக்கூடாது. அப்பொரி செந்நெல்லின் பொரி எனப்பட்டது. திருத்தக்கத்தேவர் இதனைத் தெளிவாக்கினார். நெல்லைப் பொரித்தால் நெல்லரிசியின் மேல் சிவப்பு தோன்றுமன்றோ? அச்செம்மையுடன் அரிசிவெண்மையாகப் பொரிந்து மலர்ந்திருக்கும். இதனை உளத்துக்கொண்டு

---

1 குறு : 53 : 2-5.    2 திணை. நூ : 64 : 4.

"செந்தலைய வெண்கறைய புன்கம் பொரி அணிந் தனவே"[1] என்றார். இதன்படி புன்கம் பூ பொரியளவில் சிறிய தாகத் தலைப்பகுதியில் சிவப்பும், இதழ்கள் வெண்மைக் கறை படிந்தது போன்ற நிறமுங்கொண்டு தோன்றுவதைக் காணலாம்,

தலைவியின் நினைவுகூர்தலில் புன்க மரத்தைக் கடற்கரை யின் மணல் வெளியில் கண்டோம். இது நெய்தல் நிலத்தில் வந்திறங்கியதாகும். இதன் பிறப்பிடம் பாலை நிலம். இதனை இம்மரம் இணைந்துள்ள பிற மரங்களைக்கொண்டு அறியலாம்.

எரிமலர் இலவ மரத்துடன் இப்பொரி மலர் மரம் நெருங்கி வளரும் (கலி : 33 : 10, 11). பூக்கள் உதிர்ந்த குரா மரக்கிளை களின் இடையே தன் கிளையைப் பரப்பிப் பூத்து அம்மரத்திற்கும் பொலிவு தரும். இலவமும், குராவும் பாலை நிலத்து மரங்கள். எனவே, புன்கு பாலை நில மலர்.

இது பூத்துக்குலுங்கிய பருவத்தைத் "தண்பத வேனில்"[2] என்றார் பெருங்கடுங்கோ. இளவேனிற்பத்திலும்[3] இதனைக் காட்டியுள்ளார். எனவே இது இளவேனிற் பூ.

பொரியளவான இச்சிறிய பூ சூடுதற்கு வாய்ப்பாகாதது. இதனால் இது குறிஞ்சி மேடையில் இடம்பெறவில்லை. ஆனால், இதன் தளிர் பயன்பட்டது. அதனால்,

'தளிர் புன்கின் தாழ்கா[4] —என தளிர் இதன் சிறப் பாகக் குறிக்கப்படும். இத்தளிர் ஒளியுள்ள மென்மையானது; தண்ணென்று குளிர்ந்திருக்கும்; எழிற்பசுமையாகத் தோற்ற மளிக்கும். இதனை மகளிர் இளவேனிற் பருவத்தில் சுணங்கு படர்ந்த மார்புகளில் அப்பிக்கொள்வர். இத்தளிர் மார்பில் நன்கு படியுமாறு அப்பப்படுவதை இலக்கியம் 'திமிர்தல்' எனக் குறிக்கும்.

பெருங்கடுங்கோ,

"பொரிப்பூம் புன்கின் எழில்தகை ஒண்முறி (தளிர்)
சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி"[5]
—என்றார்.

அவரே பிறிதோரிடத்தில்

"பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே"[6] —என்றார்.

---

1 சீவ. சி : 1649.
2 ஐங் : 267
3 ஐங் : 347
4 பொருந் : 146.
5 நற் : 9 : 5, 6
6 ஐங் : 347

புன்கமரம் தன் பொரி மலரைச் சூட வாய்ப்பற்றதாகக் கொண்டாலும் தளிரால் அகத்துறையில் புகுந்து அழகும் நலமும் மகிழ்ச்சியும் நல்கியது. புறத்துறையிலும் தன் பெயரால் திருப்புன் கூரைக் கண்டு நந்தனார்க்குக் காட்சி ஊராக்கிற்று.

## 58. துவலை மலர்த்து மலர்.

### தணக்கு – நுணா.

'தணக்கு' என்னுஞ்சொல் சங்க இலக்கியங்களில் குறிஞ்சிப் பாட்டில் மட்டும் "பல் பூந் தணக்கம்"[1] என ஒரே இடத்தில் வந்துள்ளது. பிற இலக்கியங்களிலும் பெருங்கதையில் மட்டும் "தண் பூந் தணக்கம்"[2] என ஒரே இடத்தில் வந்துள்ளது. இவ்விரு தொடர்களைக் கொண்டு, 'தணக்கம்' என்பது பல பூக்களைப் பூக்கும் என்றும், குளிர்ந்த பூவைக்கொண்டது என்றுமே அறிய முடியும். நச்சினார்க்கினியர் "பல பூக்களையுடைய தணக்கம் பூ" என்று எழுதினார். இவையன்றித் தணக்கம் என்ற பெயரில் வேறு ஒன்றும் அறியக் கூடவில்லை.

நிகண்டுகள் "தணக்கு நுணாவே" என்றும், "நுணவு தணக்கே" என்றும் தணக்கை நுணா என்கின்றன. அததற்கு முதன்மை கொடுத்தும் தேற்றேகாரம் கொடுத்தும் பெயரிட்டுள்ளன. பிற்கால உரையாசிரியர்கள் தணக்கை நுணாவாகக் கொண்டனர். இது பொருந்துவதே.

நுணா, நுணவு, நுணவம் என்னும் மூன்று பெயர்களையும் சங்க இலக்கியங்களில் நான்கு நூல்களில் காண்கின்றோம். இவ்வாறு நான்கு நூல்களில் நுணாப் பெயர்களுடன் பூவைப் பற்றிய விளக்கத்தையும் பெற முடிகின்றது, இவ்வாறு குறிக்கத் தக்க நிலைபெற்ற இப்பெயரைக் கபிலர் காட்டவில்லை. நுணாவையே தணக்கமாகக் கருதியதால் அப்பெயரில் குறித்தார் எனலாம். எனவே, தணக்கத்தின் இணைபெயர் நுணாவாகின்றது. செடியியலும் ஓரினத் தொடர்புப் பெயராகக் குறிக்கின்றது.

நுணா, நாட்டு வழக்கில் 'மஞ்சள் நாறி' எனப்படுகின்றது. இம்மரத்தின் உட்பகுதி நல்ல மஞ்சள் நிறத்தில் விளங்குவதும் மஞ்சள் மணத்தை வீசுவதுமே கரணியங்களாகும். இம் மஞ்சள்

1 குறி. பா : 85 2 பெருங் ; இலா ; 15 : 15.

நாறி என்பதையே மலைஞாலத்தார் 'மஞ்சணாத்தி' (மஞ்சள்நாறி- மஞ்சள்நாற்றி - மஞ்சணாற்றி - மஞ்சணாத்தி.) என்கின்றனர். இதனை ஒரு சில மர வணிகர் தணக்கம் என்றும் குறிக்கின்றனர் எனவே, நுணாப் பெயரில் வரும் கருத்துகள் தணக்கத்தைக் குறிப்பதாகக் கொண்டு இப் பூவின் விளக்கத்தை அறிய வேண்டும்.

தணக்கத்தை 'நுணா' என்னும் பெயரில் நாம் மரமாகக் கண்டு வருகின்றோம். "இருஞ்சினைக் கருங்கால் நுணவம்"[1] என்பதில் 'இருஞ்சினை' என்பதும் மரம் எனக் காட்டுகின்றது. எனவே, இதன் பூ கோட்டுப் பூ.

உடன்போக்கில் கொண்டு செல்லவிருக்கும் தலைவன் தலைவிக்குப் பாலைநில வழியை அறிவிக்கின்றான்.

"*கருங்கால் மராஅம் நுணவோ டலர*
*இருஞ்சிறை வண்டினம் பாலை முரல*
*அரும்பிய முள்ளெயிற் றஞ்சொல் மடவாய்*
*விரும்புநாம் செல்லும் இடம்*"[2] —இதில் பாலைப் பண், பாலைக்குரிய மராமரம், உரிப்பொருள் உடன்போக்குப் எனப் பாலைகளின் தொடர்புள்ளது. பிறவற்றாலும் இம்மரம் பாலை நில மரம்.

ஐங்குறு நூற்றில் இளவேனிற் பத்தில் இளவேனிற் பருவ மலர்களுடன் "கருங்கால் நுணவம் கமழும் பொழுது"[3] —என இளவேனிற் பருவம் குறிக்கப்பட்டுள்ளது. "நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவம்"[4] —என இதனில் தேன் சிந்துவது குறிக்கப்பட்டுள்ளது. ஓரளவில் மணமுள்ளது. ஆனால் சூடியதாகக் காண இயலவில்லை. குறிஞ்சி மேடையில் சேர்த்ததால் சூடப்படுவதாகக் கொள்ளலாம்.

இம்மரம் பாலை நிலத்ததாயினும் குறிஞ்சியிலும் வளரும். அங்குள்ள சிற்றருவியின் நீர்த்துவலையால் இது மலர்ந்ததைக் குடவாயிற் கீரத்தனார்,

"*சிறுவெள் ளருவித் துவலையின் மலர்ந்த*
*கருங்கால் நுணவின் பெருஞ்சினை வான்பூ*"[5] —எனப் பாடினார். இவ்வகையில் 'துவலை மலர்த்து மல'ராகின்றது. இப்பாடலிலுள்ள "வான் பூ" என்னும் சொல்லாலும், இன்றும் நம் கண்ணாலும் இம்மலரின் வெண்மையைக் காண்கின்றோம்.

---

1 ஐங் : 342
2 திணை : ஐ : 16
3 ஐங் : 342
4 சிறுபாண் : 51
5 அகம் : 345 : 15, 16.

# 59. தேற்றாங் கொட்டை மலர்.

## இல்லம்.

இல்லம் மரவகை. கலங்கல் நீரைத் தேற்றித் தெளிவாக்க இதன் கொட்டையை அந்நீரில் தேய்ப்பர். கலித்தொகை,

*"இல்லத்துக் காழ் (கொட்டை) கொண்டு தேற்றக்*
*கலங்கிய நீர்போல் தெளிந்து"*[1] - என்றது. பெருங்கதையிலும்[2] இது கூறப்பட்டுள்ளது. தேற்றப் பயன்படும் இக் கொட்டைக்குத் 'தேற்றாங் கொட்டை' என்று பெயர். இக் கொட்டையின் ஆகுபெயராக இல்லம், 'தேறு, தேற்றா' எனப் பெயர்பெற்றது.

'இல்லம்' என்னுஞ் சொற்கு 'வீடு-மனை' என்றும் பொருள் அன்றோ. பரிமேலழகர் இதனைக் கருத்திற்கொண்டு பரிபாடலில் "மனை மாமரம்"[3] என்று வந்ததற்கு "மனை மாமரம் = இல்லம்; ஆவது தேறு" என்று எழுதினார். இது சொல்லளவுப் பொருத்தமாகும்.

*"முல்லை இல்லமொடு மலர......*

*... ... .. ... ... ... ... ... ...*

*கார்தொடங் கின்றே"*[4] - என்றார் பெருங்கண்ணனார். இவ்வாறு இல்லம் முல்லையொடு மலர்தலையும் கார் தொடங்குவதையும் குறுங்குடி மருதனாரும்[5] பாடியுள்ளார். எனவே, இம்மலர் முல்லை நிலத்தது; கார்ப்பருவத்தில் மலர்வது.

*"நத முல்லை உகு தேறு வீ"*[6] - என இப் பூ 'தேறு வீ' என்றும், 'காம்பினின்று கழன்று உதிரும்' என்றும் காட்டினார் முடத்தாமக் கண்ணியார்.

இப் பூவை முல்லை நிலத்தவர் அந்நிலத்துப் பூக்களுடன் மிடைந்து சூடுவர். அந்நிலத் தலைவன் ஒருவன்,

*"குல்லை குளவி கூதளங் குவளை*
*இல்லமொடு மிடைந்த ஏர்ந்தண் கண்ணியன்"*[7] - ஆகத் தோன்றினான். எனவே, இது சூடும் பூ ஆகினும் குறிஞ்சிப் பட்டியலில் இடம் பெறாத பூ.

---

1 கலி: 142 : 64.
2 பெருங் உஞ் 35 : 215.
3 பரி : 11 : 19.
4 அகம் : 364 : 7, 9.
5 அகம் : 4 : 1, 2, 7.
6 பொரு : 200
7 நற் : 326 : 5 ; 6.

# 60. செம்மணிக்கல் மலர்.

## திலகம்

திலகம் என்பது குறிஞ்சிநிலத்து மரம். "நாகம் திலகம் நறுங்காழ் ஆரம்"[1] என மலைநிலத்து மரங்களுடன் பாடப் பட்டது. அவற்றிலும் நாக மரத்துடன் பல இடங்களில் பாடப் பட்டுள்ளது. மேலே கண்ட மலைபடுகடாத்துப் பாடல் அடியை ஓர் எழுத்தும் மாற்றாமல் இளங்கோவடிகளார் தொடுத்துப் பாடியுள்ளார்.[2]

நிகண்டுகள் யாவும் "திலகம் மஞ்சாடி"[3] என ஒரே தொடரில் மஞ்சாடி மரமாகக் கூறியுள்ளன. நச்சர் மலைபடுகடாத் தில் 'திலகப் பூ' என எழுதினாலும் குறிஞ்சிப் பாட்டில் "மஞ்சாடி மரப் பூ" என்று எழுதினார். சிலம்பில் வரும் திலகத்திற்கும் அரும்பத உரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் 'மஞ்சாடி' என்றே பொருள் கொண்டனர். எனவே 'மஞ்சாடி' என்பது இதன் மறுபெயர் எனலாம். சங்க இலக்கியங்களில் மஞ்சாடி இல்லையாதலால் இடைக்கால வழக்காகின்றது.

நிறுத்தல் அளவைப் பெயர்களுள் பொன்னை நிறுக்கும் அளவை ஒன்று 'மஞ்சாடி' என்னும் பெயர்கொண்டது இது மஞ்சாடி மரத்தின் விதை. இரண்டு குன்றி மணி எடை கொண்டது.

குறிஞ்சிப்பாட்டில், 'திலகம்' என்னும் சொல் மட்டும் பூவிற்காகக் குறிக்கப்பட்டுள்ளது.[4] பிற சார்வுகளால் இப் பூ குறிஞ்சி நிலத்தின் கோட்டுப் பூ ஆகின்றது. நாகத்துடன் பேசப் படுவதால் அதற்குரிய வேனிற் பருவமே இம்மலருக்கும் உரிய தாகும்

மாணிக்கக்கல் வகைகளில் 'குருவிந்தம்' என்பது ஒன்று இதன் நிறத்திற்கு எட்டு பொருள்களின் நிறத்தைக் கூறி யுள்ளனர். சிலப்பதிகார உரைமேற்கோளாக வரும் பழம் பாடல்[5] இத்திலக மலரின் நிறத்தையும் கூறுகின்றது. கல்லாடமும் (98 : 32) திருவிளையாடற் புராணமும்

1 மலை : 520.
2 சிலம்பு ; 25 : 18.
3 பிங். நி : 2687.
4 குறி. பா : 74.
5 சிலம்பு 14 : 184 உரை மேற்கோள்

(மாணிக்கம் : 39) இம்மலரின் நிறத்தைக்கூறியுள்ளன. குருவிந்தம் செம்மணி வகை. எனவே திலக மலர் செம்மை நிறத்தது. குருவிந்த மணி நிறத்திற்கு உவமையாகிச் 'செம்மணி மல' ராகின்றது.

## 61. பாலைப் பெயர் பெற்ற குறிஞ்சி மலர்.

### குடசம்.

"குடசமும் வெதிரமும்"[1] -என மலைநிலத்து மூங்கிலுடன் பாடப்படும் இது குறிஞ்சி நிலத்து மரம்.

வெண்மை, செம்மை என்னும் இரு வண்ண மலர்களைத் தனித்தனியே கொண்டது. இதன் வெண்மை மலர் மரத்தை 'வெட்பாலை' என்றனர். வெள்—பாலை என இதில் வெண்மை அடைமொழி இருப்பது பொருந்துகின்றது. "வான் பூங் குடசம்"[2] என்னும் கபிலர் தொடருக்கு நச்சர் "வெள்ளிய பூவினையுடைய வெட்பாலைப் பூ" என்றெழுதினார். இவ் வெண்மைப் பூவின் அமைப்பைக் கொண்டு இடைக்காலத்தார் 'கிரிமல்லிகை' என்றனர். சேந்தன் திவாகரம் இதைக் கொள்ள வில்லை.

சிலம்பில் புறஞ்சேரியிறுத்த காதையில் 'குடசம்' என்ற தற்கு அடியார்க்குநல்லார் 'வெட்பாலை' என்றார். அடுத்து ஊர்காண் காதையில் 'குடசம்' கார்காலத்துச் செம்மை பூக்களின் வரிசையில் அமைந்துள்ளதால், "செங்குடசம் பூ" என்றார். இதுகொண்டும் குடசத்தில் செம்மை வகை உள்ளதை அறியலாம்.

"குரற்றலைக் கூந்தல் குடசம் பொருந்தி"[3] - என மதுரை மகளிர் இதன் செம்மை நிறப் பூவைக் கூந்தலில் சூடியதைச் சிலம்பு பாடியது. மல்லிகைப் பெயர் பெற்றுள்ளமையால் வெட்பாலையாம் வெண்மைக் குடசப் பூவும் சூடப்பட்டிருக்கலாம்

1 சிலம்பு: 13 : 157 ; மணி : 3 : 164
2 குறி: பா: 67,
3 சிலம்பு : 14 : 87.

## 62. சடைநிறத் தளிர் மலர்.

### தில்லை.

தில்ல மரக்காடு தில்லை நகராகியது. அங்கே சிற்றம்பலம் தோன்றிச் சிதம்பரம் வந்தது.

"தில்லையோடு ஒருங்குடன்
கானல் அணிந்த உயர் மணல் எக்கர்" (கலி ; 133 : 1, 2.)

"தண் தில்லை கலந்து கழி சூழ்ந்த" (திணை. நூ : 61) — என்பன இதன் நெய்தல் நில இருப்பைக் காட்டுகின்றன. "கண்டல் வேலி" என்றது போன்று "தில்லை வேலி இவ்வூர்"[1] என இஃதும் வேலியாக அமைந்தது. நீர்நாய் கொழுத்த மீனைச் சுவைத்துத் தில்லையம் பொதும்பில் பள்ளி கொண்டதாம்.[2]

இம்மரத் தளிர் மங்கிய செம்மை நிறங்கொண்டது. இதனை மாற்பித்தியார் என்பார் மாணியின் செம்பட்டைச் சடைநிறத்திற்கு உவமை கூறினார்.[3]

இதன் பூ சிறியது. கொத்தாகப் பூக்கும். சந்தன மஞ்சள் நிறத்தது. நெய்தல் நிலத்துக் கோட்டுப் பூ. முன்பனிப்பருவத்தது. குறிஞ்சிப் பாட்டுப் பூ.[4]

புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்) என்பார் கூத்தரசனைப் போற்றி வழிபட விடியற் பனியில் நகம்பற்றியேறி இம்மலரைக் கொய்ததாகக் கோயிற் புராணம் கூறும். இது பால் வடியும் மரம். இ ஃற்றின் தொடர்பில் போலும் இதனை ஆங்கிலத்தில் 'புலியின் பால் மரம்' (*TIGER 'S MILK TREE*) என்றனர். வில்வம் என்றது போன்று 'தில்வம்' என்றொரு பெயர் இதற்குண்டு. இஃதும் சைவத் தொடர்பில் உண்டானதாகலாம்.

## 63. செம்பொட்டு மலர்.

### பலாசு.

பலாசுபற்றிய உறுதியான விளக்கத்தை நிகண்டுகள் தர வில்லை. பிங்கலம் இதனைப் புரசு என்றதுடன் புனமுருக்காகவும் குறித்தது.[5] சூடாமணி நிகண்டு புனமுருக்கோடு நிறுத்தியது. நச்சரோ புழுகைப் புனமுருக்கென்றார். பலாசத்தைப் 'பலாசம்

1 ஐங் : 131.
2 நற் : 195 : 2-4.
3 புறம் : 252 : 1, 2.
4 குறி. பா : 77.
5 பிங். நி : 2661, 2662.

பூ' என்ற அளவோடு நிறுத்தினார். சேந்தன் திவாகரத்தில் இது பற்றிய பேச்சே இல்லை.

சங்கப் பாட்டுகளில் குறிஞ்சிப்பாட்டில் மட்டும் பெயர் வந்துள்ளது.[1] பரஞ்சோதி முனிவர் இம்மலரைக் குருவிந்த மணி நிறத்திற்கு உவமை கூறினார்[2]

*"செங்கதிர் மேனியான் போல் அவிழ்ந்தன செழும் பலாசம்"*[3]

—எனச் செங்கதிர் நிறத்தைக் காட்டினார். இவர் முள்முருக்காகக் கொண்டார் போலும். ஆனால், பெருங்கதை முதலிய நூல்கள் முள்முருக்கையும் பலாசையும் தனித்தனி வெவ்வேறாகப் பாடியுள்ளன.

இதுபற்றிய முடிவிற்கு மருத்துவ நூல்களே அழைத்துச் செல்கின்றன. புரசையே பலாசாகக்கொண்டு மருந்துகளை உருவாக்கிப் பயன்கண்டுள்ளனர். இதுகொண்டும் ஆங்காங்கு பொருந்தும் குறிப்புகளைக் கொண்டும் புரசையே பலாசாகக் கொள்ளவேண்டும்.

புரசு 'ஆற்றுப் பூவரசு' எனப்படும். பூவரசம் பூப் போன்ற அமைப்பில் சற்றுச் சிறிய அளவுள்ளது. அகன்று நீண்ட மஞ்சள் நிற அகவிதழ்கள் சுற்றடுக்காக அமைந்திருக்கும். ஓர் அகவிதழில் உள்ளடியில் புளியங்கொட்டை அளவில் பெரிய செம்புள்ளி விளங்கித் தோன்றும். இது மருதநிலத்தது. இளவேனிலில் பூக்கும். பொட்டு போன்று அகவிதழ் பெற்றுள்ளதோற்றம் சிவந்த குங்குமச் செம்பொட்டு இட்டுக்கொண்டது போன்றதாகும். இதனால் இதனைச் 'செம்பொட்டு மலர்' எனலாம்.

## 64. நீராடை போர்த்த மலர்.

### அழிஞ்சில்.

'சே' என்றொரு மரம் தொல்காப்பியத்தில்[4] இலக்கணம் பெற்றுள்ளது. 'சேம்பூ' என்று விதியும் பெற்றது. "அழிஞ்சில் சேமரம்; அங்கோலமாகும்"[5] என இது 'அழிஞ்சில்' பெயர் பெற்றது. அங்கோலம், அழிஞ்சி என்றும் வழங்குவர். சிலம்பில் 'சே' என்பதற்கு அருஞ் சொல்லுரைகாரர் "உழிஞ்சிலுமாம்; அழிஞ்சிலுமாம்"[6] என்றார்; அழிஞ்சில் பொருந்தும்.

---

1 குறி. பா. 88
2 திருவிளை: பு : மாணிக்கம் : 89 : 8.
3 திருவிளை: பு : தருமிக்கு : 12 : 1.
4 தொல் : எழுத்து : 279.
5 பிங். நி : 2780.
6 சிலம்பு : 12 : 2, 8.

இம்மரம் நிறைந்த காடு 'அழிஞ்சிக்காடு' எனப்படும் பாலைக்காடு எனவே, இதன் பூ, பாலை நிலப் பூ. வேனிலில் பூக்கும். வெண்மை நிறமுள்ளது. சங்கப் பாடல்களில் பூபற்றிய குறிப்பில்லை. திருத்தக்கதேவர் இதன் பூவை அடையாளங் காட்டி யுள்ளார்.

'தூய வெண்மையான ஆடையை நீரில் தோய்த்துப் போர்த்தியது போன்றது' - என உவமைகாட்டி,

*''மாசில்வெண் டுகிலை நீர்தோய்த்து*
*மேற் போர்த்த வண்ணமேபோல்*
*காசின் மட்டொழுகப் பூத்த அழிஞ்சில்''* 1

— என்றார். இது கொண்டு இது கொத்துப் பூ என்பதையும், மெல்லியது என்பதையும், பனிப்படலம் போன்ற வெண்மை நிறமுடையது என்பதையும் உணரலாம். சூடும் பூவாக இல்லை.

# 65. மணப் பூச்சு மர மலர்.

## ஆரம்.

'ஆரம்' என்பது சந்தன மரம். மணத்திற் பெயர் பெற்ற மரம். மணப்பொருளாகவும் கலைப்பொருளாகவும் பயன்படுவது. ''குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்''[2] என்கிறது பட்டினப் பாலை. இதனைப் பொதியமலைப் பிறப்பாகக் கூறுவர். ''கறிவளர் சந்தனம்''[3] எனக் கபிலர் மலைநிலத்து மிளகுக்கொடி இதில் படர்வதைக் குறித்தார்.

குறிஞ்சிப்பட்டியலில்[4] வந்துள்ள குறிப்பன்றி வேறெங்கும் இதன் பூவைப் பற்றிய குறிப்பில்லை. அங்கும் பெயரளவே உள்ளது.

மரவகையில் கோட்டுப்பூவாக, மலைமரத்தால் குறிஞ்சியாக வேனிலில் பூப்பதாக, வெண்மைப் பூவாக அமைந்தது.

'சந்தனத் தளிர்மாலை''[5] என்றார் திருத்தக்க தேவர். பாரதியாரும் ''சந்தன மலர் புனைந்தே''[6] என்றார். இவ்வை யெல்லாம் வண்ணனை அளவே. மணப் பூச்சிற்குப் பயன்படும் சிறப்புள்ள மரத்தின் பூ என்பதே இதன் குறிப்பாகும். சூடிய தாகச் செய்தியில்லை.

---

1 *சீவ. சி* : 1649
2 *பட். பா* : 188
3 அகம் : 2 : 6
4 *குறி. பா* : 93
5 *சீவ. சி* : 2661
6 *பாஞ். ச* : 160

# 66. மணப்புகை மரமலர்.

## அகில்.

ஆரத்தோடு பேசப்படும் இம்மலைமரம் புகைந்து மணந் தருவது. இதன் பூவும் குறிஞ்சிப்பாட்டளவே.[1] இதனைக் 'காழ்வை' என்னும் மறுபெயரால் கபிலர் குறித்துள்ளார். காழ் என்னும் வைரம் பாய்ந்த மரம் எனப்படுவதால் இப்பெயர் பெற்றது.

இதன் பூ சிறியது. விசிறி வடிவினது. கொத்தாகப் பூக்கும். மஞ்சள் நிறமென்பர். குறிஞ்சி நிலத்தில் வேனிலில் பூக்கும்.

# 67. வெள்ளிலோத்திரம்.

## சருகு மண மலர்.

ஒரு பாடல்; அதனிலும் இரண்டு அடிகள்; வெள்ளிலோத் திரம் என்னும் நெடும்பெயருள்ள மலரின் வரலாற்றை வடித் துள்ளன. இவ்வொன்றுதான் சங்க இலக்கியத்தில் இதுபற்றி அறிவிக்கும் பாடல்:

*"மால்வெள் ளோத்திரத்து மையில் வான்பூ*
*அருஞ்சுரம் செல்வோர் சென்னிக்கு ஊட்டும்"*[2] —என்பது அப்பாடலின் அடிகள். இதன் ஒவ்வொரு சொல்லும் இப்பூவின் தன்மைகளைக் காட்டுகின்றது.

இஃதொரு நெடிய மரம் என்பதை "மால்" என்னும் சொல் சொல்கின்றது. எனவே இது கோட்டுப் பூ.

வெள்ளோத்திரம் இதன் பெயர். பிற்காலத்தோர் 'வெள்ளி லோத்திரம்' என்றாக்கினர். விளா மர வகையாகக் கொண்ட னர். சிலர் விளாவாகவே கொண்டனர். இது தவறு. இஃதொரு தனி மரம்.

இப்பெயரிலுள்ள "வெள்" என்பது இதன் வெண்மை நிறத்தைக் குறிக்கின்றது. மேலும் "வான்" என்பதும் இதன் வெண்மையை வழிமொழிகின்றது. அதற்கும் அடைமொழியாக அமைந்த "மை இல்" என்பது இவ்வெண்மையின் தூய்மையைக் காட்டுகின்றது. திருத்தக்க தேவரும், "வெள்ளிலோத்திரம்

---

1 குறி, பா : 93 2 ஐங் : 301

விளங்கும் வெண்மலர்''[1] என்று விளங்கும் வெண்மையாகப் பாடினார்.

இது கொத்தாகப் பூப்பதை 'இணர்' குறிக்கின்றது.

''சுரம்'' என்பதால் இது பாலை நில மலராகின்றது.

''செல்வோர் சென்னிக்கு ஊட்டும்'' என்பதால் பாலை நிலத்திற் செல்வோர் இம்மலரைச் சூடிக்கொள்வதை அறிகின்றோம். ஒப்பனைக்காக அன்றி ஒரு பயன் கருதிச் சூடினர். அரஞ்சுரமாகிய பாலைநிலத்தில் கடிய வெப்பத்தை இம்மலரின் தண்மை குளிர்ச்சி ஊட்டித் தணிக்கும் தன்மையது. இதனை ''ஊட்டும்'' என்னும் சொல் குறிப்பாகச் சொல்லி நிற்கின்றது. கோடைக்கால வெம்மைக்குப் பயன்பட்டதால் இது வேனிலில் மலரும் மலர். திருத்தக்கதேவர் ஒப்பனை கருதியும் மகளிர் மாலையாக்கி அணிவதைப் பாடினார். இருப்பினும் குறிஞ்சிப் பாட்டில் இடம் பெறாதது. மேலே கண்ட பாடல்; ஐங்குறுநூற்றில் உள்ளது; பாலைத் திணையின் முதற்பாடல். அப்பாடலின் முன்னிரண்டு அடிகள். பாடியவரும் பாலை பாடுவதால் பெயர் பெற்ற பெருங்கடுங்கோ.

இம்மலர் மணமுள்ளது. மலர் காய்ந்து சருகானாலும் மணக்கும். இச்சருகைப் 'பொருக்கு' என்பர். இப்பொருக்கை அரைத்துச் சாந்தாக்கிக் காந்தருவதத்தைக்குப் பூசினாராம். குவளை இதழின் தடிப்பு அளவில் பூசினாராம். இதனை,

*''...வெள்ளிலோத் திரத்தின் பூம்பொருக் கரைத்த சாந்தின்*
*காசறு குவளைக் காமர் அகவிதழ் பயிலம் (தடிப்பு)*
*அட்டி''[2]*

என்றார். பாலை வெம்மைக்குக் குளிர்ச்சியைத் தரும் இம்மலர் 'சருகு மணக்கும் மல'ருமாகும்.

ஆன்மிகத்தார் இம்மலரைத் தும்பையைப்போன்று அமைதிக் குணங்களுக்குரியதாகக் கொண்டனர்.[3]

1 சீவ. சி : 2685
2 சீவ. சி : 622
3 புட். வி : 83 : 2

# 68. விரிந்த அரக்கு மலர்.

## புழகு.

மலையெருக்கு 'புழகு' எனப்படும். இஃதொரு மலைச்செடி. இதன் வேர் கிழங்காகக் கற்பிளவுகளில் பாய்ந்திருக்க இச்செடி தழைத்து வளரும். பல செடிகள் நெருங்கியிருக்கும். இவற்றை மலைபடுகடாம்,

> "அழுந்துபட்டு அலமரம் புழகு அமல் சாரல்" [1]
>
> – என்னும் ஓரடியால் விளக்கியுள்ளது.

பருத்து அழகானவற்றைக் குறிக்கச் சங்க இலக்கியங்களில் பரு + ஏர் = பரேர் என்னும் அடைமொழி பல பாடல்களில் அமைந்துள்ளது. இவ்வடைமொழியோடு 'அம்' என்னும் அழகுச் சொல்லையும் சேர்த்துக் கபிலர் "பரேரம்புழகு" என்றார். இது கொண்டு இப்பூ பருத்தது; மிக்க பேரழகுடையது என்று கொள்ள லாம். இதற்கு நச்சர் பருத்த அழகினையுடைய மலையெருக்கம் பூவும் என்றவர் 'செம்பூவுமாம் புனமுருங்கையும் என்பர்' என் றார். செம்பூ நிறத்தளவில் பொருந்தும். புனமுருங்கை வேறு. மலையெருக்கே பொருந்துகின்றது. கொங்குவேளிர் "அகன்றலைப் புழகு' [2] என்றமை கொண்டு இது அகன்று விரிந்து தழைப்பதை அறியலாம்.

மேலும், கபிலர் இதன் நிறத்தையும் அழகமைப்பையும் விரிக்கும் கருத்தில் "அரக்கு விரித்தன்ன பரேரம் புழகுடன்" என்றார். அரக்கு போன்று செம்மை நிறங்கொண்டது; அரக்கைச் சிதறிவைத்ததுபோன்று அழகமைப்புடையது, இப்பூ.

புழகுப் பூ குறிஞ்சி நிலத்துக் கோட்டுப் பூ. அரக்குச் செம்மையில் பேரழகுடையது. நற்செம்மைப் பூக்களுக்குரிய கார்ப் பருவத்தை இதற்குக் கொள்ளலாம். இலக்கியங்களில் இப் பூவைக் காணக்கூடவில்லை.

மற்றொரு சிறப்பிடத்தைக் கபிலர் இதற்கு அமைத்துள்ளார். மலர்ப் பட்டியலை வேங்கைப் பூவுடன் முடிக்க எண்ணியவர்,

> ' ... ... . ... வேங்கையும் பிறவும்
>
> அரக்கு விரித்தன்ன பரேரம் புழகு டன்"[3] என வண்ண

---

1 மலை : 219. 3 குறி. பா : 95, 96.

2 பெருங் : இலா : 12 : 27,

வண்ண மலர்களை நிறைவேற்றினார். 'விரித்த அரக்கு மல'ராம் புழுக்கு இஃதொரு தனிச்சிறப்பாகும்.

# 69. கருங்காலி மலர்.

## மாரோடம்.

மாரோடம் என்பது இதன் பெயர். தழைத்திருப்பதைக் குறிக்கப் "பசுமாரோடம்" என்றும், மணத்தைக் குறித்து "நறுமாரோடம்"[1] என்றும், பூவின் அளவைக் குறிக்கச் "சிறு மாரோடம்"[2] என்றும் பாடினர். கொங்கு வேளிர் "அணி மாரோடம்"[3] என்றார்.

அழகிய மரப்பொருள்கள் செய்யப் பயன்படுத்தும் கருங்காலி (ROSE WOOD) மாரோடம். இப் பூ செம்மை நிறத்தது. இது குறித்தே உரையாளர் இதனைச் 'செங்கருங்காலி' என்றனர்.

இது மலைநிலத்து மரம். கொங்குவேளிரும் உதயணன் குறிஞ்சி நிலத்தைக் கடக்கும் பகுதியில் இதனை வைத்துப் பாடினார். எனவே இது குறிஞ்சி நிலப் பூ.

இது நறுமணங் கமழும் பூ.

*"நறுமா ரோடமொடு உடனெறிந்து அடைச்சிய*
*செப்பு இடந்தன்ன நாற்றம்"*[4]

— என அதிரல், பாதிரி இவற்றுடன் பெய்துவைத்த செப்பைத் திறந்தால் நாறுவதைப் பெருங்கடுங்கோ பாடினார். இப்பாடல் "முதிரா வேனில் எதிரிய" மலர்களாகக் குறிப்பதால் இது இளவேனிற் பூ.

*"பசுமா ரோடமொடு ஆம்பல்*
*இவள்*
*போது அவிழ் முச்சி ஊதும் வண்டே"*[5] என்னும் அடிகள் மகளிர் உச்சியில் சூடியதையும், வண்டு மொய்க்கும் மணத்தையும் காட்டுகின்றன. எனவே இது சூடும் பூ.

மரத்தால் 'கருங்காலி மல'ராயினும் செயலால் காட்டிக் கொடுக்கும் 'கருங்காலி' அன்று.

---

1 நற் 337 : 5.
2 குறி. பா : 78.
3 பெருங் ; உஞ்சை : 50 : 31
4 நற் 337 : 3 — 6.
5 ஐங் ; 93.

## 70. நீர்க்கொடி மலர்.
### செங்குரலி.

'சிறுசெங்குரலி' எனக் கபிலரும் [1] கொங்குவேளிரும் [2] பாடினர். இதனைக் 'கருத்தாமக் கொடிப் பூ' என்பர். இவ்விரு பெயர்களைக்கொண்டே இப்பூவைப் பற்றி அறிந்துகொள்ளலாம்

'தாமக்கொடி' என்றால் நீர்க்கொடி. எனவே, கருமையான நீர்க்கொடியில் பூக்கும் பூ. 'குரலி' என்றால் கொத்தானது. சிறிய அளவில் செம்மை நிறத்தில் கொத்துப் பூ.

அடைநெடுங்கல்வியார் என்னும் புலவர் இதனைச் 'செங்குரலி' என்று பாடினார். நீர்நாய் வாளை மீனைக் காலை உணவாகப் பெறுவதற்கு இக்கொடி படர்ந்த குளத்தைக் கலக்கியது. இதனை,

*"ஒண்செங் குரலித் தண்கயம் கலக்கி*
*வாளை நீர்நாய் நாள்இரை பெறூஉம்"* [3] என்றார். இது கொண்டு இக்கொடிப் பூ நீர்வளம் மிக்க மருத நிலத்தது என்றும் கார், கூதிர்ப் பருவங்களில் மலரும் என்றும் அறியலாம்.

## 71. வேர்ப் பெயர் மலர்.
### செங்கோடு வேரி.

வெட்டி வேர், விளாமிச்சை வேர் முதலியன மணங்கமழும் வேர்கள். இவற்றை 'வேரி' என்பர். இவைபோன்று மணக்கும் வேர்கொண்ட ஒரு மரத்தின் பூ, "கோடு வேரி" எனப்பட்டது 'கோட்டு வேரி' என்பது 'கோடு வேரி' என்றாகியிருக்கும்.

கபிலர் இப்பூவின் செம்மை நிறங்கருதிச் "செங்கோடு வேரி" [4] என்றார். "செங்கோடுவேரிப் பூ," என்றார் நச்சர் கார்ப்பருவ ஒப்பனைப் பூக்களைக் கூறும் இளங்கோவடிகளார்

*"செங்கொடு வேரிச் செழும்பூம் பிணையல்"* [5] -என்றார். 'செங்கோடு' என்பதே சீர் கருதிச் 'செங்கொடு' என்றுள்ளது. கார்ப்பருவத்தில் செம்மை நிறமுடையவற்றால் ஒப்பனை செய்து கொண்டதைப் பாடுமிடத்தில் இஃதமைந்துள்ளது. இப்பூவைக்

---

1 குறி. பா : 82
2 பெருங் : இலா : 12 29.
3 புறம் : 288 : 1, 2.
4 குறி : 64.
5 சிலம்பு . 14 : 91

கொண்டு செழிப்பான பிணையலாக்கி அணிந்துள்ளனர். எனவே சூடும் பூ.

கொங்குவேளிரும் இதனை முல்லை நிலத்து ஆற்றங்கரை மரங்களின் வரிசையில் வைத்துள்ளார்.[1] இவ்வாறு தேர்ந்து அமைக்கும் முறையை இவர் ஆங்காங்கு கையாண்டுள்ளார்.

இவைகொண்டு, இக்கோட்டுப் பூ, முல்லை நிலத்தில் கார் காலப் பூவாகச் செம்மை நிறத்தில் விளங்குவது.

## 72. ஓம மலர்.

### வானி.

வானி என்னும் பூவைக் குறிஞ்சிப் பாட்டு ஒன்றிலேயே காண்கின்றோம். இதற்கு நச்சர் ''வானிப் பூ'' என்று பொதுவில் எழுதி நழுவினார். வானி பல பொருள் ஒரு சொல். வானியாறு என்றொரு ஆறு உளது. அகர முதலிகளில் ஓமம் என்னும் பூண்டு, வானியாகக் கொள்ளப்பட்டுள்ளது. ஓமம், வானி இரண்டும் தமிழ்ச் சொற்கள்.

ஒருவகை ஓமம் சமற்கிருதத்தில் 'பரசிகாய வானி' எனப் படும். இப்பெயரில் 'வானி' என்னும் சொல் அமைந்துள்ளமை யும் ஒரு சார்புச் சான்றாகின்றது.

இத்தொடர்புகளில் வானிப் பூவை 'ஓமப் பூ' எனலாம். ஓமம் நிலத்தில் வளரும் ஒரு பூடு. எனவே, நிலப்பூவாகும். இப் பூ இளமஞ்சள் நிறங்கொண்டது. வெறும் பூடு அளவிலான இதனைக் கபிலர் மணப்பூ வரிசையில் கோப்பாரா? சிறுபூளை, பஞ்சாய்க்கோரை, கஞ்சாங்கோரை, நாணல் முதலியவற்றைக் கோத்துள்ளமையை நோக்கும்போது இஃதும் அமைக்கப்பட்டிருக் கலாம் என்றே படுகின்றது.

ஓம வித்து மணக்கும். இதன் பூவும் அவ்வகை மணங் கொண்டது. கொத்துப் பூ. மலைப்பகுதிப் பூடாகிய இது குறிஞ்சி நிலத்தது. ஓமம் பூக்கும் பொதுப் பருவம் வேனிற் பருவமாகும்.

ஓமத்திலிருந்து வடிக்கப்படும் மருந்து நீர் 'ஓம நீர்' எனப் படும். ஓமப்பொடி அறிவோம். இதன் பூவையும் மருந்துப் பொருளாகக் காட்டியுள்ளனர்.

---

1 பெருங். இலா : 12 : 25. 2 குறி. பா : 69

# 73. பொன்நிறுவை மணி மலர்.

## கண்ணி.

பூங்கொத்துச் சொல்லால் பெயர் பெற்ற 'குரலி' போன்று தலைச் சூட்டு மலராம் 'கண்ணி'யாற் பெயர் பெற்றது ஒரு மலர். அதன் குறுமையும் நறுமையுங்கொண்டு கபிலர் அதனைக் "குறு நறுங்கண்ணி'[1] என்றார். இவ்வடைமொழியால் முஞ்ஞையும் "குறுநறுமுஞ்ஞை"[2] எனப்பட்டது.

இக்கண்ணிப்பூ குன்றி மணியைத் தரும் கொடியின் பூ. அவரைப் பூவைப் போன்று வடிவமைப்புடையது. இளஞ்செம்மை நிறங்கொண்டது. ஒழுங்கு வரிசையில் மேல்மேல் குறுகிய பூங் கொத்து. இக்கொத்தின் அமைப்பு தலையில் சூட அமைத்த கண்ணி போன்றது. அப்படியே கொத்தாகக் சூடிக் கொள்ளலாம். காட்டுக் கொடியாகிய இது முல்லை நிலத்தது. வேனிற் பூ.

இதில் விளையும் குன்றிமணி பொன்னை நிறுக்கப் பயன் படும். குறிஞ்சிப்பாட்டிலன்றி வேறெங்கும் இப்பூ பற்றிய குறிப்பில்லை.

# 74. வாடற் பூ மலர்.

## செம்மல்

'செம்மல் பல பொருள் ஒருசொல். வாடிய பூவைச் 'செம்மல்' என்பதை அறிந்தோம். ஒரு மலரே இப்பெயர் பெற்றுள்ளது.

கபிலர் "சேடல் செம்மல்"[3] எனத் தனி ஒரு பூவாகப் பாட நச்சர் இதனைச் 'சாதிப் பூ' என்றார். சாதிப் பூ ஒருவகை முல்லை. இது சற்று நீண்ட இதழ்களை உடையது. வெண்மை நிறத்தது. கொத்துப் பூ. முல்லை நிலத்துக் கார்காலப் பூ. சூடும் பூ. வாடற் பூப் பெயரைப் பெறினும் மணங் கமழ்வது. வாடினும் மணந்து இப்பெயர் பெற்றிருக்கலாம்.

---

1 குறி. பா : 72
2 புறம் ; 197 : 11
3 குறி. பா : 82

# 75. குறத்தி மலர்.

## வள்ளி.

வள்ளி என்பது கொடி. நீரின்றேல் வாடும். வள்ளுவரும் "வாடிய வள்ளி முதல் அரிந்தற்று"[1] என்றார். மகளிர் தம் மார்பில் அழகுக் கோலமாக இக்கொடியின் உருவைப் பச்சை குத்திக் கொள்வர்.

இப் பூவைக் கடப்ப மலர் மாலையின் இடைஇடையே வைத்து அழகுபடுத்தியதை நல்லச்சுதனார்,

"*சுருளுடை வள்ளி இடையிடுபு இழைத்த*"[2] —என்றார். "சுருளு தலையுடைய வள்ளிப் பூ" என்றார் பரிமேலழகர். இதன் படி இப்பூவின் மேற்பகுதி சுருண்டு தோன்றும். மருதநிலத்துக் கொடிப் பூவாகிய வள்ளிப் பூ இளமஞ்சள் நிறத்தில் இளவேனிற் பருவத்தில் மலரும்.

குறக்குல அழகி வள்ளி இதனாற் பெயர் பெற்றவள். முருகனைப் பாடும் கேசவனார்,

"*நறுமலர் வள்ளிப் பூ நயந்தோயே*"[3] —என இவளை மணக்கும் வள்ளி மலராக்கி நயக்க வைத்தார். கபிலரும் இப் பூவைக் குறித்துள்ளார்.[4]

# 76. செம்மணி மலர்.

## மணிச்சிகை.

கண்ணிப் பூவையே குறிக்குமோ என்னும்படி மணிச்சிகை என்றொரு மலரைக் கபிலர் குறித்துள்ளார். இதன் சொற்பொருள் கொண்டு இதனைக் குன்றிமணி மலர் எனக் கருத இடமுண்டெனினும் நச்சினார்க்கினியர் கண்ணியைக் குன்றி என்றெழுதி மணிச்சிகையைச் செம்மணிப் பூ என்று காட்டியுள்ளார். குன்றி மணியைப் போன்று மலர்க்கொத்தின் மேலுச்சியில் ஒருவகைச் செம்மணியைப் பெற்றுள்ள மலர் என்று கொள்ளுவதன்றி வேறு ஒன்றும் விளக்கம் பெறுதற்கில்லை. மற்றெவரும் இதனைக் குறித்தாரல்லர்.

---

1 குறள் : 1304:
2 பரி : 21 : 10
3 பரி : 14 : 22
4 குறி. பா : 79
5 குறி. பா : 64

# 77. வல்லோசை வேண்டும் மலர்.

## மந்தாரம்.

கற்பகம், மந்தாரம், சந்தானம், அரிசந்தானம், பாரிசாதம் எனப்படும் ஐந்தும் தேவருலகத்திலிருந்தும் கொணரப்பட்டவை என்பது புராணக் கருத்து. சிலப்பதிகாரத்திற்கு முந்திய இலக்கியங்களில் மந்தாரம் பற்றிய செய்தியில்லை. எனவே, தமிழகத்தில் இது கி. மு. மலர் அன்று.

தெய்வத் தொடர்பு காட்டியதால் பலவற்றிற்கும் பெருமை யேற்ற இதன் பெயரைக் கூட்டினர். அந்திமந்தாரை, கொக்கு மந்தாரை (கொக்கிறகு), காட்டு மந்தாரை (ஆத்தி) எனச் செடி, மரம் முதலியவற்றிற்கெல்லாம் பெயரேற்றினர். கதைப்படி இது மரம். அந்தி மந்தாரை சிறு செடி. இதனை 'அந்தி மல்லிகை' என்பர்.

*"வெள்ளை மந்தாரம் முல்லை"* [1]

—என்றபடி இதன் நிறம் வெண்மை. அந்தி மந்தாரை மஞ்சளிலும் செம்மையிலும் பூக்கும். இஃதொரு காட்டுச் செடிஎன்ற வகையில் முல்லை நிலத்தில் கூட்டலாம்.

கண்ணகியார்க்குக் கல்லெடுக்க வஞ்சினம் கூறும் செங்குட்டுவன் "கல் தாரான் எனில்" என்று தொடங்கி,

*"அலர்மந் தாரமோ டாங்கயல் மலர்ந்த*
*வேங்கையொடு தொடுத்த ஓங்குவிறல் மாலை"* [2] யை வடவர் சூடுவதையும் பார்க்கின்றேன்" – என்றான்.

இஃது இந்திரனுக்கு மாலையாவ தென்றும், பாண்டியன் நெடுமாறனுக் குரியதாக இருந்ததையும் கண்டோம். (இந்நூற் பக்கம் 40)

இம்மலர் மாலையில் வண்டு காந்தார இசையை முரலு வதாகத் திருத்தக்க தேவர் எழுதினார்.[3]

*"மாணிக்கவாசகர்,*
*" .. ... ... ... விரையார் நறவம்*
*ததும்புமந் தாரத்தில் தாரம்பயின்று மந்தம் முரல்வண்டு* [4]

---

1 திருவிளை. பு : இந்திரன் முடி : 12.
2 சிலம்பு : 26 : 188, 189.
3 சீவ. சி : 1959
4 திருவா : நீத்தல் : 86.

எனப்பாட இதனை விளக்கிய கா. சு. பிள்ளையவர்கள் "மந்தார மலரைத் திறப்பிக்க வல்லோசை வேண்டும் "என்றெழுதினார்கள். வண்டின் இசையிலும் 'வல்லோசையை வேண்டும் மலர்" இது.

## 78. செத்த குரங்கு மலர்.

### செவ்வந்தி.

செவ்வந்தி ஒரு சிறு செடி. தமிழ்நாட்டில் வந்திறங்கிய இனத்தில் இஃதொன்று. சிவந்த நிறத்தில் அந்தியில் மலர்வது கண்டு தமிழர் செவ்வந்தி எனப் பெயரிட்டுள்ளனர். 'சிவந்தி' என்றும் 'சாமந்தி' என்றும் மருவி வழங்கப்படும்.

சிவப்புப் பெயர் பெறினும் இதில் வெண்மை, மஞ்சள், இளஞ் சிவப்பு நிறப்பூக்கள் உள்ளன. யாவும் ஒத்த அமைப்புடையவை. செடியியலார் இதன் ஒவ்வோரிதழையும் ஒவ்வொரு பூவாகக் கொள்வர். அவ்வகையில் இஃதொரு கொத்துப் பூ. இஃதொரு காட்டுப் பூவாகையால் தமிழ் அமைப்பிற்கு முல்லை நிலப்பூ எனலாம். பல பருவங்களிலும் மலரும்.

இதன் மஞ்சள் நிறப் பூவைத் 'தங்கச் சிவந்தி' எனப் பொன்னாகச் சொல்வர். இதன் கிரேக்கப் பெயரும் 'பொன் பூ' என்னும்பொருள் தருவது. தமிழ்மன்னர்க்கு அடையாளப்பூ அமைந்தமை போன்று சப்பானிய மன்னர்க்கு இது அடையாளப் பூவாகும். இப்பெயரை வைத்து ஒரு புலவர் இருபொருள் படும்படி 'தங்கச் சிவந்தியா – தங்கச்சி வந்தியா' என்றார்.

திருவிளையாடற் புராணத்திற்கு முந்திய இலக்கியங்களில் இதுபற்றிய செய்தியில்லை. எனவே 16, 17–ஆம் நூற்றாண்டளவில் இப்பூ இங்கு வந்திருக்கலாம். "மலர்ந்த செவ்வந்திப் போதும்

"வகுளமும் முதிர்ந்து வாடி
உலர்ந்தும்மொய்த் தளிதேன் நக்கக்
கிடப்பன"[1] –என்று நற்குலத்தவர் உயிரைக்கொடுத்தும் உதவி செய்வர் என்பதற்கு உவமையாக்கிப் பாடினார் பரஞ்சோதியார்.

---

1 திருவிளை. : பு. : தருமி : 17.

நிகண்டுகளிலும் இதனைப் 'பட்டிகை' என்று பிங்கலமும் 'பறிவை' என்று சூடாமணியும் குறிக்கின்றன. சேந்தன் திவாகரத்தில் செய்தியில்லை. எல்லப்பநாவலர் எழுதிய சிராமலைப்புராணம் இதன் பெயரால் செவ்வந்திப் புராணம் எனப்படுகிறது.

சாமந்தி என்னும் வழக்கை வைத்து ஒரு புலவர் தலையிற் சூடிச் செல்லும் ஒரு மங்கையைப் பார்த்து, இருபொருள்படும்படி "செத்த குரங்கை(சா மந்தியை)தலைமேற்சுமந்துதிரிந்தனளே"[1] என்று பாடினார். செத்த குரங்கு பரஞ்சோதியார் குறித்தபடி செத்து வாடிக்கிடந்தாலும் வண்டிற்கு தேன்விருந்து வைக்கும் மலர்.

# 79. கோரை மலர்.

## எருவை.

சாய் என்றால் கோரை. மலையில் வளரும் பசுமைக் கோரை ஒன்று 'பைஞ்சாய்' எனப்படும். இதன் இலக்கியப் பெயர் எருவை இக்கோரையால் மகளிர் பாவை செய்து விளையாடுவர். இதனைப் 'பஞ்சாய்ப் பாவை' என்பர். இதன் நாரால் மலர்க் கோதை தொடுப்பர். ஐங்குறுநூறு இதனைப் "பஞ்சாய்க் கோதை"[2] என்கின்றது.

இதன் மலர்க்கு இலக்கியத் தகுதி உண்டு. பரிபாடலில் வரும், "எருவை நறுந்தோடு"[3] என்பதை விளக்கும் பரிமேலழகர்

> "எருவையது நறுந்தோட்டையுடையது. எருவை என்பது 'எருவை செருவிளை மணிப்பூங் கருவிளை' (குறி. பா : 68) எனக் கபிலர் பெருங்குறிஞ்சியினும் வந்தது" எனக் குறிஞ்சிப்பாட்டின் ஆட்சியையும் எடுத்து மொழிந்தார்.

இவைகொண்டு, எருவைப் பூ நறியது. தோடு என்னும் அளவில் இதழ்களைக் கொண்டது என அறியலாம். இது செம்மை நிறக் கொத்துப் பூ.

"எருவை நீடிய பெருவரை[4] என்று நற்றிணையில் ஈரிடங்களில் குறிக்கப்படுவது கொண்டும் மலைத்தொடர்புடனே எங்கு

---

1 தனிப்பாடல்
2 ஐங் : 54 : 5
3 பரி ; 19 : 77
4 நற் : 156, 294.

குறிக்கப்படுவதுகொண்டும் இது குறிஞ்சி நீல மலராகின்றது. இது கார்காலப் பூ என்பதைப் பின்வரும் சேந்தன்பூதனார் பாடல் காட்டுகின்றது :

*"தாவில் பெரும்பெயல் தலைஇய யாமத்து*
*.... .... ... ... .... ... .... ... .... ... .... ....*
*எருவை நறும்பூ நீடிய*
*பெருவரைச் சிறுநெறி"*[1]

குறிஞ்சி மேடையில் இடம்பெற்றமையால் சூடும் பூவாகும் இது கோரை மலராயினும் கோதை மலர்; பாவை மலர்,

## 80. பஞ்சு மலர்.

### பருத்தி.

பருத்திப் பூவைக் கபிலர் "பாரம்"[2] என்று பாடினார் இதற்கு நச்சர் "பருத்திப் பூ" என்று எழுதினார். ஆடைக்குப் பஞ்சைத் தரும் இது செடிப்பூ என்னும் அளவில் நிலப் பூ. மஞ்சள் நிறத்தில் தனிப் பூவாகப் பூக்கும். கோடைகாலப் பூ "கோடைப் பருத்தி"[3] என்று புறம் பாடியது. மருத நிலப் பூ.

பாரம் என்னும் பருத்திப் பெயரில் ஓரூர் மிஞிலி என்பவனுக்குரியது. "மிஞிலி காக்கும் பாரத்து அன்ன"[4] என்று பரணர் பாடியுள்ளார். பருத்தியூர் எனவும் ஊர்ப்பெயர் உளது.

இப் பூ குருதி வெள்ளை, குருதி அழல்நோய், புண் முதலியவற்றிற்கு மருந்தாகும்.

குறிஞ்சிப் பட்டியல் அளவில் சூடும் பூ.

---

1 நற் : 261 : 5 ; 9, 10.
2 குறி. பா : 92.
3 புறம் : 393 / 12
4 நற் : 265 : 4, 5.

# 81. பொன் ஊட்ட மலர்.

## செம்பருத்தி.

பருத்தி இனத்தைச் சேர்ந்தது செம்பருத்தி. இதனைச் செம்பரத்தை, செம்பரத்தம் என்பர். இது பருத்தி இனத்த தாயினும் பஞ்சுள்ளதன்று. பருத்தியைவிடப் பெரிய செடியா யினும் புட்ப விதி[1] இதனை நிலப் பூவாகவே காட்டியது. இதில் 12 வகை உண்டென்பர்.

சிவந்த இதழ்களை உடைய இது சிலவகைகளில் பூக்கும். ஒருவகைப் பூ புனல் விரிவு வடிவத்திலும், மற்றொன்று ஒழுங்கற்ற அடுக்காகவும் பூக்கும். இது வழிபாட்டிற்குரிய பூ. காட்டுப் பூ என்னும் வகையில் முல்லை நிலத்ததாகிய இது கார்காலத்தில் அதிகம் மலரும்.

இப் பூ பொன் சத்துள்ளது என்பர். பூவைப் பச்சையாகவே தின்னலாம். எண்ணெயிலிட்டு ஊறவைத்து முடி வளர்ச்சிக்குத் தடவலாம். கருக்கு நீரிட்டும் பொடித்தும் பயன்படுத்தலாம். ஊட்டச் சத்தால் இது 'பொன் பூ.'

# 82. மாணிக்க மலர்.

## மாதுளை.

மாணிக்கக் கல்லில் ஒருவகை சாதுரங்கம் எனப்படும் அதன் நிறத்திற்கு மாதுளைப் பூவும் கூறப்பட்டுள்ளது.[2] அபிராமி அம்மையின் உடல் நிறத்தைச் செக்கச் சிவந்த பொருள் களாக உருவகஞ் செய்த அபிராமி பட்டார்,

*"மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்போது"*[3] —என

மாணிக்கத்துடன் பாடினார். இஃது அவரது அபிராமி அந்தாதி யில் முதற்பாட்டு. இந்நூலின் இறுதிப் பாட்டிலும்,

*"அண்டமெலாம் பூத்தாளை*
*மாதுளம் பூ நிறத்தாளை"*[4] —என்றமைத்தார்.

இடைப்பாடல்களில் பாடவில்லை. இயல்பாகவோ திட்டமாகவோ முதலிலும் இறுதியிலும் அமைந்த இவ்வமைப்பு நயத்தற்குரியது.

---

1 புட். வி. 5 : 3.
2 சிலம்பு : 14 : 186 உரைமேற்கோள்
3 அபி அந் : 1.
4 அபி. அந் : 101.

இதுபோன்று, இளம் மதலையாம் கண்ணனுக்குத் தாலாட்டு பாடிய பெரியாழ்வார், முதற்பாட்டை "மாணிக்கம்" என்று தொடங்கினார். அடுத்த பாட்டில் "ஒண் மாதுளம் பூ இடைவிரவிக் கோத்த"[1] என்றார். மற்றோரிடத்திலும்[2] அரைஞாணில் மாதுளம் பூ கோக்கப்பட்டுள்ளதைப் பாடினார். இவ்வாறு, மாணிக்கத்துடன் நிறத்தால் தொடர்பு கொண்டது மாதுளைப் பூ. இப்பூவைத் தருவது ஒரு பெருஞ் செடி. எனவே, இது கோட்டுப் பூ. இச்செடி இமயமலை முதல் பால்கன் மலை வரையுள்ள மலையடிவாரக் காடுகளில் வளர்வது. எனவே இது, முல்லை நிலத்தது. தமிழகத்திற்கு வந்திறங்கியது. பயிர் செய்வதற்கேற்பப் பூக்குமாயினும் பெரும் பகுதி கார்காலப் பூ. தனிப் பூவாகவும் தனித்தனிக் காம்பில் இரண்டு மூன்று சேர்ந்தும் பூக்கும். இதன் புறவிதழ் குப்பி போன்ற கிண்ண அமைப்புடையது. 5 முதல் 7 வரை அகவிதழ்களைக் கொண்டது. முழு வடிவத்தில் மணி வடிவப் பூ.

இதில் இனிப்பு மாதுளை, புளிப்புப் மாதுளை, மாதுளை என வகைகள் உள. முன்னிரண்டும் கனிச்சுவையால் அமைந்த பெயர்கள். பின்னது பூவின் சிறப்பால் அமைந்த பெயர். மாதுளங் கனிச் சாற்றின் இன்சுவையை உணர்ந்துள்ளோம். இச்சாறு பொதிந்த வித்து மாணிக்க முத்துமுத்தாக விளங்கும்.

சங்கப் பாடல்களிலோ காப்பியங்களிலோ இதன் பூ பற்றிய செய்தியில்லை.

பெரும்பாணாற்றுப் படையில் மாதுளங்காய் கறிக்குதவுவது பாடப்பட்டுள்ளது.[3] சாவக நோன்பியான கோவலனுக்குச் சமைக்கக் கண்ணகியார்பால் மாதரி வழங்கிய பொருள்களில் மாதுளங்காயும்[4] இடம் பெற்றது. இஃதொரு தூயகறியுணவு இக்கறிக்காவதைக் 'கொம்மட்டி மாதுளை' என்பர்.

ஆன்மீகத்தில், இப்பூவிற்கு இடமுண்டு. உமையம்மைக்கு

*"தாது மாதுளை (பூ) சாத்தத் தனங்கள் எய்தும்"*[5]

—என்று புட்பவிதி செல்வங்கள் சேர்வதற்கு இப் பூ வழிபாட்டை ஒரு வழியாகக் காட்டுகின்றது.

இஃதொரு மருந்துப் பூவுமாகும். இதன் முகிழைக் காயவைத்துப் பொடி செய்து இருமலுக்குக் கொடுக்க அது நீங்கும்.

---

1 பெரியாழ் : திரு : மாணிக்கம் : 1, 2.
2 பெரியாழ் : திரு : உய்ய உலகு : 10
3 பெரும்பாண் : 306, 307
4 சிலம்பு : 16 : 25
5 புட், வி : 40 : 3.

*"இரத்தபுட்டி வல்லபயன் உண்டாக்கும்;*
*பூதலத்தில் மாதுளையின் பூ"* —என அகத்தியர் குணபாடம் இப்பூவை வல்லமை வழங்கும் ஊட்ட உணவாகக் காட்டியுள்ளது.

## 83. கூடினர் துவரிதழ் மலர்.

### செங்கிடை.

செங்கிடை என்பது ஒரு முட்செடி. காட்டுச் செடி. முல்லை நிலத்தது. பிங்கலம் மட்டும் இதற்குக் 'கந்தூரி' என்றொரு பெயரைத் தந்துள்ளது.[1] மற்றையவை ஏதும் காட்டவில்லை.

இதனைக் கம்பர் பாடியுள்ளார். கார்காலத்தை வண்ணிக்கும் அவர்,

*"கூடினர் துவரிதழ் கோலங் கொண்டன*
*சேடுறு நறுமுகை விரிந்த செங்கிடை"*[2] —என்றார் கலவியில் கூடிக்களித்தோரது சிவந்த இதழ்போன்ற அழகுடையதாம். எனவே, செம்மை நிறப் பூ. வாயிதழ் போன்று நீண்ட இதழுடையது. நெடுந் தொலைவு மணப்பது. அழகிய முகை கொண்டது. கார்காலத்தில் மலர்வது.

செங்கிடை என்றால் வெண்கிடை உண்டோ எனில் உண்டு. ஆயின் அது வேறு. இது வேறு. கிடை என்றால் நெட்டி. அதன் வெண்மைப் பூ கருதி வெண்கிடை எனப்பட்டது. வெண் கிடை நீரில் படர்வது.

## 84. வணிகர் பட்ட மலர்.

### எட்டி.

எட்டி ஒரு காட்டு மரம். இதன் பழம் கிச்சிலி நிறத்தில் அழகானது. படு கசப்புள்ளது. "எட்டி பழுத்தென்ன?" என்று பாடுமளவு வெறுப்புக்கு உரியது.

---

1 பிங். நி : 2912. 2. கம்ப : கார்காலம் : 114 : 3, 4.

தொல்காப்பியத்தின் இகர ஈற்றுப் பெயரின் திரிபிற்கு 'எட்டிப் பூ'[1] சான்று காட்டப்பட்டது, இப் பூ சிறியது. தனிப் பூ புனல் வடிவத்தது. வெண்மை நிறங்கொண்டது. பல பூக்கள் செறிந்து கொத்தாகப் பூக்கும். கோட்டுப் பூவாகிய இது வேனிற் பருவத்துப் பூ.

வணிகரில் சிறப்புற்றோர்க்கு மன்னன் தரும் பட்டம் 'எட்டி' எனப்படும். "நீள்நில வேந்தனின் எட்டிப் பூப்பெற்று"[2] என்றபடி பட்டத்தின் சின்னமாக எட்டிப் பூங்கொத்து போன்று பொன்னால் செய்து வழங்கினர். இப்பட்டத்தால் வணிகர் 'எட்டி' என்றே பெயர் பெற்றனர். பட்டம் பெற்றோர் "எட்டி குமரன்"[3] "எட்டி சாயலன்"[4] எனப்பட்டனர். அன்னார்க்கு வழங்கப்பட்ட நிலம் "எட்டிப் புரவு" எனப்பட்டது.

இவ்வகையில் எட்டிப் பூ 'வணிகர் பட்டப் பூ'வாகிச் சிறப்புற்றது.

## 85. இறகு மலர்.

### கொக்கிறகு.

கொக்கிறகு மலர் தேவாரத்தில் பாடப்பட்டுள்ளது.

"கொக்கின் இறகினொடு வன்னிபுக்க சடையார்"[5]

என்றார் ஞானசம்பந்தர். அப்பர் "கொக்கின் தூவலும் கூவிளங் கண்ணியும்"[6] என்று பாடினார். இவைகொண்டு இப் பூ சிவனுக்குரியது என்றும் தூவிப் போற்றி வழிபடுதற்குப் பயன்பட்டது என்றும் அறிகின்றோம்.

இஃதொரு செடி. கொக்கின் இறகு வடிவமைப்பில் கொத்தாகப் பூக்கும். வெண்மை நிறமுள்ளது. மன்னார்குடியில் பாமணியாற்றங்கரையில் உள்ள கைலாயநாதர் கோவிலில் இச் செடி உள்ளது. 'கொக்கு மந்தாரை' என்றும் வழங்குவர்.

சொல்லளவுப் பொருள் கொண்டு இதனைப் பூவாகக் கருதாமல் கொக்கின் இறகு என்றும், கொக்கு உருவத்தில்

1 தொல் : எழுத்து : 155 உரை,
2 மணி : 22 : 118.
3 மணி : 4 : 68.
4 சிலம்பு : 15 : 163.
5 ஞான. தே : ஐயாறு : 8
6 அப். தே : நாரையூர் : 4

வந்த அரக்கதனைக் கொன்று அவ்விறகைச் சிவன் சூடியதாகவும் கதை கட்டினர்.[1]

இடைக்காலத்தில் வந்து இடம்பெற்ற கோட்டு, வெண்மை மலர். வேனிலில் பூக்கும்.

## 86. கோவாங்கு மலர்.

### குசும்பை.

குசும்பை என்பது வெளிநாட்டிலிருந்து வந்திறங்கிய சிறு செடியினம். சிலர் சீன நாட்டுச் செடி என்பர். சிலர் ஆப்பிரிக்க, அரபு நாட்டது என்பர். இடைக் காலத் தமிழர் துருக்க நாட்டிலிருந்து வந்ததாகக் கொண்டு இதன் நிறத்தையும் அடைமொழியாககிச் 'செந்துருக்கம்' என்றனர். செடியியலாரும் குசும்பைக்கு இட்ட பெயரையே (*CARTHAMUS TINCTORIOUS*) செந்துருக்கத்திற்கும் இட்டுள்ளனர்.

7ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட தமிழ் இலக்கியங்களிலேயே இப் பூவைக் காண்கின்றோம். திருமூலரே முதன் முதலில் பாடியுள்ளார். எனவே, 6ஆம் நூற்றாண்டளவில் இது வந்திறங்கியதாகலாம்.

தமிழ் அகர முதலிகள் இதனை மரமாக வேறுபடக் குறித்துள்ளன. இது குறுஞ்செடியே. இதன் வித்து எண்ணெய் தருவது.

இதன் மலர் இச்செடியின் கிளை முனையில் பூக்கும். காம்பில் கூர்மையான முள் உண்டு. சிவப்பு நிறமெனினும் 'காவிச் சிவப்பு' எனல்வேண்டும். இப்பூவிலிருந்து ஆடைகளுக்கேற்றும் காவி நிற வண்ணச்சாறு எடுக்கப்படுகின்றது. கதிர்ச் சிறு பூக்களும், அவற்றிடையே மண்டலச் சிறு பூக்களுமாகக் கொத்தாகப் பூக்கும். வெளிநாட்டுச் செடியாகையால் இதன் தமிழ் நிலத்தைக் குறிக்கவியலாது. எனினும், வண்டல் மண் வாகில் வானவாரியால் விளைவதால் மருத நிலத்துக் கூதிர்கால மலர் எனலாம்.

---

1 சைவ வினா விடை : பக்கம் 91

மாணிக்கக் கல் வகையில் ஒன்றான கோவாங்கிற்கு இதன் நிறத்தைக் காட்டிப் பரஞ்சோதியார்,

"கோவாங்கம் ஒளிகுரவு குசும்பை மலர்"[1] என்றார். இவ் வகையில் இது கோவாங்கு மலர். இம்மலரில் தாதுத் தூள் மிகுதியாகப் பரவுவதைக் கண்ட கம்பர் வானத்தில் எழும் தூளியை வண்ணிக்கையில்,

"குசும்பையின் நறுமலர்ச் சுண்ணக் குப்பையின்
விசும்பையும்கடந்தது விரிந்த தூளியே"[2] —என்று பாடினார்.

"பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தம் கூடிநின் றாரே"—[3] எனத் திருமூலர் சிவன் தலைமீது சூடியுள்ளதாக முதன் முதலில்பாடினார். இருவரும் இதன் மணத்தைக் குறித்துள்ளனர். இவ்வகையில் இதனைச் சூட்டும் மலராகக் கொள்ளலாம். இம்மலரின் இதழை உலர வைத்துப் பக்குவஞ் செய்து குங்குமப் பூவுடன் கலப்படம் செய்கின்றனராம். வந்திறங்கிக் கலந்த குசும்பை கலப்படத்திலும் இடம் பெற்றது.

# 87. பாளை முத்து மலர்.

## கமுகு.

கமுகு (பாக்கு), தெங்கு (தென்னை) இரண்டின் பூக்களும் ஒத்த அமைப்புடையவை. ஓர் இனத்தவை. தனிப் பூ சிறியது. வரிசையாகத் தொடுத்தது போன்று நரம்பில் அமைந்திருக்கும். இவ்வமைப்புடைய நரம்புகள் பல கிளைத்த தொகுப்பு ஒரு குலையாக இருக்கும். எனவே, இதனைப் 'பூங்குலை' எனலாம். இப் பூங் குலையை மூடிப் பொதிந்துள்ள மடல் 'பாளை' எனப்படும். இதனால் இவையிரண்டும் பாளைப் பூவாகும்.

உருத்திரங்கண்ணனாரும்,

"கமுகின் பாளையம் பசும் பூ"[4] எனப் பாளைப் பூவாகப் பாடினார். இக்கமுகம் பூவின் வரலாற்றைப் பாடுவார் போன்று மதுரைத் தத்தங் கண்ணனார் என்பார் 10 அடிகள் பாடியுள்ளார். அவற்றில்,

இப் பூ

1 திருவி. பு : மாணிக்கம் : 40
2 கம்ப : அதிகாயன் : 89.
3 திருமந் : 2818.
4 பெரும்பாண் : 7

'தொடுத்த தொடையல் போன்றது. பல மலர் அமைந்தது. மொத்தத்தில் குடை போன்றது. பாளை பிடிப்பு விட்டு விழும். அப்போது பூங்குலை வாள் வடிந்தது போன்று தோன்றும். இத்தோற்றம் விரும்பத் தக்க வனப்புடையது. அலர்ந்த பல பூக்கள் மாலை போன்று தோன்றும். நரம்புகளோடு "கவரி போன்று வண்டுண விரி"யும். "முத்தின் அன்ன" வெள்ளிய மலர். அது வீழும் காட்சி ஆலங்கட்டி மழை போன்றது'[1] — இவ்வாறு இப் பூவின் வளர்ச்சியைப் பாட்டில் வடித்துள்ளார். தொடர்ந்து இப் பூவால் உருவாகும் பசுங்காயின் — பிஞ்சின் — நீர் மிகச் சுவையுடையது என்றார்.

திருவள்ளுவர்,

*"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி*
*வால்எயிறு ஊறிய நீர்"*[2] – என்றார். இதைப்போன்று இப்,

*"பூவொடு வளர்ந்த மூவாப் பசுங்காய்*
*நீரினும் இனிய வாகிக் கூர்எயிற்று*
*அமிழ்தம் ஊறும் செவ்வாய்"*[3] –என இப்பிஞ்சின் சுவை நீர் பாடப்பட்டது. இது முற்றிய காய், 'அடைகாய்' எனப்படும். வெற்றிலையுடன் தம்பலத்திற்கு இது சேர்க்கப்படுவதை அறிவோம். இது மலரும் தோட்டத்தில் வாழும் மகளிர் இப்பூக்களை நரம்புடன் சூடிக்கொள்வர். மணமுள்ள பூ.

மருத நிலத்ததாகிய இது பின்பனிப் பருவத்தில் மலரும். கிளைவிடாத புல்லினம் என்ற வகையில் இது புதர்ப் பூவாம் நிலப்பூவாகும்.

## 88. பாளைக்கள் மலர்.

### தெங்கு.

பாக்கினது பிஞ்சின் நீர் போல் சுவையுடையது தெங்கிளநீர். இதனை வழங்கும் பூவை மலர விடாமல் பாளையைச் சீவித்தான் கள்ளை வடிக்கின்றனர். கள் "தெங்கின் விளை பூந் தேறல்"[4] எனப்பட்டது.

---

1 அகம் : 335 : 13–22.
2 குறள் : 1121.
3 அகம் : 335 : 23–25
4 மணி : 3 : 99.

'தென்னம் பாளை பிளந்த பல்வரிசை' என்றும் 'பாளைச் சிரிப்பு' என்றும் இள மங்கையர்க்கு உவமையாகும்.

கபிலர் குறிஞ்சிக் கோவையில் "தாழை"[1] என்னும் பெயரில் இதனைக் கோக்க, நச்சர் "தெங்கின் பாளை"ப் பூவாக விரித்தார். இவ்விடத்தால் இது சூடும் பூவாயிற்று. தெங்கு முற்கால வழக்கு. தென்னமரம் என்பதன் மரூஉ தென்னை.

தென்னம் பாளைப் பூவைக் காத்தவராயன், ஐயனார் முதலிய சிறு தெய்வங்களின் சின்னமாகக் குலையுடன் படைத்து வழிபடுவர்.

மருதநிலத்தில் ஆண்டில் ஒவ்வொரு திங்களும் மலரும். தோற்றத்தில் வெண்மையும், வளர்ச்சியில் மஞ்சள்பாவிய வெண்மையுங் கொண்டது. நிலப் பூ. இது அனைத்துறுப் பாலும் மக்கட்குப் பயன்படுவது. தெங்கங்காய் உணவுப் பொருள்,

இப் பூ உடலின் நஞ்சு நோய்க்கு மருந்தாகும்.

"—*தேகத்தில்*
*வின்னம்பா லிக்கும் விடபாகம் போகவென்றால்*
*தென்னம்பா ளைப்பூவைத் தின்"* என்றது அகத்தியர் குணபாடம்.

## 89. சோற்று மலர்.

### நெல்.

உலக மக்களில் பகுதிப்பேர் அரிசி உணவு உண்பவர் அரிசியைத் தரும் நெல் அதன் பூவால் உருவாகின்றது. எனவே, பகுதி மக்களை வாழவைப்பது நெல்லின் பூவாகும். அதிலும் பூவில் செய்யும் ஒட்டு முறையால்தான் விளைச்சல் மிகப்பெருகி வளத்தை வளர்த்துள்ளது.

நெல்லின் மூலப் பிறப்பிடம் இந்தியா என்றும் அதனிலும் தென்னகம் என்றும் அறிவித்துள்ளனர். அரிசிக்குச் செடியியலார் ஓரைசா சதையவா (*ORIZA SATIVA*) எனப் பெயரிட்டுள்ளனர். 'ஓரைசா' என்பது இலத்தீன் மொழிச்சொல். 'அரிசி' என்னும் தமிழ்ச் சொல்தான் 'ஓரைசா' ஆகி இஃதே ஆங்கிலத்தில் 'ரைஃச்'

1 குறி. பா : 89

*(RICE)* ஆனது என்பதை ஆங்கில அகர முதலி ஒன்றிலேயும்[1] பதித்துள்ளனர். எனவே, அரிசி என்னுந் தமிழ்ச்சொல், மூலமாக நின்று நெல்லின் மூலப்பிறப்பிடமாகத் தமிழகத்தைக் காட்டு கின்றது.

நெல்லின் பூ மிகச் சிறியது. நெல்லிற் காணப்படும் மூன்று உமி அமைப்புகள் பூக்காம்பிலைகள் எனப்படும். அவற்றை ஒட்டியுள்ள கருக்காய் அமைப்பு புறவிதழாகும். நடுவில் அமைந்த இரண்டு செதில்கள் அகவிதழ்கள். இவற்றிற்கு மேல் ஆறு மகரங்கள் அமைந்திருக்கும். அதனொடு ஒரு சூலகமும் சூலகத் தில் இறகு வடிவத்தில் இரண்டு சூல் முடியும் இருக்கும். இத்துணையும் ஒரு சிறு நெல்லளவே. பூவின் நிறம் பெரும் பாலும் இளமஞ்சள். ஒட்டு முறையால் ஓரளவு வேறுபாடு அமையும்.

தமிழ் இலக்கியங்களில் நெல் பரவலாக இடம் பெற்றிருப் பினும் நெற் பூவை ஓரம்போகியார் குறித்துள்ளார். வயலின் நண்டு வளையில் நெற்பூ உதிர்ந்து நிறைந்துள்ளதை,

*"தண்ணக மண்ணளை (நண்டுவளை) நிறைய நெல்லின்*
*இரும்பூ உறைக்கும் ஊரன்"*[2] —எனப்பாடியுள்ளார்.

ஆனால், இதில் நெற்பூ, 'இரும்பூ' எனக் கருமை—நீல நிறமாகக் கூறப்பட்டுள்ளது.

சிலவகை அரிசியின் மேல் சொலியமைப்பு கருமையாக இருப்பதைக் காண்கின்றோம். 'கருங்கார்' என்னும் நெற்பூ ஓரளவில் இந்நிறமாகும். இவ்வகை நெல்லின் பூவை கண்டு "இரும் பூ" என்றிருக்கலாம்.

நெற்பூ மருத நிலத்தது, புல்வகையால் நிலப்பூ விளை விக்கும் பாட்டத்திற்கேற்பப் பனிக்காலமும் பருவமாகும்.

உணவை வழங்கும் இச் 'சோற்று மலர்' தமிழ் மண்ணிற்கு உரியது என்பது நமக்கொரு பெருமையாகின்றது.

---

1 VIDE LATIN ENGLISH DIC : பக்கம் : 887, 2 ஐங் : 80

# ௯0. இள மூக்கு மலர்.

## எள்.

எள்ளை இலக்கண நூல்கள் 'எண்' என்று பேசும். 'நூவு' என்பது இதற்கொரு பெயர். எள் ஒரு சிறு வித்து. நெய்ப்பிடிப்பு கொண்டது. எள் நெய்யே 'எண்ணெய்' எனப் படுகின்றது. இவ்வித்து நூல்களில் மிகச்சிறிய அளவிற்கு எடுத்துக்காட்டாக 'எள் துணை – எட்டுணை' எனப்படும். திருவள்ளுவர் இதன் பிளவை அளவாக்கி ''எட்பகவு அன்ன சிறுமைத்து''[1] என்றார்.

இஃதொரு சிறு செடி. இதன் பூ தனிப் பூ. வெண்மை நிறப் பூ. செந்நீல நிறத்தில் ஓரினம் உண்டு. இதன் அக விதழ் குழாய் வடிவங் கொண்டது. இப்பூ கவிழ்ந்து பூக்கும். ஒரு பக்கம் மட்டமாகவும் மறு பக்கம் இதழ் சற்று முன் புடைத்தும் முனை அகன்றும் மூக்குருவில் அமைந்தது. நெல் விளையும் மண்வளம் இதற்குரியதாகையால் மருத நிலத்தது. கோடை காலப் பூ. நிலப் பூ.

இப் பூவின் வடிவமைப்பு குமிழம்பூ வடிவமைப்பில் சிறியது. எனவே, இதனை மூக்கிற்கு உவமையாக

*''குமிழ்போல் நிறம் படைத்தால்*
*எள்ளும் சரியாம் இதற்கென்ன''*[2] —என நாகைக் காளிமுத்து என்னும் அம்மையார் தமது வருணகுலாதித்தன் மடலில் பாடினார்.

பாவேந்தர் பாரதிதாசனாரோ,

*''எள்ளிளஞ் சிறிய பூவை எடுத்துவைத் திட்ட மூக்கும்''*[3] எனச் சிறு குழந்தையின் மூக்கை வண்ணித்தார். இது மிகப் பொருத்தம். இளமூக்கிற்குப் பொருத்தமான மலர்.

இப் பூ கண் நோய்க்கு நல்ல மருந்து.

1 குறள் 889
2 வ. கு. உ. கண்ணி [illegible]
3 மக்கட்பேறு : 61

# 91. கூந்தல் மலர்.

## வாழை.

வாழ் என்னும் அடியை உடையது வாழை. வழி வழி வாழ்வைக் குறிக்க 'வாழையடி வாழை' என்னும் இதன் பெயர்த் தொடர் அமைந்தது. இஃது ஒரு முறையே பூத்துக் காய்க்கும். மரம் அழியும். இதனால் "தாயைக் கொன்றான்" என்றொரு பெயர் இதற்குண்டு. ஒரு குழந்தைப் பேற்றுடன் நின்றுவிடும் தாயை 'வாழை மலடி' என்பர்.

இதன் தனிப் பூ மூன்று கூட்டுப் புறவிதழ்களையும் ஓர் அழகிய அகவிதழையும் கொண்டது. அகவிதழைக் கொப்பூழ் என்பர். இக்கொப்பூழைப் பாவேந்தர்,

*"விரிவாழைப் பூவின் கொப்பூழ்*
*வெள்விழி"*[1] —என்று சிறு குழந்தையின் வெள்ளைவிழிக்கு உவமையாக்கினார்.

ஒழுங்கு வரிசையாக இரண்டுகொண்ட இதன் கொத்தைச் சீப்பு என்பர். சீப்புகளை மடல்கள் பொதிந்திருக்கும் இப்பெருங் கொத்து அடுக்கு மாலை போன்றது. இதனால் மாலைக்குரிய சொல்லால் தார் (வாழைத்தார்) என்றனர். ஒருவகை வாழை, பூவின் பொதுப் பெயரால் 'பூவன்' எனப்பட்டது.

ஒவ்வொரு பூவும் ஒவ்வொரு பிஞ்சாக, எஞ்சிய பூக்கள் உதிரும். இவ்வாறு உதிர்வதைத் தலைவனை இழந்த மகளிர் மார்பிலடித்துக் கொள்ளும்போது வளையல் முறிந்து சிதறுவதற்கு உவமையாக்கி, "வாழைப் பூவின் வளைமுறி சிதற"[2] என்றார் பெருஞ்சித்திரனார்.

உதிர்ந்தவை போக எஞ்சியுள்ள தொகுப்புப் பூ மகளிரது கூந்தலாம் ஓதிக்கு உவமையாக்கப்பட்டது.

*" .... ... — ... ...வாழைப்*
*பூவெனப் பொலிந்த ஓதி"* (சிறுபாண் : 21, 22.)

*"வாழை வையேந்து கொழுமுகை*
*மெல்லியல் மகளிர் ஓதி அன்ன"* (நற் : 225)

என்னப் பல இலக்கியங்களும் பாடின.

---

1. மக்கட்பேறு : 60 2. புறம் : 237 : 11.

இப்பூ மலைப்பாறையொன்றில் குத்தி நிற்பதைக் களிற்றின் முகத்தில் குத்தியுள்ள வேலாகப் பாடியது மலைபடுகடாம்.[1] இது மலைபடு பயிர்களில் ஒன்று. "மால்வரை (மலை) ஒழுகிய வாழை"[2] என்றதன்படி இது குறிஞ்சி நில மலர். கிளைவிடாதது என்ற வகையில் புதர்ப் பூவாம் நிலப் பூ. ஆண்டெல்லாம் பூக்குமாயினும் இதற்குரிய பருவம் இளவேனில். நிறம் இள மஞ்சள். தேனை ஓரளவில் அதிகமாகக் கொண்டது.

இப் பூ பயனில் உணவுப் பூ; பண்பில் உவமைப் பூ. சூடும் பூ அன்று. ஆயினும் கபிலரால் குறிஞ்சிக் கோப்பில் கோக்கப்பட்டுள்ளது.

அனைத்து உறுப்புகளாலும் பயன்படும் வாழையின் பூவும் மருத்துவப் பயன் உள்ளது. வயிற்றளைவு, கைகால் எரிச்சல், எருவாய்க் கடுப்பு, இருமல் முதலியவற்றிற்கு அரிய மருந்து. 'தொக்குறு பூ மேகம் (மேகநோய்) ஒழிக்கும்" என்றது அகத்தியர் குணபாடம்.

மருந்துப் பூ, உணவுப் பூ வாயினும் ஊட்டப் பூ அன்று. இதனால் உருவாகும் காய் கனிகளில் உள்ள ஊட்டமன்களில் (*VITAMIN A. B. C.*) எவ்வொன்றும் இப்பூவில் இல்லை.

## 92. கிளிமூக்கு மலர்.

### அவரை.

அவரை என்றதும் சமையலுக்குரிய அவரைக் காய்தான் நினைவில் வரும். தற்காலத்தில் அதன் பூ பற்றிக் கவனங்கொள் வதில்லை. குறிஞ்சிப்பாட்டு தன் பட்டியலில்,

"*அடும்பமர் ஆத்தி நெடுங்கொடி அவரை*"[3] என அவரைப் பூவைத் தொகுத்துள்ளது.

"*பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்*
*கொழுங்கொடி அவரை பூக்கும்*
*அரும்பனி அற்சிரம்*"[4]

— என்னும் கடுவன் மள்ளன் பாடல் அவரைப் பூவின் இலக்கிய வரலாற்று வடிப்பு. குறிஞ்சி

---

1 மலை : 129, 131
2 சிறுபாண் : 22
3 குறி. பா : 87.
4 குறு : 82 : 4 - 6.

நிலத்துத் தினைப்புனத்தில் தினை அறுவடைக்குப்பின் மறு விளைச்சலின்போது அவரையும் விதைக்கப்படும். அக் கொழுத்த கொடி தினைத் தட்டையில் படர்ந்து அரும் பனி பெய்யும் முன் பனிக்காலத்தில் பூக்கும். இதனால்,

அவரைப் பூ கொடிப் பூ; குறிஞ்சி நிலத்தது;

முன்பனிப் பருவத்தில் பூக்கும். அப்பருவத்திலும் ["அற்சிற அரை நாள்"] நள்ளிரவில் பூக்கும் என்பதைக் கழார்க்கீரன் எயிற்றியனார் காட்டினார்[1] இது பவளம் போன்று செம்மை நிற மானது. செம்மையோடு கொத்தாகப் பூப்பதையும்கொண்டு,

*"பைந்நனை அவரை பவளங் கோப்பவும்"*[2]

— எனப்பட்டது. செம்மை யுடன் இதன் வடிவமைப்பு, கிளியின் மூக்குபோன்று வளைவானது இதனை,

*"பனிப்புதல் இவர்ந்த பைங்கொடி அவரை*
*கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்"* [3]

— எனக் கொல்லன்அழிசி என்பார் வண்ணித்தார். எனவே, இதனைக் கிளிமூக்கு மலர் எனலாம்.

இதில் வெளிர் நீல நிறப் பூவும் உண்டு. மதுரைக்காஞ்சி "மணிப் பூ அவரை" [4] என்றுள்ளது.

இது தோட்டப் பயிராகவும் அமைந்தது. பிற்காலத்தார் மொச்சைஎன்றனர். மருத நிலவயற்பகுதிகளில் விளைவதை கழார்க் கீரன் எயிற்றியனார் பாடியுள்ளார். இங்கும் முன்பனிக்காலம் குறிக் கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் அவரைப் பூ பற்றி எவரும் குறிப் பிட்டுப் பாடினார் அல்லர். இது சூடும் பூ அன்று. உணவிற் சுவை நல்கி வரும் இப்பூ கண்காட்சிக்கு எழில் வழங்குவது.

# 93. பன்றிப் பல் மலர்.

## அகத்தி.

'அகத்தி' என்றொரு பெயர் சங்கப்பாடல்களிலோ இடைக் காலக் காப்பிய இலக்கியங்களிலோ இல்லை. நிகண்டுகள் தாம் 'அகத்தி என்பதற்கு, 'முனி, கரீரம், அச்சம்' என்னும் பெயர்களை வகுத்துள்ளன. இவைகளும் இலக்கிய ஆட்சிகொண்டன அல்ல.

---

1 அகம் : 294 : 11.
2 சிறுபாண் : 164
3 குறுந் : 240 : 1, 2.
4 மது. கா : 292.

இப்பூவின் அமைப்பிற்குப் பொருத்தமான உவமைகொண்டு இப்பூவைப் பெரும்பாணாற்றுப்படையில் காண்கின்றோம்.

அகத்திப்பூ 3 அங்குலம் வரை நீளமானது. அவரைப் பூ அமைப்புடையது. செடியியலார் 'மணிவடிவப் பூ' என்பர் வெண்மை, சிவப்பு ஆகிய இருவண்ண வகைகளை உடையது. அகத்தி என்றால் வெண்மை இனத்தையும், செவ்வகத்தி என்றால் சிவப்பினத்தையும் குறிக்கும். அகத்தியர் குணபாடம் செவ்வகத்தியைத் "துவர் அகத்தி" என்கின்றது.

இருநிறப் பூக்களும் ஒரே வடிவமைப்புடையன. இவ்வடிவமைப்பு காட்டுப்பன்றியின் பல்லைப் போன்றது. பன்றியின் பல்லிற்கு உவமை கூறும் உருத்திரங்கண்ணனார்,

*"புகழா வாகைப் பூவின் அன்ன*
*வளைமருப்பு ஏனம் (பன்றி)*[1] " – எனப் 'புகழா வாகைப் பூ' என்று இயற்பெயராக அன்றி வெளிப்படை அடைமொழியால் குறித்தார். இதற்கு நச்சினார்க்கினியர்,

"அகத்திப் பூவினை ஒத்த" என்று உரை எழுதினார். இது கொண்டு அகத்திப் பூ 'புகழா வாகை' எனப்பட்டதை அறிகின்றோம். (இதனை வாகைப் பகுதியிலும் கண்டோம்)

திருமாலினது பன்றித் தோற்றத்தைச் சிவன் வேட்டுவ வடிவங்கொண்டு அழித்து அதன் பல்லைச் செவ்வகத்திப் பூவாகச் சூடிக்கொண்டதாகச் சிவபுரானக்கதை ஒன்று உள்ளது. ஞானசம்பந்தரும், "அடுத்தடுத்து அகத்தியொடு வன்னி கொன்றை" யைச் சூடியதாகப் பாடியுள்ளார். தக்கயாகப் பரணி உரைகாரரும் இக்கதையைக் காட்டியுள்ளார்.[2] இக்கதைக்கருத்தாலும் பன்றிப் பல் உவமை வெளிப்படுகின்றது.

உவமைப் பொருத்தத்தால் அகத்திப் பூ 'பன்றிப் பல் மலர்' என இலக்கியப் பெயர் பெறுகின்றது.

கோட்டுப் பூவாகிய இது பனிக்காலத்தில் மலரும். நீர்ப்பிடிப் புள்ள இடத்தில் இதன் மரம் வளர்வதால் மருத நிலத்ததாகின்றது.

அகத்தி இலை, 'கீரை' என்று சமையலுக்குப் பயன்பட்டு உடல் வெப்பத்தைத் தணிக்கும் மருந்து உணவும் ஆகும். இது

1 பெரும்பாண்.: 109, 110. 2 தக்க: 163 உரை.

போன்று இருவகைப் பூக்களும் மருந்துக்குப் பயன் படுபவை. அகத்திப் (வெண்மை) பூ புகைபிடிப்பதால் எழும் பித்தத்தையும், பித்தத் தொடர்பான வெப்பத்தையும் போக்கவல்லது. இதனை அகத்தியர் குணபாடம்,

*"புகைப்பித்த மும்அழலால் பூரிக்கும் அந்த*
*வகைப்பித்த மும்அனலும் மாறும் .... ....*
*...............*
*அகத்தி மலருக் கறி"*

— என்கின்றது. செவ்வகத்தியால், மூக்கில் வழியும் குருதிப்போக்கு நிற்கும். உள்வெப்பம் தணியும்.

'அகத்தி' என்னுஞ்சொல்லில் ஒருகருத்து பொதிந்துள்ளது. இக்காலத்தில் 'அவசியம்' என்று பேசப்படும் வடசொற்கருத்து அக்காலத்தில் 'அகத்தியம்' எனப்பட்டது. அகத்தியத்தில் 'அகத்தி' உள்ளது.

## 94. வடுகர் கண்ணி மலர்.

### குல்லை.

குல்லை ஒரு சிறு செடி. உரையாளர் 'கஞ்சங்குல்லை' என்பர். தற்காலத்தில் 'கஞ்சாங் கோரை' எனப்படும். இது துளசி இனம். பிங்கலம் 'புனத் துளசி' என்னும். மருத்துவ நூலார் 'நாய்த் துளசி' என்பர். துளசியின் ஒரு பெயராகக் 'குல்லை' குறிக்கப்படும். வெட்சி, கஞ்சாச்செடி இவற்றிற்கும் இப்பெயர் குறிக்கப்படினும் அப்படி அவற்றிற்கொரு பெயர் என்ப தன்றி குல்லை அவையல்ல. குல்லை தனிச்செடி.

துளசிக்கும் குல்லைக்கும் ஆங்கிலத்தில் பேசில் (*BASIL*) என்றே பெயர். இரண்டன் செடியியற் பெயரும் ஓசிமம் (*OCIMUM*) எனப்படும். ஆனால், துளசி இலைமணத்தாற் சிறப்புற்றது. குல்லையின் இலைக்கொத்தும் மகளிர் தழையுடைக்குப் பயன் பட்டுள்ளது.[1] நெல் முதலியவற்றில் அந்து முதலிய பூச்சிபிடிக் காமலிருக்க மணவீச்சுள்ள இதன் இலைக்கொத்து பயன்படு கின்றது. இருப்பினும் பத்துப் பாட்டில் ஈரிடங்களிலும் கலித் தொகையில் ஓரிடத்திலும் நச்சர் "கஞ்சங் குல்லைப் பூ" என இதன் பூவைக் குறித்துள்ளார்.

1 திருமுருகு : 2

இப் பூ மங்கிய வெண்ணை நிறங்கொண்டது. இதனாலும் இதன் இலையினது புற வெண்மையாலும் இதனை வெள்ளை பேசில் (*WHITE BASIL*) என்றனர். செடியியற் பெயரான 'ஓசிமம் ஆல்பம்' என்பதில் ஆல்பம் (*ALBUM*) என்னும் சொற்கு வெண்மைநிறக் குறிப்பு உண்டு.

நற்றிணையிற் கபிலர்[1] இதனை முல்லைநிலத் தலைவன் கண்ணியாகச் சூடியதைப் பாடினார்.

*''குல்லையும் குருந்தும் கோடலும் பாங்கரும்*
*கல்லவும் கடத்தவும் கமழ்கண்ணி மலைந்தனர்.''*[2] – என்னும் அடிகள் இதனைக் கண்ணியாகச் சூடியதைக் குறிப்பதுடன் ''கடத்தவும்'' என முல்லை நிலத்ததாகவும் காட்டுகின்றது. ''குல்லையம் பறவு''[3] என்னும் சிறுபாணாற்றுப் படைத்தொடரும் இது முல்லைநிலத்தது என்பதற்குச் சான்றாகின்றது. குறிஞ்சிப் பாட்டிலும்[4] இடம்பெற்றுள்ளது. இடைக்காலப் பிற்கால இலக்கியங்களில் இல்லை.

கடும் வெப்பத்தைக் குறிக்கக் ''குல்லை கரியவும்''[5] – என இது வாடிக் கருகுவது குறிக்கப்பட்டது.

மாமூலனார், வடுகர் தம் கண்ணியாகக் கொண்டதை ''குல்லைக் கண்ணி வடுகர்''[6] என்றார். தமிழினத்தின் கிளையினராம் 'வடுகர் கண்ணிமல'ரானமை குறிக்கத்தக்கது.

# 95. திருமாலிய இலைமலர்.

## துழாய்.

'துழாய், துளவு, துளவம்' என்பன சங்கப் பாடற் சொற்கள். பின்னிரண்டும் முன்னதன் திரிபும் வளர்ச்சியும். துளசி என்பது பின்வந்தது. இஃதொரு குறுஞ் செடி என்னுமளவில் நிலப்பூ.

குறிஞ்சிப்பாட்டின் ''துழாய்''க்கு[7] நச்சர் ''திருத்துழாய்ப் பூ'' என்று பூவாக எழுதினார். இதன் இலையும் மலரளவான சிறப்புடையது. இரண்டும் மணமும் காரச் சுவையுங்கொண்டவை

1 நற் : 376 : 5, 6.
2 கலி : 103 : 2, 3.
3 சிறுபாண் : 29.
4 குறி. பா : 78.
5 பொருந் : 234.
6 குறு : 11
7 குறி. பா : 90.

முற்காலத்தில் மலருக்கிருந்த நிலையைப் பிற்காலத்தில் இலை பெற்றது.

*"கள்ளணி பசந் துளவின் அவை"* [1] - என்னுந்தொடரில் "அவை" என்னுங் குறிப்பு, பூவொடு இலையைக் கூட்டியதாகும் "பசுந் துளவு" என்றபடி இப்பூவின் புறவிதழ்க் கிண்ணத்தின் பசுமை மேம்பட்டுத் தோன்றும். இலையின் பசுமையும் குறிக்கப் பட்டது. "கள்ளணி" என்றது போன்று—,

"நக்கலர் துழாய் நாறு இணர்" (பரி:4:58)

"கமழ் குரல் துழாய்" (பதிற்:31:8) — என்பனவும் இதன் மலரையும் அது கொத்தாக அமைந்ததையும் குறிக்கின்றன.

இப் பூ கவிழ்ந்த புறவிதழ்க் கிண்ணங்களைக் கொண்டது. இக்கிண்ணங்கள் மூன்று, ஒரு காம்பில் பக்க வரிசையாக அமைந்திருக்கும். இதுபோன்று பக்கத்தில் மூன்றிருக்கும். இவ்வாறு ஆறும் அரை வட்டமாக அமைய இவ் வரைவட்டம் தட்டு தட்டாக மேல் அடுக்கமைப்புடையது. வளமான செடியில் 20 தட்டுகள் வரை அமைந்திருக்கும். இவ்வாறு மூன்று நான்கு காம்புகள் அமைந்த கொத்து மலராகும். இப்பசுமைக் கிண்ணம் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மிகச் சிறிய வெண்மை நிற மலர் பூக்கும். எனவே, இப் பூவின் நிறம் வெண்மை. இது முல்லை நிலப் பூ. இது சில பருவங்களில் பூக்குமாயினும் கார்ப்பருவம் அதற்குரியது.

சிவனுக்குக் கொன்றை போன்று திருமாலுக்கு இத்துழாய் உரியதாயிற்று. இதனால் திருமால் "துழாயோன்" [2] எனும் பெயர் பெற்றார். தற்காலத்தில் பூவின் பயன் அருகி, இலையே பயன்படுகின்றது. இலையையே மலராகக் கொள்வர். இதனைப் பாடாத திருமாலியத்தார் இலர் எனலாம்.

இல்விலை மருந்துப்பயன் கொண்டது. தேரையன் பாடல்

*"துளசியின் இரசம் துய்த்திடச் சுரப்பிணி*
*அளவுநோய் இனமெலாம் அறுவது திண்ணமே"*

—என்றது. திருமாலின் அருள் வழங்கலாக இவ்விலையிட்ட நீர் கோவில்களில் வழங்கப் படும். ஆன்மிகத் தொடர்பில் இது "திருத்துழாய்" எனப் பட்டமைக்கு ஏற்ப ஆங்கிலத்திலும் *'HOLY BASIL'* எனப் பட்டது. திருத்துழாய் திருமாலிய இலை—மலர்.

1 பரி : 15 : 54. 2 பரி : 15 : 15.

# 96. இளமுகிழ்.

## பசும்பிடி.

பிடா போன்று பிடி என்றொரு மரம் போலும். இதன் பச்சை இலை குல்லை, துழாய்போன்று மிகு மணங்கொண்டது இதனால் "பசும்பிடி" எனப்பட்டது.

*"பச்சிலை மரம் தமாலம் பசும்படி என்றும் பேரே"*[1] – என்னும் சூடாமணியின்படி இம்மரம் பச்சிலை என்றே பெயர் கொண்டது. பிற நிகண்டுகளும் "பச்சிலை தமாலம் பசும்பிடி யாகும்" என்றன.

குறிஞ்சிக் கோவையில் கபிலர் கோக்க[2] நச்சர் "பச்சிலைப் பூ" என இலையையே பூ என்றார். பெருங்குன்றூர் கிழார்,

*... ... ... ... ... கொல்லிப்*
*பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து"*[3] –எனக் கொல்லி மலை இலையாகக் காட்டினார். இங்கே கார்ப்பருவ அணிகளாகச் சொல்லப் படுதலின் இதற்குக் கார்ப்பருவம் சிறந்தது எனலாம் நப்பண்ணனார், "பசும்பிடி இள முகிழ்"[4] என்றார். இதற்குப் பரிமேலழகியார், "பச்சிலையது இளைய கொழுந்து" என்றார். இங்கும் மலை குறிக்கப்பட்டது.

மிகு மணங்கொண்ட இலையாம் இது பிற மண மலர்களுடன் இருபாலாராலும் சூடப்பட்டது. சங்கப் பாடல்களிலன்றி இதன் பாடல் இல்லை. இதன் மிகு மணத்தில் இதன் பூ 'இலை மறை பூவாயிற்று' போலும்.

இவ்விலைச் சாற்றால் தலைப்பேன் போகும். முகப்பரு வேர் அறும். தோற்புண் ஆறும்.[5]

பச்சிலையேயானாலும் 'முகிழ்' என்னும் மலர்க்குறிப்பைப் பெற்றது.

---

1 சூடா. நி : மரப்பெயர் : 31.
2 குறி. பா : 70
3 பதிற் : 81 : 24, 25.
4 பரி : 19 : 75
5 அ. குணபாடம்.

# 97. நல்லார் முறுவல் இலை.

## குருகிலை.

"குருகிலை = முருக்கிலை"[1] - இவை கபிலர் சொல்லும், நச்சர் பொருளும். இஃதொரு மரத்தின் இலை. இவ்விலை புறத்தே வெண்மை நிறங்கொண்டது. சிறிய இவ்விலை உள் நோக்கி முருக்கிச் சுருண்டிருத்தலின் முருக்கிலை என்றார். இத்தோற்றத்தை வைத்துக் கண்ணஞ் சேந்தனார்,

"... ... ... ... ...குருகிலை
ஒண்டொடி நல்லார் முறுவல் கவின்கொள"[2] -என மகளிர் முறுவலுக்கு உவமையாக்கினார். முனைக் கூர்மையும் இயைந்தது.

இவ்விலை கார்காலத்தில் விளங்கித் தோன்றுவதை இதன் மலர்ச்சியாகப் பாடினர் மதுரைக் கண்ணங்கூத்தனார்,

'முருகியம் போல்வானம் முழங்கி இரங்கக்
குருகிலை பூத்தன கானம்"[3] – என்றார்.

கண்ணஞ்சேந்தனார்,

"அருவி அதிரக் குருகிலை பூப்ப
... ... ... ... ... ...
பெரிய மலர்ந்ததிக் கார்'[4] – என்றார். இவற்றால் இது, 'முல்லை நிலத்தது; கார்காலத்தில் விளங்கித் தோன்றுவது; நல்லார் முறுவல் போன்றது' என்றறியலாம். இதன் பூவும் இலை மறை பூவாயிற்று.

---

1 குறி. பா: 78.
2 திணை. ஐ: 21
3 கார்: 27
4 திணை. ஐ: 30/1, 4.

# அரிய மலர்கள்

## அரிய நிலையிலும் அறியும் நிலை.

நினைப்பதற்கு அரிது; சொல்வதற்கு அரிது; செய்வதற்கு அரிது என்றும், உணர்வதற்கு அரிது; அறிவதற்கு அரிது என்றும், கேட்பதற்கு அரிது; காண்பதற்கு அரிது என்றும் அரிய நிலை பலவகைப்படும். இங்கு மலர்களின் தொடர்பில் காண்பதற்கு அரிதும், அறிவதற்கு அரிதும் கொள்ளப் படுகின்றன.

காண்பதற்கு அரிது என்பதில் ஒருவகை: ஒரு பொருள் இருந்தது. பின் அழிந்து இல்லாமற்போனால் காட்சிக்கு அரிதாவது. வேறு ஒரு வகை: ஒரு பொருள் அழியாமல் இருந்து அதனை அடையாளங்கண்டு கொள்ள முடியாமையால் அப் பொருளாகக் காட்சிக்கு அரிதாவது. இவ்விரு வகைக்கும் ஆட்பட்டதாகக் கொள்ள அனிச்ச மலர் முன்னிற்கிறது.

பொருள் உண்மையாகவே இருக்கிறது. ஆனால் கண்ணிற்குக் காட்சி தராமல் குடத்துப் பொருளாகப் பொதிந் திருக்கிறது. இதனையும் காண்பதற்கு அரிது எனலாம். இவ் வரியனவாக அத்தி மலரும், ஆல மலரும் உள்ளன.

பொருள் உண்மையாகவே இருக்கிறது. பொதிந்து மறைந் தில்லாமல் திறப்பாகவே உள்ளது. ஆனால், தான் காட்சிப்பட வேண்டிய அளவில் வடிவப்பாட்டைக் கொள்ளாமல் நுண்மை

யாக உள்ளது. இதனையும் காட்சிக்கு அரிது எனலாம். இவ் வரிய மலராகப் பலா மலர் உள்ளது.

**இவை காண்டற்கு அரிய மலர்கள்.**

பொருள் இருக்கிறது. அதற்குப் பெயரும் இருக்கிறது. ஆனால்; பெயரின் விவரமும் மாற்றுப் பெயரும் ஒருமுகப்பட வில்லை. வேற்றுமுகங் காட்டுகின்றன. இவற்றால் குழப்பம் நேர் கின்றது. குழப்பத்தால் ஐயம் எழுகின்றது. 'இதுதான் அது' என்று உறுதியாக அறிதல் அரிதாகின்றது. இவ்வகையில் சுள்ளி மலர், பாங்கர் மலர், அரிய மலர்களாகின்றன.

பெயரளவில் பொருள் அறிமுகமாகியுள்ளது. அப்பெயர்ச் சொல்லின் பொருளை விரிப்பதன்றி வேறு விளக்கம் பெற வழி யில்லை. இவ்வகையில் அறிய அரிதாகும் மலர்கள் பயினியும் வடவனமும்.

பொருளின் சின்னம் தெரிகின்றது. சின்னத்தைப் பற்றி அறியும் அளவிற்குமேல் அப்பொருள்பற்றிய விளக்கத்தை அறிய இயலவில்லை. காவிதி மலர் இவ்வகையில் அரிய மலராகின்றது.

**இவை அறிதற்கு அரிய மலர்கள்.**

மலர்களின் அரிய நிலையிலும் ஓரளவில் அறியும் நிலையை இலக்கியத் தொடர்கள் காட்டுகின்றன. அவைகொண்டு அரிய மலர்களை அணுக நேர்கின்றது.

# 1. குழையும் மலர்.

## அனிச்சம்.

யாளி என்பது ஒரு வலிமைவாய்ந்த விலங்காம். எங்கே இருக்கிறது? கோவிற் சிற்பங்களில் காண்கின்றோம். அன்னம் ஓர் பறவையாம். கண்ணில் படுகின்றதா? ஓவியத்திலும் பாவியத் திலுந்தான் படுகின்றது. இப்பட்டியலில் அனிச்ச மலரையும் சேர்க்க மனம் வரவில்லை. அழிந்துவிட்டது என்று உறுதியாகக் கொள்ள முடியவில்லை. இதுதான் என்று கண்ணால் காணவும் வாய்ப்பில்லை. இலக்கியங்களிலும் ஆய்வாளரது கருத்துகளிலும் பட்டுத்தெரித்து நிற்கிறது.

பட்டுத் தெரிப்பதிலும் பட்டொளியாகக் காட்டுபவர் திரு வள்ளுவர்தாம்.

''நன்னீரை வாழி அனிச்சமே'' என்னும் வாழ்த்துடன்

''நின்னினும் மென்னீரள்''[1] என்று அனிச்ச மலரின் மென்மையைக் காட்டினார்,

''அனிச்சமும் அன்னத்தின் தூவியும்'' என மென்மையை அன்னத்தின் தூவியாகிய இனத்துடன் காட்டினார். காட்டி, ''மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்''[2] என்று அனிச்சத்தின் மென்மைக்கும் நுண்மை ஏற்றினார்.

அனிச்சம் என்று பொதுவில் கூறப்பட்டுள்ளதால் அனிச்ச இலையா, அனிச்சந் தளிரா, அனிச்ச மலரா என்னும் ஐயத்தை நீக்க, ஒரு குறளின் தொடக்கத்தில் ''அனிச்சப் பூ'' என்று வைத்து,

''அனிச்சப்பூ கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு

நல்ல படாஅ பறை''[3] – என்றார். இக்குறளில் அமைத்த சொற்களால் அனிச்சப் பூ காம்புள்ள தனிப் பூ என்றும், அக் காம்பு களையும் அளவினது என்றும், களைந்து சூடப்படும் என்றும், அஃதும் தலையில் பெய்து சூடப்படும் என்றும் விளக் கங்காட்டினார். இதனைப் பெய்வதால் இடை தாங்காமல் இற்று விடும் என்று காட்டி மலரைக் காட்டிலும் காம்பு கனமுள்ளது என்றும், அனிச்சமலர் மென்மையுடன் இலேசானது என்றும் சொல்லாமற் சொல்லியுள்ளார். பரிமேலழகர் மட்டும் 'கால்' என்பதற்கு 'முகிழ்' என்று பொருள் எழுதிப் பூவைவிட முகிழ் கனமானதாகக் காட்டியுள்ளார். காம்பு என்பது பொருந்தும்.

மேலே காணப்பட்ட மூன்று குறட்பாக்களில் மகளிரது மென்மையைப்பற்றிக் கூறப்பட்டுள்ளமை மிகைபடக் கூறியதாக லாம். ஆனால், அனிச்ச மலரைப் பொறுத்த அளவில் உயர்வு நவிற்சி அன்று; தன்மை நவிற்சியேயாகும். அதனால், அனிச் சத்தைப்பற்றிய ஒவ்வொரு சொல்லுக்கும் அழுத்தம் கொடுத்துப் பொருள் விரிப்பது பொருந்துவதாகும்.

இவற்றிற்கு மேலும்,

''மோப்பக் குழையும் அனிச்சம்''[4] என்றார். இத்தொடர் அனிச்சத்தின் மென்மைக்கு மேலும் உறுதியளிப்பதுடன் 'மோப்பத் தாலேயே குழையும்' என்னும் இதன் உயிர்த்தன்மையைக் காட்டு

1 குறள் : 1111
2 குறள் : 1120
3 குறள் : 1115.
4 குறள் : 90.

கின்றது. இது செடிக்குப் புலன் உணர்வு உண்டு என்னும் செடியியல் கருத்தைப் பேசுகின்றது. இத்தொடரில் உள்ள "மோப்ப", "குழையும்" என்னும் இரு சொற்களும் பொருள் அழுத்தங் கொண்டவை. அனிச்ச மலர் பற்றிய ஆய்வின் எம் முனைக்கும் மோத்தலும் குழைதலும் ஆணிவேர்கள் போன்றவை. 'குழைதல்' அனிச்சத்தின் தன்மை. 'மோப்பக் குழைதல்' இதன் தனித்தன்மை. இக்குறிப்பால் திருவள்ளுவர் அக்காலச் செடியியல் அறிஞராகக் காட்சியளிக்கின்றார்.

அனிச்ச மலர்பற்றிய திருக்குறட் கருத்துகள் அல்லாமல் குறிஞ்சிப்பாட்டு,

*"ஒண்செங் காந்தள் ஆம்பல் அனிச்சம்"*[1] – என்றும், கலித்தொகை,

*"அரிநீர் அவிழ்நீலம் அல்லி அனிச்சம்"*[2] – என்றும் பெயர் குறிப்பிடும் அளவில் பாடியுள்ளன. இவையல்லாமல் சங்கப் பாட்டுகளில் வேறெங்கும் பேச்சில்லை. பின்னர் எழுந்த இலக்கியத் தாரில் அனிச்சத்தைப் பாடியோரும் திருவள்ளுவர் குறித்துக் காட்டிய கருத்துகளையே தாம் தொடுத்துப் பாடியுள்ளனர்.

திருவள்ளுவர் கூறிய மென்மைக் கருத்தை,

"அனித்தம் மிதிப்பினும் பனித்த லான
ஒளிச்செஞ் சீரடி" (பெருங்:உஞ்சை:53:162, 163.)

"அம்மென் அனிச்ச மலரும் அன்னத் தூவியும்
வெம்மை யாமென் றஞ்சி மெல்ல மிதியாத" (சீவ.சி:24 54)

"... ... ... அனிச்சப்
பூமேல் மிதிக்கின் பதைத்தடி பொங்கும் நங்காய்"
(திருக்கோ:228)

"ஐயவாம் அனிச்சப் போதின் அதிக நொய்ய வாடல்
பையர வல்குலாள்தன் பஞ்சின்றிப் பழுத்த பாதம்" (கம்ப: கோலங்:14)

என்றெல்லாம் தொடுத்துப் பாடின.

திருத்தக்க தேவர், வள்ளுவர் வழிபற்றி,

*"அம்மென் னனிச்ச மலரும் அன்னத் தூவியும்
வெம்மை யாமென் றஞ்சி மெல்ல மிதியாத"*[3] – என மென்மையை அன்னத் தூவியின் இனத்துடன் பாடினார். மேலும்,

---

1 குறி. பா : 62,
2 கலி : 91 : 1,
3 சீவ. சி : 2454.

*"பஞ்சி அடரனிச்சம் நெருஞ்சி ஈன்ற பழமாவென்று அஞ்சும் மலரடிகள்"*[1] – என வள்ளுவர் சொல்லான நெருஞ்சிப் 'பழம்' என்பதையும் அமைத்துப் பாடினார்.

இவ்வாறு தமிழ்ச் சான்றோரும் பிறரும் அனிச்சத்தின் மென்மையைக் கோடிட்டுச் சொல்லுவதைக் கொண்டுதான் பரிமேலழகர்,

*"உலகத்தாரால் மென்மைக்கு எடுக்கப்பட்ட அனிச்சப் பூவும்"*[2] –என உரை விரித்தார்.

இதுபோன்றே அனிச்சம் குழையும் தன்மையையும்,

*"அணிநிற அனிச்சம் பிணியவிழ்ந் தலர்ந்த*
*அந்தண் நறுமலர் அயிர்ப்பிற்று (குழையும் தன்மைத்து.*
*ஆகும்"* (பெருங்: நரவாண:5:134, 1?5)

*"அனிச்சத்தும் போதுபோலத் தொடுப்பவே*
*குழைந்து மாழ்கி"* (சீவ. சி: 2939)

*"அனிச்சம் கார்முகம் வீசிட மாசறு*
*துவள் (குழையும்) பஞ்சான"* (திருப்புகழ் : திருச்சொல்:19)

அனிச்சமலர் தலையில் பெய்து சூடப்பட்டதைக் குறித்த வள்ளுவவழி நின்று,

*"அனிச்சப் பூங்கோதை சூட்டி"*[3] எனத் திருத்தக்க தேவரும்,

*"இருநூற் பெய்த அனிச்ச கோதையும்"*[4] எனக் கொங்கு வேளிரும் காட்டினர். திருத்தக்க தேவர் அனிச்சம் மலர்ந்து தொடுத்தால் அதிகம் குழையும் என்று கருதி மலராத போதைத் தொடுத்ததாகப் பாடினார் போலும். தொடுத்த அளவில் குழைந்து மாழ்குவதைக் கருதிப்போலும் கொங்கு வேளிர், தொடுப்போர் கை அதிகம் பட்டுக் குழையாதிருக்க இரண்டு நூல்கொண்டு பின்னியதாகப் பாடினார்.

---

1 சீவ. சி : 2454.
2 குறள் : 1120 உரை,
3 சீவ. சி : 745
4 பெருங் : உஞ்சை : 42 : 71.

திருக்குறளின் உறவுக் காலத்து நூலாகிய கலித்தொகை இம்மலரைப் பிற மலர்களுடன் இணைத்து,

"தெரிமலர்க் கண்ணியும் தாரும்"[1] ஆக்கி நயந்து சூடியதைப் பாடிற்று. இவற்றால் அனிச்சப்பூ சூடும் பூ.

மோந்த அளவில் குழையக் கூடிய புலன் உணர்வு செடி உயிரினத்திற்கு ஊறக்கூடியதுதானா என்னும் ஐயம் எழ வேண்டியதில்லை.

தொடுகின்ற ஊற்றுணர்வால் வாடுகின்ற 'தொட்டால் சிணுங்கி' இலையைக் காண்கின்றோம். ஒளிக்கும்–ஒளியின் வெம்மைக்கும், தண்மைக்கும் ஏற்பக் குவிந்து விரியும் மலர்களைக் கண்டுள்ளோம். மின்னலின் ஒளிக்குத் தாழை மலர்வதைக் கண்டோம். வண்டு எழுப்பும் இன்னொலிக்கு மலர்கள் மலர்வதும் மந்தார மலர் வண்டின் வல்லோசைக்கு மலர்வதும் அறியப்பட்டடன. இவை ஒலிக்கும், ஒலியின் மென்மை, வன்மைக்கும் மலர்தற்குக் காரணியமான புலன் உணர்வை அறிவிக்கின்றன. காற்றிற்கும், தவழும் காற்றிற்கும், தாக்கும் காற்றிற்கும் மலர்வதும் துவள்வதும் குழைவதும் நிகழ்கின்றன.

'திரோசிரா' என்பது ஒரு சிறு செடி. இதன் இலைகளின் விளிம்பில் மயிரிழை போன்ற உறுப்புகள் நீண்டிருக்கும். ஓர் இலைக்கு 200 இழைகளும் இருக்கும். ஒவ்வொரு மயிரிழையின் நுனியிலும் ஒருவகைச் சுரப்பி துளியளவில் முட்டாகத் தோன்றும். கதிரவன் ஒளியில் இது பளபளப்பதால் சிறு பூச்சிகள் விளக்கில் விழும் விட்டில் போல இலையுள் வந்து விழும். இலைத் தளத்தில் உள்ள ஒருவகைப் பிசுபிசுப்பில் பூச்சி ஒட்டிக்கொண்டு விடுபடத்துடிக்கும். இத்துடிப்பினால் ஒவ்வொரு மயிரிழையும் தனித் தனியே இயங்கத் தொடங்கி உட்புறமாக வளைந்து இப்பூச்சியை அழுத்திக் கொள்ளும். செடியின் இலையில் சுரக்கும் ஒருவகை நீரியம் பூச்சியைக் குழம்பாக்கிச் செடிக்கு இரையாக்கும். இதில் வியப்பு என்னவென்றால் இம்மயிரிழைகள் தம் செடிக்குப் பொருந்தக் கூடிய பூச்சியாக இருந்தால்தான் வளைந்து அழுத்தும் என்பது. இவ்வாறு உயிரினத்திலும் இரைக்குரியதை அறியும் அளவில் புலன் உணர்வுள்ள செடியினம் இருப்பதை நோக்க அனிச்சம் மோப்பக் குழைவது ஐயத்திற்கோ வியப்பிற்கோ உரியதன்று.

---

1 கலி 91 : 8.

இங்கு மோப்ப என்பதற்குப் பொருள் அழுத்தமுண்டு. மோத்தல் என்பது மணத்தை உள்ளே கொள்ள மூக்கு வழியே காற்றை உள்ளிழுத்தல். மலரை மோக்கும்போது காற்று மூக்கு வழியே வெளியே வருதலும் உண்டு. எனினும் மோத்தல் என்பது உள்ளிழுக்கும் செயலேயாகும். எனவே, அனிச்சத்திற்கு ஊறும் புலன் உணர்வு வெளியிலிருந்து நிகழும் ஈர்ப்பால் நிகழ்வது.

மாந்தர் உள்ளிழுக்கும் உயிர்வளி (*OXYGEN*) வெப்ப முள்ளது. அவ்வெப்பத்தாலும் ஈர்ப்பாம் தாக்குதலாலும் அனிச்சம் குழைகின்றது. மேலும் ஆழமாக நோக்கினால் உள்ளிழுக்கும் உயிர்வளியைவிட வெளிவிடும் கரியமிலவளி (*CARBON DIOXIDE*) கூடுதல் வெப்பமுள்ளது. அவ்வளவு வெப்பத் தாக்குதலுக்கு முன்னே, உயிர்வளியின் குறைந்த அளவு வெப்ப ஈர்ப்பிலேயே குழைந்துவிடும். இந்நிலை அனிச்சத்தில் குழைவு மென்மையை இன்னும் நுணுக்கமாக்குகின்றது.

உரையாசிரியர்களது குறிப்பு மேலும் ஒரு கருத்தைத் தூண்டுகின்றது. மோப்பக் குழையும் என்பதற்குப் பரிமேலழகர் "மோந்துழியன்றிக் குழையாது" என்றார். மணக்குடவர் "மோந் தால் அல்லது வாடாது" என்றார். இவ்விளக்கங்கள் உவமிக்கப் படும் பொருளாகிய விருந்தின் குழைவை உளத்துக்கொண்டு எழுதப்பட்டனவாயினும்வேறுவகைத்தாக்குதல்களுக்குக் குழைவது என்பதனைவிட மோக்கும் செயல் ஒன்றே இதற்குரியதாக அவர் களால் கருதப்பட்டுள்ளது. இக்கருத்தும் கவனத்திற்கொள்ளத் தக்கதே. இக்கவனத்தால் அனிச்சத்தின் குழைவிற்கு ஊறும் புலன் உணர்வு உயிர்வளியின் ஈர்ப்பு - ஈர்ப்பின்போது நேரும் வெப்ப நிலை இவற்றின் தனிக் காரணியத்தால் நேர்வதாகக் கொள்ள வேண்டும். இவ்வாறாகும் கருத்து அறிவியல் தொடர் புடன் மேலும் ஆயத்தக்கது.

இதுவரை அனிச்சத் தொடர்பில் காணப்பட்ட பாடற் கருத்துகளை நோக்கும்போது திருக்குறளின் கருத்துகளே மூல மாகவும், பிறவெல்லாம் அவற்றை வழிமொழிபவையாகவும் உள்ளன. இவைகொண்டு அனிச்சமலரைப் பற்றிய முழுமையான கருத்து களைக் கொள்ள இயலவில்லை. இவற்றைக் கூர்ந்து நோக்கும் போது 'சங்ககால அளவிலும் அனிச்சம் என்பது அருகியே காட்சிப்பட்டது' என முடிவு கொள்வது பொருந்தும்.

திருக்குறட் கருத்தளவிலும் அனிச்ச மலரின் தன்மையைத் தான் அறிகின்றோம். இம்மலரின் வடிவமைப்பு, நிறம், பருவம்

நிலம், இனம் பற்றித் தெளிவான விளக்கம் பெறச் சான்றுகள் நிறைவாக இல்லை.

கொங்கு வேளிர், "அணிநிற அனிச்சம்" என்றுள்ளார். அணி நிறம் என்றது பொதுவில் வண்ணனையாக அமைவதாக லாம். இதனைக் கணக்கில் எடுத்துக்கொண்டால் 'அழகிய நிறம்' என்னும் அளவே கொள்ள வேண்டும். அதற்கு மேல் இன்ன நிறம் என்று கொள்வது கற்பிப்பதாகவோ இழுத்துக் கட்டிக் கூறுவதாகவோ அமைந்துவிடும்.

அனிச்சத்தை மிதிக்கும் அடிகளைச் "செஞ்சீறடி" எனக் குறித்திருப்பது அனிச்சத்தின் செம்மையாகக் கொள்ள முடியாது. அனிச்சமலர் அவ்வகை உவமையாக எங்கும் வைக்கப்படவில்லை. மென்மைக்கே உவமையாக- அடைமொழியாக உள்ளது தெளிவாகத் தெரிவது, எனவே, அடியின் செம்மையை அனிச்சத்திற்கு ஏற்றுவது நாமாக ஏற்றுவதாகவே முடியும்.

மற்றோரிடத்தில் கொங்கு வேளிர் "வரி இதழ் அனிச்சம்" என்றுள்ளார். கொங்கு வேளிர் காலம் கி. பி. நான்காம் நூற்றாண்டளவினதாகும். அக்காலத்தில் அனிச்சம் காட்சிப்பட்டு இவ் 'வரி இதழ்' எழுதப்பட்டிருக்குமானால் அனிச்சமலர் தனித்தனி அகவிதழ்களை உடையது என்றும், அவ்விதழ்களில் வரி-கோடு அமையப்பெற்றது என்றும் கொள்ளலாம்.

கையில் விரல்களால் பிடித்து மோக்கும் நிலையை வைத்து நோக்கினால் இம்மலர் மிகச்சிறியது அன்று; ஓரளவில் விரல்களில் கொள்ளும் அளவுடையது ஆகும், எனவே, மிகச் சிறியதல்லாது, இதழ்கள் கொண்ட தனி மலராக, இதழ்களில் வரி கொண்டது என இதன் வடிவம் தென்படுகின்றது. இஃதும் நிழல் போன்ற காட்சியாகும்.

இம்மலர் மலரும் பொழுதை ஓர் உரைக்குறிப்பு காட்டு கின்றது. "அனிச்சமும் அன்னத்தின் தூவியும்" என்னும் குறள் தொடர்க்கு உரைவிரித்த பரிப்பெருமாள் என்னும் உரைகாரர்,

> "இதனால் இரவும் பகலும் காணப்பட்ட பொருள்களை உவமமாகக் கூறிய அதனால் ... ... ..." 4

— என்று எழுதியுள்ளார்.

இரவும் பகலும்' என்னும் வரிசையை அனிச்சத்திற்கும் தூவிக்கும்

---

1 குறள் : 1120 உரை.

நிரல் நிரலாகக் கொள்ளலாம். அதனையும் முறையே கொள்வது பெருவழக்கு. இதன்படி முதலில் கூறப்பட்ட அனிச்சத்திற்கு இரவுப் பொழுதைக் கொள்ள அதிகம் வாய்ப்பிருக்கின்றது. இவ்வழியில் அனிச்சம் இரவுப் பொழுதில் மலரும் மலராகலாம்.

இம்மலர் குழையும் தனித்தன்மையை நோக்கும் போது மழையும் காற்றும் தாக்கும் கார்ப்பருவம் ஒத்ததாகாது. வாடை தாக்கும் கூதிர்ப் பருவம் வாய்ப்பாகாது. வெப்பம் மிக்க வேனிற் பருவம் ஒவ்வாது. பனி, குளிரானாலும் அதன் உள் விளைவு வெப்பமாகும். தாமரை மலர்,

"சொரி பனி முருக்க நைந்து"[1] போவதை முன்னரும் (இந்நூற்பக்கம் 227) கண்டுள்ளோம். எனவே, பனிப்பருவம் பகையாகும். எஞ்சியுள்ள இளவேனிற் பருவம் உரியதாகலாம். இக்கருத்து அகச்சான்றில்லாது உய்த்துணர்வால் கொள்ளப் படுவது.

அடுத்து அனிச்சத்தைப்பற்றி நிகண்டுகள் குறித்துள்ள வற்றைக் காணவேண்டும்.

"அனிச்ச மரமும் வேரியும் நறவம் (கள்)"[2]

—எனப் பிங்கலம் அனிச்சத்தை 'மரம்' என்று குறித்துள்ளது. அனிச்சத்தைப் பெரும்பகுதி மரவரிசையில் நிகண்டுகள் வைத்துள்ளதாற் போலும் உரையாசிரியர் சிலரும், நிகண்டுகளைப் பதிப்பித்தோரும், தொகுத்தோரும் 'அனிச்ச மரத்தின் பெயர்' என்று குறித்துள்ளனர்.

25 ஆண்டுகளுக்கு முன் தமிழாசிரிய நண்பர் ஒருவர், 'அனிச்சமரம் திருமறைக்காட்டுக்கு அண்மையில் உள்ள குரவப் புலத்தில் உள்ளது; தற்போது பூத்துள்ளது' என்றார் ஆர்வமுடன் சென்று கண்டேன். மலர்க்கொத்தில் அனிச்சத்திற்குரிய தனித் தன்மை இல்லை. அங்குள்ள முதியோர் அதனை மருதமரம் என்று தெளிவாக்கினர். இதனையே பேராசிரியர் எம். எம். சோமசுந்தரம் அவர்கள் கண்டு "அனிச்சம் ஒரு மரவகை" என்று ஒரு கட்டுரையில் எழுதினார். இத்தொடர்பில் அனிச்சம் ஒரு மரம் என்றுகூறுதல் பொருந்தாது.

இப்பூ "மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்" எனப்பட்டதன்றோ? இதன்படி இது மாதர் அடியில் பட்டு உறுத்த வேண்டும். "அனிச்சம் மிதிப்பினும்" என்றது போல் மாதர்

---

1 சீவ. சி : 1404 2 பிங். நி : 3714.

காலடியால் மிதிபடவேண்டும். மிதிபடுவதற்கு இப் பூ நிலத்தில் இருக்க வேண்டும். எனவே இது நிலத்தில் புதராகப் படரும் சிறு செடியில் பூப்பது. இதனால் 'அனிச்சப் பூ நிலப் பூ' என்னும் கருத்து எழுந்தது.

இக்கரணியத்தாலோ என்னவோ புட்ப விதியும் அனிச்சத்தை நிலப் பூப் பட்டியலில் கோத்தது.

நிலச்செடியில் காலில் மிதிபடும் என்றால் மிதிபடும்போது மலர் மட்டுமன்றிச் செடியின் இலை, காம்பு, தண்டு முதலியனவும் மிதிபட்டாகவேண்டும். இதனால் உறுத்துவது மலர்மட்டுமன்று. எனவே, மலரின் மென்மை சுட்டபட்டதாகாது.

இக்கருத்து இதற்கு மாறுபட்ட கருத்திற்கே துணையாகும். மரத்திலோ கிளைகள் விட்ட பெருஞ் செடியிலோ பூத்து, நடக்கும் வழியில் காம்பு கழன்று விழுந்து கிடக்கலாம். நடக்கும் மாதர் அடியிற்படுதற்கு வாய்ப்பாகும். எனவே, இவ்வழியில் 'அனிச்சப் பூ கோட்டுப் பூ' என்றால் முன்னையதைவிட இக்கருத்து வலியுடைத்தாகும்.

இடைக்காலத்துப் பெருமக்களது கருத்திற்கேற்ப இதனை மரம் என்றும், இப் பூ கோட்டுப் பூ என்றும் கொள்ள வேண்டியுள்ளது. 'மரமன்று' பிற ஒன்று' என்பதற்குப் பொருத்தமான சான்றுகள் மலர் காட்சிப்பட்டு அறிவிக்கப்படும் வரை கோட்டுப் பூ என்றே கொள்ள வேண்டியுள்ளது.

சூடாமணி நிகண்டு.

"அம் கான் அனிச்சம்தானே" 1 என அழகிய காட்டுமரமாகக் காட்டியுள்ளது. "அம் கான்" என்னும் தொடர் செய்யுளின் எதுகையில் அமைந்ததால் முழுமைச் சான்றாகக் கொள்ள மனம் வரவில்லை. இருப்பினும் கம்பம் பகுதியில் வாழும் ஒரு முதியவர் "அனிச்சமரம் காட்டுமரந்தான். என் முன்னோர் கூறக் கேட்டிருக்கின்றேன்" என்றார். இதனையும் உறுதியான சான்றாக்க இயலாது. இந்த அளவிற்குக் கூட நிலத்திற்கு வேறு சான்று இல்லை. எனவே, இதனைத் தற்காலிகக் கருத்தாக 'முல்லை நிலத்தது' என்று சொல்லலாம்.

நிகண்டுகள்,

"நறவம், சுள்ளி அருப்பலம் அனிச்சம்" 2 என அனிச்சத்திற்கு மூன்று மாற்றுப் பெயர்களை வழங்கியுள்ளன. இவற்றுள்

---

1 சூடா நி. மரப்பெயர் ; 7.   2 சே. நி : மரப்பெயர்.

நறவம் நறைக்கொடி என்று முன்னர் (இந்நூற் பக்கம் 639)சான்று களுடன் காணப்பட்டுள்ளது. மேலும், நறவத்தைப்பற்றி வரும் சங்கப்பாடல்களில் எவ்வொரு இடத்திலும் அனிச்சத்தின் தனித் தன்மையான குழைவோ மிகு மென்மையோ குறிப்பாகவும் காட்டப் படவில்லை. நறவத்தின் இதழில் செவ்வரி உண்டு. இதனை "வரி இதழ் அனிச்சம்" என்று ஒன்றுகொண்டு அனிச்சத்தை நறவ மாகக் கொள்ள இயலாது. வரியுள்ள மலர்கள் மேலும் பல உள்ளன.

அடுத்த 'சுள்ளி' என்பது தனியொரு மரம். அனிச்சம், நறவம், சுள்ளி எனும் இவை மூன்றும் வெவ்வேறானவை என இலக்கியங்கள் தனித்தனியே பெயர்குறித்துக் காட்டியுள்ளன.

குறிஞ்சிப் பாட்டில் கபிலர்,

62 ஆம் அடியில் அனிச்சத்தையும்,

66 ஆம் அடியில் சுள்ளியையும்,

91 ஆம் அடியில் நறவத்தையும் வெவ்வேறாகக் காட்டி யுள்ளார்.

பெருங்கதையில் குறிஞ்சிப் பாட்டைப் போன்றே மலர்களைப் பட்டியலிடும் கொங்கு வேளிர் இலாவாண காண்டத்தில், மாசன மகிழ்ந்தது பகுதியில் ஓர் அகவற் பாடலிலேயே—,

12ஆம் அடியில் அனிச்சத்தையும்,

15ஆம் அடியில் நறையையும்,

22 ஆம் அடியில் சுள்ளியையும் தனித்தனி வெவ்வேறாகக் காட்டியுள்ளார். எனவே, அனிச்சத்தின் மறுபெயர்களாகக் கூறப் பட்ட இவ்விரு பெயர்களும் வேறுவேறாக உள்ளமை குழப்பத்தைத் தருகின்றது. நறவம், சுள்ளி என்னும் சொற்களுக்குரிய வேறு பொருட்டன்மை அனிச்சத்திற்கு உடைமையாயிருந்து அதன் காரணியமாக இப்பெயர்கள் அறிவிக்கப்பட்டிருக்கலாம்.

அனிச்சத்தை ஆய்ந்த மூலிகை அறிஞர் இரா. குமாரசாமி அவர்கள், அனிச்சத்தை நறவமாகவும் காண்கின்றார்கள். ஆன காலிசு, மாஞ்சரோகிணி என்பவைதாம் அனிச்சம் என்றும் எழுதி யுள்ளார்கள்.

ஆனகாலிசு என்பது காட்டுச்செடி. இதன் மலர் காற்றில் உள்ள ஈரப்பதத்திற்கு ஏற்பக் குவியும் அல்லது மூடும். மாஞ்ச ரோகிணி என்னும் மூலிகையும் இத்தகையதே. இவையிரண்டும் ஈரப்பதத்தால் குவிவன. அனிச்சம் மூச்சின் ஈர்ப்பு வளியான

வெப்பப் பதத்தால் குழைவது. குவிவது வேறு; குழைவது வேறு. அனிச்சம் குழைவது. மற்றைய இரண்டும் குவிவன. எனவே, அனிச்சம் அவைதாம் என்பது பொருந்துவதாக இல்லை.

அடுத்து மருத்துவ நூல்களில் 'அனிச்சை' என ஒன்று பேசப்படுகின்றது. அதனை அகத்தியர் குணபாடமும் போகர் கருக்கடையும் 'அனிச்சம்' என்று குறிக்கவில்லை, 'அனிச்சை' என்கின்றன. குணபாடம் 'நாகமல்லி' என்னும் மூலிகையின் மறு பெயராகவே அனிச்சையைக் காட்டியுள்ளது, அந்நாகமல்லிக்குக் குறிக்கப்பட்டுள்ள தன்மை அனிச்சத்தை அணுகுவதாக இல்லை. போகரது கருக்கடைப் பாடல் ''அனிச்சையிட பேர்தனையே அறியக் கேளு'' என 'அனிச்சை' என்றது எனவே, அனிச்சை, அனிச்சத்தினும் வேறான மருந்து மூலிகையாகின்றது.

'அருப்பலம்' என்றொரு பெயர், இதற்குக் கணம் இன்மை காரணியமாக ஏற்பட்டிருக்கலாம் நிகண்டுகளே 'பலம்' என்பதற்கு 'நிறை' என்று நிறையளவுப் பொருளைக் காட்டியுள்ளன. நிறை யில்லாதது – பலமில்லாதது என்னும் பொருளில் இப்பெயர் அமைந்திருக்கலாம், அருமை இன்மைப் பொருளைத்தரும். இவ்வாறாயின் அருமை + பலம் = அரும்பலம் — அருப்பலம் ஆகியிருக்கலாம்

மலைஞாலத்தில் 'உப்பனிச்சம்' என்றொரு முட்செடி உள்ள தாகக் கூறுவர். அனிச்சம் என்னும் பெயர்த் தொடர்பு அன்றி மற்ற வகையில் வேறுபட்டது என்கிறார் மூலிகை அறிஞர் இரா. குமாரசாமி.[1]

இனி, அனிச்சம் என்னும் சொல்லைக் காண வேண்டும். இம்மலர் குழைந்து விரைவில் அழிந்துவிடுவதைக் கொண்டு 'அநித்தியம்' எனப்பட்டு, அது அநித்தம் –அனித்தம் ஆகி அனிச்சம் ஆகியிருக்கலாம் என்பர். எதிர்மறைப் பொருளைத் தரும் முன் ஒட்டு எழுத்தான 'அ' இணைந்து உருவான வடமொழிச் சொல் சங்ககாலத்தில் தமிழில் புகவில்லை. எனவே, இது வடமொழிச் சொல்லுருவம் அன்று.

அனிச்சம் என்னும் சொல் ஒலிப்பில் தொடர்புபடுத்திப் பார்க்கத் தமிழில் 'பனிச்சை' என்றொரு சொல் உண்டு. இச்சொல் மகளிரது ஐம்பாற் கூந்தலில் ஒருவகையைக் குறிக்கும். ''பனிச்சை'' என்றொரு மரம் உண்டு. பெருங்கதை இதனை,

1 திருக்குறள் மூலிகைகள் பக்கம் : 12.

"பால்வெண் கோட்டமும் பனிச்சையும் திலகமும்"[1] என்றும் "பனிச்சையும் பயினும் பறியப் பாய்ந்து"[2] என்றும் பனிச்சை மரத்தைப் பாடியுள்ளது. கஞ்சாங் கோரைக்கும் 'பனிச்சா' என்றொரு பெயர் கூறப்படும். இப்பாங்கில் நோக்கினால் 'அனிச்சம்' என்பது 'அனிச்சு' என்னும் தமிழ்ச்சொல் அம் விகுதிபெற்றதாகும். அழகு, மென்மை என்னும் பொருள் வடிப்பை அகரம் தன் வளர்ச்சி வேர்ச்சொல்லால் பெறும். அ – அல் – அன் – அனி – அனிசு – அனிச்சு என வளர மொழியியல் நெறி இடந்தருகின்றது. இவ்வகையில் உருப்பெற்ற 'அனிச்சம்' என்னும் சொல் மென்மை என்னும் பொருளூட்டம் கொண்டதாகும்.

மென்மைத் தன்மையால் பெயர்பெற்ற அனிச்சத்தை எண்ணிய பாவேந்தர் பாரதிதாசனார் தென்றலை அதன்பால் தழுவ விட்டார். வன்மைப் பொருளையும் தூளாக்கும் வல்லமை கொண்ட காற்று, அனிச்சத்தின் மென்மையைக் குலைக்க விரும்பாதாம் :

"திண்குன்றைத் தூள்தூ ளாகச்
செய்யினும் செய்வாய்; நீஓர்
நுண்துளி அனிச்சப் பூவும்
நோகாது நுழைந்தும் செல்வாய்"[3] –என்று

நோகாது நுழைந்து செல்வதாகப் பாடிள்ளார்.

அனிச்சம்பற்றி முழுமையாக அறியும் வாய்ப்பு இன்னும் நேரவில்லை. உறுதியாக அனிச்சத்தை அடையாளங்காண முடியாமையால்தான் செடியியலாரும் அதற்கென நேரடியாகச் செடியியல் பகுப்புப் பெயரை அமைக்க இயலவில்லை. இஃதும் 'அனிச்சம் ஓர் அரிய மலர்' என்பதற்குத் துணையாகின்றது. இச்சிறப்புள்ள அனிச்ச மலர்பற்றி அறிந்துள்ள கருத்துகளைப் பின்வருமாறு தொகுக்கலாம்:

அனிச்சமலர்,

மென்மைத் தன்மைக்கு உரியது;
குழையும் அளவில் மென்மையானது.

இலேசானது.
புலன் உணர்வுள்ளது.

1 பெருங் : உஞ்சை : 50 · 29.
2 பெருங் : உஞ்சை : 51 : 53.
3 அழ. சி : தென்றல் : 1,

மோந்த அளவில் குழைவது.
மாந்தர் உயிர்ப்பின் ஈர்ப்பிலுள்ள வெப்பத்தால் குழையும்.
தனிப் பூ.
காம்பு களைதற்குரியது.
காம்பு களையப்பட்டுத் தலையிற் பெய்து சூடப்பட்டது.
பிற மலர்களுடன் கண்ணியாகவும் தாராகவும்
அணியப்பட்டது.

சங்க காலத்தில் அருகிக் காணப்பட்டது.

இக்கருத்துகள் திருவள்ளுவப் பெருந்தகையது சொற்பாங்கு கொண்டும், கலித்தொகை அடிகள் கொண்டும் உறுதியாகக் கொள்ளப்பட்டவை.

மேலும்,

அழகிய நிறமுடையது.
இதழில் வரி கொண்டது.
இரண்டு நூல்கொண்டு பின்னித் தொடுக்கப்பட்டது.

இவை இலக்கியக் குறிப்புகள் கொண்டு காணப்பட்டவை.

கோட்டுப் பூ.
முல்லை நிலப் பூ.
இளவேனிற் பருவத்தில் மலரும்.
இராப் போதில் மலரும்.

இவை உய்த்துணர்வால் குறிக்கப்பட்டவை.

திருவள்ளுவர் வாய்மொழியால்,
"நன்னீரை வாழி அனிச்சமே" என வாழ்த்தப் பெற்றது.
இவ்வாழ்த்தால் எங்கேனும் வாழ்ந்து என்றேனும் வெளிப்படுவதாக!
'அரிய மலர்' என்பதினின்று நீங்கி 'முழுதும் அறியும் மலர்' ஆகுக

## 2. மதில் சூழ் மர மலர்.

### சுள்ளி.

சுள்ளி என்னும் பெயரை நிகண்டுகள் அனிச்சத்திற்கும் நறவத்திற்கும் நாகத்திற்கும் மராஅத்திற்கும் ஞாழலுக்கும் ஆச்சாவிற்கும் சூட்டியுள்ளன. 'சுள்ளி' என்பது பலவற்றிற்கு மாற்றுப் பெயராகும் சொல் அளவானதுதானா? தனியொரு

வகையா? இவ்வாறு ஐயம் எழுதலால் சுள்ளி அறிவதற்கு அரிய மலராகின்றது.

சுள்ளி, அனிச்சம் அன்று என்பது முன்னே காணப் பட்டது. நறவம் கொடி; பின்னே காணப்படும் விளக்கத்தால் சுள்ளி மரம். எனவே பொருந்தாது. ஞாழல் நெய்தல் நிலத்தது சுள்ளி குறிஞ்சி நிலத்ததாகக் அறியப்படும். ஞாழல் சுள்ளி யாகாது. சுள்ளியையும் மராஅத்தையும் நச்சர் குழப்பிய தவறு முன்னே (இந்நூற் பக்கம் 511, 512.) பதியப்பட்டுள்ளது. எனவே, மராஅமும் சுள்ளி அன்று. ஆச்சா என்னுஞ் சொல் சங்ககாலத்தில் ஆட்சியில் இல்லை. இதன் பொருத்தத்தைப் பின்னே காணலாம். இவ்வாறு ஒவ்வொன்றும் சுள்ளிக்கு வேறாகும்போது நிகண்டுகள் பலவற்றிற்கும் சுள்ளியைக் குறிக்கக் கரணியம் என்ன?

சுள்ளி என்னுஞ் சொல் பலபொருள் ஒருசொல். இலக்கியங் களில் இச்சொல் ஆட்சிபெற்றுள்ள இடங்கொண்டு இச்சொற்கு மென்மை, கூர்மை, ஈரம் அற்றுக் காய்ந்தது என்னும் பொருள் களைக் காண்கின்றோம். மொழியளவில் 'சுள்' என்னும் அடியாகச் 'சூட்டை உடையது' என்றும், 'சுள்' என்னும் கார்ப்புச் சுவை கொண்டது என்றும் பொருள்தரும். இப்பொருள்களில் முன்னே காணப்பட்ட நறவம் முதலியவற்றிற்கு உள்ள தன்மை பொருந்தி இருத்தலைவைத்துச் 'சுள்ளி' என்னும் பெயர் சூட்டப்பட்டிருக் கலாம்.

இயற்கைக் கவிஞர் கபிலர் மேலே காணப்பட்டவற்றில் ஆச்சா தவிர மற்றவற்றைத் தனித்தனியே காட்டிச் சுள்ளியை யும்[1] தனி ஒன்றாகக் காட்டியுள்ளார். செடியியலார் நறவம் முதலியவற்றிற்குத் தனித்தனியே வெவ்வேறு பெயரமைத்துச் சுள்ளிக்குத் தனியாக, தியோசுபைரோசு எபீனம் (*DIOSPYROS EBENUM.*) எனப் பெயரிட்டுளர். இவற்றால் சுள்ளி தனியொரு வகையாகின்றது. இத்தனிவகைச் சுள்ளியின் விவரம் காணத் தக்கது.

முதல் இராசேந்திரன் மெய்ச்சீர்த்தியில்,

"சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையும்"[2] என்றுள்ளது. கொள்ளிப் பாக்கையின் கோட்டையைச் சுற்றிச் சுள்ளி இருந்தமை தெரிகின்றது. இவ்வாறு பெருமரங்களே அமையும். 'சாலம்'

---

1 குறி. பா: 66. 2 திருமலைக் கல்வெட்டு: வரி 2

என்பதற்கு 'மதில்' என்றொரு பொருளை நிகண்டு[1] குறிக்கின்றது. இத்தொடர்பில் சாலமரம் என்னும் பெயருண்டாகியிருக்கும். சால மரம் என்பது ஆச்சா மரம். ஆச்சா மிகப் பெரும் மரம். 50, 60 அடி உயர்ந்து மிகப் பருத்த அடிமரத்திற்குமேல் கிளைகள் வளர்ந்து 80, 90 அடிஉயரம் வளர்வது. எனவே, இது போன்று அமைப்புடைய சுள்ளி பெருமரமாம் 'ஆச்சா' எனக் கருதப்பட்டிருக்கலாம். சுள்ளி, ஆச்சா இரண்டிற்கும் தனித்தனியே செடியியற்பெயர் இருப்பினும் இரண்டையும் ஒரு குடும்பத்தனவாகவே குறிக்கின்றனர்.

எவ்வாறாயினும் சுள்ளி ஒரு பெருமரம். எனவே, இதன் பூ கோட்டுப் பூ.

"வெண்பூஞ் சுள்ளி"[2] என்றும், "சுள்ளி வெண் போது சுரும்புண விரித்து"[3] என்றும் பெருங்கதை பாடியுள்ளது. எனவே, இப் பூ வெண்மைநிறங் கொண்டது. (ஆச்சாவின் அகவிதழின் உட்பகுதி கிச்சிலி நிறம்). இதனாற் கட்டப்பட்ட மாலையும் "ஒளிர் மதி அன்ன சுள்ளி வெண் சூழ்ச்சி (மாலை)"[4] எனப்பட்டது.

சுள்ளிப் பூவைத் தலைவன் ஒருவன் தன் காதலிக்குப்பிற மலர்களுடன் தொடுத்துச் சூட்டியதைத் திணைமாலை நூற்றைம்பது[5] பாடியமை கொண்டும் இதனைச் சூடும் பூவாகக் கொள்ளலாம். தொடுக்கப்பட்டனவாகக் கூறப்பட்ட மலர்கள் யாவும் குறிஞ்சி நிலத்தவை. அப்பாடலும் குறிஞ்சித் திணைப்பாடல். இவற்றால் சுள்ளி மலர் குறிஞ்சி நிலத்ததாகின்றது. [6]

சீவகன் "சுனைய நீலமும் சுள்ளியும் சூழ்மலர் நனைய நாகமும்" பிற மலர்களும் கொண்டு அருகக் கடவுளைப் போற்றியமை கூறப்பட்டுள்ளது. எனவே, இது வழிபாட்டு மலருமாகும்.

சேரநாட்டு முசிறியில் சுள்ளி என்னும் பெயரில் ஆறு ஒன்று ஓடுவதை எருக்காட்டூர் தாயங்கண்ணனார்[7] பாடினார். திருத்தக்க தேவர் "சுள்ளி வேலி" [8] என இம்மரத்தால் சுற்றுக் காப்பு வேலி அமைந்ததைப் பாடினார். இக்கருத்து கொள்ளிப் பாக்கை மதிலைச் சூழ்ந்து சுள்ளி வேலியாக இருந்ததுடன் இயைகின்றது. இதனால் இம்மலரை 'மதில் சூழ் மரமலர்' எனலாம்.

---

1 பிங். தி : 628 : 1.
2 பெருங் : இலா : 12 : 22
3 பெருங் : மகத : 1 : 187.
4 பெருங் : இலா : 12 : 108.
5 திணைமா. நூ : 2.
6 சீவ. சி : 1608
7 அகம் : 149 : 8, 10
8 சீவ: சி : 1565.

# 3. மஞ்சாடி வகை மலர்.

## போங்கம்

'போங்கம்' என்னும் சொல்லே அரிய சொல். குறிஞ்சிப் பாட்டில் மட்டும் இச்சொல் உளது. இதன் தொடர்பில்தான் ஒன்றிரண்டு அகர முதலிகள் இச்சொல்லைக் குறித்துள்ளன.

*''போங்கந் திலகந் தேங்கமழ் பாதிரி''*[1] - எனக் கபிலர் இதனைப் பாடியுள்ளார். நச்சர் முன்னே உள்ள போங்கத்தை ''மஞ்சாடிப் பூ'' என்றார். அடுத்துள்ள திலகத்தை ''மஞ்சாடி மரப் பூ'' என்றார். அடுத்தடுத்து இவ்வாறு அவர் எழுதியுள்ள தால் இஃது அமைதி காணற்குரியதாகின்றது.

மஞ்சாடியில் இருவகை இருந்து இவ்வாறு வேறுபாடு கொள்ளப் பட்டிருக்கும். இச்சொல்லை அமைத்துக்கொண்ட அகர முதலிகளும் ''மஞ்சாடி மரவகை'' என்றே பொருள் எழுதின.

பரிபாடல் திரட்டுப் பாடலில், வேங்கை, மராம், மகிழம், பிண்டி மலர்களுடன் ''நிவந்து சேர் போங்கி''[2] எனப் 'போங்கி' என்றொரு மலர் குறிக்கப்பட்டுள்ளது. இப்போங்கி போங்க மாகலாம். போங்கம் மஞ்சாடி வகையானாலும் செடியன்று. ''நிவந்து சேர்'' என்னும் அடைமொழியால் உயர்ந்த மரமாகும். இப் பூக்களைக் கொண்டது ''மணி நிறங்கொண்ட மலை'' என்றிருத்தலால் இது மலைநிலப் பூ ஆகின்றது.

சொல்லால் அரிய நிலைமட்டுமன்றிச் செடியியலிலும் இதன் பெயர் குறிக்கப்படவில்லையாதலால் அவ்வகையிலும் அரிய பூவாகின்றது.

அறியும் அளவில், போங்கம் பூ, குறிஞ்சி நிலப் பூ. கோட்டுப் பூ. திலகமாம் மற்றொரு மஞ்சாடி மலர்க்குரிய பருவ மாகிய வேனில் இதன் பருவமாகலாம். நிறங்காண இயலாத அரிய மலர்.

---

1 குறி. பா : 74.  2 பரி. திரட்டு : 1 : 8.

# 4. பிசின் மலரா?

## பயினி.

'பயினி' என்னும் சொல்லின் பொருளைக் கொண்டே இம்மலர் பற்றிக் காணவேண்டியுள்ளது. சங்கப் பாடல்களில் குறிஞ்சிப்பாட்டு[1] ஒன்றே இதனைக் காட்டியுள்ளது. இதனால் இஃதொரு அரியமலர்.

பயினி என்னுஞ்சொல்லுக்கு கூடுகை, இணக்கம், ஒருவகை மரம் என்னும் பொருள்களைக் காண்கின்றோம். 'ஒரு மரம்' என்னும் பொருளை இங்கே கொள்ளவேண்டும். 'பயின்' என்னும் சொல் 'உள்குருத்து, பிசின்' என்னும் பொருள்களையுடையது

கருவிகளுக்கு கூர்மை ஏற்றுபவன் 'காரோடன்' எனப் படுவான். அதற்குரிய சாணைக்கல் அரக்குடன் செய்யப்பட்டது. இதனைப் பரணரும் மாமூலனாரும் ஒரே வகைத் தொடரால் "*சிறு காரோடன் பயினொடு சேர்த்திய கற்போல்*"[2] எனப் பாடினர். இங்கு அரக்கைக் குறிக்க வந்துள்ள பயின் என்னும் சொல் இக்காலத்தில் 'பிசின்' என மருவி வழங்கப்படுவதாகும்.

செடியியலில் இதன் பெயர் பினஃச் [*PINUS*] என்றுள்ளது. இவ்வொலிப்பு பிசினை ஒத்துள்ளமையும் நோக்கத்தக்கது. மிக அருகியதாகக் காணப்பட்ட இது பிசின் என மருவி வழங்கும் தமிழ்ச்சொல் வழி செடியியலில் அறிமுகமாகியுள்ளது எனலாம்.

இச்சொற்பொருள் கொண்டு, பாதிரி முதலியன போன்று இம்மலர் பிசுபிசுப்பான சாற்றைக் கொண்டதாகலாம். அரக்கு போன்ற செம்மை நிறத்தது. குறிஞ்சி நிலத்துக் கோட்டுப் பூ. பெருங்கதையில் மர வரிசையில் வைக்கப்பட்டுள்ள இது "பயில்பூம் பயினி"[3] எனப்பட்டுள்ளது. இதுகொண்டு இதன் பூக்கள் பலவாகச் செறிந்திருக்கும் வகையில் கொத்துப் பூவாகும். பருவங் கொள்ளுதற்கில்லை.

---

1 *குறி. பா* : 69.
2 *அகம்* : 356 : 9 ; 1 : 5.
3 *பெருங் : இலா* : 12 : 17.

# 5. வடக்கு மலர்.

## வட வனம்.

வடபுலம், வடமலை, வடபொழில், வடமீன், வடமொழி, வடவளம் எனுந்தொடர்கள் சங்கப் பாடல்களில் உள்ளன. இவற்றுள் வடக்குத் திக்குச் சொல் உளது வடக்கிலிருந்து வரும் வாடைக் காற்று வடந்தை எனப்பட்டது. இவைபோன்று குறிஞ்சிப்பாட்டில்,

"*வடவனம் வாகை வான்பூங் குடசம்*"[1] – என வடவனம் பாடப்பட்டுள்ளது. இது வடவனப் பூ. வனம் என்றால் காடு. இப்பொருளில் நான்மணிக்கடிகை[2] மட்டும் பாடியுள்ளது. பிற சங்கப் பாடல்களில் இச்சொல் இல்லை. இச்சொற்பொருள் கொண்டு வடபுலத்திலிருந்தும் வந்த குறிப்பிடத் தக்க மலர் மிகுதியாகப் பூப்பதால் இப்பெயர் பெற்றுள்ளது. அல்லது ஒரு மரமே மிகுதியாகக் காடுபோன்று பம்பித் தழைப்பதாக விருக்கலாம்.

இச்சொற்பொருள் கொண்டன்றி விளக்கம்பெற வாய்ப்பில்லை. செடியியலாரும் அனிச்சம், போங்கம் போன்று இதற்கும் செடியியல் பாகுபாட்டுப் பெயரை அமைக்கவில்லை. எனவே, விவரம் அறிய இயலாத அரிய மலர்.

கோட்டுப் பூ என்று கொள்ளலாம்.

# 6. குடத்து மலர்.

## அதவம் — அத்தி.

அகவிதழ் முதலிய உறுப்புக்கள் இருந்தும் அவை புறத்தே காட்சிப்படாமல் உள்ளேயே பொதிந்திருக்கும் பூக்கள் உள. கண்களால் காண்பதற்கு அரியவை என்னும் அளவில் இவை அரிய மலர்கள். இவ்வருமையை வைத்தே "பூவாதே காய்க்கும் மரமும் உள"[3] எனப்பட்டது. இவற்றைக் கொண்ட மரங்களுக்குக் 'கோளி' என்று பெயர் சூட்டின நிகண்டுகள். 'கோளி' என்னும் சொல் 'கொள்ளுதலை உடையது' என்னும் பொருளது. புறத்தே யன்றி அகத்தே தனக்குள்ளேயே பூவைக் கொள்வது கோளி.

---

1 குறி பா : 67.
2 நான். க : 4 : 2.
3 நல் : 85.

எனவே, 'கோளி' என்னும் பெயரே அவற்றிற்குப் பூக்கள் உண்டு என்று சொல்கின்றது.

இவ்வகை மலர்களாக அத்தியும் ஆலமும் கொழிஞ்சியும் கூறப்படும். அத்தி பூப்பது பற்றி முன்னே (இந்நூற்பக்கம் 117 — 119) காட்டப்பட்டது. "அத்திப் பூவையும் ஆந்தைக் குஞ்சை யும் கண்டவர் யார்?" என்றொரு பழமொழி உண்டு. எவ்வாறு ஆந்தைக் குஞ்சு இருப்பது உண்மையோ அவ்வாறே அத்தி பூப்பதும் உண்மையாகும்.

'அதவு' என்பதே இதன் மூலப்பெயர்; சங்க காலப்பெயர். அம் விகுதி பெற்று 'அதவம்' ஆயிற்று. அதவமே பிற்காலத்தில் 'அத்தி' ஆயிற்று.

இதன் கனி "அதவத் தீங்கனி" எனப்பட்டது. இக்கனி செம்மை நிறத்தது. இதன் செம்மை நிறம் செம்மந்தியின் முகச் செம்மைக்கு உவமை கூறப்பட்டது.[1]

"ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்து"[2] என நண்டுகள் உள்ள ஆற்றங்கரையில் இம்மரம் உள்ளதாகப் பாடப்பட்டமை யால் இது மருத நிலத்ததாகும்.

இதன் இலைக் கட்கத்தில் பூ தோன்றும். நாம் காணும் பிஞ்சாகிய கோளவடிவமே பூங்கொத்து. கோளவடிவில் உருண்டை யாகவும், சில வால்பேரி வடிவிலும் அமையும். மேலே மூடியிருக்கும் தோல் போன்றது இதன் மஞ்சரித் தண்டாகும். இதன் மேல்மட்ட மையத்தில் சிறு துளை ஒன்று உண்டு. இதனைக் 'கண்' என்பர் இக்கண்ணோடு பூங்கொத்து உள்ளே நீண்டிருக்கும். புறமஞ்சரித் தண்டின் உட்புறச்சுவரில் ஒட்டிய நிலையில் பூக்கள் தோன்றும். இவை நுண்ணிய அளவில் எண்ணற்றவையாகப் பூக்கும். ஒவ்வொரு நுண்ணிய பூவிலும் அகவிதழ், சூலகம், தாரகம் முதலிய உறுப்புகள் உண்டு. இவ்விதழ்கள் நீல நிறத்தவை, மஞ்சள் நிறத் திலும் அமையும். இவ்வொரு கொத்திலேயே ஆண் பூ, பெண் பூ, அலிப்பூ, மலட்டுப் பூ எனும் நான்கும், சிலவற்றில் ஒன்றிரண்டு குறைந்தும் அமைவது இதற்கொரு தனிப்பண்பு என்பர். இதனால் சிலவகை அத்திப் பூக்கள் தம் கொத்துக்குள்ளேயே தாதுத் தூளைக் கலப்பித்துச் சூல்கொள்ளும்.

மேல் மட்டத்தில் 'கண்' என அமைந்த துளையின் வழியே ஒருவகைக் குளவிப் பூச்சி புகுந்து பூவின் சூலறையில் முட்டை

1 நற் : 95 : 3    2 குறு : 24.

யிடும். முட்டையிலிருந்து புழு பிறந்து அது பூச்சியாகித் தன்மேல் ஒட்டிய தாதுத் தூளுடன் புறத்தே வெளிப்படும். இப்பூச்சி 'அத்திப் பூச்சி' எனப்படும். வேறு அத்திப் பூச்சியின் தொடர்பால் தாதுத் தூள் கலப்பு நேரும். இவ்வாறாகும் சேர்க்கையால் சூல் பிடித்துப் பிஞ்சாகும். இவ்வாறு இப்பூச்சி இதற்கு உதவுகின்றது. இப்புழுப்பூச்சி உள்ளே இருப்பதால்தான் "அத்திப் பழத்தைப் பிட்டால் அத்தனையும் சொத்தை – பூச்சி" என்றனர்.

செடியியல் அறிஞராகிய பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களும்,

*"உதும்பர (அத்தி) தருவில் ஒருகனி யதனுள்*
*பிறந்திறும் அசகம் (பூச்சி) இதனினும் கோடி"*[1] என்று

பாடினார்.

இப்பூச்சியின் உதவியால் தாதுத்தூள் பிற இன அத்தியுடன் இணைந்து ஒட்டினங்கள் இயற்கையாகவே பெருகின. இவ்வகையில் 700 க்கு மேற்பட்ட இனங்கள் உலகில் உள்ளன.

காட்சியளிக்காத அரிய அத்திப் பூ மருதநிலத்துக் கோட்டுப் பூவாகும். காய்க்கும் பருவமே பூப்பருவமும் ஆகின்றது. அத்தி வகைகளில் பல உள்ளமையால் பருவங்கள் வேறுபடுகின்றன. பொதுவில் அத்திப் பூ பனிப்பருவப் பூ எனலாம்.

அத்திக்காய் சமையலுக்காகும். ஒட்டு அத்திக் கனி சுவையானது. பூவின் வடிவமைப்பால் இது 'குடத்துப் பூ.'

## 7. பெருமரத்தின் சிறுமலர்.

### ஆல்.

அத்தி இனத்தைச் சேர்ந்தது ஆலமரம். மர அளவில் ஆல் மிகப் பெரிது. அது விடும் விழுதுகளால் பரப்பளவிலும் பெரியது. சென்னை அடையாற்றில் உள்ள ஆலமரமும் குறிப்பிடத்தக்க பெரியது. இருப்பினும் உலகில் மிகப்பெரிய ஆலமரங்கள் உள்ளன. பெரிய அலெக்சாந்தரது 7000 படைவீரர்கள் இளைப்பாறுதற்கு ஓர் ஆலமரம் இடந்தந்தது என்பர்.

மரத்தால் பெரிய இது, மலரால்சிறியது. அத்திப்பூப்போன்றே அனைத்து அமைப்புகளையும் கொண்டது ஆலம் பூ. அத்திப்

---

1 மனோன் : 4 : 1 : 165, 166.

பூவின் முழுக் குட அளவில் பகுதி அளவினது. கோள வடிவமைப் புடையது. உள்ளே நுண்ணிய அளவில் எண்ணிக்கையற்ற இளஞ்செம்மைநிறப் பூக்களைக் கொண்டது. இதற்கும் தாதுத் தூளைக் கலந்து சூலுக்கு உதவ அத்தியைப்போன்று பூச்சி முட்டையிட்டு உதவுகின்றது.

அத்தியைப் போன்றே இஃதும் மருதநிலத்துக் கோட்டுப் பூ. இளவேனிற் பருவப் பூ.

இம்மரத்திற்குத் 'தொன்மரம்' என்றொரு பெயர் உண்டு இதன் பழமையை இப்பெயர் சொல்கின்றது.

ஆலம்பூ மருந்திற்குரியது. அகத்தியர் குணபாடம்,

*"சொல்லுகின்ற மேகத்தைத் துட்ட அகக்கடுப்பைக்*
*கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்காண் - நல்லாலின்*
*பாலும் விழுதும் பழமும்விதை யும்பூவும்*
*மேலும் இலையுமென வின்"*

— என மிகக் கடும் நோய்களாகிய மேகம், உள்கடுப்பு, நீரிழிவு ஆகியவற்றை ஆலின் அனைத்துறுப்புகளும் போக்கும் என்கின்றது. இதிற் பூவும் இடம்பெற்றுள்ளமை இது பூப்பதை அறிவிக்கும் சான்றுமாகும். ஆலம் முகிழைக் கொண்டும் மருந்துகள் படைக்கப்படுகின்றன.

# 8. முசு மலர்.

## பலா.

*"ஆலைப் பலா ஆக்கலாமோ"*[1] –என்று பாடினார் பிற்கால அவ்வையார்.[1] ஆலமரத்திலும் பால் உண்டு; பலா மரத்திலும் பால் உண்டு. இரண்டிலும் பழமும் உண்டு. ஒன்று பறவைகட்கு இரை. மற்றொன்று மாந்தர்க்குச் சுவையுண்டி. பாலும் பழமுங் கொண்டு இரண்டையும் நோக்கினால் பலா சிறந்தது. சுவையால், அளவால் பலாக் கனி வேறுபட்டது.

"பூவாதே காய்க்கும் மரமும் உள"[2] எனப்பட்டது, பலாவையும் அம்மரமாகக் 'கோளி' என்று குறித்தனர். "பூவாது பழுக்கும் சூலடிப்பலா"[3] என்றதும் முன்னே அத்திக்குக் கண்டது போன்று பூத்தமை காட்சிப் படாததை வைத்தேயாகும். பூவாது

---

1 *தனி. சி,* அவ்வை : 62
2 *நல்வழி* : 35
3 *சித. மு. கோ* : 8 : 17

காய்ப்பதையும், பூத்துக் காயாததையும் குறிக்கப் "பலாமாவைப் பாதிரியைப் பார்"[1] என்றதையும் இக்கருத்தில் கூறப்பட்டதாகவே கொள்ளவேண்டும்.

அத்தி,ஆல் இரண்டின்பூக்களுக்கும் பலாப்பூவிற்கும் வேறுபாடு உண்டு. இரண்டும் காட்சிக்கு அரியன என்னும் நிலையில் ஒன்றாயினும், இக்காட்சிப்படாமை இருவகைப்படும். முன்னவை குடத்து மலர்களாக உள்ளே பொதிந்து மறைந்திருப்பவை. பலா புறத்தே காட்சிப்பட்டுப் பூப்பது. ஆயினும், ஒவ்வொரு தனித் தனிப் பூவின் நுண்மை 'அவை கூடிய செறிவு' அவை மொய்த்துள்ளமை முதலிய கரணியங்களால் கண்ணால் காண்பதற்கு எளிதானதன்று. எனவே இவ்வகையில் அரிய மலர்.

பலாவிற்குப் பூ உண்டு என்பதைத் தொல்காப்பிய உரைகளால் அறியலாம். ஆகார ஈற்றுப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு காட்டும் உரையாசிரியர்கள் பலரும் "பலாப் பூ"[2] எனக் காட்டியுள்ளனர்.

பலாப் பூவின் தொகுப்பைக் கதிர் எனவேண்டும். 'கம்பங் கதிர்' என்று கேள்விப்படுகின்றோம். உருண்டு திரண்டு நீண்ட அமைப்பில் கம்பின் வித்துகள் ஒரு தண்டில் செறிந்து தொடர்ந்து மொய்த்திருக்கும். இவ்வமைப்பே 'கதிர்' எனப்படுவது. மிக நுண்ணிதான இதழ்கள் குழாய் வடிவில் மொய்த்திருக்கும்.

மொய்ப்பதிலும் அடர்த்தியாக மொய்ப்பதற்கு 'மூசுதல்' என்னும் சொல் உரியது. வண்டுகள் அடர்த்தியாக மொய்ப்பதை,

*"வரிக்கடைப் பிரசம் மூசுவன மொய்ப்ப"*[3]

என்றார் மாங்குடி மருதனார். இவ்வாறு பலாவின் மிக நுண்ணிய பூக்கள் கதிரில் மூசி இருப்பதால் 'பலா மூசு' எனப்பட்டது. 'பலா மூசு' என்னும் பெயரை நாம் பலாவின் பிஞ்சிற்கு வழங்கி வருகின்றோம். உண்மையில் பலாவின் பூக்கதிரே 'பலா மூசு' ஆகும்.

இதன் தனிப் பூ ஒன்றை எடுத்துக் கண்டுவிடல் இயலாது. அத்துணை நுண்ணிது. நுண்ணிய இதழ்கள் கூடிக் குழாய் வடிவில் உள் தண்டில் மொய்த்திருக்கும். இக்குழாய்களே பின்னர் பலாச்சுளைகள் ஆகின்றன. இக்குழாய்ப் பூக்கள் மூசிய

---

1 தனி. சி : 81
2 தொல் : எ : 227 உரை
3 மது. கா : 717

கதிரை ஒரு மடல் மூடியிருக்கும். இம்மடல் விரிந்து விலகுவதே பூவின் மலர்ச்சியாகும். இம்மலர்ச்சியின்போது முதலில் இளம் பசுமை நிறம் தோன்றும். மலர்ச்சியின் வளர்ச்சியில் அதன் காரகங்கள் கரு மஞ்சள் நிறத்தில் தோன்றும். இந்நிறத்தையே பலாப் பூவின் நிறம் என வேண்டும்.

இம்மலர்ச்சியின்போது கம்மென்று மணம் கமழும். இஃது அழுத்தமான மணமே.

இப்பலாவில் பலா, வருக்கை, ஆசினிப் பலா, குரங்குப் பலா எனப் பலவகை உள. பலா மரத்தின் இப்பூ (பிஞ்சு, காய், கனி) வேரிலும் தோன்றும்; அடிமரத்திலும் தோன்றும்; கிளைகளிலும் தோன்றும். தோன்றும் இடத்திற்கேற்ப இதன் பழம் சூலடிப் பலா, வேர்ப்பலா, கோட்டுப் பலா எனப்படும். சில பலாக்களில் வேர், அடிமரம், கிளை ஆகிய மூன்றிடங்களிலும் தோன்றும். இதனையும் உறையூர் சிறுகந்தன் என்பார்,

*"வேரும் முதலும் கோடும் ஓராங்கு*
*தொடுத்த போலத் தூங்குபு (அசைந்து) தொடரிக்*
*கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவு"*[1]

என்று பாடிக்காட்டினார்.

"நெடுவரை முடவு முதிர் பலவு" (நற் : 352 : 4)
"பனிவரை நிவந்த பாசிலைப் பலவு" (புறம் : 200 : 1)
"பலா அமல் அடுக்கம்" (அகம் : 8 :7)

"சாரல் பலவு" (ஐங் : 214) என்றெல்லாம் பலா, மலை மரமாகக் கண்டு பாடப்பட்டுள்ளது. கொல்லி மலையும் நாஞ்சில் மலையும் பறம்பு மலையும் பலாவிற்குச் சிறந்தவை. குறிஞ்சி திரிந்த பாலையின் பாதையிலும் பலா உள்ளமையால் "அத்தப் பலவு" (ஐங் : 351) எனப்பட்டது. ஆயினும் இது குறிஞ்சி நிலத்தது,

இடத்திற்கேற்பவும் இனத்திற்கேற்பவும் இது சில பருவங்களில் தோன்றுவதாயினும் "கார்கோள் பலவின் காய்த் துணர்"[2] என்றபடி கார்ப்பருவத்திலும், "கோடைக்கு ஊழ்த்த கமழ் நறுந் தீங்கனி"[3] என்றபடி கோடைப்பருவத்திலும் காய்த்துப் பழுக்கும். இத்தொடர்பில் இதன் பூ இளவேனிற் பருவத்தில் தோன்றும் என்று கணிக்கலாம்.

---

1 குறு; 257 : 1—3
2 மலை 12
3 அகம் : 348 : 3

பலா என்பது இதன் முதற்பெயர். பலவு என்பது பலா வின் வளர்ச்சிச் சொல். ஆனால், சங்கப் பாடல்களில் பலாவை விடப் பலவே அதிகம் ஆட்சி பெற்றுள்ளது.

இவற்றால், பலாமரம் பூத்துக் காய்ப்பதாகின்றது. இப்பூ 'பலா மூசு' எனப்படும். நுண்ணிய குழாய் வடிவ இதழ்கள் மொய்த்த கதிர்ப் பூ. குறிஞ்சி நிலத்தது. இளவேனிற் பருவத்தது. கருமஞ்சள் நிறத்தது.

இப் பூ மணங் கமழ்ந்தாலும் தனிப் பூவாக எடுத்துக் காண்டற்கு அரியது. கதிராகத் தொடுக்க இயலாது. எனவே சூடும் பூ ஆக முடியாது. ஆனால், மாலையில் தொடுக்கப்பட்டது; பூவாக அன்று. பலாவின் சுளை பிற பூக்களுடன் மாலையாகத் தொடுக்கப்பட்ட அரிய செய்தியைத் திருத்தக்க தேவர்

> *"சொன்னநன் மலரும் அல்லனவும் வீழ் பலவின் சுளைகளும்*
> *நன்மை நூலின் நயந்தோன்ற நன்பொன் விரல் நுதியினால்*
> *... ... .... ... ... ... ...தொடுத்தான் இனமாலையே"*[1]

-எனப் பாடிக் காட்டினார்.

மேலே பூக்குழல்தான் சுளையாகும் எனக்கண்டோம். எனவே, சுளை மாலைக்கு ஆனமை, பூ ஆனமை போன்றது எனலாம். இவ்வகையில் சுளை மாலையும் 'மூசு மலர்' மாலை யாகின்றது.

# 9. வேளாண் விருது மலர்,

## காவிதி.

'காவிதி என்றொரு பூ உண்டு. இப்பூ வடிவம் பொன்னால் செய்யப்பட்டு வேளாளரில் சான்றோர்க்கு விருதுச் சின்னமாக அரசரால் வழங்கப்பட்டது. அப்பட்டம் இப்பூவால் 'காவிதி' எனப்பட்டது. வேளாளர் தொடர்பில் இப் பூ செங்கழு நீர்ப் பூவாகலாம்.

இக்கருத்துகள் முன்னே (இந்நூற் பக்கம் 45, 46.) காணப்பட்டன. தொல்காப்பியத்தில்[2] "காவிதிப் பூ" என்று உரையாளரால் காட்டப்பட்டுள்ளது. இவையன்றி இப்பூ பற்றி வேறொன்றையும் அறிய இயலாததால் இங்கு இஃது அரிய மலராகின்றது.

---

1 *சீவ; சி* : 1652        2 தொல் : எழுத்து : 155 உரை.

காவிதிப் பட்டம் பெறுவோர்க்கு மன்னன் சிற்றூரைப் பரிசாக வழங்குவான். அச் சிற்றூர் "காவிதிப் புரவு" எனப் பட்டது. இத்தொடரில் 'புரவு'[1] என்னுஞ் சொல்லால் ஒரு கருத்தைப் பெறலாம்.

'புரவு' என்பது பலபொருள் ஒருசொல். அவற்றுள் இங்கு 'கொடை, ஆற்றுப் பாய்ச்சலுள்ள ஊர்' என்னும் இரண்டு பொருள்கள் பொருந்தும். வயல் ஊர் குறிக்கப்படுவதால் இம்மலர் மருத நிலத்து மலராகலாம். இவ்வகையில் செங்கழுநீர் ஓரளவில் இயைந்து வரலாம். அனிச்சம் போன்று இப் பூவும் காட்சிப்படும் வரையில் செங்கழுநீராகக் கொள்ளலாம். இஃதும் சான்றற்ற உய்த்துணர்வே.

காவிதிப் பட்டத்தாரிலும் சிலர் 'பெருங்காவிதி' எனப் பட்டனர். அவர் அரசின் கணக்காளர் பணியை மேற்கொள்ளும் தகுதியுடையோராக விளங்கினர். இப்பணி "காவிதிமை" எனப் பட்டது. இதனைக் கல்வெட்டு ஒன்று,

"காவிதிமை செய்ய ஒருவனுக்கு அரையன் மணவிலிங்கனான செம்பியன் பெருங்காவிதி" — என்று கூறுகின்றது.

இத்துணைச் சிறப்பிற்கு இடம்பெற்ற காவிதிப் பூ இக்காலத்தில் அறியவும் அரியதாகியுள்ளது.

காவிதி என்றொரு பூ உண்டு. அது மருத நிலத்தது. இவ்வளவே குறிக்கத்தக்கது.

---

1 தென்னிந்தியக் கல்வெட்டுகள் : 2 ; பக்கம் 277

# எளிய மலர்கள்.

## எளிய நிலையிலும் தகுதிகள்.

மலர்களுக்குள் ஏற்றத் தாழ்வில்லை. எல்லாம் சமமானவைகளே. செடியியலாயினும் அறிவியலாயினும் இலக்கியமாயினும் மருந்தியலாயினும் மலர்களை ஒருநிகர் நோக்கிலேயே கொள்ளும் இவ்வாறிருக்க 'எளிய மலர்' எவ்வாறு அமையும்?

நெல் உணவளிக்கும் இன்றியமையாப் பொருள். நீர் இன்றி உலகு அமையாது. இவையின்றேல் உயிர் வாழ்வில்லை என்னும் அளவில் இரண்டிற்கும் சிறப்பு உண்டு. இருப்பினும் மற்றொரு தொடர்பில்,

"*நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே*"[1] —எனப்பட்டது. மற்றொன்றுடன் பொருந்தி நோக்கும்போது அரியனவும் எளியனவாகும். இந்நோக்கில்,

"*நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளிய*"[2] என்றது புறம். அரிதிற் கிடைக்கும் சந்தனத்தையும் முத்தையும் நோக்க இவை எளியனவாகக் கொள்ளப்பட்டன.

---

1 *புறம்* : 186 : 1        2 *புறம்* : 58 : 10

ஒன்றை நோக்க ஒன்று எளிமைப்படுவதுண்டு. மலர்களிலும் இவ்வாறு காணப்படலாம். எனினும் இங்கு அவ்வகையில் அன்றிப் பயன்பாடு, நாற்றம், மக்களது விருப்பில் இடம் பெறாமை, ஒருவகையில் அருவெறுப்பேற்றல், பொதுவில் ஒதுக்கப்பட்டமை என்பவற்றில் சில பல காரணியங் கொண்டு மலரில் எளியவை அமையும்

நம் பார்வையில் எளியனவாயினும் இலக்கியப் பார்வையில் இவை எளியன அல்ல. வண்ணனைக்கும் உவமைக்கும் இலக்கிய நோக்கிற்கும் புலமைச் சான்றோரால் எடுத்துக்கொள்ளப்பட்டவை. எளிமைக்குக் காரணியமிருப்பினும் நிறத்தால், தோற்றத்தால் வடிவால் இன்ன பிறவற்றால் எம்மலரும் தன் தகுதியை விட்டதன்று.

இந்நோக்கில் நின்று சில எளிய மலர்களை அடுக்கலாம்,

இவ்வடுக்கும் தகுதிப்பாடு கருதிய அடுக்கு அன்று என்றாலும் புலமைச் சான்றோரது ஆட்சியாலும் இலக்கிய இடத்தாலும் முந்தி வருவன உள. ஒருவர்படைத்த வண்ணனையையோ உவமையையோ பலரும் வழிமொழியும் பாங்கும், முந்திக்காண வாய்ப்பளிக்கின்றது. இவ்வகையில் நெருஞ்சிமலர் காணத்தக்கது.

## 1. சுடரோடு திரிதரும் மலர்.

### நெருஞ்சி.

நெருஞ்சி என்றதும் முகம் சுளிப்போம். கண்ணிற்கினிய அதன் மலர் இருக்கக் காலில் தைக்கும் முள்தான் நினைவின் முனைக்கு வருகின்றது.

தழுவிக்கூடி இன்பந் தந்த காதலன், நழுவிப் பிரிந்து துன்பந் தந்தான். அதனை எண்ணி நெஞ்சம் நொந்த காதலி நெருஞ்சியின் மலரையும் முள்ளையும் உவமையாக்கி,

*"நெருஞ்சிக்*
*கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு*
*இனிய செய்தநங் காதலர்*
*இன்னா செய்தல் நோமென் நெஞ்சே"*[1]

— என்று கவன்றாள்.

இதனைப்பாடிய அள்ளூர் நன்முல்லையார் மலரோடு முள்ளுக்கும்

---

1 குறுந் : 202 ; 2—4.

இலக்கிய இடம் தந்தார். நடப்போர்க்குத் தரையில் இடையூறாக இருப்பதால் இதற்கு ஆங்கிலத்தில் 'தரை இடையூறு' என்னும் பொருளில் '*TRIBULUS TERRESTRIS*' எனப்பெயரிட்டனர்.

திருவள்ளுவப் பெருந்தகை இதற்கொரு மெருகேற்றினார். மென்மை வாய்ந்த 'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மகளிர் மெல்லிய பாதத்தில் முள்ளாகத் தைக்கும்' என்பவர், அம்முள்ளாக இந் நெருஞ்சி முள்ளைக் காட்ட எண்ணினார். எண்ணியவர் 'நெருஞ்சி முள்' என்றன்றோ சொல்ல வேண்டும்? பூம் பாவையர் மெல்லடிக்குச் சொல்லாலும் முள்ளை வைக்க மனம் வராமல்,

*"மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்"*[1]

— என்றார். முள்ளுக்கு இலக்கிய மெருகேற்றிப் 'பழம்' என்றமை ஒரு பாங்கு. முற்றிய காய் முள் ஆகையால் பழம் என்றமை பொருந்தும்.

இவ்வாறெல்லாம் முள்ளால் அல்லல் தந்தாலும், பாழ்செய் தாலும் இதன் மலர் தனக்கென ஒரு நல்லிடத்தைப் பெற்றுக் கொண்டது. அதனையும் தனது செயலால் பெற்று நிலை நாட்டிக்கொண்டது.

இப் பூ ஈட்டி போன்ற ஐந்து புறவிதழ்களை உடையது. விசிறி வடிவத்தில் ஐந்து அகவிதழ்களை உடையது. விசிறி இதழ்களுக்கு இடையிடையே ஈட்டிப் புறவிதழ்கள் தோற்றமளிப் பது ஓர் அழகமைப்பாகும். ஒவ்வோர் அகவிதழின் மேலும் ஐந்தைந்து மகரங்கள் அமைந்திருப்பதும் ஓர் அழகமைப்பு. இவற்றால் இது "நிறையிதழ் நெருஞ்சிப் பூ" எனப்பட்டது.

"... ... நெருஞ்சிப்
பொன்புனை மலர்" (பெருங் : இலா : 4 : 14, 15.)

"சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ" (கல் : 65 : 15)

– என்றபடி இதன் இதழ்கள் பொன்போன்ற மஞ்சள் நிறத்தவை. 'பொன் போன்ற தூய்மைப் பூ' என்னும் பொருளில் "பசலை வான் பூ" எனப் பட்டது.

இவ்வாறு வடிவமைப்பாலும் தோற்றத்தாலும் பொன் போன்ற நிறத்தாலும் இம்மலர் அழகு மலராகிக் கண்ணிற்கு இனிமை பயப்பதால்,

---

1 குறள் : 1120.

"நெருஞ்சிக் கட்கு இன் புதுமலர்"[1] – எனப்பட்டது. அளவால் இது சிறிய பூ. "சிறு பூ நெருஞ்சி" என்றே இலக்கியங்கள் பேசும், பூ சிரியதாயினும் தன் செயலால் ஒரு பெரும் பூ பெற்றுள்ள பெரும்பெயரை முற்காலத்திலேயே பெற்றுக் கொண்டது குறிப்பிடத்தக்கது.

பூக்களில் பெரியது தாமரை. அதற்கடுத்ததாகச் 'சூரிய காந்திப் பூ' எனப்படும் 'கதிரவக் காமிப் பூ' உள்ளது. இஃது அமெரிக்க இனத்துப் பூவாக உலகிற் பரவியுள்ளது. இதற்கு இப்பெயர் வரக்காரணம் காலை முதல் மாலை வரை கதிரவனை நோக்கியபடி மலர்ந்திருப்பதே. இக்கருத்து உண்மை என்பது பிற்காலத்தில் கண்டறியப்பட்டது.[2] மருத்துவ மலையகராதி இதனை 'ஞாயிறு திரும்பி' என்று குறித்தது. இது ஞாயிற்றை நோக்கியே திரும்புவதால் இக்குறிப்பு. ஆனால், சிறு பூவாகிய நெருஞ்சிப் பூ இத்தன்மை உடையது என்பது சங்க காலத்திற்கு முன்னரே அறியப்பட்டது. இது வானச் சுடராகிய கதிரவனை நோக்கியபடியே திரும்பிக் கிழக்கிலிருந்து மேற்கில் திரிவது என்னும் பொருளில்,

"சுடரொடு திரிதரும் நெருஞ்சி"[3] – என அகநானூறு பாடியது. இக்கருத்து ஒரு செடியியல் கருத்து. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் தமிழ் மண்ணில் முளைத்த கருத்து என்பதைக் குறிப்பில் கொள்ளவேண்டும்.

கதிரவன் காலையில் எழுவது முதல் சாயுங்காலம் வரை இப் பூ அதனையே கண்டு திரிவதைத் தொடக்க முதலாகப் படிப்படியாக இலக்கியங்களிலிருந்து காணமுடிகின்றது. எனவே, 'ஞாயிறு திரும்பி' என்பது முதலில் இதற்குப் பொருந்தும். ஆனால் இத்தொடர் சூரியகாந்திக்கு அமைந்து பின்னர் அகர முதலிகளில் இடம்பெற்றது.

"பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாஅங்கு"[4] – என

மோசிகீரனார் கதிரவனை எதிர்கொண்டழைப்பதாகப் பாடினார். இஃது உவமையாகக் கூறப்பட்டது. மண்டை என்பது ஒருவகை உண்கலம். உணவுப்பொருள் கிடைக்காத போது இது கவிழ்த்து வைக்கப்பட்டிருக்கும். கொண்கானங்கிழான்என்பானைக்கண்டதும் இம்மண்டை உண்கலம் அண்ணாந்து மலர்ந்ததாகப் பாடினார்

---

1 குறுந் ; 202 3 அகம் : 336 : 18.
2 Botanical Gazette : Vol. 29 : Page 197. 4 புறம் 155 : 4, 5.

மோசிகீரனார். இம்மலர்ச்சிக்கு உவமையாகத்தான் நெருஞ்சி கூறப்பட்டது.

இவ்வாறு எழும் கதிரவனை நோக்கி எதிர்கொள்வதைக் கல்லாடனாரும்,

*"... ... ... எழுகதிர் நோக்கிய*
*சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ"*[1] -என்றார்.

*"வெஞ்சுடர் நோக்கும் நெருஞ்சி"*[2] - என்றது இப்பூ கதிரவனை நோக்கியவாறே இருக்கும் என்பதைக் காட்டுகின்றது. அந்நோக்கமும் கதிரவன் நெறியில் தொடரும் என்பதைத் திருத்தக்கதேவர்,

*"நீள்சுடர் நெறியை நோக்கும்*
*நிறையிதழ் நெருஞ்சிப் பூ"*[3] - என்பதால் குறித்தார். இவ்வாறு சுடரொடு திரிதருவதைக் குறிக்கும் அகநானூற்றுப் பாடல் இதனை உவமையாக்கிப் பாடிய அகப்பொருள் கருத்து சுவைக்கத்தக்கது. ஒரு பரத்தை பின்வருமாறு பேசினாள்:

'துணங்கைக் கூத்து விழாவில் அச்சேரிப்பரத்தை என் எழிலை ஏசிப் பேசினாளாம். அதற்கு நான் அங்கு வராததே காரணம். நான் வந்திருந்தால் கதிரவனை நோக்கியவாறே அதனுடன் திரிதரும் நெருஞ்சிப் பூவைப்போல எல்லாரும் என்னழகை நோக்கியவாறு என்னுடனே திரிந்திருப்பர்.'[4]

இப்பேச்சால் கதிரவனால் நெருஞ்சிப் பூ எவ்வாறு கவரப் படுவது என்பது புலனாகின்றது. இக்கவர்ச்சியால் இப்பூ கதிரவனுக்கே உரிமையுடையது எனக்கூறுவதுபோன்று மற்றொரு பாட்டு உள்ளது. ஒரு தலைவி கூறுகின்றாள்:

*".... .... ....ஓங்குமலை நாடன்*
*ஞாயிறு அனையன்; தோழி!*
*நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே"*[5] -என்றதில் தலைவனுக்குத் தலைவியின் தோள்கள் உரிமையாவனபோன்று கதிரவனுக்கு இப் பூ விதழ்கள் உரிமையாகின்றன. ஒரு தலைவியை,

*'... கதிர்நேர் நெருஞ்சியெனத் தன்பால்*
*திருப்புவிழி ஆயமொடு சென்றாள்"*[6] - என்று தோழியர் யாவரும் தலைவிமேல் திருப்பிய விழியோடு சென்றதற்கு உவமை

---

1 கல் : 62 : 14, 15
2. பா. கோ : 296
3 சீவ. சி : 461
4 அகம் : 386 : 11—19.
5 குறுந் : 315
6 வெங்கை. உலா : 352

யாக்கிப் பேசவைத்தார் துறைமங்கலம் சிவப்பிரகாசர். இவ்வாறு கதிரவனோடு திரிதரும் மலர் வேறு எவ்வகைக் கவர்ச்சி இடையீட்டாலும் தன் மலர்முகத்தைத் திருப்பாது-மாற்றாது என்பதைக் கொங்குவேளிர் பாடினார். அருந்தவம் செய்வோர் தனக்கும் கதிரவனுக்கும் இடையே தோன்றினாலும் அவரை வழிபட வேண்டிய கடமையையும் கொள்ளாமல் கதிரவனையே விரும்பும் நெருஞ்சிப் பூ என்பவர்,

*"அருந்தவர்க் காயினும் திருந்துமுகம் இறைஞ்சாது*
*செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப்*
*பொன்புனை மலரின் புகற்சி (விருப்பம்)"* [1]

—என்று பாடினார். நெருஞ்சியின் இவ்விருப்பத்தை உவமையாக்குபவர்,

*"காதலர்க்கு அவாஅம்காம நோக்கு"*

— என்று பாடினார்.

இதனை மாற்றி நோக்கினால், நெருஞ்சிப்பூ கதிரவன்மேல் காமங் கொண்டதாகும். அதனால் இப்பூவைக் 'கதிரவக் காமிப் பூ' – 'சூரிய காந்திப் பூ' எனலாம். இக்காமத்தால் இப்பூவிற்குக் 'காமரசி'[2] என்றொரு பெயர் வழக்கம் உண்டு.

மேலே கண்ட பாடலில் கொங்குவேளிர் இந்நெருஞ்சியைப் "பைங்கொடி" எனக் கொடியாகக் காட்டியுள்ளார். பரவலாகத் தரையில் வளர்வதைக் கொண்டு 'கொடி' என்றார். ஆனால், இது நிலச்செடி. ஊர்ந்து பரவும் செடிவகை. இதனைக் குமட்டூர்க்கண்ணனார்,

*"ஊரிய (பரவிய) நெருஞ்சி"*[3] என்றார். எனவே இது நிலப் பூ. அள்ளூர் நன்முல்லையார்,

*"புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சி"* [4] என்றார். புன்புலம் இங்கு முல்லையைக் குறிக்கும். இதன்படியும் நெருஞ்சி முல்லை நில மலர்.

இம்மலர் கண்ணுக்கினிய மலராயினும் குறிப்பிடத்தக்க மணங்கமழாதது. அளவில் மிகச் சிறியது. எனவே சூடப்பட வில்லை. சூடப்படாத குறைமட்டும் அன்று; தன் முள்ளால் பாழ் செய்யும் சின்னமாகவும் ஆனதன்றோ? இப்பாழ்படுத்தும் சின்ன மாக இதனுடன் சேர்த்து நோக்கத்தக்க எளிய பூ எருக்கம் பூ.

1 பெருங் : இலா : 4 : 18, 15 : 17.
2 மருத்துவ மலையகராதி.
3 பதிற் : 13 : 16.
4 குறுந் : 202 : 2

# 2. குவி முகில் மலர்.

## எருக்கு.

பகைவனது குடும்பம் பாழ்பட வேண்டும் என்று ஏசுவோர், 'உன் வீட்டில் எருக்கு முளைக்க' – என்பர். நெருஞ்சியைப் போன்று எருக்கும் பாழ்பட்டதற்குச் சின்னமாகக் கொள்ளப் பட்டது. நெருஞ்சிக்கு முள்ளைப் போன்று எருக்கிற்கு அதன் பால் கடுமையான உடன்பிறப்பு.

இதன் இலை "புல்லிலை எருக்கம்" எனப்படும். இப்பூவும் "புல்லெருக்கம்" எனப் புன்மையாகவே குறிக்கப்படும். இங்கு, புன்மை சிறுமையன்று. கெடு மண வீச்சால் 'புன்மை' என்று குறிக்கப்பட்டது.

கபிலர், புறத்தில் இப்பூவிற்கு ஓர் இடம் வைத்துப்பாடினார்

'பூக்களில் நல்லனவும் உள்ளன; தீயனவும் உள்ளன. புல்லிய இலையை உடைய எருக்கம் பூ இவ்விரண்டிலும் சேர்ந்தது அன்று. எருக்கம் பூவையும் ஒருவர் விரும்பிப் படைத்தால் கடவுளர் ஏற்க மாட்டேன் என்று விடமாட்டார்.

— என்றார். எருக்கம் பூ பூக்களில் நல்லதும் அன்றாம்; தீயதும் அன்றாம். பின் எந் நிலையை உடையது? கபிலர் மேற்கண்டவாறு விளக்கி இப்பூவை உவமை காட்டிக் குறிக்கும் கருத்து அதன் நிலையை அறிவிக்கின்றது.

*"நல்லவும் தீயவும் அல்ல; குவியிணர்*
*புல்லிலை எருக்க மாயினும் உடையவை*
*கடவுள் பேணேம் என்னா வாங்கு*
*மடவர் மெல்லியர் செலினும்*
*கடவன் பாரி கைவண் மையே"* 1

இதில் எருக்கம் பூவை உவமையாக்கி, எருக்கம் பூவையும் கடவுளர் ஏற்றுப் போற்றுவது போன்று, பாரி வள்ளல் தன்னிடம் வரும் அறிவற்ற எளியவரையும் வரவேற்றுப் பரிசளிப்பதைக் கடமையாகக் கொண்டவன்'

— என்றார். இங்கு பாரிவள்ளல் கடவுளாகவும், அறிவற்ற எளிய மக்கள் மணமற்ற எளிய எருக்கம் பூவாகவும் ஆயினர். இவ் வகையால் எருக்கம் பூ எளிய பூவாகக் கபிலரால் குறிப்பாகக் காட்டப்பட்டுள்ளது. எருக்கம் பூவுடன் இழிவு சிறப்புமை கூட்டிச் சொல்தல் மரபு.

---

1 புறம் : 106.

எருக்கு புதராக வளரும் சிறு செடி. எனவே, இப்பூ புதர்ப் பூவாம் நிலப் பூ.

பின்னே காட்டப்படும் அகநானூற்றுப் பாலைப் பாடலின் (301) படி இது பாலை நிலப் பூ. பல பருவத்தில் பூக்குமாயினும் கோடைப் பருவப் பூ.

இது கொத்தாகப் பூப்பதால், "குவியினர் எருக்கு" எனப் படும். காம்பில் ஐந்து சிறிய புறவிதழ்கள் விரிந்ததும் அகவிதழ் கள் ஒரு குமிழாகத் தோற்றமளிக்கும். இக்குமிழ் வடிவம் அடியில் முனை வளைந்த ஐந்து பட்டையாக ஒட்டிய ஐந்து அகவிதழ் களின் முனை மொட்டையாக அழகிய காட்சி தரும். ஒட்டியிருந்த ஐந்து அகவிதழ்களும் விரிந்து கிடைமட்டத்தில் நீண்டிருக்கும். இக்காட்சி இக்கால ஓவியர் தீட்டிக்காட்டும் ஐந்து முனைகொண்ட விண்மீன் வடிவத்தில் தோன்றும். அவற்றின் இடையே பொகுட்டும் மகரங்களும் சிறு கோபுரம்போல் தோன்றும். குமிழாக ஒட்டிய நிலையில் குவிந்து நிற்கும் இவ்வகவிதழ்,

"குவிமுகிழ் எருக்கங் கண்ணி" (நற் : 220 : 2)

"குவிமுகிழ் எருக்கங் கண்ணியும்" (குறுந் : 17 : 2)

"குவிமுகிழ் எருக்கிற்கோத்த மாலையன்" (மணி : 3 : 145)

"எருக்கின் குவிமுகிழ் விண்டல்" (குண நாற்பது : 31)

-என்றெல்லாம் காலாகால இலக்கியங்களில் "குவி முகிழ்" என்று அடைமொழி பெற்றது. இதுபோன்று புன்னையும் ஞாழலும் அடைமொழி பெறுமாயினும் அவை ஒரோவழிப் பெறுபவை. தணிகைப் புராணம் இக்குவி முகிழுக்கு ஒரு நோக்கங் காட்டி,

"எருக்கின் முகில் நோக்கும்" -என ஒரு பார்வையாகக் காட்டி இதன் 'முகிழ்'க்கு முத்திரையிட்டது.

இதில் வெண்ணிறப் பூவுண்டு. இஃது அருகியே கிடைக் கும். வெளிர் நீலம் பாவிய பூவே யாங்கணும் காணப்படும். வெள்ளெருக்கே சிறப்பாகப் பேசப்படும்.

முன்னே குறித்தமை போன்று இது நறுமணங்கமழ்வதன்று.

"விரை சார்ந்து அறியாத புல்லெருக்கங் கண்ணி"[1]

-என வாட்போக்கிக் கலம்பகம் 'இது நறுமணம் அண்டாதது' எனக் காட்டியது. இது மணமற்றது என்பதனை மாற்று முறை யில் ஒரு பழம்பாடல் அகத்துறை நயத்துடன் குறித்துள்ளது.

1 வாட். கல : 99

பரத்தை வீட்டிலிருந்து மீளும் தலைவன் மணமிக்க குவளைப் பூ மாலை சூடி வந்தான். தெருவில் எருக்கம் பூ வைத்து விளையாடிய குழந்தையும் உள்ளே வந்தது. இல்லத்தலைவி மணமிக்க குவளை மணத்தைப் பரத்தை தழுவியதால் ஏற்காமல் மகன்தலையில்சூடியிருந்த எருக்கு மணமுடையது என்று அவனைத் தழுவினாள். இதனை,

*"ஒல்லேம் குவளை புலாஅல்; மருங்கின்*
*புல்லெருக்கங் கண்ணி நறிது"*[1] —என்றாள் தலைவி. மணமற்ற எருக்கை 'நறிது' என்றது குற்றமாகாது என்பதை விளக்கும் உரையாசிரியர் செந்நாவரையர்,

"எருக்கங் கண்ணி நறிதாதற்கு மகிழ்நன் செய்த துனிகூர் வெப்பம், முகிழ்நகை (குழந்தை) முகத்தால் தணிக்கும் புதல்வன் மேல் ஒருகாலைக் கொருகால் பெருகும் அன்பு காரணம்" —என்றார். இவ்வகையில் எருக்கு ஒரு பாட்டையும் பெற்று அதற்கொரு விளக்கமும் பெற்றது. பெற்றாலும் மணம் பெற்றதாகாது.

மணமற்றதாயினும் இதன் எழிலான தோற்றம் கருதிப் பூ கிடைக்காத இடங்களில் சூடுவர். பாலைநில வழியில் கூத்தர்.

*"குவியிணர் எருக்கின் ததர்பூங் கண்ணி*
*ஆடூஉச் சென்னி தகைப்ப"*[2] ஆடியதை அதியன் விண்ணத்தனார் என்பார் பாடிக்காட்டியுள்ளார். இது இயற்கையாகச் சூடப்பட்டது. செயற்கையாகவும் சூடப்படும். தன்னால் காதலிக்கப்பட்ட பெண் தன்னை மணப்பதற்குத் தடையோ மறுப்போ நேர்ந்தால் காதலன் மடலேறுவான். இதற்குரிய ஒப்பனைகளில் – செயற்கையாகப் புனையும் கோலத்தில் ஒன்றாக எருக்கம் பூங்கொத்தைக் கண்ணியாகச் சூடுவான்.

*"மாவென மடலும் ஊர்ப; பூ எனக்*
*குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப"*[3] —எனப் பேரெயின் முறுவலார் பாடியுள்ளமை போன்று பல அகத்துறைப் பாடல்களும் பாடப்பட்டுள்ளன. தனியாகச் சூடப்பட்டது மட்டுமன்றி,

*"அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்தியாத்து"*[4] —என்றபடி பிற பூக்களுடனும் அணியப்பட்டது. மடலேறுதல்

---

1 தொல். சொல் : 56 செந்நாவரையர் உரைக்காட்டு
2 அகம் : 301 : 11, 12.
3 குறுந் ; 17 : 1, 2
4 கலி : 138 : 9.

ஊர் சிரிக்கடிக்கும்' செயல். ஊராரும் தலைவனைப் பார்த்துச் சிரிப்பதும் உண்டு. தலைவன் செய்துகொள்ளும் ஒப்பனை பித்தேறியவன் போன்று (இவனும் காமப் பித்தேறியவன்) செய்து கொள்வது. மணிமேகலையிலும் வரும் பித்தன் "எருக்கில் கோத்த மாலைய" னாக வந்தான். பித்தனாம் சிவபெருமான் கோலமாக இதனைக் குறிப்பிடுவர். மடலேறுவதற்குரிய ஒப்பனைக்கும் சிவபெருமானது கோலத்திற்கும் தொடர்பு காட்டுவார் போன்று மாணிக்கவாசகர்,

*"ஈசன சாந்தும் (திருநீறும்) எருக்கும் அணிந்தோர்*
*கிழிபிடித்துப்*

*பாய்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே"*[1]

–எனப் பாடினார்.

எருக்கு சிவபெருமானுக்குரிய மலர். அதிலும்,

*"வெள்ளெருக்கஞ் சடைமுடியான்"*[2] எனக் கம்பர் பாடியது போன்று வெள்ளெருக்கே அவருக்குரியது. பிள்ளையாருக்கும் உரியது. தேவார மூவரும் பிறரும் சிவபெருமானுக்கு எருக்கைச் சூட்டிச் சூட்டிப் பாடினர். வெள்ளெருக்கு பூசெய்க்குரிய எண்மா[3] மலர்களில் ஒன்று. வெள்ளெருக்கால் பூசெய்ய பிறன் மனை நயந்த தீவினை போகுமாம். எருக்குதான் இருக்கின்றதே என்று இக்குற்றத்தைச் செய்துவிடக்கூடாது.

திருஎருக்கத்தம்புலியூர் என்றோர் ஊர் ஞானசம்பந்தரால் பாடப்பட்டுள்ளது. இதற்கு இராசேந்திரபட்டினம் என்றொரு பெயரும்உண்டு. இவ்வூர்ச் சிவன்கோவில் திருமரமாக எருக்கஞ் செடி உள்ளது.

இதன் பால் மருந்துக்காகும். மேலைநாட்டு ஒருவகை எருக்கிலிருந்து பாலை வடித்து ஆவின்பால்போல் குடிப்பராம். வெள்ளெருக்கின் நாரை எடுத்துக் குழந்தைகட்குக் கடிப்பகையாகக் கட்டும் பழக்கம் உண்டு.

எளிய எருக்கானாலும் அரிய செயல்களையும் செய்வதாகின்றது.

---

1 திருக்கோ : 74
2 கம்ப : இரா : வதை : 238
3 [illegible] : வி : 38 : 2

# 3. வரகுச் சோறு மலர்.

## பூளை.

இலவம் பஞ்சையும் செடியினம் ஒன்றையும் குறிக்கும் பெயர் பூளை. இப்பெயர் இவ்விரு பொருள்களிலும் சங்கப்பாடல்களில் ஆட்சிபெற்றுள்ளது.

*"... ... ... ... வெருகின்*
*பூளை அன்ன பொங்குமயிர்ப் பிள்ளை"*[1]

— என்றது பூனைக் குட்டியின் உடல் மயிர்க்கு உவமையானமையால் இங்கு பஞ்சுப் பொருள்.

*"நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன*
*குறுந்தாள் வரகின் குறள்அவிழ் சொன்றி (சோறு)"*[2]

— என்றதில் பூ குறிப்பிடப் பட்டுள்ளது. இங்கு செடிப் பொருள்.

இவ்வடிகள் பூளைப் பூவினைப் பேசுகின்றன. பூளைப் பூ நீண்டக் கொத்தானது. வரகு அரிசியின் புழுக்கலாகிய சோறு வடிவினது. அது வெந்த சோற்றின் மங்கிய வெண்மை நிறங் கொண்டது.

"பொருப்பின் கணவாயும் புதலும் பூளை"[3] – என்றதன் படி இஃதொரு சிறு புதர்ச்செடி. எனவே. இப்பூ நிலப்பூ "கோடைப் பூளை" [4] என்றதற்கேற்ப வேனிற் பருவப் பூ. "பூளை நீடிய வெருவரு பறந்தலை" [5] என்றதன்படி பாலை நிலப் பூ.

"வளிமுனைப் பூளையின் ஒய்யென அலறிய"[6] என்னும் கல்லாடனார் அடி காற்றில் பஞ்சு பறப்பதற்கும், பூளைப் பூ வதங்குவதற்கும் பொருந்தும். பூளைப் பூ இவ்வாறு காற்றால் வாடி வதங்கிக் குழைவதையே கம்பரும்

*"... ... ... ... வாடை*
*வீறிய பொழுது பூளை வீயென வீவன்"*[7] என்று பாடினார். காற்றின் தாக்குதலால் விரைந்து அழிவதைக் கொண்டே சேக்கிழாரும் "பூளைப்பூவாம் பிறவிப் பிணிப்பு ஓழிய" [8] என்று

1 அகம் : 297 : 13, : 14
2 பெரும்பாண் : 192, 193
3 பிங். நி : 3886
4 அகம் : 217 : 5
5 புறம் : 23 : 20
6 அகம் : 199 : 10
7 கம்ப. சடாயு : 61
8 பெரி. பு : திருநாளை : 22

பாடினார். இவர்கள் பாடியமைக்கு ஏற்பப் பூளைப் பூ மிக மென்மை யானது.

பூளைப் பூ தான் உழிஞைப் பூ என்னும் கருத்து எழுந்தது. இஃது அருகிய கருத்தானாலும் பொருந்தாமையைக் காண வேண்டும்.

அகத்துறையில் மடலேறும்போது பிற பூக்களுடன் பூளைப் பூவும் சூடப்பட்டது. மடல் ஏறுதல் ஓர் அகப்போர். மணஞ்செய்து கொடுக்க மறுத்துத் தலைவியை இல்லத்துள் அடைத்துள்ளதைத் தகர்க்கச் செய்யும் போர் அன்றோ? புறத்துறையில் கோட்டையைத் தகர்க்கும் போர்ப் பூ உழிஞையன்றோ? இத்தொடர்பில் பூளைப் பூ உழிஞைப் பூப் போலாயிற்று. ஆனால் உழிஞையன்று. எவ்வாறெனில் அங்கும்,

மடலேறும் தலைவன்,

*"பூளை உழிஞையோடு யாத்த"*[1] தாகப் பூளை வேறாகவும் உழிஞை வேறாகவும் காட்டப்பட்டுள்ளன. மேலும் பட்டினப் பாலையில் கோட்டை மதிலைத் தாக்க எழுந்த களிறு,

*"வேறுபல் பூளையொடு உழிஞை சூடி"ச்*[2] சென்றதாக உள்ளது. இங்கும் "பூளையோடு உழிஞை" எனத் தனித்தனி வெவ்வேறாக உள்ளன.

இவையன்றி, இனத்தாலும் இவையிரண்டும் வெவ்வேறு. பூளை செடியினம்; உழிஞை கொடியினம். எனவே, பூளை உழிஞையாகாது.

ஆனாலும் பட்டினப்பாலை காட்டும் குறிப்பால் பூளையும் போர்ப் பூவாகக் கருதப்பட்டது. முப்பெருங் கோட்டைகளைச் சிவபெருமான் தகர்த்ததைக் கம்பர் குறிப்பிடும் இடத்தில் சிவபெருமானைப் "பூளை சூடி"[3] எனப் பாடியுள்ளார். இப் போரில் சிவபெருமான் வெற்றி பெற்றதாற்போலும்,

*"பூளை வெற்றிப் பூவா கும்மே"*[4] என்றது பிங்கலம்.

பூளைப் பூ குறிப்பிடத்தக்க மணங்கொண்டதன்று. பாழ்பட்ட இடத்தில் எருக்கு முளைத்தல் குறிக்கப்படுவது போன்று இப்பூளைச் செடியும் குறிக்கப்படும். இது மடலேறும் பூக்களில் ஒன்று. இவற்றால் இதனை எளிய மலர் எனலாம்.

---

1 கலி : 140 : 4
2 பட். பா : 235
3 கம்ப. அகலிகை : 39.
4 பிங். நி : 1498.

இதனைச் சிவபெருமான் சூடியதைப் பலரும் பாடினர். பூதங்களிலும் சாதி கண்டவர்கள் வணிகப் பூதம் பூளைப் பூவைச் சூடியதாக எழுதினர்; சிலப்பதிகாரத்திலும் செருகினர்.

ஆனால், மாந்தரால் சூடப்படும் மலர் அன்று. விற்பனைக்கு வராத பூக்கள் ''வில்லாப் பூ''[1] எனப்படும். இவற்றுள் பூளையும் ஒன்று.

எருக்கையும் கோவிலில் திருமரம் ஆக்கிய சைவர் பூளையையும் விட்டாரல்லர். ஆலங்குடிப் பெயர் பெற்ற ஊர்க் கோவிலின் திருமரம் பூளை – திருச்செடி பூளை. அதனால், இவ்வூர் 'இரும்பூளையூர்' எனப் பெயர் பெற்றது. ஞானசம்பந்தர்,

*''ஏரார் இரும்பூளை இடங்கொண்ட ஈசனே''* [2]

எனப்பாடியுள்ளார்.

எளிய மலராயினும் இலக்கியத்தில் பொருத்தமான உவமை வழங்கிய 'வரகுச் சோறு மலர்'.

## 4. பலி மலர்.

## குரீஇப் பூளை.

மருத்துவ நூல்கள் பூளையைப் 'பீளை' என வழங்கும். முன்னே கண்ட பூளையைப் 'பெரும் பீளை' என்பர். அவ்வாறாயின் 'சிறுபூளை' என ஒன்று இருக்கவேண்டும். அதனைக் குறிஞ்சிப் பூப் பட்டியல் ''குரீஇப் பூளை''[3] என்றது.

''வேறுபல் பூளை'' என்னும் பட்டினப்பாலைத் தொடர்க்கு நச்சர்,

*''சிறுபூளையும் பெரும் பூளையும் உண்மையின்*
*வேறுபல் பூளை என்றார்''*[4] – என விரித்துப் பூளையின் இருவகைகளைக் காட்டியுள்ளார்.

இஃதொரு சிறு குற்றுச் செடி. இதன் பூ நிலப் பூ. கோடைகாலத்தில் பூக்கும். வெண்மை நிறப்பூ. பூக்களுக்கிடையே இலை என்று சொல்லும் அளவில் பூக்கள் மிகுதியாகத்தோன்றும். செடியின் அடிமுதல் முடிவரை இவ்வாறு பூக்கள் அமைந்திருக்கும். செடி முழுதையுமே ஒரு பூங்கொத்து எனலாம்.

---

1 நற் : 146 : 1.
2 ஞானதே. தே : திருவிரும்பூளை : 1.
3 குறி. பா : 72
4 பட். பா : 235 உரை

ஒவ்வொரு தனிப் பூவும் பயிற்றம்பயறு அளவில் சிறு சிறு பஞ்சு மொட்டாகத் தோன்றும். இதனையும் பாலைநிலப் பூவாகக் கொள்ளலாம். பூளைக்குரிய பஞ்சுப் பொருளும் இங்கு பொருந்தும்.

கண்ணில் ஒதுங்கும் கசடு பூளை எனப்படும். தாயுமானவர்

''*கண்களில் வெண்பூளை கரப்ப*''[1] –என்றார். இதனையும் 'கண்பீளை' என்பர். கண்பூளை வெண்மை நிறத்தில் குழைந்த மாப்பதத்தில் தோன்றும். சிறுபூளையின் மலர் இதே வெண்மையில் இதுபோன்ற வடிவமைப்புடையது. மருத்துவ நூல்கள் சிறுபூளைக்குச் 'சிறுகண்பீளை, கண்பீளை' எனும் மாற்றுப் பெயர்களைக் குறிக்கின்றன. உவமப் பொருத்தம் இப்பெயர் வழங்கச் செய்தது.

கண்ணகியார் குறை தீரத் தோழி தேவந்தி என்பாள் பாசண்டச் சாத்தன் என்னும் சிறுதெய்வத்தை வேண்டினாள். வேண்டித் தொழுதபோது

''*அறுகு சிறுபூளை நெல்லொடு தூய்உச்சென்று*

*பெறுக கணவனோடு என்றாள்*''[2] –என இளங்கோவடிகளார் இப்பூவைப் பலிப் பூவாகக் காட்டியுள்ளார். எளிய பலிப் பூவானாலும் மருத்துவத்தில் நீரடைப்பைப் போக்கும் நன்மருந்தாகும்.

## 5. புளிங்கூழ் மலர்.

### வேளை.

"*தாதெரு மறுகிற் போதொடு பொதுளிய*

*வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ*

*ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை (புளிக்கூழ்)*''[3]

இது கோப்பெருஞ் சோழன் பாடல்.

'வேளைச்செடி தெருக்குப்பை மேட்டில் வளரும்.' அதன் பூ போதுகளுடன் கொத்தாகத் தோன்றும். வெண்மை நிறமுள்ளது. இடைக்குல மடந்தை இப் பூவைக் கொய்து தயிரில் இட்டுப் பிசைந்து துணைக்கறி

1 *தாயு. பா ; மாதரை : 5*
2 *சிலம்பு : 9 : 43, 44*
3 *புறம் : 215 : 2—4*

சமைப்பாள். அதற்குப் 'புளிமிதவை-புளிக்கூழ்' என்று பெயர்' -இப்பாட்டு இவற்றைக் கூறுகிறது.

ஆயர் மகளுக்குத் தயிர் கிடைக்கும். ஏழையர் உப்பும் கிடைக்காதவர். அன்னார் வேளைக் கீரையைப் பறித்து உப்பில்லாமல் அவித்து வெளிக்கதவை மூடிவிட்டுத் தின்பர். இதனை நல்லூர் நத்தத்தனார்,

"குப்பை வேளை உப்பிலி வெந்ததை"[1] -என்றார்.

வறுமை கொண்டோர்க்கு மட்டுமன்று; அவலங்கொண்ட விலங்குகளுக்கும் இப்பூ உணவாகியது. தன் ஆண் மானைப் புலியிடம் பறிகொடுத்த பெண்மான் தன் குட்டியுடன்,

"பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்"[2] மாம். இங்கும் இதன் வெண்மை நிறம் குறிக்கப்படுவது போன்று பெருங்குன்றூர்க் கிழாரும், குமட்டூர்க் கண்ணனாரும் (பதிற்று : 15, 90) பாடியுள்ளனர்.

சிறு பூண்டின் பூவாகிய இது நிலப் பூ. மான் அலையும் ஆளில் அத்தமாகிய காட்டிலும் ஆயர்மகள் தெருக்குப்பையிலும் வளர்வதால் முல்லை நிலப் பூ. கார்ப்பருவத்தில் பூக்கும்.

இவ்வேளை 'நல்வேளை' எனப்படும். நாய்வேளை, தைவேளை என்பன சமையலுக்காகா. நல்வேளையின் பூ மார்புச் சளிக்கு நல்மருந்து. குழந்தைகளுக்கு அவர்களின் அகவைக் கேற்ப இப்பூவின் சாற்றைத் தாய்ப்பாலுடன் கொடுக்க நீர்க் கோவை மார்புச்சளி நீங்கும். வயிற்று மந்தத்தைப் போக்கிப் பசியை உண்டாக்கும். அகத்தியர் குணபாடம்,

"பாளைக் குழலே! பசிமெத்த உண்டாகும்
வேளைப்பூ என்றொருக்கால் விள்" -என்கின்றது.

போரில் தோற்றவர் நாடு அழிபட்டதைக் குறிப்போர்,

"வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்து
ஊரறிய லாகா கிடந்தனவே" (முத்தொள்.)

என வேளை வளர்வதைக் குறிப்பர். இவ்வகையில் எருக்கின் பட்டியலில் இணையும் எளிய மலர். எளியோர்க்கும் உணவாகி ஏற்றமுள்ள "புளிமிதவை" உண்டியாகவும் அமையும் 'புளிக்கூழ் மலர்' ஆகின்றது.

---

1 சிறுபாண் ; 187  2 புறம் : 23 ; 20, 21

# 6. எக்காள மலர்

## மத்தம்

*"தூ மத்த மலர்கண்ட கண்கொண்டு*
*மற்றினிக் காண்பதென்னே"* —அப்பர்.

*"ஏர்கொண்ட கொன்றையினோடு எழில்மத்தம்"*
—ஞானசம்பந்தர்.

*"மத்த மாமலர் கொன்றை வன்னியும்"* —சுந்தரர்.

*"கொன்றை மதியமும் கூவிளை மத்தமும்"*
—மாணிக்கவாசகர்.

*"மத்தமும் மதியமும் வைத்திடும்"* —அருணகிரி.

இவ்வாறு சைவச் சான்றோரால் "மத்தம்" என்று பாடப் பட்டதை நாம் 'ஊமத்தம், ஊமத்தை' என்று வழங்குகின்றோம். மேலே காணப்பட்ட அடிகளில் "தூய மத்தம்," "எழில் மத்தம்" "மத்த மாமலர்" என்றெல்லாம் பெருமை பெற்றமை சிவபெருமான் தலையில் இடம்பெற்றதால் ஆகும்.

இம்மலர்பற்றிச் சங்கப் பாடல்களில் செய்தி இல்லை. 'மத்தம் என்னுஞ் சொல்லே அக்காலத்தில் தயிர் கடையும் மத்தைக் குறித்தது. ஏலாதி 'களிப்பு' என்னும் பொருளில் பாடியது.[1] காலப்போக்கில் இக்களிப்புப் பொருள்மிகு களிப்பாகி, அஃதே வெறியாகிப் பித்தும் ஆகியது. ஊமத்தையின் வித்து வெறியேற்றும் குணங்கொண்டது. இதனால் இச்செடி 'மத்தம்' என்னும் பெயர் பெற்றது.

சிவபெருமானுக்கு உரியதானமையால் 'உன்' என்னும் நன்மையை – மேன்மையைக் குறிக்கும் அடைமொழி சேர்ந்து "உன்மத்தக மலர்" என்றும் பாடப்பட்டது. உன்மத்தம், உன் மத்தன் என்பவை பித்து, பித்தன் என்னும் பொருளைக் கொண்டன.

உன்மத்தத்தின் திரிபுப் பெயரே ஊமத்தம்; ஊமத்தை.

இம்மலர் கிளைவிட்டு வளரும். ஓரளவு பெருஞ்செடியின் மலர். எனவே, கோட்டுப் பூவாகும். களைச்செடியாகையால் பாலைநில மலர். பல பருவங்களில் பூக்கும். தனிப்பூ. நீண்ட புனல் வடிவங்கொண்டது. திருக்கோவில்களில் ஊதப்படும் எக்காள வடிவம்கொண்டது. எனவே 'எக்காள மலர்' எனலாம்,

1 ஏலாதி : 31

5 இதழ்கள் கூடிய குழாய்க் கிண்ணம் புறவிதழாகும். 5 அகவிதழ்கள் கூடிய நீண்ட புனல் வாய்விரிந்து தோன்றும். வாய்விரிவு 5 ஆகவும் 10 ஆகவும் விளிம்பாகத் தோன்றும்.

வெண்மை நிறமே பெரும்பான்மை. வெண்மையே இதற்குரியதும் ஆகும். 'அல்பா' (*DATURA ALBA*) என்னும் இதன் செடியியற் பெயரும் இதன் வெண்மையைக் குறிக்கின்றது. இவ் வினத்தில் ஊதா ஓடிய வெண்மை, செம்மை, மஞ்சள் நிற மலர்கள் உள. 'அடுக்கு ஊமத்தை' என்றொன்று உண்டு. புனல் மலருக்குள் மலராக உள்ளடுக்கில் இதன் பூ அமைந்திருக்கும்.

கெடுமணங்கொண்ட பூ. வெறியேற்றுங் குணங்கொண்டதாயினும் மருத்துவத்தில் பித்தகற்றவும் பக்குவப்படுத்தப்படும். இப் பூவின் சாறு காது வலிக்குக் கைகண்ட மருந்து.

நுகரும் மணமற்றதாக, மாந்தர் சூடும் பயனற்றதாக, பூக்குமிடத்தைப் பாழிடமாக்குவதாக அமைந்த எளிய மலர், 'எக்காள மலர்.'

## 7. அனில் வால் மலர்.

### ஊகு.

இல்லத்தைத் துப்புரவு செய்யப் பயன்படுத்துவது துடைப்பம். இது தென்னை ஈர்க்கிலும் உண்டு காட்டு ஈர்க்கிலும் உண்டு. காட்டு ஈர்க்குத் துடைப்பத்தைப் புதிதாக வாங்கியதும் மகளிர் 'அதில் ஊவாம்பழத்தைத் தேய்த்து அடித்து உதிர்க்க வேண்டும்' என்பர். அஃதென்ன ஊவாம்பழம்? ஊவாம் பழம் — ஊகாம்பழம் — ஊகம்பழம். ஊகம்பழம் ஊவாம் பழமாயிற்று. 'ஊகம்' என்பது 'ஊகு' என்பதோடு 'அம்' இறுதி சேர்ந்தது.

ஊகு ஒருவகைப் புல் இனம். எனவே, இதன் பூ. நிலப் பூ. தூறிலிருந்து ஈர்க்கு ஈர்க்காக வளரும். ஈர்க்கின் முனையில் வெண்மை நிற ஒழுங்குக் கொத்தாக இதன் பூ பூக்கும். இக்கொத்து காயாகி முற்றி நெற்றுப் பழமாகும். இது தான் ஊகு + பழம் = ஊகம்பழம். நெருஞ்சிப் பழம் என்றது போன்று பழப் பெயர் பெற்றது

வேடுவர் குலச் சிறுவர் இவ் வீர்க்கை எடுத்து அதன் முனையில் 'உடை' என்னும் மரத்தின் சுரையுள்ள முள்ளைச் செருகி அம்பு போன்று ஆக்கிக்கொள்வர். இதுகொண்டு காரெலி

முதலியவற்றை எய்வர். இதனை ஆலத்தூர் கிழார் பாடியுள்ளார்.[1] கண்ணப்பனாகிய திண்ணனும் தன் தோழருடன் இவ்வாறு விளையாட்டு வேட்டையாடியதாகச் சீகாளத்தி புராணம்[2] அறிவிக்கின்றது. இவ்வீர்க்குத் தொகுதி கூரை வேயவும்[3] பயன்பட்டது.

இதில் மலரும் இதன் பூ பற்றிப் புறநானூற்றில் மட்டும் ஒரு பாடலில் வருகின்றது. பூ பற்றி இரண்டு அடிகளே உள்ளன. அவ்விரண்டு அடிகளே இப்பூ பற்றிய கருத்துகளை வழங்கிவிடுகின்றன.

'முதுவேனிற் பருவத்தில் மலரும்; சுரமாம் பாலையில் வளரும்; கழன்று விழும் கொத்துப் பூ. நன்கு மலர்ந்து முதிர்ந்த பின்னரே கழன்று விழும். முதுகில் வரிகளைக் கொண்ட அணிலின் வால் போன்ற வடிவமைப்பு உடையது. வெண்மை நிறங்கொண்டது.

இவற்றை அறிவிக்கும் அடிகள் இவை;

*"வேனல் வரியணில் வாலத் தன்ன*
*கான ஊகின் கழன்றுகு முது வீ"*[4] – இவ்வாறு கழன்று வீழ்ந்த பூ போர்க்களத்தில் களிறோடு பட்டு வீழ்ந்த மன்னனுடைய சுரிந்த குடுமியில் தங்கியதாம். இக்குறிப்பன்றி இப் பூ பற்றி எவ்விலக்கியத்திலும் செய்தியில்லை. இப்புறநானூற்றுப் பாடலைப் பாடியவர் பெயரும் தெரிந்திலது.

## 8. தண்டொட்டி மலர்.

### கள்ளி.

குறத்தி ஒருத்தி நாடெங்கும் போய்க் குறி சொன்னாள். பல அணிகலன்களைப் பரிசாகப் பெற்று அணிந்து கொண்டு மீண்டாள். பார்த்த குறவன் வியந்தான். அவன் அணிகலன்களது பெயர்களையும் அறியாதவன். தான் அறிந்த பொருள்களைக் கொண்டு ஒவ்வொன்றாக உசாவினான். காதணிகளைக் கண்டான். ஒன்றிற்குத் "தண்டொட்டி' என்று பெயர். அதனைப் பார்த்ததும் அவனது மனக்கண்ணில் கள்ளிப் பூதான் தெரிந்தது. வினவினான்; விடை தந்தாள்;

1 புறம் : 324 : 5, 7
2 சீகா. பு. கண்ணப்பர் : 29
3 பெரும்பாண் : 122
4 புறம் : 307 : 4, 5

*"கள்ளிப்பூ பூத்தது அதிசயம் அல்லவோ சிங்கி? — தெற்கு*
*வள்ளியூ ரார்தந்த மாணிக்கத் தண்டொட்டி சிங்கா"*[1]
குறத்தி குற்றாலத்துக்காரி. அவளைப் பேசவைத்தவர் திரிகூட ராசப்பக் கவிராயர்.

"தண்டொட்டி" என்றது தனியொரு அணி அன்று. ஒரு தொகுப்பான காதணியில் ஓர் உறுப்பு. பொன் தண்டில் ஒட்டியிருப்பது. அதனால் தண்டு + ஒட்டி = தண்டொட்டி எனப்பட்டது. அது கள்ளிப் பூ வடிவத்தில் செய்யப்படும். அதனால் அதற்குக் "கள்ளிப்பூ" என்ற பெயரும் உண்டு. மாந்தர் அணிவதுபோன்று அன்னைக் கடவுளர்க்கும் இதனைச் செய்து வழங்கினர். இதனைக் கல்வெட்டில்,

*"படுகை நாலும் கள்ளிப் பூ நாலும் கொக்குவாய்*
*ஒன்றும் சவக்கமிரண்டும் உட்படப் பொன்"*[2] இவ்வளவு கொண்டது எனக் காணலாம்.

இத்தண்டொட்டி மலரைத் தரும் கள்ளி பற்றிச் சங்க இலக்கியங்களில் காண்கின்றோம்.

"கள்ளி போகிய களரியம் பறந்தலை" (புறம் : 245 : 3)
"களரி ஓங்கிய கவைமுட் கள்ளி" (நற் ; 384 :2)

—இவ்வடிகள் கள்ளியின் இடத்தையும் அது கவைத்த முள் உடையதையும் கூறுகின்றன.

"நொடிவிடு அன்ன காய்விடு கள்ளி" (நற் : 314 ; 9)

என்பது அது திருகியிருப்பதையும் காய்ப்பதையும் குறிக்கின்றது இது திருகுகள்ளி எனப்படும். இதனை வண்ணிக்கும் (பெயரைப் புலப்படுத்தாத) புலவர்,

*"பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி"* (நற் : 169 : 4)

என்றார்.

இதில் "பரல்" என்றது பாலை நிலத்தின் குறி. "சிரல்" என்றது சிச்சிலிப் பறவை. அதன் தலை நீலநிறத்திலும் அலகு செம்மையாகவும் தோன்றும். இதுபோன்று கள்ளியின் தலைப் பகுதி நீலநிறத்தளிரும் செம்மைக் கொத்தான மலரும் கொண்டது. குறத்தி தண்டொட்டியை மாணிக்கத் தண்டொட்டி என்றதும் மாணிக்கம் என்னும் செம்மணி நிறத்தைக் குறித்ததாகும். கள்ளிப் பூ செம்மை நிறங்கொண்டது. சிறிய புனல் வடிவப் பூ. பாலை

1 குற்: குற : கண்ணி 181. 2 தென் : கல் : தொகுதி 2 : 16.

நிலத்துப் பூ. முல்லைக்கொடி படர முல்லை நிலத்திலும் பூக்குமாயினும் மூலத்தால் பாலை நிலத்ததாகும். கோடையில் பூக்கும். கள்ளி, குற்றுச் செடியினமாகையால் இப்பூ நிலப்பூ.

இதன் நிறமும் அமைப்பும் நிறையப் பூப்பதும் கவர்ச்சி யாகத் தோன்றும். கண்டதும் அள்ளிக்கொள்ளலாம் போன்று இருப்பதை நாலடியார்,

"அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ" என்றவர் அடுத்து 'ஆயினும்" என்றார். ஆர்வத்தில் பறிக்க முனைந்தால் முள் ஒரு தடை; கள்ளிப் பால் மறுபகை; நறுமணமின்மை தொடரும் ஒரு தடை. இவற்றை எண்ணிய நாலடியார், "ஆயினும், கள்ளிமேல் கைநீட்டார் சூடும் பூ அன்மையால்"[1] என்றார். கண்ணுக்குக் கவர்ச்சியானாலும் பொன்னுக்குச் சின்னமானாலும் சூடத்தகாத எளிய மலர்.

கள்ளியோடு இணைந்து நிற்கும் மரங்களும் உள. கணி மேதாவியார்,

"*கள்ளிசேர் கார்ஓமை, நாரில்பூ நீள்முருங்கை*"[2]

என்றார். இத்தொடர்புள்ள முருங்கை அடுத்துக் காணத்தக்க மல ராகின்றது.

## நார் இல்லா மர மலர்.

### முருங்கை.

சிறுமியர் விளையாட்டில் வினா விடையாகப் பாடப்படும் பாடல் இது:

"ஒருபட்டம் திருபட்டம் ஓரியா மங்கலம்
செக்குத் திரும்பி செவ்வந்தி மாலை
மாடும் கண்ணும் கறக்கிற வேளை
ஒப்பன் பேர் என்ன?
முருங்கைப் பூ
முருங்கைப் பூவுங் கடிச்சாரே முள்ளாந் தண்ணியுங்
குடிச்சாரே பாம்புக் கையைப் படக்கின்னு எடு"

–இதில் 'அப்பன் பெயர் முருங்கைப் பூ' என்றதும், முருங்கைப் 'பூவைக் கடித்த'தாகக் கூறியதும் முருங்கைப் பூவை எளியதாகவும், சற்றுத் தாழ்வாகவும் குறித்த குறிப்பை உடையனவாகும்.

---

1 நாலடி : 262. 2 திணை : நூ : 81.

நாட்டுப் பாடலில் மட்டு மன்று; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் கண்ணன் தன்பால் காமங்கொண்டவளது கைவளையலை எளிதாக எண்ணிக் கவர்ந்தான் என்பதைப் பாடும் திருமங்கையாழ்வாரும் இம்முருங்கையைக் காட்டி,

*''நீயிவள் தன்னைநின் கோயில்*
*முன்றில்எழுந்த* முருங்கையின் தேனா *(பிசினாக)*
*முன்கை வளைகவர்ந் தாயே''*[1] –எனப் பாடினார்.

நாட்டுப் பழமொழி ஒன்று, ''வித்தையற்றவன் அழகு வாசனையற்ற முருங்கைப் பூ'' என்று இதன் மணமற்ற எளிமையைப் பேசுகின்றது.

பூவிருக்கட்டும்; பூவைத் தரும் மரமும் காற்றடித்தாலும், தன் காய்களின் பாரத்தாலும் மடக்கென்று முறிந்துவிடும். அதனால், இதனைப் ''புன்கால் முருங்கை" என்று பாடினர். பாலைநிலத்திற் செல்வோர் இது முறிவதைக் கருத்திற்கொண்டு, இதனடியில் நிழல் கருதி ஒதுங்கவும் மாட்டார் என்றது திணை மாலை நூற்றைம்பது.[2]

இம்மரம் இவ்வாறு வன்மையில்லாததற்கு உரிய கரணியத் தைத் தமிழ்ச் சான்றோர் ஆய்ந்தனர். மரம் நார் பிடிக்காததைக் கண்டறிந்தனர். ''நார் இல் முருங்கை" என்று பதிந்தனர். இப்பதிவை அக்காலத்துச் செடியியல் அறிவு எனல் வேண்டும்.

பூவாலும் மரத்தாலும் இவ்வாறு எளிமைப்பட்டாலும், உணவாலும் இலக்கியத்தாலும், தன் பெயராலும் இது குறிப்பிடத் தக்க சிறப்பை உடையது.

இதன் கீரை உணவுப் பொருளுடன் ஊட்டப் பொருளும் ஆகும். ஊட்டப் பொருளுடன் பிற உணவைச் சமமாக்கும் காப்புப் பொருளும் ஆகும். கீரையுணவால் வயிற்றுக் குற்றம் வராது. பிஞ்சும் காயும் சுவையுடன் நலந் தருபவை.

'முருங்கை உண்ண நொருங்குமாம் மேகம்'' — என்றொரு மருத்துவப் பழமொழி மேக நோய்க்கும் இது மருந்தாவதைக் குறிக்கின்றது. இப்பூவால் கண்குளிர்ச்சி ஏற்படும்; பித்தங் குறையும்; நாச்சுவையின்மை நீங்கும். இதனை ஆவின் பாலில் அவித்து உண்டு வர, ஆண் வீரியம் கெட்டிப்படும். இவற்றை அகத்தியர் குணபாடம்,

1 பெரி. திரு : 10 : 9 : 2.    2 திணை. நூ : 91 : 1, 2.

*"விழிகுளிரும்; பித்தம்போம்; வீறுருசி ஏகும்;*
*அழிவிந் துவும்புட்டி யாகும்—எழிலார்*
*ஒருங்கையக லாக்கற் புடைவாள் நகையே!*
*முருங்கைப் பூவை மொழி"* – என்கின்றது.

இப் பூ கொத்தாகப் பூக்கும். தனியொரு பூ நன்கு மலர்ந்த நிலையில் புறவிதழ்கள் ஐந்தும் கவிந்து தொங்கும். அகவிதழ்கள் ஐந்தில் ஒன்று உயர்ந்து நிற்கும். பிற உறுப்புகள் நிமிர்ந்த நிலையில் அமையும். இம்மலரைக் 'கலப்பிதழ்க் கொத்து' என்பர்.

*"நெடுங்கால் முருங்கை வெண் பூ"*[1] என்றதன்படி இது வெண்மை நிறமுடைய கோட்டுப் பூ.

*"சுரம்புல் லென்ற ஆற்ற அலங்குசினை*
*நாரில் முருங்கை நவிரல் வான் பூச்*
*சூரலங் கடுவளி எடுப்ப ஆருற்று*
*உடைதிரைப் பிதிர்வில் பொங்கி"*[2] –என்னும்

மாமூலனார் பாடல் இதன் பாலை நிலத்தைக் காட்டுகின்றது. கடுங்காற்றில்அடிபட்டுக் கடல் அலையின் நீர்த்துளிகள் சிதறுவன போன்று உதிர்வதையும் காட்டுகின்றது. இவரே மற்றொரு பாடலில் 'ஆலங்கட்டி மழைத்துளி போல உதிரும்'[3] என்றார். இவ்வாறெல்லாம் இலக்கியம் பெற்றது இப் பூ.

இதற்குரிய பருவம் இளவேனிலும் வேனிலும் ஆகும்.

முருங்கை, தவசிமுருங்கை, காட்டு முருங்கை, கசப்பு முருங்கை கொடி முருங்கை எனப் பலவகைப்படும். வகை உண்டெனினும் இனம் ஒன்றே. அது முருங்கை இனம்.

'முருங்கை' என்னும் சொல் ஆய்ந்து முடிவுகாண்பதற்கு உரியதாகின்றது. செடியியலார் இதன் குடும்பப் பெயர் மொரிங்கேசியீ (*MORINGECIE*) என்றனர். இதன் இனப்பெயர் மொரிங்கா (*MORINGA PTERYGOSPERMA*) எனப்பட்டது. இவையிரண்டும் 'முருங்கை' என்னும் சொல் ஒலிப்பைக் கொண்டவை என்பதில் ஐயம் இல்லை. அவ்வாறாயின் முருங்கை எம்மொழிச் சொல்?

*"முருங்கா என்னுஞ் சிங்களச் சொல்*
*முருங்கையென வந்த வாறும்"*[4]

— என்றது வீரசோழியம் என்னும் இலக்கண நூல். இது இலங்கை நாட்டுச் சிங்களமொழிச்

1 அகம் : 58 : 4
2 அகம் : 1 : 16
3 அகம் : 101 : 15, 16.
4 வீரசோ : சொல் : தத்திதம் : 8

சொல் என்றது. வீரசோழியம் வடநூல் கண்ணாடி கொண்டு உருவாக்கப்பட்ட தமிழ் இலக்கண நூல். இதன் ஆசிரியர் புத்தமித்திரனார். தமிழ் ஆழத்தைவிட வடமொழி ஆர்வத்தை மிகுதியாகக் கொண்டவர். எனவே, இவர் கருத்து முழுச் சான்றாகாது. அவ்வாறு கொண்டு நோக்கினாலும் சிங்கள மொழி வரலாறு காணத்தக்கதாகின்றது. சிங்களம் ஒரு மூல மொழியன்று. சமற்கிருதத்தின் திரிபுமொழி. சிங்கள மொழிபற்றிய கருத்துகள் நம்மை 2000 ஆண்டுகளுக்கு முன் கொண்டு செல்லினும் அதற்கு முன் அதன் நிலை தெளிவானதன்று; சிறப்பானதும் அன்று. சமற்கிருதத்தில், முருங்கை, என்னும் சொல் இல்லை. அதற்குரிய சொல் 'சிக்ரீ'. எனவே 'முருங்கை' சிங்களச் சொல் அன்று. அவ்வாறிருப்பினும் ஒருகாலத்தில் தமிழ் மண்ணாக இருந்த ஈழத்தில் 'முருங்கை' என்னும் தமிழ்ச்சொல் வழங்கப்பட்டிருக்கும். பின்னே காணும் சொற்பொருளும் இதற்கு இயைபாவதைக் காட்டும்.

செடியியலார் இதனை 'முரிங்ங' என்னும் மலைஞாலச்சொல் என்றனர். இன்றைய மலைஞாலம் கி. பி. 9ஆம் நூற்றுண்டுவரை தமிழ்நாட்டின் ஒரு பகுதியான சேரநாடாக இருந்தது. ஏறத்தாழ 8 ஆம் நூற்றாண்டளவில் அங்கு வழங்கிய தமிழுடன் வடமொழிச் சொற்கள் கலக்க மலைஞால மொழி உருவாகியது.

'முருங்கை' என்னுஞ்சொல் சங்க காலப் பாடல்களில் மிகப் பழம் புலவர்களது வாய்மொழியாக ஆளப்பட்டுள்ளது. இக் கால நிலையை நோக்கினால் மலைஞால 'முரிங்ங' முருங்கை ஆகவில்லை; முருங்கைதான் மலைஞால ஒலிப்பில் 'முரிங்ங' ஆயிற்று என்பது தெளிவாகும்.

'முருங்குதல்' என்னுஞ் சொல்லுக்கு 'முறிதல், ஒடிதல் கசங்குதல்' என்னும் பொருள்களை "முருங்க எற்றி" (மது. கா: 377) "முனை முருங்கத் தலைச்சென்று" (புறம்:16:3), "முருங்காக் கலிங்கம்" (அகம் : 136 : 20) எனத் தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. இம்மரம் எளிதில் முறிவது கொண்டு இப்பெயர் ஏற்பட்டதை உணரலாம். எனவே, சொல்லின் பொருளாலும் 'முருங்கை' என்பது தமிழ்ச்சொல் என்பது உறுதியாகின்றது.

உலகில் முருங்கையில் வேறு இனம் இல்லை என்றும் 'முருங்கை' என்பது ஒரே இனந்தான் என்றும் செடியியலார் கண்டுள்ளனர். இக்கணிப்பு இதன் தனித்தன்மையைக் காட்டுகின்றது.

தனித்தன்மையோடு தமிழ்ச் சொல்லையே தன் பெயராகக் கொண்ட முருங்கை 'நார் இல்லாத மர மலர்' ஆனாலும், தமிழ் வேர் உள்ள மலராகின்றது.

'முல்லை' என்னும் தமிழ் மரபு வாழ்வியல் மலரில் தொடங்கிய இம்மலர் ஆய்வு, 'முருங்கை' என்னும் தமிழ்ப்பெயர் மலருடன் நிறைவடைகின்றது.

முல்லை முதல் முருங்கை வரை 140 பூக்கள் ஆராயப் பட்டுள்ளன. அதனதன் இனவகை காட்டப்பட்டுள்ளது. கிளை விடும் செடியில் பூப்பது கோட்டுப் பூ என்றும், குற்றாக வளர் வதில் பூப்பது நிலப் பூ என்றும் கொள்ளப்பட்டுள்ளன.

உரிய நிறமும், நிறவேறுபாட்டால் வகையும் குறிக்கப் பட்டுள்ளன.

நிலம் மாந்தரது தொழில் வளர்ச்சியால் பண்பட்டும், மாறி யும் உள்ளது. அதற்கேற்ப மரஞ்செடிகொடிகள் பரவலாகியுள்ளன. இங்கே குறிக்கப்பட்டுள்ள நிலத்தை அதனதன் மூல நிலமாகக் கொள்ளவேண்டும். பூக்கும் பருவமும் ஓரளவில் அவ்வாறே.

மிகச் சில நிற்க, மிக பல பெயர்கள் தமிழ் மூலங் கொண்டவை. ஒவ்வொன்றையும் அவ்வவ்வாறு காண மொழி நெறி இடந்தருகின்றது. அஃதொரு தனி நூலாகும் அளவினது. எனவே, இன்றியமையாதவை சொல்லாய்வு கொண்டன.

பூக்களின் மருந்துப் பயன் தமிழில் விரிவானது; மிகு நலந்தருவது. மிகச் சிலவே குறிக்க நேர்ந்தன. ஊர்ப்பெயர், மன்னர் பெயர் முதலியன பூத்தொடர்பில் வரலாற்று நிழல்கள் எனலாம்.

முல்லை மணத்தில் தோய்ந்து, மரபில் வாழ்வது முதல், முருங்கை நலத்தில் முழங்குதல் வரை இவ்வாய்வு நற்பயன் நல்குவதாக!

# கொண்டு காட்டி

[நூலின் கருத்துகளைக் கொண்டு, அவை
அமைந்த இடங்களைக் காட்டி அறிவிக்கும் பகுதி]

## 1. மலர்க் குறிப்பேடு

140 மலர்களின் பெயர்ப் பட்டியல்.
தனி மலரின் வகை, நிறம், நிலம் பருவக் குறிப்புகள்.
அம்மலரை விளக்கும் இந்நூற் பக்க விவரம்.
ஆங்கிலத்திற் செடியியற் பெயர்.

## 2. அருங்கருத்துகளின் அகர நிரல்

குறிப்பிடத்தக்க அருங்கருத்துகள்,

**இலக்கியம்,**
**ஆன்மவியல்,**
**செடியியல்,**
**பயன்பாட்டியல்,**
**பொதுவியல்,**
**மரபியல்,**
**மலர்க் கலையியல்,**
**மாற்று முடிபியல்,**
**மொழியியல்**

—எனும் முகப்பில் இயல் வாரியாக
அகர வரிசைப் பட்டியல்.

## 3. நெறித்துணை நூல்கள்

இந்நூற்குத் துணைநின்று நெறிகாட்டிய
பல்வகைநூல்களின் அகர வரிசை;
அந்நூற் பெயர்ச் சுருக்கக் குறியீடு.

# மலர்க் குறிப்பேடு.

குறிப்பும் குறியீடும்:

| வகை : | | நிறம் : | | நிலம் : | | பருவம் : | |
|---|---|---|---|---|---|---|---|
| கோட்டுப் பூ | கோ. | செம்மை | செம். | குறிஞ்சி | குறி. | இளவேனில் | இள- |
| கொடிப் பூ | கொ. | வெண்மை | வெண். | முல்லை | முல். | முதுவேனில் | வே. |
| | | மஞ்சள் | மஞ். | மருதம் | மரு. | கார் | கா. |
| நிலப் பூ | நி. | நீலம் | நீல். | நெய்தல் | நெய். | கூதிர் | கூ. |
| நீர்ப் பூ | நீ. | செந்நீலம் | செந் நீல். | பாலை | பா. | முன்பனி | முப. |
| | | கருநீலம் | கரு நீல். | | | பின்பனி | பிப. |

| எண் | மலர் | வகை | நிறம் | நிலம் | பருவம் | இந்நூற்பக்கம் | செடியியற் பெயர். |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அகத்தி | கோ. | வெண்;செம். | மரு. | முப. | 686 — 688 | *Sebania Grandiflora* |
| 2 | அகில் | ” | மஞ். | குறி. | வே. | 662. | *Aqilaria Agallochi* |
| 3 | அடும்பு | ” | செந். நீல். | நெய். | முப. | 595 — 597 | *Ipomaea Biloba* |
| 4 | அதவு-அத்தி | ” | நீல். | பா. | வே. | 118,711 — 713 | *Ficus Glomerata* |
| 5 | அதிரல் | கொ. | வெண். | பா. | இள. | 570 — 575 | *Dalbergia Volubilis* |
| 6 | அவரை | ” | செம்; நீல். | குறி. | முப. | 685, 686 | *Dalichos Lablab* |
| 7 | அழிஞ்சில் | கோ. | வெண். | பா. | வே. | 660, 661 | *Alangium Lamarckit* |
| 8 | அனிச்சம் | (கோ.) | (...) | (குறி) | இள. | 694 — 706; | — — — |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 9 | ஆம்பல் | நீ. | செம்;வெண். | மரு. | கா. | 173 — 216; 202,203. | *Nymphaea Lotus.* |
| 10 | ஆர் (ஆத்தி) | கோ. | வெளிர்மஞ். | பா. | பிப. | 324 — 333. | *Bauhinia Racemosa.* |
| 11 | ஆரம் | ,, | வெண். | குறி. | வே. | 661. | *Justicia Procumbens.* |
| 12 | ஆல் | ,, | மஞ். | முல். | ,, | 713, 714. | *Ficus Bengalensis.* |
| 13 | ஆவிரை | ,, | ,, | பா. | முப. | 119, 605, 606 | *Cassia Auriculata.* |
| 14 | இருப்பை | ,, | வெண். | ,, | வே. | 555 — 560. | *Bassia Longipolia.* |
| 15 | இல்லம் | ,, | (...) | முல். | கா. | 656. | *Strychnos Potatorum.* |
| 16 | இலவம் | ,, | செம். | பா. | இள. | 461 — 470. | *Bombox MalaBaricum.* |
| 17 | ஈங்கை | கொ. | வெண். | முல். | கூ. | 648 — 650. | *Mimosa Rubicaulis.* |
| 18 | உந்தூழ் | நி. | பசியவெண். | குறி. | முப. | 615 — 617. | *Bambusa Arundinacea.* |
| 19 | உழிஞை | கொ. | மஞ். | முல். | கா. | 286 — 289. | *Cordiospermum Handicacabum* |
| 20 | ஊகு | நி. | வெண். | பா. | வே. | 735, 736. | *Aristida Setacea.* |
| 21 | எட்டி | கோ. | ,, | முல். | ,, | 45, 46, 676. | *Strychnos Nux-Vomica.* |
| 22 | எருக்கு | நி. | வெண்;வெளிர்நீல். | பா. | ,, | 725 — 728. | *Calotropis Gigantea.* |
| 23 | எருவை | ,, | செம். | குறி. | கா. | 672, 673. | *Cyperusrotundus Tuberosus.* |
| 24 | எள் | ,, | வெண்;செந்நீல். | மரு. | வே. | 683. | *Sesamum Indicum.* |
| 25 | எறுழும் | கோ. | செம். | குறி. | கா. | 633, 634. | |

— — —

| எண் | மலர் | வகை | நிறம் | நிலம் | பருவம் | பக்கம் | செடியியற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|
| 26 | கடம்பு | கோ. | செம். | குறி. | கா. | 510—513; 519—527. | Anthocephalus Cadamba. |
| 27 | கண்ணி | கொ. | ,, | முல். | வே. | 668. | Abrus precatorius (Variety). |
| 28 | கணவிரம் | ,, | ,, | பா. | ,, | 630—632. | Nerlum Odorum Saland. |
| 29 | கமுகு | நி. | வெண் | மரு. | பிப. | 679 — 680. | Areca Catechu. |
| 30 | கரந்தை | கொ. | செம்; நீல். | ,, | வே. | 274 — 276. | Sbhae Ranthus Hirtus. |
| 31 | கரும்பு | நி. | வெண். | ,, | முப. | 609 — 612. | Saccharum Officinarum. |
| 32 | கருவிளை | கொ. | கருநீல். | குறி. | ,, | 621 — 623. | Clitoria Ternatea. |
| 33 | கவிர் | கோ. | செம்; வெண். | பா. | இள. | 602 — 604. | Erythrina Indica |
| 34 | கள்ளி | நி. | செம். | ,, | வே. | 736 — 738. | Euphorbia Tirucalli. |
| 35 | காஞ்சி | கோ. | நீல். | மரு. | இள. | 279 — 285. | Trewia Nudiflora. |
| 36 | காந்தள் | கொ. | செம். | குறி. | கா. | 358 — 399; | Gloriosa Superba. |
| | (அ) தோன்றி | ,, | ,, ,, | (பிற.) | ,, | 373 — 379. | ,, ,, |
| | (ஆ) கோடல் | ,, | வெண். ,, | ,, | ,, | 366 — 372. | ,, ,, |
| 37 | காயா | கோ. | கருநீல். | முல். | ,, | 527 — 533 | Memecylon Edule. |
| 38 | காவி | நீ. | நீல். | நெய். | ,, | 183, 184. | Monochoria Vaginalis. |
| 39 | காவிதி | (...) | (...) | மரு. | (...) | 45, 46; 717, 718. | — — |
| 40 | குசும்பை | கோ. | செம். | ,, | கூ. | 678, 679. | Carthamus Tinctorious. |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 41 | குடசம் | கோ. | செம்; வெண். | குறி. | கா. | 658. | *Hollarrhena Antidy - - Senterica.* |
| 42 | குமிழம் | ,, | மஞ். | பா. | ,, | 645, 646. | *Gmelina Asiatica.* |
| 43 | குரவம் | ,, | வெண். | ,, | இள. | 471 — 474. | *Webera Corymbosa.* |
| 44 | குரீஇப்பூளை | நி. | ,, | ,, | வே. | 731, 732. | *Aerva Lanata.* |
| 45 | குருக்கத்தி | கொ. | ,, | மரு, | இள. | 641, 643. | *Hibtage Madablota.* |
| 46 | குருகிலை | கோ. | ,, | முல். | கா. | 692. | — — |
| 47 | குருந்து | ,, | கருநீல். | ,, | ,, | 540 — 543. | *Atlantis Missionis.* |
| 48 | குல்லை | நி. | வெண். | ,, | ,, | 90, 91; 177, 182, 183; 201, 202. | *Ocimum Album.* |
| 49 | குவளை | நீ. | செம்;நீல். | மரு. | கா. | 90, 91: 177; 182—3; 201—2. | *Nymphaea Rubra; Stelletus.* |
| 50 | குளவி | கொ. | வெண்பசு. | குறி. | ,, | 575—578. | *Jasminum Angustifolium.* |
| 51 | குறிஞ்சி | நி. | செம்;வெண்; மஞ்;நீல்;செந்நீல் | ,, | ,, | 242—247. | *StrobilanthesKunthianus.* |
| 52 | கூதாளி | கொ. | வெண்;செம். | ,, | கூ. | 578—580. | *Solanum Trilobatum.* |
| 53 | கூவிரம் | கோ. | (...) | ,, | (...) | 629, 630. | *(Crataeva Nurvala.)* |
| 54 | கூவிளம் | ,, | மஞ். | ,, | கா. | 628, 629. | *Augle Marmelos.* |
| 55 | கொக்கிறகு | ,, | வெண். | முல். | வே. | 677, 678. | *Bauhinia Acuminata.* |

| எண் | மலர் | வகை | நிறம் | நிலம் | பருவம் | பக்கம் | செடியியற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|
| 56 | கொகுடி | கொ. | வெண். | முல். | கா. | 564, 565. | *Jesmine [Veriety]* |
| 57 | கொன்றை | கோ. | மஞ். | ,, | ,, | 435 — 449. | *Cassia Fistula* |
| 58 | கோங்கு | ,, | ,, | பா. | வே. | 450 — 461. | *Cochlospermum Gossypium.* |
| 59 | சண்பகம் | ,, | செம்;வெண். | ,, | இள. | 99, 634 — 637. | *Michylia Champaca.* |
| 60 | சுள்ளி | ,, | வெண் | குறி. | (...) | 706 — 708. | *Diospyros Ebenum.* |
| 61 | செங்கிடை | நீ. | செம். | முல். | கா. | 676. | *Sesbania Aculeata.* |
| 62 | செங்குரலி | கோ | ,, | மரு. | கூ. | 666. | — — — |
| 63 | செங்கோடுவேரி | ,, | ,, | முல். | கா. | 666, 667. | — — — |
| 64 | செம்பருத்தி | நி. | ,, | ,, | ,, | 674. | *Hibiscus Rosasinensis.* |
| 65 | செம்மல் | கொ. | வெண். | ,, | ,, | 668. | *Jasminum [Veriety].* |
| 66 | செயலை | கோ. | செம். | குறி. | இள. | 24, 586 — 591. | *Saraca Indica.* |
| 67 | செருந்தி | ,, | மஞ். | நெய். | ,, | 583 — 586. | *Ochnas Quarrosa.* |
| 68 | செருவிளை | கொ | வெண். | குறி. | முப. | 622, 623. | *Clitoria Ternatiaalbi frora.* |
| 69 | செவ்வந்தி | நி. | செம்;மஞ்; வெண். | முல். | (பல) | 671, 672. | *Chrysanthemum Indicum.* |
| 70 | சேடல் | கோ. | வெண் | ,, | கா. | 643, 644. | *Nyctanthes Arbor Tristis.* |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 71 | ஞாழல் | கோ | செம். | நெய். | இள. | 505 — 510 | *Cassea Sophera.* |
| 72 | தணக்கம் | ,, | வெண். | பா. | ,, | 654, 655. | *Morinda Citrifolia,* |
| 73 | தளவம் | கொ. | செம். | முல். | கா. | 637 — 640. | *Jasminum Humile.* |
| 74 | தாமரை | ,, | செம்;வெண். | மரு. | ,, | 217 — 238. | *Nelumbium Speciosum.* |
| 75 | தாழை | நி. | வெண்; செம். | நெய். | வே. | 114, 115; 488 — 504 | *Pandanus Odaratissimus.* |
| 76 | தில்லை | கோ. | மஞ். | ,, | முப. | 659. | *Excoecaria Agallocha.* |
| 77 | திலகம் | ,, | செம். | குறி | வே. | 657, 658. | *Adenanthera Pavonina.* |
| 78 | தும்பை | நி. | வெண். | முல்; மரு. | ,, | 296 — 305. | *Leucas Aspera.* |
| 79 | துழாய் | ,, | ,, | முல். | கா. | 689, 690. | *Ocimum Sanctum.* |
| 80 | தெங்கு | ,, | ,, | மரு. | (பல) | 680, 681. | *Cocos Nucifera.* |
| 81 | தெறும் வீ | கொ. | மஞ் | முல். | கா. | 632, 633 | — — — — |
| 82 | நந்திவட்டம் | கோ. | வெண். | ,, | வே. | 637, 638. | *Taberae Montana Coronaria.* |
| 83 | நரந்தம் | ,, | ,, | குறி. | கா. | 619 — 621. | *Citrus Aurantium* |
| 84 | நறா | கொ. | வெண்; செம் | ,, | ,, | 638 — 640 | *Caesalpinia Pulcherrima* |
| 85 | நாகம் | கோ. | நீல். | ,, | வே. | 623 — 625. | *Ochrocarpus Longi Folius* |
| 86 | நெய்தல் | நீ. | ,, | நெய். | கா. | 182 — 189. | *Nymphaea-Blue* |
| 87 | நெருஞ்சி | நி. | மஞ். | முல். | வே. | 720 — 724. | *Tribulus Terrestris.* |

| எண் | மலர் | வகை | நிறம் | நிலம் | பருவம் | பக்கம் | செடியியற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|
| 88 | நெல் | நி. | மஞ். | மரு. | வே. | 681, 682. | *Oriza Sativa.* |
| 89 | நொச்சி | கோ. | கருநீல். | முல். | கா. | 289 — 296 | *Vitex Negundo.* |
| 90 | பகன்றை | கொ. | வெண். | மரு. | முப. | 546—551. | *Ipomaea Turpethum.* |
| 91 | பசும்பிடி | கோ. | வெண்பசு. | குறி. | கா. | 691. | *Garcinia Xanthochymus.* |
| 92 | பயினி | ,, | செம். | ,, | ,, | 710. | *[Finus - English Name]* |
| 93 | பருத்தி | நி. | மஞ். | மரு. | வே. | 673. | *Gossypium.* |
| 94 | பலா | கோ. | ,, | குறி | இள. | 714—717. | *Herbaceum.* |
| 95 | பலாசு | ,, | ,, | ,, | இள. | 659, 660. | *Butea Frondosa,* |
| 96 | பனை | நி. | வெண். | நெய். | பனி. | 340—347. | *Borassus Flabellifer* |
| 97 | பாங்கர் | கொ. | ,, | முல். | கா. | 644, 645. | *Dillenia Indica.* |
| 98 | பாதிரி | கோ. | செந்நீல். வெண். | பா. | வே. | 565—570. | *Stereospermum Suaveolons.* |
| 99 | பாலை | ,, | ,, | ,, | ,, | 250—253. | *Wrightia Tinctoria.* |
| 100 | பிடா | கோ. | ,, | முல். | கா. | 533—536. | *Randia Malabarica.* |
| 101 | பித்திகம் | கொ. | செம்;வெண். | ,, | கா;கூ. | 543—546. | *Jasminum Grandiflorum.* |
| 102 | பீரம் | ,, | மஞ். | ,, | கா. | 551—555. | *Cucumis Acutangula.* |
| 103 | புழகு | கோ. | செம். | குறி. | ,, | 664, 665. | *Calotropis.* |
| 104 | புன்கம் | ,, | செம்;வெண். | பா. | இள. | 652—654. | *Pongamia Glabra.* |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 105 | புன்னாகம் | கோ. | நீல். | குறி. | வே. | 625 — 626. | *Mallotus Philippinensis.* |
| 106 | புன்னை | ,, | வெண். | நெய். | இள. | 475 — 488. | *Colophyllum Inophyllum* |
| 107 | பூளை | நி. | ,, | முல். | வே. | 729 — 731. | *Aerva Javanica.* |
| 108 | போங்கம் | கோ | (...) | குறி. | ,, | 709. | *Adenanthera [Variety].* |
| 109 | மணிச்சிகை | ,, | செம். | முல். | (...) | 669. | *Abrus Precatorius.* |
| 110 | மத்தம் | கோ. | வெண்;செந்நீல். | பா. | (பல) | 734, 735 | *Datura Alba Fastuosa.* |
| 111 | மந்தாரம் | நி. | மஞ்;செம். வெண். | முல். | கா. | 40, 670 — 671 | *Bauhinia Purpurea.* |
| 112 | மயிலை | கொ. | வெண். | ,, | ,, | 561 — 564. | *Jasminum Sambaceflore Manoracplona.* |
| 113 | மராஅம் | கோ. | வெ. | பா | இள. | 510 — 519. | *Barringtonia Racemosa.* |
| 114 | மருதம் | ,, | மஞ். | மரு. | ,, | 248, 249. | *LagerstroemiaFlosRegina* |
| 115 | மல்லிகை | கொ. | வெண். | முல். | கா. | 142 — 144 | *JasminumAnectomosans.* |
| 116 | மா | கோ. | மஞ் | மரு. | வே. | 606 — 609 | *Mangifera Indica.* |
| 117 | மாதுளை | ,, | செம். | குறி. | கா. | 674 — 676 | *Punica Granatum.* |
| 118 | மாரோடம் | ,, | ,, | ,, | இள. | 665. | *Acacia Catechu-Sundra.* |
| 119 | முசுண்டை | கொ. | வெண். | முல். | கூ. | 650 — 652 | *Rivea Crnata.* |
| 120 | முருக்கு | கோ. | செம்; வெண். | பா. | இள. | 597 — 601 | *Butea Frondosa.* |
| 121 | முருங்கை | ,, | வெண். | பா. | வே. | 738 — 742 | *Moringa Pterygosperma.* |
| 122 | முல்லை | கொ. | ,, | முல். | கா. | 132 — 172 | *Jasminum Auriculatum.* |

| எண் | மலர் | வகை | நீ நிறம் | நிலம் | பருவம் | பக்கம் | செடியியற் பெயர் |
|---|---|---|---|---|---|---|---|
| 123 | முள்ளி | நி. | நீல். | நெய். | இள. | 592—595. | *Hygrophila Spinosa.* |
| 124 | மௌவல் | கொ. | வெண். | முல். | கா. | 140, 141. | *Jasminum AngustiFlolium* |
| 125 | வகுளம் | கோ. | மஞ். | குறி. | வே. | 43, 581 — 583 | *Mimusops Elangi.* |
| 126 | வஞ்சி | கொ. | செம். | ,, | இள. | 277 — 279. | *Calamus Rotang.* |
| 127 | வடவனம் | கோ. | (...) | (...) | (...) | 711. | — — — — |
| 128 | வழை | ,, | மஞ். | குறி. | வே. | 627, 628. | *Ochrocarpus Longirolis.* |
| 129 | வள்ளி | கொ. | ,, | மரு. | இள. | 669. | *Convolvlus Batatas.* |
| 130 | வள்ளை | ,, | வெண். | ,, | கா. | 647 — 649. | *Ipomaea Aquatica.* |
| 131 | வாகை | கோ. | வெண்;செந்நீல் | பா. | வே. | 305 — 317. | *Acacia Speciosa.* |
| 132 | வாழை | நி. | மஞ். | குறி. | இள. | 684, 685. | *Musa Faradisiaca.* |
| 133 | வானி | ,, | ,, | ,, | வே. | 667. | *Carum copticum.* |
| 134 | வெட்சி | கோ. | செம். | முல் | கா. | 266 — 273. | *Ixora coceinea.* |
| 135 | வெள்ளோத்திரம் | ,, | வெண். | பா. | வே. | 662, 663. | *Symplocos Beddomei.* |
| 136 | வேங்கை | ,, | மஞ். | குறி. | கா. | 400 — 434. | *Pterocarpus Marsubium.* |
| 137 | வேம்பு | கோ. | வெண். | பா. | இள. | 333 — 340. | *Azadirachta Indica* |
| 138 | வேரல் | நி. | பசியவெண்மை. | குறி. | முப. | 617,618. | *Dendrocalamus Strictus.* |
| 139 | வேழம் | ,, | வெண். | மரு. | பனி | 612 — 615. | *Arundinaria Prainii.* |
| 140 | வேளை | நி. | ,, | முல். | கா. | 732,733. | *Cleome Pentaphylla.* |

# அருங்கருத்துகளின் அகர நிரல்.

## இலக்கியம்

## ஆன்மவியல்



## செடியியல்

## பயன்பாட்டியல் (மருந்து, உணவு முதலியன.)

## பொதுவியல்

## மரபியல்



## மலர்க் கலையியல்

## மாற்று முடிபியல்



## மொழியியல்

# நெறித்துணை நூல்கள்

| நூற்பெயர் | குறியீடு |
|---|---|
| அகத்தியர் குணபாடம் | — அகத். கு: |
| அகநானூறு | — அகம்: |
| அப்பர் தேவாரம் | — அப். தே: |
| அபிராமி அந்தாதி | — அபி. அந்: |
| அரபத்தநாவலர் பரத நூல் | — அர. ப. நூ: |
| அல் – அதிசு | — அல். அ: |
| அழகர் பிள்ளைத் தமிழ் | — அழ. பி. த: |
| அழகின் சிரிப்பு | — அழ. சி: |
| அறப்பளீசுர சதகம் | — அறப். ச: |
| ஆசிரிய நிகண்டு | — ஆசி. நி: |
| ஆத்தி சூடி | — ஆத். சூ: |
| இரகுவமிசம் (தமிழ்) | — இரகு: |
| இலக்கண விளக்கம் | — இலக். வி: |
| இன்னா நாற்பது | — இன். நா: |
| இனியவை நாற்பது | — இனி. நா: |
| ஈங்கோய் எழுபது | — ஈங். எ: |
| இறையனார் அகப்பொருள் | — இறை. அக: |
| ஏலாதி | — ஏலா: |
| ஐங்குறுநூறு | — ஐங்: |
| ஐந்திணை எழுபது | — ஐந். எ: |
| ஐந்திணை ஐம்பது | — ஐந். ஐ: |
| கந்த புராணம் | — கந். பு: |
| கண்ணன் பாட்டு | — கண். பா: |
| கம்பராமாயணம் | — கம்ப: |
| கல்லாடம் | — கல்: |
| கலிங்கத்துப் பரணி | — கலி. ப: |
| கலித்தொகை | — கலி: |
| கலைக் களஞ்சியம் | — கலை. க: |
| காசிக் கலம்பகம் | — கா. கல: |
| காஞ்சிப் புராணம் | — காஞ். பு: |
| கார் நாற்பது | — கார். நா: |
| குடும்ப விளக்கு | — குடு. வி: |
| குண்டல கேசி | — குண். கே: |

| நூற்பெயர் : | குறியீடு : |
| --- | --- |
| குண நாற்பது | — கு. நா: |
| குண பாடம் | — குண: |
| குமரேச சதகம் | — கும. ச: |
| குயில் | — குயில்: |
| குயில் பாட்டு | — குயி. பா: |
| குர் – ஆன் | — குர்: |
| குலோத்துங்கக் கோவை | — குலோ. கோ: |
| குற்றாலக் குறவஞ்சி | — குற். குற: |
| குறிஞ்சிப் பாட்டு | — குறி. பா: |
| குறுந்தொகை | — குறு: |
| கூத்த நூல் | — கூ. நூ: |
| கூர்ம புராணம் | — கூர்மம்: |
| சங்க இலக்கியத்தில் செடிகொடிகள் | — சங். செ: |
| சகலகலாவல்லி மாலை | — சக. மா: |
| சாகுந்தலம் | — சாகுந் |
| சிதம்பரச் செய்யுட் கோவை | — சித.செ.கோ: |
| சிதம்பர மும்மணிக் கோவை | — சித. மு. கோ: |
| சிறுபஞ்ச மூலம் | — சிறு. மூ: |
| சிலப்பதிகாரம் | — சிலம்பு: |
| சிறுபாணாற்றுப்படை | — சிறுபாண்: |
| சீவக சிந்தாமணி | — சீவ. சி: |
| சுந்தரர் தேவாரம் | — சுந். தே: |
| சூடாமணி நிகண்டு | — சூடா. நி: |
| சூளாமணி | — சூளா: |
| சேந்தன் திவாகரம் | — சேந். தி: |
| சைவ வினா விடை | — சை. வி. வி: |
| ஞானசம்பந்தர் தேவாரம் | — ஞான. தே: |
| தக்கயாகப்பரணி | — தக்க: |
| தண்டியலங்காரம் | — தண்டி: |
| தணிகைப் புராணம் | — த. பு: |
| தம்ம பதம் | — தம். ப: |
| தமிழியக்கம் | — தமிழி: |
| தனிச்செய்யுட் சிந்தாமணி | — தனி. சி: |
| தனிப்பாடல் திரட்டு | — தனி. தி: |
| தாயுமானவர் பாடல் | — தாயு. பா: |
| திணைமாலை நூற்றைம்பது | — திணை. நூ: |

| நூற்பெயர் : | குறியீடு : |
| --- | --- |
| திணைமொழி ஐம்பது | — திணை. ஐ: |
| திரிகடுகம் | — திரி: |
| திருக்குறள் | — குறள்: |
| திருக்குறள் மூலிகை | — திருக். மூ: |
| திருக்கோவையார் | — திருக்கோ: |
| திருத்தொண்டர் திருவந்தாதி | — திருத். திரு: |
| திருப்பாவை | — திருப்பா: |
| திருமந்திரம் | — திருமந்: |
| திருமுருகாற்றுப்படை | — திருமுருகு: |
| திரு அருட்பா | — திரு. அ: |
| திருவள்ளுவ மாலை | — திரு. மா: |
| திருவாசகம் | — திருவா: |
| திருவாய்மொழி | — திருவாய்: |
| திருவாரூர் நான்மணிமாலை | — திருவா. நா: |
| திருவாலவாய்ப் புராணம் | — திருவால. பு: |
| திருவிளையாடற் புராணம் | — திருவிளை. பு: |
| தென்னிந்தியக் கல்வெட்டுகள் | — தென். கல்: |
| தேரையர் பாடல்கள் | — தேரை. பா: |
| தைலவருக்கச் சுருக்கம் | — தைல. ச: |
| தொல்காப்பியம் | — தொல்: |
| நம்பி அகப்பொருள் விளக்கம் | — ந. அ. வி: |
| நந்திக் கலம்பகம் | — நந். கல: |
| நல்வழி | — நல்: |
| நளவெண்பா | — நள: |
| நற்றிணை | — நற்: |
| நன்னூல் | — நன்: |
| நாச்சியார் திருமொழி | — நாச். திரு: |
| நால்வர் நான்மணிமாலை | — நால். நான்: |
| நாலடியார் | — நாலடி: |
| நான்மணிக் கடிகை | — நான். க: |
| நீதிநெறி விளக்கம் | — நீதி. வி: |
| நீதி வெண்பா | — நீதி. வெ: |
| நீலகேசி | — நீல: |
| நெடுநல் வாடை | — நெடு. வா: |
| நைடதம் | — நைட: |
| பகவத் கீதை | — பக. கீ: |

| நூற்பெயர் : | குறியீடு : |
| --- | --- |
| பட்டினப் பாலை. | — பட். பா: |
| பதிற்றுப்பத்து | — பதிற்: |
| பரிபாடல் | — பரி: |
| பல்கலைக் கழகச் சொற்களஞ்சியம் (LEXICON) | — பல். சொ: |
| பழமொழி | — பழ: |
| பாஞ்சாலி சபதம் | — பாஞ். ச: |
| பாண்டிக் கோவை | — பா. கோ: |
| பாரதம் | — பார: |
| பாரதிதாசன் கவிதைகள் | — பா. தா. கவி: |
| பாரதியார் பாடல்கள் | — பா. பா: |
| பிங்கல நிகண்டு | — பிங். நி: |
| புட்ப விதி | — பு. வி: |
| புறப்பொருள் வெண்பா மாலை | — பு. வெ. மா: |
| புறநானூறு | — புறம்: |
| பெரிய திருமொழி | — பெரி. திரு: |
| பெரிய புராணம் | — பெரி. பு: |
| பெரியாழ்வார் திருமொழி | — பெரியாழ். திரு |
| பெருங்கதை | — பெருங்: |
| பெரும்பொருள் விளக்கம் | — பெ. வி: |
| பெரும்பாணாற்றுப்படை | — பெரும்பாண்: |
| பொருநராற்றுப்படை | — பொருந்: |
| மக்கட் பேறு | — மக். பே: |
| மணிமேகலை | — மணி: |
| மதுரைக் கலம்பகம் | — மது. கல: |
| மலைபடுகடாம் | — மலை: |
| மனோன்மணீயம் | — மனோன்: |
| மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் | — மீ. பி. த: |
| முத்துக்குமரசாமி பிள்ளைத் தமிழ் | — முத். கு. பி. த: |
| முத்தொள்ளாயிரம் | — முத்: |
| முதுமொழிக் காஞ்சி | — முது. கா: |
| முல்லைப் பாட்டு | — முல். பா: |
| மூதுரை | — மூது: |
| மேக தூதம் | — மே. தூ: |
| யசோதர காவியம் | — ய. கா: |
| யாப்பருங்கலக் காரிகை | — யாப்பு. கா: |
| யாப்பருங்கல விருத்தி | — யாப்பு. வி: |

| நூற்பெயர் : | குறியீடு : |
|---|---|
| யாழ்நூல் | — யாழ்: |
| வண்டு விடு தூது | — வ. வி. தூ: |
| வளையாபதி | — வளை: |
| வாக்குண்டாம் | — வாக்கு: |
| வாட்போக்கிக் கலம்பகம் | — வாட். கல: |
| வில்லிபாரதம் | — வில்லி. |
| விவிலியம் | — விவி: |
| வைத்தியக் குறள் | — வை. கு: |
| வைத்திய மலையகராதி | — வை. ம: |

ஆங்கில நூல்கள் :

Botanical Gazette.
Encyclopaedia Of Britanica.
Love's labour's Lost - Shakespeare.
Plants With a purpose - Richard Mabey.
Race Movements and Prehistoric Culture in the Vedic age - S K. Chatterji'
Taxonomy - Engler & Prantle.
The Insectivorous Plants - Charles Darwin.
The World Book Encyclopaedia.
Vide Latin English Dictionary.
Webstor's Dictionary.

குருகுலம் அச்ச கத்தார்
குணத்தொடு பணிகள் செய்வார்,
மெருகொடு கலையைச் சேர்த்து
மேன்மைகொள் பதிப்பாய்த் தந்தார்.
பரிவுடன் நெஞ்சில் வைத்துப்
பல்காலும் நன்றி சொல்வேன்;
திருவுடன் நலமும் சூழ்ந்து
திகழ்க!பல் லாண்டு வாழ்க!

—நூலாசிரியன்.

